ப:—அநந்தரம், ஆஶ்ரித ரபேக்ஷிதஞ் செய்யும்படியான பவ்யதையை யுடையையாயிருக்க. இவள் ப்ரதிக்ஷண மவஸ்தாபேதம் பிறக்கும்படியான வார்த்தி யையுடையளாகா நின்றாளென்கிறாள்.

(இ-ள்.) அந்தி - ஸந்த்யையென்று, போது - ஒருகாலவிஶேஷத்திலே, அவுணன் - அஸுரனான ஹிரண்யனுடைய, உடல் - ஶரீரத்தை, இடந்தானே - பிளந்தவனாய், அலை - அலையையுடைத்தான, கடல் - கடலை, கடைந்த - கடைந்து, ஆரமுதே - நிரதிஶய போக்யனாய் வைத்து, அப்படி காலநியதியுமின்றியே ப்ரபலவிரோதியு மின்றியே, அருந்தொழில் செய்வித்துக்கொள்ளவும் வேண்டாதபடி. ஆந்தராநுபவமாத்ரமன்றியே, சந்தித்து - பாஹ்யமான ஸம்ஶ்லேஷத்தைப்பண்ணி, உன் - உன், சரணமே - திருவடிகளையே, சார்வது - சேர்ந்தநுபவிக்கவேணுமென்கிற, வலித்த - சிக்கெனவையுடையளாயிருக்கிற, தையலை - இப்பெண்பிள்ளையை, மையல்செய்தானே - மதிகெடுத்தவனே, இவள், சிந்திக்கும் பூர்வஸம்ஶ்லேஷ ப்ராகாரத்தைச் சிந்தியாநிற்கும், திசைக்கும் - அதப்போதே ஸித்தியாமையாலே அறிவழியா நிற்கும்; தேறும் - அஶங்கிதமாகத் தேறாநிற்கும்; அவ்வளவிலே வந்தாயாகக் கருதி, கை - கை, கூப்பும்-கூப்பாநிற்கும், ஆஸந்நமாக, திருவரங்கத்து - கோயிலிலே, உள்ளாய் - கண்வளர்ந்தருளுகிறவனே! என்னும் - என்று கூப்பிடாநிற்கும், வந்திக்கும் - அவ்வடிவழகை நினைத்துத் தலையாலே வணங்கும்; அவ்வளவிலும் வரக்காணாமையாலே, ஆங்கே - அவ்விடந்தன்னிலே யிருந்து, மழை - குளிர்ந்த, கண்ணீர்-கண்ணீர், மல்க-மல்கும்படி, வந்திடாய் - வந்துகொள்ளாய்; என்றென்றே - என்று பலகாலுஞ்சொல்லி, மயங்கும் - உக்தி பலவ்யாப்தையாகக் காணாமையாலே மோஹிக்கும்

காமாதுரைகள் விகாரத்தி லிவளுக்கில்லாதனவில்லை யென்று கருத்து.

ஆறு,—(சிந்திக்கும்) உன்னழகையு முன்னழகோடு பண்டு ஸம்ஶ்லேஷித்தபடியையும் நினைக்கும். நினையாமோஹிக்கும். நெடும்போதுகூட லப்த ஸம்ஜ்ஞையாம். தன்னுடைய வபேக்ஷிதம் பெறுகைக்காக உன்னைத் தொழாநிற்கும். தன்னுடைய வ்யஸநம் பொறுக்கமாட்டாமையாலே, திருவரங்கத்துள்ளா யென்னும். த்வந்நாதையாயிருந்துவைத்தே நாதஹீநையைப்போலே திருவடிகளிலே விழுந்துகிடக்கும் ; அங்ஙனே விழுந்துகிடந்து, தன்னுடைய வழகிய கண்கள் நீர்மல்க, வந்திடாயென்றென்றே மயங்காநிற்கும். உன் திருவடிகளை யொருகால் கண்டு ஸம்ஶ்லேஷிக்க வேணுமென்னு

மாசையாலே தன்னை தரித்துக்கொண்டிருக்கிற இப்பெண்பிள்ளை யை யிப்பாடுபடுத்தவேணுமோ. உன்னுடைய நிரவதிகமான வாத்ஸல்யமெல்லா மெங்கே போயிற்றென்கிறாள். (ரு)

ஈடு ; அவ.—அஞ்சாம்பாட்டு. இவளுக்கு ப்ரதிக்ஷணம் பேதித்து ஒன்றோடொன்று சேராதே வருகிற வவஸ்த்தாபேதங்களை யறிவித்து, இவளை யிப்படி படுத்துகை உம்முடைய நீர்மைக்குப் போருமோவென்கிறாள்.

(சிந்திக்கும்) உம்முடைய ஸௌந்தர்யாதிகளையு மும்மோட்டைக் கலவியையும் நினைக்கும். முன்பிவ்வநுஸந்தாநமு மின்றிக்கே யாயிற்றிருந்தது, மோஹத்தோபாதி யிதுவு மொரு விக்ருதியாயிருக்கிறபடி. (திசைக்கும்) அப்போதே காணப்பெறாமையாலே மோஹிக்கும். (தேறும்) ஒரு ஹேதுவின்றிக்கே யிருக்கத் தேறாநின்றாள். இதுதானும் பயாவஹமாயிருக்கிறதாயிற்று ; மோஹமசெல்லாநிற்க, அபேக்ஷிதம் பெற்றாரைப்போலே தேறுகை பயாவஹமிறே. சரமதசையில் பிறக்கும் தெளிவுக்கும் அஞ்சவேணுமே. உய்ந்தபிள்ளை பாடும்போது, "கெட்டேன், இவள் 'தேறும்' என்பதே" என்று ஜீயரருளிச்செய்வராம். (கைகூப்பும்) இதிவளுக்கு ப்ரக்ருதி. கீழே "மயங்கும் கைகூப்பும்" என்றது, இங்கே "தேறும் கைகூப்பும்" என்றது ; அல்லாதன ஸஞ்சாரியாய்ச் செல்லாநிற்க, இதொன்றும் ஸ்த்திரமாய்ச் செல்லாநிற்கும் ; ஸ்வரூபாநுபந்தியாகையாலே. (க) "நித்யாஞ்ஜலிபுடாஃ - நித்யாஞ்ஜலிபுடாஃ" என்னக்கடவதிறே. மோஹத்திலும் உணர்த்தியிலும் ஸத்தையுண்டே. (உ) "வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்" என்றதிறே நிலைநின்ற ஸ்வரூபம். அநுவர்த்தமாநமானதிறே பரமார்த்தமாவது.

(திருவரங்கத்துள்ளாயென்னும்) "பெருமாளேயென்னும்" என்று ஜீயர். அவ்வூரில் ஸம்பந்தங்கொண்டுபோலேகாணும் அவரையும் விரும்பிற்று. (வந்திக்கும்) "திருவரங்கத்துள்ளாய்" என்றது நெஞ்சிலே வடிம்பிட்டு, "ஒருமுகமே, முறுவலே, ஒருவளையமே" என்று ஸ்தோத்ரம்பண்ணா நின்றாளென்னுதல் ; பக்நாபிமாநையாய்த் திருவடிகளிலே விழுந்துகிடக்குமென்னுதல். (ஆங்கே) அவ்வவஸ்த்தையிலே (மழைக்கண்ணீரித்யாதி) குளிர்ந்த கண்ணீர்மல்க, வந்திடாயென்றென்று சொல்லி, அச்சொலவோடே யறிவுகெடும்.

(க) பார-மோக்ஷ. (உ) ௩-௩-௧.

நினைத்தபோதாக வரப்போமோவென்ன (அந்திப்போது) (க) "ஸத்வஸாரஸம்ப்லவ - மத்தஸ்ஸர்வ ஸம்ஸர்வம்" என்று தெளிந்திருப்பார்க்கோ உதவலாவது, அறிவுகெடுவார்க்கு உதவலாகாதோ. அவன் வரத்துக்கு அவிருத்தமாயிருப்ப தொருகாலத்திலே, ஆஸுரப்ரக்ருதியாயிருக்கிற அவுணனுடைய ஶரீரத்தைப் பிளந்துபொகட்டிலையோ. தமப்பன் பகையானுலோ உதவலாவது, நீர் பகையானுல் உதவலாகாதோ. இவ்வளவில் உதவாமைக்கு மேற்படப் பகையில்லையிறே; அதொருகால் சிறுக்கனுக்கு உதவினமையுண்டு, அது தப்பிற்றிறேயென்ன; பின்போ நீ யுதவாதது (அலைகடல்கடைந்த) ப்ரயோஜநாந்தரபரர்க்கும் அகப்படக் கடலைக்கடைந்து கொடுத்திலையோ. உன்னைக்கொண்டொருப்ரயோஜநங் கொள்வார்க்கோ உதவலாவது, உன்னையே "ப்ரயோஜநம்" என்றிருப்பார்க்கு உதவலாகாதோ. (ஆரமுதே) இவருடைய வம்ருதத்தைக் கொண்டாயிற்று அவர்கள் கடல் கடைந்தது.

(சந்தித்தித்யாதி) உன்னைக் கிட்டித் திருவடிகளைச் சாரவேணுமென்று வ்யவஸிதையாயிருக்கிற இவளை யிப்படி யறிவுகெடுப்பதே. (வலித்த) ப்ராணனை பலாத்காரத்தாலே தரித்த. அன்றிக்கே, உன்னைக்கிட்டி ஸந்நிதியிலே முடியுமித்தனையென்று ப்ராணனை தரித்திருக்கிறவளை யென்னுதல். (வலித்த) அத்யவஸித்த. (உ) "தாவஜ்ஜீவிஷ்யே - தாவத்யஹம் தாத ஜிஜீவிஷேயம்" என்றுகாணுமிருக்கிறது. (மையல்செய்தானே) உம்மை யாசைப்பட்டவளுக்கும் மயக்கமேயோ பலித்துவிட்டது. (ரு)

---

## ஆறும்பாட்டு.

மையல்செய்து என்னைமனங்கவர்ந்தானே! என்னும் மாமாயனே! என்னும் * செய்யவாய்மணியே! என்னும் தண்புனல்சூழ் திருவரங்கத்துள்ளாய்! என்னும்* வெய்யவாள்தண்டுசங்குசக்கரம் வில்லேந்தும் விண்ணோர்முதல்! என்னும் * பைகொள்பாம்பணையாய்! இவள்திறத்தருளாய் பாவியேன் செயற்பாலதுவே. (சு)

---

(க) வி-பு-க-கக-அரு. (உ) ரா-ஸு-ந-கரு நஂ.

ப:—அநந்தரம், ஆஶ்ரித ஸம்ரக்ஷணார்த்தமான வாயுத பூர்த்தியை யுடையையா யிருக்கச்செய்தே இவளை யிப்படி யலற்றும்படி பண்ணின நீ, இவளளவில் நான்செய்யக் கடவபடி யருளிச்செய்ய வேணுமென்கிறாள்.

(இ-ள்.) உன்னுடைய பவ்யதையாலே, என்னை - என்னை, மையல்செய்து - மயல்கொள்ளப்பண்ணி, மனம் - நெஞ்சை, கவர்ந்தானே - அபஹரித்தவனே, என்னும் - என்னும், மாமாயனே - மையல்கொள்ளுகைக்குப் பண்ணின நிரவதிகாஶ்சர்ய சேஷ்டிதங்களை யுடையவனே, என்னும் - என்னும், பவ்யதா ப்ரகாஶகமான வுக்தியாலே ஸ்ப்புரிக்கிற, செய்ய - சிவந்த, வாய் - அதரஶோபையை யுடையையாய்க் கொண்டு, மணியே - மணிபோலே முடிந்தாளலாம்படி ஸுலபனானவனே, என்னும் - என்னும், தண் - உன்னைக்கிட்டியென்பரிதாபம் தீருகைக்கீடாகக்குளிர்ந்த, புனல் - நீர், சூழ் - சூழ்ந்த, திருவரங்கத்து - கோயிலிலே, உள்ளாய் - ஸந்நிஹிதனானவனே, என்னும்-என்னும், வெய்ய - விரோதிவிஷயத்தில் வெம்மையேவடிவான, வாள் தண்டு சங்கு சக்கரம் வில் - ஸ்ரீ பஞ்சாயுதங்களையும், ஏந்தும் - ப்ரணதரக்ஷாவிளம்பம் பொறுதாரைப்போலே யெப்போது மேந்தியிருந்து, அவ்வழகை, விண்ணோர்-ஸூரிகளுக்க நுபவிப்பித்து, முதல் - அவர்கள் ஸத்தாதி ஹேதுபூதனானவனே. என்னும்-என்னும், பை-உன்னுடைய ஸ்பர்ஶத்தாலே விரிகிறபணத்தை, கொள்-உடையனாய், பாம்பு-ஜாதிப்ரயுக்தமான மென்மை குளிர்த்தி நாற்றத்தாலே நிரதிஶய போக்யமான திருவனந்தாழ்வானை, அணையாய் - படுக்கையாகவுடையவனே, இவள்திறத்து - நீ படுக்கைபொருந்திக்கிடக்கத் தரைப்பட்டுக் கிடந்தலற்றுகிற விவள்திறத்து, பாவியேன்-இவளை யிப்படி காணவைத்த பாபத்தையுடைய நான், செயற்பாலது - செய்யும்ப்ரகாரம், அருளாய் - அருளிச்செய்ய வேணும்

நீ யநாதரித்தவளவி லென்னாற் செய்யலாவதொரு பரிஹாரமுண்டாகவுன்றாலும் சொல்லமுடியாதென்று கருத்து. மையல்செய்தென்று-பிச்சரைப்போலே பாவித்துக் காட்டியென்றுமாம். (சு)

ஆறு ;—(மையல்செய்து) அதிக்ஷுத்ரமான காகத்தின் பக்கலிலே ப்ரஹ்மாஸ்த்ரத்தை விட்டருளின வுன்னுடைய ஸர்வ வஶீகரணமான ப்ரணயித்வ குணத்தாலே யென்னுடைய மநஸ்ஸை யபஹரித்தவனேயென்னும். வக்ஷ்யமாணமான அவனுடைய மஹாஶ்சர்யபூதமான ஸௌந்தர்யத்தை யநுஸந்தித்து, மஹாஶ்சர்ய பூதனேயென்று சொல்லும். நிரதிஶயதீப்தி யுக்தமாயிருப்பதொரு நீல

ரத்நம், செந்தாமரை பூத்தாப்போலே யிருந்த திருவுடம்பையும் திருப்பவளத்தையு முடையவனே யென்று அவ்வழகைச் சொல்லும். அடியேனுக் காத்மதாநம் பண்ணுகைக்காகவன்றோ கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிற தென்னும்; ஸர்வஜ்ஞருமாய் ஸர்வஶக்தியுமா யத்யுக்ரமாயிருந்த ரதாங்க சங்க சார்ங்காதி திவ்யாயுதங்களை யேந்தி யருளுகிறது எனக்காகவன்றோ வென்னும். இவளுக்காக நீ கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளாநிற்கச்செய்தே, இவள்பக்கல் க்ருபைபண்ணி யருளுகிறதில்லை; இதுக்கு ஹேது என்னுடைய பாபமேயிறே யென்கிறாள். (௬)

ஈடு; அவ;—ஆறும்பாட்டு. இவள் இவ்வளவு ஆபந்நையாயிருக்க, இவள் ஆளார்த்தி தீர்த்தருளாதொழிகைக்குக் காரணம் என்னுடையகர்மவிபாகமென்கிறாள்.

(மையல்செய்து) உணர்த்தியுண்டாகில் நெஞ்சிழவாள்காணும். எதிரிகளுடைய அநவதாநம் பார்த்திருந்து அவர்கள் கோட்டை கொள்ளுவாரைப்போலே. (என்னை) கடலைத்தறைகண்டா னென்னுமாப்போலே. (மனங்கவர்ந்தானே) புழுகூற்றிச்சட்டம் பொகடுவாரைப்போலே. (மையலித்யாதி) கொன்று கிழிச்சீரை யறுப்பாரைப்போலே. (மாமாயனேயென்னும்) மையல்செய்த ப்ரகாரங்கள். கலக்கிற ஸமயத்தில் தாழநின்று கையைக் காலைப்பிடித்துப் பரிமாறின பரிமாற்றங்காணும் இவள் நெஞ்சில் பட்டுக்கிடக்கிறது. ஸ்வதஸ்ஸித்தமான மேன்மைபோலல்லவாயிற்று ப்ரணயித்வத்தாலே தாழநின்றநிலை. ஸம்ஶ்லேஷதசையிலாஶ்சர்யமான சேஷ்டிதங்களை யுடையவனே யென்னும்.

(செய்யவாய் மணியேயென்னும்) இதுவும் அந்தமாயங்களிலே யொன்று. தைர்யபங்கம்பிறந்து "நானுன்சரக்கன்றோ" என்று சொல்லுகிறபோதை அதரத்தில் பழுப்பு. (க) "ஸவிலாஸஸ்மிதாதாரம்" என்னக்கடவதிறே. (மணியே) புஷ்பம் விகஸிதமாம்போது எங்குமொக்க வொருசெவ்வி பிறக்குமாப்போலே, ஸ்மிதம்பண்ணுகிறபோது வடிவிலே யெங்கு

(க) வி பு-டு கஎ-உக.

மொக்க வொருசெவ்வி பிறந்தபடி. ( தண்புனல் ) ஸ்மிதத்தில் குளிர்த்திபோலேயாயிற்றாரில்குளிர்த்தியும். அவ்வாயில் குளிர்த்திபோலேகாணு மிவ்வாயில் குளிர்த்தியும். † (வாய்-இடம்.)

(வெய்யவாளித்யாதி) திவ்யாயுதங்கள், எதிரிகளையழிக்கைக் குடலாயிருக்குமாப்போலே காமிநிகளை யழிக்கைக்கு முடலாயிருக்குமிறே. உகப்பாரையு முகவாதாரையு மொக்கத்தோற்பிக்குமவை. முன்னே கைகண்டு வைக்கிறவையிறே. காணவே யெதிரிகள் மண்ணுண்ணும்படியான திவ்யாயுதங்களை தரித்திருக்கிற நீ என் விரோதிகளைப்போக்கி முகங்காட்டாதொழிவதே. (விண்ணோர்முதலென்னும்) திவ்யாயுதங்களோடேச் சேர்த்தியால் வந்தவழகைக்காட்டி நடத்த, அதுவே ஜீவநமாகவாயிற்று அந்நாடு கிடப்பது. இல்லையாகில், அங்கே வினையுண்டாய் தரித்துக்கொண்டிருக்கிறானன்றே.

(பைகோளித்யாதி) ஸ்மிதத்தோடு, திவ்யாயுதங்களோடு, நித்யவிபூதியுக்தனாயிருக்கிற விருப்போடு, திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினத்தோடு வாசியற வெல்லா முத்தேஸ்யமாயிருக்கிறதாயிற்று. பகவத்விக்ரஹ ஸ்பர்ஶத்தாலுண்டான ஹர்ஷத்தாலே விகஸிதமான பணங்களையுடையனான திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனே. தனிப்படுக்கையிலே சாய்வதே நீர் இவள் தறைக்கிடைகிடக்க. (இவள்திறத்தருளாய்) படுக்கையில் சேர்த்தி பெறாவிட்டால், நாட்டுக்குப் பண்ணுமருளுமின்றிக்கே யொழியவேணுமோ, (இவள்திறத்து) பாடோடிக்கிடக்கிற விவள் திறத்து. (அருளாய்) அருள்கொள்வார் தேட்டமான நீ, அருள்பெறில் ஜீவிக்குமிவளை யிப்படி தறைக்கிடைகிடக்க விட்டுவைப்பதே. ( அருளாய் - அருளுகிறீரில்லை யென்றபடி.)

(பாவியேன்) நீரருளாதவராயல்ல, இவள் அது பெறாவிடில் ஜீவிப்பாளாயல்ல; இதுக்கடி நான்பண்ணின பாபமிறே. (க) "ஜீதாவை ஜீவாத நிமித்தாவஸீஜ - மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்" என்னுமாப்போலே. ( செயற்பாலது ) என்னுடைய செயலிடத்தது அருளாமைக்கடி. (பாவியேன் செயலிடத்தது-இவள் பக்கலிலும் குறையில்லை, உம்முடைய பக்கலிலும் குறையில்லை, இருவருமான சேர்த்தி பெறவிருக்கிற வென்பாபமிறே யிதுக்குஹேது. (சு)

(க) ரா-அயோ.

## ஏழாம்பாட்டு.

பாலதுன்பங்க ளின்பங்கள் படைத்தாய்! பற்றிலார்பற்றநின்றானே! * காலசக்கரத்தாய்! கடலிடம்கொண்ட கடல்வண்ணா! கண்ணனே! என்னும் * சேல்கொள் தண்புனல்சூழ் திருவரங்கத்தாய்! என்னும் என்தீர்த்தனே! என்னும் * கோலமாமழைக் கண்பனிமல்க இருக்கும் என்னுடைக் கோமளக்கொழுந்தே. (எ)

**ப:—** அநந்தரம். ஆஶ்ரித ஸம்ரக்ஷணார்த்தமான அர்ணவஶாயித்வாதி குணங்களையுடையவன் ஸ்வபாவங்களைச்சொல்லி க்லேஶியாநின்றாளென்கிறாள்.

(இ ள்) என்னுடை - என்னுடைய, கோமளம் - ம்ருதுஸ்வபாவமான கொழுந்து - லதாக்ரம்போலே மெல்லியளாயிருக்கிறவிவள், பால - இடந்தோறு மிடந்தோறும், துன்பங்கள் - அநாஶ்ரித விஷயத்திலே துன்பங்களையும், இன்பங்கள் - ஆஶ்ரிதரிடத்திலே யின்பங்களையும், படைத்தாய் - உண்டாக்கினவனாய், எத்தனையேனு மபராதிகளாயும், பற்று - புறப்பற்று, இலார் - அற்றாரான ஜயந்தன்போல்வாரும், பற்ற - பற்றும்படி, நின்றானே - அஶரண்ய ஶரண்யனாய் நிற்பானாய், காலசக்கரத்தாய் - ஆஶ்ரிதருடைய ப்ராப்திகாலம் நீயிட்ட வழக்காம்படி மாஸருதுவத்ஸராதி பரிவ்ருத்தியை யுடைத்தான காலசக்ரத்துக்கு நிர்வாஹகனாய்க் கொண்டு, ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக, கடல் - திருப்பாற்கடலிலே, கடல்வண்ணா - கடலிலே யொருகடல் சாய்ந்தாப்போலே, இடங்கொண்ட - கண்வளர்ந்தருளுமவனாய், க்ஷீரார்ணவநிகேதநனான அந்த ஆகாரத்தைவிட்டு, கண்ணனே - ரக்ஷணார்த்தமாக க்ருஷ்ணனாய்வந்தவனே, என்னும் - என்னும், அதுக்கும் பிற்பட்டார்க்காக, சேல் - சேல்களை, கொள் - உடைத்தான, தண் - குளிர்ந்த, புனல் - புனல், சூழ் - சூழ்ந்த, திருவரங்கத்தாய்- கோயிலிலே ஸந்நிஹிதனானவனே, என்னும் - என்னும், அந்த ஸௌலப்யத்திலே, என் - நானவகாஹிக்கைக்கு, தீர்த்தனே - துறையானவனே, என்னும்- என்னும், இவ்வார்த்தத்வநியில் வரக்காணாமையாலே. கோலம் - தர்ஶநீயமாய், மா - பெருத்து, மழை - குளிர்ந்த, கண் - கண்ணானது, பனி - நீர், மல்க - விஞ்சும்படி, இருக்கும் - நிர்வ்யாபாரையாய் நிற்கும்.

இப்பாட்டு - திருத்தாயார்வார்த்தையான முன்னிலை யில்லாமையாலே, அவள் தன்னுடைய வுட்கொண்டிரங்குதல். அன்றியே, கடல்வண்ணா வென்னுமளவும் - தாய்வார்த்தையான நாயகன் முன்னிலையாய், கண்ணனேயென்று தொடங்கி-நாயகி பாசுரத்தைச் சொன்னாளாகவுமாம். (எ)

ஆறு ;—(பாலதுன்பங்கள்)ஸுகதுக்கங்களை அநுகூல ப்ரதிகூலாநுபாவ்யமாக நீபண்ணின வ்யவஸ்த்தையை யென்னளவிலே விபர்யஸ்தமாக்கவோ பார்த்தருளிற்றென்றும், உன்னுடைய அஶரண்ய ஶரண்யத்வ மெங்ஙனே போயிற்றென்றும், ஆஶ்ரிதவிரோதிகளுடைய ஆயுரவஸாந கணநைகஸ்வபாவமான திருவாழியை யேந்திக்கொண்டிருக்கிறது அடியேனுக்காகவன்றோவென்றும், திருப்பாற்கடலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறதும், ஶ்ரீநந்தகோபர் திருமகனாய்வந்து திருவவதாரம் பண்ணியருளினதும், கோயிலிலேவந்து கண்வளர்ந்தருளுகிறதும் ஆஶ்ரிதார்த்தமாகவன்றோ வென்றும், த்வத்குணைக தாரகபோஷக போக்யத்வ விரோதியாய் மத்கதமான அஶேஷதோஷங்களையும் போக்கினப்போலே, த்வத்ஸம்ஶ்லேஷ விரோதியான என்னுடைய பாபங்களையும்போக்கியருளாயென்றும் சொல்லிக்கொண்டு ; பிரிவென்னும் சொல்லுங்கூடப் பொறுக்கமாட்டாதபடி ம்ருதுஸ்வபாவையான வென்னுடைய பெண்பிள்ளை, தன்னுடையவழகிய கண்கள் நீர்மல்க விருக்கு மென்கிறாள். (எ)

ஈடு ;— அவ ; ஏழாம்பாட்டு. ஆஶ்ரயங்களை யநுஸந்தித்து, பொறுக்குமளவுகளிலேயன்றோ ஸுகதுக்கங்களைச் சுமத்துவது : இப்படி யென்னைப் படுத்தலாமோ மன்னாநின்றாளென்கிறாள். "ஆஶ்ரிதரை வாழ்விக்கையுமநாஶ்ரிதரை நலிகையுமன்றிக்கே, இப்போது விபரீதமாயிற்றோ வும்முடையபடி யென்கிறாள்" என்று பிள்ளான். இக்கோமளக்கொழுந்துக்கு, கைம்முதலொன்று மில்லாதார் பற்றினால் ரக்ஷிக்கக்கடவ நீர்மையுடையவன் ஸந்நிதியிலே யிதெல்லாம் படவேண்டுகிறது என்னோட்டை ஸம்பந்தமென்று மநோரதிக்கிறாள்.

(பாலவித்யாதி) இடமறிந்து ஸுகதுக்கங்களைப் படைத்தவனே. பாலென்றது - இடமென்றபடி. அப்பாலிப்பாலென்றால் - அவ்விட மிவ்விடமென்றபடி; பாலவாக - ஸ்தாநேஸ்த்தாநேயாக. உம்மைப்பிரிந்தாரெல்லாரு மநுபவிக்கும் துக்கத்தை யிவளொருத்தியையு மநுபவிப்பிக்கப்பார்த்தால் இவளால் பொறுக்கப்போமோ. அங்ஙனன்றிக்கே, ஆஶ்ரிதர் வாழவும் அநாஶ்ரிதர் கெடும்படியாகவுமன்றோ நீ பண்ணிவைத்தது. பாலென்பது-முறை. (க) * செய்குந்

(க) உ-சு-க.

தாவருந் தீமை யுன்னடியார்க்குத் தீர்த்தசுரர்க்குத் தீமைகள் செய்குந்தனன்றே. பண்டுகட்டின மர்யாதையு மிவளுக்கில்லையோ. பாலென்று - பாசமும், இயல்வும், இடமும், ந்யாயமும், இவை நாலுக்கும் பேர்.

தந்தாமால் பொறுக்கவொண்ணாதவை தாந்தாமே யேறிட்டுக்கொள்ளும்போது நம்மால் செய்யலாவதுண்டோ; நம்பக்கல் குறையில்லை, பேறுதந்தாமதாலும் தாங்களும் சிலசெய்யவேணுமென்று அவனுக்குக் கருத்தாக (பற்றிலார்பற்றநின்றானே) ஒரு கைம்முதலில்லாதார்க்காகவன்றோ இங்குவந்து சாய்ந்தருளிற்று. இக்கிடை நித்யஸூரிகளுக்காகவோ. உம்முடைய பக்கல் பற்றறுத்துக்கொண்ட ஐயந்தன்போல்வார்க்கும் பற்றாயிருக்குமவரன்றோ நீர்; (க) * தமேவசரணம் கத:-தமேவசரணங்கத: அன்றோ; அதுண்டானாலும் அதுக்கொரு காலமுண்டேயென்ன (காலசக்கரத்தாய்) அக்காலசக்ரம் நீயிட்ட வழக்கன்றோ. ஆச்ரிதர்க்காக ப்பகலை யிரவாக்கினவனன்றோ. அன்றிக்கே, ப்ரதிபந்தகமுண்டேயென்னில்; ப்ரதிபந்தகத்துக்கு ம்ருத்யுவான திருவாழியன்றோ தரித்திருக்கிறது.

பரிகாரமுண்டானாலும் 'நான் தூரஸ்தனன்றோ என்னவொண்ணாதே! (கடலிடங்கோண்ட கடல்வண்ணா) நீ யெங்களைக்காலம்பார்த்தன்றோ கிட்டக்கிடக்கிறது. ஒருகடலொருகடலிலே சாய்ந்தாப்போலே அணித்தாகத்திருப்பாற்கடலிலே சாய்ந்திலையோ. ஆனாலங்கே வரலாகாதோவென்ன; அவ்வலையலைக் கேட்கமாட்டாத இடையர்க்கு மிடைச்சிகளுக்குமாக க்ருஷ்ணாய் வந்து உதவிற்றிலையோ வென்கிறாள் (கண்ணனேயென்னும்) (உ)“ நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்” - நாகபர்யங்க முத்ஸ்ருஜ்யஹ்யாகதோ மதுராம்புரீம்” என்று அக்கிடையைவிட்டு இடையிலேவந்து உதவிற்றிலையோ?

அது தப்பிற்றேயென்ன; அவ்வவதாரம் பரத்வமென்னும்படியன்றோ கோயிலிலேவந்து சாய்ந்தருளிற்று (சேல்கொளித்யாதி) (ந) * ஜலாந்மத்ஸ்யாவிவ - ஜலாந்மத்ஸ்யாவிவ வன்றோ; ஜலசரஸத்த்வங்கள் ஜலத்தைப்பிரிந்து தரிக்கிலன்றோ விவளும்மைப்பிரிந்து தரி

(க) ரா-ஸு-ந-அ-ந-ந. (உ) ஹரிவம்ஶ-கக௩.
(ந) ரா-அயோ-ருந-நக.

க்கவல்லளாவது. அவ்வூரிலே வர்த்திக்கிற உமக்குப்போருமோ இவளுக்கு முகங்காட்டாதொழிகிறவிடம். (என் தீர்த்தனேயென்னும்) நீ யுபேக்ஷித்தாலு முன்னையொழிய வெனக்குச் செல்லாதபடி பண்ணினவனே யென்னுதல்,† (புறம்புள்ளாரோடு பொருந்தாதபடியான ஸாத்தியோகத்தைச் சொல்லுதல்), நானிழிந்தாடும் துறை யென்னுதல்.

(கோலமித்யாதி) தர்ஸநீயமாய்ப் பரந்து ப்ரமஹரமான கண்ணீர்மல்க விராநின்றாள். கண்ணுங்கண்ணநீருமான அழகு காட்டி லெறித்த நிலாவாவதே. இக்கண்ணநீருக்கு ஸாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி பலவேளையிலே யிழப்பதே. (என்னுடைக்கோமளக் கொழுந்தே) கலக்கப்பொறாத மார்த்தவத்தையுடையவள் பிரியப் பொறுக்குமோ. "தசைமுறுகினால் வைத்யர் கண்முகம் பாராதாப் போலே, மகள் அவஸ்தையைக்கண்டு தளர்ந்து பெரியபெருமாள் முகம்பாராதேவார்த்தை சொல்லுகிறாள்" என்றருளிச்செய்வர். (கொழுந்து) உபக்நம் தேட்டமானவளவிலே தறையிலே படரவிடுவதே. (க) [வ்ருக்ஷஸம்யோகஸாபேக்ஷா - பதிஸம்யோகஸாபேக்ஷா] இப்பாட்டி லொருதலைக்கட்டின்றிக்கே யிருக்குமிதுக்குக் கருத்து "'பரிஹரிக்கு மெல்லைகழிந்தாள், நாமிவர்க்குச் சொல்லுவதென்' என்று தன்னிலே நோவுபடுகிறாள்" என்று, வங்கிப்புரத்துநம்பி பணிக்கும். (எ)

---

## எட்டாம்பாட்டு

கொழுந்துவானவர்கட்கு! என்னும் குன்றேந்திக் கோநிரை காத்தவன்! என்னும்* அழும் தொழும் ஆவியனலவெவ்வுயிர்க்கும் அஞ்சனவண்ணனே! என்னும் * எழுந்துமேல்நோக்கி இமைப்பிலளிருக்கும் எங்ஙனேநோக்குகேன்? என்னும் * செழுந்தடம்புனல் சூழ்திருவரங்கத்தாய்! என்செய்கேன் என்திருமகட்கே? (அ)

ப.—அநந்தரம், உன்னுடைய வதிமாநுஷ சேஷ்டிதத்திலே யகப்பட்டு மேன்மேலன க்லேஷ்டையாகிற விவளுக் கென்செய்வேனென்கிறாள்.

---

† குண்டலிதம் க்வாஸித்கம். (க) ரா-அயோ-ககஅ-ருஎ.

(இ - ள்.) வானவர்கட்கு - நித்யஸூரிகளுக்கு, கொழுந்து - ப்ரோபூத ஞனவன், என்னும் - என்னும், அந்த மேன்மையோடேகூட ஆஸ்ரித ரக்ஷண ர்த்தமாக அவதரித்து, குன்று - மலையை, ஏந்தி - அநாயாஸேநவேந்தி, கோநிரை-பசுக்களை, காத்தவன் - ரக்ஷித்த அதிமாநுஷ சேஷ்டிதத்தையுடையவனே, என்னும்-என்னும், அந்த ரக்ஷணம் தன்னளவிலே பலியாமையாலே, அழும்-பக்திபாவஸரைப்போலே கண்ணும் கண்ணநீருமாயிருக்கும், தொழும்-ப்ரபந்நரைப்போலே அஞ்ஜலிபந்தம் பண்ணுநிற்கும், இரண்டும் பலியாமையாலே, ஆவி-அஹ்ராஹ்யமான ஆத்மவஸ்து, அனல - தக்தமாம்படி, வெ - வெவ்விதாக உயிர்க்கும் - மூச்சுவிடும், அஞ்சனவண்ணனே - இப்படி யார்த்தையாக்கின ஸ்யாமள:விக்ரஹத்தையுடையவனே, என்னும்-என்னும், "இக்குரலைக்கேட்டு வாக்கூடும்" என்று, மேல் - மேலே, எழுந்து - தலையெடுத்து, நோக்கி - பார்த்து, இமைப்பிலள் - இமையாதே, இருக்கும் - இருக்கும், எங்ஙனே - எந்தப்ரகாரத்தாலே, நோக்குகேன் - உன்னைக்காண்பேன், என்னும்-என்னும், செழு-தார்ஸநீயமாய், தடம் - பெருத்த, புனல் - புனல், சூழ்-சூழ்ந்த, திருவரங்கத்தாய்-கோயிலிலே ஸந்நிஹிதனானவனே, என் - என்னுடைய, திருமகட்கு - லக்ஷ்மீ ஸமானையான விவளுக்கு, என் - எத்தை, செய்கேன் - செய்வேன்.

ஆர்த்திக்கடியான ப்ரேமத்தை யளவுபடுத்துவேனோ, வாராதவுன்னை வரப்பண்ணுவேனோ, இரண்டும் முடியாதிறே யென்று கருத்து. (அ)

ஆறு;—(கொழுந்து) ஸ்ரீ வைகுண்டநிலயனாய்* அயர்வறுமமரர்க ளதிபதியா யவாப்தஸமஸ்தகாமனாயிருந்துவைத்து, கோபவேஷ பூஷிதனாய்க்கொண்டு பிறந்தருளி, வர்ஷத்தினாலே அதிபீட்யமாநமான கோப கோபீ ஜநங்களையும் பசுக்களையும் ஸ்ரீ கோவர்த்தநத்தையெடுத்து ரக்ஷித்தருளின வுன்னுடைய நிரவதிகமான காருண்ய குணத்துக்குங்கூட விஷயமல்லேனோவென்னும். பின்னையும், நீ பார்த்தருளா தொழிந்தவாறே யழாநிற்கும். தன்னுடைய அபேக்ஷிதம் பெறுகைக்காக வுன்னைத் தொழாநிற்கும்; தன்னுடைய வாத்மஸ்வரூபம்அங்காரமயமாம்படி தீர்க்கோஷ்ணநிஸ்வாஸத்தைப் பண்ணும். என்னுடைய ஸந்தாபமெல்லாம் போம்படி, உன்னுடைய அதிஸீதளமான அஞ்ஜந மேனியைக்காட்டி யருளாயென்னும். நீ வரும்படி காணவேணுமென் றெழுந்திருந்து அநிமிஷலோசநையா யாகாஸத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும். அங்குக் காணதொழிந்தவாறே, உன்னைக் காண்கைக்கு உபாயமேதோவென்

னும். செழுந்தடம்புனல்சூழ் திருவரங்கத்தாய், என் திருமகட்கு இனி நான்செய்வ தென்னென்று கூப்பிடுகிறாள். (அ)

ஈடு ; அவ ;—எட்டாம்பாட்டு. இவளுக்கு மேன்மேலன வருகிற நோவுகள் தீர்க்கைக்கு நான் செய்வதென்னென்கிறாள்.

(கொழுந்து வானவர்கட்கேன்னும்) நித்யஸூரிகளுக்கும் தலையானவனேயென்னும். அன்றியே, அவர்கள் வேராகத்தான் கொழுந்தானவனென்னுதல். † (அவர்களாலே லப்தஸத்தாகனுகை.) (குன்றேந்தி) லோகாந்தரத்தில் பரிமாற்றந் தேடவேணுமோ, பசுக்களுக்கும் தத்ப்ராயரான இடையர்க்கும் உதவினவனன்றோ. மேன்மையில்லாமை யிழக்கிறேனோ, நீர்மையில்லாமை யிழக்கிறேனோ வென்னும்.

(அழும்) மலையைதரித்தொரு வர்ஷத்தைப்பரிஹரித்த நீர் இவ்வர்ஷத்தைப் பரிஹரித்தாலாகாதோ. (க) "வஹ—யாஸ்ஜ தக—ஃ வவஷி—ணீ - பஹூதாஸ்ரந்ததுஃகவர்ஷிணீ" என்கிறவிது பரிஹரித்தாலாகாதோ? (அழும்) பாலர் செய்வதையும் செய்யுமென்னுதல், ஸ்நேஹிகள் செய்வதையும் செய்யுமென்னுதல் (தொழும்) புகலற்றார் செய்வதைச் செய்யுமென்னுதல், வேதாந்த ஜ்ஞானமுடையார் செய்வதைச் செய்யுமென்னுதல். (ஆவியனல வெவ்வுயிர்க்கும்) தொழுதவநந்தரம் வரக்காணாமையாலே, "ப்ரஹ்மாஸ்த்ரம் வாய்மடிந்தது" என்று, அதாஹ்யமான வாத்மவஸ்து அக்நிமயமாம்படி நெடுமூச்செறியும். (உ) "ஊஷ்ணம் நிஶ்வஸ்ய-தீர்க்கமுஷ்ணஞ்ச நிஶ்வஸ்ய" என்கிறபடியே.

(அஞ்சனவண்ணனேயென்னும்) நெருப்பிலே நீரைச்சொரிந்தாப்போலே அக்குளிர்ந்த வடிவைக்கொண்டுவந்து தோற்றவல்லையேயென்னும் (ங) "ஜீவமூ—மேகஶ்யாமம்" என்னும் வடிவிறே கைகேயிவார்த்தையால் பிறந்த தாபமடைய வாறுங்கிடீர்! அவ்வடிவழகிலே விழிக்கப்பெற்றோமாகி லென்றார்களிறே.

(எழுந்தித்யாதி) வடிவை நினைத்தவாறே தரித்தெழுந்திருந்து, வரஸம்பாவனையுள்ள திக்கைப்பார்த்து, "ப்ரதமபரிஸ்பந்தமேது

---

† குண்டலிதம் க்வாசித்கம். (க) ஸ்தோ-ர-சக.

(உ) ரா-யு-ககஎ-சு. (ங) ரா-அயோ-அங-அ.

டங்கிக் காணவேணும்'' என்று இமைகொட்டாதே பார்த்துக்கொண் டிருக்கும். (எங்ஙனே நோக்குகேனென்னும்) தான் பார்த்த திக்கில் வரக்காணாமையாலே, "பின்னேக்கிவந்து கட்டிக்கொள்ளும்" என்று புரிந்து பாராநிற்கும். (எழுந்து மேல்நோக்கி) வடிவை நினைத்த வாறே தளர்த்தியிலே யெழுந்திருந்து, "ஆனைக்கு உதவினப்போலே வரக்கூடும்" என்று மேல்நோக்கிப்பார்த்து, "ப்ரதமபரிஸ்பந்தமே தொடங்கிக் காணவேணும்" என்றுமை இமகொட்டாதே யிருக்கும்; (எங்ஙனே நோக்குகேனென்னும்) பின்னையும் தோற்றக்காணாமையாலே, நானுன்னைக்காணும் விரகேதென்னும்.

(செழுந்தடம்புனல்சூழ் திருவரங்கத்தாய்) அழகிதாய்ப்பெருத்த நீர்சூழ்ந்த கோயிலை யிடமாகவுடையவனே. இப்படி ஸ்ரமஹரமானதேசத்திலே நீர்வந்து சாய்ந்தது இவள் வரவுபார்த்தன்றோ. அத்தலை யித்தலை யாயிற்றே. (என்செய்கேன்) கர்த்தவ்யமடங்கலும் தானே யநுஷ்டித்தாள், நானினிச்செய்வதென். உபாயாந்தர ஸாத்யமோ வும்முடைய தர்ஸநம். (என் திருமகட்கே) இவளை யிழக்கலாமோ வுமக்கு. உம்மை யொருவரையு மாசைப்பட்ட வேற்றமன்றோ அவளது, உம்மையுமவளையும் சேர ஆசைப்பட்ட ஏற்றமுடையவளல்லளோ இவள். ஸாக்ஷால்லக்ஷ்மியோடொக்கச் சொல்லலாமாகாதே இவளை. (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

என்திருமகள் சேர்மார்வனே! என்னுமென்னுடையாவியே! என்னும் * நின்திருவெயிற்றால் இடந்துநீகொண்ட நிலமகள்கேள்வனே! என்னும் * அன்றுருவேழும் தழுவிநீகொண்ட ஆய்மகளன்பனே! என்னும் * தென்திருவரங்கம் கோயில்கொண்டானே! தெளிகிலேன்முடிவு இவள்தனக்கே. (கூ)

ப;—அநந்தரம், லக்ஷ்மீ பூமி நீளாநாயகனான வுன் ப்ரணயித்வாதிஶயத்திலே யகப்பட்ட விவளுக்குக் காரியந் தலைக்கட்ட விருக்கிறபடி யறிகிறிலேனென்கிறாள்.

(இ-ள்.) என் - எனக்கு ஸ்வாமிநியான, திருமகள் - லக்ஷ்மியானவள், சேர் - தனக்கபிமதஸ்த்தாநமாகச் சேர்ந்த, மார்பனே - திருமார்பை யுடையவ

னே, என்னும் - என்னும், அச்சேர்த்தியழகோடே, என்னுடை - எனக்கு, ஆவியே - தாரகமான ப்ராணனுய்க்கொண் டென்னெஞ்சிலே யிருந்தவனே, என்னும்-என்னும், (க) 'நீலவரை யிரண்டுபிறைகவ்வி'' என்கிற கணக்கிலே வடிவுக்குப் பரபாகமான, நின் - உன்னுடைய, திருவெயிற்றால் - திருவெயிற்றாலே, இடந்து-ப்ரளயத்திலே முழுகி அண்டகபாலத்திலேநின்று மிடந்தெடுத்து, நீ - நீ, கொண்ட - உனக் கபிமதை யாகக்கொண்ட, நிலமகள்-ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு, கேள்வனே - ஸத்ருஶநாயகனே, என்னும் - என்னும், அன்று - ருஷபங்களை ஸாகல்கமாக நியமித்தவன்று, உரு - இடிபோலே பயாவஹத்வநியான ருஷபங்கள், எழும் - எழையும், தழுவி - அபிமதவ்ஷய கண்டாப்போலே ஷம்போலே அநாயாஸேந தழுவி, நீ - நீ, கொண்ட, நிதியெடுத்துக் கொண்டாப்போலே ஸ்வீகரித்த, ஆய்மகள் - ஸத்ருஶகோபகுலத்திலேபிறந்த நப்பின்னைப்பிராட்டிக்கு, அன்பனே - பத்தபாவனனவனே, என்னும் - என்னும், இப்படி யவர்கள்பக்கலிலே யுன் ப்ரணயித்வத்தை ப்ரகாசிப்பித்தாப்போலே யிவளுக்கு முதவுகைக்காக, தென் - கட்டளைப்பட்ட, திருவரங்கம் - ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை, கோயில் - வாஸஸ்தாநமாக, கொண்டானே - அங்கீகரித்தவனே, இவள்தனக்கு - இவளுக்கு, முடிவு—ஆர்த்திபர்யவஸாந ப்ரகாரம், தெளிகிலேன் — அறிகிறிலேன். உருமென்றும் பாடமாம்.

ஆறு.,—(என்றிருமகள்) ஸர்வலோக மஹேஶ்வரியாய் * ஸமஸ்தகல்யாணகுணாம்ருதோததியா யிருந்த பெரியபிராட்டியார்க்கும் ஶேஷியாய், உன்னுடைய குணங்களாலே தாஸ்ய முபாகதையான ஸ்ரீ பூமிப்பிராட்டியாருக்கும் ஶேஷியாய், தன்னுடைய நிரவதிக ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யஸங்க்யேய கல்யாண குணங்களாலே பரமபோக்ய பூதையான நப்பின்னைப்பிராட்டிக்கும் ப்ரணயியாயிருந்த நீ; தத்பரிக்ரஹமாகையாலே யென்னை த்வதேகதாரகை யாக்கினப்போலே, இன்னமும் "தத்பரிக்ரஹ - தத்பரிக்ரஹம்'' என்றென்னை உன் திருக்கண்களாலே பார்த்தருளா யென்று சொல்லும். இவளுக்காகக் கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற நீ யிவளைப் பார்த்தருளுகிறிலை, இனி யிவளுக்கென்னாய்விளையுமென் றென்று மறிகிறிலே னென்கிறாள். (௯)

ஈடு ; அவ. — ஒன்பதாம்பாட்டு. இவளுடைய துக்கத்துக் கொருமுடிவு காண்கிறிலே னென்கிறாள்.

---

(க) கo-கரு-எ.

(என் திருமகள்சேர்மார்பனேயென்னும்) என் பேற்றுக்குப் புருஷகாரமில்லாமை விடுக்கிறேனோவென்னும். விசிஷ்டத்திலன்று, 'என்' என்கிறவிது-விசேஷணாம்சத்திலே. † (அதாவது ; 'என்' என்கிறவிடம்-திருமகளிலே யந்வயிக்கிறது, மார்பனே என்கிறவிடத்திலந்வயிக்கிறதன்று.) அநந்தாழ்வான் தன் பெண்பிள்ளையை "என் திருமகள்" என்று திருநாமஞ் சாத்தினான். பட்டர் பெருமாளுக்கு, "அடியேனை 'ஸ்த்ரீதநமாகப் பிராட்டிக்குவந்தவன்' என்று திருவுள்ளம்பற்றவும், நானும் 'இவர் எங்கள் நாய்ச்சியாருக்கு நல்லர்' என்று, அவ்வழியே 'அழகியமணவாளப்பெருமாள்' என்று நினைத்திருக்கவுமாகவேணும்" என்று வேண்டிக்கொண்டார். (சேர்மார்பனே) ரஹஸ்யத்தில் நித்யயோகத்தைச் சொல்லுகிறது. அவளொருக்ஷணம் பிரியவிருக்கிலன்றோ வெனக்குப் பேறு தாழ்க்கவேண்டுவது.

"பெருமாளுக்கு விண்ணப்பஞ் செய்யுமவை கேட்கைக்காக நஞ்சீயரை யழைத்தருளித் தாமமுது செய்யா நிற்கச்செய்தே, இத்திருவாய்மொழி யியலைக் கேட்டருளாநிற்க, இப்பாட்டளவிலே வந்தவாறே 'என்திருமகள் சேர்மார்பனேயென்னுமென்னுடையாவியே யென்னும்' என்றியலைச் சேர்த்தருளிச்செய்ய, அத்தைக் கேட்டுக் கையையுதறி 'ஸ்ரீரங்கநாத' என்றணையிலே சாய்ந்தருளினார் பட்டர்" என்றருளிச்செய்வர். "அப்போது திருமேனியிலே பிறந்த விக்ருதியைக்கண்டு 'இவர்க்கு பகவத்ப்ராப்தி யணித்தாகிறதோ' என்றஞ்சி யிருந்தேன்" என்று ஜீயரருளிச்செய்வர். (என்னுடையாவியே யென்னும்) இவர்க்கு ப்ராணனொருவாயு விசேஷமல்ல, ஒருமிதுநமாயிற்று. திருமகள்சேர்மார்பனைக்கொண்டு எனக்கு தாரகனானவனே யென்னும்.

(நின்னித்யாதி) ப்ராணயிநிகளுக்குக் காரியஞ்செய்யும்போது உன்னை யழியமாறியன்றோ கார்யஞ்செய்வது. ஸ்ரீ பூமிப்பிராட்டி பக்கல் முகம் பெறலாவது அவள் விபூதியைத் தன்முகேந நோக்கினவிறே. "நின் திருவெயிறு" என்னுமித்தனை யழகுக்கு. (இடந்து நீ கோண்ட) நீ யிடந்துகொண்ட. ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு வல்லபனானவனே.

† குண்டலிதம் க்வாசித்கம்.

(அன்றித்யாதி) ஒருநாளுதவின நீ யின்றுதவிலுலாகாதோ. ந ப்பின்னைப்பிராட்டியுடைய தசையை - அன்றென்னு மித்தனே. ஒன்றிரண்டன்றிக்கே யிருக்கிற ருஷபங்களேழையும் தழுவி. அவள் திருமுலைத் தடத்தை யணைக்தாப்போலே யிருக்கிறதாயிற்று அவ ளைப்பெறுகைக்கு உபாயமாகையாலே. உருவென்று - இடி. இடி போலே பயங்கரமான குரலையுடைய வேறென்னுதல். உருவென்று மிடுக்காய், மிடுக்குத்தான் வடிவுகொண்டாப்போலே யென்னுதல். "உருவுட்கு" என்று உருச்சொல்லு. நீ கொண்ட - நீகைக்கொ ண்ட. (ஆய்மகளன்பனேயென்னும்) என்னைக் கைவிட்டு என் ஸ் வாமிநிகள் பக்கலிலெங்ஙனே முகம்பெற விருக்கிறுயென்னும்.

(தென்திருவரங்கம் கோயில்கொண்டானே) தெற்குத்திக்குக் கு ஶ்லாக்யமான ஸ்ரீரங்கக்ஷேத்ரத்தை வாஸஸ்தாநமாக வுடைய வனே. "எருதேழடர்த்த வவதாரத்திலே முகங்காட்டப் பெற்ற தில்லை" என்னும் குறையுண்டோ. அவதாரங்கள் போலன்றியே நித்யவாஸம்பண்ணுகிறது, பிற்பாடர்க் குதவவன்றோ. (க) "ஶ ஸம்ஸாரநிவ்ருத்திர் -கதஸ்ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம்" என்னவேண் டாதபடி கோயில்கொண்டாறாயிற்று. (தெளிகிலேன்) அங்குக் கு றையற்றபின்பு "தப்பாது" என்று தெளியவிறேயடுப்பது, அது மாட்டுகிறிலேன். (உ) "ஶரணம் - மாமேகம்" என்றத்தை யநு ஷ்ட்டாநபர்யந்தமாக்கிக்கொண்டு நீ கிடந்தால், (ங) "ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: - ஸ்த்திதோஸ்மி கதஸந்தேஹ:" என்றிருக்கவி றேயடுப்பது; அது மாட்டுகிறிலேன். இவள் தனக்கு - முடிவு-தெ ளிகிறிலேன். இவளவஸ்த்தை யிதுவாயிருக்க, ஒரு ஜ்ஞாநலாபத் தாலே யாறியிருக்கப்போமோ. (கூ)

---

## பத்தாம்பாட்டு

முடிவு இவள்தனக்கு ஒன்றறிகிலேனென்னும் மூவுலகாளி யே! என்னும் * கடிகமழ்கொன்றைச்சடையனே! என்னும் நான் முகக்கடவுளே! என்னும் * வடிவுடைவானோர்தலைவனே! என் னும் வண்திருவரங்கனே! என்னும் * அடியடையாதாள்போல் இவளணுகி யடைந்தனள் முகில்வண்ணனடியே. (கo)

---

(க) பாரத -
(உ) கீதை-கஅ-கூகூ.
(ங) கீதை-கஅ-எங.

**ப:**—அநந்தரம், ஈஶ்வராபிமாநிகளுக்கு மந்தராத்மாவான ஸர்வேஶ்வரனானவன் இவளுடைய வார்த்தியையறிந்து தன் ஶீலாதிஶயத்தாலு மௌதார்யத்தாலும் தன் வடிவழகாலும் ஆந்தர ஸம்ஶ்லேஷத்தை *விஶ்லேஷித்து ப்ரகாஶிப்பிக்க இவளுக்கு அத்தால்பிறந்த விஶ்வாஸத்தைக்கண்டு ஸ்வகதமாகத் தாயார் ஸந்துஷ்டையாய்ச் சொல்லுகிறாள்:

(இ-ள்.) இவள்-ப்ரத்யக்ஷஸித்தஅவஸாதத்தையுடையவிவள், தனக்கு-இப்படியவஸந்நையானதன்படிக்கு, முடிவு-முடிவு, ஒன்று-ஒன்று, அறிகிலேன்-அறிகிறிலேன், என்னும் - என்னும், மூவுலகாளியே - த்ரைலோக்யேஶ்வரனை இந்த்ரனுக்கந்தராத்மாவாய்க்கொண்டு நிர்வஹித்தவனே, என்னும் - என்னும், கடிகமழ் - பரிமளப்ரவாஹியான, கொன்றை - கொன்றைத்தாரையுடைத்தான, சடையனே - ஜடையையுடையவனான ருத்ரனை யதிஷ்டித்து நின்று அவனுடைய ஈஶ்வரத்வோபாஸகத்வங்களுக்குள்ளீடானவனே, என்னும்-என்னும், நான்முகன்-இவர்களுக்குஶேஷியான சதுர்முகனை, கடவுளே-தைவத்துக்காத்மாவானவனே, என்னும் - என்னும், இப்படி யீஶ்வராபிமாநிகளான ப்ரயோஜநாந்தரபரர்க்கும் ப்ரகாரியான ஶீலத்துக்குமேலே, வடிவுடை - தன்னோடொத்தஸாரூப்யரான, வானோர் - நித்யஸூரிகளுக்கு, தலைவனே - ஶேஷியானவனே, என்னும் - என்னும், அம்மேன்மையோடே, வண்-ஆசைப்பட்டார்க்குத் தன்னைக்கொடுக்குமௌதார்யத்தையுடையனாய்க்கொண்டு, திருவரங்கனே - கோயிலுக்குநிர்வாஹகனானவனே, என்னும் - என்னும், இப்படி நீர்மையையும் மேன்மையையு மௌதார்யத்தையு மநுஸந்தித்திட்டு, இனி, அடி - அவன்திருவடிகளை, அடையாதாள்போல் - கிட்டமாட்டாள்போலேயென்னும்படியிருந்த, இவள் - இவள், முகில்-ஜலஸ்தலவிபாகமற வுபகரிக்கும் காளமேகம்போலேயிருக்கிற, வண்ணன் - வடிவையுடையவனுடைய, உபகாரகத்வாதிஶயத்தாலே, அடி - அவன்திருவடிகளை, அணுகி - கிட்டி, அடைந்தனள் - ப்ராபித்தாளாயிருந்தது. (கய)

ஆறு;—(முடிவிவள்தனக்கு) இப்பெண்பிள்ளை, தனக்கு முடிகைக்கோருபாயமறிகிறிலேனென்னும். ப்ரஹ்மருத்ராதி ஸகலதேவதைகளுக்கு மந்தராத்மதயாவஸ்தி்திதனாய், அவர்களுடைய ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்த்யைஶ்வர்யாதி ஹேதுபூதனானவனே, உன்திருவடிகளில் அவர்களோபாதி யுறவுபோராதோவென்னும்; *அயர்வறுமமரர்களையுங்கூடத் தோற்பித்தடிமையாக்கிக்கொண்டிருக்கிற வுன்னைக்காட்டி யருளாயென்னும். கோயிலிலே புகுந்து

* முன்பதிப்பில் "விஶ்லேஷித்து" என்று காண்கிறது.

கண்வளர்ந்தருளி யாச்ரிதர்க்கு ஆத்மதாநம்பண்ணிக்கொண்டிருக்கிற பரமோதாரனேயென்னும். "இனிப்பெருமாள் திருவடிகளைச் சேர்ந்து முடியமாட்டாள், போய்முடிந்தாள்" என்னும்படி தூர்த்த ஶாபந்நையானவிவள், வ்ருத்தமான விந்தவிச்லேஷ நிபந்தநமான நிரவதிக து:க்கமெல்லாம்விஸ்ம்ருதமாம்படி, தானாசைப்பட்டபடியே பெரியபெருமாள் திருவடிகளையே ஸம்ச்லேஷிக்கப்பெற்றாளென்று இவளுடைய திருத்தாயார் ப்ரீதையாகிறாள். (கO)

ஈடு; அவ;—பத்தாம்பாட்டு. இனிக்கிட்டமாட்டாளோ! வென்னும்படி யவஸந்நையானவிவள், பெரியபெருமாள் திருவடிகளை ஸம்ச்லேஷிக்கப்பெற்றாளென்கிறாள்.

(முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும்) பெண்பிள்ளை வார்த்தையைத் திருத்தாயாரநுபாஷிக்கையாலே; "இவள், தனக்கு - முடிவு - ஒன்றறிகிலேன்" என்று நின்றாளென்கிறாள். இத்து:க்கஸாகரத்தைத்கரைகாணும் விரகறிகிறிலேனென்னுதல், முடிந்துபிழைக்கும் விரகறிகிறிலேனென்னுதல்.

(மூவுலகித்யாதி) "மூவுலகாளியே, கடிகமழ்கொன்றைச்சடையனே, நான்முகக்கடவுளே யென்னும் - வடிவுடைவானோர்க்குத்தலைவனேயென்னும்" என்று திருமாலையாண்டான் வையதிகரண்யமாக்கி நிர்வஹிக்கும். 'என்னும்' என்னுமது - என்னுமவளாய். எம்பெருமானார் கேட்டருளி, ஸாமாநாதிகரண்யத்தாலே யருளிச்செய்தருளினார்; த்ரைலோக்யத்துக்கும் கடவனான இந்த்ரனுக் கந்தர்யாமியாய் நின்று அவனுடைய வதிகாரத்தை நிர்வஹிக்கிறவனேயென்னும்; பரிமளத்தையுடைத்தான கொன்றையை ஜடையிலேயுடைய ருத்ரனுக் கந்தர்யாமியாய்நின்று அவனுடைய பதத்தை நிர்வஹிக்கிறவனேயென்னும்; அவர்களோடிவ்வருகுள்ளாரோடு வாசியற வெல்லார்க்கும் நிர்வாஹகனாயிருக்கிற சதுர்முகனாகிற தேவதைக் கந்தர்யாமியானவனேயென்னும். (வடிவுடையித்யாதி) பகவதநுபவத்தால்வந்த ஹர்ஷம வடிவிலே தோற்றும்படியிருக்கிற நித்யஸூரிகளுக்கு நாதனானவனேயென்னும்.

"வடிவுடைவானோர் தலைவனே" என்றதோடு, "மூவுலகாளியே" என்றதோடு, "கடிகமழ்கொன்றைச்சடையனே" என்றதோடு, "நான்முகக்கடவுளே" என்றதோடு வாசியற்றிருக்கிறதா

யிற்று இவர்க்கு * மயர்வறமதிநலம்பெறுகையாலே. விஶேஷஜ்ஞரும் பரத்தில் பர்யவஸிக்குமவரல்லரே. ஸர்வநிர்வாஹகனென்று உணர்ந்திருக்குமவராயிற்றிவர்.

(வண்திருவரங்கனேயென்னும்) நித்யஸூரிகளே யநுபவித்துப் போகையன்றிக்கே, நித்யஸம்ஸாரிகளு மிழவாமைக்கன்றோ விங்குவந்து கண்வளர்ந்தருளுகிறது. இங்குச்சாய்ந்தருளினதின் பலம் நான்பெறவேண்டாவோவென்னும். ஆசைப்பட்டார்க்குத் தன்னைக் கொடுக்கு மௌதார்யம்.

(அடியடையாதாளித்யாதி) "ஜீவிப்பாரைப்போலேயிருந்து, கடுகமுடிந்துகொடுநின்றாள்" என்று நிர்வஹிப்பாருமுண்டு; "அப்போது மேல்ப்ரபந்தம் நடவாது. ஆகையாலே, திருவடிகளைக்கிட்டாதாரைப்போலே யிருந்து க்ரமத்திலே கிட்டிக்கொண்டுநின்றாள்" என்றருளிச்செய்யும்படி; இதுதான் - மாநஸாநுபவத்திலே யொரு வைஶத்யத்தைச்சொன்னபடி. (அடியடையாதாள்போல்) இவளிப்போதே திருவடிகளைச்சேரமாட்டாள், இன்னம் சிறிதுகாலமிருக்குமென்றுபோலேயிருந்தது; முடிந்துகொடுநின்றா ளென்னுதல். இனி ஸம்ஶ்லேஷிக்கப்பெற்றாளோவென்று தோற்றும்படி யவஸந்நையானவிவள் கிட்டி ஸம்ஶ்லேஷிக்கப்பெற்றாள், காளமேகநிபஶ்யாமமான பெரியபெருமாள் திருவடிகளையேயென்னுதல். (கo)

---

## பதிற்றாம்பாட்டு.

முகில்வண்ணனடியையடைந்து அருள்சூடி யுய்ந்தவன் மோய்புனல்பொருநல் * துகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன் வண்பொழில் சூழ் வண்குருகூர்ச்சடகோபன் * முகில்வண்ணனடிமேல்சொன்னசொல்மாலை ஆயிரத்துஇப்பத்தும்வல்லார் * முகில்வண்ணவானத்துஇமையவர்சூழ இருப்பர் பேரின்பவெள்ளத்தே. (கக)

**ப;**—அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸித்தவர்கள் பரமபதத்திலே ஸூரிகள் நடுவே ஆநந்த நிர்ப்பராயிருப்பரென்று பலத்தையருளிச் செய்கிறார்.

(இ-ள்.) முகில்வண்ணன் - உதாரமானமேகஸ்வபாவரான பெரியபெருமாளுடைய, அடியை - திருவடிகளையே, அடைந்து - ப்ராபித்து, அதுக்கடி

யான, அருள் - அவருடையக்ருபையை, சூடி - தலைக்கொண்டு, உய்ந்தவன் - உஜ்ஜீவித்தவராய், மொய் - மிக்க, புனல் - புனலையுடைத்தான, பொருநல் - திருப்பொருநலினுடைய, துகில் - துகிலின், வண்ணம் - நிறம்போலே, தூ - பரிசுத்தமான, நீர் - ஜலத்தையுடைத்தான, சேர்ப்பன் - பர்யந்தப்ரதேஶத்தையுடையராய், வண் - மதுபுஷ்பஸம்ருத்தியாலுள்ள வைலக்ஷண்யத்தையுடைய, பொழில் - பொழில்களாலே, சூழ் - சூழப்பட்டு, வண் - நிரதிஶய ஸம்பத்விசிஷ்டமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், முகில் - காளமேகம்போலே, வண்ணன் - நிரதிஶயஸௌந்தர்யயுக்தரானபெரியபெருமாள், அடிமேல் - திருவடிகள்விஷயமாக, சொன்ன - அருளிச்செய்த, சொல் - ஶப்தாத்மகமான, மாலை - மாலைகள், ஆயிரத்து - ஆயிரத்து, இப்பத்தும் - இப்பத்தையும், வல்லார் - பாவவ்ருத்தியோடே யப்ஸிக்கவல்லவர்கள், ஸ்ரீவைகுண்டநாதன் திருமேனியில்நிழலீட்டாலே, முகில் - மேகஶ்யாமளமான, வண்ணம் - நிறத்தையுடைய, வானத்து - பரமபதத்திலே, இமையவர் - நித்யஸூரிகள், சூழ - பரிவேஷ்டிக்க, பேரின்பவெள்ளத்தே - நிரதிஶயாநந்தஸாகரமத்யத்திலே, இருப்பர் - இருப்பர்கள்.

இது - எழுசீராசிரியவிருத்தம். (கக)

ஆறு ;— (முகில்வண்ணன்) பெரியபெருமாள் திருவடிகளைச் சேர்ந்து ஸர்வப்ரகார ஸம்ஶ்லேஷமும்பண்ணப் பெறுகையாலே லப்தோஜ்ஜீவநராய்; ஸுப்ரஸந்நஸலிலபூரபரிபூர்ணமான திருப்பொருநலாலும், அதிரமணீய திவ்யகந்தஸுமநோபிராம தருநிகரங்களாலும் பரிகர்மிதமான திவ்யநகர நிலயராயிருந்த சடகோபன், முகில்வண்ண னடிமேற்சொன்னசொன்மாலையாயிரத்துளிப்பத்தும் வல்லார், பெரியபெருமாள்திருமேனியில் நீலமான ஜ்யோதிஸ்ஸின் வெள்ளத்தாலே திவ்யமான திருநாட்டிலே * அயர்வறுமமரர்கள் சூழ, ஸவிபூதிகபரமபுருஷாநுபவஜநித நிரவதிகாநந்த மஹார்ணவாந்தர்நிமக்நராயிருப்பாரென்கிறார். (கக)

ஈடு; அவ —நிகமத்தில்—திருவாய்மொழி யப்யஸிக்கவல்லார், இவர்பட்ட க்லேசம்படாதே திருநாட்டிலே நிரதிஶயாநந்த யுக்தராய், நித்யஸூரிகள் சூழவிருக்கப்பெறுவரென்கிறார்.

(முகில்வண்ணனித்யாதி) பெரியபெருமாள் திருவடிகளைக் கிட்டி யங்குத்தைப்ரஸாதத்தைப் பெற்று தரித்தவன். பூர்வா

வஸ்த்தையில், ஸத்தையு மழியும்படியாயிருக்கையாலே-உய்ந்தவ னென்கிறது ; மொய்யென்று - மிகுதிக்கும், வலிக்கும் பேர். இப் போது, நீரோட்டத்தால் வந்தவலியைநினைக்கிறது. வலியையுடை த்தான ஜலத்தோடேகூடின பொருநலில் துகிலினுடைய வண்ண த்தையுடைத்தான தூநீர்த்துறைவன். சேர்ப்பன் - துறைவன். நெய்தல் நிலத்தில் தலைமகன். மொய்புனலென்றுநிற்க, தூநீரென் றது - பெருவெள்ளமாயிருக்கச்செய்தே தெளிந்திருக்கும்படியைப் பற்ற. (க) "[illegible] - ரமணீயம்ப்ரஸந்நாம்பு ஸந்மநுஷ்யமநோயதா" என்கிறபடியே. தர்மநீயமான பொழிலையுடைத்தாய் உதாரமானதிருநகரிக்குநாதன்.

(முகிலித்யாதி) காளமேகம்போலே நிரதிஶய ஸௌந்தர்ய யுக் தரான பெரியபெருமாள் விஷயமாக வருளிச்செய்த ஸப்தாத்மக மான மாலைகளாயிரத்திப்பத்தையும் பாவவ்ருத்தியோடே யப்யஸி க்கவல்லவர்கள். "பெரியபெருமாள்திருவடிகளிலே-திருவாய்மொழி யாயிரமுஞ்சொல்லிற்று; (உ) 'திருமோகூர்க்கீத்தபத்து,' (ங) 'திரு வேங்கடத்துக்கிவைபத்து' என்று பிரித்துக்கொடுத்தவித்தனை; பெ ருமாள்திருப்பலகையிலமுது படியிலே மற்றைத்திருப்பதிகள் நாய ன்மார்க்கு மளந்துகொடுக்குமாப்போலே" என்று பிள்ளையருளிச்செ ய்வர். (முகில்வண்ணவானத்து) அங்கிருக்கிறவனுடைய நிழலீட் டாலே அவன்படியாயிருக்கிறவானமென்னுதல், முகில்வண்ணனு டைய வானமென்னுதல். (இமையவரித்யாதி) இவள்மோஹித்துக் கிடக்கத் திருத்தாயார் தனியேயிருந்து கூப்பிட்டவெரிவரவுதீர, நித்யஸூரிகள் திரளவிருக்க அவர்கள்நடுவே யாநந்தநிர்ப்பரராயி ருந்தநுபவிக்கப்பெறுவர்கள்.

இரண்டாந் திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) ரா-பால-உ-ந.
(உ) கO-ஐ கக.
(ங) ௩-கO கக.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஏழாம்பத்து

## மூன்றாந் திருவாய்மொழி.

வெள்ளைச்சுரிசங்கு - ப்ரவேஶங்கள்.

ஆறு;—(வெள்ளைச்சுரிசங்கு) இப்பிராட்டியோடே பெரியபெருமாள் ஸம்ஶ்லேஷ ரஸத்தை யநுபவித்து, அந்த ஸம்ஶ்லேஷரஸமுள்ளடங்காதபடி பெருகினவாறே, அது ஸாத்மிக்கைக்காகவும், ஆஶ்ரிதப்ரதிகூல ம்ருகம்ருகயார்த்தமாகவும் தென்திருப்பேரையிலே யெழுந்தருளத்திருவுள்ளத்தே கோலியருளி, இவளுடைய ஸம்வாதார்த்தமாக விவளிடத்திலே யதிமாத்ர ஸம்மாநத்தைப்பண்ணியருளி "தென்திருப்பேரையிலே வேட்டைக்குப் போய்வருகிறோம்" என்றருளிச்செய்ய, இப்படி (க) * பதிஸம்மாநிதையானவிவள் அவ்யுக்பந்ந விஶ்லேஷையாகையாலும், இவனெழுந்தருளுகையிவனைக் காணுதொழிகைக்கு ஹேதுவென்னுமிட மறியாமையாலும் எழுந்தருள ஸம்வதித்து, விஜயத்தை யாஶாஸித்து. திவ்யாயுதங்களைக்கொடுத்தருளி, (க) "குஶாராஶ நிவ ராஜ ஜயாந் விஜய தேவ் ஆத்வாரமநுவவ்ராஜ மங்களாந்யபி தத்யுஷீ" என்னும் ப்ரக்ரியையாலே திருப்பல்லாண்டுபாடிக்கொண்டு திருவணுக்கன் திருவாசலளவும் பின்னேயெழுந்தருளப் பெரியதிருவடி திருத்தோளிலே யேறியருளி, ஒரு தாமரைத்தடாகம் மலர்ந்தாப்போலேயிருந்த திருக்கண்களாலே யிவளைப்புரிந்து பார்த்தருளி யிவளாலே அநுஜ்ஞாதனாய்த் தென்திருப்பேரையிலேயெழுந்தருள, இவள் அவனைக்காணாமையாலே யத்யந்த மவஸந்நையாய் அவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே யெழுந்தருள வுத்யோகிக்க, இவளுடைய திருத்தாயாரும் தோழிமாரும் மற்றுமுள்ள பந்துக்களு மிவளை ப்ரதிபந்திக்க; நான் போகை தவிரேன், தனியேபோனேனென்னும்பழி உங்களுக்கு வாராமே நீங்களே யென்னைத் தென்திருப்பேரையிலே யீண்டக்கொண்டு போய்விடுங்கோளென்கிறாள்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில், கீழ் - பெரியபெருமாளுடைய வௌதார்யகுணாநுஸந்தாநத்தாலே யாஶ்வஸ்தரான விவர்க்கு பாஹ்யாநுபவாலாபமநுவர்த்திக்கையாலே யத்யந்த மார்த்தராய், அந்தவார்த்தி ஶமிக்கைக்கு அவ

(க) ரா-அயோ-தசு-உக.

ஸந்நமாகத்திருப்பேரையிலே யெழுந்தருளி யிருக்கிறபடியை யநுஸந்தித்து; ஆந்தராநுபாவ்யமான வவனுடைய வாயுதாதி வைலக்ஷண்யத்தையும், அதிஶயிதமான பரத்வஸௌலப்யங்களையும், ஆகர்ஷகமான வவயவாதி ஶோபையையும், அநுபாவ்யமான வாஶ்சர்யகுணாதி யோகத்தையும், அநிஷ்டவர்க்க நிரஸநத்தையும், ஔதார்யாதிஶயத்தையும், ப்ரபல ப்ரதிபந்தக பங்கத்தையும், ப்ரக்ருஷ்டபக்தி வர்த்தகத்வத்தையும், ப்ரளயாபத்ஸகத்வத்தையும், ஆஶ்ரிதவிரோதிநிபர்ஹணத்தையும் சிந்தித்து, ஏவம்பூதனானவ னெழுந்தருளி யிருக்கிற தேசத்திலே செல்லுகையிலுண்டான த்வராவிஶேஷத்தைக்கண்ட பார்ஶ்வஸ்த்தரான ஸுஹ்ருத்துக்களுக்கும் பரிவர்க்கும் ப்ராப்திஜநித வ்யவஸாயத்தை யறிவித்த ப்ரகாரத்தை; நாயகனான மகரநெடுங்குழைக்காத னெழுந்தருளியிருக்கிற தென்திருப்பேரையிலே செல்லுகையிலே த்வரையையுடைய நாயகியானவள், “இது அநுரூபமன்று” என்று விலக்கத்தேடுகிற தோழிமார் தாய்மார் முதலானாரைக்குறித்து, “நானத்தேசத்திலே செல்லல் தவிரேன்; நீங்கள் கொடுபோய்விடுங்கோள், இல்லையாகில் நானேபோவேன்” என்று தன் துணிவை வெளியிட்ட பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். *

ஈடு;—அவ ; கீழ் (க) “இட்டகாலிட்டகை” என்கிறபடியே யிவள்மோஹித்துக்கிடக்க, இவளுக்குமுன்னே தோழிமாரும் தறைப்பட, திருத்தாயாரொருத்தியு மிவள்தஶையை யநுஸந்தித்து அருகேயிருந்து கூப்பிட்டுப் போருமது தவிர்ந்து; இப்பெண்பிள்ளை தானேயெழுந்திருந்து கால்நடை தந்து போமளவாய் விழுந்தது; அதுக்கடி-(உ) “பற்றிலார்பற்றநின்றானே” என்று-பெரியபெருமாளுடைய வஶரண்ய ஶரண்யத்வந் தொடக்கமான விவளுக்குப் பற்றாசான குணங்களையும் ஸௌந்தர்யாதி விக்ரஹகுணங்களையும் இவள் தான்வாய்வெருவியும் திருத்தாயார் சொல்லவும்கேட்டு அத்தாலே தரித்தாள்; போனவுயிரை மீட்கவற்றாயிறே குணாநுபவமிருப்பது.

கீழ்ப்பிறந்த மோஹமும் தெளிந்து, விஶ்லேஷ வ்யஸநமுமநுஸந்திக்க வல்லளாய், பின்பு “அவனைக்கிட்டியல்லது நில்லேன்” என்னுமாற்றாமையும் பிறந்து, அதுபெறாமையாலே அவஸந்நையாக, இவள்விடாய்க் கீடாம்படி அணித்தாகத் தென்திருப்பேரையிலே வீற்றிருந்த மகரநெடுங் குழைக்காதனுடைய வபேக்ஷிதாதி

(க) எ-உ-ச. (உ) எ-உ-எ.

களிலே யபஹ்ருதசித்தையாய், " அவனிருந்தவிடத்தேறப்போக வேணும் " என்றொருப்பட, பழையபடியே தோழிமாரும் தாய் மாரு மவளைச்சூழப்போந்து,"உனக்கித்தனை யதிமாத்ரப்ராவண்யமா காது, நமக்கிது பழியாய் விளையும் " என்ன, "நீங்கள் சொல்லு கிறவற்றால் ப்ரயோஜநமுண்டாகமாட்டாது, நானவன்பக்கலிலே அபஹ்ருதசித்தையானேன், ஆனபின்பு நானேபோனேனாகாமே நீங் களென்னோ டுடன்பட்டு அங்கே கொடுபோய்ச் சேர்க்கப் பாருங் கோள் " என்று தனக்குப் பிறந்த துணிவை யவர்களுக் கறிவித் துச்சொல்லுகிறதா யிருக்கிறது.

அங்ஙனன்றிக்கே பிள்ளான் பணிக்கும்படி - "முகில்வண்ண னடியே - இவளணுகியடைந்தனள்" என்றதாகையாலே (க) "ஸமா ஊதஸதத்ரஹம் - ஸமாத்வாதஸதத்ராஹம் " என்கிறபடியே பெரிய பெருமாளோடே சிரகால முக்மஸ்தகரஸமான ஸம்ச்லே ஷம் ப்ரவ்ருத்தமாய், பிரிந்துகூடாவிடி லிரண்டுதலைக்கு மழிவு வரு மளவாச்சுதாய், இனி யெல்லாவளவிலு மொரு நீராகக்கலக்கிறது தர்மியிரண்டும்கூடியிறே, ஆகையாலே பிரியாவிடில் தர்மிலோபபர் யந்தமாகப் புக; இவ்வளவில், நாயகனானவிவன் இரண்டுதலையும் ஜீவி க்கப்பார்ப்பானொருவ னாகையாலே பிரிவை ப்ரஸங்கிக்க, இவளும் விச்லேஷத்தில் வாஸனையில்லாதா ளொருத்தியாகையாலே, " கல வியிலேயொருவகையோ " என்றுகொண்டு இவளுமநுமதிபண்ண, அவனுமவ்வேட்டை நிமித்தமாகப்புறப்பட, இவளும் திருவனுக் கன் திருவாசலிலளவுமொருப்படுத்திமீள ; எல்லாவளவிலும் பிரி வு தன் காரியம் செய்தன்றி நில்லாதிறே.

" அநந்தர மிவள் நோவுபடப்புக, இத்தைக்கண்ட தோழிமா ரும் தாய்மாரும் ' உனக்கோடுகிறதென் ' என்றுகேட்க, ' ஸ்ரீஜநக ராஜன் திருமகள் காட்டிலே கூடப்போய் அவரிருந்தவிடம் நின்ற விடம் உலாவினவிடந்தோறும் கூடவிருந்தநுபவித்தாப்போலே, நானுமவனிருந்தவிடத்தே போய்ப் புக்கல்லது நில்லேன்' என்ன, ' உனக்கிது தலைமைக்குப்போராது, நீ சொல்லுகிறவை வார்த்தை யன்று ' என்ன, அவர்களை ' நீங்கள் நிரோதிக்கிறத்தால் பெற்ற தென், நான் போகை தவிரேன்; நீங்களே யென்னைக் கொடுபோய்

(க) ரா-ஸு-கஅ-நந-கஅ.

விடுங்கோள்' என்ன, அவர்கள் 'அதுக்கு நாங்கள் வழிப்படோம்' என்ன, 'ஆகில் நானேயாகிலும் போகை தவிரேனென்கிருள் " என்று.

(க) [ஸமாத்வாதஸதத்ராஹம் - ஸமாத்வாதஸதத்ராஹம்] இப்போது காதாசித்க தர்ஸநமுங்கூட வரிதாம்படி யிருக்கிறநான், முன்பு சிரகாலமவரோடே யநுபவிக்கப்பெற்றேன்காண் [ராகவஸ்யநிவேஸநே - ராகவஸ்யநிவேஸநே] எங்கள்மாமனுருடைய மாளிகையிலே அவர் தண்ணீர்த்துரும் அறுத்துத் தர, நெடுங்கால மநுபவித்தேன். (க) [புஞ்ஜாநாமாநுஷாந்போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ - புஞ்ஜாநாமாநுஷாந்போகாந் ஸர்வகாமஸம்ருத்திநீ] (உ) " ஸர்வாந்காமாந் - ஸர்வாந்காமாந் " என்கிறபடியே எல்லா மநுபவிக்கப் பெற்றேன்; அப்படியுமன்றிறே யிங்கு; (௩) " பஹவோந்ருபகல்யாணகுணாः - பஹவோந்ருபகல்யாணகுணாः " என்று குணங்களிரட்டித்தவிடமிறேயிது.

ஆக வித்தால் சொல்லிற்றாயிற்று - நமக்கு ஸப்தாதிவிஷயங் களினின்று மிந்த்ரியங்களை மீட்கவெண்ணுதாப்போலேயிறே இவ ரை பகவத்விஷயத்தினின்றும் மீட்கவொண்ணுதபடி. அது கர்ம மடியாக வருகிறது, இது பகவத்ப்ரஸாதமடியாக வருகிறது. திருத் தாயார் பேச்சாய்வருகிறவை-ஆழ்வார்தமக்குப் பிறந்த தஸாவிசே ஷம்; தலைமகளாய்ப் பேசுகிறதும் - இவர்க்குப் பிறந்தசோ ரவஸ்த் தாவிசேஷம் ; அதில், நிஷேதிக்கிற திருத்தாயார்முகத்தால்சொல் லுகிறது - ஸ்வரூபமான ப்ராவண்யத்திலே உபாயம் சொருகிற் செய்வதென்னென்னு மதுக்குச் சொல்லுகிறது ; பெண்பிள்ளை கருத்தால் சொல்லுகிறது - உபாயமவனேயாகில் ப்ராவண்யம் ஸ்வ ரூபமாமத்தனையன்றோ வென்று. ஆக, இவ்விரண்டர்த்தத்தையு மிரண்டு முகத்தாலே ஆழ்வார் தாமநுஸந்தித்த படியைச் சொல் லுகிறது; மோஹமுந்தெளிந்து தானே கூப்பிடவல்லளானவிதுவே இத்திருவாய்மொழிக்கேற்றம். *

---

(க) ரா-ஸு-௩௩-கச.        (உ) தை-ஆ-க.
(௩) ரா-அயோ-உ-உக.

## முதற்பாட்டு.

வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக்கண்ணன்! என்னெஞ்சினூடே * புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீர் என்சொல்லிச்சொல்லுகேன் ? அன்னைமீர்காள் ! * வெள்ளச்சுகமவன்வீற்றிருந்த வேதவொலியும்விழாவொலியும் * பிள்ளைக்குழாவிளையாட்டொலியும்அறாத் திருப்பேரையில்சேர்வன்நானே. (க)

ப:—முதற்பாட்டில், அநுபாவ்யமான வாயுதங்களோடு மவயவங்களோடும் தன்னெஞ்சிலே பெரியதிருவடியை நடத்திப்ரகாசிக்கிற வாகாரத்தாலே யீடுபட்டு, அவனிருந்த தென்திருப்பேரையிலே செல்லுகையிலுண்டான துணிவைத்தாயாரைக்குறித்துச்சொல்லுகிறாள்.

(இ-ள்.) அன்னைமீர்காள் - வாசாமகோசரமான வகவாயில் விகாரமறியாதே, "பெற்றவர்களிறேநாம்" என்றே விலக்கத்தேடுகிறவர்களே, நானுசைப்பட்டபடியே, வெள்ளை - வெளுத்தநிறத்தையும், சுரி - சுரியையுமுடைத்தான, சங்கொடு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே, ஆழி - திருவாழியையும், ஏந்தி-ஏந்தி, தாமரைக்கண்ணன் - நான்தளரும்படி யநங்யார்ஹையாக்கின தாமரைக்கண்ணையுடையவன், தானும் தன்விபூதியும் புகுந்தாலுமிட முடைத்தான, என் - என், நெஞ்சின் - நெஞ்சின், ஊடே - உள்ளே, புள்ளை - பெரியதிருவடியை, கடாகின்ற - தன்னபிநிவேசாநுரூபமாகநடத்துகிற, ஆற்றை - ப்ரகாரத்தை, காணீர்-நீங்களறிகிறிலிகோள், இவ்வநுபவத்துக்கு, என்சொல்லி - என்னபாசுரமிட்டு, சொல்லுகேன் - நான்சொல்லுவேன், இவ்வளவில், வெள்ளச்சுகம் - பகவதநுபவத்தாலே யபரிமித ஸுகார்ணவத்தை யுடைத்தாய், அவன் - என்னெஞ்சுக்குள்ளே ப்ரகாசிக்கிறவன், வீற்று - தன்மேன்மை தோன்ற, இருந்த - இருக்குமிடமாய், வேதவொலியும் - அந்த ஆஸநபேரைபையை யநுபவிக்கிறவர்களுடைய வேதகோஷமும், விழா - நிரந்தரோத்ஸவத்தாலுண்டான, ஒலியும் - வாத்யாதிகோஷமும், (க) "ஸோபாஸநவிக்ரீஷண நா: - பாலா அபிக்ரீடமாநா:" என்கிறபடியே அவனுடைய குணசேஷ்டிதாதிகளைப் போற்றிட்டுக்கொண்டு, பிள்ளைக்குழா - பிள்ளைகள் திரள் விளையாடு - விளையாடும், ஒலியும் - கோஷமும், அறா - அவிச்சிந்நமாய் நடக்கும், திருப்பேரையில் - திருப்பேரையிலே, நான் - நான், சேர்வன் - சேருவன். (க)

---

(க) ரா-அயோ-சு-கசு.

ஆறு:—நிரதிஶயஔஜ்ஜ்வல்ய பரிபூர்ணநிர்மல ஶாரத சந்த்ரமண்டலம் போலேயிருந்த ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், நிரதிஶய தீப்தி யுக்தஸூர்யமண்டலம்போலே யிருந்த திருவாழியையுமேந்தி (க)*பொன்மலையின் மீமிசைக்கார்முகில்போலே பெரியதிருவடி திருத்தோளிலே யேறி யருளி, (உ) *இலங்கொளிசேரரவிந்தம்போன்ற நீண்ட கண்களையுடையனானவன் என்னெஞ்சினூடே சாரிகைத் திரிந்தருளுகிறபடி நீங்கள்காண்கிறிலீகோள். இன்னபடி யென்று எனக்குச் சொல்ல நிலமாகிறதில்லை. ஆதலாலவனை யொருக்ஷணம் காணாதொழியில் தரிக்கமாட்டேன்; வேதகோஷத்தாலும் மஹோத்ஸவ கோஷத்தாலும் * க்ரீடமாநரான பாலர்களுடைய பரமபுருஷகுணஸ்துதி கோஷத்தாலும் பரிபூர்ணமான திருப்பேரையிலே மத்ஸம்ஶ்லேஷஜநித நிரவதிக ஸுகமஹோததி நிமக்நனாய் பரிபூர்ணனாய்க்கொண்டிருக்கிற விருப்பைக்காணவேணும்; நீங்களென்னைக் கொண்டுபோய் விடீர்களாகில் நானேயாகிலும் போவேனென்று, தன்னை ப்ரதிபந்திக்கிற தாயாரையும் தோழிமாரையுங் குறித்துச் சொல்லுகிறாள். (க)

ஈடு; அவ;—இப்பிராட்டி வாசாமகோசரமாம்படி தனக்கு வர்த்திக்கிறவ்யஸநத்தாலே, தென்திருப்பேரையிலே போகவேணுமென்று தனக்குப்பிறந்த தஶையை, வினவுகிறதிருத்தாய்மார்க்குச் சொல்லுகிறாள்.

(வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தி) (௩) "தவளவொண்சங்கு சக்கரம்" என்றும், (௪) "கூராராழிவெண்சங்கு" என்றும், (௫) "சங்குசக்கரங்களென்று கைகூப்பும்" என்றும், கையுந்திருவாழியுமான வழகு கைவிடாதே யிவரை யநுவர்த்திக்கிறபடி. (௬) * முகில்வண்ணனிறே; அந்நிறத்துக்குப் பரபாகமானவெளுப்பையும் சுரியையுமுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்; அங்ஙனுமொருவிசேஷணமிட்டுச் சொல்ல வேண்டாதபடியான வழகையுடைத்தான திருவாழியையுமேந்தி.

(தாமரைக்கண்ணன்) (எ) "தாமரைக்கண்ணனென்றே தளரும்" என்றது பின்னாட்டுகிறபடி. திருமேனிக்கு திவ்யாயுதங்கள் ப்ரகா

(க) கூ-உ-சு.
(உ) தி-மொ-உ-ரு-அ.
(௩) சு-ரு-க.
(௪) சு-கூ-க.
(௫) எ-உ-க.
(௬) எ-௩-கo.
(எ) எ-உ-க.

ஸகமாயிருக்குமாப்போலே, ஆத்மகுணங்களுக்கு நோக்குப்ரகாஸகமாயிருக்கிறபடியும். அகவாயில் தண்ணளியெல்லாம் கண்வழியேயிறே தோற்றுவது. ப்ரதிகூலர்க்கு திவ்யாயுதங்களோடொக்கத் திருக்கண்களும்விரோதியாய்த்தோற்றுமாப்போலேயிறே அநுகூலர்க்குத் திருக்கண்களோபாதி திவ்யாயுதங்களும் அழகுக் குடலாய்த் தோற்றும்படி. திருக்கண்களோடே திவ்யாயுதங்களையும், திவ்யாயுதங்களோடே திருக்கண்களையும் சேர்த்தநுபவிப்பர்கள். ஆயுதங்களோடே திருக்கண்களைக்கூட்டுகிறது தோற்பித்த படிக்கு; (க) "ஜிதம்தே - ஜிதந்தே" என்னப்பண்ணுமிறே. கண்களோடு திவ்யாயுதங்களைக்கூட்டுகிறது அழகுக்கு.

இவ்விடத்தே நிலாத்துக்குறிபகவர்வார்த்தையை யருளிச்செய்வர் ஜீயர். கைக்கு ஆழ்வார்கள் ஆபரணமாயிருக்குமாப்போலேயாயிற்று முகத்துக்குத்திருக்கண்களாபரணமாயிருக்கும்படியும். (உ) "திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் திகழு - மருக்கனணி நிறமுங்கண்டேன் - செருக்கிளரும் - பொன்னாழிகண்டேன் புரிசங்கம்கைக்கண்டே - னென்னாழிவண்ணன்பாலின்று" என்று வடிவழகோபாதி திவ்யாயுதங்களுமாபரணமா யழகிதாயிறேயிருப்பது. ஆழ்வார்கள்தான் அவனைக்கைசெய்திருக்கையாலே ஆபரணகோடியாயிறே யிருப்பது. கைசெய்கையென்று - அலங்கரிக்கைக்குப்பேர்.

(என்னெஞ்சினூடே) தங்கள் நெஞ்சிலில்லாமையாலே "இது கூடாது" என்றிருப்பர்களிறே. (என்னெஞ்சினூடேபுள்ளைக்கடாகின்ற) இவர்க்கு * மயர்வறமதிநலமருளி (ந) "நெஞ்சமேநீணகர்" என்னும்படியிறே திருத்திற்று; ஒரு த்ரிபாத்விபூதியிலு மிடமுடைத்தாயிருக்கை; திருவடி திருத்தோளிலேயேறி அங்குள்ளார்க்கு உஜ்ஜீவநமாகச் சாரிகைவந்துகாட்டுமாப்போலே, இவர் நெஞ்சினுள்ளேவிஹ்ருங்கலமாக வழகுசெண்டேறுகிறபடி (நெஞ்சினூடே) 'அகவாயிலுள்ளது கண்ணுக்குத்தெரியாதோ" என்றிருக்கிறார்களாயிற்றிவர்கள்; (ச) "நிர்க்குணः பரமாத்மாஸௌ தேஹம் தே வ்யாப்ய திஷ்டதி - நிர்க்குணःபரமாத்மாஸௌதேஹம்தேவ்யாப்ய

(க) ஜிதஸ்தோ. (உ) ந-திரு-அந்-க.
(ந) ந-அ-உ. (ச) பார-ஆர.

திஷ்ட்டதி" என்னுமாப்போலே "நெஞ்சிலில்லையாகில் நானுமில்லை யென்றுநினைத்திருக்கலாயிற்றுக்கிடீர்" என்றிருக்கிறாளிவள்.

†(ஒருவாசத்தடத்தில்)ஹம்ஸசக்ரவாகங்கள்போலே ஆழ்வார்களும், காடு படவலர்ந்த தாமரைபோலே யிருக்கிற திவ்யாவயவங்களும், அத்தடாகத்தில் நீருமிலையும்போலே யிருக்கிற திருமேனியுமாய், அத்தைத்கினிய வொருமேருவஹித்தாப்போலே யிருக்கிற பெரிய திருவடியோடேகூட விவர் திருவுள்ளத்தே யுலாவுகிறபடி. இப்படியேயிறே அநுகூலரோடு பரிமாறும்படி.

நஞ்ஜீயர் கோயிலுக்கெழுந்தருளாநிற்க, வழியிலே பிள்ளானைக் கண்டு "ஈஶ்வரனுக்கு ஸ்வரூபவ்யாப்தியேயோ, விக்ரஹவ்யாப்தியுமுண்டோ" என்றுகேட்க, "பாஷ்யகாரர் ‡ தோற்றவருளிச்செய்து கொண்டுபோந்தது ஸ்வரூபவ்யாப்தியாயிருக்கும்; ஆகிலும் எம்பாரொருநாள் 'உபாஸகாநுக்ரஹார்த்தமாக வாஶ்ரிதருடைய நெஞ்சிலேவிக்ரஹத்தோடே வ்யாபித்திருக்கும்' என்றருளிச்செய்யக்கேட்டேன்" என்று பணித்தான்.

† ((க) "[illegible]-குஹாயாம்" (உ) "[illegible] - கஹ்வரேஷ்ட்டம்புராணம்", (௩) 'அரவத்தமளியினோடு மழகிய பாற்கடலோடு மரவிந்தப் பாவையுந்தானு மகம்படி வந்து புகுந்து' என்றும், (ச) "[illegible] - யேஷாமிந்தீவரஶ்யாமோ ஹ்ருதயேஸுப்ரதிஷ்டிதஃ" என்றும், "என்னெஞ்சினூடே புள்ளைக்கடாகின்ற" என்றுஞ் சொல்லுகிறபடியே. ஶுபாஶ்ரயப்ரகரணங்களிலும் (உ) "[illegible] - தஸ்யைஷ ஆத்மாவிவ்ருணுதேதநூம்ஸ்வாம்" என்கிறபடியே அவ்வடிவேயாயிற்று த்யேயமாகச் சொல்லுகிறது; பின்பு (ரு) "[illegible] - ஏஷஸர்வஸ்வபூதஸ்து" என்றுகொடுப்பதுமவ்வடிவேயாயிற்று. புறம்புள்ளார் சொன்னபடி சொல்லுகிறார்கள்; நம்மாழ்வார்கள் போனவழியிதுக்கு மேற்படவில்லை. "இதுக்கு முன்னேயொன்றுகண்டு" என்று சொல்லுகிறவர்கள் - ஸ்வரூபஸம்பாவஞ் சொல்லுகிறார்களித்தனை, விக்ரஹமில்லையென்றன்று.

(க) தை-ஆ-க. (உ) கட-க-உ.
(௩) பெரியாழ்-தி-மொ-ரு-உ-கO. (ச) ஸஹஸ்ர-
(ரு) ரா-யு-க-கச.

† குண்டலிதத்வயம் க்வாசித்கம். ‡ (பா)தோற்றச்செய்து என்று பாடாந்தரம்.

(புள்ளைக்கடாகின்ற) " அகவாயில் நின்று சுழிக்குமத்தனை யோ " என்று அவன் த்வரித்து வடிம்பிட்டுத்தாக்க " ஓங்காண், நீயறிந்தாயோ " என்று ப்ரேரித்து மீளாநிற்கும்; (க," யீகதி - திமதஃ " என்கிறபடியே பக்ஷபாதத்தோடே சேர்க்கையிலேயிறே அவனுக்கும்பணி. (கடாகின்ற) பூதமாய் விஸ்மரிக்கிறிகோளன்று; பவிஷ்யமா யுபதேசிக்கிறதன்று, வர்த்தமாநத்துக்குஉபதேசம் வேணுமோ. (காணீர்) காண்கிறிலீர். வர்த்தமாநமும் கார்யகரமின் றிக்கே யொழிகிறது நிரோதிக்கிற நிர்ப்பந்தத்தாலேயிறே. உங்களு க்கு (க) (வ-ு)ரகோஷம்கேட்கிறதில்லையோ. ப்ரஸித்தமான வர்த்த முபதேசிக்கவேண்டுவதே. (காணீர்) உங்களுக்குக் கண்ணும் செவியு மின்றிக்கே யிருந்தோ நிஷேதிக்கிறது. என்னைப்போலே. (உ) *உட் கண்ணாலே காணிகோள்.

நாங்கள் கண்டிலோம். கண்டநீசொல்லிக்காணுமென்கிறார்கள். (என்சொல்லிச்சொல்லுகேன்) எனக்குச்சொல்லலாவதில்லை, என்ன பாசுரமிட்டு எத்தைச்சொல்லுவது. உங்கள் கண்ணுக்கு விஷய மாகாதாப்போலே யென்வாக்குக்கும் விஷயமாகிறதில்லை; இவர்க்கு நெஞ்சுநிறைந்தது வாய்கொள்ளுகிறதில்லைகாணும். (என்சொல்லிச் சொல்லுகேன்) நான்பலஹாநியாலே சொல்லமாட்டேன், விஷயமி யத்தாராஹித்யத்தாலே சொல்லிமுடிக்கப்போகாது, உங்களுக்கு ப்ரதிபத்திபண்ணுகைக்கு பரிகரமில்லாமையாலே சொல்லத்தான் வேண்டா. (அன்னைமீர்காள்) ஜ்ஞாதாம்பரங்கொண்டு (௩)*வொய யஞஃ வாரஸாரஃ - போதயந்தஃ பரஸ்பரம் பண்ணலாயிற்றிறே ஸஜாதீயைகளானிகோளாகில். (என்சொல்லிச் சொல்லுகேனன் னைமீர்காள்) எனக்கோடுகிற வ்யஸநத்துக்குப் பாசுரமில்லை, அவஸ் த்தாஜ்ஞாநமின்றிக்கே பழமைகொண்டாடுகிறிகோளித்தனையிறே. நிஷேதிக்கைக் கநுவர்த்தநீயைகளாமத்தனையோ வேண்டுவது.

எங்களுக்குக் காணவும் கேட்கவும் கண்ணும்செவியுமில்லையா கில், நீதான்செய்யப்பார்த்ததென்னென்; ஹிதஞ் சொல்லி மீட்க நினைப்பாரில்லாத வூரிலே போய்ப்புகு மித்தனையென்கிறாள்; பிரி ந்துபோனாரை நினைக்கவொட்டாத தேசமிறே. (ச) " நாவஜ

(க) ரா-ஸு-கரு-ச.                (உ) பெ-அ-உஅ.
(௩) கீதை-கO-க                (ச) சாந்தோ-அ-கஉ.

நஂஸூராநு - நோபஜநம் ஸ்மரந் '' என்கிறபடியே. (வெள்ளச்சுக மவன்) ஸுகவெள்ளத்தையுடையவன். விஶ்லேஷதசையிலும் ஸம்ஶ்லேஷ ஜநிதமான நிரதிசயஸுகம் மாறாதவன்; பிரிவிலுமறை யாறுபடாதபடி காணும் கலவியிலவன் தேக்கின ஸுகாதிஶயமிருந் தபடி. (வெள்ளை) என்று பாடமானபோது மறுவற்றஸுகமென்கை. துஃகாமிஶ்ரஸுகமென்றபடி. (அவன்வீற்றிருந்த - தேன்திருப்பேரை யில்) என்றந்வயம். (க) *இட்டகாலிட்டகையளாயிருக்கிற விருப்புக் கெதிர்த்தட்டாயிருக்கிற விருப்பிறே யது. இத்தலையைத் துடிக்க விட்டுத்தன்னைஶ்வர்யந்தோற்ற ஸுகோத்தரமாக விருக்கிறபடி. (அவன்வீற்றிருந்த) இத்தலையைத் தோற்பித்த தன்வெற்றியெல்லா மவ்விருப்பிலே தோற்றும்படி யிருந்த அவன் மெய்மறந்து அப்ப டியிருந்தால் நாமும் மெய்மறந்திருக்கவோ. பரிபூர்ணனும் அவன் செருக்காலே யிருந்தால், குறைவாளராய் நோவுபடுகிற நாமுமிருக் கவோ. அவன் முறைதப்பநின்றால் நாமும் முறைதப்புமித்தனை யன்றோ. பிரிந்தால் முறைபார்த்திருக்கலாம் விஷயத்துடனே கல ந்தோமாகிலன்றோ நாமாறியிருக்கலாவது; முறையை யழித்தாகி லும் மடலெடுத்துக்கொண்டு போமித்தனையன்றோ. (உ) " நமக் கேநலமாதலில் '' என்னக்கடவதிறே.

(வேதவொலியும்) அவன்நெஞ்சொழிந்து பழம்புணர்ப்புக் கேளாநின்றான்காணும். அதாவது - பண்டுதான்வென்ற வெற்றி மாலைகள் கேட்கையிறே. அதாவது - (ங) " ஜிதஂதெ புண்டரீ காக்ஷ - ஜிதந்தேபுண்டரீகாக்ஷ '' என்கிற வெற்றிமாலைகளிறே. (விழாவொலியும்) இவளைத் தோற்பித்ததுக்கு நெய்யாடல் போற் றுகிறபடி. (அறு) தீர்த்தம் ப்ரஸாதித்த பிற்றைநாளை திருமுளைச் சாத்தா நிற்குமத்தனை. ஸ்யமந்தகமணி கைப்பட்டபின்பு அக்ரூர னடுத்தடுத்து அஶ்வமேதம்பண்ணினாற்போலே, அவர்க்கு மடுத் தடுத்து உத்ஸவமாய்ச் செல்லுகிறவித்தனை; ஸ்த்ரீரத்நமிறே இவள். இவளிருக்கிறவிடமிறே மங்களகோஷங்கள் மாறிக்கிடக் கிறது.

(பிள்ளைக்குழா விளையாட்டொலியுமறா) பருவம் நிரம்பியிருக் கச்செய்தே நிஷேதிப்பா ரிருக்கிற வூரைவிட்டு, பருவம் நிரம்புவத

(க) எ-உ-ஶ. (உ) தி-மொ-க-ங-க.
(ங) ஜிதந்தை-ஸ்தோ.

ற்குமுன்னே பகவதநுபவமே யாத்ரையாய்ச்செல்லுவாரிருந்தவூரில் போய்ப் புகுமித்தனையென்கிறாள். அவ்வூரில் பருவம்நிரம்பாத பிள்ளைகளும் மகப்பட மகரநெடுங்குழைக்காதனுடைய வடிவழகிலே தோற்று, வாய்வெருவாநிற்பர்கள். (க) "பாலா அபி க்ரீடமாநாக்ருஹத்வாரேஷு ஸங்கஶ: । ராமாபிஷ்டவஸம்யுக்தாஶ்சக்ருரேவமித: கதா:" என்னும்படியே.

(௨) "ராமோராமோராம இதி" "சோறு சோறு சோறு" என்பாரைப்போலே. [ப்ரஜாநாமபவந்கதா:] ஜந்தர்மாக்களுக்கெல்லாம் பாசுரமிதுவே. [ராமபூதம் ஜகதபூத்] நாடடங்க ராமாத்வைதமானபடி. நித்யவிபூதியிலே பரிமாறக்கடவது இங்கே பரிமாறுகைக்கு ஹேதுவென்னென்னில் [ராமேராஜ்யம் ப்ரஶாஸதி] நாட்டங்களும் தந்தாமுடைய கர்மபலம்புஜிக்கப் பெற்றார்களில்லை, ராமபாக்யமே யநுபவித்துவிட்டது. (௩) [நசாக்நிஜம்பயம் கிஞ்சித்] அக்நியும் சோறுவேவிக்கவேண்டு மௌஷ்ண்யத்துக்கு மேற்படவுடைத்தாவதில்லை. [நாப்ஸு மஜ்ஜந்திஜந்தவ:] கொண்டாழக்கடவ ஜலந்தானே கொண்டுமிதக்கப் புக்கது ராமசரத்துக்கஞ்சி. பண்டேகைகண்டிருப்பதொன்றே ஜலந்தான். (௪) * வேலேவேவ வில்வளைத்தவனிறே.

(திருப்பேரையிற்சேர்வன்நானே) ஜயித்தாரிருந்த விடத்தே தோற்றார்சென்று விழுமத்தனையிறே. * தாமரைக்கண்ணனென் னெஞ்சினூடே யிறே, ஆகையாலே "ஜிதந்தே" என்று சென்று விழுமத்தனையிறே. (க)

## இரண்டாம்பாட்டு.

நானக்கருங்குழல்தோழிமீர்காள்! அன்னையர்காள்! அயற்சேரியீர்காள்! * நான்இத்தனிநெஞ்சம்காக்கமாட்டேன் என்வசமன்றிது, இராப்பகல்போய்* தேன்மொய்த்தபூம்பொழில்தண்பணைசூழ் தென்திருப்பேரையில்வீற்றிருந்த * வானப்பிரான்மணிவண்ணன் கண்ணன் செங்கனிவாயின்திறத்ததுவே. (௨)

(க) ரா-அயோ-௬-௧௬. (௨) ரா-யு.
(௩) ரா-பா ௧-௨௩. (௪) தி-௪, வி-௩௧

ப:—அநந்தரம், நிரவதிகமான பரத்வ ஸௌலப்யங்களையுடையவன்பக்கலிலே ஸக்தமாய்ப்போன வென்னெஞ்சைத் தகையமாட்டுகிறிலே னென்று தோழிமாரையும் தாய்மாரையு மயலாரையுங்குறித்துச் சொல்லுகிறாள்.

(இ-ள்.) நானம் - பரிமளோத்தரமான கந்தத்ரவ்யத்தாலே வாஸிதமாய், கரு - கறுத்த, குழல் - குழலையுடையரான, தோழிமீர்காள் - தோழிமீர்காள், அன்னையர்காள் - அவர்களோடொக்கவாசியற நியந்த்ரிகளான வன்னைமீர்காள்! அயற்சேரியீர்காள் - செய்திவினவவந்த அயற்சேரியீர்காள்! நான் - அதிப்ரவணையான நான், தனி - என்னிலுமதிஶயித ப்ராவண்யத்தையுடைத்தாய் ஸ்வதந்த்ரமான, இ - இந்த, நெஞ்சம் - நெஞ்சை, காக்கமாட்டேன் - என்னைவிட்டுப்போகாமல் தகையமாட்டேன், என் - எனக்கு, வசம் - விதேயம், அன்று - அல்ல, இது - இது, இராப்பகல் - இரவோடு பகலோடு வாசியற, போய் - என்னைவிட்டுப்போய், தேன் - வண்டுகள், மொய்த்த - மொய்த்த, பூம்பொழில் - பூம்பொழிலையுடைத்தாய், தண் - குளிர்ந்த, பணை - நீர்நிலங்கள், சூழ் - சூழ்ந்திருக்கிற, தென் - கட்டளைப்பட்ட, திருப்பேரையில் - திருப்பேரையிலே, வீற்று - தன்பெருமைதோன்றும்படி, இருந்த - இருக்கிற, வானம் - பரமபதநிலயனை, பிரான் - மேன்மையுடையனாய், மணி - உஜ்ஜ்வலமான மாணிக்கம்போலேயிருக்கிற, வண்ணன் - வடிவையுடையனாய், கண்ணன் - ஆஶ்ரிதபவ்யனான க்ருஷ்ணனுடைய, செம் - சிவந்த, கனி - கனிபோலேயிருக்கிற, வாயின் - அதரஶோபையிலே, இறந்தது - ஸக்தமாயிற்று;

நானம் - மயிர்க்கிடும் கந்தத்ரவ்யம், புழுகாகவுமாம். (உ)

ஆறு ;—(நானக்கருங்குழல்) அதி பரிமள நீலாலகாலங்க்ருத வதநாரவிந்தங்களை யுடைய தோழிமாரு மன்னையரும் மற்றுமுள்ள பந்துஜநங்களும் "நீ தனியேபோகையீடல்ல" என்று சொல்ல, அவர்களைக்குறித்து; நானென்னுடைய ஸ்வதந்த்ரமான நெஞ்சைக் காக்கமாட்டேன், எனக்கு விதேயமன்று, ஆஶ்ரயஸௌலபத்தைக் காகத் திருநாட்டில் நின்றும் ஶ்ரீவஸுதேவர் திருமகனாய்வந்து பிறந்தருளி, அக்காலத்தில் பெறுதாருடைய விழவுதிரும்படி, தேன் மொய்த்த பூம்பொழில் தண்பணைசூழ் தென்திருப்பேரையில் பரிபூர்ணனா யெழுந்தருளி யிருந்தவனுடைய, மந்தஸ்மிதலேஷத்தாலே புதுக்கணித்த திருப்பவளத்திலே என்னெஞ்சு இராப்பகல் போய்ப்படிந்து கிடக்கும், இனிநானெங்ஙனே பேணாதிருக்கும்படி யென்கிறாள். (உ)

ஈடு; அவ;— இரண்டாம்பாட்டு. தாய்மார் முகம்பார்த்துச் சொன்னாளாயிற்று - கீழ்ப்பாட்டில் நின்றது; "இவளிவ்வளவில் மீளுமவளன்றிக்கே யிருந்தாள்" என்றுதாய்மாரோடு தோழிமாரோடு அயற்சேரி யுள்ளாரோடு வாசியறவந்து திரண்டு ஹிதம்சொல்லப்புக்கார்கள்: உங்கள் ஹிதவசநங்களாதபடி நிரவதிகமான பரத்வஸௌலப்யங்களையுடையவன் பக்கலிலே ஸக்தமாய்ப்போன வென்னெஞ்சைத்தகைய மாட்டுகிறிலேன், என்னெஞ்சைக்கடல் கொண்டது காணுங்கோளென்கிறாள்.

(நாணக்கருங்குழல் தோழிமீர்காள்) நாணம்-நறுநாற்றம். அவர்களுக் கொருபழி சொல்லுமாப்போலே சொல்லுகிறாள், அவர்கள் தலையான நறுநாற்றத்துடனே வந்து நிற்கையாலே. மயிர் படமாந் தும்படியிறேயிவள் படி. உங்கள் ஸந்நிதியில்லையாகில் நானிங்கே யிரேனே. (க) * மைவண்ண நறுங்குஞ்சிக்கு ஸ்மாரகமாயிராநின்றதே இவர்கள் குழல். (உ) "வயஸ்யஸ்த்வம் ஹ்ருத்யோமே - ஏகம் து:க்கம் ஸுகஞ்சநௌ" என்று இவளுடைய ஸுகது:க்கங்களே தங்களுக்கும் ஸுகது:கமாம்படியிருக்கையிறே தோழிமாராகையாவது; இவள் மயிர்முடி பேணாதே, பரிமளங்காணில் முடியும்படியாயிருக்க, இவர்கள் குழல்பேணிப் பரிமளங்கொண்டு காரியங்கொள்ளப் போருமோவென்னில்; கலவியில் இவளோடு அவன் நெருங்க நெருங்கச்சாத்திக்கழித்தபடியே ஸர்வஸ்வதாநம் பண்ணுவது இவர்களுக்கே; அப்போதவன்பண்ணின ப்ரஸாதாதிஶயத்தாலே, அது சருகானாலும் அவர்கள் மாறாதே வைத்துக்கொண்டிருப்பர்களே, அதிவளுக்கு ஸ்மாரகமாய் நலிகிறபடி, அன்றிக்கே, இவர்கள்தான் பரிமளங்கொண்டு கார்யங்கொள்ளவும் வல்லவர்கள். அதாவது - தாங்கள் தளர்ந்தநாட்டில் இவள் மிகவும் தளருமென்றுறப்பித்துக் கொண்டிருப்பர்கள்; தந்தாமுடையபொறுமையும் பாரார்களாயிற்று இவளை யுஜ்ஜீவிப்பிக்கைக்காக. அகாரவாச்யனவனும் ஜீவித்து மகாரவாச்யனிவனும் ஜீவித்து அநாதிகாலம் போரச்செய்தேயு முஜ்ஜீவிக்கப்பெறாதே நடுவேகிடந்துபோயிற்றே, இனி (ங) கடக்ருத்யமிறே யுஜ்ஜீவிப்பிக்கை, அப்படியேயிவளை யிசைவித்து உஜ்ஜீவிப்பிக்கவேணுமே. தந்தாம்க்லேசங்கள் பாரார்களிறே "ஹோஷிக்க

---

(க) தி-நெ-உக (உ) ரா-கி-ரு-கஅ.

திஸயம்வேணும்'' என்றிருப்பார்; பெருமாளிலும் க்லேஸம் மிஞ்சி யிருக்கச்செய்தே பெருமானுடையாஜ்ஞைத்துக்காக விளையபெருமாள் தம்மைப்பேணிக்கொண்டு தரித்திருக்குமாப்போலே. பரமபோகிகளிறே யிளையபெருமாள் தாம். (க) [ஸௌமித்ரே வஸ்யவம்வா யார்ஸௌமித்ரே பஸ்யபம்பாயா:] அங்குத்தைபோக்யதை நெஞ்சிலே படச்செய்தேயும், பெருமாளுக்கு அங்யபரதை விளக்கைக்காக முகத்தை மாறவைத்துக்கொண்டுநின்றார்; பிள்ளாய், பாராய இதிருந்தபடி யென்கிறார்.

(நானக்கருங்குழல்) ஒரு தமிழன் " நானமென்று-குழலுக்கு விசேஷணமாகையாலே, நாவிபோன்றகுழல் '' என்றான். அத்தால் நினைக்கிறதும் - பரிமளத்தை. (தோழிமீர்காள்) ப்ரியஞ்சொல்லுவாரும் ஹிதஞ்சொல்லுவார் கோடியிலே புகுவதே. (தோழிமீர்காளன்னையர்காளயற்சேரியீர்காள்) தானறிந்து தோழிமார்க்குச்சொல்லாதே யிருப்பதோரவஸ்தையும், தோழிமாரும் தானுமறிந்து தாயறியாதே யிருப்பதோரவஸ்தையும், தானும் தோழியும் தாயுமறிந்து பிறரறியாதிருப்பதோ ரவஸ்தையுமா யாயிற்றிருப்பது; அந்நிலைகுலைந்து எல்லாரையு மொக்க ஸம்போதிக்கும்படி யாயிற்று ஜகத்ப்ரஸித்தமானபடி. பிறர்க்குச் சொல்ல வேண்டுவ தில்லையிறே; ஆயிருக்க, ப்ரதிகூலர்க்குங்கூட தயைபண்ணவேண்டும்படி காணு மிவளுடையவார்த்தி. (உ) [ராவணோ நயதே சிதா - மாம்ஸமாநயது:கிதாம்] என்று என்னை நீ பெருமாளுடனே கூட்டவல்லையே யென்றாளிறே ராவணனை. (௩) "தயாக ... குரு தயாம்மயி '' என்றும், (ச) " வா வாய ... வாசா தர்ம மவாப்நுஹி'' என்றுமொரு திருவடிபோல்வார்க்குச் சொல்லக்கூட வார்த்தையையிறே பிரித்தவனைப் பார்த்துச்சொல்லிற்று. (தோழீமீர்காளித்யாதி) எங்ஙனே நானுகந்தது உகந்திகோள். எங்ஙனே யெனக்கு ப்ரியஹிதம்பார்த்திகோள், எங்ஙனே யுதாஸீநைகளாயிருந்திகோள்.

எங்கள்பக்கல் குறையுண்டோ, நீமர்யாதை தப்பினவாறே நாங்களும் முறைதப்பினோ மித்தனையன்றோ வென்ன (நானித்தனி

---

(க) ரா-கி-க-சுO. (உ) ரா-ஸு-உக-கஅ.
(௩) ரா-ஸு-சO-௩. (ச) ரா-ஸு-௩சு-கO.

நெஞ்சங்காக்கமாட்டேன்) உங்களுக்குமிங்ஙனே யேதேனு மிருப்ப தொரு ஹேதுவுண்டோ முறைதப்புகைக்கு. (நான்)நீங்களுமேதே னும் நெஞ்சிழந்திகோளோ. உங்களளவல்லவென்றபடி. (இத்தனி நெஞ்சம்) உங்களில் நான் வ்யாவ்ருத்தை யானாப்போலேயாயிற்று என்னிலுமென்னெஞ்சு வ்யாவ்ருத்தமானபடி (தனிநெஞ்சம்) சொல்லிற்றுக்கேளாத ஸ்வதந்த்ரமான நெஞ்சம். (க) "தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத் - தத்தஸ்ய ஸத்ருஶம்பவேத்" என்றிருப்பார் நெஞ்சமுமிதுக்கொப்பல்ல. (காக்கமாட்டேன்) (பாலநஸாமர்த்த்யம் வேணுமேகாக்க.) (உ) "முந்துற்றநெஞ்சே - இயற்றுவாயெம்மொடு நீகூடி" என்றிருக்கு மித்தனையொழிய, இவளால் தடுத்துவைக்கப் போகாதே. (௩) "மஹாரவ:கிம்கரிஷ்யதி - குரவ:கிம்கரிஷ்யந்தி" என்று ஒருவரையும்பாராதே போகாநின்றது, ஒன்று கேட்டுமீளு மளவல்ல; மீட்கலாமளவும் காற்காட்டிப்பார்த்து, போகாமையாலே கைவாங்கினமை தோற்றுகிறதுகாணும்-மாட்டேனென்கிற வுறைப் பாலே. ஸம்ஸாரிகள் ஶப்தாதிவிஷயங்களினின்றும் மீளமாட்டா தாப்போலேயிறே இவர் பகவத்விஷயத்தினின்றும் மீளமாட்டா தபடி.

"மாட்டேன்" என்று சொல்லுமிதுவார்த்தையோ, எல்லா வளவிலும் தந்தாம் நெஞ்சு தந்தாமுக்கு விதேயமாகவேண்டாவோ வென்னில் (என்வசமன்றிது) என் செய்வோம், தாய்வேறு கன்று வேறாக்கும் விஷயமானால். கைகேயிசொற்கேட்டு ஸ்ரீபரதாழ்வான் ராஜ்யம்பண்ணுமன்றாயிற்று இவளும் இத்தாயார் வார்த்தைகேட்டு மீளுவது. இப்போது நானுங்கள் மகளன்றோ; மகளென்னுமவ்ய ராவரோ; என்னைப்போலுமன்றே யென்னெஞ்சு. எனக்குத்தா னென்றிருக்கும் நிலை குலைந்தது, தன் வழியே நானொழுகும்படி யாயிற்று.

தந்தாமுடைய நெஞ்சு அபவ்யமானாலும், பவ்யமாயிருப்பதொரு போது பார்த்து ஹிதஞ்சொல்லவேண்டாவோ வென்ன (இராப் பகல்போய்) ஸ்ருஷ்டமானகாலத்திலே யிதுக்கு ஹிதம் சொல்லலா வதொருபோதுகாண்கிறிலேன், ஒருபோது பகவத்விஷயத்திலும்

---

(க) ரா-ஸு-௩.௩௦. (உ) பெரியதிருவ-க.

(௩) வி-பு-ரு-கஅ-உஉ.

கைவைத்து, ஒருபோது ஸம்ஸாரயாத்ரையிலும் கைவைக்கு மளவல்லவிறே யிவளுடைய ப்ராவண்யம். இங்கே யிருப்பதொருபோதுண்டாகிலிறே ஒன்று சொல்லிமீட்கலாவது.

(தேன்மோய்த்த வித்யாதி) இது மீட்கலாம் விஷயத்திலேயோ வகப்பட்டது. அவ்வூரில் போக்யதையிலே படிந்தாரையும் மீட்கப்போமோ. தேனென்று - வண்டு. (பூம்பொழிலித்யாதி) பூத்த பொழிலையும் குளிர்ந்த நீர்நிலங்களையுமுடைத்தான தென்திருப்பேரையில். (வீற்றிருந்த) பரமபதத்தி லிருப்படங்கலும் தோற்றும்படியிருக்கை. அவ்விடம்போலுமன்றிறே யிவ்விடம்; ஒருவர் கூறையெழுவருடுக்கிறவிடமிறே. அவ்விடத்தோடொக்க இவ்விடத்தையும் திருத்திக்கொண்டிருக்கிற விடமிறே (வானப்பிரான்) இத்தால் கண்ணழிவற்றமேன்மையைச் சொல்லுகிறது.

(தென்திருப்பேரையில் வீற்றிருந்தவானப்பிரான்) ஸ்ரீவைகுண்டத்திலிருப்பைவிட்டு நமக்காகவிங்கேயிருக்கிற வுபகாரகன். (மணிவண்ணன்) மேன்மையில்லையாகிலும் விடவொண்ணுதவடிவில்பசையிருக்கிறபடி. (கண்ணன்) அங்குள்ளார்க்குப் படிவிடுமுடம்பை இங்குள்ளார்க்கு வரையாதே கொடுத்துக்கொண்டிருக்கிறவன். (வானப்பிரானித்யாதி) மேன்மை யளவிடவோ, வடிவழகளவிடவோ, நீர்மையளவிடவோ. (செங்கனிவாயின் திறத்ததுவே) கண்ணகத்திலொரு சுழியிலே யகப்படுவாரைப்போலே, வாய்க்கரையிலே யகப்பட்டது. ஆசைப்பட்டவிஷயத்தைக் கரைகண்டதாகிலன்றோ மீளுவது. சிவந்துகனிந்த திருப்பவளத்திலிடையாட்டத்தது. இது மீள நினைக்கிலன்றோ வுங்கள்வார்த்தை கேட்கைக்கு அவகாசமுள்ளது. (௨)

---

## மூன்றும்பாட்டு.

செங்கனிவாயின்திறத்ததாயும் செஞ்சுடர்நீள்முடித்தாழ்ந்ததாயும் * சங்கொடுசக்கரம்கண்டுகேந்தும் தாமரைக்கண்களுக்குஅற்றுத்தீர்ந்தும் * திங்களும்நாளும்விழாவறாத தென்திருப்பேரையில் வீற்றிருந்த * நங்கள்பிரானுக்குஎன்நெஞ்சம்தோழீ ! நாணும்நிறையும் இழந்ததுவே. (௩)

ப;—அநந்தரம், அவனுடைய வவயவாதிஶோபையிலே யகப்பட்ட நெஞ்சு. நாணும்நிறையு மிழந்ததென்று அந்தரங்கையான தோழிக்குச் சொல்லுகிறாள்.

(இ-ள்.) செம் - சிவந்த, கனி - கனிபோலே போக்யமாய், இன் - ஸாந்த்வவாதாதிகளாலே ஆகர்ஷகமான, வாய் - திருப்பவளத்திலே, திறந்ததாயும் - அதிநிவிஷ்டமாயும், ஆதிராஜ்யஸூசகமாய், செம் - சிவந்த, சுடர் - ஒளியையுடைத்தாய், நீள் - உத்துங்கமான, முடி - திருவபிஷேகத்திலே, தாழ்ந்ததாயும் - அம்மேன்மைக்கீடாகத்தாழ்ந்து வர்த்திப்பதாயும், சங்கொடுசக்கரம்-அந்தபார்த்வத்தை நிர்வஹித்துக்கொடுக்கும் திவ்யாயுதங்களை, கண்டு - கண்டு, உகந்தும் - ஹர்ஷயுக்தமாயும், தாமரை - அதிஶயிதபோக்யமான தாமரைபோன்ற, கண்களுக்கு - திருக்கண்களுக்கு, அற்று - புறம்புதொற்றற்று, தீர்ந்தும் - அநந்யார்ஹமாயுமிருக்கிற, என் - என், நெஞ்சம் - நெஞ்சானது, தோழீ - முன்பு ஸம்ஶ்லேஷிக்கைக்கு ஸஹகாரியான தோழீ, திங்களும் - மாஸங்கள்தோறும், நாளும் - திவஸங்கள்தோறும், விழா - உத்ஸவங்கள், அறாத - இடைவிடாமல்செல்லுகிற, தென் - தென், திருப்பேரையில் - திருப்பேரையிலே, வீற்று - தன்வாசிதோன்ற, இருந்த - எழுந்தருளியிருக்கவனாய், நங்கள் - நம்போல்வார்க்கு முகந்தருகிற, பிரானுக்கு - அர்ச்சாவதாரஸுலபனான வுபகாரகனுக்கு, நாணும் - ஸ்வாபாவிகமான லஜ்ஜையையும், நிறையும் - அடக்கத்தையும், இழந்தது - இழந்தது. (௩)

ஆறு ;—(செங்கனிவாயின்) உன்னுடையலஜ்ஜைக்கும் நிறைவுக்கும் போருமோ தனியேபோகையென்று தோழிசொல்ல; திருப்பவளத்தழகிலே போய்ப்படிந்தும், திருப்பவளத்திலொளிகொழுந்து விட்டு மேலேக்கிவளர்ந்ததோவென்னும்படி நீண்டிருந்த திருவபிஷேகத்தி லழகிலே தாழ்ந்தும், திருவாழியும் திருச்சங்குமேந்தினவழகைக் கண்டுகந்தும், மற்றோரழகுக்கு உரித்தல்லாதபடி தாமரைக்கண்களுக் கற்றுத்தீர்ந்தும், என்னுடைய நெஞ்சானது, திங்களும் நாளும் விழாவறாத தென்திருப்பேரையிலே வீற்றிருந்த நங்கள்பிரானுக்கு நாணும் நிறைவு மிழந்தது ; இனி யெனக்குநாணும் நிறைவுமுண்டோவென்று தோழியை நோக்கிச்சொல்லுகிறாள்.(௩)

ஈடு ; அவ ; — மூன்றாம்பாட்டு. சேர்க்குமவளொருத்தியுமே யாக அல்லாதபங்களமடங்கலும் “ நமக்குநிலமன்று ” என்றுகை

வாங்கிற்று ; தோழியானவள் “ இதுநமக்குப்போராதுகாண், நெஞ்சைநெருங்கப் பிடித்து தரித்திருக்க வேண்டாவோ ” என்ன ; அந்நெஞ்சுதானினிச்செய்வதென், அவயவாதிசோபைகளிலே யகப்பட்டு அதுவும் தனக்குள்ள தடங்கலு மிழந்ததுகாணென்கிறாள்.

செங்கனிவாயின் திறத்ததாயும், செஞ்சுடர் நீண்முடித்தாழ்ந்ததாயும், சங்கொடுசக்கரங் கண்டுகந்தும், தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும்- நெஞ்சு-நாணு நிறையுமிழந்ததுகா ணென்கிறாள். ஸௌபரியென்பானொருத்தன் ஒரு ஸங்கல்பமடியாக ஐம்பது வடிவுகொண்டானிறே ; அவ்வளவல்லவிறே யிவள் கலந்தவிஷயம் பண்ணவல்லது. அவன் வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாப்போலே யாயிற்று இதுவுமவயவங்கள்தோறும் தனித்தனியகப்படவல்லபடி. (க) “ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி - ஸஹஸ்ரதா பவதி ” என்கிறபடியே யநுபவியாநின்றால் பிறக்கும் நாநாபாவம், பிரிவிலேநெஞ்சுக்குண்டாகாநின்றது.

(செங்கனிவாயின்திறத்ததாயும்) “பிரிந்துகடக்கவிருக்கிலேன், உன் கண்வட்டத்திலே கிடக்கிலேன், இது உன்சரக்கன்றோ,” என்றுசொல்ல வுபக்ரமித்து, தழுதழுத்துவருகிற திருவதரத்திலே யகப்பட்டபடி. அதிலு மதரத்தில் பழுப்புக்குள்ளிழியமாட்டுகிறதில்லை. (வாயின்திறத்ததாயும்) அதுதானொரு மஹாபாரதத்துக்குப் போருமாகாதே. ( செஞ்சுடரித்யாதி ) பிரிவை ப்ரஸங்கித்துப் போகின்றபோது, ஆதிராஜ்யஸூசகமாய் “ உபயவிபூதிநாதன் ” என்று தோற்றும்படி யிருக்கிற திருவபிஷேகத்தைக்கண்டு தறைப்பட்டுக்காலைப்பிடித்தது.

( சங்கொடித்யாதி ) பிரிந்தால் விரோதியைப்போக்குகைக்குப்பரிகரமாய், வைத்தகண்மாற வொண்ணாதவழகையுடைய வாழ்வார்களைக் கண்டுகந்தது, ( தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும் ) “ தவாஸ்மி - தவாஸ்மி ” என்று சொல்லப்புக்கு மாட்டாதொழிந்தால், குறையும் தலைக்கட்டின திருக்கண்களுக்காயிற்று அநந்யார்ஹமாக வெழுதிக்கொடுத்தது. பிரிகிறபோது நோக்கினநோக்கிலே, பிறர்க்காகாதபடி யுஜ்ஜீவிக்கப்பண்ணினன். அம்ருதமதநத்தில்

(க) சாந்தோ எ-உ௫.

தானெட்டுவடிவு கொண்டாப்போலே காணும் இதுவும் விஷயாதீநமா கப்பலவடிவு கொள்ளுகிறபடி. அவனுடைய வைஶ்வர்யமடைய இதுக்குண்டாகக் கடவதிறே.

(திங்களுநாளுமித்யாதி) உத்தேஶ்யபூமியிலே நித்யோத்ஸவம் செல்லாநிற்க, அதிங்கே நங்கண்வட்டத்தே துஃகத்துக் கிலக்காயி ருக்குமோ. மாஸத்திருநாளும் நித்யத்திருநாளுமோவாத. (வீற்றி ருந்தநங்கள் பிரானுக்கு) இவ்விருப்பு நமக்காக்கிக்கொண்டிருக்கிற வுபகாரகனுக்கு. பரத்வம் நித்யமுக்தர்க்கு; வ்யூஹம்- முக்தப்ரா யர்க்கு; விபவம் புண்ணியம்பண்ணினார்க்கு; இவ்விருப்பு பாபம் பண்ணின ஸம்ஸாரிகளுக்காகவிறே. (என்னெஞ்சம்) அவனுடைய வுபகாரமும் ஸௌந்தர்யாதிகளும் வயிர வுருக்காகை. நெஞ்சினு டைய வன்மையறிதியிறே; நெஞ்சுமவனுமொரு கோவையிலே யடைப்புண்டபடி.

(நங்கள்பிரானுக் கென்னெஞ்சம்) (க) "ராவணோ ஹி தி வெடை ஹீஷ - ராகவோர்ஹதிவைதேஹீம்" என்னுமாப்போலே. (தோழீ) நெஞ்சைத்திருத்திக்கலப்பிக்கப்பட்ட வருத்தமறிதியிறே. இப்போது நீயுங்கூட வெதிர்த்தலையாம்படியிறேவாய்த்தது. (நாணு நிறையுமிழந்ததுவே) இதிழவாததுண்டோ. அரைக்ஷணமவன் பேர நின்று படுத்தினபாடெல்லா மென்றுன். நான் தன்னையிழந்தேன், தாய்மார் தோழிமார்க ளென்னை யிழந்தார்கள். நெஞ்சு நாணுநிறை யுமிழந்தது. (௩)

---

## நான்காம்பாட்டு.

இழந்தஎம்மாமைதிறத்துப்போன என்நெஞ்சினும்அங்கே யொழிந்தார் * உழந்து இனியாரைக்கொண்டு என்உசாகோ? ஓதக் கடலொலிபோல * எங்கும் எழுந்தநல்வேதத்தொலிநின்றோங்கு தென்திருப்பேரையில்வீற்றிருந்த* முழங்குசங்கக்கையன்மாயத்தாழ் ந்தேன் அன்னையர்காள்! என்னையென்முனிந்தே? (௪)

ப.—அநந்தரம், அவனுடைய குணசேஷ்டிதங்களிலே யகப்பட்ட வென்னெஞ்சு மங்கேபோயிற்று, இனி யாரைக்கொண்டு போதுபோக்குவ தென்று, நியமிக்கிற தாயாரைக் குறித்துச் சொல்லுகிறாள்.

---

(க) ரா-ஸு-கரு-நி.

(இ-ள்.) இழந்த - முன்பேயிழந்த, எம் - என், மாமைத்திறத்து - நிறத்துக்காக, போன - போன, என் - என், நெஞ்சினாரும் - நெஞ்சினாரும், அங்கே - அங்கே யாஸந்நராய், ஒழிந்தார் - ராஜகுலத்தாலே யென்னை யொழிந்து நின்றார், இனி, இனி-அந்தரங்கமான நெஞ்சுபோனபின்பு, உழந்து - அலமந்து. ஆரை - இவ்வநுபவ விரையிலநபிஜ்ஞரானாரை, கொண்டு-கொண்டு, என் - அவர்களுக்கு நிலமல்லாத வென்தவர்த்தத்தை, உசாகோ-உசாவுவேன், உசாவவிருக்கிற நான்காணும், ஓதம் - திரைக்கிளப்பத்தை யுடைத்தான, கடலொலிபோல - கடலொலிபோலே, எங்கும் - ஸர்வப்ரதேசத்திலும், எழுந்த - கிளர்ந்த, நல்வேதத்தொலி - ஸாமவேதகோஷமானது, நின்று - எக்காலத்திலும் நின்று, ஓங்கு - கிளர்ந்துவருகிற. தென் - தென், திருப்பேரையில் - திருப்பேரையிலே, வீற்றிருந்த - எழுந்தருளியிருப்பானாய், முழங்கு - அந்த வேதகோஷ ப்ரதித்வநியாலே முழங்குகிற, சங்கம் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தை, கையன் - திருக்கையிலே யுடையவனுடைய, மாயத்து - ஆஸ்சர்யமான ஸீல ஸௌலப்யாதி ப்ரகாஸக சேஷ்டிதங்களிலே, ஆழ்ந்தேன் - அவகாஹித்தேன். அன்னையர்காள் - "மூப்பும் முறையு முடையோம்" என்றிருக்கிறவன்னைமீர். என்னை - துணையற்றீடுபட்டிருக்கிற வென்னை, முனிந்து - முனிந்து, என் - என்ன ப்ரயோஜநமுண்டு. (௪)

ஆறு ;—(இழந்த) "யுக்தமோ அயுக்தமோ" என்று நிரூபியாதே போகப்பெறலாமோ வென்று அன்னைமார் தன்னைமுனிய; இழந்த வெம்மாமைத் திறத்துப்போன வென்னெஞ்சினாரும் அவனுடைய வழகைக்கண்டென்னை மறந்து, வாராதே யங்கேயொழிந்தார் ; இனி யிங்கிருந்தென்ன புருஷார்த்தம் ஸாதிப்பது; ஆரோடேயத்தை நிரூபிப்பது. ஓதங்கிளருகிற கடலினுடைய கோஷம் போலே யிருந்த மங்களமான வேத கோஷத்தாலே ஸம்ருத்தமான தென்றிருப்பேரையிலே வீற்றிருந் தருளினவனுடைய, (க) * நான்ணுவசுரர் நலிவெய்து நல்லவமரர் பொலிவெய்தும்படி முழங்குகிற ஸ்ரீபாஞ்சஜந்யத்தை யேந்தின வழகுவெள்ளத்திலே புக்கழுந்தினேன்; இனியென்னை முனிந்து ப்ரயோஜநமென்னென்று தன்னுடைய வன்னைமாரை நோக்கிச்சொல்லுகிறாள். (௪)

ஈடு; அவ;—நான்காம்பாட்டு. "ஏதேனு மொன்றைக்கொண்டு வருந்தியாகிலும் போதுபோக்காதே யிங்ஙனே செய்பலாமோ" என்று பொடிகிறதாய்மாரைக்குறித்து; என்னெஞ்சம் அவனாலே யப

(க) ௧௦-௭-௫.

ஷ்றுகமாயிற்று, நான்னத்தைக்கொண்டு போதுபோக்குவ தென்கிருள்.

(இழந்தவெம்மாமைத்திறத்துப்போன) நாணுநிறையு மிழந்த தென்றவிடம்-உபலக்ஷணமாகாதே, அநுபாஷணத்திலே நிறமிழந்தமையும் தோற்றச்சொல்லா நின்றுள். ("இழந்தவெம்மாமை" என்று அநுபாஷணத்திலே-மாமையென்கிற நிறம் பூர்வமேயிழந்தமைதோற்றுகிறது, ஆகையாலே நாணுநிறையுமென்றுஉபலக்ஷணம்;) "அத்தலையிலுள்ளது நாம் ஸர்வஸ்வஹரணம்பண்ணுகை போய், நமக்குள்ளதிலே யொன்றைச் சிலர்கொடுபோகையாவதென்" என்றபிமாநித்து, "இப்போதே மீட்டுக்கொடுவருகிறேன்" என்று த்வரித்துப்போன நெஞ்சும் அங்கேபடையற்றது. (என்னெஞ்சினுருமங்கே யொழிந்தார்) அங்கேபுக்காரையும் தப்படியாக்கிக்கொண்டார். "பிரியேன்" என்று சொன்னவரிறே யித்தலையைப்பிரிந்து நினையாதிருக்கிறுர். (நெஞ்சினர்) அலைந்த பரிவட்டமுந் தாமுமா யணுக்கடித்துத் திரியாநின்றுராயிற்று. (நெஞ்சினர்) (க) "வ வெக்ஷ்யாமி வாஹிநீம்-ப்ரவேக்ஷ்யாமிசவாஹிநீம்" என்று தூசித்தலையில் வ்யாபரிப்பேன் நானென்றுனிறே ஸ்ரீவிபீஷணுழ்வான்.

(இழந்தவித்யாதி) நிறந்தொடக்கமான விழந்தவையடைய மீட்பதாகச் சொல்லிப்போன நெஞ்சினுருமங்கே கால்தாழ்ந்தார். வினைத்தலையிலே படையறுக்குமாப்போலே;வரிசையுங்கொடுத்துத் தம்மோடு ஸாம்யாபத்தியுங் கொடுத்தார். (வினைத்தலையில் படையறுக்கையாவது - யுத்தஸமயத்திலே யெதிர்த்தலையில் ஸேனையைத் தன்பக்கலிலே யாக்கிக்கொள்ளுகை.) (உ) "ராஜா ஹ்யேஷ விபீஷண:-ராஜாஹ்யேஷவிபீஷண:" என்னுமாப்போலே வரிசைபெற்றுத்திரியாநின்றுர். ராவணன் முன்னே, அவன்சோற்றையுண்ட ஸாஸக ஸாரணர்கள் விபீஷணுழ்வானை, "ராஜா" என்பானென் னென்னில்; எழுத்து உருவழியாதே கிடந்தாலும், புள்ளிகுத்திஞல் அத்தைக்கழித்து மேலேபோமாப்போலே, முடிகொடுக்குமவர்கையாலே வைக்கையாலே. என்றுலும், ராவணன் க்ரௌர்யத்தை யறிந்துவைத்துக் கூசாதே யிங்ஙன் சொல்லுவானென்னென்னில்; "சித்ரம்குத்துமோ" என்றிருந்தார்கள். "நிலவரைக்கொண்டு வினைசெய்யலாம்" என்று தரங்கொடுப்பரிறே,

(க) ரா-யு-கக-உ௩. (உ) ரா-யு-உஅ-உஎ.

(என்னெஞ்சினாருமங்கேயொழிந்தார்) நிறம் மீட்கப்போனாரும் நிறங்கொடுபோனாரோ டொத்தார். இத்தலையில் வெறுமைகண்டு போனதுவும் பௌஷ்கல்யங் கண்டுபோனவனோ டொத்தது; போவார் போவாரெல்லாம் இத்தலைக்குக் காரியமாகக்காணும் போம்போது சொல்லிப்போவது. அவன்றானே "இத்தலையூற்றிருக்க வேணும்" என்று போனானன்; இதித்தலையில் வெறுமைகண்டு, நோக்குகைக்காகப் போயிற்று. நாந்தாமவர்களை வெறுக்கிறதென், (௧) "நோபஜநம் ஸ்மரந்-நோபஜநம்ஸ்மரந்" என்று புக்கார் மீளாத தேசமானபின்பு. (அங்கேயொழிந்தார்) "கடலுக்குக் குறை நிரப்பவேணும்" என்று திரியாநின்றார்.

(உழந்தித்யாதி) பண்டு நெஞ்சிழந்தவர்களும் வருந்தி தரித்துச் சிலரோடே வ்ருத்த கீர்த்தநம்பண்ணி யிருந்திலர்களோ. நீயுமப்படியே வருந்தியாகிலும் சிலரோடே காலக்ஷேபம் பண்ணவேண்டாவோ வென்ன (இனி-உழந்து-ஆரைக்கொண்டென்னுசாகோ) உழந்து-வருந்தி. (இனி)-என்னெஞ்சை யிழந்தபின்பு. இனி துஃகப்பட்டு ஆரோடேகூட வெத்தைச்சொல்லி நான் காலம்போக்குவது. லங்கையிலே யிருந்தவளுக்கு ஒருவளுதல் ஒருவன் குடியாதலுண்டு: அதுவுமில்லையே யெனக்கு. (௨)[ஜ்யேஷ்டாகந்யாநலாநாம விபீஷணஸுதா - ஜ்யேஷ்டாகந்யாநலாநாம விபீஷணஸுதா] இங்கேயிருந்தே அங்குத்தைக்காவாளொருத்திகாண். [கபெ கபெ] ஓரோவவஸ்தைகளிலே நீயுதவுமாப்போலேகாண் இவளுநமோரோதசைகளிலே உதவவல்லபடி; பலசொல்லியென், உன்னோடொப்பாளொருத்தி.

(ஆரைக்கோண்டேன்னுசாகோ) தேஹாத்மாபிமாநிகளான ஸம்ஸாரிகளைக்கொண்டு போதுபோக்கவோ, (௩) "ஸர்வஸம்ஹாரஹ்ருத்-ஸம்வரோஹம்" என்றிருக்கிற ப்ரஹ்மேஶாநாதிகளைக்கொண்டு போதுபோக்கவோ, பகவதநுபவத்திலே அநந்யபரராயிருக்கிற நித்யஸூரிகளைக்கொண்டு போதுபோக்கவோ, இத்தலையை யுரிகூறை கொண்டு போனவனைக்கொண்டு போதுபோக்கவோ; ஆரைக்கொண்டெத்தை உசாவுவது. (என்னுசாகோ)(௪)"ஸஹாயாஃ ஸமதாஃ ஸ்த்ரீ-ஸமாத்வா தஸ்தத்ராஹம்" என்று சொல்லலாமிறே அவளுக்

(௧) சாந்தோ-அ-௧௨. (௨) ரா-ஸு-௩௭-௧௧.
(௩) கீதை-௧௧-௧௪. (௪) ரா-ஸு-௩௩ ௧௮.

கு, அப்படியே நமக்கு மேதேனுமுண்டோ. கலவியிலபர்யாப்தியிரு க்கிறபடி, (ஆரைக்கொண்டு) நெஞ்சுபோலே நமக்குப் பாங்காயிருப் பாருண்டோ.

ஆனால் செய்யவடுப்பதென்னென்னில் (ஓதக்கடலித்யாதி) அ ங்குத்தைகது இங்கே நடையாடாநின்றபின்பு, நாமுமங்கேபோய்ப் புகுமத்தனை. ஓதங்கிளர்ந்த கடல்போலே யிருந்துள்ள வேதகோஷ மானது எங்கும் பரம்பாநின்ற தென்திருப்பேரையில் வீற்றிருந்த. (நல்வேதம்) (க) "வெஉா நாஸாமவெஜொஸி - வேதாநாம்ஸாம வேதோஸ்மி" என்கிற ஸாமத்வநியாய்க் கிடக்குமத்தனை பார்த்த பார்த்தவிடமெங்கும். அவ்விருப்பைக்கண்டு முக்தர் ஸாமகாநம்பண் ணி ப்ரீதிக்குப்போக்கு விடுமாப்போலே. (முழங்குசங்கக்கையன்) வேதத்வநியானது ஸ்ரீ பாஞ்சஜந்யத்தைக்கிட்டி ப்ரதித்வநி யெழா நிற்கும். (மாயத்தாழ்ந்தேன்) அவனுடைய ஸ்மிதவீக்ஷணாதிகளி லே மீளவொண்ணாதபடி அகப்பட்டேன்.

(அன்னையர்காளென்னை யென்முனிந்தே) ப்ராப்தியுண்டென் றுச் சீறுமத்தனையோ. சீற்றத்துக்கெதிர்த்தலையும் வேண்டாவோ. தர்மியுண்டாய் முனியவேணுமே. (மாயத்தாழ்ந்தேன்-என்னையென் முனிந்தே) ஸ்வாதீநரையன்றோ முனிந்தால் ப்ரயோஜநமுள்ளது.

---

## ஐந்தாம்பாட்டு.

முனிந்துசகடமுதைத்து மாயப்பேய் முலையுண்டு மருதிடை போய் * கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்த கண்ணபிரானுக்கு என் பெண்மைதோற்றேன் * முனிந்து இனியென்செய்தீர்? அன்னைமீர் காள்! முன்னி அவன்வந்துவீற்றிருந்த * கனிந்தபொழில் திருப்பே ரையிற்கே காலம்பெற என்னைக்காட்டுமினே. (ரு)

ப.—அநந்தரம், அநிஷ்டநிரஸந ஶீலனான க்ருஷ்ணனுக்கு என்னுடைய ஸ்த்ரீத்வத்தை யிழந்தேன்; நிரர்த்தகமாக நியமிக்கத்தேடாதே, விளம்பியாதே, அவனிருக்கிற தேசத்திலே கொடுபோய்க் காட்டுங்கோளென்கிறாள்.

(இ-ள்.) முனிந்து - முலைவரவு தாழ்த்துச்சீறி, அத்தாலே திருவடிகளை நிமிர்த்து, சகடம் - ஶகடத்தை, உதைத்து - உதைத்து, மாயம் - தாய்வடிவு

(க) கீதை-கo-உஉ

கொண்டுவந்த, பேய்-பேய், முடியும்படி. முலை - முலை, உண்டு - உண்டு, மரு திடை - த்வந்த்வமான மருதிடையே. போய் - வழிகண்டுபோய், கனிந்த-பழுத்த, விளவுக்கு - விளவாய்நின்ற வஸுரனைக்குறித்து, கன்று - கன்றாய் வந்த வஸுரனை, எறிந்த - எறிந்த. கண்ணன் - க்ருஷ்ணனென்ற, பிரானுக்கு - மஹோபகாரகனுக்கு. என் - என்னுடைய, பெண்மை - ஸ்த்ரீத்வத்தை, தோற்றேன் - இழந்தேன் இனி - இவ்வளவிலும். இவ்வவஸ்தையறிந்தே அன்னைமீர்காள் - தாய்மாரே, முனிந்து - என்னை நியமித்து, என்னிஷ்டஞ்செய்திகோளல்லீர், உங்களிஷ்டம் தலைக்கட்டிற்றில்லை, என் - என்னகாரியம். செய்தீர் - செய்தீராய்நின்றீர், என்னபிமதம்கேட்கில். அவன் - அவன், முன்னி-முற்கோலி, வந்து - வந்து, வீற்றிருந்த - எழுந்தருளியிருக்கிற, கனிந்த - பக்வபலபூர்ணமான, பொழில் - பொழிலையுடைய. திருப்பேரையிற்கே - திருப்பேரையிற்கே, என்னை - க்ரமப்ராப்தி பற்றாதவென்னை, காலம்பெற - விளம்பியாதபடி, காட்டுமின் - கொடுபோய்க் காட்டுங்கோள். (ரு)

ஆறு ;—(முனிந்து) உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப் போருமோவென்று அவர்கள் பின்னையும் தன்னைமுனிய ; (க)*ஸ்தந்யார்த்தியாய் ரோஷாந்தாலே மகடத்தைப் பாய்ந்த திவ்யசேஷ்டிதத்துக்கும் வஞ்சனையால் வந்தபேய்ச்சி மாயும்படி முலையுண்ட திவ்யசேஷ்டிதத்துக்கும், கனிந்தவிளவுக்குக் கன்றெறிகைக்காக விளங்கனியைக் குறித்துப் பார்த்தருளின பார்வைக்கு மென் பெண்மைதோற்றேன். நீங்களினியென்னை முனிந்துசெய்வதென்; என்னுடைய வரவுபார்த்து முன்னமேபோய் அவன்வீற்றிருந்த நிரவதிகபோக்யமான சோலையையுடைத்தான தென்திருப்பேரையிலே கொண்டுபோய் அவன்பக்கலிலே யென்னை யிண்டக்காட்டிக்கொடுங்கோளென்கிறாள் (ரு)

ஈடு ; அவ ;—ஐந்தாம்பாட்டு. "இங்ஙனே விரைகை ஸ்த்ரீத்வத்துக்குப் போராதுகாண்" என்று தாய்மாரலைக்க ; அதுவும்பண்டே போயிற்று. ப்ரயோஜநமில்லாத தசையிலே கொடுபோகநில்லாதே, என்னையேற்கவே கொடுபோய்த் தென்திருப்பேரையிலே விடுங்கோளென்கிறாள். முனிகிறது தான் எனக்கு ஹிதம்பார்த்தே, ஆனாலென் ஹிதத்திலே ப்ரவர்த்திக்கப் பாருங்கோள்.

(முனிந்தித்யாதி) என்னினைவுதன்னை புத்திபண்ணுங்கோள், அவன் முனிவிலே யகப்பட்ட நான் இனியுங்கள் முனிவுக்கு மீளுவனே. ஹிதமுமாய் ப்ரியமுமான முனிவிலே யகப்பட்ட நான் அஹி

(க) வி பு-ரு-கூ-க.

தமுமாய் அப்ரியமுமான வுங்கள் முனிவுக்கு மீளுவனே. (முனிந்து சகடமுதைத்து) முலைவரவு தாழ்த்ததென்று சீறி நீட்டின திருவடிகளுக்கிலக்காய்ப் பொடிபட்டதாயிற்று சகடம்; * (க) ஸ்தநந்த்யாயீஸ்ருசரோகஸ-ஸ்தந்யார்த்தீ ப்ரருரோதஹ விறே. (மாயப்பேய் முலையுண்டு) "முலையைநினைத்துச்சீறினன்" என்று முலை கொடுக்கத்தாய் வடிவுகொண்டுவந்த வஞ்சகையான பேய்ச்சியை முடித்து. (மருதிடைபோய்) முலையுண்டால் தவழுமத்தனையிறே. புறம்பு நின்றும் வந்துநலிகை யன்றிக்கே, நின்றவிடத்தே நின்று தப்பாமேகொல்ல நினைத்த யமளார்ஜுநங்களைப் பொடிபடுத்தி.

(கனிந்தவித்யாதி) அஸுராவேசத்தாலே ஒன்று கனிந்தவிளவாய், ஒன்று கன்றாய்நின்றது ; அதிலேயொன்றையிட்டொன்றையெறிந்து இரண்டையும் முடித்த. (கண்ணபிரானுக்கென்பெண்மைதோற்றேன்) அழியுமவற்றையுமழித்தான், அழியாதவற்றையுமழித்தான். வன்மையாலே யழித்தானவற்றை ; * (கண்ணபிரானிறே ;) மென்மையாலே யழித்தானிவற்றை. (பிரானுக்கு) அவற்றின் கையில் தானகப்படாதே தப்பித்தன்னைத் தந்த வுபகாரத்துக்கெழுதிக்கொடுக்கிறாள்காணும்.

சேஷியான தன்னையுண்டாக்கி, என்னைசேஷத்வத்தினுடைய வெல்லையிலே நிறுத்தினன்.(உ)"பஹூநி மெவ்யதீதாநிஜந்மாநி" என்கிற வவதாரங்களோபாதி பரப்புப்போருங்காணும் இவ்வவதாரத்தில் இவளைப் பெறுகைக்குப்பண்ணின ப்ரவ்ருத்திகளுமவனுக்கு. ஆச்ரிதவாத்ஸல்ய கார்யமான முனிவிறே. (கண்ணபிரானுக்கென் பெண்மைதோற்றேன்) (௩) "யஸ்மாத்க்ஷரமதீதோஹ மக்ஷராதபி சோத்தம: - அதோஸ்மிலோகேவேதேசப்ரதித: புருஷோத்தம:" என்றும், (௪) "ஜாநாதிபுருஷோத்தமம்" என்றுஞ்சொல்லுகிற தன்னுடைய பும்ஸ்த்வத்தைக் காட்டிக்காணும் இவளுடைய ஸ்த்ரீத்வத்தை யபஹரித்தது. (பெண்மைதோற்றேன்) தோலாததுதோற்றேன்.

(முனிந்தினி இத்யாதி) இனி மீட்கலாமென்றோ! நினைக்கிறது. மீட்கநினைக்கிற நீங்கள் அவனுடைய வபதாநங்களுக்கு முன்னேயன்

(க) வி-பு-௫ ௬-க. (உ) கீதை-௪-௫
(௩) கீதை கரு-க௮. (௪) கீ-கரு-கக.

ரோ மீட்கப்பார்ப்பது. (என்செய்தீர்) எனக்கநுகூலைகளானீரல்லீர், மீட்கத்தொடங்கினது தலைக்கட்டிற்றன்று. (அன்னைமீர்காள்) ஜந்ம ப்ரப்ருதி யென்ப்ரக்ருதியறிந்து போருகிறநீங்கள் மீட்கப்பார்ப்பதே. "அவன்பண்ணின வுபகாரங்களை யறியாமையிறே நீங்கள் பொடிகிறது. அவன்பண்ணின வுபகாரம் மறக்க வொண்ணாதாகில் நினைக்கிறாய், பெற்றுவளர்த்த வெங்களுடைய வுபகாரமும் நினைக்க வேணுங்காண்" என்ன (முன்னியவன்வந்துவீற்றிருந்த) உபகாரத்தில் முற்பாடனவன் காணுங்கோள். (முன்னி) முற்பாடனாய்நின்று, (க)"வை-ஹிவ-ஜ-பூர்வஜ" என்னும்படியே யென்னைப்பெறுகைக்கு அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு தன்வேறுபாடுதோற்றவிருக்கிற.

(கனிந்தபொழிலித்யாதி) கொண்டுபுக்குக் காட்டுவார்தாழ்வே, அங்குள்ளதெல்லாம் பக்வபலமாயிருக்கும். கனிந்தமரங்கண்டால் "அஸாராவேஸமுண்டு" என்றஞ்சவேண்டாதசோலை. (காலம்பெறவென்னைக்காட்டுமினே) இக்குடிக்குமெனக்கும் பரிஹாரமொன்றேயிறே. பின்னையு மென்னையங்கேகொண்டுபோய்ப் பரிஹரிக்கை தவிரீகோள்; நானுளேனாகபோதே அத்தைச்செய்யப்பாருங்கோள். பின்னை * மதஜஸெ ஸெ த-வைம்யஃ-கதேஜலே ஸேது பந்தமாகாமே, நான்ஜீவிக்குமெல்லையிலேகாட்டுங்கோள். (௫)

---

## ஆறாம்பாட்டு.

காலம்பெறஎன்னைக்காட்டுமின்கள் காதல்கடலின்மிகப்பெரிதால் * நீலமுகில்வண்ணத்தெம்பெருமான் நிற்கும்முன்னேவந்து என்கைக்கும்எய்தான் * ஞாலத்துஅவன்வந்துவீற்றிருந்த நான்மறையாளரும்வேள்வியோவா* கோலச்செந்நெற்கள்கவரிவீசும் கூடுபுனல்திருப்பேரையிற்கே. (௬)

ப.—அநந்தரம், உதாரஸ்வபாவனானவன் ஸந்நிஹிதனாய் வைத்து ஸம்ஶ்லேஷப்ரதனல்லாமையாலே அபிநிவேஶம் கரைபுரண்டு செல்லாநின்றது, அவனிருக்கிற தேஶத்திலே சடக்கெனக் கொடுபோங்கோளென்கிறாள்.

(இ-ள்.) நீலமுகில் - காளமேகம்போலே, வண்ணம் - உதாரஸ்வபாவமான வடிவழகைக்காட்டி, எம் - என்னை யடிமைகொண்ட, பெருமான்-ஸ்வா

(உ) ஜித-ஸ்தோ-கக.

மியானவன், முன்னே - என்முன்னே, வந்து - வந்து, நிற்கும் - உருவெளிப் பாடாம்படி நில்லாநிற்கும், வந்தவன் தானே மேல்விழுந்தணையாதொழிகை யன்றியே, என் - என், கைக்கும் - கைக்கும், எய்தான் - எட்டாதபடி அம்மே கம்போலே தூரஸ்தனாகாநிற்கும்; ஆகையாலே, காதல் - காதலானது, கட லில் - * கடல்புரையுமளவன்றியே, மிக - மிக, பெரிது - பெரிதாயிராநின் றது, ஆனபின்பு, ஞாலத்து - பூமியிலே. வந்து - அவ்வடிவழகோடேவந்து, அவன் - அவன், வீற்று - தன்னௌதார்யந் தோற்றும்படி இருந்த - இருக்கு மிடமாய், அங்குவர்த்திக்கிற, நான்மறையாளரும் - சதுர்வேதிகளான விலக்ஷ ணபுருஷர்களும், வேள்வி - தத்தாராதநரூபமான வைதிகாநுஷ்டாநத்தில், ஓவா - ஓவாதே நடக்கும்படியாய், கோலம் - தர்ஶநீயமான, செந்நெற்கள் - செந்நெற்கதிர்கள், கவரி - கவரிபோலே, வீசும் - அசையும்படியுமாய், கூடி ததநுரூபமாகச்சேர்ந்த, புனல் - ஜலஸம்ருத்தியையுமுடைய, திருப்பேரை யிற்கே - திருப்பேரையிற்கே, என்னை - விளம்பாக்ஷமையானவென்னை, கால ம்பெற - கடுக, காட்டிமின்கள் - கொடுபோய்க் காட்டுங்கோள். (௬)

ஆறு ;—(காலம்பெற) " வேட்டைக்கெழுந்தருளினவந்தனே யன்றோ, இப்போதே யெழுந்தருளுகிறானிறே, இங்ஙனே பதறவே ணுமோ " என்று அவர்கள்சொல்ல ;

எனக்கு அவன் திறத்திலுள்ள வபிநிவேஶவெள்ளத்துக் கொருமுடிவில்லை ; நீலமேகநிபமான திவ்யரூபத்தினுடைய வழ காலே யென்னைத்தோற்பித் தடிமையாக்கினவன் என்கண்களிலே வந்துதோற்றாநிற்கும், என்கைக்கு மெய்தான். பரமபுருஷ ஸமா ராதநைகவேஷ நித்யநைமித்திகாதி ஸர்வகர்மாநுஷ்டாந நிரத ராய் வேதவிதக்ரேஸரான திவ்யஜநங்களாலே ஸததபரிபூர்ணமாய் அதிரமணீயபரிணதஶாலி சாமரங்களாலே வீஜ்யமாநமாய், ஸுப்ர ஸந்நஸலில தாம்ரபர்ணீ ஸரித்பரிவ்ருதமாயிருந்த திருப்பேரை யிலே யெனக்காகவெழுந்தருளியிருந்த பெரியபெருமாள் பக்கலிலே காலம்பெற வென்னைக்காட்டுமின்களென்று தன்னுடைய வன்னை மாரை நோக்கிச்சொல்லுகிறாள். (௬)

ஈடு; அவ;—ஆறும்பாட்டு. நீங்கள் " கொடுபோவோமோ ! அல்லோமோ" என்று விசாரிக்கும் தசையன்றிக்கே, எனக்கபிநிவே ஶமானது அறமிக்கது ; எனக்கிங்குத்தரிப்பரிது, ஈண்டெனவென்

னைத் தென்திருப்பேரையிலே கொடுபுக்கு மகரநெடுங்குழைக்காத னைக்காட்டுங்கோளென்கிறாள்.

(காலம்பெறவென்னைக்காட்டுமின்கள்)குடிக்குப் பரிஹாரமன்றாகிலும் எனக்குப் பரிஹாரம் இதல்லதில்லை; இனி யென்மேல் குற்றமில்லை. என், இப்படிக் கடுகவேண்டுவானென்னென்னில் (காதல் கடலின் மிகப்பெரிதால்) இக்காதல் அளவுப்பட்டோ விருக்கிறது. முதற்சொன்ன வார்த்தையைக்காணுங்கோள் நீங்கள் நினைக்கிறது. * கடல்புரையவென்றாளே. ஒருகாரியப்பாட்டாலே விளைந்ததுபோலன்றிறே உகப்பாலேவிளைந்ததிருப்பது.

ஆனாலும் காதலையளவுபடுத்தி, நாங்கள் சொல்லுகிற வார்த்தையைக்கேட்டு எங்களோடே யொழுகவேண்டாவோவென்ன (நீல முகில்வண்ணத்தெம்பெருமான்) நானுங்கள் வழியேபோகவோ, இவன்வழியேபோகவோ. என்னையப்படி சேர்த்துவிடவந்து முன்னேநிற்க, நான்மீளும்படியென். அப்படியாலே அவன்துவக்காநிற்க, உங்கள் வார்த்தையைக்கேட்கவோ. ப்ரமஹரான வடிவைக்கொண்டு முன்னேநின்று காதலுக்கு வர்த்த(ய-ச)காநின்றான். இக்காதலையொருபடியே வளர்க்கிறதிறே; (க) * கடல்புரையவிளைவித்த தும்காரமர்மேனியிறே. (நிற்கும்முன்னேவந்து) இவன்கிட்டநின்றிலனாகில் நானுங்கள் வார்த்தையைக்கேட்டு மீளேனோ. ஆனாலுனக்குப்பொல்லாதோவென்ன (என்கைக்குமெய்தான்) அழகிதிறே யெனக்கிப்படிதரப்பெறில. வார்த்தைசொல்லுதல், அணைத்தல் செய்யாமையேயன்று; என்கைக்கு மெட்டுகிறிலன்.

இனி நீசெய்யப்பார்த்ததென்னென்ன; உருவெளிப்பாடன்றியிலே கண்ணாலேகண்டநுபவிக்கலாம்தேசத்திலே போகப்பார்த்தேன் (ஞாலத்தவன்வந்துவீற்றிருந்த) தூரப்போய்க்காணவேண்டாதபடி, பரமபதத்தி லைஶ்வர்யமெல்லாமிங்கே தோற்றும்படியிருந்த, (நான்மறையாளரும் வேள்வியோவா) வேதார்த்தவித்துக்களும் ஸமாராதநத்திலே நிரந்தரமாக ப்ரவ்ருத்தரானார்கள். என்னோடு ஸஜாதீயரும், தந்தாமுக்கு வகுத்த கைங்கர்யம்பெற்று வர்த்தியாநிற்பார்கள்.

---

(க) ரு-௩-ச.

(கோலச்செந்நெலித்யாதி) வ்ருஷ்ட்யநாதி விஷயமாக அங்குள்ளார்க்கு யத்நிக்கவேண்டாதே யிருக்கை. அவையாநுஷங்கிக பலமாய் வருமத்தனை. (க) "நீள்செல்வப்வேண்டா தான்றன்னையே தான்வேண்டும்" என்றும், (உ) "அங்கங்கேயவைபோதரும்" என்றும் சொல்லக்கடவதிறே; தர்ஸநீயமான செந்நெற்களானவை அங்குத்தைக்குக் கவரிவீசினாப்போலே யசையாநிற்கும். (கூடு புனல்திருப்பேரையிற்கே) ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம், இவை மூன்றுங்கூடியிருக்கையாலே ஜலஸம்ருத்தியை யுடைத்தாயிருக்கை. (திருப்பேரையிற்கே - காலம்பெறவென்னைக்காட்டுமின்கள்) என் விடாய்தீர ப்ரமஹரமான தேஸத்திலே கொடுபோய்ப் பொகடப்பாருங்கோள். அங்குள்ள செந்நெலுக்கு நீர் தாரகமா யிருக்குமா போலே யிவளுக்கு மவ்வூரில் காட்சியே தாரகமாயிருக்கிறபடி. (௬)

---

## ஏழாம்பாட்டு.

பேரெயில்சூழ்கடல்தென்னிலங்கை செற்ற பிரான்வந்துவீற்றிருந்த * பேரையிற்கேபுக்குஎன்னெஞ்சம்நாடிப் பேர்த்துவரவெங்கும்காணமாட்டேன் * ஆரை இனிஇங்குடையம்? தோழீ! என்னெஞ்சம்கூவவல்லாரும்இல்லை * ஆரையினிக்கொண்டுஎன்சாதிக்கின்றது? என்னெஞ்சம்கண்டதுவேகண்டேனே. (எ)

*அநந்தரம், ப்ராப்திக்கு ப்ரபலப்ரதிபந்தகமான லங்காநிரஸநத்தைப் பண்ணினவன் வர்த்திக்கிற தேசத்திலே சென்று புக்க நெஞ்சு மீளவரக்காண்கிறிலேன், நானுமினியங்கே போமித்தனையென்கிறாள்.*

(இ-ள்.) பேர் - பெரிய, எயில் - மதிளாலே சூழ் - சூழப்பட்டு, கடல் - அதுக்ககழான கடலையுடைத்தாய், தென்-கட்டளைப்பட்ட, இலங்கை - இலங்கையை, செற்ற - செறுத்தழியச்செய்த, பிரான் - உபகாரகனானவன். வந்து- ப்ரமந்தீருகைக்காகவந்து, வீற்று - அந்தவீரஸ்ரீதோன்றும்படி, இருந்த - எழுந்தருளியிருக்கிற, பேரையிற்கே - திருப்பேரையிற்கே, புக்கு - சென்றுபுக்கு, என் - என். நெஞ்சம் - நெஞ்சமானது, நாடி - அவனைத்தேடி, பேர்த்து - மீண்டு, எங்கும் - ஓரிடத்திலும், வர - வர. காணமாட்டேன்-காண்கிறிலேன், இனி - ஆனபின்பு, தோழீ-என்னோடு ஸமது:கையாயிருக்கிறதோழீ. இங்கு-

(க) பெருமாள் திரு-டு-௯. (உ) பெரியா-திரு-டு-க-௪.

இவ்வவஸ்த்தையில், நியமிக்கிற தாய்மாரையும் பழிசொல்லுமூராரையுமொழிய, துணையாக, ஆரை - ஆரை, உடையம் - உடையோம், போன, என் - என், நெஞ்சம் - நெஞ்சை, கூவ - அழைத்துத்தர, வல்லாரும் - வல்லாரும், இல்லை - இல்லை இனி - நெஞ்சு தவாதே நீயும் தளர்ந்தபின்பு, ஆரை - ஆரை, கொண்டு - கொண்டு, என் - என்னப்ரயோஜநத்தை, சாதிக்கின்றது - ஸாதிப்பது, ஆகையாலே, என் - என், நெஞ்சம் - நெஞ்சு, கண்டதுவே - கண்ட விஷயத்தையே, கண்டேன் - நானும்கண்டுவிட்டேன்.

நாடியென்று - நாட்டம்பெற்றென்றுமாம். (எ)

ஆறு;—(பேரெயில்சூழ்) உனக்கவன்பக்கலுள்ள வடிவிவேஷம் நிரவதிகமாயிருந்ததாகிலும் அவனே யெழுந்தருளுமளவு மிங்கே யிருக்குமத்தனை, அங்குப்போகையுக்தமன்றென்று தோழி சொல்ல;

அத்யுச்ச்ரித ப்ராகார ஜலதிபரிகா (வா)பரிவ்ருதமான லங்கையிலே ராவணனை, * ஸபுத்ரஜநபாந்தவமாகக் கொன்றருளி விஜயலக்ஷ்மீபரிவ்ருதனுய்க்கொண்டு தென்திருப்பேரையிலே யெழுந்தருளியிருந்த விருப்பைக் கண்ட நெஞ்சு இன்னம் மீண்டுவாராது; எனக்கிங்கொரு துணையுமில்லை, துணையானவென்னெஞ்சை யழைக்க வல்லாருமில்லை. இங்காரைக்கொண்டென்ன புருஷார்த்தம் ஸாதிப்பது, இனியென்னெஞ்சுபுக்க தேசத்திலே போய்ப்புகுமித்தனையென்று தன் தோழியைக்குறித்துச் சொல்லுகிறாள்.

ஈடு; அவ;—(க) ஏழாம்பாட்டு. (க)" அஹமேநாநுகமிஷ்யாமி லக்ஷ்மணேநாகதாம்கதிம்" — அஹஞ்சாநுகமிஷ்யாமி லக்ஷ்மணேந கதாம்கதிம்" என்ற பெருமாளைப்போலே யிப்பிராட்டியும்; என்னெஞ்சு தரிக்கைக்கு விரகுபார்த்துத் திருப்பேரையிலே புக்காப்போலே நானுமங்கேபுகுமத்தனை யென்கிறாள். (பேரெயிலித்யாதி) கீழிலளவுகள்குலைந்த பின்பு இனி நான் செய்யப்பார்த்ததிதுவென்கிறாள்.

(பேரெயில்)-பெரியமதிள். (சூழ்கடல்) இம்மதிளுக் கழாம்படி அம்மதிளைச்சூழ்ந்த கடலையுடைத்தாய், கேட்கவஞ்சும்படியான வூரை மூலையடியே நடக்கப்பண்ணின வுபகாரகன். (வந்துவீற்றிருந்த) அப்போதுமுகம் மாறவைத்த விழவுதீர வணைக்கலாம்படி கிட்

(க) ரா-உத்த-

டவந்திருக்கிற. (௧) "விமலஸஸாங்கநிபாநநா - விமலஸஸாங்க நிபாநநா" என்கிறபடியே-எப்போது பெருமாள் முகம்வைக்கவொண்ணுதபடி கொடியரா யிருந்தார், அவ்வளவிலுமிவள் மறுவற்ற சந்த்ரமண்டலம்போலே முகத்தில் குளிர்த்திமாறுதே யிருந்தாள். (௨) [தீபோநேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருடம் - தீபோநேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸிமேத்ருடம்] இதுக்காள வந்தா ரருளிச்செய்யும்படி- "நேத்ரதோஷத்தால் வந்ததுபோக்கி, தீபதோஷத்தால் வந்ததன்று" என்று.

(செற்றபிரான் வந்து வீற்றிருந்த) ப்ரதிகூலநிரஸநம் பண்ணி விடாய்த்து வந்திருக்கும். (௩) "ஐ... பர்த்தாரம் பரிஷஸ்வஜே - பர்த்தாரம் பரிஷஸ்வஜே" என்னும்படியே ஸிஸிரோபசாரம்பண்ணப் போகவேணும். (பேரையிற்கே யித்யாதி) அவனிருந்த திருப்பேரையிலேபுக்குத்தேடி யென்னெஞ்சானது ஓரிடத்திலும் மீண்டு வரக்காண்கிறிலேன். மீளவொண்ணுத லங்கையிலே புக்க திருவடியும் மீண்டுவந்தான், அணித்தான விவ்வூரிலே புக்க நெஞ்சு மீண்டு வரக்காண்கிறிலேன். நெஞ்சுங்கூடவாராதபின்பு அவன் வாராமை சொல்லவேண்டாவிறே, நெஞ்சின்வரவுபார்த்துக் கண்மறைந்து காணு மிவள் நிற்கிறது. (மாட்டேன்) கண்டு ஜீவியாதே நானிங்ஙனே முடிந்து போமித்தனையாகாதே.

அபிமதன்வருந்தனையும், அவனுக்காக வ்ருத்தகீர்த்தநம்பண்ணி தரித்திருக்கவேண்டாவோவென்னில் (ஆரையினி யிங்குடையந் தோழீ) நெஞ்சுமில்லாதவன்று இனியாருண்டு. (தோழீ) "நெஞ்சிலண்ணியநாளே" என்றுயாகில், நீநீயாறுயே. இப்போது நானிங்கில்லையோ (என்னேஞ்சங் கூவவல்லாருமில்லே) நெஞ்சைமீட்கைக்கு நீவேணுமே, நெஞ்சை யவனுக்காக்கின நீ வேணுமே யெனக் காக்கும்போதும்; உன்தசையிது, உனக்குக்கால்கள் நடைதாராது. அல்லாதார்க்கு "கூட்டவேணும்" என்னும் த்வரையில்லே. ஆர் நெஞ்சையழைப்பர்.

(ஆரையினிக்கோண்டேன் சாதிக்கின்றது) ஆரைக்கொண்டு தான் ஸாதிப்பது; இனி ஸாத்யந்தானெது? நெஞ்சுமவனும் வந்தால்

(௧) ரா-யு-௧௧௭-௩௧. (௨) ரா-யு ௧௧௮-௧௭.
(௩) ரா-ஆர-௩0-௪0.

இனி நான்தானுண்டாக வேணுமே, இங்கு வெறுந்தரையாயிறே கிடக்கிறது; ஆனால் செய்யப்பார்த்த தென்னென்னில் (என்னெஞ்சங்கண்டதுவேகண்டேனே) மீளாதே நெஞ்சுபோனவழியே போகப்பார்த்தேன். (க) "ஸநெஞ்வாஹம்ஹவிஷ்யாமி லக்ஷ்மணௌநகதாம்கதிம் - அத்யைவாஹம்கமிஷ்யாமி லக்ஷ்மணேநகதாம்கதிம்" என்கிறபடியே நெஞ்சுபோனவழியே போகப்பார்த்தேன். (எ)

---

## எட்டாம்பாட்டு

கண்டதுவேகொண்டெல்லாருங்கூடிக் கார்க்கடல்வண்ணனோடென்திறத்துக்கொண்டு * அலர்தூற்றிற்றதுமுதலாக் கொண்ட என்காதல்உரைக்கில்தோழீ ! * மண்திணிஞாலமும்ஏழ்கடலும் நீள்விசும்புங்கழியப்பெரிதால் * தெண்திரைசூழ்ந்துஅவன்வீற்றிருந்த தென்திருப்பேரையில்சேர்வேன்சென்றே. (அ)

ப.—அநந்தரம், அவனோட்டை ஸம்பந்தமடியாக, ஊர்ப்பழிவிளையும்படி வந்தகாதலானது ஸர்வலோகத்தையும் விளாக்கொலைகொண்டு போகாநின்றது; ஆனபின்பு, அவனிருக்கிற திருப்பேரையிலே சென்று புகுவேனென்கிறாள்.

(இ-ள்,) கண்டதுவே - புறவாயில்கண்ட வைவர்ண்யாதிகளையே, கொண்டு - கொண்டு, எல்லாரும் - தாய்மாரோரோரோடு வாசியற வெல்லாரும், கூடி - ஒருமிடறாய்க்கூடி, கார் - கருத்த, கடல் - கடல்போலே ஶ்ரமஹரமான, வண்ணனோடு - வடிவையுடையவனோடேகூடி, என்திறத்து - என்னிடையாட்டமான ஸைதில்யத்தை, கொண்டு - அவலம்பித்துக்கொண்டு, அலர் - பழியை, தூற்றிற்றது - தூற்றினவதுவே, முதலா - ஹேதுவாக, கொண்ட - இடங்கொண்ட, என் - என், காதல் - காதல், தோழீ - அடியிலேயிதுக்கு ப்ரவர்த்தகையான தோழீ, உரைக்கில் - பாசுரமிட்டுரைக்கப்பார்க்கில், "கடலின்மிகப்பெரிது" என்றவளவேயல்ல, மண் - மண், திணி - செறிந்த-ஞாலமும் - பூமியும், அத்தைச்சூழ்ந்த, கடல் - கடல், ஏழும் - ஏழும், நீள், இவையெல்லாவற்றுக்கு மிடங்கொடுக்கும் மஹாவகாஶமான, விசும்பும் - ஆகாஶமும், கழிய - தனக்குள்ளேயாம்படியவ்வருகே, பெரிது - பெருத்திராநின்றது, ஆனபின்பு, தெள் - தெளிந்த, திரை - நீர்த்திரையை யுடைத்தாகையாலே

(க) ரா-உத்த-௯௦எ-௩

ஸ்ரமஹரமாய், சூழ்ந்தவன் - காதலைப்பெருக்கவளைத்தவன், வீற்றிருந்த-இரு க்கிற, தென் - தென், திருப்பேரையில் - திருப்பேரையிலே, சென்று - என் தாபமாறும்படி சென்று, சேர்வன் - சேரக்கடவேன். (அ)

ஆறு; — (கண்டதுவேகொண்டு) ஆந்தரமான வபிநிவேஶம் ஸமக்ரமாயிருக்கச்செய்தே புறம்புதோற்றுகிற மாத்ரத்தையேகொண்டு, தத்ஸௌந்தர்ய குணஜநிதமான வென்னபிநிவேஶத்தைக்குற்றமாகவுங்கொண்டு லோகமெல்லாங்கூடி " ஒருத்திக்கு எம்பெருமான் பக்கலுள்ள வபிநிவேஶமே!; இப்படி யபிநிவேஶிக்கை குடிப்பழியன்றோ " என்று என்னையலர்தூற்ற, அதடியாகக்கொண்டு கிளர்ந்தெழுந்த வென்னபிநிவேஶத்தின் பெருமை சொல்லநிலமன்று. சொல்லில், தோழீ, இவ்வலங்க்யேயமான வண்டங்களும் அளவிருந்த திருநாடும் நிறையப்பெருகி, அதுவுமிடம் போராமல் பொங்கிப்பெருகாநின்றது: ஆதலால் அவனெழுந்தருளியிருந்ததென் திருப்பேரையிலே நானேயாகிலுஞ்சென்று ஸம்ஶ்லேஷிக்கைதவிரேனென்கிறாள். (அ)

ஈடு ; அவ ;—எட்டாம்பாட்டு. எனக்கு " அவனைக்காணவேணும் " என்னுமபிநிவேஶம் " கடலில் மிகப்பெரிது " என்னுமளவன்றிக்கே, அறமிக்கது; ஆனபின்பு நீங்களாகவிசையிர்கோளாகில், தன் வேண்டற்பாடுதோற்ற வெழுந்தருளியிருக்கிற தென்திருப்பேரையிலே நான்போய்ப் புகுவேனென்கிறாள்.

(கண்டதுவேகோண்டு) அவன்பேர்சொல்லுதல், (க) " தலையில்வணங்கவுமாங்கொலோ" என்று ஒருப்ரணாமஞ்செய்தல் செய்யுமிறே; அம்மாத்ரத்தையேகொண்டு. புறவிதழ்கண்டு படுகிறபடியிதுவானால், அகவாயிலோடுகிற தறியிலென்படுவர்கள். (எல்லாருங்கூடி) பரிவரோடு, ஹிதகாமரோடு, " இவையிரண்டுந்தானென் " என்றிருப்பாரோடு வாசியறக்கூடி. பிறரைப்பழிசொல்லவெண்ணில், தம்மில் தாம் சேராதவர்களும் சேர்வர்களிறே. (கார்க்கடல்வண்ணனோடென்திறத்துக்கோண்டு) இவள் நிறம்விவர்ணமாம்போது, அவன்திறத்தே யிழந்ததாகவேண்டாவோ; கடலேறிவடிந்தவிடமென்று தோற்றுகிற தில்லையோ. என்னிடையாட்டத்தை ஶ்ரமஹரமான நிறத்தையுடையவனோடே கூட்டி.

(க) ரு-௩-எ.

(அலர்தூற்றிற்றதுமுதலாக்கொண்ட வென்காதலுரைக்கில்) இவர்கள் பேசாதேயிருந்தார்களாகில் நானும் ஸுகமேயிரேனோ. நான்பழிக்கஞ்சி மீளுவேனென்று தானும் இவர்கள் பழிசொல்லப் புக்கது (அலர்தூற்றிற்று) அலர்தூற்றினார்கள். (அதுமுதலித்யாதி) அதுதானே யடியாகக்கொண்ட வென்காதலானது ஸமுத்ரமாகப் பணைக்கப்புக்கது; (காதலுரைக்கில்) தன்காதல் தன்னாலும் சொல் லிமுடிய வொண்ணாதுகாணும். (க) "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ" என்கிற விஷயத்தைச்சொல்லிலும் இவள்காதல் பேச்சுக்குநிலமன்று. இக்காதலுக்கு விஷயபூதனை யனையும் விளாக்குலைகொள்ளவற்றான காதலிறே. (உ) "சுடர் ஞானவின்பம்" என்று - பகவதாநந்தத்தைச் சொல்லிவைத்து, "அதனிற்பெரியவென்னவா" என்றதிறே.

(தோழீ) இக்காதலைவிளைக்கைக்கு நீபண்ணும் க்ருஷியறிதி யிறே. இதிருந்தபடிபாராய்; (மண்டிணிஞாலமித்யாதி) "காதல் கடலில்மிகப்பெரிதால்" என்றவிடம் - ஓராதே சொன்னோம்; ஆனாலெங்ஙனே சொல்லும்படியென்னில்; பெரியவற்றில் பெரிய தென்னுமித்தனையல்லது, ஒருபாசுரமிட்டுச் சொல்லலாவதில்லை. மண்ணாலே நெருங்கின பூமியென்றபடி. அத்தையும் சூழ்ந்தகட லேழும், அவற்றுக்கெல்லா மவகாசமான வாகாசமும், இவை யித் தனைக்கு மவ்வருகுபட்டிருக்கை.

இப்படி காதல்கரைபுரண்டால் செய்யப்பார்த்த தென்னென்ன (தெண்டிரையித்யாதி) இக்காதல் மறுநனையும்படியான விஷயமிருந் தவிடத்தே போய்ப்புகுமத்தனை; தெளிந்ததிரைகளாலே சூழப்பட்டு அவன்வீற்றிருந்த தென்திருப்பேரையிலே போய்ப்புகுமத்தனை. (௩) "தஸ்யாஸ்தீரேஷு நந்தாநி ஷண்டாநி ச ஹிம்ஸானி ச விஹங்கஸம்ப்ரவதிதாநி வநான்யுபவநானி ச । தஸ்யோபவந ஷண்டேஷு நாநாபுஷ்பஸுகந்திஷு । விஹ்ருத்யஸலிலக்லிந்நாதவா ங்கேஸமுபாவிஶம்" என்கிறபடியே அநுபவயோக்யமான தேசத் திலேபோய்ப் புகக்கடவோம். (சேர்வன்சென்றே) இனிப்பகட்டால் தீராது, புக்கல்லது விடேன். ஆள் விடுதல், அவன் வரவுபார்த்தி

(க) தை-ஆந-க. (உ) ௧௦-௧௰-௧௦.

(௩) ரா-ஸு-௩அ-கசு.

ருத்தல் செய்யேன். (சென்றே-சேர்வன்) இனியெதிரே அவன்வரி னும் மீளேன். அவனைச்சேருகையன்று உத்தேஶ்யம், அங்கே சென்று கிட்டுகை. (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

சேர்வன்சென்றுஎன்னுடைத்தோழிமீர்காள்! அன்னையர் காள்! என்னைத்தேற்றவேண்டா * நீர்களுரைக்கின்றது என் இதற்கு? நெஞ்சும்நிறைவும்எனக்கிங்கில்லை* கார்வண்ணன்கார்க்கடல் ஞாலமுண்ட கண்ணபிரான்வந்துவீற்றிருந்த * ஏர்வளவொண் கழனிப்பழனத் || தென்திருப்பேரையின்மாநகரே. (கூ)

ப —அநந்தரம், ப்ரளயாபத்ஸகனானவன் வர்த்திக்கிற தேசத்திலே சென்று புகத்தவிரேன், நீங்களென்னைத் தேற்றி யுரைக்கிறதுக்கு ப்ரயோஜந மில்லையென்று தோழிமாரையும் தாய்மாரையும்பார்த்துச் சொல்லுகிருள்.

(இ-ள்.) என்னுடை - எனக்குஸமாந து:கைகளாயிருக்கச்செய்தே ஹிதஞ்சொல்ல வொருப்பட்ட, தோழிமீர்காள் - தோழிமீர்காள், அன்னையர்காள் - ஹிதபரைகளாயேபோருமன்னைமீர்காள், என்னை-என்னை, தேற்றவேண்டா - தேற்றவேண்டுவதில்லை, இதற்கு - இந்தவவஸ்த்தைக்கு, தேறுகைக்குறுப்பாக, நீர்கள் - நீங்கள், என் - என்னவார்த்தை, உரைக்கின்றது - சொல்லுவது, நெஞ்சும் - தேறியிருக்கைக்கடியானநெஞ்சும், நிறைவும் - பூர்த்தியும், எனக்கு - எனக்குறுப்பாம்படி, இங்கு - இங்கு, இல்லை - இல்லை, அவையங்கேயானபின்பு தேற்றமுமங்கேபோயிற்று, ஆதலால் நெஞ்சையும் நிறைவையுமபஹரிக்கைக்கடியான, கார் - ஶ்யாமளமான, வண்ணன் - வடிவையும், கார்க்கடல் - ப்ரளயாபந்நமான, ஞாலம் - ஜகத்தை, உண்ட - அமுதுசெய்த வாபத்ஸகத்வத்தையும், பிரான் - ஆஶ்ரிதோபகாரகமான பவ்யதையையுமுடைய, கண்ணன் - க்ருஷ்ணன், வந்து - வந்து, வீற்றிருந்த - இருக்குமிடமாய், ஏர் - ஏரினுடைய, வளம் - மிகுதியையுடைத்தாய், ஒண் - தர்ஶநீயமான, கழனி - கழனியையும், பழனம் - நீர்நிலங்களையுமுடைத்தான, தென், திருப்பேரெயில் - திருப்பேரெயிலாகிற, மாநகர் - மஹாநகரத்தை, சென்று - சென்று, சேர்வன் - கிட்டிவிடக்கடவேன். (கூ)

---

|| (பா) திருப்பேரெயில்.

ஆறு ;—(சேர்வன்சென்று) "இப்போதே தானே யெழுந்தருளுகிறானிறே, இப்படிப்பதறவேணுமோ" என்றும், "போகைதானுமீடல்ல" என்றும் தோழிமாருமன்னையருஞ்சொல்ல ; நீங்களென்னையொன்றும் தேற்றவேண்டா. "போகைக்குநீங்கள் சொல்லுகிற விரோதமென் ; போனால் வரக்கடவ விரோதமுண்டோ" என்றிவள்சொல்ல, "உன்னுடைய தைர்யசாதுர்யாதிகளுக்குப்போராது" என்று அவர்கள்சொல்ல, அவனுடைய ஸௌந்தர்யஸௌசீல்யகாருண்யாதி குணங்களாலே யென்னுடைய தைர்யசாதுர்யாதிகள் அபஹ்ருதங்களாயிற்றின ; ஆதலால், அதிஸம்ருத்தமாய திரமணீயமாய் என்னோடு ஸம்ஶ்லேஷிக்கைக்காக அவன் வந்தெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே சேர்வன் சென்றென்கிறாள். (௯)

ஈடு; அவ;—ஒன்பதாம்பாட்டு; நீங்களினியென்னைத் தேற்றிப் ப்ரயோஜநமில்லை, தென்திருப்பேரையிலே போய்ப் புகக்கடவேனென்கிறாள்.

(சேர்வன்சென்று) உன்னாற்றாமையாலே சில சொல்லுகிறாயாகில் இது கடைப்படவற்றோவென்ன ; அவஶ்யமங்கே புக்கல்லது விடேனென்கிறாள். (என்னுடைத்தோழிமீர்காளித்யாதி) எனக்காயிருப்பாரும், என்னைத்தங்களுக்காக நினைத்திருப்பாரு மொன்றும் சொல்லவேண்டா; தோழிமாரோடுதாய்மாரோடு வாசியில்லைகாணும் இவளைத்தேற்றப்போகாமைக்கு; அஜ்ஞரோ வ்யவஸிதரை யுபதேஶத்தாலே மீட்கப்பார்ப்பார். விஷயாதீநமாக வருகிறத்தை ஸாதநத்திலே சிலவெழுதுகிறவர்களோ வெனக்கு வார்த்தைசொல்லுவார். இவள்தன்னை மறந்து, அவனையே பார்த்துப் பேசுகிறாள் ; அவர்கள் அவனைமறந்து, தந்தாமையே பார்த்துமீட்கத் தேடுகிறார்கள்.

(நீர்களுரைக்கின்றதேன்னிதற்கு) கலங்கினாரோ ! தெளிந்தாரைத்தேற்றுவார். நீங்கள் நிற்கிற நிலையெது, என்னிலையெது. போகையிலே துணிந்திருக்கிறவென்னை, "புறப்படுகைபழி" என்றிருக்கிற நீங்கள் சொல்லுவதென் (இதற்கு) எனக்கோடுகிறதைக்கு. ஆனாலும், நெஞ்சுமடக்கமுமுடையார்க்கு இதுவார்த்தையோ; நாங்கள்சொன்னபடி செய்து எங்கள் வழியேயொழுகவேண்டாவோவென்ன (நேஞ்சுநிறைவுமேனக்கிங்கில்லை) அதுவேணுமாகிலங்கே போய்ச்சொல்லுங்கோள். மநஸ்ஸும் அடக்கமும் அவன்பக்கலின. நிறைவாவது-அடக்கம். நெஞ்சாவது-அது இட்டுவைக்கும் கலம்.

(கார்வண்ணனித்யாதி) நெஞ்சும் நிறைவுமெனக்காம்படியா யோ அவன்படியிருக்கிறது, (கார்வண்ணன்) தாய்மார் தோழிமாரா னவர்கள் வார்த்தைகேளாதபடியாக வடிவுபடைத்தவன். வெறும் வடிவழகேயோ வுள்ளதென்னில் (கார்க்கடல் ஞாலமுண்ட)' தளர்ந் தார்தாவளம். ஆபத்துவந்தால் ரக்ஷித்துவிடுமத்தனையோவென்னில் (கண்ணபிரான்) தன்னைப் பிறர்க்காக்கிவைக்கு முபகாரகன். (வந்து வீற்றிருந்த) தன்னைஸ்வர்யமெல்லாந் தோற்றும்படியிருந்த.

(ஏரித்யாதி) ஏரினுடைய ஸம்ருத்தியையுடைத்தாய், அழகி தான கழனியையும் நீர் நிலங்களையுமுடைய திருப்பேரெயிலாகிற மாநகரிலே-சென்று-சேர்வன். உங்கள் தடைக்குமீளுதல், அவ்வழி யில் நிற்றல் செய்யேன். என்னைத்தேற்றவேண்டா. வளமென்று-மிகுதிக்குப்பேர். (௯)

---

## பத்தாம்பாட்டு.

நகரமும்நாடும்பிறவும்தேர்வேன் .நாணெனக்கில்லை என்தோ ழிமீர்காள்! * சிகரமணிநெடுமாடநீடு தென்திருப்பேரையில்வீற்றி ருந்த * மகரநெடுங்குழைக்காதன்மாயன் நூற்றுவரை அன்றுமங்க நூற்ற * நிகரில்முகில்வண்ணன்நேமியான் என் நெஞ்சம்கவர்ந்து எனையூழியானே ? (௧௦)

ப.—அநந்தரம், ஆஶ்ரிதவிரோதி நிரஸநஶீலனாய்த் திருப்பேரையிலேயி ருந்த மகா நெடுங்குழைக்காதன் என்னெஞ்சை யபஹரித்து அநேககாலமுண் டு, அவனிருந்த நகரத்தோடு நாட்டோடு மற்றுமுள்ள தேசங்களோடு வாசியற நானேபுறப்பட் டாராயக்கடவேன், எனக்கு லஜ்ஜையில்லை யென்கிறாள்,

(இ-ள்.) என் - எனக்கு, தோழிமீர்காள் - தோழிமாரென்று பெயராய் ஹிதஞ்சொல்லி நியமிக்கத்தேடுகிறவர்களே; சிகரம் - சிகரங்களையுடைத்தாய், மணி - மணிமயமாய், நெடு - ஓங்கின. மாடம் - மாடங்களையுடைத்தாய், நீடு - சிரகாலஸ்த்தாயியான, தென் - தென், திருப்பேரையில் - திருப்பேரையில், வீற்றிருந்த - எழுந்தருளியிருக்கிற, மகரம் - மகராகாரமான, நெடு - பெரிய, குழை - ஆபரணத்தையுடைய, காதன் - கர்ணபாஶங்களையுடையனாய், மாயன் - அவ்வாபரண ஶோபையோபாதி ஆஶ்சர்யங்களான குணசேஷ்டிதங்களையுடை யனாய், நூற்றுவரை - ஆஶ்ரிதவிரோதிகளான துர்யோதநாதிகளை, அன்று-

பாரதஸமரம் ப்ரவ்ருத்தமானவன்று, மங்க - நசிக்கும்படி, நூற்ற - மந்த்ரித்து, அத்தாலே, நிகர் - ஒப்பு, இல் - இல்லாத, முகில் - காளமேகநிபமான, வண்ணன் - வடிவிற்புகரையுடையனாய், நேமியான் - ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான திருவாழியையுடையனானவன், இவ்வபதாநத்தைக்காட்டி, என் - என், நெஞ்சம் - நெஞ்சை, கவர்ந்து - அபஹரித்துக்கொண்டு, எனையூழியான் - எத்தனைகாலத்தான், ஆனபின்பு, நகரமும் - அவனிருந்தநகரமும், நாடும் - அத்தோடு சேர்ந்த நாடும், பிறவும் - மற்றுமுண்டான பத்தநாதிகளும், நானே, தேர்வேன் - போயாராயக்கடவேன், நாண் - "இவர்கள் பழிக்கும்படி யிவர்கள் ஸந்நிதியிலே போரும்படியென்" என்கிற ஸ்த்ரீத்வப்ராயுக்தமான லஜ்ஜை, எனக்கு - எனக்கு, இல்லை - இல்லை. (கo)

ஆறு ;— (நகரமும்) அவனெழுந்தருளியிருந்த தென்திருப்பேரையிலே நீயே போகில் ஊரும் நாடும் மற்று மெல்லாரு முன்னைப் பழிசொல்லாரோவென்று தோழிமார் சொல்ல ;

"அவர்களையிறே நான் தேடுகிறது" என்றிவள் சொல்ல, "பழிசொன்னாலுனக்கு லஜ்ஜையாகாதோ" என்று பின்னையும் தோழிமார்சொல்ல; அவனுடைய நிரதிஶயாஶ்சர்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணங்களாலும், அவனுடைய வாஶ்சர்ய திவ்யசேஷ்டிதங்களாலும் என்னுடைய நெஞ்சும் லஜ்ஜையு மபஹ்ருதமா யெத்தனைகாலமுண்டு ; ஆதலாலினித்தென் திருப்பேரையிலே நானேயாகிலும் போமத்தனையென் றத்யவஸிக்கிறாள். (கo)

ஈடு ; அவ ;—பத்தாம்பாட்டு. "இருந்ததே குடியாக நாட்டாருன்னைப் பழிசொல்லார்களோ" என்று தோழிமார்கள் சொல்ல ; அவர்களன்றோ வெனக்குத் தேட்டமென்கிறாள்.

(நகரமுநாடுமித்யாதி) உன் துணிவு துணிவாக, நாட்டார் நகரத்தார் மற்றுமுள்ளாரு மெல்லாமறிந்து பழிசொல்லுகிறார்களிறே யென்ன; எனக்குத்தான் அவனையோதேட்டம்; நகரம், நாடு, பத்தநாதிகள், இவற்றிலுள்ளாருடைய பழியேயன்றோ வெனக்குத் தேட்டம். (தேர்வேன்) தேடுகிறேனென்றபடி. நீங்கள் சேரிகோளாகில் அவன் தானாகவாராநாகில், அவனுடனே கூட்டிப் பழிசொல்லுகிற விவர்களன்றோ ஸத்தையை நோக்குகிறார்கள் ; "அலரெழிலாருயிர் நிற்கும்" என்றானிறே; பிறவும் - மற்றுமுள்ளனவும்.

(நாணெனக்கில்லை) லஜ்ஜை யிங்கில்லாமையேயன்று, அங்குப் போறுலுமில்லை; இவ்வ்யக்திதன்னில் முதலிலே யில்லாமை. (என் தோழிமீர்காள்) இது நானுங்களுக்குச் சொல்லி யறியவேண்டும் படியாவதே.

(சிகரமித்யாதி) பர்வதஶிகரங்களைக் கொடுவந்து வைத்தாப் போலே ஒக்கமுடைத்தாய், ரத்நமயமான மாடங்களையுடைய பெரிதான தென்திருப்பேரையிலே வீற்றிருந்த. (மகரநெடுங்குழைக்காதன்) மகராகாரமான பெரியவாபரணத்தையுடைய கர்ணபாஶங்களையுடையவன். அவனுடைய வோரோவவயவங்களிலே படிந்தாரை மீட்கலாயோவிருப்பது. (மாயன்) சொல்லிச்சொல்லாத தேஹகாந்தியையு மாத்மகுணங்களையும் நினைக்கிறது. (மாயன்) ஆஶ்ரிதபக்ஷபாதம். (நூற்றுவரையன்று மங்கநூற்ற) சிலரை யழிக்கநினைத்தால், ஒன்றும் சேஷியாதபடி யழிக்குமவன். துர்யோதநாதிகளை பாரதஸமரம் ப்ரவ்ருத்தமானவன்று நசிக்கும்படி மந்த்ரித்த.

(நிகரில்முகில்வண்ணன்) ஒப்பில்லாத காளமேகம்போலேயிருக்கிறவடிவழகு; இத்தால் - விரோதியைவளர்த்தாலும் விடவொண்ணாதவடிவழகென்கை. (நேமியான்) ஆஶ்ரிதவிரோதிகளைப் போக்கும்போது பகலை யிரவாக்கும் பரிகரத்தையுடையவன். திருவாழியைக் கொண்டு பீஷ்மாதிகளையும் தொடராநிற்குமிறே. (நிகரில் முகில்வண்ணன் நேமியான்) துர்யோதநாதிகளுக்கு மின்னுமிடியுமாய், பாண்டவர்களார்த்திதீர வர்ஷித்து நின்றபடி. அவனுன் விரோதிகளைப் போக்கிக் கூடநினையாதபின்பு, அவன் தானே வந்து உன்காலிலே விழும்படி மந்த்ரித்தாலோ வென்ன (என்னெஞ்சங்கவர்ந்தெனையூழியானே) அதுக்கிடான பரிகரமிழந்து நானெத்தனை காலமுண்டு. வடிவழகையு மாயுதச்சேர்த்தியையுங் காட்டி யென்னெஞ்சை யபஹரித்துப்போ யெத்தனைகாலத்தான். (எனையூழியானே) அநேககல்பமுண்டு. துர்யோதநாதிகளை வெல்ல வெண்ணினாப்போலே என்னெஞ்சை யபஹரிக்கைக் கெத்தனைகாலமெண்ணினானே. (௧௦)

## பதினோராம்பாட்டு.

ஊழிதோறூழி உருவும்பேரும் செய்கையும்வேறவன்வையம் காக்கும் * ஆழிநீர்வண்ணனை அச்சுதனை அணிகுருகூர்ச் சடகோபன்சொன்ன * கேழிலந்தாதி ஓராயிரத்துள் இவை திருப்பேரையில்மேயபத்தும் * ஆழியங்கையனை ஏத்தவல்லாரவர் அடிமைத் திறத்தாழியாரே.

ப —அநந்தரம், இத்திருவாய்மொழியைச்சொல்லி ஸ்துதிக்கவல்லவர்கள் பகவத்கைங்கர்யத்தி லவகாஹநத்தையுடையவராவரென்று பலத்தையருளிச் செய்கிறார்.

(இ-ள்.) ஊழிதோறூழிதோறு - கல்பந்தோறும் கல்பந்தோறும், பேருமுருவுஞ்செய்கையும் - நாமரூபவ்யாபாரங்களை, வேறவன் - வேறாகவுடையனாய்க்கொண்டு, வையம் - ஜகத்தை, காக்கும் - ரக்ஷிக்குமவனாய், ஆழிநீர் - ஸமுத்ரஜலம்போலேபசுத்த, வண்ணனை - அஸாதாரணவிக்ரஹத்தையுடையனாய், அச்சுதனை - ரக்ஷ்யவர்க்கத்தை நழுவவிடாதவனானவனை, அணி - ஜகத்துக் கலங்காரமான, குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்த, கேழ் - ஒப்பு, இல் - இல்லாத, ஓரந்தாதி, ஆயிரத்துள், திருப்பேரையில் - திருப்பேரையில், மேய - சேர்ந்த, இவைபத்தும் - இப்பத்தைக் கொண்டு, ஆழியங்கையனை - கையுந்திருவாழியுமான ஸர்வேஶ்வரனை, ஏத்த - ஸ்துதிக்க, வல்லாரவர் - வல்லரானவர்கள், அடிமைத்திறத்து - ஶேஷவ்ருத்திவிஷயத்தில், ஆழியாரே - அவகாட(ஹ்ரு)ரே. (௧௧)

இது - எண்சீராசிரியவிருத்தம்.

ஆறு :—(ஊழிதோறூழி) ப்ரதியுகம் பிந்நரூப நாமசேஷ்டிதனாய்க்கொண்டு ஸ்வாஸாதாரண திவ்யரூபேணவதீர்ணனாய் ஆஶ்ரிதரை ரக்ஷித்த நளும் ஸ்வபாவனாயிருந்த வச்சுதனை யணிகுருகூர்ச்சடகோபன் சொன்ன, ஸகலகுணங்களாலும் நிருபமமாயிருந்த திருவாய்மொழியில் தென்திருப்பேரையைச்சொன்ன வித்திருவாய்மொழியைக்கொண்டு, அவனுடைய, திருவாழியுங்கையுமாயிருக்குமழகை யேத்தவல்லார், திருவாழிபோலேயொக்க வடிமைசெய்யப் பெறுவாரென்கிறார் (௧௧)

ஈடு;—நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றார் பகவத்கைங்கர்யத்திலே மிகவு மவகாஹித்தாரென்கிறார்.

(ஊழியித்யாதி) ஆஸ்ரித ரக்ஷணார்த்தமாக, கல்பந்தோறும் கல்பந்தோறும், திருமேனியும் திருநாமமும் சேஷ்டிதங்களும் வேறு படக் கொள்ளுமவன் இதுக்குப்ரயோஜநமென்னென்னில் (வைய ங்காக்கும்) ஜகத்ரக்ஷணார்த்தமாக. (ஊழிதோறூழியித்யாதி) அப்ப டியே ரக்ஷித்திலனாகில் இப்படி விஸ்வஸிப்பாரில்லையே யிவனை "ரக்ஷ கன்" என்று. (ஆழிநீர்வண்ணனை) நோக்காதே படுகொலையடுக்கி லும் விடவொண்ணாதவடிவு; வேறுபடாதே யங்குள்ளார்க்குக் காட்சிகொடுக்கு மஸாதாரண விக்ரஹத்தைச் சொல்லுகிறது. (அச் சுதனை) அவ்வடிவு தனக்கொருநாளு மழிவில்லையென்னுதல், பற்றி னாரை யொருநாளும் விடானென்னுதல்.

(அணிகுருகூர்) ஆபரணமானதிருநகரி. (கேழிலந்தாதி) ஒப்பி ல்லாத வந்தாதி. தம்மாலும் பிறராலும் மீட்கவொண்ணாதபடி பக வத்விஷயத்திலுண்டான வ்யவஸாயத்தைச்சொன்ன பத்தாகையா லே ஒப்பின்றிக்கே யிருக்கிறபடி. ஒப்பில்லாத வாயிரத்துள் திருப் பேரையிலே சேர்ந்த விப்பத்தைக்கொண்டு (ஆழியங்கையனையேத்த வல்லார்) இதெல்லாவற்றாலும் சொல்லிற்றாயிற்று - கையுந்திருவா ழியுமானவழகிலே யிவரகப்பட்டபடி. அல்லாதவழகுக ளொருபடியு மிதொருபடியுமாயிருக்கை; இது கைமேலே யநுபவித்துக்காண லாமே. (அவரடிமைத்திறத்தாழியாரே) அடிமைவர்க்கத்தில் திரு வாழியின் தன்மையையுடையவரென்னுதல், அடிமையிடையாட்ட த்தி லொருவரால் மீட்கவொண்ணாதபடி யுட்புகுவரென்னுதல். (௧௧)

ஏழாம்பத்தில் மூன்றாந்திருவாய்மொழி முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

## ஏழாம்பத்து

## நான்காந்திருவாய்மொழி

### ஆழியெழ - ப்ரவேஶங்கள்.

ஆரு;—(ஆழியெழ) இப்படி தென்திருப்பேரையிலே தாமே போகவத்யவஸித்திருந்த ஸமயத்தில் (க) "यदा व्रजति सङ्ग्रामं ग्रामार्थे नगरस्य वा । गत्वा सौमित्रिसहितो नाविजित्य निवर्तते ॥ सङ्ग्रामात् पुनरागम्य कुञ्जरेण रथेन वा । पौरान् स्वजनवन्नित्यं कुशलं परिपृच्छति - யதாவ்ரஜதிஸங்க்ராமம் க்ராமார்த்தே நகரஸ்யவா । கத்வா ஸௌமித்ரிஸஹிதோ நாவிஜித்யநிவர்த்ததே ॥ ஸங்க்ராமாத்புநராகம்ய குஞ்ஜரேண ரதேநவா । பௌராந்ஸ்வஜநவந்நித்யம் குஶலம்பரிப்ருச்சதி" என்னும் ப்ரக்ரியையாலே தென்திருப்பேரையிலே ம்ருகயார்த்தமாக வெழுந்தருளின பெரியபெருமாள் விஜயலக்ஷ்மீ பரிவ்ருதராய்க்கொண்டெழுந்தருளினபடியைக்கண்டு நிரதிஶயப்ரீதியுக்தராய் ஸம்ப்ராந்தமாநஸராய்க்கொண்டு, (உ) "तं दृष्ट्वा शत्रुहन्तारं महर्षीणां सुखावहम् । बभूव हृष्टा वैदेही भर्तारं परिषस्वजे - தம்த்ருஷ்ட்வாஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் । பபூவஹ்ருஷ்டாவைதேஹீ பர்த்தாரம்பரிஷஸ்வஜே" என்னும் ந்யாயத்தாலே ப்ரதிகூலநிரஸநஜநிதஶ்ரமத்துக்கு ஶிஶிரோபசாரமாகப் பெரியபெருமாளோடே ஸம்ஶ்லேஷித்து, ததீய திவ்யசேஷ்டிதங்களைச்சொல்லி; என்னப்பன் செய்தருளினபடியென்? பிரான்செய்தருளினபடி யென்னென்றநுபவிக்கிறார். *

ப.—நாலாந்திருவாய்மொழியில், விஶ்லேஷஜநிதமான, வார்த்தியாலே ப்ராப்தித்வரையை யுடையவிவர்; தம்முடைய வார்த்திஹேதுவான ப்ரபல ப்ரதிபந்தகங்களைப் போக்குகைக்கு, ஸர்வஶக்தியான ஸர்வேஶ்வரனையொழிய ஸமர்த்தரில்லையென்றறுதியிட்டு; அவனுடைய த்ரைவிக்ரம வ்யாபாரத்தையும், அம்ருத மதநத்தையும், பூம்யுத்தாரணத்தையும், ஜகந்நிகரணத்தையும், பாரதஸமரப்ரவர்த்தகத்வத்தையும், ஹிரண்யவதத்தையும், லங்காபங்கத்

(க) ரா-அயோ-உ-௩எ.     (உ) ரா-ஆர-௩௦-௪௦.

தையும், பாணயுத்தத்தையும், ஜகத்ஸ்ருஷ்டிப்ரகாரத்தையும், கோவர்த்தநோ த்தாணத்தையு மநுஸந்தித்து, ஏவம்விதவிஜயாபதாநவிஶிஷ்டனான ஸர்வே ஶ்வரனுடைய விரோதி நிரஸந ஸாமர்த்த்யத்தை யநுஸந்தித்தருளுகிறார்.

ஈடு;—கீழிற்றிருவாய்மொழியில் - பகவத்விஷயத்திலே இவர் அபஹ்ருதசித்தரானபடி சொல்லிற்று; கீழிவர்க்குப் பிறந்த வவஸா தம், ஒன்றைக்கொடுத்து மாற்றுதல், ஒருவராலே பரிஹரித்தல் செய்யுமதொன்றன்றிறே; "இனியிவர்க்குச் செய்யலாவதென்" என்றுபார்த்தருளி, "ஒன்றுகொடுக்கலாவது இதுக்குமேலில்லை யிறே" என்றுபார்த்துத் தன்னுடைய விஜயபரம்பரைகளைப் பத் தும்பத்தாகக் காட்டிக்கொடுக்கக் கண்டநுபவித்து ஹ்ருஷ்டரா கிறார்.

அவனுக்குறுப்பாமன்று தாமும்வேண்டி, அவனுக்குறுப்பா காதவன்று தாமும் வேண்டாவென்றிருக்கும் ;—* வளவேழுலகி லாழ்வாரிறே இவர்தாம்; தம்மையழியமாறியும் அத்தலைக்கு நன் மைதேடுமவரிறே; இப்படி யிவர் ப்ரக்ருதி யறியுமவனாகையாலே, தன்னுடைய வபதாநங்களைக்காட்டி யிவருடைய விழவெல்லாந் தீரும்படி ஸமாதாநம்பண்ண, அநுபவித்துத் தலைக்கட்டுகிறார். பூத காலத்திலுள்ளவையடங்கலும் ஸமகாலத்திற்போலே ப்ரத்யக்ஷ விஷயமாம்படிபண்ணிக்கொடுத்தான். அடியிலே யிவர்தாம் ஸாக்ஷா த்கரிக்கவல்லராம்படி பண்ணிக்கொடுத்தானிறே. * மயர்வறமதி நலமருளினபின்பும் இவ்வளவும்வர வாஸநைபண்ணுவித்தானே, ஆகையா லிவர்க்கொரு குறைகளில்லையே.

அன்றிக்கே, கீழே "பேரெயில்சூழ்கடல் தென்னிலங்கை செற்றபிரான்" என்று - ராமாவதாரவிஜயம் ப்ரஸ்துதமாகையா லே, அவ்வழியாலும் எல்லாவவதாரங்களிலுமுண்டான விஜயங்களை யநுஸந்தித்து; ராமாவதாரத்தில் விஜயங்களைக் கண்டுகக்கும் சக் ரவர்த்தியைப்போலவும், க்ருஷ்ணாவதாரத்தில் விஜயங்களைக் கண் டுகக்கும் ஸ்ரீவஸுதேவரைப்போலவும் இவருமுகந்துபேசுகிறு ரென்னுதல்.

(க) [ஸஹம்வை-ந: - அஹம்புந:] என் ப்ரக்ருதியை யறிந்து என்வழியே போந்தநீ, "பெருமாள்காடேறப்போக" என்றால்

(க) ரா-அயோ-கஉ-கoடு.

நான் ஜீவிப்பேனென்று சொன்னாயே. [தேவகுமாரரூபம் - தேவகுமாரரூபம்] அதுகிடக்க, இவரையே நீதான் "காடேறப் போக" என்கிறது. "இவர்க்குமவ்வளவேயோ" என்று சிறியாத்தான் கேட்க, "'கணணெச்சிலாம்' என்று தரம்போராதாரையொப்பாகச் சொல்லி ரிஷி கரிபூசுகிறான்" என்கிறார். [அலங்க்ருதம் - அலங்க்ருதம்] அத்தாலும் வெறும்புறங்கிடீர் ஒருபோலி சொல்லலாவது; ஒப்பித்தாலொக்கச் சொல்லலாவாரில்லை. [தம்ஸ்தம் - தம்ஸ்தம்] இவனுக்கிரண்டுபடியும் உத்தேச்யமாயிருக்கிறபடி. [ஆவ்ராஜந்தம் - ஆவ்ராஜந்தம்] புஷ்பமலரும்போது எங்குமொக்கப் பிறக்கும் விகாஸம்போலே. அதுவும் வண்டைநோக்கியிறே யலருவது, இவரும் போக்தாக்களைக் குறித்திறே. [நந்தாமீத்யாதி - நந்தாமீத்யாதி] கண்டபடியே யிருக்கச்செய்தே, காணாதுகண்டாரைப்போலேயாயிற்று நாடோறும் நாடோறும் க்ஷணந்தோறும் க்ஷணந்தோறுமுகக்கும்படி. [தர்மநேந - தர்ஶநேந] அணைத்தல், வார்த்தைசொல்லுதல் செய்யவேண்டா; காட்சியேயமையும். கரைபுரண்டவநுபவமுள்ளவிடத்திற்போலேகாணும் ப்ரயோஜநம். (க) * ஸதாபஶ்யந்தி - ஸதாபஶ்யந்தியிறே. [பவாமித்ருஷ்ட்வாசபுநர்யுவேவ - பவாமித்ருஷ்ட்வாசபுநர்யுவேவ] அறுபதினாயிரம் ஸம்வத்ஸரம் வயஸ்ஸைப்புக்கு வ்ருத்தனான சக்ரவர்த்தி, பெருமாளைக்கண்டபின்பு, பெருமாளுக்கும் தனக்கும் வாசிதெரியாதபடியானான். (உ) "காமனைப்பயந்தகாளை" என்னுமாபோலே. தன்னையநுபவிப்பாரையும் தன்னைப்போலேயாக்கி யுஜ்ஜீவிப்பிக்கும் விஷயம்போலேகாணும். (ங) "யுவேவவஸுதேவோபூத் விஹாயாப்யாகதாம்ஜராம் - யுவேவவஸுதேவோபூத் விஹாயாப்யாகதாம்ஜராம்" என்னும்படியானாரிறே ஸ்ரீ வஸுதேவரும்.

"கீழே 'கண்ணபிரானுக்கென்பெண்மை தோற்றேன்' என்றுகொண்டு - இத்தலையில் தோல்விக்கு எதிர்த்தலையான வத்தலையில் விஜயங்களை யநுஸந்திக்கிறார்" என்று பிள்ளை திருநறையூரரையர் பணிக்கும்படி. *

(க) வி. ஸ.

(உ) கO-உ-அ.

(ங) வி. பு ரு-உO-ருஉ.

## முதற்பாட்டு.

ஆழியெழச் சங்கும்வில்லுமெழ * திசை
வாழியெழத் தண்டும்வாளுமெழ * அண்டம்
மோழையெழ முடிபாதமெழ * அப்பன்
ஊழியெழ உலகம்கொண்டவாறே. (க)

ப;—முதற்பாட்டில், திருவுலகளந்தருளின ப்ரகாரத்தை யநுஸந்தித்து ஸந்துஷ்டராகிறார்.

(இ-ள்.) திருவுலகளந்தருளவளருகிறபோது, திவ்யாயுதங்கள், பரிவாலே, (க) "ஸ்ப்புராயுத: – ஸ்ப்புராயுத:" என்கிற கணக்கிலே, ஆழி - ப்ரதாநனை திருவாழியாழ்வான், எழ - முன்னேயுயர்ந்துதோன்றவும், அநந்தரம், சங்கும் - ஸ்ரீபாஞ்சஜந்யமும், வில்லும் - ஸ்ரீஸார்ங்கமும், எழ - தோன்றவும், தண்டும் - கதையும், வாளும் - நந்தகமும், எழ - தோன்றவும், இவ்வாயுதபூர்த்தியைக் கண்டுகந்து, (உ) "ஸமைஸ்ஸுராணாம் – ஸங்கைஸ்ஸுராணாம்" என்கிறபடியே. திசை - திக்குத்தோறும் நின்றநின்ற நிலையிலே வாழி - தேவமநுஷ்யாதிகளுடைய மங்களாஸாஸநகோஷம், எழ - கிளம்பும் படியாகவும், அவிளம்பமாக வளர்ந்தபடியாலே, அண்டம் - அண்டகபாலம் பிளந்து, ஆவரணஜலம், மோழை - குமிழி, எழ - கிளம்பும்படியாகவும், வளர்ந்தருளின சடக்காலே, முடி - திருமுடியும், பாதம்-எடுத்ததிருவடியும், எழ - ஒக்கக்கிளம்பும்படியாகவும், ஆஸுரப்ரக்ருதியான மஹாபலி யபிமாநம்நடந்த காலம்போய், ஊழி - விலக்ஷணகாலம், எழ - கிளம்பும்படியாகவும், அப்பன் - ஸர்வஸ்வாமியான ஸர்வேஸ்வரன், உலகம் - லோகத்தை, கொண்ட - அளந்துகொண்ட, ஆறு - ப்ரகாரம். ஏ - இருந்தபடியே.
மோழை - குமிழி. (க)

ஆறு:—சதுர்த்தஸபுவநாந்தர் வர்த்திகளான ஸர்வாத்மாக்களினுடைய ஸம்ஸ்தாயமாநனாய், ஸ்ருஷ்ட்யந்தமென்னும்படி பிதுரிதாண்டபித்திகமாக ஸம்வர்த்தி(யி-6)த திவ்யாவயவ திவ்யாயுதோபேதனாய்க்கொண்டு என்னப்பன் மஹாபலியைஜயித்து லோகத்தை யளந்துகொண்டருளினபடி யென்னென்கிறார். (க)

ஈடு ; அவ ;—முதற்பாட்டு; அவையெல்லாவற்றுக்கு மடியாக, திருவுலகளந்தருளின பெரிய விஜயத்தை யநுஸந்திக்கிறார்.

---

(க) வி-பு-ரு-ஒ-கஎ. (உ) வி-த-ாங்கள்யஸ்தவ.

(க) " தேவாஸ்ஸ்வஸ்தாநமாயாந்தி நிஹதாதைத்யதாநவா: । நயம்விஜித்ய தேசிஞ்ஜித் தம்பகவதாஜகத் - தேவாஸ்ஸ்வஸ்த் தாநமாயாந்தி நிஹதாதைத்யதாநவா: ॥ நயம்வித்யதேகிஞ்சிஜ்ஜி தம்பகவதாஜகத் " என்கிறபடியே தனக்காக்கிக்கொண்ட செயலி றே. ராவணனைப்போலே யெதிரியாக்கிக்கொல்லாதே, குணலவமு ண்டாகையாலே நின்றநிலையிலே தோற்பித்துக்கொண்டபடி.

நாயகனுக்கு அடியாரிறே வென்று கொடுப்பார் (ஆழியெழ) " த்ரைலோக்யத்தையும் காற்கீழேயிட்டுக்கொள்ளவேணும் " என் னும் கறுவுதலுள்ளது ஸர்வேஶ்வரனுக்கேயிறே, அவ்வபிஸந்தியின் றிக்கே யிருக்கச்செய்தேயும் அவனுக்குமுன்பே பரிகரம் முற்பட் டபடி. " காட்டுக்குப்போம் " என்றுநியமித்தது பெருமாளையே யாயிருக்க, இளையபெருமாள் முற்பட்டாப்போலே. (உ) " பூர்வஜஸ்யா நுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத: - பூர்வஜஸ்யா நுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத: " என்றுகொண்டுபோக்குக் கீடாக முற்கோலி யலங்கரித்துக்கொண்டு நின்றாரிறே. (ஆழியெழ) தோற்றத்திலே யரசுபோராயிற்று; * ஹேதிராஜனிறே-திவ்யாயு தங்களுக்கெல்லாம் ப்ரதாநமிறே திருவாழி.

பரிகரம்நிற்க மஹாராஜர் ராவணன்மேலே பாய்ந்தாப்போலே' " பையல்முடியுந்தானுமாய்ப் பெருமாள்திருமுன்பேநிற்பதே, ஈரர சாயிற்றோ " என்றுபொறாமையாலே மேல்விழுந்தாரிறே. (ங) [ அதஹரிவரநாத: - அதஹரிவரநாத:] தம்மோடொக்கவினைசெய்ய வல்லபேர் 'தனித்தனியேயநேகரிறே [ப்ராப்யஸங்க்ராமகீர்த்திம் - ப்ராப்யஸங்க்ராமகீர்த்திம்] இவர்களோடுகூடி நின்றொத்தபோராக வொண்ணாது; தாசித்தலையிலே யோரேற்றம்செய்து தரம்பெற வேணுமென்றிருந்தார். பூசல்தலையிலே பெருமாளுக்குண்டான கீர்த்தியையும் தந்தலையிலே யேறிட்டுக்கொண்டார். [நிபிசாபதிம் - நிபிசரபதிம்] அத்தலையிலு மவனோடொக்க வினைசெய்ய வல்லாரநேகரிறே. " அவன்கீழ்த்திரியுமவர்கள் தரம்போரார் " என்று அவன்றன்னோடே பொருதபடி. [ ஆஜௌ - ஆஜௌ ]

(க) வி-பு-                (உ) ரா-ஸு-ஙங-உக.

(ங) ரா-யு-சO-உ

அவர்களைப்போலே வழியல்லாவழியே யிளைப்பிக்கையன்றிக்கே செவ்வைப்பூசல்செய்திளைப்பித்தபடி [யொஜயிதா ஶ - யோஜயித்வாஸ்ரமேண] இதுக்கு முன்பு கூடாதத்தொன்றேடே கூட்டினர். [ககந திவி ஸாலமலங்கயித்வா - ககநமதிவிஶாலம்லங்கயித்வா] பரப்பையுடைத்தான வாகாஶத்தைத் திறலாலே வருத்தமறக்கடந்தார், [அர்க்கஸூநுः - அர்க்கஸூநுः] மீட்சியில் தம் வரவு தெரியாதபடிமீண்டார். பிறப்புக்கிடாகச்செய்தார். தன்னிலமிறே; ஆதித்யனேரிடத்தினின்று மோரிடத்தேறப்போம்போது தெரியாதிறே. [ஹரிவர கணமத்யே - ஹரிவரகணமத்யே] "இவர்களிலொரு வ்யாவ்ருத்திதோற்றவொண்ணுது" என்று இவர்கள் நடுவேநின்றார். [ராமபார்ஶ்வம் ஜகாம - ராமபார்ஶ்வம்ஜகாம] தூசித்தலையிலே மதிக்க வொருவினைசெய்தாரன்றே முன்னிற்கப்பெறுவார்" என்று பெருமாள் பார்ஶ்வத்திலே வந்துநின்றார்.

(ஆழியெழ) "ஆயிரக்காதம் பறப்பதின்குட்டி ஐஞ்ஞூற்றுக்காதம் சிறகடிக்கொள்ளும்" என்னுமாபோலே முற்கோலிவளர்ந்தபடி. சிறகடிக்கொள்ளுகை யாவது - பின்புதூரப்பறக்கைக்கு யோக்யமாம்படி பால்யத்திலேயப்யஸிக்கை. பயஶங்கையில்லாதவிடத்தேயிருந்து பயப்படக்கடவார், பயஸ்தாநத்தைக்கண்டால் பேசாதிரார்களிறே. பயஶங்கையில்லாதவிடத்தும் பயப்படப்பண்ணுகிறது விஷயவைலக்ஷண்யமிறே. துர்யோதநகோஷ்டியிலே க்ருஷ்ணனெழுந்தருளினபோது அவர்கள்பண்ணின வஞ்சநத்தைக்கண்டு அதிஶங்கைபண்ணி, தம்முடைய திருமாளிகையில்படுக்கையையும் தடவிப்பார்த்தாரிறே; (க) "ஸம்ஸ்ப்ருஶந்நாஸநம் ஶௌரேர்விதுரஸ்ஸமஹாமதிः - ஸம்ஸ்ப்ருஶந்நாஸநம் ஶௌரேர்விதுரஸ்ஸமஹாமதிः" என்கிறபடியே - கடல்கலங்குவது தன்னளவிலேயிறே. பிள்ளையுறங்காவில்லிதாஸர் "'மஹாமதி:' என்றது - மதிகேடரென்கிறபடியோ" என்றார். பிள்ளைதாம் பெருமாளெழுந்தருளும் போது எங்கேனுமொரு சலநம்பிறக்கில் நம்ப்ராணனைவிடுமத்தனை" என்று சொட்டையையுருவிப்பிடித்துக்கொண்டு ஸேவிப்பராம்; நம்முதலிகள் அத்தைக்கண்டு இவரை "மஹாமதிகள்" என்றழைப்பர்கள். அறிவுண்டாகையாவது - பகவத்விஷயத்திலே மதி

---

(க) பா. உத்.

கெடுகையிறே. (ஆழியெழ) இவன் வளர்ந்தருளுகைக்குக் கணிசித்த படியைக்கண்டு, "தனியாகவொண்ணாது" என்று பயப்பட்டுத் திருவாழியாழ்வா னொருகையாலேயேறினார்.

(சங்கும்வில்லுமெழ) தூசியேறினவர்கள் பொரப்புக்கவாறே நின்றவிளவணி கலங்கி மேலேநடக்குமாபோலே, மற்றையாழ்வார்களும் மற்றைக்கையிலே யேறினார்கள். இரைபெறுதவிடத்தேயிருந்து சீறுபாறு என்னக்கடவவர்கள் இரையுள்ள விடத்திலொருவர்க் கொருவர் விட்டுக்கொடார்களிறே. இனத்திலே யொருவன் ஜீவிக்கக்கண்டவாறே பந்துவர்க்கம் வந்து மேல்விழுமாபோலே, மற்றை திவ்யாயுதங்களும் மேல்விழுந்தபடி. (க) [இடங்கைவலம்புரிநின்றார்ப்ப] இவனுடைய வடிவழகை யநுஸந்தித்து ஸ்ரீபாஞ்சஜந்யமானது நின்றார்ப்ப. [எரியித்யாதி] அவனைப்போலார்த்துக்கொள்ள வவஸரமற்று, அக்நியையுமிழ்ந்துகொண்டு, நமுசிப்ரப்ருதிகளை வாய் வாய் என்றது திருவாழி. [விடங்காலுமித்யாதி] கிடந்த விடத்தேகிடந்து ஶத்ருக்கள்மேலே விஷாக்நியையுமிழுமத்தனையிறே திருவநந்தாழ்வானலாவது. [அரவணைமேற்றோன்றல்] திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையப்ரதாநன். [திசையளப்பான் பூவாரடிநிமிர்த்தபோது] ஒருபூவைக்கொண்டாகாதே காடு மோடையு மளந்துகொண்டது. பூவையிட்டுப்பூவைக் கொண்டான் காணும். அப்படுக்கையிலே பொருந்தும் ஸௌகுமார்யத்தை யுடையவன் இக்காடுமோடையுமான ஜகத்தையளக்கப்புக்கால், இவர்களுக்கிப்படி படவேண்டாவோ. அவனிப்படியளவா நின்றால் இவர்கள் பேசாதிரார்களிறே.

(திசைவாழியெழ) "அவனுக்கென்வருகிறதோ" என்றாயிற்று திவ்யாயுதங்கள் கிளருகிறது, "அவைதனக்கென்வருகிறதோ" என்று (உ) "வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு, படைபோர்புக்கு முழங்கு மப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டு" என்றுநிற்பர்களிறே. (ங) "நின்கையில் வேல்போற்றி" என்று வேல் தனக்கும் பரியவேண்டியிருக்குமிறே. திக்குகள்தோறும் அநுகூலருடைய, "வாழிவாழி" என்கிற மங்களாஶாஸநத்வநிகள்

---

(க) உ-திருவ-௪க. (உ) திருப்பல்-க.
(ங) திருப்பாவை-உச.

ளோர். திவ்யாயுதங்களிலும் அவனுக்கு ரக்ஷை இவர்களுடைய மங்களாஸாஸநமென்றிருக்கிறார் - திவ்யாயுதங்களுக்கு நடுவே யிவற்றைச் சொல்லுகையாலே. (திசைவாழியெழ) (க) * ஏத்தவேழுலகங்கொண்ட கோலக்கூத்தனிறே. (உ) " த்ரிவிக்ரமக்ரமாக்ராந்தத்ரைலோக்யஸ்ஸ்புராயுத: - த்ரிவிக்ரமக்ரமாக்ராந்தத்ரைலோக்யஸ்ஸ்புராயுத: "

(தண்டேம்வாளுமெழ) " தூசித்தலையில் அவர்களே கைதொடராய்த் தரம்பெற்றுப்போக வொண்ணாது " என்று நின்றபேரணியும் குலைந்து மேல்விழுமாபோலே; பிற்பட்டோம், கெட்டோம் " என்றொருவர்க்கொருவர் படுகிறபடி; ஒருவர்க்கிட்ட சோற்றைப் பலராசைப்படுமாபோலே காணுமிவர்கள் படுகிறபாடு. அநுகூலன்வந்துபுகுர, (ங) " வத்யதாம் - வத்யதாம் " என்கிறவர்கள், ப்ரதிகூலருள்ளவிடத்தில் பேசாதிரார்களிறே. (ச) "என்னிதுமாயமென்னப்ப னறிந்திலன் । முன்னியவண்ணமேகொண்டளவாய்" என்று நழுசிவந்து, என் பிதா உன்வஞ்சநமறிந்திலன். நீமுன்புபோலே நின்றளக்கவேணுமென்று திருவடிகளைக் கட்டிக்கொண்டு கிடந்தானிறே. அன்றேபிறந்து அன்றே வளர்ந்தானொருவனுடைய வ்யாபாரமிறே இதடைய; ஆகையாலே பரிகைக்கு ஹேதுவுண்டென்றபடி. (ரு) [சீராற்பிறந்தித்யாதி] உன்கையிலேபருத்திபட்ட பன்னிரண்டும்படுகிறபூமியை நீரேற்கும்போது இப்படிப் படவேணுமோவென்கிறார்.

(அண்டம்மோழையெழ) இந்த்ரனுக்காக த்ரைலோக்ய மித்தனையு மளந்துகொடுப்பதாக விறேயுபக்ரமித்தது; கணிச மிவ்வளவல்லாமையாலே அண்டாவகாஸமுள்ள விடமெங்கும் சென்றளந்து, அண்டகடாஹத்திலே திருவடிசென்று (சு) "ஒண்மிதியிற்புனலுருவி யொருகால்நிற்ப" என்கிறபடியே கீழிலண்டகடாஹத்தை யுருவிநிற்க, கீழிலாவரணஜலம் மேலேயெழ. ஆவரணஜலத்துக்கு நடுவே யொருகழல்போலேமிதக்கு மித்தனையிறே அண்டம். "ரக்ஷகமானசெயலே பாதகமாகிறதோ" என்றஞ்சவேண்டும்படியிறே

(க) உ-உ-கக. (உ) வி-பு-ரு-ரு-கஎ.
(ங) ரா யு-கஎ-உஎ. (ச) பெரியா-தி-க-கஅ.
(ரு) பெரிய-திருவி. (சு) திரு-நெ-ரு.

அப்போதைக்கறுவுதல். மோழை - குமிழி. (முடிபாதமெழ) திரு வபிஷேகத்தளவும் திருவடிகள் கிளர. "முடிமேலேபாதமெழ" என்றுஞ்சொல்லுவார்கள் ந்ருத்தலக்ஷணத்துக்காக.

(அப்பனூழியெழ) மஹாபலி அப்ராப்தமாக ராஜ்யம்பண்ணுகை யால் வந்தபொல்லாக்காலமானதுபோய், நல்லடிக்காலமாயிற்று. நல் லடிக்காலம் கிளரும்படியாகவும் (அப்பன் - உலகங்கொண்டவாறே) மஹோபகாரகனான ஸர்வேச்வரன் லோகத்தைக்கொண்ட வாச்சர் யமிருந்தபடியென்னென்னுதல். அன்றியே லோகத்தைக்கொண்ட ப்ரகாரமிருந்தபடி யென்னென்னுதல். "அப்பன், அப்பன்" என்று ஹ்ருஷ்டராகிறாராகவுமாம். (அப்பன்) இந்த்ரனுக்கு ராஜ் யத்தைக்கொடுத்த செயலாலே யெனக்கு ஸத்தையைத் தந்தா னென்கிறார். (க)

---

## இரண்டாம்பாட்டு.

ஆறுமலைக்கு எதிர்ந்தோடுமொலி * அர
வூறுசுலாய் மலைதேய்க்குமொலி * கடல்
மாறுசுழன்று அழைக்கின்றவொலி * அப்பன்
சாறுபட அமுதம்கொண்டநான்றே. (உ)

ப:—அநந்தரம், அம்ருதமதந வ்ருத்தாந்தத்தையநுஸந்தித்து ஸந்துஷ்ட ராகிறார்.

(இ-ள்.) அப்பன் - மஹோபகாரகனான ஸர்வேச்வரன். தேவர்களுக்கு, சாறு - மஹோத்ஸவம், பட - உண்டாம்படியாக. கடலைக்கடைந்து, அமுதம்- அம்ருதத்தை, கொண்ட - கொண்ட, நான்று - நாள், கடைந்தவேகத்தாலே, ஆறு - ஆறுகளானவை, மலைக்கு - தனக்குப் பிறப்பிடமானமலையைநோக்கி, எதிர்ந்து - எதிரே, ஓடும் - ஓடுகிற, ஒலி-ஒலியும், அரவு-வாஸுகியாகிற பாம் பினுடைய, ஊறு - உடம்பை, சுலாய் - சுற்றி, மலை - மந்தரத்திலே, தேய்க் கும் - தேய்க்கிற, ஒலி - ஒலியும், கடைகையாலே, கடல்- கடல், மாறு-இடம் வலமாகமாறி, சுழன்று - சுழன்று, அழைக்கின்ற - கூப்பிடுகிற, ஒலி - ஒலி யும், ஆயிற்றின - ஆயிற்றின.

சாறு - உத்ஸவம்; ஸாரமுமாம். நான்று - நாள். ஊறு . உடம்பு. சுலாய் - சுற்றி. (உ)

ஆறு;—(ஆறு) கடைந்தருளுகிறபோது மலைகளிற்காட்டில்கடலுக்குகையாலே, ஆறுமலையைநோக்கி யோடுகிற வேகத்தையும், பாம்பினுடம்பைச்சுற்றி மலையைத்தேய்க்கிற த்வநியும், பர்வதத்தைவலித்தபோது இடமும் வலமுமாய்ச் சுழன்று கோஷிக்கிற கோஷமும், என்னப்பன் நீர்கோதாம்படி பசைபடக்கடைந்து அம்ருதம்வாங்கின நாள் இவையெல்லா முளவாயினவென்று ஸமுத்ர மதநப்ரக்ரியையை யநுபவிக்கிறார். (உ)

ஈடு ; அவ ;— இரண்டாம்பாட்டு; ஸமுத்ரமதந வைசித்ரியை யநுஸந்திக்கிறார்.

(ஆறுமலைக்கெதிர்ந்தோடுமொலி) கடலிலே மந்தரத்தை நட்டவாறே கடல்கொந்தளித்து, ஸஹ்யம்போய்த்தாழ்ந்துகொடுத்தது ; நீரானது தாழ்ந்தவிடத்தே யோடக்கடவதிறே ஆறுகளானவை மலையைக்குறித் தெதிரிட்டோடுகிற பாதை, த்வநியானது இவர்க்குச்செவிப்படுகிறபடி. இவர்க்குக் காலத்ரயத்திலுமுள்ளதெல்லாம் தெரியும்படியிறே அவன்வெளிச்சிறப்பித்தது. ஆறுஸஹ்யங்களை நோக்கி யெதிரேயோடுகிறவேகத்தையும். (அரவூறுசுலாய்மலைதேய்க்குமொலி) ஊறு - உடம்பு. சுலாய்-சுற்றி. வாஸுகியினுடைய வுடலைச்சுற்றிக் கடைகிறபோதைச் சரசரவென்கிற த்வநியும்.

(கடல்மாறுசுழன்றழைக்கின்றவொலி) மந்தரத்தைக்கொடுபுக்குநட்டுத்திரித்தபோது, கீழ்கடல் மேல்கடலாய்க் கிடாய்ப்பாய்த்தல்போலே திரையோடு திரைதாக்கிக்கிளருகிற வொலியும். (அப்பன்) உபகாரகன். (சாறுபட) கடலில் நீர்கோதாம்படி ப்ரயோஜநமான வம்ருதமுண்டாக. 'சாறென்று - உத்ஸவமாய், தேவஜாதிக்கு உத்ஸவமுண்டாம்படியாகவென்னுதல்; சாறுபட - விழவுபடவென்றபடி. நீரிலே ரஸமானபசைபடவென்னுதல், உத்ஸவமாம்படியென்னுதல். (அமுதங்கொண்டநான்றே) அம்ருதமதநம்பண்ணின காலத்தில் இவையெல்லா முண்டாயிற்று. (உ)

---

## மூன்றாம்பாட்டு

நான்றில ஏழ்மண்ணும்தானத்தவே * பின்னும்
நான்றில ஏழ்மலைதானத்தவே * பின்னும்
நான்றில ஏழ்கடல்தானத்தவே * அப்பன்
ஊன்றியிடந்து எயிற்றில்கொண்டநாளே. (௩)

ப;—அநந்தரம், பூம்யுத்தரண வ்ருத்தாந்தத்தை யநுஸந்தித்து ப்ரீத ராகிறார்.

(இ-ள்.) அப்பன் - தன்வடிவை யழியமாறி, ரீருக்கிறுயாதவராஹவே ஷத்தைக்கொண்ட மஹோபகாரகன், ப்ரளயார்த்தக்கதையான பூமியை, ஊன்றி - அண்டகபாலத்திலொட்டு விடும்படி குத்தி, இடந்து - இடந்து, எயிற்றில் - எயிற்றின்மேலே, கொண்ட - கொண்ட, நாள்-காலத்தில். ஏழ் - ஸப்தத்வீபரூபமான, மண்ணும் - பூபேதங்களானவை, நான்றில- நழுவாதே, தானத்த - ஸ்வஸ்த்தாநஸ்த்தங்களாயிற்றின, பின்னும் - அதுக்குமேலே, அதுக்கு தாரகமான, ஏழ்மலை - ஸப்தகுலபர்வதங்களும், நான்றில - சலியாதனவாய்க்கொண்டு, தானத்த - ஸ்வஸ்த்தாநஸ்த்தங்களாயிற்றின, பின்னும் - அதுக்கு மேலே, ஏழ்கடல் - ஸப்தஸமுத்ரங்களும், நான்றில - உடைந்தொழுகாதே, தானத்த - ஸ்வஸ்த்தாநஸ்த்தங்களாயிற்றின. (௩)

ஆறு ;—(நான்றில) என்னப்பன், ரஸாதலகதையான பூமியைத் திருவெயிற்றிலே யிடந்தெடுத்தருளினபோது, ஸப்தத்வீபங்களும் ஸப்தகுலபர்வதங்களும் ஸப்தஸமுத்ரங்களும் தந்தாமுடைய ஸ்த்தாநங்களிலே நிஶ்சலமாயிருக்கும்படி யெடுத்தருளினான்; இதென்ன வாஶ்சர்யம் என்னப்பனென்னப்பனென்கிறார். (௩)

ஈடு ; அவ ;—மூன்றும்பாட்டு; மஹாவராஹ வ்ருத்தாந்தத்தை யநுஸந்திக்கிறார்.

(நான்றிலவேழ் மண்ணும் தானத்தவே) ஏழுபூமியும் நாலாதபடி யெடுக்கை. ஸப்தத்வீபவதியான பூமியை யெடுக்கச்செய்தே, ஒன்றும் நாலாதே முன்புபோலே ஸ்வஸ்த்தாநத்திலே கிடக்கும்படி. இவன் பெரியவானைத் தொழிலைச்செய்யா நிற்கச்செய்தேயும், முன்பு போலே யொருகுறையற, உண்பாருடுப்பாராய்ச் செல்லுகிறபடி. ஆதாரமானவன்கூட நிற்கையாலே யிவற்றுக்கொரு குறை வாராதே. ஸப்தத்வீபமும் சலித்ததில்லை, ஸ்வஸ்த்தாநஸ்த்தங்களாயிற்றின.

(பின்னும்) அதுக்குமேலே. (நான்றிலவேழ்மலைதானத்தவே) பூமிக்காணியடித்தாப்போலே யிருக்கிற ஸப்தகுல பர்வதங்களும் ஒன்றுங்குலையாதே ஸ்வஸ்வஸ்த்தாநங்களிலே நிற்கும்படி. ஒரு கோத்ரஸ்கலநம் பிறந்ததில்லை. பின்னும் பின்னுமென்று வருகிற

துக்குக்கருத்து-இவற்றிலே யொரு வ்யாபாரமமையுங்கிடீர், அது க்குமேலே யிவையும் செய்தா னென்கைக்காக.

(நான்றிலவேழ்கடல்தானத்தவே) அவைதாம் காடிந்யத்தாலே குலையாதே யொழிந்த தென்னவுமாமிறே; அதுவுமில்லையிறே இது க்கு; த்ரவத்ரவ்யமிறேஜலம். அதுவும் ஸ்வஸ்த்தாநத்திலே கிடக் கும்படியாக அவற்றின் காடிந்யமும் இவற்றின் த்ரவத்வமும்ப்ர யோஜகம்; அவன் திருவுள்ளக்கருத்துயாதொன்று, அதுவேகார்ய கரமாவதென்கை.

இவையிப்படிகிடக்கிறது அவனவஹித்தனாய்க்கொண்டு ரக்ஷிக் கும்போதோ வென்னில் (ஊன்றியிடந்தெயிற்றிற்கொண்டநாளே) மறுபாடுருவத்தைக்கும்படிகுத்தி, அண்டபித்தியினின்று மொட் டுவிடுவித்தெடுத்தெடுத்து, எயிற்றிலே யெற்றிக் கொண்டு வ்யாப ரித்தபோது, (க) "மண்ணெல்லாமிடந்தெடுத்து மதங்கள்செய்து" என்கிறபடியே. அவனிப்படிமுக்யமாக ரக்ஷிக்கப்புக்கால் அவைசலிக் குமோ. அசலங்களோடு சலங்களோடுவாசியற ஸ்வஸ்த்தாநத்திலே நின்றன.

(ந)

---

## நான்காம்பாட்டு.

நாளுமெழ நிலநீருமெழ * விண்ணும்
கோளுமெழ எரிகாலுமெழ * மலை
தாளுமெழச் சுடர்தானுமெழ * அப்பன்
ஊளியெழ உலகமுண்டவூணே. (ச)

ப.—அநந்தரம், ஜகந்நிகரணத்தை யநுஸந்தித்து ஸந்துஷ்டராகிறார்.

(இ-ள்.) நாளும் - திவஸாதிவிபாகம், எழ - நிலைகுலைந்துபோகவும், நில நீரும் - ப்ருதிவீஜலங்களும், எழ - நிலைகுலைந்துபோகவும், விண்ணும் - ஆகா ஸமும், கோளும் - க்ரஹங்களும், எழ - நிலைகுலைந்துபோகவும், எரிகாலும் - அக்நிவாயுக்களும், எழ - நிலைகுலைந்துபோகவும், மலை - பர்வதங்கள், தாள் - அடி, எழவும் - பறிந்துபோகவும், சுடர்தானும் - நக்ஷத்ராதி தேஜ:பதார்த்தங் களும். எழ - குலையவும், அப்பன் - ப்ரளயாபத்ஸகனை மஹோபகாரகன், ஊளியெழ - "பசித்துண்டான்" என்றுதோன்றும்படியாக, உலகம் - லோகத் தை, உண்ட - உண்ட, ஊண் - உண், ஏ - இருந்தபடியே. (ச)

கோள் - க்ரஹம். ஊளி - பசி. "உறிஞ்சினவோசை" என்பாருமுளர்.

(க) தி-மொ-உ-ச-ந.

ஆறு :—(நாளுமெழ) * கலாமுஹூர்த்தாதிமயமான காலத்தையும், ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களையும், ஸகல குலாசலங்களையும், நக்ஷத்ர ஜ்யோதிஸ்ஸுக்களையும், ப்ரளயகால ஸலில பூராபிபூதமான ஸமஸ்த ஜகத்தையும் அநாயாஸேந ரக்ஷணம்பண்ணினாப்போலே நிரவஶேஷமாகவுண்டருளினான் என்னப்பனென்னப்பனென்கிறார். (ச)

ஈடு; அவ ;—நாலாம்பாட்டு; மஹாப்ரளயத்தில் ரக்ஷணப்ரகாரத்தை யருளிச்செய்கிறார். "'இப்போதிருக்கிறப்போலே மார்க்கண்டேயன் திருவயிற்றினுள்ளேயொன்றுமழியாதே யிருக்கக்கண்டான்' என்கிற புராணாநுரூபமாக அவாந்தரப்ரளயத்தை யிவ்விடத்தே யருளிச்செய்கிறாராகவுமாம்" என்றருளிச்செய்வர்.

(நாளுமெழ) காலவ்யவஸ்தைபோக. (க) "நாஹோந ராத்ரி: - நாஹோராத்ரி:" என்னும்படியே. எழ - போர. ஆண்டென்றும், மாஸமென்றும், நாளென்றும், கலையென்றும், காஷ்டையென்றும் சொல்லுகிறவையெல்லாம் ஆதித்யனுடைய கத்யாகதியாலே வருகிறவையிறே; வ்யவச்சேதகனை வாதித்யன் உள்ளே புக்கால் வ்யவச்சேத்யமான விவையும் போமித்தனையிறே. (நிலநீருமெழ) காரணங்களோடு கார்யங்களோடுவாசியற வுள்ளேபுக; கார்யமுள்ளவிடத்தே காரணமநுவர்த்திக்கக் காணாநின்றோம்; (உ) "மாமாயை - மங்கவொட்டு" என்று - ப்ரக்ருதிதத்த்வத்தைச்சொல்லாநிற்கச்செய்தே, "இங்கிவ்வுயிரேயப்பிரகிருதி" என்று சொல்லாநின்றாரிறே - இதுதான் காரணத்திலே போகாமைக்காக. உயிரேய்பிரகிருதியென்கிறார் - சேதநஸம்ஸ்ருஷ்டையான ப்ரக்ருதியென்று தோற்றுகைக்காக.

(விண்ணுங்கோளுமெழ) ஆகாஶமும் அங்குள்ள க்ரஹங்களுமெழ. (எரிகாலுமெழ) அக்நிதத்த்வமும் வாயுதத்த்வமும்போக. (மலைதாளுமெழ) பர்வதங்களடியோடே பறிந்துள்ளேபுக. வேர்க்குருத்தோடேபறிய. (சுடர்தானுமெழ) அநுக்தமான தேஜஸ்தத்த்வங்களுமுள்ளேபுக. (அப்பனொளியெழ) ஊளி - ஶப்தம். எழவென்றது - தோற்றவென்றபடி. ஓரோக்ஷோபங்களுண்டானால் நம்முடைய வடையவளைந்தானுக்குள்ளே புகும்போது திருவாச

(க) வி-பு-க-உ-உஉ. (உ) கo-எ-கo.

வில் பிறக்கு மாரவாரம்போலே, திருவயிற்றிற்புகுகிறபோது ப்ராணிகளுக் குண்டான ஸம்ப்ரமத்வநிகள் கிளர. அன்றியே, “ ‘இவற்றை யுறிஞ்சுகிறபோதை த்வநிகாண்’ என்றம்மாள் பணிக்கும்படி” என்றருளிச்செய்வர். அத்தால் நினைக்கிறது ஈஶ்வரத்வப் பிடாராலன்றியே பத்தும்பத்தாக வாஶ்ரிதரக்ஷணமேயா யிருக்கிறபடி. (ச)

---

## ஐந்தாம்பாட்டு.

ஊணுடைமல்லர் ததர்ந்தவொலி * மன்னர்
ஆணுடைச்சேனை நடுங்குமொலி * விண்ணுள்
ஏணுடைத்தேவர் வெளிப்பட்டவொலி * அப்பன்
காணுடைப்பாரதம் கையறைபோழ்தே. (ரு)

ப — அநந்தரம், பாரதஸமரப்ரவர்த்தகத்வத்தை யநுஸந்திக்கிறார்.

அப்பன் - ஆஶ்ரிதபக்ஷபாதியான க்ருஷ்ணன், காணுடை - தர்ஶநீயமான, பாரதம் - பாரதத்தை, கை - கைவகுத்து, அறை - பொருத, போழ்து - போது, ஊண் - பலகரமான வூணை, உடை - உடைய, மல்லர் - பெருமிடுக்கரானமல்லரானவர்கள், த்வந்த்வயுத்தம்பண்ணி, ததர்ந்த - நெரிந்துவிழுகிற, ஒலி - ஓசையும், மன்னர்-ராஜாக்களுடைய. ஆண் - வீரபுருஷரை, உடை - உடைத்தான, சேனை - சேனைகளானவை. க்ருஷ்ணபலாநுஸந்தாநத்தாலே யஞ்சி, நடுங்கும் - நடுங்குகிற, ஒலி - ஶப்தமும், விண்ணுள் - ஆகாஶத்திலே, ஏண் - தந்தாம்பதமர்யாதைகளை, உடை - உடைய, தேவர் - ப்ரதாநதேவர்கள், யுத்ததர்ஶநார்த்தமாக, வெளிப்பட்ட - வெளிப்பட்டுக்கொண்டாடுகிற, ஒலி - ஓசையும், ஆயிற்று - ஆயிற்று.

ததர்தல் - நெரிதல். (ரு)

ஆறு ;—(ஊணுடைமல்லர்) அதிபல பராக்ரமரான மல்லருடைய வித்வம்ஸந த்வநியும், ஶௌர்ய வீர்யாதி பரிபூர்ணஸைந்ய ஸஹிதரான ராஜாக்களுடைய பயஜநிதமான மஹாகோஷமும், ப்ரதிதரான ப்ரஹ்மேஶாநாதிகளுடைய ஸ்வவிஷய ஸ்துதிகோஷமுமெழும்படியாக, தர்ஶநீயமான மஹாபாரத யுத்தத்திலே அணிவகுத்து என்னப்பன்ஸாரத்யம்பண்ணினபடியென்னென்கிறார். (ரு)

ஈடு ; அவ ;—ஐந்தாம்பாட்டு; பாரதஸமர வ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறார்.

(ஊனுடைமல்லர்ததர்ந்தவோலி) ஏற்றிலக்கை பெற்றுண்கிற மிடுக்கையுடையரான துர்யோதநன் பரிகரம் தேர்க்காலிலே நெரிந்தவோசை. மல்லென்று - மிடுக்கு. மிடுக்கையுடைய பரிகரமென்றபடி. மல்லர்க்கு மிடுக்குண்டாகைக்காக தூர்த்ரவ்யங்களையும் மாம்ஸங்களையும் புஜிப்பித்து ஆட்டத்துவெளியிலே நிறுத்தினுயிற்று நலிகைக்காக; அத்தையறிந்து பையல்களைத் தேர்க்காற்கீழேயிட்டு நெரித்தபோதை த்வநி. பலத்தைப்போரப்பொலியச்சொல்லிவைத்து, ததர்ந்தவென்கிறார்காணும் - பசளைக்கலம் நெரித்தாப்போலே அநாயாஸேந நெரித்தபடியைப்பற்ற. (மன்னரித்யாதி) ராஜாக்களுடைய வாண்பிள்ளைத்தனத்தை யுடைத்தான ஸேநை, "க்ருஷ்ணன் ஸாரத்யம்பண்ணுவதாக வேறினான்" என்று கேட்டவாறே "நாம்முடிந்தோமன்றோ" என்று அவ்வளவில் குடல் குழம்பிக்கூப்பிட்டவொலி, ஆண்பிள்ளைகளான பீஷ்மத்ரோணாதிகளிறே தூசியேறினபேர்.

(விண்ணுளேனுடைத்தேவர் வெளிப்பட்டவோலி) ஸர்வேச்வரனோடொக்க இன்னாரின்னாரென்னும்படி தந்தாமைச் சமையவிட்டுக்கொண்டு அபிமாநிகளா யோரோவிருப்பிடங்களையுடையராயிருக்கிற தேவஜாதி, கண்ணுக்குத் தோற்றும்படி நின்று ஸ்தோத்ரம்பண்ணுகிற த்வநி. (க) "ஸஹ ஹாஸஸிவஸ் ஸஹ: - ஸப்ரஹ்மாஸஸிவஸ்ஸேந்த்ர:" என்றொருகோவையிலேயெண்ணலாம்படியிருக்கிறவர்கள். இந்த அந்தராஜாதிகளைத் தன்னுடனே ஸஹபடிக்கலாம்படி தன்னைத்தாழவிட்டுவைக்குமே! தன் ஸௌலப்யத்தாலே.

(அப்பன்) பூபாரநிர்ஹரணம்பண்ணினவுபகாரகன். (காணுடையித்யாதி) சக்ஷுராதி கரணங்களைப்படைத்ததுக்கு ப்ரயோஜநம் அற்றைநிலையைக்காண்கையிறே. ஸேநாதூளியும், கையுமுழவுகோலும் சிறுவாய்க்கயிறும், நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற நிலையிறே. (உ) "தோத்ர - மாம்" என்கிறநிலையிறே அது. தர்மநீய

(க) தை-நா-கக. (உ) கீதை-க அ-சுசு.

மாநபாரதம். (கையறைபோழ்து) கையுமணியும் வகுத்து அங்கோடிங்கோடுலாவிப்படைபொருத்தி, "நீங்களின்னபடி செய்யக்கடவீர்கோள். நாங்களின்னபடி செய்யக்கடவோம்" என்று கைதட்டிவிட்டபோது இத்தவதியெல்லாமுண்டாயிற்று. (ரு)

---

## ஆறும்பாட்டு

போழ்துமெலிந்த புன்செக்கரில் * வான்திசை
சூழுமெழுந்து உதிரப்புனலா * மலை
கீழ்துபிளந்த சிங்கமொத்ததால் * அப்பன்
ஆழ்துயர்செய்து அசுரரைக்கொல்லுமாறே. (சு)

ப.—அநந்தரம், ஹிரண்யவத வ்ருத்தாந்தத்தை யநுஸந்திக்கிறார்.

(இ-ள்.) போழ்து - திவஸம். மெலிந்த - க்ஷயித்தவளவிலே, புன்-இளம், செக்கரில் - செக்கர்போலே. வான் - ஆகாசமும், திசை - திக்குக்களும், சூழும் - சூழ, எழுந்து - கிளம்பி, உதிரப்புனல் - ரக்தஜலம் ஆ - ஆம்படியாக, அப்பன் - ஆஸ்ரிதோபகாரகனான நரஸிம்ஹரூபியானவன், ஆழ்துயர் - அதிமயிததுக்கத்தை, செய்து - விளைத்து, அசுரரை - அஸுரனான ஹிரண்யனை, கொல்லும் - கொல்லும், ஆறு - ப்ரகாரம், மலை - மலை, கீழ்து - கீழ்தாம்படி பிளந்த - பிளந்த, சிங்கம் - சிங்கத்தை, ஒத்தது - ஒத்திருந்தது.

புன்செக்கரில் - புன்செக்கரான ஸந்த்யாகாலத்திலென்றுமாம். (சு)

ஆறு ;—(போழ்து) பஸ்சிம ஸந்த்யாஸமயத்திலே ஸகலபுவநவிவரமும் ருதிரபூரபூரிதமாம்படி, மேருஸிகரத்திலேயேறியொரு ஸிம்ஹமானது மேருஸிகரத்தைப் பிளந்தாப்போலே, ஹிரண்யனை வ்யதிதனும்படி பண்ணி யென்னப்பன் பிளந்தருளினபடி யென்னென்கிறார். (சு)

ஈடு ; அவ ;—ஆறும்பாட்டு; ஹிரண்யவத வ்ருத்தாந்தத்தை யருளிச்செய்கிறார். (போழ்துமெலிந்த) (க) "பலிதப்ராயோ வாஸரः - பலிதப்ராயோ வாஸரः" என்னுமாபோலே, பொழுது போகாநிற்கச் செய்தே. (புன்செக்கரில்) செக்கர்வானமிடுகிறவளவிலே; அவன் வரத்திலகப்படாத ஸந்த்யாகாலத்திலே. "இராப்படற்பேன், பகல் படற்பேன்" என்று வரங்கொண்டானே. (வான்தி

---

(க)

சைசூழ மெழுந்துதிரப்புனலா) பரப்படையுடைத்தானவாகாஶம், திக்குகளடங்கலும், பள்ளங்கண்ட விட மெங்கும் வெள்ளம் பரக்குமா போலே, ருதிரமானது கொழித்துப் பரக்கும்படி.

(மலைகீழ்து பிளந்தசிங்கமொத்ததால்) ஒருமலையைக் கீழேயிட்டுக்கொண்டு மேலேயிருந்து அத்தைப்பிளந்த ஸிம்ஹமென்னுதல். அன்றிக்கே, கிழித்துப்பிளந்த ஸிம்ஹம். மகிழ்ந்துபிளந்த ஸிம்ஹமென்னுமாம். † (மகிழ் - அநாயாஸத்தால்ஸித்தம். அதாவது - இரண்டுகூறுக்கிப் பிளந்த ஸிம்ஹமென்கை.) (க) " இரண்டுகூறுசெய்துகந்தசிங்கம் " என்னக்கடவதிறே. ஒக்கப்பிளந்த சிங்கமொத்ததால். † (கீழ்ந்து - உகந்து.)

(அப்பனூழ்துயர்செய்து) நரஸிம்ஹத்தினுடைய மொருந்தமுகத்தைக்கண்டபோதே, மேல்போயநுபவிக்கக்கடவ வநுபவமடைய அப்போதே யநுபவித்தற்றான். அநாதிகாலம் பகவத்பாகவத விஷயங்களிலேபண்ணிப்போந்த ப்ராதிகூல்யமடைய அரைக்ஷணத்திலேயநுபவித்தற்றபடி. மிகவும் துக்கத்தைவிளைத்து. (அசுரரைக் கோல்லுமாறே) அஸுரனைக்கொன்றபடி. இத்தால் சொல்லிற்றாயிற்று - ஸர்வஸாதாரணனாய் நிற்கும்நிலையொழிய, பித்ராதிகள் முகமாக ப்ரஜைகள் பக்கலிலே வத்ஸலனாய் நிற்பதொருநிலையுமுண்டிறே; அது குலைந்தால் அவன் ஶத்ருவாயும்நிற்குமிறே, அப்போதும் இவன்றான் முன்னின்று ரக்ஷிக்குமென்கை. இத்தாலும்சொல்லிற்றாயிற்று - ஆபத்துக்கனத்ததனையும் கடுகவந்து ரக்ஷிக்குமென்கை; தமப்பன்பகையாக வுதவினவன், அவனிலண்ணியனான தான் தனக்குப்பகையானால் உதவச்சொல்லவேணுமோ. (உ) " ஆத்மைவ ரிபுராத்மந꞉ - ஆத்மைவரிபுராத்மந꞉ " என்கிறபடியே தனக்குத்தானேயிறே ஶத்ரு. (௬)

## ஏழாம்பாட்டு.

மாறுநிரைத்து இரைக்கும்சரங்கள் * இனம்
நூறுபிணம் மலைபோல்புரள * கடல்
ஆறுமடுத்து உதிரப்புனலா * அப்பன்
நீறுபட இலங்கைசெற்றநேரே. (எ)

(க) தி-ச-வி-௯௨. உ) கீதை-௬-௫,
† குண்டலிதத்வயம் க்வாசித்கம்.

ப.—அநந்தரம், லங்காபங்க ப்ரகாரத்தை யநுஸந்திக்கிறார்.

(இ-ள்.) சாரிகைதிரிந்தபடுகையாலே, மாறு - எதிரெதிராக, நிரைத்து - நிறைத்து, இரைக்கும் - ஶப்திக்கிற, சரங்கள் - சரங்களாலே, இனம் - இன மினமாக, நூறு - நூறுநூறும்படி, பிணம் - ராக்ஷஸஶவங்களானவை, மலை போல் - மலைபோலே, புரள - புரண்டுவிழவும், ஆறு - ஆறுகளாலே சென்று, மடுத்து - மடுத்து, கடல் - கடல், உதிரப்புனல் - உதிரப்புனல், ஆ - ஆம்படி யாகவும், அப்பன் - ஆஶ்ரிதோபகாரகனை சக்ரவர்த்தித்திருமகனானவன் இலங்கை - லங்கையை, நீறுபட - பஸ்மஸாத்தாம்படி, செற்ற - பொருத நேர் - செவ்வையிருந்தபடி.

நூறுதல் - நபரித்தலாகவுமாம். (எ)

ஆறு ;—(மாறுநிரைத்து) சாரிகைவருகிற ஶைக்ர்யாதிஶயத் தாலே ஸர்வதிக்குகளிலும் நின்று விட்ட திருச்சரங்கள் யுகபதேவ தன்னிலே ஸங்கித்து இரைக்கும்படியாகவும், ராக்ஷஸஶரீரங்கள் * சிந்நமாம்படியும் பிந்நமாம்படியும் ஶரைர்தக்தமாம்படியும் ப்ரபக்ந மாம்படியும், ஶஸ்த்ரபீடிதமாம்படியும், ருதிரவெள்ளத்தாலே கட லெல்லாம் நிறைந்து ஆறுகளிலே யெதிர்க்கும்படியும் ஶரவர்ஷத் தைவர்ஷித்து என்னப்பன் பொடிபட விலங்கையைச்செற்றானென் கிறார். (எ)

ஈடு ; அவ ;—ஏழாம்பாட்டு; ராமவ்ருத்தாந்தத்தை யருளிச் செய்கிறார்.

(மாறுநிரைத்திரைக்கும்சரங்கள்) சாரிகைவந்தசடக்கு, நாலு திக்கும் விட்டவம்புகளெதிரம்பாய் ஒன்றோடொன்று பொருது கலார் கலார் என்று த்வநிக்கிற த்வநி, கடலிரைத்தாப்போலே யிராநின்றது. சாரிகைவந்த சடக்குத் தன்னில்தா னெதிரம்பு கோத்ததுகாணும். (இனநூறு பிணமலைபோல்புரள) நூறுநூ றாக இனமினமான பிணங்களானவை, அம்புபட்டுருவின சடக் காலே யுயிரோரிடத்தொதுங்கப்பெறாதே யிரண்டுதுண்டத்திலும் கலந்து மலைபோலே கிடந்துதுடிக்கிறபடி.

(கடலாறுமடுத்துதிரப்புனலா) (க) "[Grantha script, illegible] - ஆபூர்யமாணமசலப்ரதிஷ்டம்" என்று புக்கதெல்

(க) கீதை-உ-எ0:

லாங் கொண்டிருக்கக்கடவ கடல், ருதிரவெள்ளத்தாலே நிரம்பி ஆறுகளிலே மடுக்கும்படி. (க) "வையமூடுபெருநீரில்மும்மைபெரிதே" என்றுரிறே. (நீறுபட) (உ) "ஸஸா நவஷ்ரீ - ஸபஸாக ஸத்ருஸீ" என்று சொன்னபடியே பஸ்மமாம்படியாக (இலங்கை செற்றநேரே) (நேர்) பொழுதென்றும், நேரமென்றும் - காலபரம். "இலங்கைசெற்றபொழுது - மாறுநிரைத்திரைக்கும்சரங்கள்" என்றந்வயம். அன்றிக்கே, இலங்கையைச்செற்ற வாய்ப்பென்னுதல். மாயாப்ரயோகத்தாலல்ல, செவ்வைப்பூசலிலே நின்றுகிடீர் இலங்கையையழித்ததென்னுதல். நேர் - நேராகவென்னுதல். அப்போது, ஏகாரம் - தேற்றேகாரம். ஆர்ஜவத்தாலே யிலங்கை செற்றது. (எ)

---

## எட்டாம்பாட்டு.

நேர்சரிந்தான் கொடிக்கோழிகொண்டான் * பின்னும்
நேர்சரிந்தான் எரியும்அனலோன் * பின்னும்
நேர்சரிந்தான் முக்கண்மூர்த்திகண்டீர் * அப்பன்
நேர்சரிவாணண் திண்தோள்கொண்டவன்றே. (அ)

**ப**;—அநந்தரம், பாணயுத்தப்ரகாரத்தை யநுஸந்தித்தருளுகிறார்.

(இ-ள்.) அப்பன் - அநிருத்தனுக்குபகாரகனான க்ருஷ்ணன், ருத்ராதிகளை முன்னிட்டு, நேர்சரி - ஒதுங்கின. வாணன் - பாணனுடைய, திண் - வரபலாதிகளாலே த்ருடமான, தோள் - தோள்களை, கொண்ட - துணித்துவென்றுகொண்ட, அன்று - அன்று, கோழி - மயிலை, கொடி - கொடியாக, கொண்டான் - கொண்ட ஸுப்ரஹ்மண்யன், நேர்சரிந்தான் - எதிர்நில்லாமல் சாய்ந்துபோனான், பின்னும் - அதுக்குமேலே, எரியும் - (ங) "ருத்ரோவாஏஷ யதக்நி:" என்று ருத்ரன் தானும்படியான க்ரௌர்யத்தையுடையனா யுத்கதஜ்வாலாதிகனான, அனலோன் - அக்நியானவன், நேர்சரிந்தான் - எதிர்நில்லாமல்சரிந்தான், பின்னும் - அதுக்குமேலே, முக்கண் - த்ரிநேத்ரனாகையாலே ஸாக்ஷ்யதிஶயத்தையுடைய, மூர்த்தி - ப்ரதாநனானருத்ரன், தான் முன்னிற்கமாட்டாமையாலே, நேர்சரிந்தான் - முதுகிட்டுப்போனான், கண்டீர்-கண்டிகோளே.

---

(க) தி-மொ-கக-ச-ச. (உ) ரா ஸு உசு உரு.
(ங) யஜு-உ-அஷ்-கங.

கோழி - மயில். கண்டீரென்று - ப்ரஸித்தியைச்சொல்லுகிறது. (அ)

ஆறு ;—(நேர்சரிந்தான்) பாணனுடைய தோள்களைத் துணித்தவன்று; தோற்கைக்குக் கொடிகட்டிக்கொண்டு வந்தாப்போலே ஸுப்ரஹ்மண்யன் முகம் மாறித்தோற்றான், கிளர்ந்தெரிகிறவக்நியுமப்படியே தோற்றான், த்ரிணேத்ரனும் பராஜயவ்ரீளையாலே அவகுண்டிதனாய்க் கொண்டுபோனான், என்னப்பன் ஜயித்தருளினபடியென்னென்கிறார். (அ)

ஈடு ; அவ ;—எட்டாம்பாட்டு, பாணவிஜய வ்ருத்தாந்தத்தையருளிச்செய்கிறார்.

(நேர்சரிந்தான் கொடிக்கோழிகொண்டான்) மயிலை த்வஜமாகவுடையனாய் தேவஸேநாபதியாய் இளமறியாய்த் தூசித்தலையிலே நிற்கிற ஸுப்ரஹ்மண்யன், தோற்றரவிலே கெட்டான்.

(பின்னுமித்யாதி) அவ்வளவிலே நாற்பத்தொன்ப தக்நிகளும் பெரிய கிளர்த்தியோடே யெரிந்துதோற்றிற்று; அவையுமெல்லாம் பின்னிட்டன.

(பின்னுமித்யாதி) "மகன்கொடிகட்டிக்கொண்டுசென்று இளிம்புபட்டான்" என்று தன் கொடியைப் பொகட்டுவந்து தோற்றினவநந்தரத்திலே, கண்ணைப்புதைத்துக் கெட்டோடத்தொடங்கினான்; அவன் மறைத்துக்கொண்டுபோக, இவர் "முக்கண்மூர்த்தி கண்டீர்" என்று - கண்ணைக்காட்டிக் கொடுக்கிறார். எல்லாம் செய்தாலும் உடம்பிலடையாளத்தை மறைக்கப்போகாதிறே. (க) "வாணனீரைஞ்ஞூறு தோள்களைத் துணித்தநாளந்தவந்தவாகுலம்" என்று பாசுரமிட்டுச்சொல்லவொண்ணாத வ்யாகுலமிறேயது.

(அப்பன்) நிருபாதிகரக்ஷகன். (நேர்சரிவாணன்) ப்ரதாநனான வாணன் தான்வாராத்தோற்றினான், அவனும் பின்னிட்டோடத்தொடங்கினானென்னுதல் ; நின்றவிடத்திலேநின்று முதுகுகாட்டினானென்னுதல்; கையிலாயுதம் பொகட்டாரையும், மயிர்விரித்தாரையும் கொல்லக்கடவதல்லவிறே. (திண்டோள்கொண்டவன்றே) தன்னோடொக்கவாறல் பிறலாயிருப்பதொரு தேவதையைப் பற்றி, அறனுக்குள்ளே யிருப்பாரைப்போலே, திண்ணியனாயிருந்தானாயிற்று. புருஷோத்தம ஸமாஶ்ரயணம்பண்ணி யிருப்பாரைப்போலே காபாலிகந்தரைப்பற்றி நிர்ப்பரனாயிருந்தான் ; ஸர்வேஶ்வ

---

(க) தி-ச-வி-எப.

ரணைப்பற்றி (க) "நஹி ஹிதிகாதஸ்ய ந - நபிபேதிக்ருதஸ்சந" என்றிருப்பாரைபாவித்தான்.

(திண்டோள்கோண்ட) "உஷைபித்ருஹீநையாகவொண்ணுது" என்றுகரத்தைக் கழித்துவிட்டான். "கரபாதையிறேயிவனைக்கண்டார் காலிலெல்லாம் விழப்பண்ணிற்று" என்று அவனுக்குள்ள கரத்தைக்கழித்து, இறையிலியாக்கிவிட்டான். (உ) "யௌதத்புஜாஸஹஸ்ரம் - யௌதத்புஜஸஹஸ்ரம்" என்றும், (உ) "விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராய நிவேதிதும் - விசித்ராதேஹஸம்பத்திரீஸ்வராயநிவேதிதும்" என்றும் விதித்துக்கிடக்கச்செய்தேயும், ஆயிரம் கையையுங்கொண்டு அப்ராப்தவிஷயத்திலே கார்யங் கொள்ளுகையாலே அவற்றையே கழித்துவிட்டான்.

அத்தேவதைதானேவந்து, "வரந்தந்தநீயே அத்தையழிக்கவோ, நீயிவனைக்கொல்லில் என் கவில்குனிவாரில்லையினி" என்று பற்காட்டுகையாலேவிட்டான். (ங) "க்ருஷ்ணக்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம் - க்ருஷ்ணக்ருஷ்ண மஹாபாஹோ ஜாநேத்வாம்புருஷோத்தமம்" தேவரையுள்ளபடியறியாதே அம்பைவிட்டுக்கொண்டுநின்ற நிலையைக்கண்டு "அவ்வளவோ" என்றிருந்தேன். "கழுத்திலேகயிறிட்டபின்புகாண் நானின்னதென்றறிந்தேன்" என்பாரைப்போலே. இத்தால் சொல்லிற்றாயிற்று - ஈஸ்வரனையொழிந்தாரடங்கலும், தாங்களுளரானபோது ரக்ஷகராக வபிமாநித்து, ஆபத்துவந்தவாறே இவர்களைக்காட்டிக்கொடுத்துத் தந்தாமைக்கொண்டு தப்புவர்கள்; ஸர்வாவஸ்தையிலும் தன்னையழியமாறியாயினு மாஸ்ரிதரக்ஷணம் பண்ணுவான் ஸர்வேஸ்வரன்; ஆகையாலே ஆஸ்ரயணீயனிவனே, அல்லாதாராஸ்ரயணீயரல்லரென்னுமிடம் சொல்லிற்று. (அ)

---

## ஒன்பதாம்பாட்டு

அன்றுமண்நீரெரிகால் விண்மலைமுதல் *
அன்றுசுடர் இரண்டுபிறவும் * பின்னும்
அன்று மழையுயிர்தேவும்மற்றும் * அப்பன்
அன்றுமுதல் உலகம்செய்ததுமே. (கூ)

---

(க) தை-ஆ க. (உ) விஷ்ணுதர்ம. (ங) வி-பு-ங-ந-சக.

ப.— அநந்தரம், ஜகத்ஸ்ருஷ்டிப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) அப்பன் - ஜகதுத்பாதகனான மஹோபகாரன், முதல் - ப்ரதமத்திலே, உலகம் - லோகத்தை, செய்ததும் - உண்டாக்கிற்றும், அன்று - ஆத்யமான ஸ்ருஷ்டிகாலத்திலே, மண்ணீரெரிகால்விண் - அதுக்கு ஹேதுபூதமான ப்ருதிவ்யாதிபூதபஞ்சகங்களையும், மலைமுதல்-பௌதிகங்களில் பர்வதாதி பதார்த்தங்களையும், செய்ததும் - செய்ததும், அன்று - அக்காலத்திலே, சுடர்-சந்த்ராதித்யர்கள், இரண்டு - இருவரையும், பிறவும் – அல்லாத தேஜ: பதார்த்தங்களையும், செய்ததும் - செய்ததும், அன்று – அக்காலத்திலே, பின்னும் - அதுக்குமேலே, மழை - வர்ஷத்தையும், உயிர் - வர்ஷோபஜீவிகளான ப்ராணிகளையும் தேவும் - வர்ஷப்ரதரான தேவர்களையும், மற்றும் - மற்றும் ப்ராணி பதார்த்தங்களையும், செய்ததும் - உண்டாக்கிற்றும், அன்று - அக்காலத்திலே.

க்ரமஸ்ருஷ்டியன்று, யுகபத்ஸ்ருஷ்டி யென்று கருத்து (கூ)

ஆறு ;—(அன்று) ஸங்கல்ப லேஶத்தாலே நிகில ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைப் பண்ணியருளுகிற ஸர்வேஶ்வரனுக்கு அத்யல்பபல ப்ரதிகூலநிரஸந மொரு பொருளோ வென்கிறார்.

ஈடு ; அவ ; — ஒன்பதாம்பாட்டு, ஸ்ருஷ்டியும் விஸஜாதீயமாகையாலே அத்தையும் விஜயமாக அநுஸந்திக்கிறாராகவுமாம்.

(அப்பன்-முதலுலகம் செய்ததும்-அன்று) மஹோபகாரகன் ப்ரதமத்திலே லோகத்தையுண்டாக்கிற்றும் ஆத்யமான ஸ்ருஷ்டிகாலத்திலே, அதுக்கு ஹேதுவாக (மண்ணீரித்யாதி) ) அன்றிக்கே, கீழும் மேலும்-க்ருஷ்ணவ்ருத்தாந்தமாகையாலே, பாணனை தமித்தவன்று கிடீர் ஜகத்தை யுண்டாக்கிற்றென்று அத்தையே பேசுகிறாராகவுமாம்; பயிர்செய்கையேயன்றே வேண்டுவது, பயிரழியாமல் நோக்கினவன்றிறே பயிர்செய்ததாவது.

(அன்றித்யாதி) காரணங்களோடு கார்யங்களோடு வாசியற வுண்டாக்கினபடி. (சுடரிரண்டு) சந்த்ராதித்யர்களை யுண்டாக்கினபடி. (பிறவும்) மற்றுமுண்டான நக்ஷத்ராதி தேஜ:பதார்த்தங்களும். அதுக்குமேலே ; வர்ஷிக்கக்கடவதான மேகம், (மழை - மேகம்.) வர்ஷத்திலே ஜீவிக்கக்கடவ மற்றை யாத்மாக்கள், வர்ஷத்துக்கு உத்பாதகரான தேவர்கள், மற்றுமுண்டான திர்யக்ஸ்தாவராதிகள்.

(அப்பன்) ஸர்வோத்பாதகனானவன். ( அன்றுமுதலுலகம்செய்ததுமே) தனித்தனியே சொல்லவேணுமோ, பாணனை தமித்து ஈரர

௬றுத்தவன்றுகிடீர் இத்தையெல்லாம்ஸ்ருஷ்டித்ததென்கிறார், என்னுதல். நாமரூபங்களையிழந்து (க) "ஸதேவ - ஸோதேவ" என்கிற தசையிலே (க) "பஹுஸ்யாம் · ப்ரஜாயேய" என்று ஸங்கல்பித்த வன்றுமுதலென்றுமாம்.

(௯)

---

## பத்தாம்பாட்டு.

மேய்நிரைகீழ்புக மாபுரள * சுனை
வாய்நிறைநீர் பிளிறிச்சொரிய * இன
ஆநிரைபாடி அங்கேயொடுங்க * அப்பன்
தீமழைகாத்துக் குன்றமெடுத்தானே. (௧௦)

ப.—அநந்தரம் கோவர்த்தநோத்தாரணத்தை யநுபவிக்கிறார்.

(இ ள்.) மேய் - மேய்கிற, நிரை - பசுக்களானதுகள், கீழ் - கீழே, புக - ஒதுங்கும்படியாகவும், கீழ்மேலாகவெடுத்தபடியாலே, மா-பர்வதவர்த்திகளான வஜாதிம்ருகங்கள், புரள - புரண்டுவிழும்படியாகவும், சுனை-சுனைகளினுடைய, வாய் - வாயளவும், நிறை - நிறைந்த, நீர் - நீரானது பிளிறி - பெரியகோஷத்தோடு, சொரிய - சொரியும்படியாகவும், இனம் - இனமினமான, ஆய் - ஆயரையும், நிரை - பசுத்திரளையு முடைய, பாடி - திருவாய்ப்பாடியும், அங்கே - அங்கே, ஒடுங்க - ஒடுங்கும்படியாகவும், அப்பன் - ஆபந்நிவாரகனான க்ருஷ்ணனானவன், தீ-வி நாசஹேதுவான, மழை - மழையை, காத்து - காத்து, குன்றம் - கோவர்த்தநமாகிற பர்வதத்தை, எடுத்தான் - எடுத்தான். (௧௦)

ஆறு ;—(மேய்நிரை) பசுக்களுக்கு மிடையர்க்கும், கீழே புக்கு நிர்ப்பயமாக வர்த்திக்கும்படியாகவும் ; மஹீதரோபரிவர்த்தமான வநகரியூதங்கள் கீழே புரளும்படியாகவும். பூர்ணஸரஸ்ஸுக்கள் அதோமுகமாய் ஸகோஷமாய் ப்ரவஹிக்கும்படியாகவும் ஸ்ரீகோவர்த்தநத்தை யெடுத்தருளி, பாதகமான வர்ஷத்தைத் தடுத்தருளி, இந்த்ரனை ஜயித்தருளினான் என்னப்பனென்னப்பனென்கிறார். (௧௦)

ஈடு; அவ;—பத்தாம்பாட்டு; கோவர்த்தநோத்தாரணம்பண்ணி ரக்ஷித்த செயலை யநுஸந்திக்கிறார்.

---

(க)சாந்தோ-௬-௨. (௨)

(மேய்நிரைகீழ்புக) மேய்கிறபசுக்கள் புல்லும்மிழாதே யசை யிட்டுக்கொண்டு கீழேபுகுர. (மாபுரள) மலையையெடுத்து மறிக்கையாலே அங்குவர்த்திக்கிற ம்ருகங்களெல்லாம் புரண்டுவிழ, மா - ம்ருகம். (சுனைவாய்நிறைநீர்பிளிறிச்சொரிய) சுனையிடத்துநிறைந்து நிற்கிறநீரானது, நிறைகுடத்தைக் கவிழப்பிடித்தாப்போலே ஸப்தித்துக்கொண்டுசொரிய, ஒருமழைகாக்கப்புக்கு, அங்கேயநேகம் மழையையுண்டாக்கினபடி. (இனவாநிரைபாடியங்கே யொடுங்க) பசுத்திரளும் திருவாய்ப்பாடியு மங்கேயொடுங்க. (ஒருதரத்தில் பசுவொழுங்கையுடையவூர்).

(அப்பன்) ஆபத்ஸகனானவுபகாரகன். (தீமழைகாத்து) விநாஸத்தைவிளைக்கவந்தமழையாகையாலே தீமழையென்கிறார். இடையரும் பசுக்களுமன்றிக்கே அன்று தாமாகாதே நோவுபட்டார். (குன்றமெடுத்தானே) மலையை யெடுத்துக்காத்த மஹோபகாரகனென்கிறார். "பசிக்ராஹமாறுந்தனையும் வர்ஷித்துப்போவானுக்கு" என்றேழுநாளிறே மலையைதரித்துக்கொடு நின்று நோக்கிற்று. ராவணாதிகளாகிலிறே அழியச்செய்யலாவது, அநுகூலனுக்குவந்த ப்ராதிகூல்யமாகையாலே செய்யலாவதித்தனையிறே. இத்தால் சொல்லிற்றாயிற்று - ஆஸ்ரிதன் தப்பினாலும் தான் பொறுத்து ரக்ஷிக்குமென்றபடி.

(க0)

---

# பதிற்றாம்பாட்டு

குன்றமெடுத்தபிரான் அடியாரோடும் *
ஒன்றிநின்ற சடகோபனுரைசெயல் *
நன்றிபுனைந்த ஓராயிரத்துள் இவை *
வென்றிதரும்பத்தும் மேவிக்கற்பார்க்கே. (கக)

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி, கற்றார்க்கு ஸர்வப்ரகாரவிஜயத்தைக் கொடுக்குமென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

(இ-ள்) குன்றமெடுத்த - கோவர்த்தநோத்தாரணம்பண்ணின, பிரான் - மஹோபகாரகனான க்ருஷ்ணனுக்கு, அடியாரோடும் - அஸாதாரண ஶேஷபூதரான பாகவதர்களோடே, ஒன்றி-ஏகீபவித்து, நின்ற - நின்ற ஸ்வரூபத்தையுடையராய்க்கொண்டு, சடகோபன் - ஆழ்வாருடைய, உரைசெயல் - வாசிகவ்ருத்திரூபமாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள்ளே, நன்றி -

ஸர்வேஶ்வரனுடைய விஜயாபதாநங்களை ப்ரதிபாதிக்கையாகிற நன்மையை, புனைந்த - உடைய, இவைபத்தும் - இப்பத்தும், மேவி - அர்த்தஸஹிதமாக, கற்பார்க்கு - அப்யஸிப்பார்க்கு, வென்றி - ஸர்வப்ரகாரவிஜயத்தை, தரும் - கொடுக்கும் (கக)

இது ௨கலிவிருத்தம்.

ஆறு;—(குன்றமெடுத்த) ஆழ்வார் தாமும்கோவர்த்தநத்தின்கீழே திருவாயரோடே கூடிநின்று கோவர்த்தநோத்தரண பூர்வக விஜய ரூப ஸகல திவ்யசேஷ்டிதங்களையு மேத்தின வித்திருவாய்மொழியை ஸாதரமாகக்கற்பார்க்கு, இத்திருவாய்மொழியி லோரோர் பாட்டே விஜயத்தைக்கொடுக்குமென்கிறார். (கக)

ஈடு; அவ;—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யஸித்தவர்களுக்கு இதுதானே விஜயத்தைக் கொடுக்குமென்கிறார்.

(குன்றமெடுத்தவித்யாதி) கோவர்த்தநோத்தரணம்பண்ணின நீர்மையிலு மப்போதை யழகிலு மீடுபட்டிருக்குமவர்களோடேகூடி நின்று தாமும் ப்ரீதராய், ப்ரீதிக்குப் போக்கு வீடாகச்சொன்ன பாசுரமாயிற்று. (நன்றிபுனைந்தவோராயிரம்) ஸர்வேஶ்வரனுடைய பரத்வ ஸௌலப்யங்களை வகையிட்டுத் தொடுத்த வாயிரம். நன்மையாவது - ஸம்ஸாரி சேதநனுக்கு, இவனே ஸர்வஸ்மாத்பரனென்றும், ஸர்வஸுலபனென்றும், ஸர்வஸமாஶ்ரயணீயனென்றும் சொல்லுகையிறே. அவையிறே - முதற்றிருவாய்மொழிதொடங்கி யருளிச்செய்தது.

எம்பெருமானுடைய விஜயங்களைத்தொடுத்துச்சொன்ன விப்பத்தும். (மேவிக்கற்பார்க்கு-வென்றிதரும்) ஸாதரமாகக் கற்பார் யாவர்சிலர், அவர்களுக்கு விஜயத்தைப் பண்ணிக்கொடுக்கும்; ஐஶ்வர்யார்த்திக்கு ஐஶ்வர்யவிரோதியைவென்று கொடுக்கும், கேவலனுக்கு விரோதிநிவ்ருத்தியைப் பண்ணிக்கொடுக்கும்; பகவச்சரணார்த்திகளில், உபாஸகனுக்கு இந்த்ரியஜயாதிகளைப் பண்ணிக் கொடுக்கும்; ப்ரபந்நனுக்குக் கைங்கர்யவிரோதிகளைவென்றுகொடுக்கும். (கக)

ஏழாம்பத்து நாலாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஏழாம்பத்து

## ஐந்தாம் திருவாய்மொழி

### கற்பார் - ப்ரவேசங்கள்.

ஆறு ;—(கற்பாரிராமபிரானை) ப்ரஸ்துத த்ரைலோக்ய விக்ரமணாதிரூபமதநாதிவிஜயரூப திவ்யசேஷ்டிதங்களுடைய பரோபகாரத்வ லக்ஷணகுணத்வாகாரத்தை யநுபவிக்கிறார். அதவா, ப்ரஸ்துத தசரதாத்மஜ திவ்யசேஷ்டிதங்களிலே திருவுள்ளந் தாழ்ந்து, மற்று மப்ரஸ்துத திவ்யசேஷ்டிதங்களையும் " ததீயம் " என்னு மிவ்வாகாரத்தா லநுபவிக்கிறார். *

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ் - அநேகவித விஜயாபதாநங்களையுடையனான ஸர்வேஶ்வரனுடைய வதிஶயித ஶக்தியோகத்தை யநுஸந்தித்து விரோதி நிரஸந ஸமர்த்தனவனேயென் றறுதியிட்டவர், " அவனையொழிய வேறு ரக்ஷகரில்லை " என்னு மிவ்வர்த்தத்தை வெளியிடுகைக்காக ; ஸ்வாபிமாநாந்தர்ப்பாவ மாத்ரத்தாலே அவனுடைய வதிஶயிதபுருஷார்த்த ப்ரதத்வத்தையும், அநிஷ்டநிவ்ருத்தி யுக்தமான ரக்ஷண ப்ரகாரத்தையும், ஶிஶுபாலமோக்ஷத்தையும், ஜகத்ஸ்ருஷ்ட்ருத்வத்தையும், ஸ்ரீவராஹவ்ருத்தாந்தத்தையும், ஆஶ்ரிதார்த்தமான வர்த்தித்வஸாமர்த்த்யத்தையும், மார்க்கண்டேயரக்ஷணப்ரகாரத்தையும், ஆஶ்ரிதோபகாரகமான ஹிரண்யநிரஸநத்தையும், பாண்டவவிரோதிபஞ்ஜநத்தையும், ஸம்ஸாரநிவர்த்தகத்வத்தையும் அநுஸந்தித்து ஏவம்விதஸ்வபாவனாய் அதிஶயிதஶீலப்ரகாஶகமான வவதாரவைலக்ஷண்யத்தையுடைய ஸர்வேஶ்வரனையொழிய, அநிஷ்டநிவ்ருத்த்யர்த்தமாகவு மிஷ்டப்ராப்த்யர்த்தமாகவுமாஶ்ரயணீயர் வேறொருவரில்லை யென்னுமிடம் ஸர்வஸம்ப்ரதிபந்நமென்றருளிச்செய்கிறார். *

ஈடு; அவ;—கீழிற்றிருவாய்மொழியில் - எம்பெருமானுடைய விஜயங்களை யநுபவித்தார் ; அவைதாம் ஆஶ்ரிதார்த்தமாயிறே யிருப்பது ; "அவன்தன்னை யிவர்களுக் காக்கிவைக்க, இவர்கள் பாஹ்யவிஷயங்களிலே அந்யபரராவதே" என்றுஶ்சர்யப்படுகிறார். (க) " யஸ்யாஸ்மி - யஸ்யாஸ்மி " என்று - யாவனொருவனுடைய ஸத்தையேபிடித்து அவனுக்கேயாயிருக்கும், அப்படி யிருக்கிறவன் தான் உத்பத்தியே பிடித்து இவனுக்காக்கிவைக்கிறானிறே.

---

(க) யஜு-ங-அஷ்-எ.

ரக்ஷணத்துக் கேகாந்தமான ஜந்மங்களிலேவந்து பிறந்தபடியையும், தன் ஸ்வரூபரூபகுணங்களை யடையப் பிறர்க்காக்கிவைக்கிறபடியையும், அதுக்கடியான க்ருபையைத் தனக்கு வடிவாகவுடையனாயிருக்கிறபடியையும், க்ருபாகார்யமான செயல்களையு மநுஸந்தித்து, (க) "ஸவ்வுறு ஹிரண்ணுநிதிம் நிஹிதம் ஷேத்ரஜ்ஞா உபர்யுபரி ஸஞ்சரந்தோ ந விந்தேயு:" - அபவரகே ஹிரண்யநிதிம் நிதாய உபரி ஸஞ்சரந்தோய தாநத்ரக்ஷயந்தி" என்கிறபடியே - முற்றத்திலே ஹிரண்யநிதி புதைத்துக்கிடக்க, அத்தை யறியாதே மேலே ஸஞ்சரித்துப் புறங்கால் வீங்குவாரைப்போலே; இஸ்ஸம்பத்துத் தங்களுக்காயிருக்க ஸம்ஸாரிகள்புறம்பே போதுபோக்குவதே யென்று ப்ரசாயப்படுகிறார்.

ஆழ்வாரொருகால், இத்திருவாய்மொழி யடங்கலும் - ராமாவதார விஷயமாக்கி நிர்வஹித்தாரும். அதுக்கடி - ஆயிரத்திலொன்றும் கடலில் குளப்படியும்போலே, பெருமாளுடைய குணத்திலேகதேஶங்களிறே அல்லாத வவதாரங்களெல்லாவற்றிலு முள்ளதென்று. (உ) "பேரெயில்சூழ்கடல் தென்னிலங்கைசெற்றபிரான்" என்றும், (ங) "மாறுநிரைத்திரைக்கும் சரங்கள்" என்றும் - கீழ் ப்ரஸ்துதமான ராமவ்ருத்தாந்தத்தை யநுஸந்தித்து, அவ்வழியாலே யிறே அவதாரங்கள் தம்மை யநுஸந்திக்கிறது. அல்லாதவவதாரங்களிலே ப்ரவணரானவர்களும் அவ்வவதாரம் ப்ராஸங்கிகமாக ப்ரஸ்துதமானால் (ச) "மனத்துக்கினியானை" என்றிறே சொல்லுவது.

"பட்டர்ராமாவதாரத்திலேபோர பக்ஷபதித்திருப்பர்" என்று அவரருளிச்செய்யுமது கேட்கைக்காகச் சிறியாத்தானொருநாள் "பெருமாளுக்கெல்லா நன்மைகளுண்டாகிலும், கழுத்திலே யோலை கட்டி 'தூதுபோ' என்னப்போன க்ருஷ்ணன் நீர்மையில்லையே" என்ன "அதங்ஙனல்லகாண், கழுத்திலே யோலைகட்டி 'தூதுபோ' என்பாரில்லாமைதவிர்ந்தாரத்தனைகாண்" என்றருளிச்செய்தார். (ரு) *நாடுடைமன்னர் வேறேசிலரில்லையே. அபிஷிக்த க்ஷத்ரியகுலத்திலே பிறக்கையாலே போகவிடுவாரைப்பெற்றதில்லை. முடியைத் தவிர்ந்து சடையைப்புனைந்து நாட்டைவிட்டுக் காடேறப்போனவர்,

(க) (ங) எ-ச-எ. (ரு) சு-சு-ச.
(உ) எ-ங எ. (ச) திருப்பாவை.

தூதுபோகாமையில்லையிறே ; " காடேறப்போகவுமாம், துர்யோதந கோஷ்ட்டியிலே போகையிறே யரிது; (க)[யத்ர ஸூக்தம் துருக்தம் வா ஸமம் ஸ்யாந்மதுஸூதந] இறே - " பாண்டவர்கள் இடக்கைக்கு அஞ்சூர் தரவேணும் " என்றிவன்சொன்ன வார்த்தைக்கும், " பந்துக்களுக் கொருகோற்குத்தும் கொடேன் " என்றவன் சொன்னவார்த்தைக் கும் வாசியறியாத கோஷ்டியிலேயிறே போய்ப்புக்கது. " ராமாவ தாரத்தில் தூதுபோன திருவடியுடைய வேற்றம் தந்திருவுள்ளத்தி லேபட்டுக்கிடந்திறே (உ) *அவனே பின்னோர்தூதாதி மன்னர்க்கா கிப் பெருநிலத்தா ரின்னார் தூதனென நின்றது.

---

## முதற்பாட்டு.

கற்பார்இராமபிரானையல்லால் மற்றும்கற்பரோ ?*
புற்பாமுதலாப் புல்லெறும்பாதிஒன்றின்றியே *
நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும் *
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்பெற்றநாட்டுளே. (க)

ப.—முதற்பாட்டில், சக்ரவர்த்தி திருமகனுடைய புருஷார்த்த ப்ரதத் வத்தை யநுஸந்தித்து, கல்வியிலாதாரமுடையார்க்கு அவனையொழிய ஜ்ஞா தவ்யமில்லையென்கிறார்.

(இ-ள்.) பா - முளைத்துப்பரம்பின, புல் - புல்; முதலா - முதலாகவும், புல் - அதிக்ஷுத்ரமான, எறும்பு - எறும்பு, ஆதி-முதலாகவும், நற்பால் - ராம குணங்கள் நடையாடுகிற நல்லதேசமாயுள்ள, அயோத்தியில் - திருவயோத்யை யிலே, வாழும் - குணநுபவப்ரீதியுக்தராய்வர்த்திக்கிற, சராசரம் - சராசராத்மக மான, முற்றவும் - ஸகலபதார்த்தங்களையும், நான்முகனார்பெற்ற-சதுர்முகஸ்ரு ஷ்டமான, நாட்டுள்ளே - ஜகத்துக்குள்ளே, ஒன்று - உஜ்ஜீவநோபாயமென் றும், இன்றியே - இன்றியேயிருக்கச்செய்தேயும், நற்பாலுக்கு-நல்லவிடமான ப்ராப்யஸ்த்தலத்திலே, உய்த்தனன் - வைத்தான், ஆதலால், கற்பார் - ப்ரிய ஹிதரூபமாயிருப்பதொன்றைக்கற்க நினைப்பார், இராமன் - * அதீவப்ரியதர் மநனாய் *விக்ரஹவானான தர்மமாயிருக்கிற சக்ரவர்த்தித்திருமகனை, பிரானை-மஹோபகாரகனை, அல்லால் - ஒழிய, மற்றும் - வேறொருவ்யக்தியை, கற் பரோ - வ்யுத்பத்திபண்ணுவரோ. (க)

(க) பார-உத்யோ. (உ) தி-மொ-உ-உ-௩.

னென்னில்; பெருமாளை யொழியச்செல்லாமைபிறந்து வ்யதிரே கத்தில் முடிந்த சக்ரவர்த்திநிலே - ஸ்நேஹம்; பக்தியாவது - "நில்" என்ன, (க) "கு-ரா-ஷூ - குருஷ்வ" என்னும்படியாய், முறை யறிந்து பற்றின விளையபெருமாள்நிலே.) [வீர - வீர] உம்முடைய வீரங்கொண்டுபுறம்பே வென்றீரென்று, இங்கும் வெல்லமுடியாது. தானுமவனுகையாலே, தோற்பித்த துறையைப்பிடித்துச் சொல்லு கிறான். [ஸா வொ நா ந ஞூ ஷூ தி - பாவோநாந்யத்ரகச்சதி] என்னை மீட்டீராகிலும் என்னுடைய நெஞ்சை மீட்கப்போகாது. (உ) "என்னுடை நன்னெஞ்சந் தன்னை யகல்விக்கத் தானுங்கில்லா னினி" என்னுமாபோலே-ஸர்வஶக்தியானவவனாலும் மீட்கப்போ காதென்கை. [அ ந ஞூ - ந ஷூ தி - அந்யத்ர-நகச்சதி] (ங) "கண்டகண்கள் மற்றொன்றினைக்காணு" என்னுமாபோலே. அந் யத்ர வென்கிறது - போகிறவிடத்தின் பேரும் சொல்லுகை யஸ ஹ்யமானபடி. (ச) "மற்றாரானுமுண்டென்பார்," என்னுமாபோலே, இவரும் (மற்றுங்கற்பரோ) என்கிறார். (கற்பரோ) சேதநரன்றே. நாட்டடங்கலும் தம்முடைய படியென்றிருக்கிறார்; "இவ்வூரிற் பிள் ளைகள் கண்ட சர்க்கரை யொழிய வுண்ணும்படி யெங்ஙனே" என் பாரைப்போலே.

மற்றவற்றை விட்டுக் கற்கைக்கு ஹேது சொல்லுகிறது மேல டைய (புற்பாமுதலா) பா வென்று - பதார்த்தவாசகமாய், புல்லா கிற பதார்த்தமென்னுதல்; பாவென்று படர்த்தியாய், படருகிறபுல் லென்னுதல். பசுவின்வாய்க்கெட்டாதபடியாயிருக்கை. தூர்வாதி ஸ்த்தாவராந்தமாகவென்றபடி - இத்தால், (புல்லெறும்பாதி) ஜங்க மங்களிற்கடையான வெறும்பு தொடக்கமாக. ப்ரஹ்மாவையெண் ணினுல் அநந்தரம் நிற்கக்கடவதிறே பிபீலிகை. புற்பாமுதலாப் புல்லெறும்பாதி யென்று-இவற்றுக்கொரு ப்ராதாந்யஞ் சொல்லு கிறாரல்லர், ராமவிஷயீகாரத்துக்கு முற்பட்டன விவையென்கிறார்; வெள்ளமானது தாழ்ந்தவிடத்திலே யோடுமாபோலே.

ஸ்தாவரங்களில் தண்ணியதுபுல், ஜங்கமங்களில் தண்ணிய தெறும்பு, இவை யிரண்டையு மொக்கவெடுக்கையாலே - ஜ்ஞாநபலம் மோக்ஷமென்கிறத்தைத் தவிர்க்கிறது. சைதந்யமுண்டாகையு மில்

(க) ரா-அயோ-ருக-உஉ.
(உ) க-எ-அ.
(ங) அமலனு-கo.
(ச) சிறிய-திரு

லையாகையும் அப்ரயோஜகம்-பெருமாள் க்ருபைக்கென்கிறது; இவற்றின் கர்மத்தால்வரும் தாரதம்யங்கள் அப்ரயோஜகமென்கிறது; நிருபாதிகஶேஷிபக்கல் அப்ரதிஷேதமே பேற்றுக்குவேண்டுவது. ஸ்ரீபரதாழ்வானைக்கண்டு சேதநரெல்லாரும் கண்ணநீர்விழவிட்டுநிற்கக்கழுத்துமட்டு நீரிலேநிற்கிற மரங்களிறே வாடிநின்றது (௧)[𑌅𑌪𑌿 𑌵𑍃𑌕𑍍𑌷𑌾𑌃 𑌪𑌰𑌿𑌮𑍍𑌲𑌾𑌨𑌾𑌃 - அபிவ்ருக்ஷா:பரிம்லாநா:] (௨) [𑌉𑌪𑌤𑌪𑍍𑌤𑍋𑌦𑌕𑌾 𑌨𑌦𑍍𑌯𑌃 - உபதப்தோதகாநத்ய:] நீரோடு, அந்நீரில் விழுகிறுரோடு வாசியற்றபடி. உபதப்தமாகையாவது - கரையருகும்கிட்டவொண்ணாதபடியாயிருக்கை. [𑌪𑌲𑍍𑌵𑌲𑌾𑌨𑌿 𑌸𑌰𑌾𑌂𑌸𑌿 𑌚-பல்வலாநி ஸராம்ஸிச] இதில் சிறுமைபெருமையென்றொரு வாசியில்லை. *வநாந்யுபவநாநிசபோலே.

(ஒன்றின்றியே) எல்லாவற்றையு மென்கிறதல்ல; மேலே "முற்றவும்" என்று ஸாகல்யவசநமுண்டாகையாலே. இனி, ஒன்றின்றியேயென்கிறது - பேற்றுக்கீடாயிருப்பதொரு ஸாதநமின்றிக்கேயிருக்கச்செய்தே யென்றபடி; பெறுகிறதன் சிறுமையையும் பேற்றின்கனத்தையும்பார்த்தால், தன்பக்கலொரு ஸாதநமின்றிக்கேயிருக்குமிறே; பரமபக்தியோடு, அவன்றனே உபாயமானத்தோடு வாசியில்லை, பேற்றைப்பார்த்தால் இத்தலையிலொன்றும் சொல்லவொண்ணாமைக்கு; இனி, அங்கீகாரஹேதுவாயிருப்பதொரு ஸாதநமின்றிக்கேயிருக்க, யாதொன்றாலே பலமுண்டாயிற்று; அதிறே ஸாதநம். அதாவது - திருவயோத்யையினின்றும் குடிவாங்க நினைவில்லையென்கிறவிதிறே.

(நற்பாலயோத்தியில்) நல்லவிடத்தையுடைத்தான திருவயோத்யையிலே. பால்-இடம். இத்தால்-நிலமிதியே ராமபக்தியைவிளைக்குமென்கை. (௩) "𑌦𑍇𑌶𑍋𑌽𑌯𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌾𑌮𑌦𑍁𑌕𑍍 - தேஶோயம் ஸர்வகாமதுக்" இறே. (௪) "𑌜𑍍𑌞𑌾𑌤𑌿𑌦𑌾𑌸𑍀 𑌯𑌤𑍋 𑌜𑌾𑌤𑌾 - ஜ்ஞாதிதாஸீயதோஜாதா" என்கிறதிறே. இதுக்குக்கருத்தென்னென்னில்; இத்தேசத்திலே பிறந்தாளாகில் பெருமாளுக்கு விரோதஞ்செய்யாளாகையாலே, எங்கேனு மோரிடத்தே பிறந்தாளொருவிழுந்தான் கிடக்கையென்கிறது. (௫) "[illegible] - யத꞉

(௧) ரா-அயோ-௫௯-௪. (௩) காருட-௧௧. (௫)
(௨) ரா-அயோ-௫௯-௫. (௪) ரா-அயோ-௭-௧.

குதம்ஸிஜ்ஜாதா" என்று வ்யாக்யாநம்பண்ணினான் உடாலி ; இந்நி
லத்திற்பிறவாமை இவனுக்குக் கொடுமைவிளைந்ததென்கிறானிறே ;
தேசாந்தரனேயெல்லா நன்மைகளையும் பிறப்பிக்கவற்றாயிருக்குங்
காணும். இவ்வூரிலவர்கள் அல்லாதாரோபாதியு முண்டுடுத்துத் தடி
த்து வார்த்தைச்சொல்லித் திரிந்து, பெருமாளுக்கு வருவதொரு
ப்ரயோஜநத்தோடு விரோதித்தவாறே, ஶத்ருஶரீரம்போலேயிரு
க்க, ஶரீரங்களைப் பொகட்டுக்கொடுநிற்பார்கள். ஶத்ருஶரீரம்
பொகடவேண்டுவதொன்றிறே. (க) [ராகவார்த்தே பராக்ராந்தா
ந ப்ராணே குருதே தயாம் - ராகவார்த்தேபராக்ராந்தாநப்ரா
ணேகுருதேதயாம்] ப்ராணன்கள் பழமையாலே பல்காட்ட உடை
யவரும் நீங்களு மொருதலையானால் உங்களைக்கைக்கொள்ளப்போ
மோவென்னும்படியே; பழைமைபார்ப்பரோ - அவன்றானுமிவனைப்
பற்ற, (உ) "ப்ராணாந்பரித்யஜ்ய - ப்ராணாந்பரித்யஜ்ய" என்று
நிற்க.

(அயோத்தியில் வாழும்) வர்த்திக்குமென்னாதே, வாழுமென்
கிறது - அத்தேஶவாஸமும், வாழ்வுமென்று இரண்டில்லாமை
யாலே ; (ங) "வேங்கடத்தைப்பதியாகவாழ்வீர்காள்" என்றும்,
(ச) "நல்லார்கள்வாழும் நளிரரங்கம்" என்றும் சொல்லுகிறப
டியே. அயோத்தியில் வாழுமென்கிறார் - ப்ராப்யதேசத்தில் வர்த்
தநந்தான் வாழ்ச்சியாயிருக்குமிறே. நித்யப்ராப்யமான வஸ்து
விறே யிங்கு ஸதாஸந்நிதிபண்ணுகிறது. நமக்கநுபவம் காதாசித்க
மாகிறது அஸித்ஸம்ஸர்க்கத்தாலேயிறே ; தர்மியிலைக்யத்தாலே அங்
குத்தைக்கொரு குறையில்லையிறே.

(நற்பாலுக்குய்த்தனன்) நல்லஸ்வபாவத்தையுடைத்தாம்படி
செலுத்தினான். அதாவது—ஸ்வஸம்ஶ்லேஷ விஶ்லேஷைக ஸுக
துக்கராம்படிபண்ணுகை. இவற்றின் கர்மதாரதம்யத்தாலே வரி
விறே அவ்வோவவ்வோவளவுகளாயிருப்பது, அவனாலே வந்ததா
கையாலே யெல்லார்க்குமொக்க நன்மைவிளைந்தபடி (ரு) "மயா
த்வம் ஸமநுஜ்ஞாதோ கச்ச லோகாநநுத்தமாந் - மயாத்வம்ஸம
நுஜ்ஞாதோ கச்சலோகாநநுத்தமாந்" என்று இங்குண்டான பற்

(க) ரா-யு- (ங) நா-தி-அ-சு. (ரு) ரா-ஆர-சுஅ-ஙo.
(உ) ரா-யு-கஅ-கஅ. (ச) நா-தி-கக-ரு.

றறுத்து ஒருதேஶவிசேஷத் தேறச்சென்றநுபவிக்கு மநுபவத்தைக்கொடுக்க வல்லவனுக்கு, இங்குத்தன்னை யொழியச்செல்லாமைவிளைக்கை பணியுடைத்தன்றிறே.

(நான்முகனுர்பெற்றநாட்டுளே - நற்பாலுக்குய்த்தனன்) ராஜா தன்னுடையானொருத்தனுக் கொருநாட்டைக்கொடுத்தால் அவனுடையவாணையு மாஜ்ஞையுமாக அவனுடைய ஸ்வாதந்த்ர்யமே நடக்கும்படி பண்ணிக்கொடுக்குமாபோலே, ஸம்ஸாரி சேதநர்க்குத் தலையானசதுர்முகனுக்குக் கையடைப்பானநாட்டுக்குள்ளே; அவன் ஸ்வாதந்த்ர்யத்தையுந்தவிர்த்து, இவற்றின் கர்மபாரதந்த்ர்யத்தையும் தன்குணத்தாலே பதஞ்செய்து, தன்னைப்பெற்றபோது ஜீவிக்கும்படியாய்ப் பெறுதபோது உறுவும்படியான தன்மையையுண்டாக்கினுன் ; – ஆனபின்பு, அவனையொழிய வேறேயும் சிலவற்றைக் கற்பரோ. (க)

---

## இரண்டாம்பாட்டு.

நாட்டில்பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ ? *
நாட்டில்பிறந்து படாதனபட்டுமனிசர்க்கா *
நாட்டைநலியும்அரக்கரை நாடித்தடிந்திட்டு *
நாட்டையளித்துஉய்யச்செய்து நடந்தமைகேட்டுமே. (உ)

ப.—அநந்தரம், அவதாரகார்யம் சமைந்தவளவிலே யெழுந்தருளுகையன்றியே பதினோராயிரமாண் டெழுந்தருளியிருந்து ரக்ஷித்த ஶீலாதிக்யத்தையருளிச்செய்கிறார்.

(இ-ள்) நாட்டில் - தன்வாஸியறியாத நாட்டிலே, பிறந்து - ஆஶ்ரிதார்த்தித்ததுக்காக, கர்மவஶ்யர் பிறக்குமாபோலேவந்து பிறந்து (க) "ராஜ்ஜ்ரஉ ஸ: - ராஜ்யாத்ப்ரம்ஶ:" இத்யாதியாலே, படாதன - அவர்கள் தாங்களும் படாத க்லேஶத்தை, பட்டு - பட்டு, மனிசர்க்கா - பின்பு பழிசொல்லும்படி க்ருதக்நரான மநுஷ்யர்க்காக, நாட்டை - அவர்கள் வர்த்திக்கிற நாட்டை, நலியும் - நலியக்கடவரான, அரக்கரை - ராக்ஷஸரை, நாடி - இருந்தவிடங்களிலே ஆராய்ந்து சென்று, தடிந்திட்டு - கொன்றிட்டு, அநந்தரத்தில், (உ) " உஶ

(க) ரா-ஆர-சுஎ-உச. (உ) ரா-யு-கஙக-கoக.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஏழாம்பத்து

# ஆறாந்திருவாய்மொழி

பாமரு - ப்ரவேசங்கள்.

ஆறு ;—(பாமருமூவுலகும்) இப்படி யாச்ரிதரை ப்ரக்ருதிஸம்பந்தத்தைப்போக்கித் தன் திருவடிகளிலே சேர்த்தருளு மிம்மஹா குணம் கிடக்கச்செய்தே, "நான்பின்னையும் இப்ப்ரக்ருதியோடே கூட வர்த்திக்கிற வத்தனையாகாதே" என்று தத்ஸம்ஶ்லேஷவிரோதியான தம்முடைய ப்ரக்ருதி ஸம்பந்தாநு ஸந்தாநத்தாலே அத்யந்த மவஸந்நராய், ப்ரக்ருதி ஸம்பந்தத்தைப் போக்கியருளி உன் திருவடிகளிலே யென்னைச் சேர்த்தருளவேணுமென்று சக்ரவர்த்தி திருமகனை நோக்கிக் கூப்பிடுகிறார். *

ப —ஆறாந்திருவாய்மொழியில், இப்படி யாச்ரிதபவ்யனாய் விரோதிநிவாரகனான ஸர்வேச்வரனுடைய குணதிக்யத்தைக் கீழே யநுஸந்தித்து, அவனை யொழிய வேறு விரோதிநிவர்த்தக ரில்லாமையாலே; அவனுடைய காரணத்வாதி ப்ரயுக்தமான ஸம்பந்தவிசேஷத்தையும் தத்கார்யமான ஸர்வாத்மபாவத்தையும், ரக்ஷணோபயுக்தமான பரத்வஸௌலப்யங்களையும், அவற்றோடேகூடின போக்யதாதிசயத்தையும், அந்த போக்யதா ப்ரயுக்தமாய் அத்யுஜ்ஜ்வலமாயுள்ள ப்ராப்யதையையும், அந்தப்ராப்யதா ப்ரகாசகமான வாமநரூப்யாதிசயத்தையும், ஸ்வேநரூபேணவும் காரணபுருஷரூபேணவு முண்டான ரக்ஷணப்ரகாரத்தையும், ததுபயுக்தமான மாலிப்ரப்ருதி நிரஸநத்தையும், விபீஷணபக்ஷபாதத்தையும், ஸ்வஜநரக்ஷணத்தையு மநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரவிசிஷ்டனான ஸர்வேச்வரனுடைய ப்ராப்தியாலும் பக்ஷபாதத்தாலும் அவனைக்கொண்டு விரோதியைக் கழித்துக்கொண்டு அவனை ப்ராபிப்பதாக அத்யார்த்தராய்க் கூப்பிடுகிறார். *

ஈடு ;—இப்படி தெளிந்தால், பின்னைச் செய்வது கூப்பிடுகை போலேகாணும்; இல்லையாகில் "ஸம்ஸாரம் நன்று" என்று கலங்கினாராவரே. "அம்மங்கியம்மாள், 'இத்திருவாய்மொழி பாடக் கேட்டநுபவித்துப் போருமித்துக்கு மேற்பட, இதிலோடுகிற வார்த்திக்கு நம்மால் பாசுரமிட்டுச் சொல்லப்போகாது' என்று பணிக்கும்" என்றருளிச்செய்வர்.

கிழே-* ஆழியெழச்சங்கிலே-ஸர்வேச்வரன் காட்டிக்கொடுத்த விஜயங்களை யநுபவிக்கைக் குறுப்பாக, அவனுடைய வவதாரங்களை யநுஸந்தித்தார்; அந்த ப்ரஸங்கத்தாலே அவனுடைய வவதாரங்களையும் அதுக்கடியான க்ருபாதிகுணங்களையுமநுஸந்தித்து, இக்குணங்களும் நடையாடாநிற்க, இதிலே ப்ராப்தியுண்டாயிருக்க, தாங்கள் சேதநராயிருக்க, ஸம்ஸாரிகளித்தை யிழப்பதே?" என்று விஸ்மிதரானார். "அவர்கள் அபேக்ஷை யில்லாமையாலே யிழக்கிறார்கள், அபேக்ஷையுடைய நாமிழப்போமல்லோம்; அவனுடைய வவதாரங்களையும் வடிவழகையுமநுபவிப்போம்" என்று பார்த்தவிடத்து, அவற்றை யப்போதே கிட்டி யநுபவிக்கப் பெறுமல் மிகவுமவஸந்நராய்; ஸர்வேச்வரனுக்குப் பரமபதத்திலு மிருப்பரிதாம்படி யார்த்தியாலே, கிரம்பிற் றெருகடல் கையெடுத்துக் கூப்பிடுமாபோலே கூப்பிடுகிற கூப்பிடுகேட்டு அவ்விருப்புக் குலைந்துவந்து முகங்காட்டவேண்டும்படி, அவன் ப்ராப்யனுயிருக்கிறபடியையும், ப்ராபகனுயிருக்கிறபடியையும், விரோதிநிரஸநசீலனு யிருக்கிறபடியையுஞ்சொல்லி, கேட்டாரடைய சீராம்படி பெருமிடறு செய்து கூப்பிடுகிறார்.

(க) [ஸஹவோ ந்ருப - பஹவோ ந்ருப] சக்ரவர்த்தி, "பெருமாளைத் திருவபிஷேகம் பண்ணுவிக்க" என்றுகோலி, "அறுபதினுயிரமாண்டு ஒருதலைமிதிக்க வொருதலை கிளம்பும்படியான ராஜ்யத்தை வருந்தி யொருபடி யடிப்படுத்தினேம், இத்தை யொரு சிறுபிள்ளை தலையிலே வைத்தால் பொறுக்குமோ! பொறுதோ!" என்று விசாரித்து, "இதுதன்னை நாட்டோடே கூட்டிப் பார்ப்போம்" என்று கோலி, ராஜலோகத்தை யடையத் திரட்டி, "நானிங்ஙனே பெருமாளைத்திருவபிஷேகம்பண்ணுவிக்கப் பாராநின்றேன்; உங்களுக்கிஷ்டமோ அன்றோ?" என்றுகேட்க, அநந்தரம் "கிழவா போகாய்" என்ன, (உ) [[illegible] ஸதி । [illegible] - கதம் நு மயிதர்மேண ப்ருதிவீமநுஶாஸதி । பவந்தோ த்ரஷ்டுமிச்சந்தி யுவராஜம்மஹாத்மஜம்] "நாமொருப்பட்ட கார்யம் நன்றாய் விழுந்தது, ராஜலோகமிப்படி த்வரிக்கப்பெறுவதே!" என்று, அதிலே போர

(க) ரா-அயோ-உ-உச. (உ) ரா-அயோ-உ-உரு.

ஹ்ருஷ்டனாய், அந்த ஹர்ஷத்தை நெஞ்சிலே யிட்டுவைத்து, "அது தன்னை யிவர்கள்வாயாலே சொல்லக் கேட்கலாகாதோ" என்று "வாரீர்காள், அறுபதினாயிரமாண்டு ராஜ்யம்பண்ணுகிறவிடத்து, இற்றைவரை 'எனக்கு' என்றொரு ஸுகம் கோலாதே உங்கள் ரக்ஷணத்துக்காமவையே தேடிக்கொடுபோந்த நானொருவார்த்தை சொன்னால், 'இப்போது நீயிருந்தாயாகில் லீகமென், க்ரமத்திலே செய்துக்கொள்ளுகிறோம்' என்னுதல், அன்றாகில், 'உனக்கு ப்ரியமாகிலப்படி செய்யலாகாதோ' என்றொருவார்த்தைசொல்லி யாறியிருத்தல் செய்கையொழிய, படுகொலைக்காரர் கையிலே யகப்பட்டார் 'தப்பவேணும்' என்று பார்க்குமாபோலே நீங்களிங்ஙனே கூப்பிடுகைக்கு நான் பண்ணின வபராதமென்" என்ன (க) [வெஹவொ நூவகவூ്ாண மு-ணா:வ-ு த ஸ்ரீவஸதிெத - பஹுவோந்ருப கல்யாண குணா:புத்ரஸ்யஸந்திதே] "எதிரிகளம்பாலழியப்பெற்றதில்லை உன்னுடையவிஷயம், உன்மகனுடைய குணத்தாலே நாட்டைப் படுகொலைக்குத்திறப்பாண்டீ" என்றார்களாயிற்று, நாங்கள் குணஜிதரா யிவ்வார்த்தை சொன்னோ மித்தனையல்லது ஒரு கார்ய புத்த்யா சொன்னோமல்லோநாண். (உ) [யாத-ு நாீவெெஙு ஜெநெ്ரா மு-ணா நாீகெரா8ஹாநு- தாதூநாமிவசைலேந்த்ரோ குணாநாமாகரோமஹாந்] தாதுக்களானவை "இன்னமலையிற்பொன்" என்று விலைபோமாபோலே, புறம்பே சிலகுணங்கள் கண்டால் "பெருமாள்பக்கல்குணம்" என்றிட்டாயிற்றங்குவிலைபோவது-"இவ்வ்யக்தியில் குணம்" என்றாயிற்றுப்புறம்பு விலைபோவது; இப்படிப்பட்டவனுடைய குணங்களைச் சொல்லிக் கூப்பிடுகிறார். *

---

## முதற்பாட்டு.

பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ ! *
பாமருமூவுலகுமளந்த பற்பபாதாவோ ! *
தாமரைக்கண்ணாவோ ! தனியேன்தனியாளாவோ ! *
தாமரைக்கையாவோ ! உன்னை என்றுகொல்சேர்வதுவே ! (க)

ப — முதற்பாட்டில், காரணத்வாதிகளாலே அஸாதாரணஸம்பந்தத்தை யுடையவுன்னையென்று கிட்டியநுபவிப்பதென்கிறார்.

---

(க) ரா-அயோ-உ-உசு. (உ) ரா-கிஷ்-கரு-உக.

(இ-ள்.) பா - பரப்பை, மரு - உடைத்தாய், மூவுலகம் - "க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம்" என்கிற த்ரைவித்யத்தையுடைத்தானலோகத்தை, படைத்த - உண்டாக்கின, பற்பம் - தாமரைப்பூவையுடைய, நாபா-திருநாபியையுடையவனே, பாமருமூவுலகம் — எவம்விதமானலோகத்தை, அளந்த - அநந்யார்ஹமாம்படியளந்த, பற்பம் - தாமரைப்பூப்போலேநிரதிஶயபோக்யமான, பாதா - திருவடிகளையுடையவனே, அநந்யார்ஹராணவரையங்கீகரித்துரக்ஷிப்பதாய் தாமரை - தாமரைபோலேதர்ஶநீயமான, கண்ணா - திருக்கண்களையுடையவனே, அவர்களைஸ்வஸ்பர்ஶஸுகத்தாலேபாநந்திகளாக்கும், தாமரை - தாமரைபோலேவிலக்ஷணமான, கையா - கைகளையுடையவனே, தனியேன் — விரோதிபூயஸ்த்வத்தையாலேஅஸஹாயனனென்னுடைய தனி - விரோதிநிவர்த்தகத்வத்திலத்விதீயனாய், ஆளா - ஆளக்கடவஸ்வாமியானவனே, உனை - இப்படிப்ராப்தனுமாய் போக்யனுமாய் ரக்ஷகனுமானவுன்னை, என்றுகொல்- என்றோ, சேர்வது - ப்ராபிப்பது.

பதந்தோறும், ஓவென்றது - அதிஶயிதமானவார்த்திவிசேஷத்தைக்காட்டுகிறது (க)

ஆறு ;—தேவாதிஸ்தாவராந்தமான நிகிலஜந்துஜால பரிபூர்ணமான ஸகலலோகங்களையும் படைத்தபரமகாருணிகனே, பின்னையும் அந்த ஸ்ருஷ்டமான லோகத்திலே ஸ்ரீவாமனனாய்வந் தவதரித்தருளி அநாலோசிதகுணாகுணமாக ஸர்வாத்மாக்களும் முஜ்ஜீவிக்கும்படி ஸகலலோகத்தையுமளந்தருளின பரமஶீலவானே, எனக்கு நீயல்லதுகதியில்லை; ஆனபின்பு, உன்னுடைய அதிரமணீயவிகஸிதஸரஸீருஹ ஸத்ருஶமான திருநாபியையும், விகஸிதநளின ஸத்ருஶமான திருவடிகளையும், திருக்கண்களையும், திருக்கைகளையும், * கண்களாரளவும்நின்று காணும்படிஉன்னை யென்றோ நான்சேர்வதென்று கூப்பிடுகிறார். (க)

ஈடு; அவ;—முதற்பாட்டு; ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணியுபகரித்து நிரதிஶய போக்யனாயிருக்கிறவுன்னை, உன்னாலே யுபகாரங்கொண்டு உன் சுவடறிந்த நான் கிட்டுவதென்றோவென்கிறார்.

(பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ) பாவென்று-பதார்த்தவாசகமாய், பாமருவியிருந்துள்ள; அதாவது- பதார்த்தங்களினுடைய நெருக்கத்தையுடைத்தான மூவுலகென்னுதல். பாமரு

வென்று- ஒருசொல்லாய், பாபமேமருவியிருந்துள்ள மூவுலகென்னுதல்; (அன்றிக்கே, பாவென்று-பரம்புதலாய், பரப்பையுடைத்தாயிருந்துள்ளவென்னுதல்.) மூவுலகென்று-கீழும், மேலும், நடுவுமான லோகங்களைச் சொல்லுதல். அன்றிக்கே, "க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம் - க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதம்" என்றிவ்வகையிலே யாக்கிச்சொல்லுதல். (படைத்த பற்பநாபாவோ) "எந்தாயே" என்பாரைப்போலே. இத்தை யுண்டாக்குகைக்கடியான ப்ராப்தியேயாய், போக்யதையின்றிக்கே யொழிந்ததாகிற்றன் நானறியிரேனோ. நீயித்தைவருந்தி யுண்டாக்கிற்று அழிக்கைக்காகவோ. இல்லாதவஸ்துக்களை யுண்டாக்கக் கடவநீ, உள்ள வஸ்துவை யழிக்கிறதென் ?

(பாமருமூவுலகுமளந்த) இவற்றையுண்டாக்கி "மேல்பட்டது படுகிறது" என்றிருந்தாயாகிற்றானறியிரேனோ. இத்தைக்கண்ணிலே வெண்ணெயிட்டுக்கொண்டு நோக்குமவனன்றோ; பெற்றதாய் வளர்க்குமாபோலே. (க) "படிக்களவாக நிமிர்த்தநின் பாதபங்கயமே தலைக்கணியாய்" என்று-ஆசையுடையநானிருக்க, இச்சையில்லாதார் தலையிலே திருவடிகளைவைப்பதே !. மஹாபலிபோல்வார், பருந்திருஞ்சிறுப்போலே யித்தையபஹரித்தால், எல்லைநடந்து மீட்டுக்கொள்ளுமவனன்றோநீ.

அதுசெய்தமையுண்டு, உமக்கிப்போது அபேக்ஷிதமென்னென்ன (தாமரைக்கண்ணனோ) உத்பத்தியும், வளர்க்கையும், ஜீவநமுமெல்லா முன்பக்கலிலேயாயிற்று. (உ) "ஸவ்யோகநதாநெநந ஸ-ஞ்யோகோவாஜய - அவலோகநதாநேநபூயோமாம்பாலய" என்னுமாபோலே, திருக்கண்களாலே நோக்கவேணுமென்கிறார். ஆக, திருக்கண்களிலழகை யநுஸந்தித்தார்.

அக்கண்ணழகே ஜீவநமாக விருக்கும் நித்யஸூரிகள் திரளில் தம்மை யிருக்கக்கண்டிலர் ; அத்தாலே "தனியேன்" என்கிறார். (தனியேன்தனியாளாவோ) ஸ்த்ரீகளுடையநோக்கே தாரகமாயிருக்குமவர்களுடைய திரளுக்குங்கூட்டன்றிக்கே, உன்னோக்கேதாரகமா யிருக்குமவ்விபூதியிலுள்ளாருடனுங் கூட்டாகாதே, என்னை மூன்றும் விபூதியாக்கியாளுகிறவனே. அன்றிக்கே, உன்க்ருபையேதாரக

(க) க உ-உ (உ) வி-பு-ரு-உ0-கக

மாகவிருக்கிறவென்னை, உன்க்ருபைக்குஎன்னையொழியவேறுவிஷய மில்லையாம்படி யாளுகிறவனே யென்றுமாம்.

(தாமரைக்கையாவோ) அக்ரூரனுபாதிபோரேனு. (க) [ஸொஸெ நஷி தஂ ஹி - ஸோப்யேநமித்யாதி] திருக்கையிலடையாளமித்தனையு மிலச்சினைப்படியே அவனுடம்பிலே காணலாம்படி அவனை ஸ்பர்சித்து, அவனந்த ஸ்பர்சத்தாலே ஸ்தப்தனுப்நிற்கையாலே கைகயப்பிடித்தெறட்டு, பின்னையணைக்கைக்கு இருவரைக் கண்டதில்லை. (உ) "கரேண ம்ருதுநாதேவ: பாபாந்திர்மோசயந்ஹரி:" என்கிறபடியே.

(உன்னையென்று கோல்சேர்வதுவே) (ஙு) "பூர்ணே சதுர்த்தசே வர்ஷே பஞ்சம்யாம்" என்று நாளிட்டுக்கொடுக்கலாவது தம்பிமார்க்கோ, அஸாதாரணரான வடியாராலும் "இன்னநாள்பெறக்கடவது" என்றொரு நாளிட்டுக்கொடுக்கலாகாதோ. சேஷபூதனுகில் சேஷிகொடுத்தநாள் பெறக்கடவதாயிறே யிருக்கவடுப்பது, அங்ஙன் க்ரமப்ராப்திபார்த்து ஆறி யிருக்கமாட்டுகிறிலேன். (தனியேன் - உன்னையென்றுகோல் சேர்வதுவே) நாராயணனை யொழிந்திருப்பதொரு நாரமில்லையே; இனிச்சேருகையாவது - (ச)* அடியார்கள் குழங்களை உடன்கூடுகையிறே. (உன்னையென்றுகோல்சேர்வது) என்னுநிற்க, அதுசேரும் படி யென்னென்னில்; (ரு) * ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்டுவைக்கையாலே, "உன்னைச்சேர" என்றபோதே தன்னடையேவருமிறே. (க)

---

# இரண்டாம்பாட்டு.

என்றுகோல்சேர்வது? அந்தோ! அரன்நான்முகனேத்தும் * செய்ய,
நின்திருப்பாதத்தையான் நிலம்நீரேரிகால் * விண்ணுயிர்
என்றிவைதாம்முதலாமுற்றுமாய் நின்றஎந்தாயோ !,*
குன்றெடுத்து ஆநிரைமேய்த்து அவைகாத்தஎம்கூத்தாவோ ! (உ)

---

(க) வி-பு-ரு-கஅ-உ. (உ) ஹரிவம்ஸ-உஎ-ரு-கரு.
(ஙு) ரா-யு-கஉஎ-க. (ச) உ-ஙு-கo.
(ரு) ச-சு-கo.

ப.—அநந்தரம், ஸர்வாத்மபூதனுய் ஆபத்ஸகனுன வுன்னுடைய திருவடிகளை யென்று கிட்டுவேனென்கிருர்.

(இ - ள்) நிலம் நீர் எரிகால் விண் - ப்ருதிவ்யாதிபூதபஞ்சகமும், உயிர் - பௌதிகஶரீரவிஶிஷ்டமான ப்ராணிவர்க்கமும், என்று - ஆகிற, இவைதான் - இவை, முதலா - முதலாக, முற்றும் - ஸமஸ்தபதார்த்தங்களும், ஆய் - ப்ரகாரமாம்படி, நின்ற - நின்ற, எந்தாய் - ஸ்வாமியாய், அந்த ஸாமாந்யரக்ஷணமன்றியே, அவதாரப்ரயுக்தவிசேஷரக்ஷணமான, ஆநிரை - பசுத்திரளை, மேய்த்து - மேய்த்து, அதுக்கு வர்ஷத்தால் வந்த பாதை தீரும்படி, குன்று - மலையை, எடுத்து - எடுத்து, அவை - அவை, காத்த - காத்த, எங்கூத்தா - மநோஹாரிசேஷ்டிதத்தையெனக்கு ப்ரகாசிப்பித்தவனே, அரன் - ருத்ரனும், நான்முகன் - ப்ரஹ்மாவும், ஏத்தும் - ஸ்துதிக்கும்படியாய், செய்ய - தர்ஶநீயமான, நின் - உன், திருப்பாதத்தை - திருவடிகளை, யான் - அநந்யப்ரயோஜநனுன நான், சேர்வது - சேர்வது, என்றுகொல் - என்ருே, அந்தோ - ஐயோ!

ப்ரயோஜநாந்தரபரர்க்கும் ஸுலபமானதிருவடிகளை, அநந்யப்ரயோஜநனுன நான் கிட்டுகைக்குக் கூப்பிடவேண்டுவதே யென்று கருத்து. (உ)

ஆறு ;—(என்றுகொல்) சிதசிதாத்மக ஸமஸ்தவஸ்துக்களுக்கு மாத்மபூதனே, நிர்ஹேதுகமாக ஸ்ரீ கோவர்த்தநத்தை யெடுத்தருளிப் பசுக்களை ரக்ஷித்தருளின பரமகாருணிகனே, ஐஶ்வர்யப்ரவணரான ப்ரஹ்மேஶாநாதிகளுக்குங்கூட ஸ்ப்ருஹணீய நிரதிஶய போக்யமான வுன்திருவடிமலர்களை யென்ருே நான் சேர்வதென்று கூப்பிடுகிருர். (உ)

ஈடு ; அவ ;— இரண்டாம்பாட்டு. அந்யபரராய்ப் புறம்பே தாரகாதிகளாம்படி யிருக்கிறவர்களுக்குங்கூட ஸ்ப்ருஹணீயமாம்படி யிருக்கிற திருவடிகளை, அநந்யபரனுய் இதுவே ப்ரயோஜநமாக விருக்கிற நானென்று பெறக்கடவேனென்கிருர்.

(என்றுகொல்) திருக்கையில் ஸ்பர்ஶஸுகத்தை யபேக்ஷித்து, "என்று கொல்சேர்வது" என்றவளவிறே-கீழ்; அதுக்கொரு ப்ரதிவசநம்பெருதேயிருக்க, "என்றுகொல்சேர்வது" என்கிற தென்ன தசைதான். (அந்தோ) இனி, "என்றுகொல்சேர்வது" என்பாருமின்றியே யொழியக்கிடாய்ப்புகுகிறது; நான் முடிந்தேனென்கிருர். (அந்தோ!) என்கிற ஸ்வரத்தாலே - தம்முடைய வாற்ருமையை யாவிஷ்கரிக்கிருர்.

(அரன்நான்முகனேத்தும் செய்யநின்திருப்பாதத்தை) அழிப்பாருடன் ஆக்குவாருடன் வாசியற வுக்கும்படியான திருவடிகளை, ப்ரயோஜநாந்தரபரர்க்குங்கூடஸ்ப்ருஹணீயமாம்படி யிருக்கிற திருவடிகளை அநந்யப்ரயோஜநனான நானென்று பெறக்கடவேன். தந்தாமுடையதொழில்களிலே அந்யபரராயிருக்கிற ப்ரஹ்மாதிகளும் அநந்யபரரா யேத்தும்படி ஸ்ப்ருஹணீயமாய்ச் சிவந்திருந்துள்ள வுன் திருவடிகளை, அநந்யபரனான நான் கிட்டப்பெறுவதென்றோ. [அரன்நான்முகனேத்தும் செய்யநின்திருப்பாதத்தை யான்- என்றுகொல்சேர்வது.]

(நிலநீர்த்யாதி) பெற்றபின்பு நோக்குகை யன்றிக்கே "ப்ரஜையைப்பெறவேணும்" என்று ஏற்கவே வருந்தும் தாயைப்போலே, ஸ்ருஷ்டிக்குமுன்பே யிவற்றை யுண்டாக்குகைக்காக த்ரிவ்ருத்கரணத்தை நினைத்து பஞ்சீகரணத்தைப்பண்ணி, இவற்றையடைய ஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்டமான பதார்த்தங்களுடைய வஸ்துத்வ நாமபாக்த்வங்களுக்காக ஜீவத்வாரா அநுப்ரவேசித்து, பின்னை யிவற்றைச்சொன்ன பாசுரம், அசித்தும் அசிதபிமாநிஜீவனும் ஜீவாந்தர்யாமியான பரமாத்மாவுமான விஸ்ஸங்காதத்துக்கு வாசகமாய்க் கொண்டு, தன்னளவிலேவரும்படி நிற்கிறநிலையைச்சொல்லுகிறது - முற்றுமாய்நின்றவென்கிற வித்தாலே,

இவை யறியாதிருக்க, இவற்றின் பேற்றுக்கு அவன் வருந்த வேண்டுகிற ஹேதுவென்னென்னில் (எந்தாயோ) அதுக்கடியான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. இவற்றை யுண்டாக்கும் நாளிலே யுண்டாக்கி, "இனிமேல்வருமாபத்து, இவைதானே பரிஹரித்துக் கொள்ளுகிறது" என்று விட்டுவைக்கையன்றிக்கே, அரியனசெய்தும் நோக்குமவனென்கிறார். (குன்றேடுத்து) மலையையெடுத்திறே நோக்கிற்று. (ஆநிரைமேய்த்து) நோக்குமிடத்து, வரையாதே பசுக்களை நோக்குமவனாயிற்று (அவைகாத்தவெங்கூத்தாவோ) [ஆநிரைமேய்த்து - குன்றெடுத்து - அவைகாத்தவெங்கூத்தாவோ.] வர்ஷத்திலே நோவுபடுகிற பசுக்களை ரக்ஷிக்கைக்காக மலையையெடுத்தானவன், அப்போது த்ரிபங்கியாய் நின்ற வடிவுதான் வல்லாராடினாப்போலே தமக்காகர்ஷகமாயிருக்கையாலே-எங்கூத்தாவோவென்கிறார். ஆக, இவ்விரண்டுபாட்டாலும்-அவனுடைய ஸ்ப்ருஹணீய

தையைச் சொல்லி, ப்ராப்யத்வம் சொல்லிற்று ; மேலஞ்சுபாட்டாலே-அவனுடைய ப்ராபகத்வம் சொல்லுகிறது. (௨)

---

## மூன்றாம்பாட்டு.

காத்தஎங்கூத்தாவோ ! மலையேந்திக்கல்மாரிதன்னை *
பூத்தண்துழாய்முடியாய்! புனைகொன்றையஞ்செஞ்சடையாய்! *
வாய்த்தஎன்நான்முகனே ! வந்துஎன்னாருயிர்நீயானால் *
ஏத்தரும்கீர்த்தியினாய் ! உன்னைஎங்குத்தலைப்பெய்வனே ? (௩)

ப.—அநந்தரம், ஸர்வஸுலபனாய் ஸர்வாதிகனான நீயெனக்கு தாரகனும்படி செல்லாமை விளைந்திருக்க, நானுன்னை யெங்கேகிட்டுவதென்கிறார்.

(இ - ள்.) மலை - மலையை, ஏந்தி - ஏந்தி, கல்மாரிதன்னை - கல்மழை, காத்த - காத்தபோது, எங்கூத்தா - வல்லாராடினாப்போலே தர்ஸநீயமான நிலையையுடையையாய், பூ - ஸர்வேஸ்வரத்வஸூசகமாய் விகஸிதமான பூந்தாரையுடைத்தாய், தண் - ப்ரமஹரமான, துழாய் - திருத்துழாய்மாலையை, முடியாய் - திருமுடியிலே யுடையையாய், புனை - அத்தோபாதி தன்னையுமீஸ்வரனாகவபிமாநித்துப்புனைந்த, - கொன்றை - கொன்றைமாலையையும், அம் - அத்தாலேயழகுபெற்று, செம் - அந்தவீஸ்வரத்வஸாதகமாயுள்ள வுபாஸகத்வஸூசகமாய்ச்சிவந்த, சடையாய் - ஜடையையுமுடையனான ருத்ரனைப்ரகாரமாகவுடையையாய், வாய்த்த - அவனுக்குமுத்பாதகனாய்த் தன்பக்கலிலே யுத்பந்நனான, என்நான்முகனே - சதுர்முகனைப்ரகாரமாகவுடையையாயிருக்கிற வாகாரத்தையெனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், ஏத்த - அந்தபாரத்வஸௌலப்யங்களுக்கெல்லைகண்டேத்த, அரும் - அரிய, கீர்த்தியினாய் - கீர்த்தியையுடையவனே, என்னபேக்ஷையின்றியே, நீ - நீ, வந்து - வந்து, என் - எனக்கு, ஆருயிர் - பரிபூர்ணதாரகன், ஆனால் - ஆம்படியாலே, உன்னை - ஸர்வாதிகனாய் ஸர்வஸுலபனாயிருக்கிறவுன்னை, எங்கு - எங்கே, தலைப்பெய்வன் - கிட்டியநுபவிப்பேன்.

ஒ - ஒ. ஈஸ்வராபிமாநிகளுக்கு மறிவில்லாதார்க்குங்கிடைத்தவிது, த்வதேகதாரகனாய் வாசியறிந்து கூப்பிடுமெனக்கரிதாவதேயென்றுகருத்து. (௩)

ஆறு ;—(காத்தவெங்கூத்தாவே) த்வததீநஸ்வரூப சதுர்முக பஸுபதி ப்ரப்ருதிகனாய், த்வததீந மத்ஸ்வரூபனுமாய், இயத்தாஸங்க்யாரஹிதமாகையாலே அஸங்க்யஸ்தவமான கல்யாணகுணவி

ஶிஷ்டனுமா யிருந்தவனே, வர்ஷபீடிதமான பசுக்களை ரக்ஷித்தரு ளுகைக்காக ஸ்ரீ கோவர்த்தநத்தை யெடுத்துக்கொண்டு நின்றருளின வுன்னுடைய தர்ஶநீயமான வந்நிலையையும், அப்போது திருவாயர் திருத்துழாயைக் கொண்டொப்பித்தருளப்பண்ணின வவ்வழகையும், கேவலமுன்னுடைய க்ருபையாலேயென்றோ காண்பதென்கிறார். (௩)

௬௫; அவ ;—மூன்றாம்பாட்டு. ப்ரஹ்மாதிகளுக்கும் காரணபூதனானநீ, நிர்ஹேதுகமாக வந்து த்வதேகதாரகனும்படியென்னைப் பண்ணியருளினாய்; ஆனபின்பு, நீயேகுறையும் செய்தருளவேணுமென்கிறார்.

(காத்தவெங்கூத்தாவோ) கீழே க்ருஷ்ணவ்ருத்தாந்தம் ப்ரஸ்துதமிறே; "ஆநிரைமேய்த்தவைகாத்தவெங்கூத்தாவோ" என்று; "எத்திறம்" என்றால், பின்னையும் "எத்திறம்" என்று அதிலேபோமித்தனையிறே. கீழ்ச்சொன்னது வடிம்பிட்டு, திரியட்டும் "காத்தவெங்கூத்தாவோ" என்கிறார். (மலையேந்திக்கல்மாரிதன்னை) கல்லாலே வர்ஷிக்கையாலே மலையையெடுத்துப்பரிஹரித்தான்; நீராலேவர்ஷித்தானாகில் கடலையெடுத்து நோக்குங்காணும், பசுக்கள் ஸ்வரக்ஷணத்துக்கு மலையையெடுத்ததோ.

(பூத்தண்டுழாயித்யாதி) தத்தத்ஸ்வரூபங்களுக்கு அஸாதாரணமான லக்ஷணம்சொல்லுகிறது. (பூத்தண்டுழாய்முடியாய்) தனக்கஸாதாரணமாய் ஐஶ்வர்யஸூசகமான மாலையாயிற்றிது. தன்னுடைய ஸத்தை தன்னதீநமாம்படியிருக்கும் வஸ்துவுக்கு லக்ஷணமாயிற்று இம்மாலை. இத்தால் இவர் பெற்றதாயிற்றென்னிப்போதென்னில் ; உன்ஸத்தையுன்னதீநமானவோபாதி என்ஸத்தையுமுன்னதீநமாயிருக்க, நானெங்ஙனேயுன்னைப்பெறுகைக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ணிக் காணும்படியென்கை. (புனைகொன்றையஞ்சேஞ்சடையாய்) பிறர் ஸத்தையோ தான் உன்னதீநமன்றிக்கேயிருக்கிறது. பசுக்களின்ஸத்தையுன்னதீநமானாப்போலே, ஈஶ்வராபிமாநிகளாயிருப்பாருடைய ஸத்தையுமுன்னதீநமாயன்றோவிருக்கிறது, (புனையித்யாதி) புனையப்பட்டகொன்றையையுடைத்தாய், அழகியதாய்ச் சிவந்திருந்துள்ள ஜடையையுடைய ருத்ரனும்நீயிட்டவழக்கு.

(வாய்த்தவென்நான்முகனே) கீழிரண்டு பதத்திலும்சொன்ன மாலைகள் அவ்வவர்க்கஸாதாரணமா யிருக்குமாபோலேயாயிற்று, இவனுக்கும் தனக்கடைத்த காரியத்துக்கு நாலுமுகம் அஸாதாரணமாயிருக்கும்படி. (வாய்த்த - ஸ்ருஷ்டியையுடைய, சதுர்முகன்.) இன்னமும் ஈஶ்வரன்றனக்கும் "இப்படி ஸ்ருஷ்டிப்போம்" என்றாலும் முடியாதபடியாயிற்று ப்ராஹ்மஸ்ருஷ்டியி லுண்டான வாய்ப்பு.

"என்" என்கிறவிதுக்கு - விஶேஷ்யத்திலே யூற்றமாகக் கடவது. வையதிகரண்யத்தாலே சொன்னால் - கழற்றிக்கொள்ளுகைக்கு முடலாய், கேவலபேதத்தையே சொல்லுகிறதென்று ப்ரமிக்கைக்குமுடலாயிருக்கும்; ஸாமாநாதிகரண்யத்தாலேசொன்னால் ஶேஷஶேஷிபாவமாகிற பிரிவும் தோற்றியிருக்கும். ஆக, ஸாமாநாதிகரண்யவையதிகரண்யங்களிரண்டுக்கும் பலம் நிலைநியமநமிறே. ஆனாலும், ஸாமாநாதிகரண்யத்தாலே சொல்லுமதுக்கு இத்தனைவாசியுண்டு. (க) [ஸ்வ சக்தி - ஸ்வமூர்த்திஶ்ய] ஸ்வார்த்தமாகவிறே யிவற்றையுபாதாநம்பண்ணிற்று. [உபாதத்தே ஸத்தாஸ்திதிநியமநாத்யைஶ்சித்சிதௌ ஸ்வமூர்த்திஶ்ய] - உபாதத்தே ஸத்தாஸ்திதிநியமநாத்யைஶ்சிதசிதௌஸ்வமூர்த்திஶ்ய] ஸத்தையேபிடித்து ஸ்த்திநியமநாதிகளகப்பட அவனதீநமாயிருக்கையாலே, பிரியநின்று ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகைக்கொரு ப்ராப்தியில்லையாம்படியாயிற்று அத்யந்தபாரதந்த்ர்யமிருக்கும்படி.

(வந்தேன்னுருயிர்நீ) பிறர்பக்கல் பண்ணின வுபகாரத்தைச் சொல்லவேணுமோ, என்பக்கல்பண்ணின வுபகாரந்தானே யமையாதோ. "நீயொருவனுளை" என்று கணக்கிட்டுமறியாதே புறம்பே அந்யபரனாயிருக்கிறவென்னை, அத்தைத்தவிர்த்து உன்படியையறிவித்து உன்னையொழிய தரியாதபடியான தசையைப்பிறப்பித்தாய். (ஆனால்) இப்படியிருந்தபின்பு. (ஏத்தருங்கீர்த்தியினாய்) நீ ஸத்தையுண்டாக்க உன்னாலே லப்தஸத்தாகனாயிருக்கிறநான் "ஏத்துவேன்" என்றால், என்னாலே தானேத்தலாம்படியிருந்ததோ. ஆனால், உன்படியது, என்படியிது; இங்ஙனேயிருந்தபின்பு. (உன்னையெங்குத்தலைப்பெய்வனே) நானொருபாயாநுஷ்டாநம் பண்ணி

(க) ஸ-ஸ்த-உ-அஎ.

உன்னையெங்கேவந்து கிட்டப்புகுகிறேன். என்னுலேவந்து கிட்டு கையென்ருன்றுண்டோ. (ந)

---

## நான்காம்பாட்டு.

எங்குத்தலைப்பெய்வன்நான் ? எழில்மூவுலகும்நீயே *
அங்குஉயர்முக்கண்பிரான் பிரமபெருமானவன்நீ *
வெங்கதிர்வச்சிரக்கை இந்திரன்முதலாத்தெய்வம்நீ *
கொங்கலர்தண்ணந்துழாய்முடி என்னுடைக்கோவலனே ! (ச)

ப.—அநந்தரம், ஸர்வஸ்மாத்பரனுய் ஆஸ்ரிதபவ்யனுய் அதிஸயிதபோக்யனுனவுன்னை, அகிஞ்சநனுன நானெங்கே கிட்டுவதென்கிருர்.

(இ - ள்.) கொங்கு - மதுவையுடைத்தாய், அலர் - விகஸிதமான, தண்ணந்துழாய் - செவ்வித்திருத்துழாயாலே யலங்க்ருதமான, முடி - மயிர்முடியை யுடையையாய், என்னுடை - அவ்வழகை யெனக்குப்ரகாஸிப்பித்த, கோவலனே - பவ்யனுனக்ருஷ்ணனே, எழில் - தர்ஸநீயவைலக்ஷண்யத்தையுடைய, மூவுலகும் - த்ரிவிதலோகமும், நீயே - நீயிட்டவழக்காய், அங்கு - அந்தலோகத்திலே, உயர் - ஜ்ஞாநஸக்த்யாதிகளாலே யுச்சரிதனுய்த் தோற்றியிருக்கிற, முக்கட்பிரான் - ஈஸ்வராபிமாநியான த்ரிணேத்ரனும், பிரமன் - அவனுக்கு ஸ்வாமியான வாதிக்யத்தையுடையப்ரஹ்மாவென்று, பெருமானவன் - ப்ரஸித்தனுனவனும், நீ - நீயிட்டவழக்காய், வெங்கதிர் - ஸத்ருக்களுக்கநபிபவநீயனும்படி ப்ரதாபோஜ்ஜ்வலமான, வச்சிரம் - வஜ்ரத்தை, கை - கையிலே யுடைய, இந்திரன் - இந்த்ரன், முதலா - முதலான, தெய்வம் - தேவவர்க்கமும், நீ - நீயிட்டவழக்கு, ஆனபின்பு, நான் - த்வத்ப்ராப்திஹேதுக்களொன்றுமில்லாதநான், எங்கு - எங்ஙனே, தலைப்பெய்வன் - வந்துகிட்டுவேன். (ச)

ஆறு ;—(எங்குத்தலைப்பெய்வன்) ப்ரஹ்மேஸாநாதி ஸர்வ ஜந்துக்களுடைய ஸத்தாமாத்ரமேயோ த்வத்ஸங்கல்பாயத்தம் ; அவர்களுடைய வைஸ்வர்யமும் த்வத்ப்ரஸாதாதீநமன்ருே ; ஆதலால், ப்ரதிபந்தகத்தையும் போக்கியருளி அடியேனை உன் திருவடிகளிலே சேர்த்தருளவேணுமென்கிருர். (ச)

ஈடு ; அவ ;—நான்காம்பாட்டு. கீழ்ப்பாட்டில் - அவர்கள் ஸ்வரூபம் ததநீநமென்றது ; அவ்வவ ஸ்வரூபகதமா யிருப்பன சிலவிலக்ஷணங்களுண்டிறே, அவையும் ததநீநமென்கிறது - இதில்.

(எங்குத்தலைப்பெய்வன்நான்) ஒரு துர்ப்பலனை "மலையைச் சும" என்றால், அவனாலே அதுசெய்து தலைக்கட்டப்போமோ. (எழில்மூவுலகும்நீயே) த்ரைலோக்யத்தி லுண்டான பதார்த்தங்களினுடைய வுத்கர்ஷமும் த்வததீநம்.

(அங்குயர்முக்கட்பிரான்) அந்த வண்டத்திலல்லாத தேவதைகளிற்காட்டில் ருத்ரன்பக்கலிலே வந்தவாறே யோருத்கர்ஷமுண்டிறே; அந்த வுச்ச்ராயமும் த்வததீநம். (பிரமபெருமானவன்நீ) அவன்றனக்குங்கூட ஜநகனாய் சதுர்த்தஶ புவநேஶ்வரனாகையால் வருவதோரேற்றமுண்டிறே ப்ரஹ்மாவுக்கு, அதுவும் நீயிட்டவழக்கு. (வெங்கதிர்த்யாதி) (க) "வஜ்ர ஹஸ்த: புரந்தர:" என்கிறபடியே - வெவ்வியகதிரையுடைத்தான வஜ்ரத்தைக் கையிலேயுடையனாயிருக்கிற விந்த்ரன் தொடக்கமான தேவதைகளுடைய வுச்ச்ராயமும் நீயிட்டவழக்கு.

(கோங்கலரித்யாதி) உன்னையொழிந்த பதார்த்தங்களினுடைய வுத்கர்ஷமும் உன்னதீநமாம்படி யிருக்கிறநீ, உன்னுடைய வுச்ச்ராயம் நானிட்ட வழக்காம்படியானாய். மதுவையுடைத்தாய் விகஸிதமான செவ்வித்திருத்துழாயாலே யலங்க்ருதமான மயிர்முடியையுடையையாய், அவ்வழகையெனக்கு ப்ரகாஶிப்பித்த வாஶ்ரிதபவ்யனான க்ருஷ்ணனே. கொங்கலர் தண்ணந்துழாய்முடி யென்கையாலே - போக்யதாப்ரகர்ஷஞ்சொல்லிற்று ; என்னுடைக்கோவலனே யென்கையாலே - ஆஶ்ரிதபவ்யதையைச் சொல்லுகிறது. (ச)

---

## ஐந்தாம்பாட்டு

என்னுடைக்கோவலனே! என்பொல்லாக்கருமாணிக்கமே! *
உன்னுடைஉந்திமலர் உலகமவைமூன்றும்பரந்து * [டிட்டு *
உன்னுடைச்சோதிவெள்ளத்து அகம்பாலுன்னைக்கண்டுகொண்
என்னுடையாருயிரார் எங்ஙனேகொல்வந்தெய்துவரே ? (ரு)

ப.—அநந்தரம், நிரதிஶய ப்ராப்யபூதனான வுன்னை, லௌகிக விஷயங்களிலே கைகழிந்திருக்கிற வென்னாத்மா வெங்ஙனே கிட்டக்கடவதென்கிறார்.

---

(க) ப்ருஹத்ஸௌத்ராமணி-௩௪.

(இ - ள்.) என்னுடைக்கோவலனே - "பசுவைமேய்" என்று நியமிக் கலாம்படியான வாஸ்ரிதபவ்யதையையெனக்கு ப்ரகாசிப்பித்தவனும், பொல்லா - தொளையாத, என்கருமாணிக்கமே - நீலரத்நம்போலேயெனக்கவிகலபோக்யனானவனே, உன்னுடை - உன்னுடைய, உந்தி - திருநாபியிலே, மலர் - விகஸிதமான, உலகமவை - லோகங்களுடைய, மூன்றும் - ப்ரஸித்தமான குணத்ரய விபாகயுக்தமான விஷயங்களிலே, பாந்து - பாந்துவைத்து, தம்மை யவற்றுக்கு போக்தாவாக வபிமாநம்பண்ணி யிருக்கிற, என்னுடை - என்னுடைய, ஆருயிரார் - ஆத்மாவானவர், உன்னுடை - உன்னுடைய, சோதிவெள்ளம் - விலக்ஷண தேஜோராஸிரூபமான தேசத்துக்கு, அகம்பால் - உள்ளே, உன்னை - நிரதிஶயப்ராப்ய பூதனான வுன்னை, கண்டுகொண்டிட்டு (க) "ஸதா பஶ்யந்தி - ஸதாபஶ்யந்தி" என்கிறகணக்கிலே, நிதியெடுத்துக் காண்பாரைப்போலே கண்டுகொண்டு, வந்தெய்துவர் - ப்ராபிப்பது, எங்ஙனேகொல் - எங்ஙனேயாயிருக்கிறது.

ஸாம்ஸாரிகவிஷயத்தில் கைகழிந்த வெனக்குக் கிட்ட விரகெங்ஙனே யென்றுகருத்து. உந்திமலரிலே யென்றுமாம். (ரு)

ஆறு ;—( என்னுடைக்கோவலனே ) ப்ரஹ்மேஶாநாதிகளுடைய ஸத்தாவிபூதிகள் மத்ப்ரஸாதாதீநமேயாகிலும், த்வதபேக்ஷித மத்தர்ஶந ப்ராப்த்யுபாயத்தை நீயேயநுஷ்டிக்கவேண்டுமென்று றுநிர்ப்பந்தமுண்டாகில், த்வந்நாபீகமலோத்பூத ஸகலலோகாந்தர் வர்த்தி ஸர்வவிஷயங்களிலும் ப்ரவணமான வென்னுடையவாத்மா, ப்ரதிபந்தநிரஸநத்தைப்பண்ணி நிரதிஶய தேஜோமயமான திருநாட்டிலே யுன்னைக்கண்டு ப்ராபிக்கும்படி யெங்ஙனே ; இம்மஹாத்மாவுக்கு முடியாததுண்டோவென்று தம்மையுபாலம்பித்துக்கொண்டு சொல்லுகிறார். (ரு)

ஈடு; அவ் ;—ஐந்தாம்பாட்டு. எல்லாம்செய்தாலும், (உ) *ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி - ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரியன்றோ ; பலம் உம்மதானபின்பு நீரும் சிறிதுயத்நம்பண்ணவேணுங்காணுமென்ன; நீஸ்ருஷ்டித்தலோகங்களில் விஷயங்கள்தோறு மகப்பட்டுக்கிடக்கிற நான், உன்னைப்பெறுகைக்கு ஒருஸாதநத்தை யநுஷ்டித்து வந்து பெறுகையென்றொன்றுண்டோ வென்கிறார்,

---

(க) விஷ்ணுஸூக்தம். (உ) பூர்வமீமாம்ஸா.

(என்னுடைக்கோவலனே) பாண்டவர்களுடையவனைப் போலேயாயிற்று, இதுசீலமிருந்தபடி. (என்பொல்லாக்கருமாணிக்கமே) இதுவடிவழகிருந்தபடி. "அழகிது" என்னில் நாட்டொப்பாமென்று பார்த்து, விஜாதீயமானசப்தத்தாலே சொல்லுகிறாரா தல். அன்றியே, தொளையாமணியென்றுதல். பொல்லல்-தொளைத்தல். அநுபபுக்தமான ரத்நம்போலே யென்னுதல்.

(உன்னுடையித்யாதி) உன்படியிதுவாயிருக்க, உன்னையொழிந்தவிஷயங்களினுடைய வடிவழகிலும் குணங்களிலும் கால்தாழ்ந்து போந்தவனாயிருந்தேன்நான். உன்னுந்தியிலே மலரா நின்றுள்ள லோகங்கள் மூன்றிலுமுண்டான விஷயங்கள்தோறும், தனித்தனியேயற்றுக் கால்தாழ்ந்துபோந்தவனாயிருந்தேன் நான். நீஸர்வஸக்தியோகத்தாலே வ்யாபிக்குமிடமடைய நான் என்னுடைய சாபலத்தாலே கால்தாழ்ந்து திரிந்தேன். இதென்னிலையிருந்தபடி.

அதுக்குமேலே நீயெட்டாநிலத்தை யிருப்பிடமாகவுடையையாயிருந்தாய் (உன்னுடைச்சோதியித்யாதி) உனக்கேயஸாதாரணமாய், நிரவதிகதேஜோரூபமாய், (க) "ᵅஈக்ஷு ரா நமஹீஷ்ஓக்ஷ ந ஜ - அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம்" என்று சொல்லப்படுகிற ஸ்ரீவைகுண்டத்தை யிருப்பிடமாகவுடையையா யிருக்கிறவுன்னை, ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலுண்டான ஸம்பந்தமற்று நெடுந்தூரம் வழிவந்து அதுக்கநுரூபமா யிருப்பதொரு சரீரத்தைப்பரிக்ரஹித்து, பரமபதப்ராப்திபண்ணினாலநுபவிக்கவேண்டி யிருந்தது.

ஆக, என்னிலையிருந்தபடியிது, உன்னிலையிருந்தபடியது, என்னெஞ்சில் ப்ராவண்யமிருந்தபடியிது; ஆனபின்பு, இந்த முதலியார் கடுகவந்து உன்னைக்கிட்டாரோ. (என்னுடையாருயிரார்) சப்தாதிகளிலே ப்ரவணமானவென்னாத்மா. "முதலியார்" என்று க்ஷேபிக்கிறார். ஆக, ஸ்வரூபம் த்வததீநமாயிருந்தது; அவ்வவருடைய வுத்கர்ஷங்களும் த்வததீநமாயிருந்தது. என்னிலையிது, உன்னிலையது, என்னெஞ்சில் ப்ராவண்யமிது; ஆனபின்பு, நானொரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணிவந்து கிட்டுகை யென்றொரு பொருளுண்டோவென்கிறார். (ரு)

---

பார-ஆர-

# ஆறும்பாட்டு.

வந்தெய்துமாறு அறியேன் மல்குநீலச்சுடர்தழைப்ப *
செஞ்சுடர்ச்சோதிகள்பூத்து ஒருமாணிக்கம்சேர்வதுபோல் *
அந்தரமேல்செம்பட்டோடு அடிஉந்திகைமார்வுகண்வாய் *
செஞ்சுடர்ச்சோதிவிடவுறை என்திருமார்பனையே. (சு)

ப.—அநந்தரம், ப்ராப்யதா ப்ரகாஶகமான நிரதிஶயாபிரூப்யத்தையுடைய வுன்னை நான்வந்து கிட்டுமுபாயமறிகிறிலே னென்கிறார்.

(இ-ள்.) மல்கு - செறிந்த, நீலச்சுடர் - நீலச்சுடரானது, - தழைப்ப - பரம்பாநிற்க, இடையிடையே, செம் - சிவந்த, சுடர் - ஒளியையுடைத்தான, சோதிகள் - தேஜோவிசேஷங்களை, பூத்து - பூத்திருப்பது, ஒரு - ஒரு, மாணிக்கம் - நீலரத்நமானது, சேர்வதுபோல் - பொருந்தியிருந்தாப்போலே, அந்தர மேல் - பரமவ்யோமத்திலே, செம் - சிவந்த, பட்டோடு - திருப்பீதாம்பரத் தோடே, அடி - திருவடிகளும், உந்தி - திருவுந்தியும், கை - திருக்கை, மார்பு - திருமார்பு, கண் - திருக்கண், வாய் - திருப்பவளமும், செம் - சிவந்த, சுடர் - ப்ரகாஶத்தையுடைத்தான, சோதி - தேஜஸ்ஸை, விட - பரப்பாநிற்கும்படி, உறை - எழுந்தருளியிருக்கிறவிருப்பை, என் - எனக்குப்ரகாசிப்பித்த, திரு மார்பனை - ஸ்ரீமானானவனை, நான், வந்து - வந்து, எய்தும் - கிட்டும், ஆறு - உபாயம், அறியேன் - அறிகிறிலேன்.

அறியும் நீவந்துகொண்டுபோ மித்தனையென்று கருத்து. (சு)

ஆறு;—(வந்தெய்துமாறறியேன்) அஸமமாய், நீலமாயிருந்த ஜ்யோதிஸ்ஸைத்தழைத்துச் சிவந்தவொளியைப்பூத்ததொரு மாணிக்கங்கிடந்தாப்போலே, திவ்யரூபகதநீலஜ்யோதிஸ்ஸாலும், பீதாம்பரசரணநிம்நநாபீகமலகரதல கௌஸ்துப லக்ஷ்மீவிராஜித வக்ஷஸ்தல விலோசநவதநாருணகிரணங்களாலும் தீப்யமாநனுமாய், ஶ்ரிய:பதியாய்க் கோயிலிலே கண்வளர்ந் தருளுகிறவுன்னைக்காணு தொழியில் தரிக்கமாட்டுகிறிலேன்; காண்கைக்கோருபாயமும் காண்கிறிலேனென்கிறார். (சு)

ஈடு; அவ;— ஆறும்பாட்டு. ஆனாலும், ஏதேனுமொருபடி நீரும் சிறிது செய்துவந்து கிட்டவேண்டாவோவென்ன ; உன்னை வந்துகிட்டுமுபாயமறியேனென்கிறார்.

(வந்தெய்துமாறறியேன்) வந்துகிட்டுமுபாயமு மறிகிறிலேன். நீதானே மேல்விழுந்து உன்வடிவழகைக்காட்டாநின்றால் அத்தை விலக்காமைக்கு வேண்டுவதுண்டு ; என்னுலுன்னையொரு ஸாதநாநுஷ்டாநம்பண்ணிவந்து கிட்டப்போகாது. ஆனாலிழந்தாலோ வென்ன; இழக்கலாயோவுன்படி யிருக்கிறதென்கிறார் (மல்குநீலச்சுடர்தழைப்ப) வடிவழகில்லையென்றுவிடவோ, பெறுவிக்கைக்குப் புருஷகாரமில்லையென்றுவிடவோ, எனக்காசையில்லையாய்விடவோ. (மல்குநீலச்சுடர்) குறைவற்றநீலப்புகரானது. (தழைப்ப) கர்மநிபந்தநமாகவந்ததல்லாமையாலே மேன்மேலனமிக்குவருமிறே; இவ்வளவென்ன வொண்ணுதபடி மேன்மேலனவளராநிற்கும்.

(செஞ்சுடர்ச்சோதிகள்பூத்து) சிவந்தசுடரை யுடைத்தாயிருந்துள்ள தேஜஸ்ஸானது, காலப்பூவலர்ந்தாப்போலேபூத்து. (ஒருமாணிக்கம்சேர்வதுபோல்) அநுபவயோக்யமாம்படி யொருமாணிக்கமானது சாய்ந்தாப்போலே. மல்குநீலச்சுடர் தழைப்பவென்கையாலே - நிறமிருந்தபடிசொல்லிற்று ; செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தென்கையாலே - திவ்யாவயவங்களிருந்தபடிசொல்லிற்று ; ஒருமாணிக்கம்சேர்வதுபோ லென்கையாலே-இரண்டுக்கு மாச்ரயமான திருமேனி தன்னைச்சொல்லுகிறது.

செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தென்கிறவிடத்தில் - தெரியாதபடி மறைத்துச் சொல்லிற்றொன்றுண்டிறே, அதுதன்னை வ்யக்தமாகச் சொல்லுகிறார் மேல் (அந்தரமேலித்யாதி) அந்தரம் - நடுவு; உடம்புக்குநடுவு அரை. திருவரையில் திருப்பீதாம்பரத்தோடே, திருவடிகள் ; திருநாபிகமலம், திருக்கைகள், பெரியபிராட்டியாரெழுந்தருளி யிருக்கையாலே கீழ்ச்சொன்னவற்றோடொக்கச் சொல்லலாம்படி சிவந்திருக்கிற திருமார்பு, திருக்கண்கள், திருப்பவளம், இவை.

(செஞ்சுடர்ச்சோதிவிட) சிவந்தசுடரையுடைத்தான தேஜஸ்ஸைப்ரஸரிக்க. (உறையென்திருமார்பனையே) இதுவுமோராபரணம்போலே. என் ஸ்வாமிநியானபெரியபிராட்டியாரைத் திருமார்விலே யுடையவனை. திருப்பாற்கடலிலே நீருறுத்தாதபடி திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு, அதிலேநாநாவர்ணமாயிருப்பதொரு மேல்விரியைவிரித்தாப்போலே, அவன்சாய்ந்தருள,

மேலெழுந்தருளியிருக்குமாயிற்றுப்பிராட்டி. (மேல்விரி - திருப்ப டுக்கைமேலே யலங்காரமாகப்படுத்துமது.) (க) " வாரஸ்ரியேண ஸ்வஸ்த்ர: - பர்யாயேணப்ரஸுப்த: " என்னக்கடவதிறே. (௬)

## ஏழாம்பாட்டு.

என்திருமார்பன்தன்னை என்மலைமகள்கூறன்தன்னை *
என்றும்என்நாமகளை அகம்பால்கொண்டநான்முகனை *
நின்றசசிபதியை நிலங்கீண்டேயில்மூன்றெரித்த *
வென்றுபுலம்துரந்த விசும்பாளியைக்காணேனோ ! (எ)

ப.—அநந்தரம், ஸ்வேநரூபேணவும் கார்யபுருஷரூபேணவும் நின்று ஸர்வப்ரகாரரக்ஷணம்பண்ணுகிற வவனைக்காணப்பெறேனோவென்கிறார்.

(இ-ள்,) என்திருமார்பன் றன்னை - ஶேஷித்வஸூசகமான, ஶ்ரிய:பதித்வத்தை யெனக்கு ப்ரகாசிப்பித்தவனாய், என்மலைமகள் கூறன் றன்னை - பார்வதியை ஶரீரார்த்தத்திலேயுடைய ருத்ரனைப்ரகாரமாகவுடையனாய் நிற்கிற நிலையையெனக்குக்காட்டினவனாய், என்றும்-என்றும், என்நாமகளையகம்பால்கொண்டநான்முகனை - நாமகளான ஸரஸ்வதியை அந்தரங்கமஹிஷியாய்க்கொண்ட சதுர்முகப்ரகாரத்வத்தை யெனக்குப்ரகாஶிப்பித்தவனாய், நின்ற - இவர்களோடு ஸமகணனையிலேநிற்பானாய், சசீபதியை - ஶசீபதியான விந்த்ரனைப்ரகாரமாகவுடையனாய், ஸ்வேநரூபேண, நிலங்கீண்டும் - பூம்யுத்தரணம்பண்ணியும், ருத்ராந்தராத்மாவாய்க்கொண்டு, மூன்றெயிலெரித்த - த்ரிபுரதஹநம்பண்ணியும் ப்ரஹ்மாவுக்குள்ளீடாகநின்று, ஸ்ருஷ்ட்யுபயுக்தமாக, புலன் - இந்த்ரியங்களை, வென்று - ஜயித்து, துரந்த-ஓட்டியும், இந்த்ரஶரீரியாய்க்கொண்டு, விசும்பாளியை - ஸ்வர்க்கநிர்வஹணம்பண்ணியும்ரக்ஷித்தவனை, காணேனோ - காணமாட்டேனோ

இப்படி ஸர்வப்ரகாரரக்ஷணவ்யாபாரத்தை யுடையவனைக்காண்கையே ப்ரயோஜநமான வெனக்குக்காணக்கிட்டாதொழிவதே யென்றுகருத்து. எயில் - மதிளாய், புரத்தைக்காட்டுகிறது. (எ)

ஆறு; — (என்திருமார்பன்றன்னை) உன்னுடையபோகப்ரவ்ருத்திகள் த்வததீநமானாப்போலே, ப்ரஹ்மருத்ராதிகளுடைய போக

(க) ரா-ஸு-ரு-அ உ௦.

ப்ரவ்ருத்திகளும் த்வததீநம்; ஆனபின்பு, என்னுடையவபேக்ஷித மும் த்வத்ப்ரஸாதைகலப்யம்; இங்ஙனேயிருக்கச்செய்தே, நீயோ என்னபேக்ஷிதம் செய்தருளுகிறிலை ; நானினியுன்னைக்காணப்பெ றாதே போமத்தனையாகாதே யென்கிறார். (எ)

ஈடு ; அவ ;—எழாம்பாட்டு. உத்தேஸ்யலாபம் அவனாலேயாயி ருந்தது, இத்தலையாலே ப்ரவர்த்திகைக்கு ப்ராப்தியில்லாதபடியான பாரதந்த்ர்யமுண்டாயிருந்தது, அத்தலையாலே பெறுமிடத்தில் ஒரு கண்ணழிவின்றிக்கே யிருந்தது ; இப்படியிருக்கச்செய்தேயு மிழந்தி ருக்கக்காண்கையாலே, "நானிவ்விழவோடே கிடந்து முடிந்துபோ மித்தனையாகாதே" என்கிறார்.

(என்றிருமார்பன்றன்னை) இவ்விடத்திலே "என்" என்கிற விதுக்கு – விசேஷணம்சத்திலே யந்வயம்; * (க) என்திருமகள் சேர்மார்வனிற்போலே. என்ஸ்வாமிநியான பெரியபிராட்டியாரைத் திருமார்விலேயுடையவனை. (இதுவிசேஷணத்திலும் விசேஷ்யத் திலும் விசிஷ்டத்திலும் ; ஆச்ரயணதசை ப்ராப்திதசை போக தசை.

(என்மலைமகளித்யாதி) இவ்வோபதங்களில் "என்" என்கிற விதுக்கு - விசேஷ்யாம்சத்திலே யூற்றம். அவனுடைய விபூதி யோகத்துக்கு உறுப்பாகச் சொல்லு மித்தனைபோக்கி, (உ) "மறந் தும்புறந்தொழாமாந்தர்" என்றிருக்குமவர், இவர்களோடே தமக் கோரந்வய முண்டென்கிறு ரல்லரே. (என்மலைமகள்கூறன்ற ன்னை) ஹிமவானுடைய பெண்பிள்ளையைத் தன்னுடம்பி லொரு பார்ச்வத்திலே யுடையனாயிருக்கிறருத்ரனைத் தாணிட்டவழக்காக வுடையனாயிருக்கிறவனை.

(என்றுமித்யாதி) ஸரஸ்வதியை, என்றுமொக்கத் தன்பக்க் லிலே யுடையனாயிருக்கிற சதுர்முகனுக்கந்தராத்மாவாயுள்ளவனை. (நின்றசசீபதியை) இவர்களை யெண்ணினால் தன்னை யெண்ணலாம் படி ஐச்வர்யத்தால் குறைவற்றிருக்கிற விந்த்ரனுக் கந்தராத்மாவா யுள்ளவனை. (ங) "ஸப்ரஹ்மா ஸசிவஃ – ஸப்ரஹ்மாஸசிவஃ" என்றால் (ங) "ஸேந்த்ரஃ – ஸேந்த்ர:" என்றெக்கச் சொல்லலாம் படி மூட்டுப்பொறுத்துநின்ற விந்த்ரனுக்கந்தர்யாமியாயுள்ளவனை.

---

(க) எ-உ-எ, (உ) சு-திருவ-கூஅ.
(ங) தை-நா-கக

இப்போது இவைசொல்லுகிறதுக்குக் கருத்தென்னென்னூல்; கீழே-ஸ்வரூபமுமுச்ச்ராயமும் ததநீநமென்றது; இங்கே - ப்ராப்த யௌவநரான புத்ராதிகளை ஸத்ருஸவிஷயங்களிலே விவாஹம்பண்ணுவிக்கும்பித்ராதிகளைப்போலே, இவர்களுடைய மஹிஷீலாபமும் தந்தாமாலல்ல, ஸர்வேஸ்வரனாலே யென்கை. (நிலங்கீண்டித்யாதி) இவர்களுடைய ப்ரவ்ருத்திகளுமெல்லாம் ததநீநமென்கிறதுமேல்; (நிலங்கீண்டு) ப்ரளயார்ணவமக்நையாய் அண்டபித்தியிலேபுக் கொட்டினபூமியை மஹாவராஹமாய்ப் புக்கெடுத்துக்கொண் டேறின போதை வ்யாபாரம் ததநீநமானாப்போலே, அவர்களுடைய வ்யாபாரங்களும் ததநீநமென்கிறது. (எயில்மூன்றெரித்த) மதிள்மூன்றையெரித்த. (க) "விஷ்ணு ராத்மா-விஷ்ணுராத்மா" என்னக்கடவதிறே; அதுவுமவனிட்டவழக்கு.

(வென்றுபுலன்துரந்த) ஸ்ருஷ்டிக்குறுப்பாக விந்த்ரியஜயத்தைப்பண்ணினவனை. புலன்களை வென்றோட்டின. (விசும்பாளியை) ஸ்வர்க்கத்தை வன்னியமறுத்தாளுகிறவனை. (இங்குப்ரவ்ருத்திவிஸிஷ்டரானவிவர்களோடே ஸமாநாதிகரித்தது-ஸகலப்ரவ்ருத்தியுமவனதீநையாகையாலே யென்னுடையவபேக்ஷிதஸித்திக்கு அவனையொழிய வென்னாற்செய்யலாவதில்லை யென்கைக்காக.) (காணேனே) ஆகச்சொல்லிற்றாயிற்றது-உத்தேஸ்யலாபமவனாலேயாயிருந்தது, அதுக்குறுப்பான ப்ரவ்ருத்தியில் வ்யாபரிக்க ப்ராப்தியில்லாதபடி அதுவு மவனிட்டவழக்காயிருந்தது. இனி இத்தலையாலே பேறுமன்று விளம்பஹேதுவின்றிக்கே யிருந்தது; அவனாலே பேறுமன்று விளம்ப ஹேதுவின்றிக்கேயிருந்தது. இப்படியிருக்கச்செய்தேயும் தம்மை யிழந்திருக்கக் கண்டார்; ஆகையாலே "இனி இவ்விழவோடே யிங்ஙனே முடிந்துபோ மித்தனையாகாதே" என்று க்லேஸிக்கிறார். (எ)

---

## எட்டாம்பாட்டு.

ஆளியைக்காண்பரியாய் அரிகாண்நரியாய் * அரக்கர்
ஊளையிட்டு அன்று இலங்கைகடந்து பிலம்புக்கொளிப்ப *
மீளியம்புள்ளைக்கடாய் விறல்மாலியைக்கொன்று * பின்னும்
ஆளுயர்குன்றங்கள்செய்து அடர்த்தானையும்காண்டுங்கொலோ ?

---

(க) பார-கர்ண

ப,— அநந்தரம், மாலிப்ரப்ருதிகளை நிரஸித்த வுபேந்த்ரமூர்த்தியானவனைக் காணக்கூடுமோவென்கிறார்.

(இ - ள்.) ஆளியை-யாளியை, காண் - கண்ட, பரியாய் - குதிரைபோலவும், அரி - ஸிம்ஹத்தை, காண் - கண்ட, நரியாய் - நரிபோலவும், அரக்கர்-ராக்ஷஸரானவர்கள், அன்று - யுத்தோத்யோகம்பிறந்தவன்று, ஊளையிட்டு - பயாதிஶயத்தாலே கதறிக்கொண்டு, குளவி கூட்டைவிட்டுப்பறந்துபோமாபோலே, இலங்கை - இலங்கையை, கடந்து - விட்டு, பிலம் - பிலத்வாரத்திலே, புக்கு-புக்கு, ஒளிப்ப - பாதாளத்திலே யொளிக்கும்படி, மீளி - பெருமிடுக்கனுய், அம் - தர்ஶநீயனை, புள்ளை - பெரியதிருவடியை, கடாய் - நடத்தி, விறல் - ப்ரபலனை, மாலியை - மாலியை, கொன்று - கொன்று, பின்னும் - அவ்வளவிலேவிடாதே. ஆள் - அதிசூரரானபுருஷர்களை, கொன்று, உயர் - உயர்ந்த, குன்றங்கள் - மலைகளாக, செய்து - பண்ணி, அடர்த்தானையும் - அவர்களையழிக்குமுபேந்த்ரனையும், காண்டுங்கொல் - காணக்கூடுமோ.

மாலிஸுமாலி ப்ரப்ருதிகளை யழியச்செய்தாப்போலே, நம்முடைய வஹங்கார மமகார ப்ரதாநமான ராகத்வேஷாதிகளையுமழிக்கக்காண்போமோவென்று கருத்து. மீளி ௲ மிடுக்கு.

(அ)

ஆறு ;— (ஆளியை) ஆளியைக்கண்ட குதிரையைப்போலேயும், ஸிம்ஹத்தைக்கண்ட நரியைப்போலேயும், ஹதஶேஷரான ராக்ஷஸரெல்லாரும் பீதபீதரா யூளையிட்டு லங்கையினின்றும் ரஸாதலத்திலே புக்கொளிக்கும்படியாக ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுபூதரான பெரியதிருவடி திருத்தோளிலேயேறி லங்கையைச்சென்றடர்த்து, அதிபலபராக்ரமராயிருந்த மாலிஸுமாலிகளை ஸஸைந்யமாகக்கொன்றருளினுப்போலே, விரோதியானவென்னுடைய பாபங்களையும் போக்கி யெனக் கென்றோ தன்னைக்காட்டி யருளுவதென்கிறார்.(அ)

ஈடு ; அவ ;— எட்டாம்பாட்டு; மாலிதொடக்கமான ப்ரதிகூலவர்க்கத்தைக் கொன்றருளின ஸர்வேஶ்வரனைக் காணவல்லோமேயென்கிறார்.

முதலிரண்டுபாட்டாலே - ப்ராப்யன் அவனே என்னுமிடஞ் சொல்லி, மேலைந்துபாட்டாலே - ப்ராபகன் அவனே தன்னைப் பெறுகைக்கு என்னுமிடத்தைச்சொல்லி, இப்பாட்டாலும் மேலிற்பாட்டாலும்-அவனுடைய விரோதி நிரஸநஶீலதையைச் சொல்லி, ப்ரதிபந்தகத்தைப் போக்குவான் அவனே யென்னுமிடத்தைச்சொல்லுகிறது.

(ஆளியைக்காண்பரியாய்) ஆளியைக்கண்ட குதிரையைப் போலவும். (அரிகாணரியாய்) ஸிம்ஹத்தைக்கண்ட நரியைப்போல வும். ஸ்ரீராமாயணத்தே-அந்தராக்ஷஸர் பயப்பட்டபடியாகப் பலவு தாஹரணங்களையிட்டுச் சொல்லிப் போரக்கடவதிறே; இங்கே இர ண்டுவகையாலே யத்தை ஸூசிப்பிக்கிறார். பரி-குதிரை. (அரக்க ரூளையிட்டு) கீழே "நரி" என்கையாலே-அந்த ஸமாதியாலே சொல் லுகிறார். (ராக்ஷஸர்திரளநின்றொரு ப்ரவ்ருத்தி பண்ணமாட்டாதே கதறிக்கொண்டு.)

(அன்றித்யாதி) "மாலி, மால்யவான், ஸுமாலி" என்கிறவர் களை, பெரியதிருவடியை மேற்கொண் டழியச்செய்கிறவன்று. தூசி த்தலையில் நேர்நின்று வ்யாபரிக்க க்ஷமரல்லாமையாலே லங்கையை விட்டுப்போய், பாதாளத்திலே புக்கொளிக்க. புற்றுக்க ளெப்போது மொக்கப் பாம்பு பற்றறுதாப்போலே, என்றுமொக்க ராக்ஷஸர்மாறு தே, "மாலி, ஸுமாலி, மால்யவான்" என்றாப்போலே சொல்லுகிற வர்கள் வர்த்தித்துப் போந்தார்களாய், பெரியதிருவடி முதுகிலே வந்து தோன்றி அவர்களை நிரஸித்தானாகச் சொல்லக்கடவதிறே; அத்தை யிங்கே ப்ரஸங்கிக்கிறார். (பிலம்புக்கொளிப்ப) கையிலாயு தம் பொகட்டாரையும், முதுகுகாட்டினாரையும் கொல்லக்கடவதல் லவிறே; ஆகையால், தப்பியோடிப்போ யொளிப்பாரும் உள்ளேபட் டுப்போனாருமாய்ப் போனார்களாயிற்று.

(மீளியம்புள்ளைக்கடாய்) மீளியமென்று-ஒருசொல்லாய், வலி யையுடைய பெரியதிருவடியை நடத்தியென்னுதல்; "மீளி-அம்- புள்" என்று பிரித்து (க) "கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவி" என்கிறபடியே ப்ரதிகூலர்க்கு ம்ருத்யுபோலே யிருப்பானாய், (உ) "தூவாயபுள்ளூர்ந்து" என்கிறபடியே அநுகூலர்க்கு தர்ஶநீயமான வேஷத்தையுடைத்தான பெரியதிருவடியை நடத்தியென்னுதல். பெரியதிருவடி முதுகிலேவந்து தோற்றும்போதை யழகையேயிறே இவர்கள் பாவித்துக்கிடப்பது. மீளியென்று-வலிக்கும், ம்ருத்யுவுக் கும், பாலைநிலத்தில் தலைமகனுக்கும் பேராகச்சொல்லுவர்கள். (வி றல்மாலியைக்கொன்று) ஆக, ப்ரஸித்தரிலே யொருவனைச்சொல் லிற்று.

---

(க) ரு-கO-உ (உ) தி-மொ-சு-அரு

(பின்னுமித்யாதி) பின்பும், ஆண்பிள்ளைகளாயிருப்பா ரநேக ரை யழியச்செய்து, அவர்களாலே பிணமலையாம்படிபண்ணி. ஆளாலே உயர்ந்தமலைக ளுண்டாம்படிபண்ணி. (அடர்த்தானையும் காண்டேங்கொலோ) அவனுஸ்ரவர்க்கத்தை பழியச்செய்தாப்போலே, நம் விரோதிகளைப்போக்கி நமக்குக் காட்சியிலே யந்வயமாய், நாம் கண்டோமாய்த் தலைக்கட்டவல்லோமோ. (அ)

## ஒன்பதாம்பாட்டு.

காண்டேங்கொலோ? நெஞ்சமே! கடியவினையேமுயலும் *
ஆண்திறல்மீளிமொய்ம்பின் அரக்கன்குலத்தைத்தடிந்து *
மீண்டும்அவன்தம்பிக்கே விரிநீரிலங்கையருளி *
ஆண்டுதன்சோதிபுக்க அமரரரியேற்றினையே. (கூ)

ப —அநந்தரம், விபீஷணபக்ஷபாதத்தாலே ராவணகுலத்தை நிஶ்ஶேஷமாகமுடித்து அவனுக்கு லங்காதிபத்யத்தையுங்கொடுத்துத் தானு மபிஷித்தனாய் ராஜ்யம்பண்ணி * தன்னுடைச்சோதியேற வெழுந்தருளின சக்ரவர்த்தித்திருமகனை, அந்த மேன்மையோடே யிருக்கச்செய்தே அவனைநாம் காணவல்லோமோவென்று நெஞ்சைக்குறித் தருளிச்செய்கிறார்

(இ - ள்.) கடிய - அதிக்ரூரமான, வினையே-பரஹிம்ஸாவ்ருத்தியையே, முயலும் - கல்பித்துப்பண்ணும் மஹோத்யோகத்தையுடையனாய், ஆண் - ப்ராதாபோஷமளமான பும்ஸ்த்வத்தையுடையனாய்க்கொண்டு, திறல் - பராபிபாவுகமான பௌர்யத்தையும், மீளி - ஸிம்ஹம்போலேயிருக்கும், மொய்ம்பில் - பெருமிடுக்கையுமுடையனான, அரக்கன்-ராக்ஷஸஜந்மாவான ராவணனுடைய, குலத்தை - ப்ராதாவான கும்பகர்ணனும் இந்த்ரஜித்ப்ரமுகபுத்ரருமானகுலத்தை, தடிந்து - நிஶ்ஶேஷமாக வறுத்துப்பொகட்டு, அவ்வளவில்விடாதே, மீண்டும் - பின்னையும், அவன்தம்பியாயிருக்கச்செய்தே, ஆப்ரயேஞுபகாரமடியாக, அவன்றம்பிக்கே - விபீஷணனுக்கு, விரி - விஸ்தீர்ணமான, நீர் - ஸமுத்ரஜலத்தையுடைத்தான, இலங்கை - லங்கையை அருளி - ராஜ்யமாகக் கொடுத்து, ஆண்டு - திருவயோத்யையிலெழுந்தருளி யபிஷிக்தராய்ப் பதினோராயிரம் ஸம்வத்ஸரம் ராஜ்யம்பண்ணி, தன் - தனக்கஸாதாரணமாய், சோதி - ஜ்யோதிரூப்மான பரமபதத்திலே, புக்க-சென்றிருப்பானாய், இந்தமேன்மையாலே, அமரர்-நித்யஸூரிகளுக்கு, அரி-ஸிம்ஹஶ்ரேஷ்டம்போலே, ஏற்றினை-

செருக்குத்தோன்ற வெழுந்தருளியிருக்கிறவனை, நெஞ்சமே - பிரிவுக்குக்கூட்டா யீடுபட்டுப்போந்தநெஞ்சமே, நாம், காண்டுங்கோலோ-காணக்கூடுமோ.

மீண்டென்று ஆண்டென்கிறவிடத்திலே யந்வயிக்கவுமாம்; ரஜஸ்தமஃகார்யமான வந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களையும், தஜ்ஜநிதகாமக்ரோதாதிகளையும், ராவணகும்பகர்ணாதிகளை ஸஸந்தாநமாக வழித்தாப்போலேயழித்து, * தர்மாத்மாவான விபீஷணனுக்கு லங்காராஜ்யத்தைக்கொடுத்தாப்போலே, ஶுத்தஸத்த்வகார்யமான ஜ்ஞாநவைஶத்யத்தையுடைய நமக்கு கைங்கர்யஸாம்ராஜ்யத்தைத்தரும் ஸர்வேஶ்வரனைக்காணக்கூடுமோவென்று கருத்து. மீளியென்று-ம்ருத்யுவென்றுமாம். மொய்ம்பு-மிடுக்கு. திறல்-ஶௌர்யம். (கூ)

ஆறு;—(காண்டுங்கொலோ) பின்னையும் க்ரூரகர்மத்திலே நிரதனாய் 'வீர்யதேஜோவிஶிஷ்டனாய் ம்ருத்யு ஸத்ருஶனுமாயிருந்த ராவணனுடைய குலோத்ஸாதநத்தைப்பண்ணி, " அவனைக்கொன்றோமே" என்று திருவுள்ளத்திலேநொந்து, அவன் தம்பியான ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கு லங்கைஶ்வர்யத்தைக்கொடுத்தருளி, மீண்டெழுந்தருளி, ஸ்வவிஶ்லேஷ ஜநித நிரவதிகவ்யஸநத்தாலே விநஷ்டப்ராயமான திருவயோத்யா நகரிலுள்ள ஸ்த்தாவரஜங்கமாத்மகமான ஸர்வஜந்துஜாதத்தையும் ரக்ஷித்தருளி, அவர்களையுங்கூடக்கொண்டு திருநாட்டிலே யெழுந்தருளி, திருமாமணிமண்டபத்திலே * அயர்வறுமமரர்கள் நடுவே ப்ரதிகூலநிரஸந ஜமாஜய த்தோடேகூடவெழுந்தருளியிருக்கிறவிருப்பை, நெஞ்சே நாமுமொருநாள் காணவல்லோமோவென்கிறார். (கூ)

ஈடு ; அவ ;—ஒன்பதாம்பாட்டு. ராவணாதிகளை நிரஸித்த தஶரதாத்மஜனை, நெஞ்சேகாணவல்லோமே யென்கிறார்.

(காண்டுங்கொலோநெஞ்சமே) இழவாலேகட்டிக்கொண்டு கதறுகைக்குக் கூட்டானநீ, இப்பேற்றாலே நிர்வ்ருதராயநுபவிக்கு மநுபவத்துக்கும் நீகூட்டாய் நாமவனைக்காணவல்லோமேயோ. (கடியவினையேமுயலும்) தாயையும் தமப்பனையுமிரண்டிடத்திலே யாக்குவாரைப்போலேயிறே, பெருமாளையும் பிராட்டியையு மிரண்டிடத்திலேயாக்கிற்று. இதில் தாழ்ந்திருப்பதொரு செயலில்லை யாயிற்று இவன் செய்யுமவற்றில். ஸர்வேஶ்வரனுக்கு " க்ரமத்தாலே பலம்கொடுக்கிறோம்" என்றாறி யிருக்கவொண்ணாதபடி யாயிற்றுக் கொடிய செயல்கள் செய்யும்படி. " இஹைவ ஸுகஸமாப்நோதி — இஹைவபலமஶ்நுதே" என்னும்படியே.

அவதாரணத்தால்-ஸதாசாரஸம்பந்தமில்லாதவன். (ஆண்டிற லித்யாதி) ஆண்பிள்ளைத்தனத்தில்வந்தால், திறலையுடைய ஸிம்ஹம் போன்ற மிடுக்கையுடைய வரக்கன். மீளி - ஸிம்ஹம். அன்றியே, திறலையுடையனுய், பராபிபவநஸாமர்த்யத்தையுடையனுய், ம்ருத் யுகல்பமான மிடுக்கையுடையனுன ராவணனுடைய குலத்தைத்த டிந்து. தடிகை - கடிகை. (க) "கரிஷ்யே மைதிலீ ஹேதோ ரபிசாசமராக்ஷஸம் - கரிஷ்யேமைதிலீ ஹேதோரபிசாசமராக்ஷஸம்" என்கிறபடியே குலமாகநிரஸித்து.

(அவன்தம்பிக்கேவிரிநீரிலங்கையருளி) (உ) "யதிவாராவணஸ்ஸ்வயம்-யதிவாராவணஸ்ஸ்வயம்" என்று -பரணமென்ற பாசுரமுகிதாயிருந்தது, "அவனோடு ஸம்பந்தமுடையானொருவன் வந்தானைகையன்றிக்கே, அவன்றானே வரப்பெறுவதுகாண்" என்று செவிசீப்பாய்ந்திருந்தாரிறே, அங்குநின்றும் வந்தானொருவனைக் கைக்கொண்டாராக வமையாதோ, இந்நிர்ப்பந்தமென்னென்னில்; அவனோடு ஸம்பந்தமுடையானொருவனைக் கைக்கொண்டால் அவன்றானும் நானுபேருமே யாய்ப்போம்; அவன்றானே வரப்பெற்றதாகில் துறப்புக்கூடாக நோக்கிற்றாகலாமிறே; இனித்தான் ப்ராதிகூல்யத்தில் முதிரநின்றானுமவனே யாகையாலே, ரக்ஷகாபேக்ஷயுள்ளதும் அவனுக்கேயிறே. இப்படி அவனை விஷயீகரிக்கக்கோலிப்பெறாத விழவுதீர்ந்தது இவனைக்கைக்கொண்டபின்பாயிற்று. (௩) "அநுஜோராவணஸ்யாஹம் - அநுஜோராவணஸ்யாஹம்" என்று அவன்வர, இவரும் "அவன்றம்பியே" என்றாயிற்று அவனைக்கைக்கொண்டது. (விரிநீரிலங்கையருளி) கடல் சூழ்ந்த லங்கையைக்கொடுத்தருளி.

(மீண்டும் - ஆண்டு) ராவணவதாநந்தரத்திலே, ப்ரஹ்மாதிதேவர்கள் "தேவரையம்புக்கிலக்காக்கி, நாங்களெங்கள்கார்யம் தலைக்கட்டிக்கொண்டோம்; இனி, தன்னுடைச்சோதியேற வெழுந்தருளவமையும்" என்ன, அவ்வளவிலே ருத்ரன், "தேவர் அங்ஙன்செய்தருளவொண்ணாது, திருவபிஷேகத்துக்கு விக்நம்பிறக்

(க) ரா-ஆர-௬௯-௬௬. (உ) ரா-யு-௧௮-௩௪.
(௩) ரா-யு-௧௮-௩௪.

கையாலே திருத்தாய்மாரு மிழவுபட்டிருந்தார்கள்; நாடுமுடைய னொந்திருந்தது, ஸ்ரீபரதாழ்வானு மார்த்தனுயிருந்தான், ஆன பின்பு, (க) " ஆஶ்வாஸ்யபரதம்ஸீக்ரம் – ஆஶ்வாஸ்யபரதம்ஸீக்ரம் " என்கிறபடியே ஸ்ரீபரதாழ்வான் தொடக்கமானரிழவுகளெல்லாந்தீ ரும்படி மீண்டெழுந்தருளி, திருமுடிசூடி, நாட்டைவாழ்விக்கவே ணும் " என்ன, அதுதிருவுள்ளத்துக்குப்பொருந்தும் செயலாகை யாலே பதினோராயிரமாண்டொருபடிப்படவிருந்து நாட்டைவாழ் வித்தருளி.

(தன்சோதிபுக்க) அம்புக்கிலக்காக்குவா ரிருந்தவிடத்தை விட்டுத் தனக்கஸாதாரணமாய் நிரவதிகதேஜோரூபமாயிருக்கிற பரமபதத்திலேபோய்ப்புக்க (அமரரரியேற்றினையே) அம்பிட்டெய் வாரின்றிக்கே ஆநுகூல்யமே ஸ்வபாவமாய் கைங்கர்யைகநிஷ்ட்ட ரான நித்யஸூரிகள் நடுவே அவனிருக்குமிருப்பைக் காணவல்லோ மே. கோவத்ஸஸங்கத்தின்நடுவே யொருவ்ருஷபம் செருக்கித்திரியு மாபோலே, நித்யஸூரிகள்கொண்டாட, அவர்கள் நடுவே அத்தா லேசெருக்கிமேனாணித்திருக்கு மிருப்பைச்சொல்லுகிறது. நித்ய ஸூரிகள் திரளிலே அவ்வோலக்கத்தின்நடுவேயிருக்கு மிருப்பைக் காண்கையிறே ப்ராப்யமாகிறது. (கூ)

## பத்தாம்பாட்டு.

ஏற்றரும்வைகுந்தத்தை அருளும்நமக்கு * ஆயர்குலத்து
ஈற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்கு மாயங்களேஇயற்றி *
கூற்றியல்கஞ்சனைக்கொன்று ஐவர்க்காய்க்கொடுஞ்சேனைதடிந்து *
ஆற்றல்மிக்கான் பெரியபரஞ்சோதிபுக்கஅரியே. (கo)

ப.—அநந்தரம், ஸ்வஜநமான ஸ்ரீவஸுதேவ பாண்டவ ப்ரப்ருதிகளு டைய விரோதிகளை நிரஸித்து ரக்ஷித்த க்ருஷ்ணன், நமக்குப் பரமபதத்தை யருளுமென்கிறார்.

(இ-ள்.) ஈன்று - பிறந்தபோதே, இளம் - அதிமௌக்த்யத்தையுடைய, பிள்ளை - பிள்ளையாய்க்கொண்டு, ஆயர்குலத்து - கோபகுலத்திலே, ஒன்றாய் - ஏகீபவித்து, புக்கு - புக்கு, மாயங்களே - பூதநாஶகட யமளார்ஜுநநிரஸநரூப

(க) ரா-யு-கஉஉ-சு-

மாண வத்யாஶ்சர்யங்களேயே, இயற்றி - ப்ரவர்த்தித்து, கூற்று - உடலையு முயிரையும்பிரிக்கும்ம்ருத்யுவின், இயல் - ஸ்வபாவத்தை யுடையனுய்க்கொண்டு, கஞ்சனே - ஸ்ரீவஸுதேவர்தேவகியார்க்கு ப்ராணபூதனை தன்னைப் பிரித்த கம்ஸனே, கொன்று - நசிப்பித்து, பின்பு, ஐவர்க்கு - பாண்டவர்களேவர்க்கு, ஆய் - ஆய், கொடும் - க்ரூரமான, சேனே - துர்யோதநஸேனையை, தடிந்து - அழியச்செய்து, இதெல்லாம்செய்தபின்பு, (க) "; ஙிணாஂ ... வ்ருத்திவதே - ருணம்ப்ரவ்ருத்தமிவமே" என்று ஒன்றும்செய்யாதாரைப்போலே சீற்றம்மிஞ்சுகையாலே, மிக்க - மிக்க, ஆற்றலான் - பொறையையுடையனுய், பெரிய - அபரிச்சிந்நமாஹாத்ம்யத்தையுடைத்தாய், பரஞ்ஜ்யோதிஶ்ஶப்தவாச்யமான பரமபதத்திலே, புக்க - பூபாரநிர்ஹரணநந்தரமெழுந்தருளிப் புக்க, அரி - சீரியசிங்கமான க்ருஷ்ணனுனவன், ஏற்றரும் - * பரமயோகிவாங்மநஸா பரிச்சேத்யஸ்வரூபஸ்வபாவமான, வைகுந்தத்தை - பரமபதத்தை, நமக்கு - நமக்கு, அருளும் - தன்க்ருபையாலே தந்தருளும்.

(உ) " ஸவ... ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி " என்று ஸமஸ்தவிரோதிநிவர்த்தகனுனவன், " ... மாமேகம்: " என்கிறபடியே நம்மார்த்திதீரும்படி பலப்ரதனுமென்று கருத்து. அரியென்று- ஸம்ஜ்ஞையுமாம். பாபஹரஸ்வபாவனென்றுமாம். (கo)

ஆறு;—(ஏற்றரும்) ஸ்ரீநந்தகோபகுமாரனுய்வந்து பிறந்தருளி, * திண்கொளசுரரைத்தேய வளர்ந்தருளி, பந்துரூபேணபோய்ப் புக்கு ப்ரதிகூலனுன கம்ஸனே வஞ்சித்துக்கொன்றருளி, பின்னைப் பாண்டவர்களுக்காக தத்ப்ரதிகூலனுன துர்யோதநனேயும், க்ரூரமானவவனுடைய ஸேனையையும் நிஶ்ஶேஷமாக நஶிப்பித்துப் பாண்டவர்களுக்கு ராஜ்யத்தைக்கொடுத்து, பின்னையுமவர்களுக் கொன்றும் செய்யாதாருய்த் திருநாட்டிலேபோய்ப்புக்கருளின பரமபுருஷனே அந்ததுஷ்ப்ராபமான திருநாட்டைநமக்கும் தந்தருளுமென்று தம் திருவுள்ளத்தையாஶ்வஸிப்பிக்கிறுர். (கo)

ஈடு ; அவ ;— பத்தாம்பாட்டு. ப்ராப்யனவனே யென்னுமிடத்தைச்சொல்லி, தன்னைப்பெறுகைக்கு ஸாதநம்தானே யென்னுமிடத்தையுஞ்சொல்லி, விரோதிநிரஸநம்பண்ணுவானுமவனே யென்னுமிடத்தையுஞ்சொல்லி, இப்படிநமக்குப்பேற்றுக்குக் கண்ணழிவி

---

(க) பார-உத்யோ-ருஅ-உஉ (உ) கீதை-க்அ-சுசு.

ன்றிக்கே யிருந்தபின்பு அவன் தன்னை நமக்குத்தருமென்றறுதி யிடுகிறார்.

(ஏற்றரும்வைகுந்தத்தையருளும்நமக்கு) ஒருவராலும் ஸ்வ யத்நத்தாலே ப்ராபிக்கவொண்ணுதிருக்கிற ஸ்ரீவைகுண்டத்தை அவன்றானே தரப்பெறவிருக்கிற நமக்குத்தரும்.

எல்லாவழியாலும் அவன்ஸ்வபாவத்தையறிந்து "அத்தைத் தரும்" என்றிருந்தீரேயாகிலும், பெறவிருக்கிறநம்படியைப் பாரா ரோவென்னில் (ஆயர்குலத்தீற்றிளம்பிள்ளை) நம்படிபார்க்கவறியாத முக்தன். (க) "ஈ-ஹ்ஸாய-ஜஸெநா-ஸ-முக்தஸாயுஜ்யதோ பூ:" என்னக்கடவதிறே, இவ்விடமிரண்டுவகையாலே ஸப்தம் வசிக்கக்கடவது. ஈறென்றுகொண்டு - முடிவாய், ஈறானவிளம் பிள்ளை யென்றாய் - அதிமுக்தனென்றபடி. அன்றிக்கே, ஈன்றி ளம்பிள்ளையென்றாய் - கற்றிளம்பிள்ளையென்றபடி. இரண்டாலும் - அதிமுக்தனென்றபடி. (ஒன்றாய்ப்புக்கு) கம்ஸனும் பொய்யேமாது லனாய் "வில்விழவுக்கு" என்றழைத்துவிட, இவனும்பொய்யே மருமகனாய் அதுக்கெல்லாம் தானேகடவனாக வபிமாநித்துப்போய்ப் புக்கானாயிற்று. அன்றிக்கே, "வில்விழவு" என்றுகொண்டொரு வ்யாஜத்தையிட்டுப்போய்ப்புக்கென்னுதல்.

(மாயங்களேயியற்றி) ஆயுதசாலையிலே புக்கு ஆயுதங்களைமுறி ப்பது, ஈரங்கொல்லியைக்கொன்று பரிவட்டம் சாத்துவது, குவல யாபீடத்தின் கொம்பைமுறிப்பது, மல்லரைக்கொல்லுவதான வாஸ்சர்யங்களையே செய்து. இயற்றுதல் - ப்ரவர்த்தித்தல், இவ னிப்படிசெய்யப்புக்கவாறே அவற்றைக்கேட்டுப் பொறுககமாட்டா மை ம்ருத்யுபோலே கிளர்ந்தானாயிற்றுக்கம்ஸன் (கூற்றியல்கஞ்ச னைக்கொன்று) மஞ்சத்திலேநிற்கிறகம்ஸனைமுகம்கீழ்ப்பட விழவிட் டுக்கொன்றுபொகட்டானாயிற்று. இயல்வு - ஸ்வபாவம். (உ) "விம ஊகிரீடவநீதமௌவாதயாஈஸ - விகளத்கிரீடமவநீதலேபா தயாமாஸ" என்றதுக்குப்பொருள் - "ராஜத்ரோஹிகளைக்கொல் லும்போது ராஜசிஹ்நங்களைவாங்கிக் கொல்லுவாரைப் போலே காண்" என்றம்மாள். தான்கொடுத்த தரமாகையாலே மற்றொ ருவர்க்குத் தேற்றத்துக்குடலாகவேணுமிறே. (அதாவது - ஈஸ்

(க) ஸ்தோத்ர-௬௩. (உ) வி-பு-ரு-உ௦-அ௪.

வரன்கொடுத்த சிஹ்நங்களிருக்கில் அவன்றன்னுடும் கொல்லப் போகாதென்கை.

ஆக, தன்னைத்தானறிவதற்குமுன்பு, கம்ஸன்வரவிட்டவர்களையும் அவன்றன்னையும் தப்புகைக்குப் பணிபோந்தது. பருவம் நிரம்பித் தன்னைத்தானறிந்தபின்பு பாண்டவர்கள் கார்யம்செய்து திரிந்தவித்தனை, (ஐவர்க்காய்க்கோடுஞ்சேனைதடிந்து) பாண்டவர்களைச் சீறினவர்களுடைய "ஸாரதி, ஸாரதி" என்று வாய்பாறிக் கொண்டுவர, அவர்களையடையத்தேர்க்காலாலே யுழக்கிப்பொகட்டானாயிற்று.

(ஆற்றல்மிக்கான்) ப்ரதிபக்ஷத்தையும் வேரோடே வாங்கிப் பொகட்டு, தர்மபுத்ரன்தலையிலே முடியையும்வைத்து, இவள்குலைந்தகுழலையும் முடிப்பித்த விடத்திலும், (௧) "நாதிஸ்வஸ்தமநா: - நாதிஸ்வஸ்தமநா:" என்றிறே யெழுந்தருளிற்றும். ஆற்றலென்று - பொறையாய், பொறைமிக்கவனென்னுதல், அன்றிக்கே, வலியாய், வலிமிக்கவனென்னுதல்- இவற்றையடைய வழியச்செய்கைகடியானவலியைச்சொன்னபடி. (பேரியபரஞ்சோதிபுக்கவரியே) கம்ஸனும் துர்யோதநனுமில்லாதவிடத்தில் பரமபதத்திலேபோய்ப் புக்க பின்பும், "நித்யஸூரிகள் நடுவேயிருந்தோமிறே" என்று பாராதே, "கம்ஸன்", "துர்யோதனன்", "கர்ணன்" என்று, ஆசிலேவைத்தகையுந்தானுமாய் விரோதிகள்மேலே சீறின சீற்றத்தின் வாஸநை அங்கேயுமநுவர்த்தித்தபடி. (௧௦)

---

## பதினோராம்பாட்டு.

புக்கஅரியுருவாய் அவனுடல்கீண்டுகந்த *
சக்கரச்செல்வன்தன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
மிக்கஓராயிரத்துள் இவைபத்தும்வல்லாரவரை *
தொக்குப்பல்லாண்டிசைத்துக் கவரிசெய்வர்ஏழையரே. (௧௧)

**ப.**—அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவர்களை, பகவத்கைங்கர்யபரரான *மதிமுகமடந்தையர் சாமரவ்யஜநாதிகளைக்கொண்டு ஸத்கரிப்பர்களென்று பலத்தையருளிச்செய்கிறார்.

---

(௧) பார-உத்-௫அ-௨௨.

(இ-ள்.) அ - அத்யத்புதமான, அரியுருவாய் - ஸிம்ஹவிக்ரஹத்தையு டையனாய், புக்கு - ஶத்ருவிஷயத்தில்புக்கு, அவுணன் - ஆஸுரப்ரக்ருதி யான ஹிரண்யனுடைய, உடல் - ஶரீரத்தை, கீண்டு - பிளந்து, உகந்த - அநா யாஸேந ப்ரஹ்லாதவிரோதிபோனபடியாலே ப்ரீதனாயிருப்பானாய், விரோதிநிர ஸநத்திலவகாஶமில்லாதபடியாலே, சக்கரச்செல்வன்றன்னை - அழகுக்கு மைஶ் வர்யத்துக்கு முறுப்பான திருவாழியையுடையவனை, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், மிக்க - பகவத்குணசேஷ்டிதாதிகளை கார்த்ஸ்ந்யேந ப்ரதிபாதிக்கும் பெருமை யையுடைத்தாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழிக் குள்ளே, பகவத்விஷயத்தில் ப்ராப்யத்வவிரோதிநிவாத்தகத்வங்களடியான வபிநிவேஶத்துக்கு ப்ரகாஶகமான, இவை - இவை, பத்தும் - பத்தும், வல்லா ரவரை - அப்யஸிக்கவல்லாரானவர்களை, ஏழையர் - பகவத்கைங்கர்யபரர்களாய் பாகவதகிஞ்சித்கார சபலைகளாயிருக்கிற * மதிமுகமடந்தையர், தொக்கு - திரண்டு, பல்லாண்டிசைத்து - மங்களாஶாஸநம்பண்ணி, கவரி - தத்விஷ யத்தில்பண்ணும் சாமரவ்யஜநாதிகளை, செய்வர் - பண்ணியுபசரியாநிற்பர்கள்.

புக்கவரியுருவென்று - காதாசித்கமாக ப்ரவேஶித்த நாஸிம்ஹரூபத்தை யுடையனாயென்றுமாம். இது - கலித்துறை. (கக)

ஆறு;—(புக்கவரியுருவாய்) வாசாமகோசரமாம்படி மஹாஶ் சர்யமான ஸிம்ஹரூபதரனாய்ப்புக்கு அஸுரனைப்பிளந்தருளி ப்ரஹ் ருஷ்டனாய், தத்தத்ப்ரதிகூல நிரஸநோசித ஸர்வதிவ்யாயுத ஸம்பத் பரிபூர்ணனாய், ஆஶ்ரிதார்த்த ஸ்வரூபரூபகுண விபூதிகனான பரம புருஷனுக்கு ப்ரதிபாதகமாய், ப்ரதிபாத்யத்தினாலும் மஹத்தான திருவாய்மொழிகளில் இத்திருவாய்மொழிவல்லார்க்கு பகவத்பரி சர்யைக போகராயிருப்பா ரெல்லாரும், நிறந்திறமாக ஸர்வஶேஷ வ்ருத்திகளும் பண்ணுவார்களென்கிறார். (கக)

ஈடு;—நிகமத்தில் - இத்திருவாய்மொழிகற்றாரை, * மதிமுக மடைந்தையர் விரும்பித் திருப்பல்லாண்டுபாடி ஶ்லாகிப்பார்களென் கிறார். (நம்முடைய ப்ரக்ருதி நமக்கு பயஹேதுவென்று உபேக்ஷித் தால் நிரஸிக்குமென்று கருத்து.)

(புக்கவரியுருவாய்) அவ்வரியுருவாய் - புக்கு. அவ்வரியுரு வென்னு மித்தனையாயிற்றுச்சொல்லலாவது. நாஸிம்ஹமானவேஷ த்தைக்கொண்டு விரோதி ஸந்நிதியிலேகிட்டி. அன்றிக்கே, ஹிரண்

யனுடலைப்பிளந்துகொடு புறப்பட்டபோதைக்கடுமை. புறம்பிட் டொருவன்வந்து செய்தானுகையன்றிக்கே, உள்ளேநின்று மொரு ஸிம்ஹம் பிளந்துகொடு புறப்பட்டாப்போலே யாயிற்று; அத்தை ச்சொல்லுதல். (தாதாத்விகமாகப்ரவேஶித்த நரஸிம்ஹரூபத்தை யுடையவனென்கை.) (அவுணனித்யாதி) ஹிரண்யனுடலைப்பிளந் துபொகட்டு, "சிறுக்கன்விரோதி போகப்பெற்றோம்" என்று உகந் தானாயிற்று.

(சக்கரச்சேல்வன்றன்னை) ஹிரண்யனுடைய வுடலுங்கூடத் திருவுகிருக்கு அரை வயிறாய்ப்போகையாலே, பின்னை யழகுக்குப் பத்திரங்கட்டினவித்தனையாயிற்று, அழகுக்கு மைஶ்வர்யத்துக்கு முறுப்பான திருவாழியையுடையவனை;

(குருகூரித்யாதி) ஆழ்வாரருளிச்செய்த, மிக்கவோராயிரத்து- பகவத்விஷயத்தையுள்ளளவும் சொன்னவாயிரத்திலும் வைத் துக்கொண்டு, இப்பத்தையுங்கற்றவர்களை.

(தோக்கித்யாதி) கிண்ணகத்திலிழிவாரைப்போலே தனியிழி யவொண்ணாமை திரண்டுகொண்டு, "பொலிகபொலிக" என்று மங்களாஶாஸநம்பண்ணி, ஸர்வேஶ்வரன்பக்கல் பண்ணக்கடவ வஸாதாரண பரிசர்யைகளையுடைய விப்பத்தை யப்யஸித்தவர்கள் பக்கலிலே பண்ணாநிற்பர்கள் * மதிமுகமடந்தையர். நெடுநாள் ஸம்ஸாரத்திலேபட்ட விழவெல்லாந்தீரும்படி அவர்களாலேகொண் டாடப்பெறுவர்கள். (தொக்கு - திரண்டு. கவரி - சாமரம். ஏழை யர் - பாகவதகிஞ்சித்கார சபலைகளான *மதிமுகமடந்தையர். (கக)

ஆறாம்திருவாய்மொழி முற்றிற்று.

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# ஏழாம்பத்து

## ஏழாந்திருவாய்மொழி

ஏழையர் - ப்ரவேசங்கள்.

ஆறு;—(ஏழையராவி) இப்படி யெம்பெருமானுடைய வாஸ்ரித வாத்ஸல்யாதி குணாநுஸந்தாநத்தாலே ஸ்வாபேக்ஷிதத்தைச் செய்தருளுமென்றுஸ்வஸ்தரான வாழ்வார், அவன்செய்தருளாமை யாலே பின்னையு மவனோடே ஸம்ஸ்லேஷிக்கவாசைப்பட்டு, தத் ஸௌந்தர்யாநுஸந்தாந ப்ரகர்ஷஜநித தத்ஸாக்ஷாத்காரராய், தத் ஸம்ஸ்லேஷமலாபமாநராய் ஸாக்ஷாத்க்ருதாதி ரமணீய ததீய திவ்யா வயவங்களாலே பீட்யமாநராய்க்கொண்டு அந்யாபதேஸத்தாலே கூப்பிடுகிறார்.

*

ப—ஏழாந்திருவாய்மொழியில், இப்படி ஆர்த்தியோடே கூப்பிட்டவர், (க)"அடியுந்திகைமார்புகண்வாய்" என்று ப்ரஸ்துதமான விக்ரஹவைலக்ஷண் யத்தை யநுஸந்தித்து, ...ஸர்வம்வாமுக முச்யதே" என்கிறபடியே விலக்ஷணமான வுத்தமாங்காவயவங்கள் தனித்தனி யேயும் ஸமுதாயமாகவும் ப்ரத்யக்ஷவத்விஸதமாம்படி ப்ரகாஸிக்க; அபரிச்சின்ன னவனான க்ருஷ்ணனுடைய திருக்கண்களையும், ஆஸ்ரிதவிஷயாபிநி விஷ்டனான வவனுடையநாஸாதண்டத்தையும், ஸ்யாமளவிக்ரஹத்துக்குப்பா பாகமான வதரஸோபையையும், காமனுக்கு முந்பாதகனும்படி கமநீயதையை யுடையவனுடைய ப்ரூயுகளத்தையும், கோவர்த்தநோத்தாணம்பண்ணின வநா யாஸத்தையுடையவனுடைய மந்தஸ்மிதத்தையும், அநந்தஸாயியான வவனு டைய கர்ணிகாலங்க்ருதமான கர்ணபாஸத்தையும், மஹாபுஜனான வவனுடைய லலாடஸோபையையும், ஏவம்விதாவயவ விஸிஷ்டமான க்ருஷ்ணனுடைய ஸாமாந்யமுகஸோபையையும், ஆஸ்சர்யபூதனான வவனுடைய மயிர்முடியழ கையும், ஸர்வாதிகத்வ ஸூசகமான வபிஷேகஸோபையையு மநுஸந்தித்து; அது ஸம்ஸ்லேஷபர்யந்தமல்லாமையாலே அத்யந்தமார்த்தரான விவருடைய வார்த்திகண்டு நிர்விண்ணரான ஸுஹ்ருத்துக்களுக்கும் பரிவர்க்கும் தமக்கோ டுகிறதசையை யாவிஷ்கரித்த ப்ரகாரத்தை, நாயகனான க்ருஷ்ணனுடைய விஸ்லேஷதசையிலே அவனுடைய திவ்யாவயவங்கள் உருவெளிப்பாடாய்த்

(க) எ-கூ-கூ-.

தோன்றக்கிட்டி யநுபவிக்கப்பெறுமையாலே க்லிஷ்டையான நாயகியானவள் தனக்கு ஹிதஞ்சொல்லி நியமிக்கிற தோழிமார்க்கும் தாய்மார்க்கும் தன்னுடைய வீடுபாட்டையறிவித்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். *

ஈடு ; அவ ; — கீழ்த்திருவாய்மொழியிலே - "மல்குநீலச்சுடர் தழைப்பச் - செஞ்சுடர்ச்சோதிகள் பூத்தொருமாணிக்கம்சேர்வது போ - லந்தரமேற்செம்பட்டோடடியுந்தி கைமார்புகண்வாய்·செஞ்சுடர்ச்சோதி விடவுறை·யென்றிருமார்பனேயே" (க) என்று அவனடிவழகை யநுஸந்தித்தார்; அவ்வடிவழகுதானே நெஞ்சிலே யூற்றிருந்து அத்தையேபாவித்து, அந்த பாவநாப்ரகர்ஷத்தாலே ப்ரத்யக்ஷஸமாநாகாரராய், பின்னை "ப்ரத்யக்ஷம்" என்றே புத்திபண்ணியணைக்கக் கணிசித்துக் கையைநீட்டி, அப்போதே பெறுமையாலே தமக்குப்பிறந்த வாற்றாமையை, எம்பெருமானோடே கலந்து பிரிந்து உருவு வெளிப்பாட்டாலே நோவுபடுகிறாளொருபிராட்டி பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

ஸர்வேச்வரனோடே கலந்து பிரிந்து தளர்ந்து உருவுவெளிப்பாட்டாலே நோவுபடுகிறாளொருபிராட்டி, சேதநர் சேதநரோடுகலக்கும்போது த்ருஷ்டிபந்தம் முன்னாகப் பின்னையிறே அல்லாத பரிமாற்றங்களை யாசைப்படுவது; ஆகையாலே, திருக்கண்களி லழகை யநுஸந்தித்து, அவ்வழியாலே திருமுகத்தி லழகையநுஸந்தித்து அநந்தர மவ்வருகே சிலபரிமாற்றங்களை யாசைப்பட்டு, அப்போதே அதுகைவாராமையாலே நோவுபட; இவள்தசையை யநுஸந்தித்த தோழிமாரும் தாய்மாரும் "உனக்கோடுகிறதென்" என்றுகேட்க, சிலர்க்குச் சொல்லிச் சிலர்க்கு மறைக்கும்படியாயன்றே யாற்றாமை ப்ரஸித்தயானபடி; ஆகையாலே, அவர்களைக்குறித்து "அவனுடைய திருமுகத்தில்முகானது தனித்தனியும் திரளவும் வந்தென்னை நலியாநின்றது" என்ன, "நீயிங்ஙனே சொல்லுமது உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப்போராது, அவனுடைய தலைமைக்கும்போராது, நீ தானங்களை நோக்கக்கடவதாயிருப்பதொரு ஸ்வபாவமுண்டே, அதுக்கும்போராது, ஆனபின்பு, இத்தைதத்தவிர்" என்று ஹிதஞ்சொல்லுவாரும் பொடிவாருமாக; "நீங்கள் பொடிகிறவிதுகேட்டு மீளுமளவல்ல அதென்னை நலிகிறபடி; இனித்தானே தேனுமாக, உறைத்ததிலே யூன்றிநிற்குமத்தனையிறே; ஆனபின்பு,நீங்களென்னை விட்டுப்

(க) எ-அ-அ.

பிடிக்கவமையும்" என்று அவர்களுக்குத் தன்பக்கல் நசையறவேண்டும்படி தனக்குப்பிறந்த வாற்றாமையை யறிவிக்கிறாளாயிருக்கிறது.

ஸர்வேஶ்வரனுடைய குணங்களை யாசைப்படுகையும், அதுதான் மாநஸாநுபவமாயிருக்கையும், அநுபூதகுணங்களொழிய குணாந்தரங்களிலே யபேக்ஷைபண்ணுகையும், அதுதன்னில் க்ரமப்ராப்திபற்றாமையும், அதுதான் கீழ்நின்றநிலையை மறக்கும்படி பண்ணுகையுமாகிற விவையிறே இவர்க்குத் திருவாய்மொழி யெங்குமோடுகிற ஸ்வபாவந்தான். அவற்றிற்காட்டில், உருவு வெளிப்பாடாகச்சொல்லுகிற விதிலேறின வம்ஶமென்னென்னில்; கீழ்ப்பிறந்த வைஶத்யமுங் கிடக்கச்செய்தே மேலே அபேக்ஷிக்குமதாயிற்று-உருவு வெளிப்பாடாகிறது. அல்லாதவிடத்தில், கீழ்ப்பிறந்த வைஶத்யத்தை யழித்திறே மேலிலபேக்ஷிப்பது. * எங்ஙனேயோவிலும்-ப்ராயேணவிதுவேயன்றோ வோடுகிறது. அதிலிதுக்குவாசியென்னென்னில்; அதில்-ப்ரீத்யப்ரீதி ஸமமாயிருக்கும், இங்கு-அப்ரீதி மிக்கிருக்கும். திருக்கண்களிலழகை "இணைக்கூற்றம்" என்னும்படியாயிற்று இங்கு பாதகத்வத்திலுறைப்பிருக்கும்படி.

---

## முதற்பாட்டு.

ஏழையராவியுண்ணும் இணைக்கூற்றங்கொலோ? அறியேன் *
ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள்கொலோ? அறியேன் *
சூழவும்தாமரைநாண்மலர்போல் வந்துதோன்றும்கண்டீர் *
தோழியர்காள்! அன்னைமீர்! என்செய்கேன்? துயராட்டியேனே.

ப.—முதற்பாட்டில், க்ருஷ்ணனுடைய திருக்கண்கள் தன்னை நலிகிறபடி சொல்லுகிறாள்.

(இ-ள்) ஏழையர் - சபலைகளானபெண் பிறந்தாருடைய, ஆவி - ப்ராணனை, உண்ணும் - க்ரஸிக்கக்கடவதாய், இணை - ஒன்றுக்கொன்று சேர்த்தியானவிரட்டை, கூற்றங்கொலோ - ம்ருத்யுவோ, அறியேன் - பாதகத்வத்தாலே கண்ணென்றறுதியிடமாட்டுகிறிலேன், அங்ஙனன்றியே, ஆழி - ரத்நாகரம்போலே, அம் - அபரிச்சிந்நவிலக்ஷணஸ்வபாவனாய், என்னோடு ப்ரதமத்திலே, கண்ணன் - விதேயனாய், பிரான் - ஸம்ஶ்லேஷித்து உபகரித்த க்ருஷ்ணனுடைய, திரு - விலக்ஷணமான, கண்கள்கொலோ - திருக்கண்கள்தானோ,

அறியேன் - தர்ஸநீயதையாலே, ம்ருத்யுவென்றறுதியிட மாட்டுகிறிலேன், சூழவும் - அகலப்போகவொண்ணாதபடி சுற்றும், தாமரை-தாமரையினுடைய நாண்மலர்போல் - செவ்விப்பூப்போலே, வந்து - வந்து, தோன்றும் - தோன்றுகின்றது, கண்டீர் - காணுங்கோள், தோழியர்காள் அன்னைமீர் - ஆந்தரக்லேஸமறியாதே அந்தரங்கரான தோழிமாரோடு, ப்ரக்ருதியறிந்து பெற்றுவளர்த்த தாய்மாரோடு வாசியற நியமிக்கிறவர்களே, துயராட்டியேன் - ஸ்வஸம்வேத்யமான க்லேஸத்தையுடையநான், என்செய்கேன் - க்லேஸநிவ்ருத்திக்கென்னபரிஹாரம் பண்ணுவேன்.

தோன்றுகிற திருக்கண்களை மறைக்கமாட்டேன்; கிட்டியநுபவிக்கமாட்டேனென்றுகருத்து. (க)

ஆறு;—பரமபுருஷ ஸம்ஸ்லேஷாபேக்ஷவநிதாஜந ப்ராணஹாரி ம்ருத்யு யுகளமோ, அன்றியே, ஆயதாதிரமணீய விலோசந விஜித ஸகலலோகனான வெம்பெருமானுடைய திருக்கண்கள்கொலோ, அறிகிறிலேன்; அப்போதலர்ந்த தாமரைப்பூப்போலே சூழவந்து தோன்றி என்னை பாதியாநின்றன; தோழியர்காள், அன்னைமீர், என்றும் துஃக்கமே படப்பிறந்தேனாகாதேயென்று, (க) "ஹா ராம ஹா ஸ்ரீ லக்ஷ்மண ஹா ஸுமித்ரே ஹா ராம மாத: ஸஹ மே ஜநந்யா - ஹா ராம ஹா லக்ஷ்மண ஹா ஸுமித்ரே ஹா ராம மாதஸ்ஸஹ மேஜநந்யா" என்று அஸோகவநிகையில் பிராட்டி கூப்பிட்டாப்போலே கூப்பிடுகிறாள். (க)

ஈடு; அவ;— முதற்பாட்டு. இம்முகத்துக்கு நேத்ரபூதர் நாமன்றோவென்று புறப்பட, திருக்கண்களிலழகுவந்து தம்மை நலிகிறபடியை யருளிச்செய்கிறார்.

(ஏழையராவிபித்யாதி) ஓரோவிஷயங்களிலே சாபலத்தைப் பண்ணி, அவை பெறுவிடில் தரிக்கமாட்டாத வபலைகளுடைய ப்ராணன்களை முடிக்கிற ம்ருத்யுக்களிரண்டோ. பிரிந்தாற்றாமையை விளைத்தவனுக்கு மன்றிக்கே, "இதாகாது" என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கும் பருவங்கழிந்த தாய்மார்க்கு மன்றிக்கே, அபலைகளையே முடிப்பனவிரண்டு கூற்றமோ. தன்கண்ணழகு தானறிகிறிலனே. தன்னையும் நலிந்ததாகில் வாரானோ, கண்ணாடிப்புறத்திலுங் கண்டறியானோ. (ஆவியுண்ணும்) ராமஸரம்போலே, ஒப்பனைகுறி

(க) ரா-ஸு-உஅ-அ.

யழியாதேயிருக்க வுயிரை முடியாநின்றது. (இணைக்கூற்றங்கோலோ) ம்ருத்யுக்களிருவர் தங்களிலே க்ருதஸங்கேதராய் வந்தாப்போலேகாணும் திருக்கண்களிலழகு பாதகமாகிறபடி. (அறியேன்) அறியேனென்பானென்னென்னில்; ம்ருத்யுக்களிருவர் க்ருதஸங்கேதராய்வந்தாலும் அபலைகளையே நலியவேண்டும் நிர்ப்பந்தமில்லையே; (க) * "வ்ருஷ்டிஶாத்யாபஹாரிணீ - பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணமிறே. அத்தாலே சொல்லுகிறது

(ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள் கோலோவழியேன்) அன்றிக்கே, பெண்பிறந்தாரையே நலியக்கடவனவை தாமேயோ. அல்பமண்ணியாரேபாதகராமன்று தப்பவிரகில்லை. இப்படிமுதலுறவு பண்ணிப்பொருந்தவிட்ட வித்திருக்கண்கள் தாமேயோ. உபகாரஶீலனான க்ருஷ்ணனுடைய கடல்போன்ற கண்களென்னுதல்; கடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடைய வுபகாரஶீலனான க்ருஷ்ணனுடைய திருக்கண்களென்னுதல். (அறியேன்) இதுக்கு முன்புபிரிந்தறியாமையாலே திருக்கண்கள் பாதகமாமென்று வ்யுத்பத்தியில்லை. (உ) "உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்" என்றிறே கேட்டிருப்பது - இக்கடாக்ஷமே தாரகமாகவிறே லோகமடையஜீவிப்பது. நாம்கேட்டிருந்தபடியன்றிக்கே யிராநின்றதிப்போது காண்கிறபடி.

ஆனால் தப்பினலோவென்னில் (சூழவுமீந்யாதி) மூலபலத்தினன்று பார்த்த பார்த்தவிடமெல்லாம் பெருமாளே யானாப்போலேயாயிற்று. ராமஶரத்துக்கு ராக்ஷஸர்க்குத் தப்பலாமன்றாயிற்று இக்கண்ணழகின்கீழ் அபலைகளா யிருப்பார்க்குத் தப்பலாவது. (ங) "புண்டரீகநெடுந் தடங்கள்போலப் பொலிந்தெமக்கெல்லாவிடத்தவும்" என்னக்கடவதிறே. ஸர்ப்பபயம்போலே யிருக்கை. இருய்க்கநினைத்த விடமெங்கும் தானேயாயிராநின்றது. இப்போது "தாமரைநாண்மலர்போல்" என்பானென்னென்னில்; (ஸம்ஶ்லேஷதசையிற்செவ்வியைச்சொல்லுகிறாள்.) (ச) "...... - மஹாதாஜ்வலதாநித்ய மகநிநேவாக்

(க) ரா- அயோ-ங-உக. (உ) தி-மொ-எ-க-க.
(ங) தி-வி-ங-க. (ச) ரா-ஸு-ங௫-சச.

நிபர்வத:" (க) [ ... ] இத்யாதி; பெருமாளேற்றதும் கடித்ததுந் துடைக்கவறியார் என்ன; "அதுக்கடியென்" என்ன [ ... - த்வத்க்தே நாந்தராத்மநா] பெருமாளிங்கே குடிபோர அங்கிவை யார்தானறிவார் என்றாளிறே. பிரிவிலிவ்வளவல்லவிறே அத்தலைக்காற்றாமை. அதறிகிறிலளே யிவள். தன்னோடேவந்துகலந்து விளைநீரடைத்துக்கொண்டு பிரிகிறபோதைச் செவ்வியிறே யிவளறிவது, அதுவேயிறே யிவள் நெஞ்சில் பட்டுக்கிடப்பது; பின்பவன்பட்டதறியாளே, ஆகையாலே சொல்லுகிறாள்.

(வந்துதோன்றும்) ப்ரத்யக்ஷத்திலத்தலையாலே வரவாறுப்போலே, உருவுவெளிப்பாட்டிலுமத்தலையாலே வந்துதோன்றவாயிற்றுத் தானறிகிறது. (கண்டீர்) உங்களுக்கிதுதோற்றுகிறதில்லையோ. (தோழியர்காளன்னைமீர்) சிலர்க்குச்சொல்லிச்சிலர்க்கு மறைக்கும்படியன்றிறே யிவள்தசை. "தோழிமார்க்குச் சொன்னவித்தைத்தாய்மார்க்குச் சொல்லுவோமல்லோம்" என்று மறைக்குமளவல்லவாயிற்று இவளுக்குப் பிறந்ததசாவிசேஷம். (என்செய்கேன்) இத்தைத்தப்பப்பார்ப்பதோ, அநுபவிக்கப்பார்ப்பதோ, எத்தைச்செய்கேன். (துயராட்டியேனே) (உ) " ... - ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந்நபிபேதிகுதச்சந" என்றிருக்க வேண்டியிருக்க, அங்ஙனன்றிக்கே, (ங) " ... - அவஸ்யமநுபோக்தவ்யம்" என்கிறபடியே பழையக்லேசமே ஸித்திக்கும்படி யாயிற்றே. (க)

---

# இரண்டாம்பாட்டு.

ஆட்டியும்தூற்றியும்நின்று அன்னைமீர்! என்னைநீர்நலிந்துஎன்? *
மாட்டியேர்கற்பகத்தின் வல்லியோ? கொழுந்தோ? அறியேன் *
ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கு, எனதாவியுள்ளே *
மாட்டியவல்விளக்கின் சுடராய்நிற்கும்வாலியதே. (உ)

ப.—அநந்தரம், ஆஸ்ரிதருடைய த்ரவ்யத்தி லபிநிவேசத்தாலே நவநீதசோரனான க்ருஷ்ணனுடைய நாஸாதண்டமானது என்னெஞ்சுக்குள்ளே ப்ரகாசியாநின்றதென்கிறாள்.

(க) ரா-ஸு-...-ச-உ. (உ) தை-ஆ-உ-ச.

(இ-ள்.) அன்னைமீர் - ப்ரியபரைகளான தாய்மாரா யிருக்கிற, நீர் - நீங்கள், ஆட்டியும் - ஹிதஞ்சொல்லி இருந்தவிடத்திலிராதபடி பண்ணியும், தூற்றியும் - புறம்பே பழிதூற்றியும். நின்று - ஒருபடிப்பட நின்று, என்னை - என்னை, நலிந்து - நலிகிறத்தால், என் - என்னப்ரயோஜநமுண்டு, உங்கள் நலிவும் பலியாமைக்கடி, மாட்டு - பரிஸரத்திலே, உயர் - ஓங்கியிருப்பதொரு, கற்பகத்தின் - கற்பகத்தினுடைய, வல்லியோ - கொடியோ, கொழுந்தோ - கொழுந்தோ, அறியேன் - அறிகிறிலேன், ஈட்டிய-கடைந்து திரட்டிவைத்த, வெண்ணெய் - வெண்ணெயை, உண்டான் - களவிலேயமுதுசெய்தவனுடைய, திருமூக்கு - திருமூக்கானது, எனது - என், ஆவியுள்ளே - நெஞ்சுக்குள்ளே, மாட்டிய - தூண்டப்பட்டு, வாலியது - பெருத்து, வல்- ஸ்த்திரமான, விளக்கின்சுடராய்நிற்கும் - தீபஜ்வாலைபோலே ப்ரகாசியா நின்றது.

ருஜுவாகையாலே - கொடியென்னவுமாம்; அது அசைந்தோங்கின தலையை யுடைத்தாகையாலே - கொழுந்தென்னவுமாயிருக்கிறது. வாலிமை - பெருமை; மாட்டிய - தூண்டின, வன்மை - ஸ்த்தைர்யம். (உ)

ஆறு;—(ஆட்டியும்) ஸௌரப்யோபாதாநமாய்க்கொண்டு முளைத்தெழுந்த கற்பகத்தினுடைய கோமளமானவல்லியோ, அன்றிக்கே, அதினுடைய கொழுந்தோ, அதுவுமன்று, ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கு: அந்த வெண்ணெயுடைய திவ்யவாஸநாவாஸிதமான வத்திருமூக்கழகு, என்னுடைய வாத்மாவினுள்ளே யாரோபிதமாய், மஹத்தாயிருப்பதொரு விளக்கினுடைய ஜ்வாலை போலே நின்று தஹியா நின்றது; அவ்வளவன்று, அதிலும் பாதகமாயிராநின்றது; என்னை யலைத்துக்கொண்டு எங்கும் கோஷித்து நின்று என்னை பாதித்தால், அன்னைமீருங்களுக்கென்ன ப்ரயோஜநமுண்டென்கிறாள். (உ)

ஈடு : அவ ;— இரண்டாம்பாட்டு. "இரண்டுக்கும் நடுவே நாமிருக்க விவை முற்படுகையாவதென், அத்தனையோ நம்மூக்குவலி" என்று திருமூக்கிலழகு நலிகிறபடியைச் சொல்லுகிறது.

(ஆட்டியும் தூற்றியும்) ஆட்டுகையாவது-தாந்தாம் பழிசொல்லியலைக்கை. தூற்றுகையாவது - பிறருமறியப் பழிசொல்லுகை. "அச்சமுறுத்தி மீட்கலாமோ" என்றொருகாலலைக்கை ப்ராப்தமிறே; அங்ஙனன்றிக்கே (நின்று) முன்பு செய்ததுக் கொருப்ரயோஜநம் காணுதிருக்கச் செய்தேயும் விடாதே நின்று. (அன்னைமீரேன்னை

நீர்நலிந்தேன்) ஹிதத்திலே நடக்கும் பித்ராதிகளைப்போலே, **என்** ப்ரியத்திலே நடக்கும் நீங்களென்னை நலிகிறதென். **என்னுகப்பே** பேருக நினைத்திருக்கக்கடவ நீங்கள் நலிகிறதென். (நலிந்தேன்) அந்த வுருவு வெளிப்பாட்டைப் பரிஹரிக்கலாமென்றே, என்னை மீட்கலாமென்றே. ஒரு ப்ரயோஜநமில்லாததிலேயும் ப்ரவர்த்திக் கக்கடவதோ. அவனுடைய ஸூக்ஷ்மவஸி யிருக்கிறபடியையுமறிந்து நீங்களென்செய்யப்புகுகிறீர்கள்.

நாங்கள் சொல்லுகிற ஹிதவசநத்தாலொரு ப்ரயோஜநமில்லை யாகில், என்செய்தால் ப்ரயோஜநமுண்டென்ன (மாட்டியேரித்யாதி) வல்லீர்களாகில் இஸ்ஸம்பயத்தையறுத்துத் தாருங்கோள். மாடு-அருகு. கண்ணருகென்றபடி. ஒரு கடலருகே அக்கடலூற்றே தாரகமாக வளருகிற தொருகொடிபோலே யாயிற்று, திருக்கண்களருகே திருமூக்கிருக்கிறபடி. (உயர்) (க) "உஸஸ்ஹ-உந்நஸம்" என்கிற படியே. (கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ) ஒழுகுநீட்சியாலே கொடியென்னவுமாய், ஸ்ரத்தை மாறுமையாலே-கொழுந்தென்னவு மாயிராநின்றது. அறிகேனென்கிறது - "இன்னது" என்று நிஸ்சயிக்க வரிதாகையாலே, ஸர்வதா ஸாம்யத்தாலே.

(ஈட்டியவித்யாதி, எங்களுக்கறியப்போமோ, இதிலே புட்புக நின்றநுபவிக்கிற நீ பின்னைச் சொல்லாயென்ன (ஈட்டியவித்யாதி) அநுகூலஸ்பர்ஸமுள்ள த்ரவ்யத்தாலல்லது தரிக்கமாட்டாதே வெண்ணெய் களவுகாணப் புக்குக்கொண்டியிலேபிடியுண்டு, பின்பத்தை யில்லைசெய்கைக்காக முகத்திலே தடவிக்கொள்ளுமே; அவ்வெண்ணெயிலே முடைநாற்றமும் உருவு வெளிப்பாட்டிலே தோற்றுகிறதாயிற்றிவளுக்கு. அப்போதைக முடைநாற்ற மும்பலப்தமாம்படியாயிற்று உருவு வெளிப்பாட்டில் மெய்.

நீ சக்ஷுர்விஷயமாகச் சொல்லுகிற விது எங்களுக்குத் தெரிகிறதில்லை யீயென்ன (எனதாவியுள்ளே) என் ஹ்ருதயத்துக்குள்ளே (மாட்டிய) சுடர்வெட்டியவென்னுதல், ஏற்றினவென்னுதல். (வல்விளக்கின்சுடராய்) (பெரியவிளக்கினொளியையுடைத்தாய்.) விரஹத்தா லவியாத விளக்காயிற்று. "'ஏற்றியபெருவிளக்கு' என்றொரு தமிழனிட்டுவைத்தான்" என்றருளிச்செய்வர். (நிற்கும்வாலி

(க) ஸ்தோ-ர-ந-உ

யதே) வலிதாய்நின்று நலியாநிற்கும்; தீபமாகிறது தான் க்ஷணிகமுமாய் ப்ராதேசிகமுமாயிறே யிருப்பது; இதங்ஙனன்றிக்கே, எப்போதுமாய் எங்கு முண்டாயிராநின்றது. பாதகத்வத்திலுறைப்பையநுஸந்தித்துச் சொல்லுகிற வார்த்தையிறேயிது. (மாட்டியவாலியதான வல்விளக்கின் சுடராய்நிற்கும். வாலிமை-பெருமை. வன்மை-ஸ்த்தைர்யம்.) (உ)

---

## மூன்றாம்பாட்டு

வாலியதோர்கனிகொல்? வினையாட்டியேன்வல்வினைகொல் ?*
கோலந்திரள்பவளக் கொழுந்துண்டங்கொலோ? அறியேன் *
நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான்தொண்டைவாய் *
ஏலும் † திசையுளேல்லாம் வந்துதோன்றும்என்னின்னுயிர்க்கே.

ப.—அநந்தரம், ஶ்யாமளமான வடிவுக்கு பாபாகமான வதரசோபையானது, பார்த்தபார்த்தவிடமெங்கும் தோன்றாநின்றதென்கிறாள்.

(இ-ள்.) வாலியது - போதுசெய்யாத நன்மையையுடைத்தாய், ஓர் - மென்மையாலும் நிறத்தாலும் இனிமையாலும் அத்விதீயமாயிருப்பதொரு, கனிகொல் - பழமென்னலாயிருக்கிறதோ, வினையாட்டியேன் - இப்பலத்தையப்போதேயநுபவிக்கப்பெறாத பாபத்தையுடைய வென்னுடைய, வல் - அநுபவித்துக்கழிக்கவரிய, வினைகொல் - பாபமொருவடிவுகொண்டதாயிருக்கிறதோ, கோலம் - ஸௌந்தர்ய ஸௌலப்ய ஸௌகுமார்ய ஸாரஸ்யாதிகள், திரள் - திரண்டதொரு, பவளம் - பவளத்தினுடைய, கொழும் - கொழுவிதான, துண்டங்கொலோ- துண்டமென்னலாயிருக்கிறதோ, அறியேன் - இன்னதென்று நிர்த்தரித்தறியலாயிருக்கிறதில்லை நீலம் - ஶ்யாமளமாய், நெடும் பெருத்த, முகில்போல் - மேகம்போலே, திருமேனி - அழகையுடையனான அம்மான் - ஸ்வாமியுடைய, தொண்டை - தொண்டைப்பழத்தின் நிறத்தையுடைத்தான, வாய் - திருவதரமானது, ஏலும் - என்றுகொண்டேபார்த்த, திசையுளெல்லாம் - திக்கெல்லாம், என் - என், இன் - இனிய, உயிர்க்கு - உயிரைநோக்கி, வந்து - வந்து, தோன்றும். தோன்றாநின்றது. (௩)

ஆறு:-(வாலியதோர்) பக்வமாய் அம்ருதரஸமாயிருப்பதொரு கனியோ; அன்றியே, பாதகமாகையாலே ஸஹஜவிரஹவ்யஸநையாயிருந்த வென்னுடைய மஹாபாபமோ, * ஸௌந்தர்ய ஸாரஸமு

தாயமான பவளத்தினுடைய கொழுவியதாயிருப்ப தொருமுறியோ, அவையெல்லாமல்ல; நீலமஹா வலாஹகரமணீய திவ்யரூபனவனுடைய சாருதரபிம்ப ஸத்ருஶமான திருப்பவளம், ததீயதிவ்யரூப ஸௌந்தர்ய ஸஹக்ருதமாய்க்கொண்டு என்னை முடிக்கைக்காக வெல்லாத்திக்குக்களிலும் வந்து தோன்றாநின்றதென்கிருள்.

ஈடு ; அவ :— மூன்றும்பாட்டு. அது தன்மூக்குவலிகாட்ட நாம் பேசாதேயிருந்தால், "அத்தனையோ வி(த்)தின்வாய்வலி" என்று நம்மையேசுவர்களென்று, திருப்பவளத்திலழகுவந்து நலிகிறபடியை யருளிச்செய்கிறார்.

(வாலியதோர்கனிகோல்) முன்புபிஞ்சாய், அநந்தரம் பக்வமாய், பின்பு அநுபவபோக்யமன்றிக்கே போவனசில பலங்களுண்டிறே; அங்ஙனன்றிக்கே, என்றுமொக்க ஏகரூபமாயிருப்பதொருகனியோ. அத்தலையில் போக்யதை போதுசெய்யாமையாலே யித்தலையிலாற்றாமையும் போதுசெய்யாதே. (வினையாட்டியேன்வல்வினைகோல்) போக்யவஸ்து பாதகமாயிற்று போக்தாக்கள்பண்ணின பாபத்தாலேயிறே-அம்ருதமே விஷமாம்படியான பாபத்தைப்பண்ணினேன். பாபத்தைப்பண்ணின வென்னுடைய பாபமானது பக்வமாய்க்கொண்டு அங்கே குடியேறிற்ருே. அங்கேகிடந்திறே யிங்கநுபவிப்பிப்பது- பகவத்விஷயத்தில் நிக்ரஹரூபேணகிடந்திறே யிங்கநுபவிப்பிப்பது. க்ரியையாகையாலே செய்தபோதே நசித்துப்போமே. இவன்பண்ணின பாபத்துக்கு, தானே ஸ்வதந்த்ரமாய்நின்று பலப்ரதமாகைக்கு ப்ராப்தியில்லையே. (வல்வினைகோல்) அநுபவவிநாஶ்யமாகாதபடியான பாபமாயிற்று.

(கோலந்திரளித்யாதி) அழகுதிரண்டிருந்துள்ள பவளத்தினுடைய ஸ்ரத்தையையுடைத்தான முறியோ, அறிகிறிலேன். முறியோவென்கிறது - புழுதிபுடைத்திராமைக்கு ; முறித்தவாயானது ஒளியுண்டாய் நெய்த்திருக்குமிறே.

(நீலமித்யாதி) இதுதானென்று முண்டாயிருக்கச்செய்தே, இதுக்குமுன்பு பாதகமாயிற்றில்லையிறே ; கூட்டுப்படைநின்றவாறே நலியாநின்றதாயிற்று. நீலமாய் போக்யதை யளவிறந்திருந்துள்ள முகில்போன்றவடிவையுடைய ஸர்வேஶ்வரனுடைய. (தொண்டைவாய்) தொண்டை-கோவை. கோவைப்பழம்போலே கனிந்துநெய்

த்திறே திருப்பவளந்தானிருப்பது. தன்னிற்றானுண்டானபகை பார்த்திருக்கிறதில்லையாயிற்று இவளை நலிகிறவிடத்தில். இரண்டுக்கும் சேரவன்னியமில்லையிறே. (வன்னியம்-ஸ்வாதந்த்ர்யம். ஒருவன்பக்கலிருவர் பகையானால், இருவரும் ஸ்வதந்த்ரரானால் அவனை வெல்லவொண்ணாது; ஆகையாலே, இருவரு மொருமிடறாய் நலிவர்கள்; அப்படியேயிங்கும்.)

அவை நலிந்துகொடு தோற்றாநின்றதாகில் தப்பப்பார்த்தாலோ வென்ன; வாய்வலிதப்பலாயோவிருக்கிற தென்கிறாள் மேல் (ஏலும் திசையுளேல்லாம்) நானு மிவைநலியாதவிடந்தேடித் தப்பவிரகுபாராநின்றேன், அவ்வோவிடங்களிலேவந்து தோன்றாநின்றது. பார்த்தபார்த்தவிடமெல்லாம் தானேயாயிராநின்றது. தோன்றுகிறதுக்குக் கருத்தென்னென்னில் (என்னின்னுயிர்க்கே) என்னுடைய நற்சீவனைமுடிக்கைக்காக. (௩)

---

## நான்காம்பாட்டு.

இன்னுயிர்க்குஏழையர்மேல் வளையும்இணைநீலவிற்கொல் ? *
மன்னியசீர்மதனன் கருப்புச்சிலைகொல் ? * மதனன்
தன்னுயிர்த்தாதை கண்ணபெருமான்புருவமவையே *
என்னுயிர்மேலனவாய் அடுகின்றனவென்றுநின்றே. (௪)

ப.—அநந்தரம், காமோத்பாதகனாய் * (க) ஸாக்ஷாந் மந்மதமந்மதனான க்ருஷ்ணனுடைய திருப்புருவங்களானவை யென்னாத்மாவை நலியாநின்றன வென்கிறாள்,

(இ-ள்.) இன் - நல்ல. உயிர்க்கு - ப்ராணனை யபஹரிக்கைக்காக, ஏழையர்மேல் - சபலைகளான பெண்பிறந்தார்மேலே, வளையும் - தானே வளைந்து நலிவதான, நீலம் - நீலநிறத்தையுடைய, இணை - இரண்டு, விற்கொல் - வில்லென்னலாயிருக்கிறதோ; அங்ஙனன்றியே, மன்னியசீர் - ஸ்த்திரஸௌந்தர்யாதிகுண யுக்தனான, மதனன் - காமனுடைய, கருப்புச்சிலைகொல் - காமுகரை நலியும் கருப்புவில்லென்னலா யிருக்கிறதோ, மதனன் றன் - அந்தகாமன்றனக்கு, உயிர் - ஸத்தாப்ரதனாய்க்கொண்டு, தாதை - உத்பாதகனாய், கண்ணன் - க்ருஷ்ணனான, பெருமான் - ஸர்வாதிகனுடைய, புருவமவையே -

---

(க) பாக-கO-௩௨-௨.

(க) * தன்கைச்சார்ங்கமதுவேபோலுந் திருப்புருவங்கள்தாம், என் - என், உயிர்மேலனவாய் - ஆத்மாவின்மேலே அபிமுகங்களாய்க்கொண்டு, என்றும் - என்றும், நின்றே - ஒருபடிப்பட நின்று, அடுகின்றன - நலியாநின்றன.

அவையேயென்றது - முன்பு த்ருஷ்டாந்தயா ஸங்கித்த வ்யக்திகளிற் காட்டில் பாதகத்வம் கனத்திருக்கையாலே. (ச)

ஆறு;—(இன்னுயிர்க்கு) பரமபுருஷ ஸந்தர்ஸநத்திலே லாலஸமான காமிநீஜநத்தினுடைய ப்ராணனையே லக்ஷ்யமாக வுடையவையாய், நம்ரமாய் நீலமாயிருப்பன விரண்டுவிற்களோ, அன்றிக் கேமதநனுடைய ஸௌந்தர்யநிகேதநமான விக்ஷேபகோதண்டமோ! இவையெல்லாமல்ல; ஸௌந்தர்யஸாரனை மதநனுக்கு ஜந்மபூமியான புண்டரீகவிலோசநனுடைய புருவங்களே, இவை யென்னுடைய ப்ராணன்களை யெப்போதும் பாதிக்கிறனவென்கிறாள். (ச)

ஈடு ; அவ; —நான்காம்பாட்டு. "என்றான், இங்ஙனே அதரோத்தரமாயிற்றே போய்" என்று திருப்புருவத்தி லழகுவளைந்து கொடுவந்து நலிகிறபடியை யருளிச்செய்கிறார்.

(இன்னுயிர்க்கு) என்னுடைய நற்சீவனைக் கொள்ளுகைக்காக. ( ஏழையர்மேல் வளையும் ) வளைப்பாருமின்றிக்கே வளைக்கைக்கு விஷயமுமின்றிக்கே-அகர்மகமாகவும் அகர்த்ருகமாகவும் வளையாநின்றது; விஷயமில்லாமையாலே கர்மமில்லை, வளைப்பா ரில்லாமையாலே கர்த்தாவில்லை. ஏழையர்மேலே வளைகிற நீலமான விரண்டு வில்லோ. (உ) "ஸக்ரு ஊவ நிஹவா வெஹ ஹீ ஸவா ஸத் ...நாஸ நேஸக்ரசாபநிபேசாபே க்ருஹீ த்வாஸத்ருநாஸநே" என்னும்படியே; இந்த்ரதநுஸ்ஸுக்கு "அபலைகளையே நலியவேணும்" என்னும் நிர்ப்பந்தமில்லையிறே. (மன்னியசீரித்யாதி) பெண்பிறந்தாரையே நலியக்கடவதான காமனுடைய வில்லுத்தானேயோ. அதுதன்னிலும் ருத்ரனாலே வடிவிழப்பதற்கு முன்புத்தை அவன்கையில் வில்லாகவேணும். (கருப்புச்சிலைக்கோல்) கண்ணுக்காபாஸமாய் பாதகத்வமுறைத்திருக்கிறபடி.

அவனோட்டை ஸம்பந்தத்தால் வந்த ராஜகுலங்கொண்டு திரிகிறவன்கையில் வில்லுக்கு இத்தனை யுறைப்புண்டாக மாட்டாது,

---

(க) நா-தி-கச-சு. (உ) ரா-கிஷ்-ஙூ-க.

அவன் தனக்குங்கூட ஜநகனுன க்ருஷ்ணனுடைய திருப்புருவங்கள் தாமேயாகவேணும். (மதனனித்யாதி) (க) * தன்கைச்சார்ங்கமது வேபோல் புருவவட்டமழகியவனுடைய புருவங்கள் தாமே யாகவேணும். ஆண்டாள்வார்த்தை யிருக்கிறபடியிறே. [தருமமறியாக்குறும்பனை] தர்மமறியும்போது அபிஷிக்தக்ஷத்ரியன் வயிற்றிலே பிறந்தவனுகவேண்டாவே. யாதவர்கள் நேரேமுடிசூடுவதில்லையிறே. * ஆந்ருஶம்ஸ்யமிருக்கும்படி முதலிலே புதியதுண்டறியாதவனுயிற்று. ஸ்ரீநந்தகோபர், தம்முடைய ராஜ்யத்திலே மூலையடியேநடந்து திரிவாரொருபிள்ளையையாயிற்றுப் பெற்றது. [தன்கை யித்யாதி] கையிலே வில்லைக்கண்டால், "முகத்திலே யிருக்கக்கடவது கையிலே யிருந்ததீ!" என்னலாம்படியா யிருக்கும். முகத்திலேகண்டவாறே, "கையிலேயிருக்கக்கடவிது முகத்திலே யிருந்ததீ!" என்னலாயிருக்கும். [அதுவேபோல்] என்கிறதாயிற்று - ஸர்வதா ஸாம்யத்தாலே. [புருவவட்டமழகிய] "தருமமறியான்" என்றிழக்கவொண்ணுதபடி யாயிற்று வடிவழகிருப்பது. [பொருத்தமிலியை] சில பதார்த்தங்களுண்டிறே - நிறமழகியதாய் பார்த்தவாறே, உபயோக யோக்யமன்றிக்கே யிருப்பன; அவைபோலே, வடிவழகேயாய், ஆசைப்பட்டார்பக்கல் ரஸந்தொங்கிலும் தொங்காதுயிற்று. [கண்டீரே] அவனுக்குப் பொருத்தமில்லாவிட்டால், நமக்குப் பொருத்தமில்லையாகிலிறே விட்டிருக்கலாவது; அவன்பொருந்தாமை தமக்குத் தொடர்ந்துதிரியுமத்தனையாயிற்று. (புருவமவையே) கீழ்ச்சொன்னவழகுகள் தா மநுகூலமென்னும்படியாகவாயிற்று இவை பாதகமாகிறபடி.

(என்னுயிர்மேலனவாய்) இருப்பதங்கேயா யிருக்கச்செய்தேயும், நோக்கென்மேலேயாயிராநின்றது. (உ) * எங்கும்பக்கநோக்கறியாதிறே யிருப்பது. (அடுகின்றன) கொல்லாநின்றன. (என்றுநின்றே) பாதகமாக நிற்கச்செய்தேயும் அநித்யமாயிருப்பன சிலபதார்த்தங்களுண்டிறே, இவையங்ஙனன்றிக்கே யென்றுமொக்கநின்று நலியாநின்றன. என்னை நலிகைக்காக நித்யத்வத்தை யேறட்டுக்கொண்டது; (ங) "நித்யம் நித்யாக்ருதிதரம்" என்கிறது தானேயிறே நலிகிறது. (ச)

---

(க) கா-தி-கச-சு. (உ) உ-சு-உ. (ங)

ப.—அநந்தரம், இந்தவவதாரகந்தமான வநந்தஸாயியினுடைய திருமகரக்குழைகள் நலிகிறபடியைச் சொல்லுகிறாள்.

(இ-ள்.) ஏழையர்க்கும் - அநுகூலப்ரதிகூல விபாகமல்லாதபடி யாசைப்பட்டவபலைகளுக்கும், அசுரர்க்கு மரக்கர்கட்கும் - எதிரிடும் அஸுரராக்ஷஸர்களுக்கும், உய்விடம் - பிழைக்குமிடம், எவ்விடம் - எவ்விடம், என்று-என்று, இலங்கி — பெரியதேஜஸ்ஸையுடைத்தாய்க்கொண்டு, மகரம் - மகராகாரமாய், தழைக்கும் - தழைத்தனசில, தளிர்கொல் - தளிர்களோவென்னலாய், பை - திருமேனியோட்டை ஸ்பர்ஸத்தாலே விரிகிறபணங்களையுடைத்தாய், விடம். விரோதிகளுக் கநபிபவநீயமான விஷத்தை யுடைத்தாயிருக்கிற, பாம்பணையான் - திருவரவணையையுடையனவான, திரு - தர்ஸநீயமான, குண்டலம் - மகரகுண்டலங்களையுடைத்தான, காதுகளே - காதுகள்தாமே, ஒன்றும் - ஒருப்ரகாரத்தாலும் கைவிடலின்றி - கைவிடாதே, அடுகின்றன - நலியாநின்றன, காண்மின்கள் - காணுங்கோள்.

போக்யமான மகரகுண்டலம் விரோதிகளுக்கு பாதகமாவது அஸஹ்யதையாலே. காண்மின்களென்று - தன்னைப்போதி அவர்களுக்கும் தோற்றுமென்றிருக்கிறாள். (சு)

ஆறு ;— ( உய்விடம் ) அபலைகளுக்கும் அஸுரர்களுக்கும் ராக்ஷஸர்க்கு முய்விட மெவ்விடமென்றிலங்கி திருமகரகுண்டலம் தளிருகிறதளிரோ; தன்னோட்டை ஸ்பர்ஸத்தாலே விகஸிதமான பணங்களையும், ப்ரதிகூலருக் கனுகவொண்ணாதபடி நஞ்சையுமுடையனாய், தன்னுடைய திருவழகுக்கு உத்தம்பகனான திருவனந்தாழ்வானை யணையாகவுடைய வெம்பெருமானுடைய திருக்குண்டலக்காதுகளே நிரந்தரமாக நலியாநின்றன, பாரீர்கோளென்கிறாள்.(சு)

ஈடு ; அவ ; ஆறும்பாட்டு. "நாம் செவிப்பட்டிருக்க விவற்றை முன்னேபோக விட்டிருந்தோம்" என்று திருக்காதிலழகுவந்து நலிகிறபடியைச் சொல்லுகிறது. காதாட்டிக்கொண்டு சொல்லுவரோ.

( உய்விடமித்யாதி ) அஸுரராக்ஷஸர்களுக்கும் அபலைகளுக்கும் தப்பிப்போய்ப் பிழைக்குமிடமெவ்விடமென்று, உஜ்ஜ்வலமாய்க்கொண்டு மகரம்தழைக்கின்றதளிரோ. அஸுராதிகள், அழகு கண்டால் பொறுக்கமாட்டாதே முடிவர்கள் ; அபலைகள் லபிக்கப் பெறாதே முடிவர்கள். "அபலைகளை நலியுமாபோலே அஸுரராக்ஷ

ஸர்களுக்கும் ஸ்நேஹத்தை விளைத்து பாதகமாகாநின்றது" என்றொரு தமிழனிட்டுவைத்தா னென்றத்தை ஜீயர்கேட்டருளி, "இப்பொருளழகிது, ஆனாலும், அபக்ஷதர்மம் - அஸாதாரக்ஷஸர்களுக்கும் பாதகமாகாநின்றதென்று இப்போதிது சொல்லுகை, கேட்டமன்றிறே; ஆனபின்பு அதுவேண்டா" என்றருளிச்செய்தாராம்.

(பைவிடமித்யாதி) தன்னோட்டை ஸ்பர்ஶத்தாலே விகஸிதமாகாநின்றுள்ள பணங்களையும், உகவாதார் முடியும்படியான விஷத்தையு முடையனான திருவனந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனுடைய திருக்குண்டலக்காதுகளே. திருக்காதிலழகு பாதகமாகிறாப்போலே யாயிற்று, திருவனந்தாழ்வானோட்டைச் சேர்த்தியும் பாதகமாகிறபடி. பெறுகைக்கு அநந்த புருஷகாரமுண்டாயிருக்கக் கிடீர்நான்நோவுபடுகிறது; காதுகளேயென்று-கீழில் பாதகமானவை நன்றென்னும்படி யாயிற்று இது நலிகிறபடி. அவை தண்ணீர்ப்பந்தல்வைத்ததென்னும்படியாக வாயிற்று; (க) "மாலை-நல்கிற்றையெல்லாம்" என்னுமாபோலே. (கைவிடலோன்றுமின்றி) ஒருகாலும் கைவிடாதே. ஒருகால்விட்டுப் பற்றுமதன்றிக்கே. (அடுகின்றன) முடியாநின்றன. (காண்மின்களே) அவர்களுக்கும் எல்லா முருவு வெளிப்படாய்த் தோற்றுமென்றிருக்கிறாள். (க) *வாயுந்திரையுகளிலாழ்வாரிறே. (சு)

---

## ஏழாம்பாட்டு.

காண்மின்கள்அன்னையர்காள் ! என்று காட்டும்வகையறியேன் *
நாள்மன்னுவெண்திங்கள்கோல் ? நயந்தார்கட்குநச்சிலைகோல் ? *
சேண்மன்னுநால்தடந்தோள் பெருமான்தன்திருநுதலே *
கோள்மன்னிஆவியடும் கொடியேனுயிர்கோளிழைத்தே. (எ)

ப.—அநந்தரம், மஹாபுஜனான க்ருஷ்ணனுடைய திருநெற்றியழகு தன்னை நலியாநின்றதென்கிறாள்.

(இ-ள்.) என்னை நலிகிறப்ரகாரத்தை, அன்னையர்காள்-அன்னையர்காள், காண்மின்கள் - நீங்கள்காணுங்கோள், என்று - என்று, காட்டும் - காட்டும், வகை - ப்ரகாரம், அறியேன் - அறிகிறிலேன், நாள் - அஷ்டமீபர்யந்தமான

(க) தி-வி-நடு. (உ) உ-க.

நாளோடே, மன்னு - மன்னி, வெண் - அர்த்தாகாரனுகையாலே களங்கமற்று வெளுத்த, திங்கள்கொல் - சந்த்ரனோ, நயந்தார்கட்கு - ஆசைப்பட்டவர்களுக்கு, நச்சு - நச்சுவடிவா யிருப்பதொரு. இலைகொல் - இலையோ, சேண் - ஓங்குதலை, மன்னு - உடைத்தாய், நால் - நாலுவகைப்பட்டு, தடம் - பணைத்த, தோள் - தோள்களால், பெருமான்றன் - பெரியனான க்ருஷ்ணனுடைய, திரு - தர்ஸநீயமான, நுதலே - திருநெற்றிதானே, கோள்-மிடுக்கை, மன்னி- அவலம்பித்துக்கொண்டு, கொடியேன் - அழகேபாதகமாம்படியான கொடுமையை யுடையவென், உயிர் - ப்ராணனை, கோள் - கொள்ளுகையை, இழைத்து - நிரூபித்து, ஆவி - என்னாத்மாவை, அடும் - நலியாநின்றது.

கோள் - மிடுக்கு, ஒளியாகவுமாம். (எ)

ஆறு ;—(காண்மின்கள்) (நாள்மன்னு) பூர்வபக்ஷத்தி லஷ்டமீசந்த்ரனோ.

அன்றிக்கே, ஆசைப்பட்டார்க்கு நச்சவேண்டா திருக்கிறதோ; கொழுந்துவிட்டுச் சுற்றுடைத்தான நாலுதிருத்தோள்களையுடைய ஸர்வேஶ்வரனுடைய திருநெற்றியே. இப்படி நோவுபடுகைக்குப் பாபத்தைப்பண்ணின வென் ப்ராணனை முடிக்கையிலே துணிந்து அபிநிவேசித்து நலியாநின்றது; இத்தைக்காண்மின்க ளன்னையர்காளென்று காட்டும்வகை யறிகிறிலே னென்கிறாள். (எ)

ஈடு; அவ;—ஏழாம்பாட்டு. "இவையவள்முன்னே நிற்கவற்றோ, இவற்றுக்கெல்லாம் நாம் நெற்றிக்கையன்றோ" என்று திருநுதலிலழகுவந்து நலிகிறபடியை யருளிச்செய்கிறார்.

(காண்மின்களித்யாதி) இது நலியாநின்றதாகச் சொல்லாநின்றாய்; எங்களுக்கிது தெரிந்திருக்கிறதில்லை; எங்களுக்கும் தெரியும்படி சொல்லிக்காணாயென்ன (காண்மின்களித்யாதி) நீங்களுமித்தைக் காணுங்கோளென்று, உங்களுக்குக்காட்டும் ப்ரகாரமறிகிறிலேன். என்கைக்குப்பிடிதருதல், உங்களுக்கு உருவுவெளிப்பாடுண்டாதல் செய்யிலிறே யென்னுல் காட்டலாவது. (அன்னையர்காள்) ஆண்களுக்குக்காட்டிலிறே பருவம் நிரப்பின வுங்களுக்குக்காட்டலாவது,

(நாண்மன்னுவெண்டிங்கள்கோல்) பூர்வாஷ்டமீசந்த்ரனோ இளகிப் பதித்திருக்கைக்கும், "காட்டு, காட்டு" என்றுவளருகை

கும் தர்ஸநீயமாயிருக்கைக்கும். (நயந்தார்கட்கு நச்சிலைகோல்) ஆசைப்பட்டார்க்கு நச்சுப்பூண்டோவென்னுதல், தன்னையாசைப் பட்டார்க்கு ஆசைப்படவேண்டாதிருக்கிறதோ வென்னுதல். (க) "நச்சுமாமருந்தம்" என்னுமவரிறே, இப்போதுகண்ணுஞ்சுழலை யிட்டு இவ்வார்த்தைதச்சொல்லுகிறார். "இன்னமலையிலே யுண்டு" என்று அங்கேபோய்த்தேடி வருந்தவேண்டாதே, ஆசைப்படுவதுமாய் மேல்காற்றிலேகாட்டப் பரிஹாரமுமாம் மருந்தாயிற்றிது. மாமருந்தம் - அபத்யஸஹமான ஔஷதம். இவன்தலையிலே பழியிட்டுக் கைவிடு மௌஷதமன்று, வானமாமலையில் தலையான ஔஷதமிறே இப்போது இவளுக்கு நச்சுப்பூண்டாகிறது.

(சேணித்யாதி) ஓக்கத்தையுடைத்தாய், கல்பகதருப்பணைத் தாப்போலேயாய்ச் சுற்றுடைத்தா யிருக்கிற திருத்தோளிலழகாலே யென்னை அநந்யார்ஹையாக்கினவனுடைய திருநெற்றியே. (உ) "ஆயதாஸ்ச வ்ருத்தாஸ்ச - ஆயதாம்ஸ்ச ஸுவ்ருத்தாம்ஸ" என்னும்படியே திருவடியகப்பட்ட துறையிலேகாணும் இவளுமகப்பட்டது. (கொடியேனுயிர்கோளிழைத்து- கோள்மன்னியாவியமே) என்னுயிரினுடைய வழகை யழித்துக்கொள்கையிலே விருப்பத்தைப்பண்ணி முடியாநின்றது. (அழகுபாதகமாம்படி பாபத்தைப் பண்ணின வென்ப்ராணனைமுடிக்கையிலே துணிந்து, அதிலே யபிநிவேசித்து, ப்ராணனைமுடியாநின்ற தென்றுமாம். (எ)

---

## எட்டப்பாட்டு.

கோளிழைத்தாமரையும் கோடியும்பவளமும்வில்லும் *
கோளிழைத்தண்முத்தமும் தளிரும்குளிர்வான்பிறையும் *
கோளிழையாவுடைய கொழுஞ்சோதிவட்டங்கொல்?* கண்ணன்
கோளிழைவாண்முகமாய்க் கொடியேனுயிர்கோள்கின்றதே. (அ)

ப.—அநந்தரம், உத்தமான வவயவ ஸௌந்த்ர்யத்தையுடைய க்ருஷ்ணனுடைய முகசோபையானது தன்னை நலிகிறபடியைச் சொல்லுகிறாள்.

(இ-ள்.) கோள் - தன்னுடைய வொளியே, இழை - தனக்காபரணமான, தாமரையும் - தாமரைகளும், கொடியும் - கொடியும், பவளமும் - பவ

(க) ௬-௪-௫. (உ) ரா-கிஷ்-௬-கரு.

ளமும், வில்லும் - வில்லும், கோள் - தன்னுடைய வொளியை, இழை - தனக்கிழையாகவுடைத்தாய், தண் - குளிர்ந்த, மூத்தமும் - முத்தும், தளிரும்- தளிர்களும், குளிர் - ஸீதளமாய், வான் - அழகியதான, பிறையும் - பிறையுமானவிவற்றை, கோள் - கொள்கையை, இழையா - தனக்காபரணமாக, உடைய - உடைத்தாய், கொழும் - பூர்ணமான, சோதிவட்டங்கொல் - ஜ்யோதிர்மண்டலமோ. கண்ணன் - க்ருஷ்ணனுடைய, உக்தமான வுபமாநங்களுக்கு உபமேயபூதமான திருக்கண்கள், நாஸாதண்டம், திருப்பவளம், திருப்புருவம், திருமுறுவல், கர்ணபாஸம், திருநெற்றி யாகிற வவயவங்களை யுடைத்தாயிருப்பதாய், கோள் - தன்னொளிதானே, இழை - ஆபாணமாம்படி, வாள் - உஜ்ஜ்வலமான, முகமாய் - திருமுகமாய்க்கொண்டு, கொடியேன் - அழகாலே நலிவுபடும் பாபத்தின்கொடுமையையுடைய வென், உயிர் - ப்ராணனை, கொள்கின்றது - அபஹரியாநின்றது.

கோள் - ஒளி. (அ)

ஆறு ;—(கோளிழைத்தாமரையும்) தன்னொளியைத் தனக்காபரணமாகவுடைய தாமரையும், கொடியும், பவளமும், வில்லும், அழகை யாபரணமாகவுடைய குளிர்ந்தமுத்தும், தளிரும், குளிர்ந்து பெருத்தபிறையுமாய், தன்னழகே தனக்காபரணா யிருக்கிற ஜ்யோதிர்மண்டலமோ; தன்னொளியே தனக்காபரணமாகவுடைய க்ருஷ்ணனுடைய வழகிய திருமுகமென்றொரு பேரையிட்டுக் கொண்டு இப்படி துக்கப்படுகைக்கீடான பாபத்தையுடைய வென்னுடையப்ராணனை நலிகிறதென்கிறாள். (அ)

ஈடு ; அவ ;—எட்டாம்பாட்டு. "தலையானபேரை நெற்றிக் கையிலேவிட்டுக் காட்டிக்கொடுக்கவொண்ணாது" என்று, கீழ்நலிந்தவை யெல்லாம் சேரவொருமுகமாய் வந்து நலிகிறபடி சொல்லுகிறது. அங்குமிங்கும் சிதறிக்கிடந்தபடையை, ஸத்ருக்கள்வந்து முடுகினவாறே யொன்றாகத்திரட்டி யொருகாலே தள்ளுவாரைப் போலே, தனித்தனியே நலிந்தவழகுகளெல்லாம் திரளவந்து நலிகிறபடியைச்சொல்லுகிறார்,

(கோளிழைத்தாமரையும்) ஜாதியொன்றா யிருக்கச்செய்தேயும், "பொற்கால்தாமரை, நூற்கால்தாமரை" என்று தாமரையிலே சிலபேதமுண்டிறே; அதில், நூற்கால் தாமரையென்னுதல்; அன்றியிலே, கொள்கையிலே அணிந்திருக்கிற தாமரையென்னு

தல்; தன்னழகேதனக்காபரணமாகவுடைய தாமரையென்னுதல். தேஜஸ்ஸேயாபரணமான தாமரையென்னுதல். திருக்கண்ணும்; (கொடியும்) திருமூக்கும். (பவளமும்) திருவதரமும். (வில்லும்) திருப்புருவமும்.

(கோளிழைத்தண் முத்தமும்) தன்தேஜஸ்ஸேயாபரணமாக வுடைய குளிர்ந்த திருமுத்துநிறையும். அன்றியே, இழையிலே கோப்புண்ட முத்துப்போலே யிருக்கிற குளிர்ந்த திருமுத்தென்னு தல். (தளிரும்) திருக்காதும். (குளிர்வான்பிறையும்) திருநெற் றியும்; நேத்ரபூதரானவரும், "மூக்குவலியோம்" என்றவரும், வாய்சொல்லிப்போனவரும், அதரோத்தரமாயிற்றேவென்று வளை த்துக்கொடுபோனவரும், வாய்க்கரையிலே யிருந்தவரும், தாம் செவிப்பட்டவாறே போனவரும், "இவற்றுக்குநெற்றிநாம்" என்று போனவருமெல்லாமொருமுகமாய்.

(கோளிழையாவித்யாதி) கொள்ளப்பட்ட வாபரணத்தையு டைத்தான ஜ்யோதிர்மண்டலமோ. ரூபகமிருக்கிறபடி. (தன்ன ழகே தனக்காபரணமாயிருப்பதொரு ஜ்யோதிர்மண்டலமோ வென் னுதல்).

(கண்ணன்கோளிழையித்யாதி) கண்ணனுடைய, தன்னழ கேதனக்காபரணமாய் ஒளியையுடைத்தான முகமென்றொரு வ்யா ஜத்தையிட்டு (கோடியேனுயிர்கோள்கின்றதே) கொடியேன்-உயிர் பெறுங்காலத்திலே யுயிரிழக்கும்படியான பாபத்தைப் பண்ணி னேன், வாழுங்காலத்திலே கெடும்படியான பாபத்தைப்பண்ணின வென்னுடைய வுயிரைக்கொள்கின்றது - கோளிழையாவுடைய கொழுஞ்சோதி வட்டங்கொல். (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

கொள்கின்றகோளிருளைச் சுகிர்ந்திட்டகொழுஞ்சுருளின் *
உள்கொண்டநீலநன்னூல்தழைகொல்? * அன்றுமாயன்குழல் *
விள்கின்றபூந்தண்துழாய் விரைநாறவந்து என்னுயிரை *
கள்கின்றவாறு அறியீர் அன்னைமீர்! கழறுநிற்றிரே. (கூ)

ப.—அநந்தரம், ஆர்சர்யரூபனான க்ருஷ்ணனுடைய வுபமாதீதமான திருக்குழல்நலிகிற ப்ரகாரத்தைச் சொல்லுகிறாள்.

(இ-ள்.) கொள்கின்ற - லோகத்தை யடங்கக்கொள்ளக்கடவதான, கோள் - மிக்கையுடைய, இருளை - இருளை, சுகர்ந்திட்ட - கந்தல்கழியும்படி* யெஃதிப்படப்பட்டதாய், கொழும் - செறிந்த, சுருளின் - சுருட்டினுடைய கையழுக்குப்படாமல். உள் - உள்ளே, கொண்ட - நூற்றுக்கொள்ளப்பட்ட, நீலம் - நீலநிறத்தை யுடைத்தான, நல் - அழகிய, நூல்தழைகொள் - நூல்திரளோ, அன்று - அக்ருத்ரிமமானவிது அப்படியல்லவிறே, மாயன் - ஆர்சர்யரூபனான க்ருஷ்ணனுடைய, குழல் - உபமாதீதமான திருக்குழலானது, விள்கின்ற - விகஸிதமான, பூ - புஷ்பத்தையுடைத்தாய். தண் - செவ்வியையுடைத்தான, துழாய் - திருத்துழாயின், விரை - பரிமளமானது, நாற - பரம்பும்படி, வந்து - வந்து, என் - என், உயிரை - ஆத்மாவை, கள்கின்ற - சௌர்யம்பண்ணுகிற, ஆறு - ப்ரகாரம், அறியீர் - அறிகிறிலிகோள், அன்னைமீர் - தாய்மாராயிருந்துவைத்து, கழறுகிற்றிர்- அவஸ்த்தையறியாதே நியமியா நின்றிகோள்.

கள்கை - களவிலே கொள்கை. (கூ)

ஆறு ;—(கோள்கின்ற) ப்ரளயகாலத்தில் திவாராத்ரவிபாக மின்றிக்கே ஜகத்தையடைய வ்யாபியாநின்ற மிக்கதமஸ்ஸைப் புறவாயிலே வெளிறானவம்பரத்தைக்கழித்து அதினுள்ளே யுண்டான கொழுவிய விருண்ட சுருளினுடைய ஸாரமான கறுத்தநூற்றிரளோ; அங்ஙனமன்று ; அத்யாஸ்சர்யமான வழகையுடைய க்ருஷ்ணனுடைய திருக்குழல், அலராநின்றுள்ள வழகிய திருத்துழாயினுடைய பரிமளம் நாறவந்து என்னுடைய ப்ராணனையபஹரிக்கிற படி யறிகிறிலிகோள், ஏதேனுமொன்றைச் சொல்லிப்பொடியா நின்றிகோளென்கிறாள். (கூ)

ஈடு ;— அவ ;— ஒன்பதாம்பாட்டு. 'இவ்வவஸ்தைக்கன்றோ நமக்குப்பூவும் புழுகுமிட்டு ப்ரஸாவஹித்துக்கொடுபோந்தது" என்று திருக்குழற் கற்றையிலழகுவந்து நலியாநின்றதென்கிறாள்.

(கோள்கின்றவித்யாதி) திருக்குழலிலழகுக் கோருபமாநஞ் சொல்லப்புக்கு, அழகுக்கு அதுதான் நேர்கொடு நேருபமாநமாகப் போராமையாலே அதுதன்னைக்கிடந்து சிக்ஷிக்கிறது. ப்ரளய காலத்தில் திவாராத்ரவிபாகமற வெங்கு மொக்கத்தானேயாம்படி,

கொள்ளாநின்றுள்ள - வ்யாபியாநின்றுள்ள, கோட்பாட்டையுடைய விருளென்னுதல்; சோளென்று - மிடுக்காய், மிடுக்கையுடைய விருளென்னுதல். அதுதன்னை, சுகிருவது - எஃகுவது; இப்படியெஃகுகிறது, தன்னில்கெழுமிதான வம்பாத்தைத்திரட்டுவது, அதுதன்னிலுமுண்டான புறவிதழைக்கழித்து அகவாயில் வயிரமாய் நீலமாணிறத்தைதயுடைத்தாய் நன்றாயிருந்துள்ள நாற்றிரளோ.

(அன்றுமாயன்குழல்) இவள்நெஞ்சிலே யழகிதாக மயிர்பட்டதுகாணும். இத்தனை பரிக்ஷித்தாலாயிற்று உபமாநமாகப் போராதென்னலாவது; பின்னையும், ஆஸ்சர்யபூதனானவனுடைய திருக்குழலென்னுமித்தனை. இத்தனையிறேசிவப்பானது அவனதுஸ்வாபாவிகமான திருக்குழலுக்கு ஸத்ருமோ (விள்கின்றவித்யாதி) அலராநிற்பதாய் அழகியதாய்க்குளிர்ந்திருந்துள்ள திருத்துழாயில் பரிமளமானதுமுகத்திலேயலையெறியவாயிற்றுவந்துதோற்றுகிறது; திருக்குழலிலழகுக்கு, திருத்துழாயில் பரிமளமானது தூசியேறி நடக்கவாயிற்று வந்துபாதகமாகிறது.

(என்னுயிரைக்கள்கின்றவாறறியீர்) கள்கின்ற - களவுகாண்கிற; நீங்களெல்லாருமஸுகமேயிருக்கச்செய்தே, என்னொருத்தியுடைய வாத்மவஸ்துவை வந்துகளவுகாண்கிற ப்ரகாரமறிகிறிலீகோள். களவுகாண்கையாவதென்னென்னில்; இத்தலையிலிசைவின்றிக்கே யிருக்கக்கைக்கொள்ளுகை, அவனிறே களவுகாண்கிறான் இத்தலையத்தலையானபடி; அப்ராப்தனபஹரித்தால் பரிஹரிக்கலாம்; ப்ராப்தனானவனபஹரித்தால் பரிஹாரமில்லையிறே. இதுகைப்பட்டவாறே ஒருப்ரமாணங்கொடு நின்று வழக்குப்பேசத்தொடங்குமிறே அவன்.

(அன்னைமீர்கழறுகிற்றிரே) நீங்களபிபவித்து, இக்களவுக்கு நானும் பெருநிலைநின்றுகூட்டுப்பட்டேனாகப்பொடியாநின்றிகோள்; இந்தவுருவுவெளிப்பாட்டைப் பரிஹரிக்கலாகவும் வேண்டாவோ. ஒரு நியந்த்ரு நியாம்யபாவமேபோ வேண்டுவது பொடிகைக்கு. (கழறுகை - அபிபவித்து வார்த்தைசொல்லுகை கழறல்-கோவச்சொல்லுதல்). (க)

## பத்தாம்பாட்டு

நிற்றிமுற்றத்துளென்று நெரித்தகையராய் * என்னைநீர்
சுற்றியும்சூழ்ந்தும்வைதிர் சுடர்ச்சோதிமணிநிறமாய் *
முற்றஇம்மூவுலகும் விரிகின்றசுடர்முடிக்கே *
ஒற்றுமைகொண்டதுஉள்ளம் அன்னைமீர்! நசையென்நுங்கட்கே ?

ப.—அநந்தரம், ஸர்வாதிகத்வ ஸூசகமான திருவபிஷேகத்திலே தன்னெஞ்சு ஒன்றுபட்டபடியைச்சொல்லுகிறாள்.

(இ-ள்.) உள்ளில்நின்றும், முற்றத்துள் - முற்றத்திலே, நிற்றி - நிற்றி, என்று - என்று, நெரித்த - நெரித்த, கையராய் - கையையுடையீராய்க்கொண்டு, என்னை - என்னை, நீர் - நீங்கள், சுற்றியும் - சுற்றிக்கொண்டு நின்று, சூழ்ந்தும் - பழியாலே சூழ்ச்சிசெய்தும், வைதிர்- வையாநின்றீகோள், சுடர் - சுடராய்ப்பரம்பின, சோதி - ஒளியையுடைத்தான, மணி- ரத்நங்களினுடைய - நிறமாய் - நிறத்தை யுடைத்தாய்க்கொண்டு, இம்மூவுலகு - த்ரிவிதசேதநாசேதநாத்மகமானலோகத்தை, முற்றவும் - அடங்கலும், விரிகின்ற - வ்யாபிக்கிற, சுடர் - தேஜஸ்ஸையுடைத்தான, முடிக்கே - திருவபிஷேகத்திலே, உள்ளம் - நெஞ்சானது, ஒற்றுமைக்கொண்டது - ஒருமைப்பட்டது, அன்னைமீர் - அன்னைமீர், நுங்கட்கு - வைகிறவுங்களுக்கு, நசை - என்பக்கல்நசை பண்ணி, என் - என்னப்ரயோஜநமுண்டு. (கo)

ஆறு ;—(நிற்றிமுற்றத்துள்) தன்னகத்துமுற்றத்தே நின்றாயென்று அயுக்தஞ்செய்தேனாகக்கொண்டு, என்னுடைய தசையை யறிந்தநீங்கள், விடாதேசுற்றியும் சூழ்ந்தும் வையாநின்றீகோள் ; நிரவதிக தேஜஸ்ஸான ரத்நங்களுடைய வொளியையுடைத்தாய்க்கொண்டு, ஸமஸ்தலோகங்களையு மோரிடமொழியாமே வ்யாபிக்கிற தேஜஸ்ஸையுடைய திருவபிஷேகத்தில் என்னுடைய ஹ்ருதயமகப்பட்டது ; இனி யென்னைப்பொடிந்து அன்னைமீருங்களுக்கொரு ப்ரயோஜநமில்லை யென்கிறாள். (கo)

ஈடு ; அவ;—“ ஸ்ரிய:பதியுங்கூட நம்மை ப்ரஸாவஹித்துப் போருகிறது இவ்வவஸ்தைக்கன்றோ ” என்று திருவபிஷேகத்திலழகுவந்துநலிகிறபடியைச்சொல்லுகிறாள்.

(நிற்றியித்யாதி) இத்தனையும் நசையறச்சொல்லாவிடில் அவர்கள் விடார்கள்போலே; (நிற்றிமுற்றத்துளென்று) முற்றத்துள்நிற்றி

யென்பர்கள். படுக்கையினின்று மெழுந்திருந்துஎல்லாரும் காணும்படி முற்றத்திலே நிற்கைக்கு மேற்படப்பழியில்லையாக நினைத்திரா நின்றார்கள். (க) "யாநஶக்யா - யாஶக்யா" இத்யாதி (க)"ராஜமார்க்க காஜநா: - ராஜமார்க்ககதாஜநா:" என்றவோபாதியாக நினைத்திராநின்றார்களாயிற்று இத்தை முற்றத்திலே புறப்பட்டுநிற்கும்படிபிறந்தஸாஹஸத்துக்கு நெரித்தகையராய்.

(என்னைநீர்) உருவு வெளிப்பாடு புறப்பட விடுவித்து நிறுத்த நிற்கிறவென்னை, இத்தால் நலிவுவாராதபடி பாக்யம்பண்ணின நீங்கள். அவன்புறப்பட விடுவித்துநிறுத்த நிற்கிறவென்னை; இது கொண்டுகாரியமில்லாதநீங்கள். (சுற்றியும் சூழ்ந்தும்வைதிர்) "இவளைத்தப்புவித்தேமாம்விரகென்" என்றுநெஞ்சிலே விசாரிக்கையும், கால்வாங்கிப்போரநிற்கவு மொண்ணாதபடி சூழநிற்கையுமென்னுதல். அன்றிக்கே, போயும்வந்தும் பொடியாநின்றீகோளென்னுதல்.

(சுடர்ச்சோதியித்யாதி) தப்புவிக்கைக்கு வார்த்தைசொல்லுகிறவிவர்களைப்போலே யொருப்ரதேஶத்திலல்லவிறே அகப்படுத்தி நலியக்கோலுகிறவது நிற்கும்படி. மிக்கபுகரையுடைத்தான ரத்நத்தினுடைய தேஜஸ்ஸையுடைத்தாய்க்கொண்டு கண்டவிடமெங்கும் பரம்பாநின்றுள்ள தேஜஸ்ஸையுடைய திருவபிஷேகத்திலே யொருமைப்பட்டது என்னுடைய ஹ்ருதயமென்னுதல்; அங்கே விலை செய்து கொடுத்ததென்னுதல்.

(அன்னைமீர்நசையென்னுங்கட்கே) தாய்மாரான நீங்களென் பக்கல் நசையறவமையும்; தாய்மாராவார், பெற்றுவளர்த்து போகயோக்யதை பிறந்தால் பின்பு கைப்பிடித்தவன்கையிலே காட்டிக் கொடுத்துக் கடக்க நிற்குமத்தனைபோக்கி, பொடியக்கடவர்களோ. ப்ராப்தயௌவநைகளானாலும், பெற்றப்ராப்திகொண்டு ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கக்கடவதோ. (க0)

## பதினொன்றாம்பாட்டு

கட்கரியபிரமன்சிவன் இந்திரனென்று இவர்க்கும் *
கட்கரியகண்ணனைக் குருகூர்ச்சடகோபன் சொன்ன *
உட்குடையாயிரத்துள் இவையுமோருபத்தும்வல்லார் *
உட்குடைவானவரோடு உடனாய்என்றும்மாயாரே. (கக)

(க) ரா-அயோ-நந-எ.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸித்தவர்கள், நித்யஸூரிகளோடே நித்யஸம்ஶ்லிஷ்டராவரென்று பலத்தையருளிச்செய்கிறார்

(இ-ள்) கட்கு - மநுஷ்யாதிகள்கண்ணுக்கு; அரிய - அரியரான, பிரமன் சிவ னிந்திரன் - ப்ரஹ்மருத்ரேந்த்ராதிகள், என்று - என்றுசொல்லப்பட்ட, இவர் - இவர்கள், கட்கும் - கண்ணுக்கும், அரிய - காணவரியனை, கண்ணனை - க்ருஷ்ணனை. குருகூர்ச்சடகோபன் - உருவுவெளிப்பாடாம்படி மாநஸாநுபவம்பண்ணினவாழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், உட்கு - ஸ்வார்த்தமான பகவத்ஸ்வரூபரூபகுணாதிகளுடைய ப்ரதிபாதநத்தில் ஶக்தியை, உடை - உடைத்தான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், ஒரு - பகவத்ஸௌந்தர்யாதிஶய ப்ரதிபாதகத்வத்தாலே அத்விதீயமான, இவையும் பத்தும் - இவைபத்தையும், வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், உட்குடை - நிரந்தரபகவதநுபவஶக்தியுக்தரான, வானவரோடு - பரமபதவாஸிகளோடே, என்றும் - ஸர்வகாலமும், உடனாய் - ஸமவேதராய், மாயார் - ஸம்ஸாரஸம்பந்த ரூபமான ஸ்வரூபவிநாஶமற்று வர்த்திப்பர்கள். உட்கு - மிடுக்கு.

இதுவும் - கலித்துறை. (கக)

ஆறு ;—(கட்கரிய) மநுஷ்யருடைய விந்த்ரியங்களுக்கு விஷயமன்றிக்கேயிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் கண்ணாற்காணவரியனை க்ருஷ்ணனைக்குருகூர்ச்சடகோபன் சொன்ன (உட்குடையாயிரம்) வாச்யத்தை வசிக்கவல்ல ஶக்தியோகத்தையுடைய வாயிரத்தி லித்திருவாய்மொழி வல்லார் பகவத்குணசேஷ்டிதாதிகளைப் பூர்ணமாகவநுபவிக்கவல்ல * அயர்வறுமமரர்களோடே நித்யஸம்ஶ்லேஷம் பண்ணப்பெறுவர்களென்கிறார். (கக)

ஈடு ;—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யஸித்தவர்கள், பகவத்விஶ்லேஷத்தால் க்லேஶப்படாதே, நித்யஸூரிகளோடேகூடி நித்யாநுபவம்பண்ணப்பெறுவ ரென்கிறார்.

(கட்கரியவித்யாதி) மநுஷ்யருடையகண்ணுக் கவிஷயமாம்படியிருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கும் கண்ணுக்கவிஷயமாம்படி யிருக்கிற க்ருஷ்ணனை. ப்ரஹ்மாதிகள் கண்ணுக்கவிஷயமாம்படி யிருக்கிற க்ருஷ்ணன் மறக்கவொண்ணாதபடி உருவு வெளிப்பாடாய்த்தோன்ற அத்தாலே நலிவுபட்டு, போனபோனவிடமெங்கும் சூழ்ந்துகொண்ட தென்னும்படியாயிற்று இவர்க்கு ப்ரகாஶித்தபடி. அவர்கள்

கண்ணுக்கரிய னைப்போலேயாயிற்று இவர்கண்ணுக்கு (க) "சூழ வுந்தாமரை நாண்மலர்போல்வந்துதோன்றும்" என்னும்படி ப்ர காசித்தபடி.

(குருகூர்ச்சடகோபன்சொன்ன) ஆழ்வாரருளிச்செய்த (உட் குடையாயிரத்துளித்யாதி) ப்ரதிபாத்யார்த்தத்தையுள்ளபடி ப்ரதி பாதிக்கவல்ல ஶக்தியையுடைத்தான வாயிரத்திலும் வைத்துக் கொண்டு, இப்பத்தையு மப்யஸிக்கவல்லார்கள், நித்யாநுபவம்பண் ணாநின்றாலும் மேன்மேலன பகவத்குணங்களை பூர்ணமாகவநுப விக்கைக்கீடான போக்யதையுடைய நித்யஸூரிகளோடொரு கோவையாய்.

(என்றும்மாயாரே) மாய்கையு முருவுவெளிப்பாடும் பர்யாய மென்றிருக்கிறார்காணும். மாயார் - பிரியார். * அடியார்கள் குழாங் களை - உடன் கூடி நித்யாநுபவம்பண்ணப்பெறுவர்கள். பகவதப சார பாகவதாபசாரங்களுண்டானால் வருமதுபோலன்றே, பகவதங் கீகாரமுண்டாய் அது நிலைநில்லாமையால் படும்க்லேஶம். ப்ராஸ யங்கோத்தாப்போலே கண்ணைக்கண்கோத்திற்கிடக்கிறது. (சூழ வும்) இதெல்லாம் அவன் கழுத்துக்குமேலேபடுத்தின க்லேஶ மிறே. (கக)

ஏழாம்பத்து - ஏழாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) ஏ-ஏ-க.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஏழாம்பத்து

# எட்டாந்திருவாய்மொழி

## மாயா - ப்ரவேஶங்கள்.

ஆறு ;—கீழ் உருவு வெளிப்பாடென்றறிந்து நோவுபடச்செய்தே தன்னைக்காட்டி ஆர்த்திதீராதொழிகிறபடியையும், அங்ஙனேயிருக்க முடியாதபடி நம்மை நடத்துகிறபடியையுங்கண்டு "இவ்வாஶ்சர்யமிருந்தபடியென்" என்று எம்பெருமானுக்கறிவிக்க; அவனும் "இவ்வளவோவென்படி" என்று தன்னுடைய விசித்ர விபூதித்வத்தைக்காட்டியருளக்கண்டு, "இதிருந்தபடியென்" என்று விஸ்மிதராகிறார். *

ப:—எட்டாந்திருவாய்மொழியில், கீழ் - உருவுவெளிப்பாடான ப்ரகாஶம் நடக்கச்செய்தே அநுபவம் பெறாதபடி நிரோதித்து ஆர்த்தியை அதிஶயிப்பித்த வைசித்ர்யங்கண்டவர் ; இந்த விசித்ரஶக்தியோகத்துக்கு ஹேதுவானவனுடைய வாஶ்சர்யமாயுள்ள வர்த்தித்வ ரூபத்தையும், அபிமதஸித்தியால்வந்த வாதிக்யத்தையும், அம்மேன்மைகிடக்கச்செய்தே யுண்டான வாஶ்ரிதபவ்யதையையும், உத்துங்கபவ்யதைகளிரண்டுக்கும் ஸூசகமான புண்டரீகாக்ஷத்வத்தையும், அநந்யப்ரயோஜநர்க்கதிசயித போக்யனும்படியையும், சித்தப்ராமகமான சேஷ்டிதாதிகளையும், கர்மாத்யநுரூபமான து:கஜநகத்வத்தையும், அதிஶயிதஜ்ஞாநர்க்கு மவபோதநார்ஹதையையும், தாவபோதத்வ ஹேதுவான ஸௌக்ஷ்ம்யாதிஶயத்தையும், ஸூத்ருட ப்ரமாணஸித்தமான ஸூக்ஷ்ம சிதசித்ப்ரகாரத்வத்தையும் அநுஸந்தித்து; ஏவம் ப்ரகாரவிஶிஷ்டனான நீ, ஒன்றுக்கொன்றொவ்வாத விசித்ராகாரமான ஜகத்தை விபூதியாகக்கொண்டு நிற்கிற வாஶ்சர்ய ஶக்தியோக மிருந்தபடி யென்னென்று புத்தி ஸங்க்ஷிப்தனான ஸர்வேஶ்வரனுக்கு விண்ணப்பஞ்செய்து, தம்முடைய நிரோதி நிவ்ருத்தியில் பணியில்லாமையை நினைத்து ஸந்துஷ்டராகிறார். *

ஈடு;—கீழ்த்திருவாய்மொழி - உருவுவெளிப்பாடாய்ச்சென்றது. கைக்கெட்டாமையாலே உருவுவெளிப்பாடென்றறிவரிறே. இனி, ஸர்வேஶ்வரன் தான் நினைத்தகாரியம் செய்து தலைக்கட்டிக்கொள்ளுமளவும் நம்மையிங்கே வைக்கிறானென்னுமிடமுமறிவ

ரிறே; ஆகிலும், அவனை யொழிய தரிக்கமாட்டாதவராகையாலே இத்தை நினைத்தாறியிருக்கவும் மாட்டாரே. "விரோதியைப் போக்கித் தரவேணும்" என்று இவரர்த்தித்தாலும் அவனும் இவரைக்கொண்டு தான் நினைத்த ப்ரபந்தங்கள் தலைக்கட்டிக்கொள்ளுமளவு மிவரபேக்ஷிதம் செய்யானே. இவரபேக்ஷிதம் செய்யாதிருக்கச்செய்தேயும், இவரை யிங்கேவைத்து ஜீவிப்பிக்கு முபாயங்களுமறிந்திருக்குமே.

ஆகையாலே, சில பதார்த்தங்களை யுயிர்போகாதபடி யொன்றிலே கோத்திட்டு வைக்குமாபோலே, முடியவுமொட்டாதே ஜீவிக்கவு மொட்டாதே நடுவேயிருத்தி நலிகிறபடியை யநுஸந்தித்து, "எனக்கு இதில் பொருந்தாமை யுண்டாயிருக்கச்செய்தேயும் இஸ்ஸம்ஸாரத்திலே வைத்து என்னைநடத்திக்கொடு போருகிற விவ்வாஶ்சர்யத்தை யெனக்கருளிச்செய்யவேணும்" என்ன, ஒன்றைக்கேட்க வேறேசிலவற்றைச்சொல்லுவாரைப்போலே, 'இதொன்றுங்கண்டோ நீராஶ்சர்யப்படுகிறது, இவ்வளவல்லாத நம்முடைய விசித்ரஜகதாகாரதையைப்பாரீர்" என்று தன்னுடைய வாஶ்சர்ய ஜகதாகாரதையைக் காட்டிக்கொடுக்க; அதுதானும் தான்நினைத்ததன்றேயாகிலும் அவன்காட்டிக்கொடுத்ததாகையாலே அதுவு மிவர்க்கு ப்ரீதிஹேதுவாயிருக்குமிறே. ஆக, இவரொன்றைக்கேட்க அவனநேகாஶ்சர்யங்களைக் காட்டிப் பரிஹரித்தான்.

அக்ரூரன், யமுனையிலேபுக்கு முழுகினவாறே பிள்ளைகளை நீருக்குள்ளே கண்டஞ்சாக்கரையிலே பார்த்தான், அங்கேயுங்கண்டான்; கண்டு, (க) ,, ஜலமத்யகதஞ்சாஸௌ ரதஸ்தௌ ஸமபஶ்யத ।
யதாபூர்வம் ஸுமஹாத்மா தாவுபௌ - ஜகதேதந் மஹாஶ்சர்யம்ருபம்யஸ்யமஹாத்மந: । தேநாஶ்சர்யவரேணாஹம் பவதாக்ருஷ்ணஸங்கத:" என்றுகொண்டு அவனாஶ்சர்யப்பட்டாப்போலே, இவரும் அவனுடைய விசித்ர ஜகதாகாரதையை யநுஸந்தித்து விஸ்மிதராகிறார். *

---

(க) வி-பு-ரு-கக-எ.

# முதற்பாட்டு

மாயா ! வாமனனே ! மதுசூதா ! நீயருளாய் *
தீயாய்நீராய்நிலனாய் விசும்பாய்க்காலாய் *
தாயாய்தந்தையாய்மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் *
நீயாய்நீநின்றவாறு இவையென்னநியாயங்களே. (க)

ப --முதற்பாட்டில், காரணரூபமாயும் கார்யரூபமாயு மிருக்கிற ஸகல பதார்த்தங்களையும் விபூதியாக வுடையையாயிருக்கிற ப்ரகார மென்னாயிருக்கிறது, இத்தை ஆஶ்சர்ய ரூபனான நீ யருளிச்செய்யவேணுமென்கிறார்.

(இ - ள்.) மாயா - ஸ்வாபாவிகமான வாஶ்சர்யஶக்தியை யுடையையாய் வாமனனே - அதுக்கநுரூபமாக, மஹாமேருவைமஞ்சாடியாகச் சுருக்கினாப் போலே வடிவைச்சிறுக விட்டு இரந்த வாமநனாய், மதுசூதா-உன்னுடைய ஶக்தியைசித்ரயத்தில் ஸந்தேஹித்தாருடைய ஸம்ஶயத்தை, மதுவைநிரஸித்தாப் போலே நிரஸித்துக்கொடுக்கு மவனே, நீ - நீயே, அருளாய் - உன் ப்ரகாரத்தை யருளிச்செய்யவேணும், தீநீர்நிலன் விசும்புகால் - அண்டகாரணமான பூதபஞ்சகமும், தாய்தந்தைமக்கள் மற்றும் - அண்டாந்தர்வர்த்திகளில் ஒருவர் செய்த தொருவர் செய்யாதபடியான மாதா பித்ரு புத்ர ப்ரப்ருதிகளும், முற்றும் - தத்ஸம்பந்திகளாயுள்ள ஸமஸ்த பதார்த்தங்களும், ஆய் - நீ யிட்டவழக்காம்படி தத்தத்ப்ரகார விசிஷ்டனாய்-அவ்வளவே யன்றியே, நீயாய் - அஸாதாரணாகாரயுக்தனாய், நீ, நின்ற- நிற்கிற இவையாறு - இப்ப்ரகாரம், என்ன என்ன, நியாயங்கள் - உபபத்தியுக்தங்களா யிருக்கின்றன.

காரணரூப வஸ்துக்களா யிருக்கிறவைதானே கார்யரூபமாகையாலே ஸர்வாத்மகனான தான் தத்கததோஷஸ்பர்ஶமில்லாதபடி வ்யாவ்ருத்தனா யிருக்கையும் ஒருவர்க்கறிய வொண்ணாதபடியாலே யிந்த வேதாந்தரஹஸ்யோபபத்திகளை நீயேயருளிச்செய்யவேணுமென் றாராயிற்று. (க)

ஆறு;—(மாயாவாமனனே) அத்யாஶ்சர்யபூதனாய் ஆஶ்ரிதவிரோதிநிரஸநஶீலனான நீ யென்னைத் தெளிவிக்கவேணும். லோகத்தில், வஹ்நிஜலபூம்யாகாச வாயுக்களையும் தாயையும் தந்தையையும் மக்களையும் மற்றெல்லாரையும் விபூதியாகவுடையையாய், இவற்றோடுபிரியவஸாதாரணாகாரத்தையு முடையையாய்க்கொண்டு நீநின்றபடியென் என்று விஸ்மிதராய் எம்பெருமானைக் கேட்கிறார்.

ஈடு; அவ;—முதற்பாட்டு; விசித்ரமானகார்ய காரணங்களை யெல்லாம் விபூதியாக வுடையனாயிருக்கிற விருப்பை யநுஸந்தித்து, இவை யென்னபடிகளென்றாஶ்சர்யப்படுகிறார்.

(மாயா) மாயாவென்கிறவிது இத்திருவாய்மொழிக்காக ஸங்க்ரஹமாயிருக்கிறது. (வாமனனே) மாயாவென்கிற பதத்திற் சொல்லுகிற வாஶ்சர்யத்துக்கு வ்யாப்தி க்ரஹணபூமியாயிருக்கிறது. அன்றேபிறந்து அன்றேவளர்ந்து மஹாபலி பக்கலிலே சென்று அவன் முன்னே நின்று, தான் சொன்னவையெல்லாம் செய்யவேண்டும்படி வார்த்தை யருளிச்செய்து, சிற்றடியைக்காட்டிப் பெரியவடியாலேயளந்துகொண்டு, இப்படிப்பண்ணின வ்யாபாரங்களையுடைய முன்னேட்டுக்கொண்டு - வாமநனே யென்கிறார். (மதுசூதா) ஆஶ்சர்ய சேஷ்டிதங்களுக்கெல்லாம் ஸ்ரீவாமநனைப் போலேயாயிற்று, விரோதிநிரஸநத்துக்கு மதுஸூதநனென்கிறது. (மதுசூதாநீயநுளாய்) மதுவாகிறவஸுரனை நிரஸித்தாப்போலே, எனக்கோடுகிற ஸம்ஶயத்தையும் நீயேபோக்கித் தந்தருளவேணும்.

(தீயாயித்யாதி) கார்யகதமானவைசித்ரி, காரணத்திலேயுமுண்டாயிருக்குமிறே; இனித்தான், ஒன்றின்படியாயிராதிறே மற்றையது. இப்படிபிந்நமான ப்ரகாரங்களை யுடையவான பூதபஞ்சகங்களுக்கும் நிர்வாஹகனாய். (தாயாயித்யாதி) கார்யவர்க்கத்திலும், தாய்செய்தது தமப்பன் செய்யமாட்டான், தமப்பன் பண்ணுமுபகாரம் புத்ரர்கள் பண்ணமாட்டார்கள், புத்ரர்கள் பண்ணுமுபகாரம் பந்துக்கள் பண்ணமாட்டார்கள். இப்படி ஸர்வவித பந்துக்களுமாய். (முற்றுமாய்) அநுக்தமான ஸம்பந்திகளாயுள்ள ஸகல சேதநா சேதநங்களுக்கும் நிர்வாஹகனானவனே.

(நீயாய்) ஜகதாகாரனாயிருக்குமளவல்லவிறே அஸாதாரணவிக்ரஹயுக்தனாயிருக்குமிருப்பு; இவர்க்குப் பரமபதத்திலே ஸூரிபோக்யனாயிருக்கிற விருப்போடு, ஜகதாகாரனாய் நிற்கிற நிலையோடு வாசியற போக்யனாம்படியிறே யிவர்க்குப்பிறந்த ஜ்ஞாநவைஶத்யம். (நீநின்றவாறு) இப்படி இவையெல்லாமாய்க்கொண்டு நீநின்றப்ரகாரம். (இவையென்னநியாயங்களே) இவையென்ன படிகள்தான்.

முதற்றிருவாய்மொழியிலே இவனுடைய வைஶ்வர்யத்தை யநுபவித்திருக்கச்செய்தேயும், இதுக்குமுன்பு கண்டறியாதாப்

போலே புதியரா யநுபவிக்கிறா ராயிற்று. குணாநுபவத்தில் க்ஷண ந்தோறும் புதுமைபிறந்து (க)* அப்பொழுதைக்கப்பொழுதென் னுாரவமுதமா யநுபவிக்குமாபோலே யாயிற்று, விபூத்யநுபவத்தி லும் புதியராயநுபவிக்கவல்லபடி (இவையென்னவியாயங்கள் - நீ யருளாய்) இத்தையருளிச்செய்யவேணும். (உ) " த்வந்ந ஸம்ஶயஸ்யாஸ்ய ச்சேத்தா நஹ்யுபபத்யதே" என்று அர்ஜுநன் ஸம்ஶயம் தீர்த்தாப்போலே, என்னுடைய ஸம்ஶயத்தையும் தீர்த்தருளவே ணும். (க)

---

## இரண்டாம்பாட்டு

அங்கண்மலர்த்தண்துழாய்முடி அச்சுதனே ! அருளாய் *
திங்களும்ஞாயிறுமாய்ச் செழும்பல்சுடராய் இருளாய் *
பொங்குபொழிமழையாய்ப் புகழாய்ப்பழியாய்பின்னும்நீ *
வெங்கண்வெங்கூற்றமுமாய் இவையென்னவிசித்திரமே (உ)

ப —அநந்தரம், அபிமதஸித்தியால்வந்த பூர்த்தியாலே அத்யுச்ச்ரிதனு யுள்ளநீ, சந்த்ரஸூர்யப்ரமுக ஸகலபதார்த்தங்களையும் விபூதியாக வுடைமை யான வைசித்ர்யத்தை யருளிச்செய்யவேணுமென்கிறார்.

(இ-ள்.) அம் - விலக்ஷணமான, கள் - மதுவையுடைய, மலர் - பூவை யுடைத்தாய், தண் ஶ்ரமஹரமான, துழாய்- திருத்துழாயாலே யலங்க்ருதமான, முடி - மயிர்முடியையுடையையாய், அச்சுதனே - ஆர்த்தித்தவன்று கைப் புகுந்தவாறே ஶ்லேஷித்வபூர்த்தியாலே அப்ரச்யுதஸ்வபாவனானவனே, அரு ளாய் - நீயருளிச்செய்யவேணும், தாபஹரீதகரான, திங்களும் - சந்த்ரனும், ஞாயிறுமாய் - ஸூர்யனுமாயும், செழும் - விலக்ஷணமாய், பல் - பலவாயுள்ள, சுடராய் - தாராக்ரஹநக்ஷத்ரங்களான தேஜ:பதார்த்தங்களாயும், இருளாய் - ப்ராணிகளுக்கு பதார்த்ததர்ஶநம்பண்ணவொண்ணுதவிருளாய், பொங்கு - அந்தப்ராணிகளுடைய வபிவ்ருத்திஹேதுவாய்க்கொண்டு உச்ச்ரிதமாய், பொ ழி - சொரியும், மழையாய் - மழையாய், புகழாய் - அத்தாலுண்டான ஸஸ்யா திபதார்த்தஸம்பத்தியாலே ஸம்பாத்யமானபுகழாய், பழியாய், அவற்றினு டைய பாத்ரவ்யயாதி வ்யதிரேகத்தால்வரும் பழியாய் - அப்பழிமிகைத்தகால

---

(க) உ-டு-ச. (உ) கீதை-சு-கூ.

த்து, பின்னும் - பின்னையும், வெங்கண் - அவர்களை யுபஸம்ஹரிக்கைக்கடியாய் க்ரூரேக்ஷணனாய், வெம் - க்ரூரஸ்வபாவனுமான, கூற்றுமாய் - ம்ருத்யுவாயும்நிற்கிற, இவை - இந்தப்ரகாரங்கள், என்ன - என்ன, விசித்ரம் - வைசித்ர்யங்கள். (உ)

ஆறு ;—(அங்கண்மலர்) அழகிய மதுவோடுகூடின பூவையுடையதிருத்துழாயைத் திருமுடியிலே யுடையையாய், இவ்வழகுக் கொருநாளு மொருச்யுதியில்லாதவனே ; திங்களும் ஞாயிறுமாய், அழகியதாய்ப் பலவகைப்பட்ட நக்ஷத்ரங்களுமாய், தமஸ்ஸுமாய், பொங்குபொழிமழையாய், புகழாய், பழியாய், பின்னும் நீ, வெவ்விய கண்ணையுடைய வெவ்விய ம்ருத்யுவுமான படிகளென்ன வைசித்ரிதானென்கிறார். (உ)

ஈடு; அவ ; -இரண்டாம்பாட்டு. சந்த்ர ஸூர்யாதி பதார்த்தங்களுடைய தனக்கு விபூதியாகவுடையனாயிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(அங்கண்மலரித்யாதி) அழகியதாய் மதுவோடேகூடின மலரையுடைத்தாய்க் குளிர்ந்திருந்துள்ள திருத்துழாயைத் திருமுடியிலே யுடையையாய், அந்த வொப்பனையால் வந்தவழகுக் கொருநாளு மொருவேறுபாடின்றிக்கே யென்றுமொக்க நித்யமாம்படியிருக்கிறவனே. வைத்தவளையத்தோபாதியும் போக்யமாகிறதாயிற்று விபூத்யநுபவமிவர்க்கு. "கீழ்த்திருவாய்மொழியில் 'விள்கின்றபூந்தண்டுழாய்விரைநாறவந்து' என்று சொன்னத்தை ஸ்மரிக்கிறார்" என்று பிள்ளான்பணிக்கும். * மாயன்குழல்விள்கின்ற பூந்தண்டுழா யுருவுவெளிப்பாடாய் பாதகமானைதவிர்ந்து, ஸாக்ஷாத்கரித் தநுபவிக்கிறாரிறே.

(திங்களும்ஞாயிறுமாய்) (க) "ஸூர்யாம்ஸுஜநிதம்தாபம் நிர்வாபயதி ஸுஶீ" - ஸூர்யாம்ஸுஜநிதம்தாபம் நிந்யேதாபதிஸ்ஸமம்" என்கிறபடியே, ஆதித்யகிரணங்களால் பிறந்ததாபமெல்லாம்போம்படி சேதநர்க்கு ஆப்யாயநத்தைப்பண்ணக்கடவனை சந்த்ரனும், அவனால்வந்த நீர்க்களிப்பை யறுத்துக்கொடுக்குமாதித்யனுமாய். (சேழும்பல்சுடராய்) சேதநர்க்குவரும் லாபா

(க) வி-பு-டு-கo-கரு.

லாபங்களையறிகைக்கீடான ஸஞ்சாரத்தையுடைத்தான நக்ஷத்ரங்களுமாய். (இருளாய்) சேதநர்க்குபோகயோக்யமானவிருளாய். (பொங்குபொழிமழையாய்) ஸகலப்ராணிகளுக்கும் ஜீவிக்கலாம்படி ஸஸ்யங்களையுண்டாக்கும் வர்ஷமுமாய். (புகழாய்) எல்லாருமாசைப்படும்யஶஸ்ஸாய். (பழியாய்) எல்லார்க்கும் வருந்திப்பரிஹரிக்கவேண்டும்பழியாய். (பின்னும்) அதுக்குமேலே.

(வெங்கண்வெங்கூற்றமுமாய்) (௧) "[Grantha text] புராபூத்வா ம்ருதுர்த்தாந்தஸ்ஸர்வபூதஹிதேரத: । நக்ரோதவஶமாபந்ந: ப்ரக்ருதிம்ஹா துமர்ஹஸி" என்கிறபடியே, இவை அதிப்ரவ்ருத்தமானவாறே குளிரநோக்குமது தவிர்ந்து, வெவ்விதானநோக்கையுடையையாய். (வெங்கூற்றம்) அந்தகன் "தண்ணீர்" என்னும்படி வெவ்விய கூற்றமுமாய். ஸம்ஹாரத்தில் ருத்ராந்தர்யாமித்வத்தைச்சொன்னபடி (இவையென்னவிசித்திரமே) இவையென்ன வைசித்ரிதான்-அருளாய். (௨)

---

## மூன்றாம்பாட்டு

சித்திரத்தேர்வலவா! திருச்சக்கரத்தாய்! அருளாய் *
எத்தனையோருகமும் அவையாய்அவற்றுள் இயலும் *
ஒத்தவொண்பல்பொருள்கள் உலப்பில்லனவாய்வியவாய் *
வித்தகத்தாய்நிற்றிநீ இவையென்னவிடமங்களே. (௩)

ப.—அநந்தரம், உத்துங்களுய்வைத்து ஆஶ்ரிதபாரதந்த்ரனுயிருக்கிற நீ, காலோபலக்ஷித ஸகலபதார்த்தங்களுமாயிருக்க, அவற்றோடு தொற்றற்றுநிற்கிற வைஷம்யத்தை யருளிச்செய்யவேணுமென்கிறார்.

(இ-ள்.) அவஸ்தாநுரூபமாக, சித்திரம் - விசித்ரமாம்படி, தேர் - தேரை, வலவா - நடத்தவல்லனுய், திருச்சக்கரத்தாய் - அந்த வைசித்ர்யம்போலே பகலையிரவாக்கும்பரிகரமான திருவாழியை யுடையவனே, அருளாய் - நீ யருளிச்செய்யவேணும், எத்தனை - க்ருத த்ரேதா த்வாபர கலிரூபமான வெல்லாவகையையு முடைத்தாய், ஓர் - ஒன்றோடொன்றொவ்வாதபடி அத்

(௧) ரா-ஆர-சுடு-சு-

விதீயமான, உகமும் - யுகங்களுக்கு நிர்வாஹகனாய், அவையாய் - அந்த கால கார்யமாய்க்கொண்டு, அவற்றுள் — அதுக்குள்ளே, இயலும் - நடப்பதாய், ஒத்த - ஜ்ஞானைகாகாரத்யாலொத்து, ஒண் - ஸ்வயம்ப்ராகாஶத்வ ஜ்ஞாத்ருத்வாதி குணவைலக்ஷண்யத்தையுடைத்தாய், பல் - (க) ,, ஸ ஏகோ ஸஹ்ஸ்ரதா ... ஏகோபஹுஸ்யாம் '' என்கிற மர்யாதையாலே ஸ்வரூபபேதத்தையுடைத்தாய்; உலப்பில்லன - அஸங்க்யாதமான, பொருள்கள் - சித்சித்பதார்த்தங்களை, ஆய் - ப்ரகாரமாக வுடையையாய், வியவு - அவற்றினுடைய ஸாம்யாகார திரோதாயகமான தேவமநுஷ்யாத்யாகாரங்களாலுண்டான வேறுபாட்டுக்கு, ஆய் - நிர்வாஹகனாய், இப்படியிருக்கச்செய்தே, வித்தகத்தால் (உ) ,, நதேஷு ... ஸ்திதாநி, ... நமத்ஸ்த்திதாநிபூதாநி, '' " நவா ஹ ... ஷ வஹ்யுதே ... நசாஹந்தேஷ்வவஸ்த்தித: '' என்கிறகணக்கிலே தத்கததோஷாஸம்ஸ்ப்ருஷ்டனான விஸ்மயநீயதையோடே, நீ - நீ, நிற்றி - நில்லாநின்றாய், இவை - இவை, என்ன - என்ன, விடமங்கள் - வைஷம்யங்கள். (ந)

ஆறு ;— (சித்திரத்தேர்வலவா) ஸாரத்யம்பண்ணும்போது, அத்யாஶ்சர்யமாம்படி தேரைநடத்தவல்லவனே ; ஜயத்ரதவதத்தினன்று பகலை யிரவாக்கின வத்யாஶ்சர்யமான திருவாழியையுடையவனே ; க்ருதாதிகளான வநேகயுகங்களையும், அவ்வவகாலங்களிலுண்டாயோரோவகையாலே ஒத்தும், ஓரோவகையாலேவேறுபட்டும், தேவமநுஷ்யாதி ரூபேணபலவாய், ப்ரதிவ்யக்த்யஸங்க்யாதமானபதார்த்தங்களையும் விபூதியாகவுடையையாய், இப்படி விஸ்மயநீயனாய் நில்லாநின்றாய், இவையென்னசேராச்சேர்த்திகளென்கிறார்; (ந)

ஈடு ; அவ ;—மூன்றாம்பாட்டு. க்ருதத்ரேதாதியுகங்களையும், அவ்வவகாலங்களிலுண்டான தேவமநுஷ்யாதிகளையும் விபூதியாக வுடையவனென்கிறார்.

(சித்திரத்தேர்வலவா) விசித்ரமாம்படியாகத்தேரைநடத்தவல்லவனே. வைசித்ரியாவது - த்ரோணன் கையுமணியும் வகுத்து வாசலைப்பற்றிநிற்க, அவனைவளைந்து அவனுக்கவ்வருகே தேரைக்கொடுபோய்நிறுத்தி அவனுக்கு வ்யாபரிக்கைக்கிட மறுத்தானாயிற்று. பீஷ்மன்கையிலம்பு தூரப்போய்விழும், அர்ஜுநன்கையிலம்பு இவ்வருகேவிழும்; ஆகையாலே, அவனம்புவிடப்புக்கவாறே

(க) கட-உ-ஙு- (உ) கீதை-க-ச

தேரைப் பின்னே கழலக்கொடுபோயும், இவனம்புவிடப்புக்கவாறே தேரைக்கிட்ட நிறுத்தியும். இப்படிதேரை நடத்தும்படியைப் பற்ற - சித்திரத்தேர்வலவாவென்கிறது. (திருச்சக்கரத்தாய்) பகலையிரவாக்கும் பரிகரத்தையுடையவனே.

(எத்தனையோருகமுமவையாய்) க்ருதாதியுகங்களுக்கெல்லாம் நிர்வாஹகனாய், (அவற்றுள்ளியலும்) அவற்றுக்குள்ளே வர்த்திக்கிற. ( ஒத்தவித்யாதி ) (ஒத்திருப்பதுமாய் - வியவாயிருப்பதுமான - ஒண்பல்பொருள்களுலப்பில்லனவாய் ) ஓராகாரத்தாலே யொத்தும், ஆகாராந்தரத்தாலே வேறுபட்டுமிருப்பனவுமாய், விலக்ஷணமுமான பலவகைப்பட்ட பதார்த்தங்களநேகங்களை யுடையையாய். தேவமநுஷ்யாதி ஜாதியாலே யொத்தும், வ்யக்திபேதத்தாலே வேறுபட்டும். ஸகலாத்மாக்களும் ஜ்ஞாநைகாகாரதயா ஒத்திருக்கச் செய்தேயும், அஹம்த்வமாதிபேதத்தாலே பிந்நராயிருப்பர்களிறே. (வித்தகத்தாய்நிற்றி நீ) இப்படி விஸ்மயநீயனாய்க்கொண்டு நில்லாநின்றாய் நீ.

(இவையென்னவிடமங்களே) இவையென்ன சேராச் சேர்த்தியான செயல்கள்தான். (௩)

---

## நான்காம்பாட்டு.

கள்ளவிழ்தாமரைக்கண் கண்ணனே! எனக்குஒன்றுஅருளாய் *
உள்ளதும்இல்லதுமாய் உலப்பில்லனவாய்வியவாய்*
வெள்ளத்தடங்கடலுள் விடநாகணைமேல்மருவி *
உள்ளப்பல்யோகுசெய்தி இவையென்ன உபாயங்களே. (௪)

ப.—அநந்தரம், பரத்வ ஸௌலப்யரூபமான போக்யதைதோன்றும்படி புண்டரீகாக்ஷனான நீ, நித்யாநித்ய ஸமஸ்த பதார்த்தங்களையும் ப்ரகாரமாகவுடையையாய், அவற்றினுடைய ரக்ஷண சிந்தை பண்ணுகிற வுபாயமிருக்கிறபடி யென்னென்கிறார்.

(இ-ள்.) கள் - மதுவை, அவிழ் - மலருகிற, தாமரை - செவ்வித்தாமரைப் பூப்போலேயிருக்கிற, கண் - திருக்கண்களையுடையனான, கண்ணனே - க்ருஷ்ணனே, எனக்கு, நீ நினைக்கிற ரக்ஷணோபாயங்களின்னதென்று, ஒன்று - ஒன்றை, அருளாய் - அருளிச்செய்யவேணும், உள்ளதும் -

நித்யமாகையாலே யென்றுமுள்ளதாய், இல்லதுமாய் - அவஸ்த்தாந்தர பாக்காகையாலே இல்லாமையையுடைத்தாய், உலப்பில்லனவாய் - அஸங்க்யாதமாய், வியவாய் - அவாந்தரமான வேறுபாட்டையுடைத்தாயிருக்கிற பதார்த்தங்களை ப்ரகாரமாகவுடையையாய்; இந்தஸகல சேதநாசேதநங்களையும் ரக்ஷிக்கைக்காக, வெள்ளம் - பூர்ணமாய், தடம் - இடமுடைத்தான, கடலுள் - க்ஷீரார்ணவத்திலே, விடம் - விஷாதிகளுக் கநபிபவநீயனும்படி விஷத்தை யுமிழுகிற, நாகணைமேல்- திருவநந்தாழ்வானுகிற படுக்கையிலே, மருவி-மேவி, உள்ளம் - திருவுள்ளத்திலே பல் - பஹுவிதமான, யோகு - ரக்ஷணயோகங்களை, செய்தி - சிந்தியாநின்றாய், இவை - இவை, என்ன - என்ன, உபாயங்கள் - உபாயங்களாயிருக்கின்றன.

அவதாரணோபாயமோ, அநிஷ்டநிவ்ருத்த்யுபாயமோ, அபிமத ப்ராப்த்யுபாயமோ ஆஶ்ரிதஸம்ஶ்லேஷோபாயமோ, *ஆவர்ஜநோபாயமோ வென்றறிகிறிலேன் ; ஒன்றை நிஷ்கர்ஷித்தருளிச்செய்யவேணுமென்று கருத்து.

யோகு - உபாயம். (ச)

ஆறு ;— (கள்ளவிழ்) மதுஸ்யந்தியான தாமரைப்போன்ற திருக்கண்களையுடைய கண்ணனே எனக்கொன்றருளிச் செய்யவேணும். நித்யமாயிருக்கையாலே யுண்டென்று சொல்லலாம் சேதநனும், பரிணமஸ்வபாவமாய்க்கொண்டு ப்ரதிக்ஷணமவஸ்த்தாந்தர பாக்காகையாலே யில்லையென்னலாம் ப்ரக்ருதியுமாய், வெள்ளத் தடங்கடலுள் விடநாகணைமேல் மருவி, திருவுள்ளத்தாலே பலரக்ஷண சிந்தைகளைப் பண்ணாநிற்றி, இவையென்னவிரகுக ளென்கிறார்.

ஈடு ; அவ ;—நான்காம்பாட்டு. லோகத்தில் நித்யாநித்ய பதார்த்தங்களை விபூதியாகவுடையனாயிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(கள்ளவிழ்த்யாதி) அப்போதலர்ந்த தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களையுடையனாய் பவ்யனாயிருக்கிறவனே, அவனுடைய திருக்கண்கள்போலே யாயிற்று இவர்க்கு விபூதியுபாகர்ஷகமாயிருக்கிறபடி. அன்றிக்கே, திருக்கண்களோபாதி பாதகமாகாநின்றதாயிற்று விபூத்யநுபவமுமிவர்க்கு. பாதகமாகையாவதென்னென்னில் ; "இன்னது" என்று நிஶ்சயிக்கமாட்டாதே ஸம்ஶயித்துப்பட்ட தொரு க்லேஶமுண்டிறே, அதுவும் பாதகமாயிருக்குமிறே. "கீழிற்றிருவாய்மொழியிலே - 'சூழவுந்தாமரை நாண்மலர்

* அவர்ஜநோபாயமோ.

போல்வந்து தோன்றும் ' என்றத்தை ஸ்மரிக்கிறார் '' என்று பிள்ளான் பணிக்கும் அத்தைதஜீபர்கே ட்டருளி, '' கீழோடுகிறீதியின் படியே இதுவுமாகப்பெற்றதாகில் அழகிது; அங்ஙனன்றிக்கே, இது ரஸாந்தரமா யறிவுண்டானபின்பு ப்ரகரணத்தோடு பொருந்தமாட்டாது '' என்றருளிச்செய்தாராம்.

(உள்ளதுமித்யாதி) உலப்பில்லைவாய்க்கொண்டு உள்ளதுமாய் வியவாய்கொண்டு இல்லதுமா யிருந்துள்ள சேதநாசேதநங்களுக்கு நிர்வாஹகனும் (க) '' யத்து காலாந்தரேணாபி நாந்யஸம்ஜ்ஞாமுபைதிவை । பரிணாமாதி ஸம்பூதாம் தத்வஸ்து ந்ருபதச்சகிம் '' என்கிறபடியே, அசித்து நச்வரமா யிருக்கையாலே யில்லதென்று சொல்லலாயிருக்கும்; ஆத்மவஸ்து ஏகரூபமாயிருக்கையாலே உள்ளதென்கிறது.

(வெள்ளத்தடங்கடலு ளித்யாதி) திருப்பாற்கடலிலே, ப்ரதிகூலர்க்குக்கிட்டவொண்ணாதபடி விஷத்தை யுமிழாநின்றுள்ள திருவநந்தாழ்வான்மேலே பொருந்தி. (உ) '' ஆங்காரவாரமது கேட்டழலுமிழும் - பூங்காரரவணையான் '' என்கிறபடியே, அஸ்த்தாநே பயசங்கைபண்ணி யழலுமிழுமவனிறே. (உள்ளப்பல்யோகு செய்தி) திருவுள்ளத்திலே பலரக்ஷண சிந்தைபண்ணாநிற்றி. சேதநபேதத்தோபாதியும் போருமாயிற்று அவன் பண்ணும் ரக்ஷணசிந்தையில் பரப்பு.

இப்போதிது கீழோடும் மேலோடுமந்வயிக்கிறபடி யென்னென்னில்; அசித்தாவது நச்வரமாய்க்கொண்டு த்யாஜ்யமாயிருக்கும்; ஆத்மவஸ்து ஏகரூபமாய்க்கொண்டு உபாதேயமாயிருக்கும், இவையிரண்டுக்கும் நியந்தாவாயிருக்கு மீச்வரன். ''இச்சேதநன்றானும் தான் பண்ணிற்றொரு கர்மமும் ' தனக்கு ' என்னவொரு ருசியுமாயிருக்கையாலே, இவன், ' தனக்கு ' என்னவோரிச்சைபிறக்கில்லது நம்மைப்பெற விரகற்றிருந்தது; இவனுக்கோ அதில்லையாயிராநின்றது; இனிச்செய்யும்படியென் '' என்று, இவன், (ங) ''இந்நின்றநீர்மையினியாமுறாமை'' என்றால்செய்யுமத்தை, இவன்

(க) வி-பு-உ-கங-கக (உ) ச-திருவ-கo (ங) திருவி-க-

தலையிலிசைவின்றிக்கே யிருக்கச்செய்தே, இவன்நம்மைவந்து கிட்டினும் விரகேதோ" என்று, அதுக்குறுப்பாக வுபாயசிந்தை பண்ணிக்கண்வளர்ந்தருளுகிறபடி.

(இவையென்னவுபாயங்களே) சேதநர் பலரானல் அவ்வவருடைய ரக்ஷணங்களும் பலவாயிறேயிருப்பது; அதுக்கீடான வுபாயமுமறியுமே ஸர்வஜ்ஞனைகையாலே. இவையென்னவிரகுகளே. (௪)

---

## ஐந்தாம்பாட்டு.

பாசங்கள்நீக்கி என்னைஉனக்கேஅறக்கொண்டிட்டு * நீ
வாசமலர்த்தண்துழாய்முடி மாயவனே! அருளாய் *
காயமும்சீவனுமாய்க் கழிவாய்ப்பிறப்பாய், பின்னும்நீ *
மாயங்கள்செய்துவைத்தி இவையென்னமயக்குக்களே ! (ரு)

ப — அநந்தரம், என்னை யநந்யப்ரயோஜநனும்படி பண்ணு மதிஶயித போக்யதையையுடையநீ, ஶரீராத்மாக்களுடைய ஸம்பந்தமும் உத்பத்திவிநாஶமும் நீயிட்டவழக்காயிருக்க. அதிலே யகப்படுத்திவைக்கிற ப்ரகாரங்களென்ன ப்ரமங்களாயிருக்கின்றனவென்கிறார்.

(இ-ள்) என்னை - த்வதேகஶேஷமாய் த்வதேகாகாங்க்ஷயமான ஸ்வரூபத்தையுடையவென்னை, பாசங்கள் - அநநுரூபவிஷயஸங்கங்களை, நீக்கி - கழித்து (க) "தனக்கேயாகவென்னைக்கொள்ளுமீதே" என்னும்படி, உனக்கேயற - த்வதேகப்ரயோஜநனாக, கொண்டிட்டு - அங்கீகரித்துவைத்து, வாசம் - அந்த அநந்யப்ரயோஜநத்வாபாதகமாய் பரிமளப்ரசுரமான மலர் - பூவையுடைய, தண்டுழாய் - செவ்வித்திருத்துழாயாலே யலங்க்ருதமான, முடி - மயிர்முடியையுடைய, மாயவனே - ஆஶ்சர்யபோக்யபூதனே, நீ - ரக்ஷகனுமாய் போக்யனுமானநீ, காயமும் - பந்தகஶரீரமும், சீவனும் - பத்தஜீவனும், கழிவு பிறப்பு - இவற்றுக்குவரக்கடவதான விநாஶோத்பத்திகளும், ஆய் - நீயிட்ட வழக்காம்படியாயிருக்க. பின்னும் - பின்னையும், நீ, ஶரீராதிகளிலே ஸக்தனும்படி மாயங்கள் - அவித்யாகர்மவாஸநாருசிகளாகிற வஞ்சநங்களை, செய்து - பண்ணி, வைத்தி - வையாநின்றாய்; இவை - இவை, என்ன - என்ன, மயக்குக்கள் - ப்ராமகவ்யாபாரங்களா யிருக்கின்றன; அருளாய் - அருளிச்செய்ய வேணும். (ரு)

(க) உ-க-க

ஆறு;—(பாசங்கணீக்கி) ஸுஜாதபரிமளதுளஸீதள பூஷிதமான திருமுடியையுடையையாய், அத்யாஸ்சர்யபூதனானநீ, ப்ராக்ருதவிஷய ப்ராவண்யத்தைத்தவிர்த்து த்வதேகதாரகனும்படி யென்னைப்பண்ணிவைத்து, பின்னையும் இப்ப்ராக்ருதியிலேயிட்டுவைக்கிற வாஸ்சர்யத்தை யருளிச்செய்யவேணும். ஸரீரஜீவஜந்மமரணாதி நிர்வாஹகனாய், அவித்யாதிகளாகிற வஞ்சநங்களைப்பண்ணி வையாநின்றாய்; இவையென்ன துர்ஜ்ஞேய ப்ரவ்ருத்திகளென்கிறார். (ரு)

ஈடு; அவ;— ஐந்தாம்பாட்டு. இத்திருவாய்மொழிக்கு நிதாநமான பாட்டாயிற்றிது. அதாவது - * மயர்வறமதிநலமருளி, பின்னையும் எனக்குப்பொருந்தாதபடியான ஸம்ஸாரத்திலே யென்னை வைத்து ஜீவிப்பித்துக் கொடுபோகிற விவ்வாஸ்சர்ய மிருந்தபடியை யெனக்கருளிச்செய்யவேணுமென்கிறார்.

(பாசங்கள்நீக்கி) மயர்வையறுத்து. அவித்யாதிகளைப்போக்கி. (க) * பலசெய்வினைவன்கயிற்றால் சூழ்த்துக்கொண்டதைநீக்கி. (என்னை) விஷயாந்தரங்களிலே கால்தாழ்ந்திருக்கிறவென்னை. (உனக்கேயறக்கொண்டிட்டு) (உ) * துயரறுசுடரடிதொழும்படியாகப் பண்ணி. பாசங்கள்நீக்கிற்றும் தனக்கேயறக்கொண்டதும் மெத்தைக்காட்டியென்னில் (வாசமலரித்யாதி) வைத்தவளையத்தி லழகைக்காட்டியாயிற்று, புறம்புண்டான பற்றறுத்ததும், தனக்கேயாம்படியாகப்பண்ணிற்றும். பரிமளத்தையுடைத்தாய் மலரோடே கூடின ஸ்ரமஹரமான திருத்துழாய்மாலையைத் திருமுடியிலேயுடைய வாஸ்சர்ய ஸௌந்தர்யயுக்தனே (அருளாய்) இவ்வளவுபுகுரநின்ற வென்னையிங்கேயிட்டுவைத்து நலியவோ. (காயமுமித்யாதி) ஸரீரமும் ஆத்மாவுமாய். உத்பத்திவிநாஸங்களுமாய்.

(பின்னுமித்யாதி) உன்பக்கலிலே யறிவைப்பிறப்பித்து, பின்னையுமிதில் பொருந்தாதபடியானவென்னை ஸம்ஸாரத்திலே வையாநின்றாய். (இவையென்ன மயக்குக்களே) இவையென்ன தெரியாச் செயல்கள்தாம். புறம்புண்டானபற்றையறுத்து உன்பக்கலிலே ஸங்கத்தைப் பிறப்பிக்கையாலே நீ யங்கீகரித்தாயோவென்றிராநின்றேன்; பின்னையு மிஸ்ஸம்ஸாரத்திலே வைக்கையாலே கைவிடநினைத்தாயோ வென்றிராநின்றேன், இதென்னபரமம். (ரு)

---

(க) ரு-க-ரு (உ) க-க-க.

# ஆறும்பாட்டு

மயக்கா! வாமனனே! மதியாம்வண்ணம்ஒன்றுஅருளாய் *
அயர்ப்பாய்த்தேற்றமுமாய் அழலாய்க்குளிராய்வியவாய் *
வியப்பாய்வென்றிகளாய் வினையாய்ப்பயனாய், பின்னும்நீ *
துயக்காய்நீநின்றவாறு இவையென்னதுயரங்களே ! (கூ)

ப.—அநந்தரம், ப்ராமகசேஷ்டிதங்களையுடைய வாமநனான நீ, விஸ்ம்ருத்யாதிவிசித்ராநாய்க்கொண்டு பண்ணுகிற க்லேஶங்க ளென்னாயிருக்கின்றன வென்கிறார்.

(இ-ள்.) மயக்கா - வடிவாலும் நடையாலும் உக்தியாலும் மஹாபலியினுடையநெஞ்சு ப்ரமிக்கும்படி பண்ணின, வாமனனே - வாமநனே, மதியாம் வண்ணம் - எனக்குக்கலக்கந்தீர்ந்து அறிவுண்டாம்படி ஒன்று, அருளாய் - அருளிச்செய்யவேணும், அயர்ப்பு - மறப்பும், தேற்றமும் - தெளிவும், ஆய் - நீயிட்டவழக்காய், அழல் - தாபமும், குளிர் - ஶைத்யமும் ஆய் - நீயிட்டவழக்காய், வியவு - விஸ்மயநீயமும், வியப்பு - விஸ்மயமும், ஆய் - நீயிட்டவழக்காய், வென்றிகள் - லோகத்தில் விஜயஸித்திகளும், ஆய் - நீயிட்டவழக்காய், வினை - புண்யபாபரூபகர்மங்களும், பயன் - தத்தத்பலங்களும், ஆய் - நீயிட்டவழக்காய், பின்னும் - அதுக்குமேலே, துயக்கு - இவற்றினில் சேதநர் கலங்குகிறகலக்கமும், நீயாய் - நீயிட்டவழக்காய், நீ, நின்ற - இம்முகத்தாலே லீலாரஸிகநாய்க்கொண்டுநிற்கிற, ஆறு - ப்ரகாரங்களான, இவை - இவை, ஜகத்துக்கு, என்ன - என்ன, துயரங்கள்-க்லேஶங்களாயிருக்கின்றன.

வியவு - வியக்கப்பட்டன. வியப்பு - விஸ்மயமாயிருந்தவையும், மிகுதலுமாம். (கூ)

ஆறு;—(மயக்காவாமனனே) ஸ்ரீவாமநனை வடிகாலே பிச்சேற்றி, நினைத்தது முடித்துக்கொள்ளவல்ல விரகனான நீ, தெளிவுடையேனாம்படியொன்றுபண்ணியருளாய். அஜ்ஞாநஜ்ஞாநோஷ்ணஶீத விஸ்மயநீய விஸ்மயஜய பாபபுண்ய தத்பல நிர்வாஹகனாய். அதுக்குமேலே, அந்யதாஜ்ஞாநாதிஜநகனாய் நீ நின்ற ப்ரகாரமென்ன து:காத்மகங்களென்கிறார். (கூ)

ஈடு ; அவ ;—ஆறும்பாட்டு. விஸ்மயநாதிவிருத்தபதார்த்தங்களை விபூதியாகவுடையனாயிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(மயக்கா) இன்னாரென்றின்றிக்கே, ஆரேனுமாகக் கிட்டினாரை மயங்கப்பண்ணுமவனே. அதெங்கேகண்டோமென்னில் (வாமனனே) தேவகார்யம் செய்யப்போந்தநீ, அந்ததேவர்களை நெருக்கின மஹாபலிதானே நெஞ்சுநெகிழ்ந்து உன்கையிலே நீரைவார்த்துத்தானே யிசைந்துதரும்படி மயங்கப்பண்ணினவனே. (க) "மன்னைமனங்கொள்ளவஞ்சித்து நெஞ்சுருக்கி" என்கிறபடியே. (மதியாமித்யாதி) அநுகூல ப்ரதிகூல விபாகமற மயங்கப்பண்ணாதே நான்தெளிவையுடையேனும்படிபண்ணியருளவேணும்.

(அயர்ப்பாய்தேற்றமுமாய்) (உ) "மத்தஸ்ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச" என்றானிறே தானே. விஸ்ம்ருதியும் தெளிவுமாய். இவ்விடத்தில் விருத்தாகாரத்தைச்சொல்லுகிறதல்ல, விசித்ராகாரத்தைச்சொல்லுகிறது. (அழலாய்க்குளிராய்) ஶீதோஷ்ணங்களாய். (வியவாய் வியப்பாய்) விஸ்மயவிஸ்மயநீயங்களாய். (வென்றிகளாய்) விஜயங்களாய். (வினையாய்ப்பயனாய்) புண்யபாபகர்மங்களாய், அவற்றினுடைய பலங்களுமாய். (பின்னும் நீதுயக்கா) அதுக்குமேலே, உன்னையாஶ்ரயித்தாரும் மதிகலங்கும்படி, அந்யதாஜ்ஞாநவிபரீதஜ்ஞாநங்களைப்பண்ண. (நீநின்றவாறு) நீநின்றப்ரகாரம். (இவையென்னதுயரங்களே) உனக்கிவை தப்பிலருமையின்றிக்கே லீலையாயிராநின்றது, எங்களுக்கு அவைதாம் து:காத்மகமாயிராநின்றன. (சு)

---

## ஏழாம்பாட்டு.

துயரங்கள்சேய்யும்கண்ணா! சுடர்நீள்முடியாய்! அருளாய் *
துயரம்செய்மானங்களாய் மதனாகிஉக்கவைகளாய் *
துயரம்செய்காமங்களாய்த் துலையாய்நிலையாய்நடையாய் *
துயரங்கள்சேய்துவைத்தி இவையென்னசுண்டாயங்களே!

ப.—அநந்தரம், கர்மாநுருபமான து:கங்களைப்பண்ணும் ஸ்வாமியானநீ, அந்தது:க்கஹேதுவான தர்மாநாதிகளை விபூதியாகவுடையையாய் சேதநரை து:கிப்பியாநின்றாய்; இவையென்ன லீலார்த்த ஸ்வார்த்த ப்ரவ்ருத்திகளென்கிறார்.

---

(க) பெரியதிருமடல்-கoகூ. (உ) கீதை-கடு-கடு.

(இ-ள்.) துயரங்கள் - கர்மாநுரூபமான து:கங்களை, செய்யும் - பண்ணு மிடத்தில், கண்ணு - அவதாரதசையோடு, சுடர்நீண்முடியாய் - பரதசையோடு வாசியறநடத்துமவனே, துயரஞ்செய் - து:கஹேதுபூதமாயிருக்கிற, மானங்களாய் - அபிஜநாதிநிபந்தந துர்மாநங்களாய் மதனுகி - (க) ,, ஷை தெதீஷாகீ-ஏதேமதா: '' என்கிறபடியே அவையடியாகவரும் செருக்கும், உகவைகளாய்- அத்தால்வந்த ப்ரீதிகளுமாய், துயரம் - அபிநிவேஶாதிது:கங்களை, செய் - விளைக்கக்கடவ, காமங்களாய் - பதார்த்தத்ருஷ்ணுரூபகாமங்களாய், துலையாய் - அந்தபதார்த்தங்களினுடைய தாரதம்யாபாதக பரிமாணமாய், நிலையாய் நடையாய் - அவற்றினுடையஸ்த்திதிகமநங்களுமாய், இப்படி, சேதநர்க்கு, துயரங்கள் - து:கங்களை, செய்து - பண்ணி, வைத்தி - வைப்புதி, இவை - இவை, என்ன - என்ன, சுண்டாயங்கள் - பாதுக்கம்பாராத ஸ்வார்த்தப்ரவ்ருத்திகள், அருளாய் - அருளிச்செய்யவேணும்.

சுண்டாயம் - ஸ்வார்த்தப்ரவ்ருத்தி. (எ)

ஆறு;—(துயரங்கள்செய்யுங்கண்ணுசுடர்நீண்முடியாயருளாய்) உன்னுடைய திருவபிஷேகத்தி லழகாலே நலியும்க்ருஷ்ணனே, அப்படியே விபூதியினுடைய வாஶ்சர்யத்தாலேயும் நலிவுபடாமே தெளிவிக்கவேணும்; து:க்கஹேதுவான வபிமாநம், அத்தாலேவந்த மதம், உகப்பு, து:ககரமானகாமம், பரிமாணம், ஸ்த்திதிகமநங்கள், ஏவம்ரூபமாய் து:காத்மகமான வ்யாபாரங்களைப் பண்ணிவைத்தாய்; இவையென்ன விளையாட்டுக்களென்கிறார். (எ)

ஈடு; அவ; —ஏழாம்பாட்டு. து:க்கஹேதுவான வபிமாநந்தொடக்கமான விசித்ரபதார்த்தங்களை விபூதியாகவுடையனுயிருக்கிறபடியையருளிச்செய்கிறார்.

(துயரங்களித்யாதி) து:க்கங்களைப்பண்ணக்கடவக்ருஷ்ணனே. (எத்தாலேநலிவதென்னில்; (க) * முடிச்சோதியிற்படியே திருவபிஷேகத்திலழகைக்காட்டியாயிற்று) (சுடர்நீண்முடியாய்) தர்ஶநீயமாய் உபயவிபூதிக்கும் சூடினமுடி.) விபூத்யநுஸந்தாநமும் திருவபிஷேகத்தோபாதி பாதகமாகாநின்றதாயிற்று. (உ) '' முற்றவிம் மூவுலகும் விரிகின்றசுடர்முடிக்கே யொற்றுமைக்கொண்டது' என்றது பின்னுட்டுகிறது '' என்று பிள்ளான். அவனைக்கேட்டறியவேண்டுமாகையாலே பாதகமாயிறே.

---

(க) எ-எ-கo. (உ) எ-எ-கo.

(துயரம்செயித்யாதி) (க) "தாஸோஹம் - தாஸோஹம்" என்கிற வபிமாநமடிக்கழுஞ்சு பெற்றிருக்கும். அங்ஙனன்றிக்கே, "ஸோஹம் - ஸோஹம்" என்று துஃகத்தைப்பண்ணு மபிமாநங்களாய். (மதனித்யாதி) களிப்பும், அதுக்கடியான வுகவையுமாய், (உ) ஸங்காத்ஸஞ்ஜாயதே காமஃ - காமாத்க்ரோதோऽபிஜாயதே - க்ரோதாத்பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதிவிப்ரம: - ஸ்ம்ருதிப்ரம்ஸாத் புத்திநாஸோ புத்திநாஸாத்ப்ரணஸ்யதி" என்கிறபடியே விநாஸபர்யந்தமான காமங்களாய். அங்ஙனன்றே பகவத்காமம். (துலையாய்) ப்ரமாணமாய். நிறுக்குமதாய். (நிலையாய்நடையாய்) ஸ்த்தாவரஜங்கமங்களைச்சொல்லுதல், ஸ்த்திதிகமநங்களைச்சொல்லுதல், இப்படி துஃகங்களைப்பண்ணுவியாநின்றாய். (இவையென்னசுண்டாயங்களே) உனக்கு லீலையாயிராநின்றது, எங்களுக்கு க்லேஸாவஹமாயிராநின்றது. (எ)

---

# எட்டாம்பாட்டு.

என்னசுண்டாயங்களால் நின்றிட்டாய்? என்னையாளும்கண்ணு!*
இன்னதோர்தன்மையையென்று உன்னையாவர்க்கும்தேற்றரியை *
முன்னியமூவுலகுமவையாய் அவற்றைப்படைத்து *
பின்னும்உள்ளாய்! புறத்தாய்! இவையென்ன இயற்கைகளே! (அ)

ப — அநந்தரம், அதிஸயிதஜ்ஞாநர்க்கு மவபோதிக்கைக் கரியையாய்க் கொண்டு ஸகலஜகத்துக்கும் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுகின்றாய், இவையென்ன செய்திகளாயிருக்கிறதென்கிறார்.

(இ-ள்.) என்னசுண்டாயங்களால் - ஸ்வார்த்தமாயுள்ள வென்ன லீலாவ்யாபாரங்களாலே, எங்ஙனே-என்ன ப்ரகாரத்திலே, நின்றிட்டாய் - நின்றாய், என்கண்ணு - எனக்கு பவ்யனான க்ருஷ்ணனே, இன்னதோர் - இன்னபடிப் பட்ட, தன்மையை - ஸ்வபாவத்தையுடையை, என்று - என்று, உன்னை - அபரிச்சிந்ந ஸ்வபாவனானவுன்னை, யாவர்க்கும் - அதிஸயித ஜ்ஞாநராயிருப்பார்க்கும், தேற்ற - நிர்ணயித்துக்காட்ட, அரியை - அரியையாயிருப்பதி; முன்னிய - ப்ரவாஹாநாதியாயிருப்பதாய், மூவுலகும் - க்ருதகாதிபேதத்தையுடைத்தான மூன்றுலோகத்தையும், அவையாய் - ததாத்மகனாய், அவற்றை- அவற்றை, படைத்து - ஸ்ருஷ்டித்து, பின்னும் - அதுக்குமேலே, உள் - அநுப்ரவேஸ நிபந்தநமான அந்தர்வ்யாப்தியையும், புறம் - ஆதாரத்வநிபந்தந

---

(க) ரா-ஸு-சஉ-ங-ச. (உ) கீதை-உ-சுஉ.

மான பஹிர்வ்யாப்தியையும், ஆய் - உடையை யாகாநின்றாய், இவை - இவை, என்ன - என்ன, இயற்கைகள் - ஸ்வாபாவிக வ்ருத்திகளாயிருக்கின்றன. (அ)

ஆறு ;— (என்னசுண்டாயங்கள்) என்னலீலாயுக்தனாய் நிற்கின்றாய் என்னையடிமைகொள்ளுகிற க்ருஷ்ணனே. இன்னதொரு ஸ்வபாவமென்று ஜ்ஞாநாதிகருக்கு மறியவொண்ணாத நீ, பழைய தான மூவுலகுக்குங்கடவையாய் அவற்றை ஸ்ருஷ்டித்து, பின்னையு மந்தர்ப்பஹிஸ்ச வ்யாபித்துநின்றாய், இவையென்னவாஸ்சர்யமென் கிறார். (அ)

ஈடு ; அவ ;— எட்டாம்பாட்டு. ஸகலஜகத்தையும் ஸ்ருஷ்டித்து அந்தர்ப்பஹிஸ்ச வ்யாபித்து இப்படி நிர்வஹித்துவைத்து துர்ஜ்ஞேயனாயிருக்கிறவிதென்ன வாஸ்சர்யமென்கிறார்.

(என்னவித்யாதி) என்னலீலைகளையுடையையாய் நிற்கிறாய் என்னை யடிமைகொள்ளுகிற க்ருஷ்ணனே. (இன்னதோரித்யாதி) இன்னபடிப்பட்ட ஸ்வபாவத்தையுடையையென்று, ஸர்வகாரண பூதனான வுன்னை, எத்தனையேனுமபிமாயித ஜ்ஞாநரானவர்களாலு மறியவொண்ணாதபடி நிற்புதி. (க) "ப்ரஹ்மாதிநவேதக்ஞ்யத்தகஃ - ப்ரஹ்மாபிநவேத்த்யல்பம்ப்ரயத்நதஃ" என்கிறபடியே.

(முன்னியமூவுலகுமவையாய்) ப்ரவாஹரூபத்தாலே பழைய தாய்ப் போருகிற மூவுலகுக்கும் கடவையாய். த்ரிவிதசேதநரென்னுதல், த்ரைலோக்யமென்னுதல். (அவற்றைப்படைத்து) விபூதியானபோது, அவற்றையுண்டாக்கியென்கிறது ; சேதநரானபோது அவர்களுக்கு ஜ்ஞாநவிகாஸத்தை யுண்டாக்கி யென்கிறது. (பின்னுமுள்ளாய்புறத்தாய்) * அந்தர்ப்பஹிஸ்ச வ்யாபித்திருக்கிறவனே. (இவையென்னவியற்கைகளே) உனக்கிவைதான் லீலையாயிராநின்றது, எங்களுக்கிவைதானாஸ்சர்யமாயிராநின்றது. (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

என்ன இயற்கைகளால் எங்ஙனேநின்றிட்டாய்? என்கண்ணா !*
துன்னுகரசரணம்முதலாக எல்லாவுறுப்பும் *
உன்னுசுவையொளி ஊறொலிநாற்றம்முற்றும்நீயே *
உன்னையுணரவுறில் உலப்பில்லை நுணுக்கங்களே. (கூ)

---

(க)

ப.—அநந்தரம், இப்படி யறியவரியையா யிருக்கைக்கடியான வதிஸௌக்ஷ்ம்யத்தாலே அக்கரணங்களோடு விஷயங்களோடுவாசியற வ்யாபரித்துநிற்கிற நிலையென்னுயிருக்கிறதென்கிறார்.

(இ-ள்.) உன்னுடைய வாகாரங்களைக்காட்டி, என்னை - என்னை, ஆளும்- அடிமைகொள்ளுகிற, கண்ணா - க்ருஷ்ணனே, ஒருபடியென்று நிஷ்கர்ஷிக்கவொண்ணாதபடி, என்ன - என்ன, இயற்கைகளால் - ப்ரகாரங்களாலே, நின்றிட்டாய் - நின்றருளினாய்; துன்னு - ஶரீரத்திலே செறியக்கடவதாய், கரசரணமுதலாக - கரசரணாதிகளான கர்மேந்த்ரியங்களும் ஜ்ஞாநேந்த்ரியங்களுமான, எல்லாவுறுப்பும் - எல்லாக்கரணங்களும், உன்னு - மநஸ்ஸோடே ப்ரவணமாயுத்யோகிக்கும்படியான, சுவையொளியூறொலிநாற்றம் - ரஸரூபஸ்பர்ஶஶப்தகந்தங்களாகிற, முற்றும் - ஸகலவிஷயங்களும், நீயே - நீயேயாம்படி, உன்னை - அவற்றுக்கந்தராத்மாவானவுன்னை, உணரவுறில் - நிரூபிக்கநினைக்கில், (க) "அணீயஸாம் அணீயாம்ஸம்" — "அணீயஸாம் - அணீயாம்ஸம்" என்கிறபடியே, நுணுக்கங்கள் - ஸௌக்ஷ்ம்யங்கள், உலப்பு - முடிவு இல்லை- இல்லையாயிருக்கும். (க)

ஆறு;—(என்னவியற்கைகள்) என்ன ஸ்வபாவங்களையுடையனாய் எந்தவாகாரத்திலே நிற்கிறாய் எனக்குபவ்யனான க்ருஷ்ணனே. நெருங்கினகரசரணம் முதலானவெல்லா வுறுப்பும் - அவயவங்களுக்கும், ரஸம், ரூபம், ஸ்பர்ஶம், ஶப்தம், கந்தம், இவையெல்லாவற்றுக்கும் கடவையான வுன்னையநுஸந்திக்கப்புக்கால் உன்னுடைய வைலக்ஷண்யத்துக்கு முடிவில்லை யென்கிறார். (க)

ஈடு ; அவ ;—ஒன்பதாம்பாட்டு. ஜ்ஞாநேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களும் ஶப்தாதி விஷயங்களும் அவனுக்கு விபூதியாயிருக்கிற விருப்பை யநுஸந்திக்கிறார்.

(என்னவியற்கைகளாலெங்ஙனே நின்றிட்டாயென்கண்ணா) என்ன ஸ்வபாவங்களையுடையையாய்க் கொண்டு என்னப்ரகாரத்தாலே நிற்கிறாய் எனக்கு பவ்யனாக்ருஷ்ணனே.

(துன்னித்யாதி)நெருங்கியிருந்துள்ள கரசரணங்கள் தொடக்கமான வெல்லாவவயவங்களும், அநுஸந்திக்கப்படுவதாய்-ஆசைப்படப்படுவதாயிருந்துள்ள ஶப்தாதிகளுக்கும் கடவையாயிருந்தாய்.

(க) மநுஸ்ம்ருதி.

(உன்னையுணரவுறில்) உன்னையறியப்புகில். (உலப்பில்லைநுணுக்கங்களே) உன்வைலக்ஷண்யங்களுக்கு முடிவில்லை. (க) "அணீயாம ஸமணீயஸாம்- அணீயாம் ஸமணீயஸாம்" என்கிறபடியே, அசித் வஸ்துவை ஸூக்ஷ்மரூபதயா எங்கும்புக்கு வ்யாபித்திருக்குமாத்ம வஸ்து, இவ்விரண்டிலும் ஸூக்ஷ்மரூபேண வ்யாபித்திருப்பதி. (உன்னை நிரூபிக்கப்புகில் ஸௌக்ஷ்ம்யங்கள் முடிவில்லையாயிருக்கும். நுணுக்கம் - ஸௌக்ஷ்ம்யம்) (கூ)

---

## பத்தாம்பாட்டு.

இல்லைநுணுக்கங்களே இதனிற்பிறிதென்னும்வண்ணம் *
தொல்லைநன்னூலில்சொன்ன உருவும்அருவும்நீயே *
அல்லித்துழாயலங்கல் அணிமார்பா! என்அச்சுதனே *
வல்லதோர்வண்ணம்சொன்னால் அதுவேஉனக்குஆம்வண்ணமே.

ப.—அநந்தரம், நித்யமான வேதைகவேத்யமாயுள்ள ஸூக்ஷ்ம சிதசித் வஸ்துக்களை ப்ரகாரமாக வுடைய நீ, வாசாமகோசரமஹிமா வென்கிறார்.

(இ-ள்,) இதனில் - இதிற்காட்டில், பிறிது - வேறு, நுணுக்கங்கள் - ஸௌக்ஷ்ம்யம், இல்லை - இல்லை, என்னும்வண்ணம்-என்னும்படி, தொல்லை - அநாதியாய், நல் - அபௌருஷேயத்வாதி குணயோகத்தையுடைத்தான, நூலில் - வேதஶாஸ்த்ரத்திலே, அவ்யக்தாக்ஷராவஸ்தையிலு மதிஸூக்ஷ்மமாக, சொன்ன - தமஶ்ஶப்தத்தாலே சொல்லப்பட்ட, உருவும் - அசித்தும், அருவும் - சித்தும், நீயே- (உ) "ஸதேவ - ஸதேவ" என்கிற மர்யாதையாலே நீயேயானாய், இப்படிசிதசிச்சரீரியானவளவன்றியே, அல்லி - பூந்தாரையுடைத்தான, துழாயலங்கல் - திருத்துழாய்மாலையை, அணி - அலங்காரமாகவுடைய, மார்ப - திருமார்பையுடையனாய், என், அச்சுதனே - அப்ரச்யுதாகாரனான விலக்ஷண விக்ரஹயுக்தனே, இப்படியிருக்கிற வுன்னுடைய ஸர்வப்ரகாரவைபவத்தை, வல்லதோர்வண்ணம் - வல்லப்ரகாரம், சொன்னால்- வேதாதிகள் சொன்னாலும், உனக்கு - உனக்கு, அதுவே - அதுவே, வண்ணம் - ப்ரகாரம், ஆம் - ஆம்படி, ஆஶ்ரிதபவ்யனாயிருப்புதி (கo)

ஆறு ;—(இல்லை) இதிற்காட்டில், பிறிது - வேறு ஸூக்ஷ்மமில்லையென்னும்படி பழையதான வேதாந்தத்திலேசொன்ன வசித்

(க) மஹஸ்ம். (உ) சாந்தோ-கூ-உ.

துக்கும் சித்துக்கும் நிர்வாஹகனானவனே; அல்லியையுடைய திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான வழகியமார்பையுடையையாய் இவ்வழகுக்கொருநாளுமொழிவில்லாதவனே; வேதங்களும்ஸநகாதியோகிகளும்உன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளைப்பேசப்புக்கால் பேசினவம்ஸம் பேசிற்றாயித்தனைபோக்கி, பேசாததுக் கவதியில்லை. அதவா, உனக்கு நல்லாராய் உன்குணங்களிலே யீடுபட்டிருப்பார் உன்னை யேதேனு மொருபடி பேசினால், அதுவே யுனக்காம் ப்ரகாரமென்கிறார். (கo)

ஈடு; அவ;—பத்தாம்பாட்டு. வேதைகஸமதிகம்யனாய் காரணமா யதிஸூக்ஷ்மமா யிருந்துள்ள சேதநாசேதநங்களை விபூதியாகவுடையனா யிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

(இல்லைநுணுக்கமித்யாதி) இதிற்காட்டில் வேறுஸூக்ஷ்மமாயிருப்பதில்லையென்னும்படி. அதாவது-இவற்றுக்கு "தனக்கு" என்னவொருநாமரூபங்களின்றிக்கே, ப்ரஹ்மத்தினுடைய நாமரூபங்களையிட்டு வ்யவஹரிக்கவேண்டும்படி காரணாவஸ்த்தமாயிருக்கிற சேதநாசேதநங்கள் நீயிட்டவழக்கு. (தொல்லைநன்னூலிற்சொன்ன) (க) "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்றதிறே. (பழையதாய் ப்ரமாணஶ்ரேஷ்டமான வேதத்திலேசொல்லுகிறவசேதநத்துக்கும், அதிற்காட்டில் ஸூக்ஷ்மமான சேதநபதார்த்தத்துக்கும்நிர்வாஹகன்நீயே. ஆக ஜகதாகாரனாயிருக்கு மிருப்பைச்சொல்லிற்று.

(அல்லித்துழாயித்யாதி) நித்யவிபூதியுக்தனா யிருக்கும்படியைச்சொல்லுகிறது. அல்லியையுடைத்தான திருத்துழாய்மாலையாலே யலங்க்ருதமான திருமார்வையுடையையாய், அவ்விருப்புக்கொருநாளு மழிவில்லாதபடி பரமபதத்திலே யெழுந்தருளியிருக்கிற விருப்பை யெனக்கு ப்ரகாசிப்பிக்கிறவனே. (வல்லதோரித்யாதி) இதுக்கிரண்டுபடியாக வருளிச்செய்வர். இவன்றனக்குள்ள வளவெல்லாங் கொண்டுபேசினால், உன்பக்கல் சிலசொல்லிற்று மத்தனை போக்கியல்லது, உனக்கோரியத்தை யில்லையிறேயென்னுதல்; அப்போதைக்கு, அதுவே யுனக்காம் வண்ணம்-அதுவன்றென்கிறது.

---

(க) சாந்தோ-௬-௨.

மற்றைப்படிக்கு, உன்பக்கல் ஸ்நேஹிகளாயிருப்பா ரெத்தனையேனு மளவின்றிக்கே யிருந்தார்களாகிலும், அவர்களொன்றைச்சொன்னால், ஸ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரிகள்நடுவே அவர்கள் தங்களுக்குங்கூடப் பேச்சுக்கு நிலமன்றிக்கே யிருக்கிற நம்மை, ஸம்ஸாரத்திலே அதிக்ஷுத்ரனாயிருக்கிற விவனறிந்தானாகச் சொல்லுவதே? என்று சீறுகையன்றிக்கே, இவன் சொன்னதுவே தனக்களவாக நினைத்திருக்கு மென்கிறது. (கo)

---

# பதிற்றாம்பாட்டு.

ஆம்வண்ணம்இன்னதோன்றென்று அறிவதரியஅரியை *
ஆம்வண்ணத்தால் குருகூர்ச்சடகோபன் அறிந்துரைத்த *
ஆம்வண்ணவொண்தமிழ்கள் இவையாயிரத்துள்இப்பத்தும் *
ஆம்வண்ணத்தாலுரைப்பார்அமைந்தார்தமக்கென்றைக்குமே.(கக)

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவர்கள், யாவதாத்மபாவி பகவதநுபவத்துக் கீடாகச் சமைந்தார்களென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) ஆம் - உண்டான, வண்ணம் - ப்ரகாரம், இன்னது - இன்னபடிப்பட்டிருப்பது, ஒன்று - ஒன்று, என்று - என்று, அறிவது - அறிகைக்கு, அரிய - அரியனான, அரியை - ஸர்வேஶ்வரனை, * குருகூர்ச்சடகோபன் - * மயர்வறமதிநலமருளப்பெற்ற]வாழ்வார், ஆம்வண்ணத்தால் - உள்ளபடி, அறிந்து - அறிந்து, உரைத்த - அங்குத்தைக் கநுரூபமாக வருளிச்செய்த, வண்ணம் - சந்தஸ்ஸை, ஆம் - உடைத்தாய், ஒண் - ஸர்வாதிகாரமாகிற நன்மையையுடைத்தான, தமிழ்கள் - தமிழாயுள்ள, இவை - இவை, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இப்பத்தும் - இந்தப்பத்தையும், ஆம்வண்ணத்தால் - தங்கள் ப்ரகாரத்துக்கீடாக, உரைப்பார் - சொல்லவல்லவர்கள், தமக்கு - தங்களுக்கு, என்றைக்கும் - யாவதாத்மபாவியான வநுபவத்துக் கீடாக, அமைந்தார் - சமைந்தார்கள்.

இது - கலிவிருத்தம். (கக)

ஆறு ;—(ஆம்வண்ணம்) ஒருவராலு மொருவகையு மறியவொண்ணாத ஸர்வேஶ்வரனை யுள்ளபடியே யறிந்து அங்குத்தைக்கு ஸத்ருஶமாக வாழ்வாரருளிச்செய்த வாயிரத்திலு மித்திருவாய்மொழியை யதாஶக்தி சொல்லுமவர்களே, என்றைக்கும் க்ருதக்ருத்யரென்கிறார். (கக)

ஈடு; அவ;—பதிற்றாம்பாட்டு. நிகமத்தில் - அங்குத்தைக்குத் தகுதியாக வாழ்வாரருளிச்செய்த வாயிரந்திருவாய்மொழியிலு

மித்திருவாய்மொழியை யதாமக்திசொல்லவல்லார் என்றைக்கும் க்ருதக்ருத்யரென்கிறார்.

(ஆம்வண்ணமித்யாதி) இன்னபடிப் பட்டிருப்பதொரு ஸ்வபாவத்தையுடையவனென்றுகொண்டு ஒருவராலுமறிய வரியனாயிருக்கிற ஸர்வேஸ்வரனைக் கவிபாடிற்று. (க) "யதோவாசோ நிவர்த்தந்தே-யதோவாசோநிவர்த்தந்தே" என்று வேதங்களும் மீண்டவனையாயிற்றுப் பேசிற்று. (ஆம்வண்ணமித்யாதி) அவனுக்குத் தகுதியாம்படி யாழ்வாரருளிச்செய்த; "அறிவதரியவரியை" என்றதில் ஆம்வண்ணத்தா லுரைக்கையாவதென், வ்யாஹதமன்றோவென்னில் (அறிந்துரைத்த) அவன் * மயர்வறமதிநலமருளவாயிற்று இவர்பேசிற்று. ஸ்வயத்நத்தாலே யறியப்பார்க்கிலிறே அரிதென்றது; அவன்கொடுத்த வறிவுகொண்டறிவார்க்குக் குறையில்லையிறே.

(உ) "நெறிவாசல்தானேயாய் நின்றானையைந்து, பொறிவாசல் போர்க்கதவஞ்சாத்தி-யறிவானும்" என்று ஆக்ஷேபிப்பது ஸ்வயத்நத்தாலே யறியப்பார்ப்பாரையிறே. (ஆம்வண்ணவொண்டமிழ்களித்யாதி) அவனுக்குத் தகுதியாம்படியிருக்கிற வழகிய தமிழென்னுதல்; தகுதியாயிருந்துள்ள சந்தஸ்ஸுக்களை யுடைத்தாய், ஸர்வாதிகாரமாகிற நன்மையையுடைத்தான தமிழென்னுதல்; வண்ணம்-சந்தஸ்ஸு; அன்றிக்கே, வண்ணமென்று-ஓசையாய், நல்ல த்வநியை யுடைத்தான செந்தமிழென்னுதல். (தமிழ்களிவையாயிரத்துளிப்பத்தும்) தமிழாயிருந்துள்ள விவையாயிரத்துளிப்பத்தையும்.

(ஆம்வண்ணத்தாலுரைப்பார்) பின்னை, இத்தைச் சொல்லுமவர்களுக்கும் *மயர்வறமதிநலமருளப்பெற்று அவனுக்குத் தகுதியான சொல்லாலே சொல்லவேணுமோவென்னில்; அத்தேவையெல்லா மாழ்வார்தம்மோடே; இவர்களுக்குத் தாங்கள் வல்லவளவும் சொல்லவமையும். (அமைந்தார்தமக்கேன்றைக்குமே) அவர்களுக்கு இவ்வாத்மா வுள்ள தன்னையும், ஈஸ்வரன் முழங்கைத்தண்ணீர் வேண்டா, ஆழ்வார் பரிக்ரஹமானதுவேபோரும். என்றைக்கும் தந்தாமுக்குத்தாமே யமைந்தார்களா யிருப்பர்கள். (கக)

---

(க) தை-ஆந ௬.    (உ) க-திருவ-ச.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# ஏழாம்பத்து
# ஒன்பதாந்திருவாய்மொழி

## என்றைக்கும் - ப்ரவேஶங்கள்.

ஆறு;—இப்படி மஹாஶ்சர்யமான ஜகத்ரூபத்தையும், அப்ராக்ருதஸ்வாஸாதாரண திவ்யரூபத்தையும், இவையவன் பக்கலிலே ஸங்கதமாயிருக்கிறபடியையு மநுஸந்தித்து அத்யந்த விஸ்மிதராய், நிரதிஶயப்ரீதியுக்தராய், நிரஸ்தஸமஸ்தப்ரஸ்துத வ்யஸநராயிருந்து நிரவதிகாஶ்சர்யோபயவிதாகாரத்தை யுள்ளபடியே சொன்னார்; இது தானும் நிரூபித்தவாறே அவன் செயலாயிருந்தது, இத்தை யநுஸந்தித்து, "அத்யந்தநிஹீநனாயிருந்த வென்னைக்கொண்டு திருவாய்மொழி சொல்லுவித்தருளுவதே" என்று, தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்தருளினவனுடைய ஸர்வஶக்தித்வ ஸௌஶீல்ய வாத்ஸல்யாதி கல்யாணகுணாநுபவ ஜநிதநிரவதிக ப்ரீதியாலே சொல்லுகிறார். *

ப.—ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழ் - தம்முடையவிரோதி நிவ்ருத்திக்கநுரூபமான, ஈஶ்வரனுடைய வாஶ்சர்யஶக்தியோகத்துக்கு ப்ரகாஶகமாயுள்ள விசித்ரவிபூதிமத்தையை யநுபவித்து ஸந்துஷ்டரானவிவர், இவன் விரோதி நிவர்த்தநத்தில் விளம்பிக்கைக்கடியென்னென்று நிரூபித்து, அவன் தம்மை வாசிககைங்கர்யங்கொள்ளுகைக்காக வைத்த ப்ரகாரத்தைக் காட்டக்கண்டு ப்ரீதராய், தம்விரோதி கிடக்கச்செய்தே அத்தை மதியாமல் அஸத்கல்பமாக்கி யடிமைகொள்ளுகைக்கடியான நிருபாதிக ஸம்பந்தத்தையும், ப்ரதம ப்ரவர்த்தநத்தையும், பக்தார்த்தப்ரவ்ருத்தியையும், விரோதியை மதியாமல் விரும்பினபடியையும், விருப்பத்தால்வந்த மேன்மையையும், மேன்மைக்கெல்லைநிலத்தையும், அப்பாத்வாநுபவத்துக்கு விலக்கான பாபத்தினுடைய நிவர்த்தநத்தையும், அதிஶயிதாநுப்ராவ்ய குணயோகத்தையும், அதினுடைய நித்யாநுபாவ்யதையையும், நிஷ்ப்ரத்யுபகாரமான நிரவதிகோபகாரகத்வத்தையுமநுபவித்து ஏவம்வித ஸ்வபாவனானவன் என்விரோதியைக்கழித்து என்னை வாசிக கைங்கர்யங்கொண்டபடிக்கு எத்தைச்செய்வேனென்று உபகாரஸ்ம்ருதியாலே அத்யந்தம் ஹ்ருஷ்டராகிறார். *

ஈடு;—கீழேபலகாலும்,"ஸர்வேஶ்வரன்றன்னைப்பெறுவார்க்கு ப்ரதிபந்தகங்களுண்டாயிருந்தாலும் தானே தன்னைத் தரப்பார்க்கு மன்று தகையவல்லதொரு ப்ரதிபந்தகமின்றிக்கே யிருக்க, 'தன்னாலேபேறு' என்றிருக்கிறவென்னை யிங்கேவைத்ததென்" என்று கேட்டுப்போருவாரொருவர்; அவனும், இதுக்குநேரான பரிஹாரத்தைப்பண்ணாதே யேதேனுமொரு குணாவிஷ்காரத்தைப்பண்ணி அந்யபரதையைப் பிறப்பிக்குமாயிற்று இவர்க்கிதிலே நெஞ்சுசெல்லாதபடி.

இனி, கீழிற்றிருவாய்மொழியிலேயும் - "ஸம்ஸாரத்தில் பொருந்தாமையுண்டாய் உன்னையொழியச் செல்லாமையுண்டாய் நீயேயுபாயமாயிருக்க, பின்னையுமென்னை யிங்கேவைத்து ஜீவிப்பித்துக் கொடுபோகிற வாத்ஸல்யமிருந்தபடியென், இத்தை யெனக்கருளிச்செய்யவேணும்" என்ன, 'கண்டீரே தானிதோராஶ்சர்யமிருந்தபடி" என்று அவ்வழியாலே தன்னுடைய வாஶ்சர்ய ஜகதாகாரதையைக் காட்டிக்கொடுத்து,அத்தோடே பணிபோரும்படி பண்ணினான். இவரும், அப்போது அத்தனையுமத்தை யநுஸந்தித்து, அது தலைக்கட்டினவாறே அநந்தரம் பழையபடியே கேட்கத்தொடங்குமவரிறே.

"இஸ்ஸம்ஸாரத்திலே பொருந்தாதிருக்கிறவென்னை யிங்கு வைத்ததுக்கு ஹேதுவென்" என்ன, "நம்மை யிதுக்கொருஹேது நிர்ப்பந்தித்துக் கேட்கவேணுமோ; கண்டதெல்லாவற்றிலும் நாக்கு நீட்டி அவற்றிலே ருசிபண்ணிப் போந்தீராகில், அதுக்கடியான கர்மங்கிடந்ததாகில், வாஸநாருசி கிடந்ததாகில், அவற்றாலே யிருந்தாலாகாதோ" என்ன, 'அவையுங்கிடக்கச்செய்தே, அவற்றையும்பாராதே யெனக்கு * மயர்வற மதிநலமருளி * பாசங்கள் நீக்கியென்னை யுனக்கேயறக்கொண்ட பின்பு என்னை யிங்குவைக்கிறதென்" என்று வடிம்பிட்டுக்கேட்க, "நீர் நாம் உம்மைநமக்காக வோக்கிவைத்தீராகச்சொன்னீரே - (க) 'தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே' என்று; ஆனபின்பு நமக்கதிஶயத்தைப் பிறப்பிக்கை உமக்கு ஸ்வரூபமாயிருக்குமிறே; ஆனபின்பு, உம்மைக்கொண்டு, ஸ்ரீபீஷ்மரை ஶரதல்பத்திலேயிட்டுவைத்து நாட்டுக்கு வெளிச்சிறப்பைப்பண்ணிக்கொடுத்தாப்போலே, நமக்கும் நம்முடையார்க்கும் போதுபோக்கா

(க) உ-கூ-ச.

கச் சிலப்ரபந்தங்களைப் பண்ணுவிக்கப்பார்த்தோம், அது தலைக்கட்டுந்தனையுங்காணும் உம்மைவைப்பது" என்று நேரானபரிஹாரந்தன்னை யருளிச்செய்ய, இவருமத்தையநுஸந்தித்து, ஸர்வேஶ்வரனாய் அவாப்த ஸமஸ்தகாமனாய் ஸர்வ ப்ரகார பரிபூர்ணனாயிருக்கிறவன்றனக்கு ஒரு குறையுண்டாய் அக்குறை பின்னைத் தம்மைக் கொண்டு தீர்ப்பதாகச் சொன்னவார்த்தையைப் பொறுக்கமாட்டிற்றிலர்.

"தனக்குச்சில ப்ரபந்தங்கள் வேண்டிலுல், அதுக்கிடான ஜ்ஞாநஶக்த்யாதிகளால் குறைவற்ற ஸ்ரீவேதவ்யாஸபகவான், ஸ்ரீவால்மீகிபகவான், ஸ்ரீபராஶரபகவான் தொடக்கமானார், (க)"செந்தமிழ்பாடுவார்' என்று சொல்லப்படுகிற முதலாழ்வார்கள், இவர்களெல்லாருமுண்டாயிருக்க, அநாதிகாலம் ஸம்ஸாரத்திலே பழகி ஶப்தாதிவிஷயங்களிலே அந்யபரனாய் (உ) "அஸந்நேவ ஸ பவதி" என்கிறபடியே அஸத்கல்பனாய் உருமாய்ந்துபோன வென்னைக் கொண்டு தனக்கீடாகக் கவிபாடுவித்துக்கொள்ளுவதாகச் சொன்ன வார்த்தை யென்னவார்த்தை, இதொரு சீர்மையிருக்கும்படியே, இதென்னசீர்மை" என்று, ஸர்வேஶ்வரன் தன்திறத்தில் பண்ணின வுபகாரத்தை யநுஸந்தித்து, அதுக்கொரு ப்ரத்யுபகாரம் காணாமையாலே தடுமாறிச்செல்லுகிறது.

---

## முதற்பாட்டு.

என்றைக்குமென்னை உய்யக்கொண்டுபோகிய *
அன்றைக்கன்றென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை *
இன்தமிழ்பாடிய ஈசனை ஆதியாய்
நின்றஎன்சோதியை * என்சொல்லிநிற்பனோ? (க)

ப.—முதற்பாட்டில், நிருபாதிகஶேஷியானவன் என்னைக்கொண்டு தான் தன்னைக்கவிபாடிக்கொண்ட வௌஜ்ஜ்வல்யத்துக்குக்கு என்சொல்லித்ரிப்பேனென்கிறார்.

(இ-ள்.) என்றைக்கும் - ப்ரதமாங்கீகாரம் யாவதாத்மபாவியாம்படி யங்கீகரித்து, போகிய - போகிற, அன்றைக்கன்று - காலந்தோறும், என்னை,

(க) தி-மொ-உ-அ-உ. (உ) தை-ஆ-சு.

உய்பக்கொண்டு - விசேஷகடாக்ஷம்பண்ணி, என்னை - என்னை, தன்னாக்கி - தனக்கேயாம்படி செல்லாமையைப் பிறப்பித்து, என்றால் - கவிபாடுகைக்கீடான ஜ்ஞாநாதிகளில்லாதவென்னைக் காரணமாகக்கொண்டு, தன்னை-வேதங்களும் பிறகாலிக்கும்படியானபெருமையையுடைய தன்னை, இன் - ஶப்தந்தானே நிரதிஶயஸரஸமாய், தமிழ் - ஸர்வாதிகாரமான தமிழை, பாடிய-பாடின, ஈசனை - நிருபாதிகஶேஷியாய், ஆதியாய் - எனக்குள்ளீடாக நின்று பாடுகையாலே யிதுக்கு மூலபூதனாய், நின்ற-அத்தாலே நிலைபெற்று, என்சோதியை - உஜ்ஜ்வலவிக்ரஹனாயிருக்கிறபடியை யெனக்கு ப்ரகாஶிப்பித்தவனை, என் - எத்தை, சொல்லி - சொல்லி, நிற்பன் - தரிப்பேன்.

ப்ரதமமாபிமுக்யம்பண்ணும்படி யங்கீகரித்திலனென்னவோ, அத்தை முழுக்க நடத்திற்றிலனென்னவோ, என்னைத் தனக்கே யாக்கிற்றிலனென்னவோ, நான் பாடினேனாம்படி தான் பாடிற்றிலனென்னவோ, அத்தாலுஜ்ஜ்வலனாயிற்றிலனென்னவோ, எத்தைச்சொல்லி தரிக்கலாவதென்று கருத்து.(க)

ஆறு ;—(என்றைக்குமென்னை) ஆத்மாந்தகிங்கரத்வேந ஸ்வீகரித்து, ப்ரதிதிநமும் என்னைத் தன்னைப்போலே பரிஶுத்தனாக்கி, என்னை யுபகரணமாகக்கொண்டு திருவாய்மொழிபாடுந் தன்னுடைய ஸர்வஶக்தித்வத்தையும், ஏதத்ப்ரபந்த நிர்மாண ஹேதுத்வக்ருத நிரவதிகதேஜஸ்ஸையும் எத்தைச்சொல்லி பர்யவஸிப்பன். காலதத்த்வமுள்ளதெல்லாம் சொன்னாற்றான் ஆர்வனோவென்கிறார். (க)

ஈடு; அவ;— முதற்பாட்டு; அதிக்ஷுத்ரனாயிருக்கிற வென்னை ஜ்ஞாநஶக்த்யாதிகளையுடையே னாம்படிபண்ணி, என்னையிட்டுத் திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட வுபகாரத்தை யனுஸந்தித்துத் தரிக்கமாட்டுகிறிலேனென்கிறார்.

இப்படி நீர்படுகைக்கு அவன்செய்தநன்மைதானேதென்ன, இதுவென்கிறார் (என்றைக்குமென்னையுய்யக்கொண்டு) ஸர்வேஶ்வரனொருவனை யொருநாள் விஷயீகரித்தால், பின்னை அவ்விஷயீகாரந் தன்னையே காலதத்த்வமுள்ளதனையுமநுஸந்தித்து உஜ்ஜீவிக்கலாயாயிற்றிருப்பது. (க) "தத்ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய-தச்சஸம்ஸ்ம்ருத்யஸம்ஸ்ம்ருத்ய" என்கிறபடியே-பின்னை யென்றுமொக்க வத்தை ஸ்மரித்து தரிக்கலாம்படியாயிற்றிருப்பது. (உ) "ஸ்ரநுராவவவா

(க) கீதை-கஅ-எஎ. (உ) ரா-யு சுo-ரு.

ணா நாஷ-ஸ்மராநராகவபாணுநாம்'' என்று அம்புக்கிலக்கானார் அலற்றுமாபோலே யாயிற்று, குணத்துக்கிலக்கானுருமலற்றும்படி; அம்பு பட்டபுண் மருந்திட்டாற்றலாம், குணத்தால்வந்த புண்ணுக்குப் பரிஹாரமில்லையிறே. ஆக, ஸர்வேஸ்வர ஞெருநாளொருவனை விஷயீகரித்தால் அது தன்னையே யென்றுமொக்க ஸ்மரிக்கலாம்படியிருக்குமாயிற்று.

இப்படிப்பட்ட விஷயீகாரந்தன்னை யொருகால் பண்ணிவிட்டவித்தனையோவென்னில் (போகியவன்றைக்கன்று) கழிகிற நாள்தோறும் நாள்தோறு மிப்படியேயாயிற்று விஷயீகரித்தது; இது தானிருவர்படியாலு மாற்றப்போகாது. அவனுடைய விஷயீகாரத்துக் கிலக்கான விவர்படியைப்பார்த்தால், அத்தை யிவர் தாம்பொறுக்க வல்லவரல்லர்; அவனைப்பார்த்தால், தன்னை விஸ்வஸித்து உடனே கிடந்தவனை மடிதடவினவன் ''என்செய்தோமானேும்'' என்றநுதபிக்குமாபோலே, எல்லாம்செய்து மொன்றும் செய்யாதானுய் '' இவனுக்கென்செய்வோம் '' என்றிருக்குமவன். (என்னைத்தன்ஞக்கி) (க) ''அறிவிலேன்'' என்கிறபடியே அஜ்ஞாநாஸக்திகளுக்கிலக்காயிருக்கிற வென்னை, தன்னோடொக்க ஜ்ஞாநஸக்த்யாதிகளையுடையேனும்படி பண்ணி யென்னுதல்; (என்னைத்தன்ஞக்கி) தன்னுடையேனும்படிபண்ணி யென்னுதல்.

(என்ஞல்தன்னை) தன்ஞலே தத்தஸக்திகனைவென்ஞலே, ஸ்ருதிஸ்ம்ருதிஇதிஹாஸாதிகளுக்கு அவிஷயமாம்படியிருக்கிறதன்னை (உ) ''யதோ வாசோ நிவர்த்தந்தே - அப்ராப்ய மநஸா ஸஹ;'' (ங)''யஸ்யாமதம் தஸ்யமதம் மதம் யஸ்ய ந வேத ஸ:-அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம்'' என்கிறபடியே ப்ரமாணங்களுக் கவிஷயமாம்படியிருக்கிற தன்னை. (இன்தமிழ்பாடிய) இது தன்னிலோடுகிற வர்த்தமும் பரிமாற்றமும் கிடக்கச்செய்தே, சொல்லினிமைதானே ஆகர்ஷகமாயிருக்கும்படி. (பாடிய) என்னைக்கொண்டு பாடுவித்தா னென்னுதல்; பாடினுனென்னுதல். (ச)''ஏதத்ஸாம காயந்நாஸ்தே'' என்று முக்தன் ஸாமகாநம்பண்ணுமாபோலே, அவனும் இவரோட்டை யநுபவத்

(க) ஙி-எ-க.
(உ) தை-ஆந-க.
(ங) கேநோப-உ.
(ச) தை ப்ருகு-கo.

தால் வந்த ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு "தென்னு" என்று பாடு மாயிற்று. இப்படியினிபவிது உண்டானபடி யெங்ஙனே யென்னில் (ஈசனே) சொல்லவேணுமோ? ஸர்வேஶ்வரன் செய்யமாட்டாத துண்டோ; அரிதோ அவனுக்கு;

கவிபாடினீர் நீராயிராநின்றீர், அவனைப் பாடினுகச் சொல் லாநின்றீர், இது தான்செய்தபடி யென்னென்ன (ஆதியாய்நின்ற) நான் கவிபாடுகைக்கு ஹேதுவாய் நின்றான்-அவனடியாக நான் கவி பாடிற்று. ஹேதுவானபடி தானென்னென்னில் (என்சோதியை) பிடாத்தை விழவிட்டுத் தன் வடிவழகைக்காட்டினுன். திருத்திரையெடுத்தால் கூப்பிடுமாபோலே கூப்பிட்டேன், அது கவியாய்த்தலைக்கட்டிற்று. வடிவழகைக்காட்டியாயிற்றுக் கவிக்குள்ளுறைகொடுத்தது. நீரும் கவிபாடினீராகில் பின்னை யிப்படி கிடந்து படுகிறதென்னென்ன (என்சொல்லிநிற்பனோ) நானும்பாதிவழிவந்து அவனாலே விஷயீக்ருதனுயிருக்கிறேனோ; அன்றிக்கே, பெற்றபேறுதானளவுபட்டு ஆறியிருக்கிறேனோ, ஸாதநாநுஷ்டாநம்பண்ணினுர்க்குப் பலம் தப்பாமையாலே நானுமிப்பேற்றுக்குச் சிலசெய்தேனுய், இது ப்ராப்தமென்றிருக்கிறேனோ, பெற்றபேறுதான் ஸாத்மிக்குமதாயாறியிருக்கிறேனோ, எத்தைச் சொல்லித் தரிப்பது.

(க) "க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாஸம்வித்தி நாராயணம்ப்ரபும் । கோஹ்யந்ய: புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத்பவேத் - க்ருஷ்ணத்வைபாயநம்வ்யாஸம் வித்திநாராயணம்ப்ரபும் । கோஹ்யந்ய:புண்டரீகாக்ஷாந் மஹாபாரதக்ருத்பவேத்" என்றாப்போலே யிருக்கிறதாயிற்று. இதுக்காளவந்தாரருளிச்செய்யும்படி - "ஸர்வேஶ்வரன் செய்யப்புக்கால் அரியதுமொன்றுண்டோ" என்றும். அங்ஙனன்றிக்கே, எம்பெருமானுர், "இவர்தாம் சொன்னுராகிலு மொருபடிபோகச்சொல்லித் தலைக்கட்டுவர், அவனும் தானே சொன்னுகில் நிரவத்யமாகத் தலைக்கட்டும்; சிறு ப்ரஜையெழுத்திடப்புக்கால் தானே யேதேனு மொருபடியிட்டுத் தலைக்கட்டும், பிதாவாதல் உபாத்யாயனுத லிடப்புக்கால் தானே யெழுத்தாயிருக்கும்; அங்ஙனன்றிக்கே, இவன்கையைப் பிடித் திடுவிக்கப்புக்கவாறே, இவனே

(க) வி-பு-ரு-ச-ச.

ரிடத்தே யிழுக்க அவனோரிடத்தேயிழுக்கக் குதறிக்கொட்டியாய் ரூபமழிந்து சிதறிப்போய்; அப்படியே என்னை யுபகரணமாகக்கொண்டு கவிபாடா நிற்கச்செய்தேயும், என்னால் வரும்தோஷம் தன்பக்கல் ஸ்பர்ஶியாதபடி பாடுவித்தானென்கிறார்'' என்று. (க)

---

## இரண்டாம்பாட்டு.

என்சொல்லிநிற்பன் ? என்னின்னுயிரின்றொன்றாய் *
என்சொல்லால்யான்சொன்ன இன்கவியென்பித்து *
தன்சொல்லால்தான்தன்னைக் கீர்த்தித்தமாயன் * என்
முன்சொல்லும் மூவுருவாம்முதல்வனே. (உ)

ப.—அநந்தரம், நான் தன்னைக்கவிபாடுகைக்கு, ப்ரதம ப்ரவர்த்தகனை தான் நான்பாடினேனென்று லோகத்தில் ப்ரஸித்தமாக்கித் தான் தன்னைப் பாடிக்கொண்ட வாஶ்சர்யபூதனை யெதுசொல்லி தரிப்பேனென்கிறார்.

(இ-ள்.) என் - என்னுடைய, இன் - விஷயாந்தரஸக்தமான, உயிர்-ஆத்மாவானது, இன்று - இன்று, ஒன்றாய் - தனக்கொருவஸ்துவாய், என் - என்னுடைய, சொல்லால் - வசநவ்யக்தியாலே, யான்-நான்கர்த்தாவாக, சொன்ன-சொன்ன, இன் - இனிய, கவி - கவி, என்பித்து - என்றுநாட்டிலேப்ரஸித்தமாக்கி, தன் - தன்னுடைய, சொல்லால் - வாக்காலே, தான் - தான்கர்த்தாவாய்க்கொண்டு, தன்னை - தன்னைவிஷயமாக்கி, கீர்த்தித்த- ஸ்துதித்தவனாய்-நான்சொன்னேனென்கைக்கு, என் - எனக்குள்ளேயிருந்து, முன்சொல்லும் - முன்னுருச்சொல்லக்கடவ, மாயன் - ஆஶ்சர்யபூதனாய், இதுக்கு உதாஹரணமென்னலாம்படி, மூவுருவாம் - மூர்த்தித்ரயத்தையுடையனாய், முதல்வன் - ஏகீபவித்திருக்கிற காரணபூதனை, என் - எத்தை, சொல்லி - சொல்லி, நிற்பன் - தரிப்பேன்.

அவ்வுபகாரம் பாசுரத்துக்கு நிலமல்லவென்று கருத்து. (உ)

ஆறு;—(என்சொல்லி) என்னையுமொருவஸ்துவாகக்கொண்டு, என்சொல்லால் யான்சொன்ன வின்கவியென்பித்து-ப்ரஹ்மருத்ராதிகளுக் காத்மாவாய் நின்று ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண்ணினாப்போலே, என்னை யுபகரணமாகக்கொண்டு திருவாய்மொழி பாடியருளின தன்னுடைய விந்தகுணத்தை யெத்தைச்சொல்லி பர்யவஸிப்பதென்கிறார். (உ)

ஈடு; அவ;—இரண்டாம்பாட்டு. தான் தன்னைக்கவிப்பாடி, நான்பாடினேனென்று லோகத்தில் ப்ரஸித்தமாக்குவதே! "ஒருவனுடையபடி யிருந்தபடியென்" என்று அவனுடைய வாஸ்ஸல்யத்தைக் கண்டு விஸ்மிதராகிறார். அநாதிகாலம் அஹங்காரமமகாரங்களாலே நஷ்டப்ராயமாய்த் தன்பக்கல் வைமுக்யத்தைப் பண்ணிப்போந்த வென்னை, நிர்ஹேதுகமாக நானும் முக்யம்பண்ணும்படி அவன் விஷயீகரித்தபடியை யநுஸந்தித்தால் எத்தைச்சொல்லி நான்தறையில் கால்பாவுவதென்கிறார்.

(என்சொல்லிநிற்பன்) அவனென்னை விஷயீகரித்த விஷயீகாரம் நிர்ஹேதுகமென்னவோ, ஸஹேதுகமென்னவோ. இத்தலையையாராய்ந்துபார்த்தவிடத்து ஒருஹேதுகாண்கிறிலர்; அத்தலையையநுஸந்தித்துப் பார்த்தவிடத்து ஒரு ஹேதுகாண்கிறிலர். அநாதிகாலம் கைவிட்டதுக்கு மொருஹேதுகாண்கிறிலர், இன்று கைக்கொண்டதுக்கு மொருஹேதுகாண்கிறிலர். என்றிய, அதுவென், உடையவனுகையாலே தன்னுடைமையை வேண்டினபோது விஷயீகரித்தானுலோவென்னில்; அங்ஙனே செய்யப்போகிறதில்லை; தன்னுடைமையைத் தான் விஷயீகரித்தானுயிருக்கையன்றிக்கே, இவர்வாக்காலே தன்னைக்கவிபாட, தானுமுளனுய்த் தன் விபூதியுமுண்டாயிற்றுக நினைத்திராநின்றுன் அவன்; ஆகையாலே தான் தரிக்கைக்கு ஒருற்றங்கோல்காண்கிறிலர்.

(என்னின்னுயிரின்றேன்றுய்) (இன்னுயிர்) பகவதபிப்ராயத்தாலே, அவனுடைய வங்கீகாரத்துக்கிலக்கானபடியாலே சொல்லுகிறுராதல்; அன்றிக்கே, விபரீதலக்ஷணையாலே பொல்லாதென்கிறுராதல். (இன்றேன்றுய்) இன்றைக்கு முன்பு இதுதன்னை யொன்றுக நினைத்திராராயிற்று, இன்றுயிற்றொருவஸ்துவாயிற்றது. இப்படி யும்மை விஷயீகரித்து அவன்றுன்கொண்ட காரியந்தானேதென்ன (என்சொல்லாலித்யாதி) சொல்லுமென்னதாய், சொன்னேனும்நாளுய், அதுதான் இனியகவியாம்படி நாட்டிலே ப்ரஸித்தமாக்கினன்; ஸப்தமாகில் ஸர்வஸ்வாமியான ஸர்வேஸ்வரனதாயிருக்குமத்தனைபோக்கி, க்ஷுத்ரனை ஸம்ஸாரிக்கில்லையிறே. இனி சேதநனுக்குத் தனித்து ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளுக்கு யோக்யதையில்லையிறே; ஸ்வரூபஸ்த்தித்யாதிகள் தததீநமா யிருக்கையாலே. இது

தன்னை யினியகவியென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினன், (க) "பாலேய்தமிழரிசைகாரர்பத்தர்பரவுமாயிரம்" என்கிறபடியே; தான் வென்று அல்லாதாரோடொக்க நின்று அர்ஜுநனைப்புகழுமாபோலே. (உ) "மலைபுரைதோள்" இத்யாதி. [செங்கணலைவலை] (ங) "அவாக்ய நாதர:- அவாக்யநாதர:" என்றிருக்கக்கடவவன், அதடையவழிந்தேத்தத் தொடங்கினனுயிற்று.

" இன்கவியென்பித்து " என்னுநின்றீர், இங்ஙனன்றோவென்னில்; அன்று; பின்னைச்செய்தபடி யென்னென்னில் (தன்சொல்லாலித்யாதி) சொல்லும் தன்னது, சொன்னனும் தான், சொல்லிற்றும் தன்னை. கவிபாட்டுண்டேன் நானுகில் கிடீர்? கவிபாடினேன் நானுவது. தான் தன்னைக் கவிபாடினனுகில், நீர் கவிபாடினீரென்று நாட்டிலே ப்ரஸித்தமாக்கினபடி யெங்ஙனேயென்னில் (மாயன்) சொல்லவேணுமோ, ஆஶ்சர்யஶக்தியுக்தனன்றோ. என்னை யுபகரணமாகக்கொண்டு தானே கவிபாடினன். உம்மை யுபகரணமாகக்கொண்டு கவிபாடினபடி யெங்ஙனேயென்ன (என்முன்சொல்லும்) அவன் முற்சந்தையிடப் பின்னே நான்சொன்னேன்.

தான் சொன்னனுகில் ஸ்ரீகீதையோபாதி அறமுறுகலாய்ப்போமிறே. நம்பிதிருவழுதிநாடுதாஸர், " ஸ்ரீகீதைபோவாரொருவன் ஸந்த்யாஸதஸ்ஸிலேவந்துகண்டால், பின்னையிவனுக்கு உழக்கரிசியைக்கொடுபித்துவிடுமித்தனைபோக்கி அங்கவர்கள் உள்ளிடங்கொடார்கள் ; திருவாய்மொழி யப்யஸித்தா னொருவிண்ணப்பஞ்செய்வான் சென்றல், ஸர்வேஶ்வரனும் க்ராமத்திலுள்ளாரும் புறப்பட்டெதிர்கொண்டு தங்களிருப்பிடத்தையொழித்து அவனுக்குக்கொடுத்து ஆதரியாநிற்பர்கள்" என்று ப்ரஸாதிப்பர்.

அதுதானென்போலவென்றல் (மூவுருவாம்முதல்வனே) ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவனை அத்யயநம்பண்ணுவித்து தேவர்களுக்கு வெளிச்சிறப்பைப்பண்ணுவித்து " அதுதன்னை ப்ரஹ்மா செய்தான் " என்று அவன்றலையிலே யேறிட்டும், ருத்ரனுக் கந்தராத்மாவாய்ப்புக்கு நின்று த்ரிபுரதஹநத்தைப் பண்ணுவித்து "ருத்ரன்செய்தான்" என்று அவன்றலையிலே யேறிட்டு விருதுபிடிக்கப்

---

(க) க-ஙு-கக. (உ) பெரியாழ்வார்தி-உ-க-உ.

(ங) சாந்தோ-ங-கசு.

பண்ணினுப்போலேயும், தானே ப்ரபந்தத்தைப்பண்ணி, நான் பண்ணினேனென்று என்றலையிலே யேறிட்டு எனக்கொரு ப்ரஸித்தியைத்தந்தான்.

தானே கார்யஞ்செய்து பிறர்தலையிலே யேறிடுகை அவனுக்குப் பண்டே ஸ்வபாவங்கிடீர்! (க) "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி - யோப்ரஹ்மாணம்விததாதி பூர்வம்யோவைவேதாம்ஶ்சப்ரஹிணோதி" என்று ப்ரஹ்மாவை போதிவித்ததும், (உ) "விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்யாமித தேஜஸ: । தஸ்மாத் தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம் ஸ விஷேஹே மஹேஶ்வர: - விஷ்ணுராத்மாபகவதோபவஸ்யாமிததேஜஸ: । தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஶம்ஸவிஷேஹேமஹேஶ்வர:". இப்போது தானே நடத்திக்கொண்டதென்னென்றால்; ஸ்வேநரூபேண நின்று கார்யஞ்செய்யுமாபோலே ப்ரஹ்மருத்ராதிகளைத் தனக்கு ஶரீரமாகக்கொண்டு நின்று ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களைப்பண்ணி, அவர்கள்மேலே யேறிட்டாப்போலே கிடீர்! என்மேலே யேறிட்டு, கவிபாடினேன் நானாகச்சொல்வித் தலைக்கட்டினபடியு மென்கைக்காகச்சொல்லிற்று. (உ)

---

## மூன்றாம்பாட்டு

ஆமுதல்வன் இவனென்று தன்தேற்றி * என்
நாமுதல்வந்துபுகுந்து நல்லின்கவி *
தூமுதல்பத்தர்க்குத் தான்தன்னைச்சொன்ன * என்
வாய்முதலப்பனை என்றுமறப்பனோ ? (ங)

ப—அநந்தரம், பக்தர்களுக்காக வென்னைக்கொண்டு தான் தன்னைக் கவிபாடின வுபகாரகனை யொருகால் மறக்கவிரகுண்டோ வென்கிறார்.

(இ-ள்.) முதல்வன் - காரணபூதனான தான், "இவன்-இவன், ஆம்-கவி பாடுகைக்காம்," என்று- என்று, தன்-தன்னை, தேற்றி-என்பக்கலிலே தேறும் படிபண்ணி, அதுக்கீடாக, முதல் - முந்துற, என் - என், நா-நாவிலே, வந்து-வந்து, புகுந்து - புகுந்து, நல் - அர்த்தஶப்தலக்ஷணங்களில் குறைவற்றிருப்பதாய், இன் - ஸந்தர்ப்பஸாரஸ்யத்தையுடைய, கவி-கவியை, தூ-ஸத்வஶுத்தி,

(க) ஶ்வேதா-சு. (உ) பார-கர்ண.

முதல்-முதலான, பத்தர்க்கு-பக்திகுணயோகத்தையுடையவர்க் கநுபாவ்யமாம் படி, தான் - தானே, தன்னை - தன்னை, சொன்ன - சொல்லாநின்றுகொண்டு, என்-என், வாய் - வாக்வ்ருத்திக்கு, முதல் - முதலான, அப்பனை-உபகாரகனை, என்று-என்று, மறப்பன்-மறப்பன்.

அவ்வுபகாரகத்வம் ப்ரகாசியாத தொருகாலமுண்டாகிலிறே மறக்கலாவ தென்றுகருத்து. கவிபாடுகைக்கு ப்ரதாநனுவா னிவனென்று என்னைத் தன் பக்கலிலே தேறும்படிபண்ணி யென்றுமாம். வாய்முதலென்று-வாய்த்த ஹேதுபூதனென்றுமாம். ஆமுதல் பத்தரென்று-அநந்யப்ரயோஜநராய் ப்ரதாநரான பத்தரென்று மாம். (௩)

ஆறு;—(ஆமுதல்வன்) ஆமிவனே ஸர்வேச்வரனென்று தன்னையுள்ளபடியே யறிவித்து, என் நாவைநியமித்துக் கொண்டுவந்து புகுந்து, * அயர்வறுமமரர்களுக்கு போக்யமாக நல்லனவா யினியவானகவிகளைத் தான் தன்னைச்சொல்லுகையாகிற விம்மஹோபகாரத்தை யென்று மறப்பனென்கிறார். (௩)

ஈடு; அவ;—மூன்றாம்பாட்டு. ப்ரத்யுபகாரம்பண்ணுதொழியவு மாங்கிடீர் நான் மறந்துபிழைக்கப் பெற்றேனாகி லென்கிறார்.

(ஆமுதல்வனிவனென்றுதற்றேற்றி) முதல்வனுமிவனென்று தன்பக்கலிலே யெனக்குத் தெளிவுண்டாம்படியாகப்பண்ணி-காரண வாக்யங்களில் உபாஸ்யனாகச் சொல்லப்படுகிறான் தானேயென்று தன்பக்கலிலே நான்தெளியப்பண்ணியென்னுதல்; அன்றிக்கே, பரமபதத்தோபாதிஸம்ஸாரத்தையும் திருத்தநினைத்தோம், அதுக்கிவன்முதலாம்-அடியாமிவனென்று, தற்றேற்றி-என்பக்கலிலே தன் ஸ்வரூபாதிகளைத் தெளியப்பண்ணி யென்னுதல்.

இங்கேயருளிச்செய்யும்வார்த்தை-"திருப்புற்றுக்குக் கிழக்கே கரியமாணிக்காழ்வார்திருமுன்பின் ஸோபாநத்திலே ஆளவந்தா ரெழுந்தருளியிருக்க, உடையவர் திருப்புற்றுக்குக் கிழக்காக வெழுந்தருளி நிற்கிறவரைக்கண்டு, "ஆமுதல்வனிவன்" என்றருளிச்செய்தாராம்" என்று.

(என்நாமுதல்வந்துபுகுந்து) ஸர்வேச்வரன் ப்ரஹ்மாவைக்கடாக்ஷித்து, அவன்பின்னை (க) "ஈவுஷாநெவனெதவ ஹநுவூவாநெத

(க) ரா-பா-உ-௩௦.

யமஸாஷூஸதீ - மச்சந்தா தேவதேப்ரஹ்மந் ப்ரவ்ருத்தேயம்ஸரஸ் வதீ'' என்கிறபடியே அவன் ஸரஸ்வதியையேவி, இப்படி நாலிரண்டு நிலைநின்றிறே ஸ்ரீவால்மீகிபகவானைப் [பேசுவித்தது; அங்ஙனே ரிடையீடின்றிக்கே, என்னுடைய நாக்கிலேதானே முற்பாடனாய் வந்து புகுந்தென்னுதல். அன்றிக்கே, என் நாவுக்கடியாய்வந்து புகுந்தென்னுதல். (நல்லின்கவி) லக்ஷணோபேதமாய், அந்தலக்ஷணங் கிடக்கச்செய்தே சொல்லினிமைதானே ஆகர்ஷகமாம்படியினிதான கவிகளை.

(தூமுதல்பத்தர்க்கு) அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்ய ஸூரிகளுக்கு. (க) ''கேட்டாரார் வானவர்கள்'' என்கிறபடியே, அவர்கள் கொண்டாடும்படி சொன்ன வென்னுதல். ஸம்ஸாரத்தில் தலையான முமுக்ஷுக்களுக்கு. (தான்தன்னைச்சொன்ன) தானே சொல்லுதல் நானேயொருபடி சொல்லுதல் செய்கையன்றிக்கே, * என்நாமுதல் வந்துபுகுந்து தான்தன்னைச் சொன்னனையிற்று. (என் வாய்முதலப்பனை) எனக்குவாய்த்த காரணபூதனான மஹோபகாரகனை யென்னுதல்; ''என் நாமுதல்'' என்கிறது தன்னையே யநுபாஷித்து, என் வாக்குக்கு முதலானவப்பனை யென்னுதல். (என்றுமறப்பனே) முன்பு அநாதிகாலம் மறந்துபோந்ததாகில் இனிமேல் நினைக்கைக்குடலான காலத்தையெல்லாம் மறக்கைக்குடலாக்கினால் தான் மறப்பனே. முன்பு நினைக்கையிலுள்ள வருமையோபாதியும் போரும் இனி மறக்கையிலுள்ள வருமையும். இனியேதேனுமொருநாள் தான் என்னை மறக்கப்போமோ. (௩)

## நான்காம்பாட்டு.

அப்பனைஎன்றுமறப்பன்? என்னாகியே *
தப்புதலின்றித் தனைக்கவிதான்சொல்லி
ஒப்பிலாத்தீவினையேனை உய்யக்கொண்டு *
செப்பமேசெய்து திரிகின்றசீர்கண்டே. (௪)

ப.—அநந்தரம், என்விரோதியைப்பாராதே விரும்பி யென்னைக்கொண்டு தப்பாமல் கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்தைக் கண்டுவைத்து அவனை மறக்கும்படி யென்னென்கிறார்.

(க) கO-கூ-கக.

(இ-ள்.) என்னுகியே-என்பக்கலிலேதானுய், தப்புதல்-தப்புதல், இன்றி-இல்லாதபடி, தனே-தன்னே, தான - தானே, கவி - கவி, சொல்லி - சொல்லி, ஒப்பு-ஒப்பு, இலா-அற்றிருப்பதாய், தீ - க்ரூரமான வினேயேனே - பாபத்தை யுடையேனை வென்னே, உய்ய-உஜ்ஜீவிக்கும்படி, கொண்டு - கைக்கொண்டு, அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரோடு பரிமாறுமாபோலே, செப்பமே-செவ்வையே, செய்து-செய்து, திரிகின்ற வர்த்திக்கிற, சீர்-சீலத்தை, கண்டு-கண்டுவைத்து அப்பனே - இப்படி யுபகாரகனுனவனே, என்று - அபகாரியானபோதுதான், மறப்பன்-மறப்பனே. (ச)

ஆறு;-(அப்பனேயென்று) என்னே யுபகரணமாகக்கொண்டு கவி சொல்லாநிற்கச்செய்தே, தப்பாதபடி சொல்லி ஒப்பில்லாத்தீவினே யேனுயிருக்கச்செய்தே என்னே யாத்மாந்தமாக வடிமைகொண்டு, மேன்மேலன நன்மைசெய்து திரிகின்ற சீர்கண்டு, அப்பனேயென்று மறப்பனென்கிறூர். (ச)

ஈடு: அவ;—நான்காம்பாட்டு. தானே தன்னேக் கவிபாடிக் கொண்டானுகி லோராஸ்சர்ய மில்லே, அதுக்குப் பாங்கன்றிக்கேயி ருக்கிற வென்னேக்கொண்டு தப்பாமே கவிபாடின விவ்வுபகாரத்தை இனிமறக்க வுபாயமில்லேயென்கிறூர்.

(அப்பனேயென்றுமறப்பன்) உபகாரகனுனவனே நானென்று மறப்பன். இனி அவனபகாரம்பண்ணிருற்றுன் மறக்கப்போமோ.

உமக்கு மறக்கவொண்ணுமைக்கு அவன்பண்ணின வுபகார மேதென்றுல் (என்னுகியேதப்புதலின்றித்தனேக்கவிதான்சொல்லி) என்னே யுபகரணமாகக்கொண்டு கவிபாடுகிறவிடத்து, என்னுடைய ஸ்பர்ஸத்தாலே வந்ததோஷம் தட்டாதபடி கவிபாடினுன். (என்னுகியே) என்பக்கலிலேதானுய் இவ்விடத்துக் கெம்பாருளிச்செய்யும்படி- "தான்பாடினுனுகில் நிரவத்யமாய்த்தலேக்கட்டும், நான் பாடினேனுகிலும் வருந்தியொருபடி தலேக்கட்டும், என்னேயுபகரண மாகக்கொண்டு கவிபாடாநிற்கச்செய்தேயு மென்னேட்டை ஸ்பர்ஸத் தால் வந்ததோஷம் தட்டாதபடி கவிபாடித் தலேக்கட்டினுன்" என்று.

(தனேக்கவிதான்சொல்லி) விஷயாநுரூபமாகக் கவிபாடினுன். (ஒப்பிலாத்தீவினேயேனேயுய்யக்கோண்டு) என்னே யுபகரணமாகக்

கொண்டு இப்படி கவிபாடுவித்தது முன்பு நின்றநிலையிற்காட்டில் நானெவ்வளவு புகுரநின்றேனாக; நான் முன்புற்றையிற்காட்டில் ஓரடிவர நின்றதுண்டோ. (ஒப்பிலாத்தீவினையேனையுய்யக்கொண்டு) நானுமவனுக்கொப்பன் றென்கிறார்; ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வங்களுக்கு அவனுக் கொப்பில்லாதாப்போலே யாயிற்று, அஜ்ஞாநாஶக்திகளுக்கு எனக்கொப்பில்லாதபடியும். (உய்யக்கொண்டு) (க) "ஸந்தமேநம் ததோ விது:-ஸந்தமேநம் ததோ விது:" என்கிறபடியே என்னையுஜ்ஜீவிக்கும்படி கைக்கொண்டு.

(செப்பமேசெயது திரிகின்ற) குடிலஹ்ருதயனாயிருக்கிற வென்னோடே, அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளோடு பரிமாறுமாபோலே என்னுடனே செவ்வையே பரிமாறினானென்னுதல்; எனக்கு ரக்ஷைபண்ணிப் போருகிறவென்னுதல். (சீர்கண்டே) இப்படியிருக்கிற சீலாதிகுணங்களை யநுஸந்தித்து - அப்பனையென்று மறப்பன். (ச)

---

## ஐந்தாம்பாட்டு.

சீர்கண்டுகொண்டு திருந்துநல்லின்கவி *
நேர்படயான்சொல்லும் நீர்மையிலாமையில் *
ஏர்விலாவென்னைத் தன்னாக்கிஎன்னால்தன்னை *
பார்பரவின்கவி பாடும்பரமரே. (ரு)

ப.—அநந்தரம், எனக்குக்கவிபாடுகைக்கு யோக்யதையின்றிக்கே யிருக்க எனக்கு யோக்யதையுண்டாக்கித் தானே தன்னைக் கவிபாடிக்கொள்ளும் பெரியவனாயிருந்தானென்கிறார்.

(இ-ள்.) சீர்-ப்ரதிபாத்யங்களான தன்குணங்களை, கண்டு-அபரோக்ஷித்து, கொண்டு-அநுஸந்தித்து, திருந்து ப்ரதிபாதகமாம்படி திருந்தியிருப்பதாய், நல்-ஸப்தார்த்தலக்ஷணோபேதமாய், இன்-(உ)*ஸம்ப்ரவேமதுரமான, கவி-கவிகளை நேர்பட-வாய்க்கும்படியாக, யான்-நான், சொல்லும் - சொல்லுகைக்கீடான, நீர்மை-ஜ்ஞாநஶக்த்யாதிஸ்வபாவம், இலாமையில் - இல்லாமையாலே, ஏர்விலா - அஸத்ருஶனை, என்னை-என்னை, தன்-தன்பக்கலிலே, ஆக்கி-ஜ்ஞாநப்ரேமாதிகளையுடையேனும்படிபண்ணி, என்னால்-என்னாலே, தன்னை-தன்னை, பார்-

(க) தை-ஆந-கு. (உ) ரா-ஸு-ரு-க-க.

கடிந ஸ்வபாவையான பூமியகப்பட பரவு கொண்டாடும்படி, இன்-மதுரமான, கவி கவியை, பாடும்-பாடுவதால், பரமர் பரமனுயிராநின்றான். (ரு)

ஆறு;—(சீர்கண்டு) தன்னுடைய கல்யாண குணங்களையுள்ள படி கண்டுகொண்டு, திருந்துநல்லின்கவி நேர்பட யான் சொல்லும் நீர்மையிலாமையில் எனக்கு ஸத்ருஶரில்லை; இப்படி குணலேஶமின்றியேயிருந்தவென்னைத் தன்னைப்போலே ஹேயப்ரத்யநீகத்வ ஸர்வஜ்ஞத்வாதி குணவிஶிஷ்டனாக்கி, என்னால் தன்னை ஸர்வலோகமும் இக்கவியைஸ்துதிக்கும்படி இன்கவிபாடும் பரமனையென்று மறப்பனென்கிறார். (ரு)

ஈடு; அவ;— ஐந்தாம்பாட்டு. தன்னைக்கவிபாடுகைக்கீடான நீர்மையுமின்றிக்கே இச்சையுமின்றிக்கேயிருக்கச்செய்தே, லோகமெல்லாம் கொண்டாடும்படியான கவியை யென்னைக் கொண்டுபாடுவதே! என்ன ஸர்வேஶ்வரனோவென்கிறார்.

(சீர்கண்டுகொண்டு) கல்யாணகுணங்களை யவகாஹித்து. (திருந்தித்யாதி)கட்டளைப்பட்டு லக்ஷணோபேதமாய் இனிதானகவிகளை. (நேர்படவித்யாதி) இவையொன்றுமில்லையாகிலும், சொல்லுகிறவனுடைய நன்மையாலே வருவதொருநன்மையுமுண்டிறே கவிக்கு; அப்படி வாய்க்கச்சொல்லும் ஸ்வபாவத்தை நானுடையேனல்லாமையில். (ஏர்விலாவென்னை) ஏரென்று-அழகு, அதில்லாதவென்னை. (தன்னாக்கி) தன்னோடொக்கப்பண்ணி யென்னுதல். தனக்காக்கியென்னுதல்.

(என்னால் தன்னையித்யாதி) என்னை யுபகரணமாகக்கொண்டு, தன்னைப் பாரிலுள்ளாரடையப்பரவும்படி யினிய கவிகளைப்பாடினான். விஶேஷஜ்ஞாவிஶேஷஜ்ஞரென்று வாசியின்றிக்கே எல்லாரும் கொண்டாடும்படிபண்ணினான். (பரமரே) (க) "நதத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே" என்கிற வாக்யங்கொண்டு இவனுடைய வுத்கர்ஷமறியவேண்டா, என்னையிடுவித்துக் கவிபாடுவித்துக்கொண்ட விதுவே போரும் அவனுடைய வுத்கர்ஷமறிகைக்கு. (ரு)

---

(க) ஶ்வே-சு

## ஆறும்பாட்டு.

இன்கவிபாடும் பரமகவிகளால் *
தன்கவிதான் தன்னைப்பாடுவியாது * இன்று
நன்குவந்துஎன்னுடனாக்கி என்னால்தன்னை *
வன்கவிபாடும் என்வைகுந்தநாதனே. (கா)

ப.—அநந்தரம். பெரியவர்களையிட்டுக் கவிபாடுவித்துக்கொள்ளாதே, என்னாலே தான் தன்னைக் கவிபாடுவித்துக்கொண்டு எனக்கு ஸ்ரீவைகுண்டநாதனை பெருமைதோன்ற விராநின்றானென்கிறார்.

(இ-ள்.) இன்-நிரதிசயமதுரமான, கவி-கவிகளை, பாடும்-பாடுமவர்களாய், பரமகவிகளால்-தங்களுக்கு மேலில்லாத கவிகளான பராசர பாராசர்ய வால்மீகிப்ரப்ருதிகளாலும், முதலாழ்வார்களாலும், தன்-தனக்குத்தகுதியான, கவி-கவியை, தான்-தான், ப்ரயோஜகனாய்க்கொண்டு, தன்னை-நிரவதிகமாஹாத்ம்ய யுக்தனான தன்னை, பாடுவியாது - எப்போதும் பாடுவியாதே, இன்று- இன்று, நன்கு - ஸாபிஸந்திகனாய்க்கொண்டு, வந்து - வந்து, அக்கவிபாட்டை, என்னுடன்-என்னோடே, ஆக்கி-ஆக்கி, என்-எனக்கு, வைகுந்தநாதனே-தான் ஸ்ரீவைகுண்டநாதனான பெருமையைத் தோற்றுவியா நின்றுகொண்டு, என்னால் - என்னாலே, தன்னை-அந்தப்பெருமையையுடைய தன்னை, பெருமைக்குத் தகுதியாம்படி, வன்-சிக்கென, கவி-கவி, பாடும்-பாடாநிற்கும். (கா)

ஆறு ;—(இன்கவி) இன்கவிபாடும்பரமகவிகள் தனக்குளராயிருக்கச்செய்தே, அவர்களைக்கொண்டு தன்னைக் கவிபாடுவியாதே, இன்று நன்குவந்து என்னுள்ளே புகுந்து, வேதங்களினுள்ளுமடங்காத தனக்குங்கூட வடங்காத கவிகளைப்பாடின என் வைகுந்தநாதனை யென்று மறப்பனென்கிறார். (கா)

ஈடு; அவ;—ஆறும்பாட்டு. வ்யாஸ பராசர வால்மீகி ப்ரமுகரான கவிகளைக்கொண்டு கவிபாடுவித்துக்கொள்ளாதே, என்னை யுபகரணமாகக்கொண்டு கவிபாடுவதே! என்று ப்ரீதராகிறார்.

(இன்கவிபாடும் பரமகவிகளால்) பின்னைத் தான் தனக்குச் சிலகவிகளைப் பாடவேண்டினால், அதுக்கீடாக விருப்பார் ஸ்ரீவேதவ்யாஸபகவான் ஸ்ரீபராசரபகவான் ஸ்ரீவால்மீகிபகவா னிவர்களுண்டாயிருக்க; மற்றும் வேணுமாகில் (க) "செந்தமிழ்பாடுவார்" என்று

(க) தி-மொ-உ-அ-உ.

சொல்லப்படுகிற முதலாழ்வார்களெல்லாருமுண்டாயிருக்க, என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட விதுவுமொரு நீர்மையே! என்கிறார்.

முதலாழ்வார்களிலே யொருவரை "ஒருகவிசொல்விக்கானும்" என்ன [பெருகுமித்யாதி] ஆற்றுப்பெருக்குப்போலே பெருகாநின்றுள்ள மதத்தை யுடையவானையானது. [மாப்பிடிக்குமுன்னின்று] மதித்து முன்னடி தோற்றாதே வருகிற வித்தையுந் தனக்குக் கையாளாக்கிக்கொள்ளவற்றா யாயிற்று இதினுடைய ச்லாக்யதை யிருக்கிறபடி. [முன்னின்று] "நானிங்குத்தைக்குச் செய்யவேண்டுவதென்" என்று*ஏவிற்றுச்செய்கைக்கு அவஸரப்ரதீக்ஷமாய் நிற்குமாயிற்று. [இருகணிளமூங்கில்வாங்கி] இரண்டுகணுவேறி அதுக்குத் தக்க முற்றனவு மின்றிக்கேயிருக்கிற மூங்கில்குருத்தைவாங்கி. தான் மதித்து முன்னடிதோற்றாதே திரியச்செய்தேயும் பிடியின்பக்கலுண்டான வாதராதிசயத்தாலே அவதாநத்தோடே ஸாதரமாக வாங்கி. [அருகிருந்ததேன்கலந்து] திருமஞ்சநத்துக்கு உபகரணங்கள் சமைந்திருக்குமாபோலே, அருகே மலைமுழைஞ்சுகளிலே நிரம்பியிருக்கிற தேன்களிலே வாங்கித்தோய்த்து. மூங்கில் குருத்தையும் த்ரவத்ரவ்யத்தோபாதியாக வருளிச்செய்கிறார். [நீட்டும்] இதுதானிரந்துகொடாநிற்க, அத்தை "உனக்குவேண்டுவார்க்குக்கொடாய்" என்று நிற்குமாயிற்று [வான்கலந்தவித்யாதி] மூங்கில் குருத்தும் தேனும் கலந்தாப்போலே யாயிற்று, மேகமும் அவன்திருநிறமுங் கலந்திருக்கும்படி. இனிய கவிகளைப் பாடவல்ல மேலானகவிகளாலே.

(தன்கவி தான் தன்னைப்பாடுவியாது) கவியும் தன்னது, பாடுனு னும் தான். ப்ரதிபாத்யனும் தான். அவர்களைக்கொண்டு, தன்னுடைத்தானசொல்லாலே, அதுக்குப்ரதிபாத்யனை தான் தன்னைப் பாடுவியாதே. (இன்றுநன்குவந்து) இன்றுநானிங்ஙனே யுஜ்ஜீவிக்கும்படிக்கீடாக வந்தென்னுதல். அன்றிக்கே, நன்கு, உவந்து என்றய்-நன்றாகவுகந்தென்றும்; இக்கவிபாடுகைதானே ப்ரயோஜநமாக வுகந்து. (என்னுடனுக்கி) என்னைப்பிரியாத வுபகரணமாகக் கொண்டு.

(வன்கவிபாடும்) சொற்செறிவை யுடைத்தாயிருக்கை, (க) "மொய்யசொல்லால்" என்கிறபடியே; ஸ்லதமாயிருக்கையன்றிக்கே (என்வைகுந்தநாதனே) "அழியாததான * கலங்காப்பெருநகரத்தை யிருப்பிடமாக வுடையோமானவோபாதி, அழியாதே வேதம்போலே நித்யமானவாயிரம் பாட்டுப்பாடுவிக்கவேணும்" என்று பார்த்தான். பரமபதத்தை யிருப்பிடமாக வுடையனுகையாலே வந்தவேற்றத் தோபாதியாக நினைத்திரா நின்ருனுயிற்று, இக்கவிபாட்டுடையனு கையால் வந்தவேற்றத்தையும். (சு)

---

# ஏழாம்பாட்டு.

வைகுந்தநாதன் எனவல்வினைமாய்ந்தற *
செய்குந்தன்தன்னை என்னாக்கி என்னால்தன்னை *
வைகுந்தனாகப்புகழ வண்தீங்கவி *
செய்குந்தன்தன்னை எந்நாள்சிந்தித்தார்வனே? (எ)

ப.—அநந்தரம், என்விரோதியைப்போக்கித் தன்பெருமைகீடாகக் கவி பாடுவித்துக்கொண்ட வுபகாரகனை யநுஸந்தித்து ஒருநாள் த்ருப்திபிறக்குமோ வென்கிருர்.

(இ·ள்.) வைகுந்தநாதன் - ஸ்ரீவைகுண்டநாதனுன பெருமையையுடைய னுய்வைத்து, தன்னை யநுபவிக்கைக்கு விரோதியாய், வல்-ப்ரபலமான, என்-என், வினை-பாபத்தை, மாய்ந்தற- நசிக்கும்படி, செய் - பண்ணும், குந்தன்-தன்மையையுடைய, தன்னை-தன்னை, என்னுக்கி- எனக்கு விஷயமாக்கும்படி யாக்கி, என்னால்-என்னைக்காரணமாகக்கொண்டு, தன்னை - அந்தப்பாரம்யத்தை யுடையதன்னை, வைகுந்தனுக-தன்னுடைய ஸர்வஸ்வபாவகுண்டநம் பிறவாத படியாக. புகழ-புகழும்படி. வண்-உதாரமாய். தீ - இனிதான, கவி - கவியை, செய் செய்யும்படியான, குந்தன்-உபகாரஸ்வபாவத்தையுடைய, தன்னை - தன்னை, சிந்தித்து-சிந்தித்து, எந்நாள்-எந்நாள், ஆர்வன்-த்ருப்திபிறப்பது. உள்ள தனையும் நினைத்தாலு மாராதென்று கருத்து.

வல்வினைமாய்ந்தறச் செய்குந்தனென்று-விரோதியைப்போக்கும் குந்த கிமாற வாயுதத்தை யுடையவனென்றுஞ் சொல்லுவர். கவிசெய்குந்தனென் று-குந்தப்பூப்போலே ஶுத்தஸ்வபாவனென்றுஞ் சொல்லுவர். தீங்கவியென் றுமாம். (எ)

---

(க) சு-டு-உ.

ஆறு:—(வைகுந்தநாதன்) ஸ்ரீவைகுண்டநாதனாயிருந்துவைத்து, என்னுடைய வல்வினைகளையெல்லாம்போக்கி, ஆதலால் குந்தனென்னும் திருநாமத்தையுடையனாய், என்னைத் தன்னைப்போலே தூயனாக்கி, என்றற்றன்னை வைகுந்தனாகப்புகழ வண்டமிழ்கவிசெய்குந்தன்றன்னை காலதத்வமெல்லா மநுபவித்தாற்றான் ஆர்வனோவென்கிறார். (௭)

ஈடு; அவ;—ஏழாம்பாட்டு. என்னைக்கொண்டு, பரமோதாரமாய் நிரதிசயபோக்யமான கவியைப்பாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்துக்கு, இவனைக் காலதத்வ முள்ளதனையு மநுபவித்தாலும் த்ருப்தனாகிறிலேனென்கிறார்.

(வைகுந்தநாதன்) உபகரித்தவன் என்னோடொப்பதின்றனொருவனாய் நானறியிருக்கிறேனே. *அயர்வறுமமரர்களதிபதி பொருஸம்ஸாரிபக்கலிலே மேல்விழாநின்றால் எங்ஙனே யறியிருக்கும்படி. (க) "லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி-லோகநாத: புரா பூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி" என்கிறவிதுக்கு மவ்வருகாயிருக்கிறதிறேயிது. ஸ்ரீஸுக்ரீவமஹாராஜரை நாதராகவுடையராகைக்கு யோக்யதை ஸம்பாதித்தபடியாயிற்று முன்பு லோகநாதரானது. பெறுவார், பெறுதொழிவார், முன்ன மிச்சியாநின்றார். கிடையாதத்திலேயிறே யிச்சைகள் தாம்செல்லுவது. (உ) * ஸராமோ வாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே - ஸராமோவாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே போலேயாயிற்று.

(என்வல்வினைமாயந்தற) வல்வினைபோகவேணுமென்றிராதவென்னுடைய. (௩) "மயர்வறமதிநலமருளினன்" என்றவித்தனையிறே. "எனக்கருளினன்" என்கைக்கு, அருளுவதற்குமுன்பு தாமொருவருளராகக்கண்டிலரிறே. (ச) "அஸந்நேவ ஸ பவதி-அஸந்நேவ ஸபவதி" என்னும் நிலையிறே முன்பு.(வல்வினைமாய்ந்தற) ஸர்வஶக்தியான தன்னாலேதான் இதுசெய்யலாமோ. (மாய்ந்தறச்செய்துந்தன்) என்னுடைய ப்ரபலவிரோதியைப்போக்கின ஶக்தியோகத்தையுடையவன். (௫) "அடியார்க்குத்தீர்த் தகுராக்குத்திமைகள் செய்கு

(க) ரா-கிஷ்-ச-௧௮
(உ) ரா-கிஷ்-ச-௨௧
(௩) க-க-க
(ச) தை-ஆந-சு
(௫) உ-கூ-க.

ந்தா’’ என்னக்கடவதிறே. முகுந்தா என்கிறத்தை, குந்தனென்று தலைக்குறைத்தலாய்க் கிடக்கிறதென்னவுமாம். அன்றிக்கே, குந்தனென்று-திருநாமமாகவுமாம். (க) ‘‘ குமுத₃꞉ குந்த₃ர꞉ குந்த₃꞉-குமுதஃ குந்தரஃ குந்தஃ’’ என்று குந்தனென்றே திருநாமமாயிற்றிறே. ஆஶ்ரிதர்பக்கலிலே பக்ஷபதித்து அவர்கள்பண்ணின பாபங்களை அநாஶ்ரிதர்பக்கலிலே அசலிட்டுத்தேறிடும்படியான ஶக்தியோகத்தையிறே அவ்விடத்திற்சொல்லுகிறது. தன்னை யென்னாக்கியென்றது-என்னைத்தன்னோ டொக்கப்பண்ணி யென்னுதல், தனக்காம்படி பண்ணியென்னுதல்.

(என்னால் தன்னைவைகுந்தனாகப்புகழ) பிதாவானவன் புத்ரனுக்கு ஒருபசுவை நீர்வார்த்துக்கொடுத்துத்திரிய அவன்பக்கலிலே பசுவை நீரேற்றுப் பெறுமாபோலே யிருப்பதொன்றாயிற்றிதுவும். (வைகுந்தனாகப்புகழ) நித்யவிபூதியிறேபது; இங்ஙனே யிருக்கச்செய்தேயும், இவர்புகழ்ந்தவித்தாலே தனக்கவ்விபூதி யுண்டாயிற்றதாக நினைந்திராநின்றான். ஆத்மவஸ்து நித்யமாயிருக்கச்செய்தே. (உ) ‘அஸந்நேவ-அஸந்நேவ’’ என்றும் ‘‘ஸந்தமேநம்-ஸந்தமேநம்’’ என்றும் சொல்லாநிற்கிற வோபாதியாயிற்று. ‘‘இன்னான்வாக்காலே கவிபாடினபின்பு அவன்வாழ்ந்தான்’’ என்னக்கடவதிறே; அப்படியே புகழ்ந்தபின்பு தனக்கு அந்தவிபூதியி லிருப்புண்டாயிற்றதாக நினைத்திராநின்றானவன்.

(வண்டமிழ்கவியித்யாதி) உதாரமாயினிதாயிருந்துள்ள கவிகளைப்பாடி, அதுதன்னைத் தன்பேறாக நினைத்திருக்கிற ஶக்தியை யுடையவனை. ‘‘துயரறுசுடரடி’’ என்கிறபடியே இவரைக்கொண்டு கவிபாடினபின்பு, தன் துயரந்தீர்ந்தானாயிருக்கிறபடி. இவர் துயர் போனபின்பு, தனக்கொரு துயருண்டாய் அதுபோனாப்போலே நினைத்திராநின்றானாயிற்று. ஶரீரத்துக்குவந்த வ்யாதி யநுபவிப்பான் ஶரீரியிறே.

(ந) [வ்யஸநேஷு மநுஷ்யாணாம்-வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ] திவ்யாந்தஃபுரத்திலுள்ளார்க்காதல் திருத்தாய்மார்க்காதல் ஒரு வ்யஸநம்வந்தாலோ துஃக்கிதராவதென்றால் [உத்ஸவேஷு ...ணாம்

(க) ஸஹஸ்ரநாமம் (உ) தை-ஆன-ச. (ந) ரா-அயோ-உ-சO

ஹ்ருஸம்ஹ டீவிெதாஷவதி- மநுஷ்யாணும்ப்ருஸம்து:கிதோபவதி] து:கிதனானவனளவிலன்றிக்கே, ஆனையாளுபட்டாப்போலே நோவுபடுவாராயிற்று. [ந டீவிெ காஷவதி து:கிதோபவதி] இன்னொருபடியாய், பிற்றைநாளொருபடியாய், அநந்தர மாறிப்போம் இவர்களுக்கு; இவர்கள் க்லேசத்தில் நாள்தோறும் புதியராயிருப்பர். வ்யஸநம் இவனதானால் து:கமுமிவனதாகவேண்டியிருக்க, இவர் து:கிதராகைக்குஹேதுவென்னென்னில், "இவன்படுகிற க்லேசம் இவன் காவற்சோர்வால்வந்த தொன்றன்றே, நங்காவற்சோர்வாலே வந்ததொன்றன்றோ" என்று, ரக்ஷகராகையாலே நாள்தோறும் புதியராயிருப்பர். (க) "ஹ்ரீரேஷா ஹிமமா ஸா- ஹ்ரீரேஷாஹிமமாதுலா" என்னக்கடவதிறே இவனளவல்லவாயிற்று பிற்பாட்டுக்கவன் லஜ்ஜிக்கும்படி.

(எந்நாள்சிந்தித்தார்வனோ) பண்ணினவுபகாரம் கனத்திராநின்றது, உபகாரஸ்ம்ருதிக்குக்காலம் போருகிறதில்லை; நானென்செய்வேன். ஶரீரவிஶ்லேஷாநந்தரத்தில் தானேவாப்புகு நீராகையால் அநுஸந்திக்கைக்கு அவகாசமில்லை, இங்கிருக்கும்நாள் காலம்போருகிறதில்லை, பண்ணினவுபகாரமோ கனத்திராநின்றது; நானென் செய்கேன். (எ)

---

## எட்டாம்பாட்டு.

ஆர்வனோ? ஆழியங்கை எம்பிரான்புகழ் *
பார்விண்நீர்முற்றும் கலந்துபருகிலும் *
ஏர்விலாஎன்னைத் தன்னாக்கிஎன்னால்தன்னை *
சீர்பெறஇன்கவி சொன்னதிறத்துக்கே. (அ)

ப:—அநந்தரம். ஸமஸ்தவிபூதியிலுமுள்ள வாகாரங்களை யுடையனாய்க் கொண்டு மஹோபகாரகனை வுன்புகழை யநுஸந்தித்தாலு மார்வனோவென்கிறார்.

(இ-ள்.) ஏர்வு-கவிபாடுகைக்குத் தகுதியான ஜ்ஞாநஶக்த்யாதிகள், இலா-இல்லாத, என்னை - என்னை, தன்னாக்கி - தன்விஷயத்திலே ஜ்ஞாநாதிகளை

(க) ரா-ஆர-கo-ந

யுண்டாக்கி, என்றால்-என்னையிட்டு. தன்னை - பூர்ணனான தன்னை, சீர்-சீலாதி குணலாபம், பெற - பிறக்கும்படி, இன் - இனிய, கவி-கவியை, சொன்ன - சொன்ன, திறத்துக்கு - ப்ரகாரத்துக்கு, ஆழியங்கை - கையுந்திருவாழியுமான வழகைக்காட்டி, எம்பிரான் - அறிவைப்பிறப்பித்து உறவையுண்டாக்கின வென் ஸ்வாமியுடைய, புகழ்-குணப்ரதையை, பார்-பூம்யுபலக்ஷிதமான வவதாரஸ்தலத்திலும், விண் - பரமாகாஶரூபமான பரஸ்தலத்திலும், நீர்-க்ஷீரார்ணவமான வ்யூஹஸ்தலத்திலுமுள்ள, முற்றும்-சேதநரெல்லாருமாய்; கலந்து-கலந்து, பருகிலும்-அநுபவிக்கிலும், ஆர்வனோ-த்ருப்தனுவனோ. (அ)

ஆறு;—(ஆர்வனோ) என்னைக்கொண்டு தானுமுளனும்படி கவி பாடின வந்தகுணத்தை, இவ்வண்டாந்தர்வர்த்திகளான வஸங்க்யேய வாத்மாக்களுடைய வாகாத்யுபகரணங்களையும் * அயர்வறுமமரர்களுடைய வாகாத் யுபகரணங்களையுங்கொண் டநுபவித்தால் தான் ஆர்வனோவென்கிறார். (அ)

ஈடு; அவ;—எட்டாம்பாட்டு. நானொருவனுமிருந்து ஜீவிக்கும் நாள் உபகாரஸ்ம்ருதிக்குக் காலம் போராதென்று நோவுபடுகிறேனே, என்னுடைய வுபகார ஸ்ம்ருதியையு மபேக்ஷையையு முடையராய்க்கொண்டு புறம்பே அந்யபரராயிருக்கிற பகவத்வ்யதிரிக்த ஸமஸ்தசேதநரும் என்னுடனேகூடி நெடுங்காலமெல்லாம் நானுமவர்களுங்கூடிநின்றநுபவித்தால்தான் ஆர்வனோவென்கிறார்.

(ஆர்வனோவித்யாதி) [ஆழியங்கையெம்பிரான்புகழைப் பார் விண்ணீர்முற்றுங்கலந்துபருகிலும்-நானார்வனோ] தன்னுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை யென்னுடைய கவிக்குவிஷயமாக்கின மஹோபகாரகனுடைய புகழை. (க) "வாய்கொண்டுமானிடம்பாடவந்தகவியேனல்லேன், ஆய்கொண்டசீர்வள்ள லாழிப்பிரானெனக்கேயுளன்" என்கிறாரிறே. பாரிலுள்ளார், விண்ணிலுள்ளார், நீரிலுள்ளாரான விவர்களெல்லாருடைய வாகாத்யுபகரணங்களையும் போக்த்ருத்வத்தையும் ஶக்திவிசேஷங்களையு முடையேனாய்க்கொண்டு காலமெல்லாம் நின்றநுபவித்தாலுந்தான் நானார்வனோ. கலக்கை - அவற்றோடே சேர்க்கை.

அன்றிக்கே, பார்விண்ணென்று-உபயவிபூதியையுஞ்சொல்லி, நீரென்று-நீர்மையாய், ஸ்வபாவமாய், உபயவிபூதியிலுள்ளார் போக்

(க) ரு-கூ-கூ-

த்ருத்வஶக்தி ஸ்வபாவத்தைய முடையேனு யநுபவித்தாலும் என்றுகவுமாம்.

நீரிப்படி யெல்லாருடைய வுபகரணங்களையு முடையீராய்க் கொண்டு காலமெல்லா மநுபவியாநின்றுலுமாராமைக்கு அவன்பண்ணின வுபகாரந்தானேதென்றுல் (ஏர்வித்யாதி) இங்கு நன்மையில்லையாகச் சொல்லுகிறது. கீழ்-கவிபாடுகைக்கீடான விச்சையுமில்லையென்றுர்; இங்கு-அவ்விச்சைக்கடியான போக்யதையுமில்லையென்கிறுர்.(க) "வ்யாஹ்ருணாவிவிதிஷந்தி-ப்ராஹ்மணுவிவிதிஷந்தி" என்றுநிற்கச்செய்தேயும், (உ) "யஜ்ஞநதாநேநதபஸாநாஸகே ந-யஜ்ஞேநதாநேநதபஸாநாஸகேந" என்று போக்யதையைச் சொல்லிற்றிறே; அதுவுமின்றிக்கேயிருக்கிற வென்னையென்கை.

(என்னுற்றன்னைச்சீர்பெறவின்கவிசோன்ன) ஸமஸ்தகல்யாணகுணுத்மகனுனவன் இக்கவியாலே தனக்கு நிறமாம்படியாகச்சொன்ன. நான்கவிசொல்ல ஸர்வேஶ்வரனுன தனக்கு இத்தாலே நிறமாக நினைத்திராநின்றுன். இச்சீரிழக்கவரிலும் விடவொண்ணுதபடியாயிற்றுக் கவியினினிமை. (இன்கவிசோன்னதிறத்துக்கு) இப்படி இனியகவிகளைச்சொன்ன ப்ரகார மொன்றுக்கும். அல்லாதகுணங்கள் குமரிருந்துபோ மித்தனை. இப்ப்ரகாரமொன்றுக்கும்-ஆழியங்கையெம்பிரான்புகழைப் பார்விண்நீர்முற்றுங்கலந்து பருகிலும் ஆர்வனே.

---

## ஒன்பதாம்பாட்டு.

திறத்துக்கே துப்புரவாம் திருமாலின்சீர் *
இறப்பு எதிர்காலம் பருகிலும் ஆர்வனே? *
மறப்பிலா என்னைத் தன்னுக்கி என்னுல்தன்னை *
உறப்பல இன்கவி சோன்ன உதவிக்கே. (கூ)

ப.—அநந்தரம், கீழ்ச்சொன்ன ப்ரகாரத்திலே ஸர்வசேதந ஶக்திவிசிஷ்டனுய்க்கொண்டு ஸர்வகாலாநுபவம்பண்ணினுலு மார்வனேவென்கிறுர்.

(இ-ள்.) ஒருகால் நினைவில்லாமையாலே, மறப்பு-மறப்பு, இலா-இல்லாதபடியான, என்னை-என்னை, தன்னுக்கி - தன்பக்கலிலே மறப்பறும்படியான

(க) ப்ருஹ-கூ-ச.

வறிவையுடையனுக்கி, என்றால்-என்னையிட்டு, தன்னை-தன்னை, உற-அவ்யவதாநே வாசகமாய், பல - ஸஹஸ்ரஸங்க்யாதமாய், இன் - மதுரமான, கவி - கவியை, சொன்ன-சொன்ன, உதவிக்கு-உபகாரத்துக்கு, திறத்துக்கு-இழிந்த கார்யப்ரகாரங்களுக்கு, எய் - அநுரூபமான, துப்புரவாம் - ஶக்தியையுடையனை, திருமாலின் - ஸ்ரிய:பதியினுடைய, சீர்- ஔதார்யஶீலஸௌலப்யாதி குணங்களை, இறப்பெதிர்காலம் - அதீதாநாகதங்களான காலத்தையும் கூட்டிக்கொண்டு பூர்வோத்தர காலவர்த்தி ஸகலசேதந ஶக்தியுக்தனாய்க்கொண்டு, பருகிலும் - அநுபவிக்கிலும், ஆர்வனோ - ஆர்வனோ.

துப்புரவு - மிடுக்கு. (கூ)

ஆறு;—(திறத்துக்கு) அஜ்ஞாநத்துக்குங்கூட வாஸ்ரய மல்லாமையாலே அசித்கல்பனாயிருந்த வென்னைத்தன்னைப் போலேயாக்கி, என்னைக்கொண்டு பிராட்டியும் தானுமாகத் திருவாய்மொழி பாடின விம்மஹோபகாரத்தை, முன்புசொன்ன ஸர்வோபகரண யுக்தனாய்க்கொண்டு பூதபவிஷ்யத்வர்த்தமான காலமெல்லா மநுபவித்தால்தான் ஆர்வனோவென்கிறார். (கூ)

ஈடு; அவ;—ஒன்பதாம்பாட்டு. என்னைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரகனை, ஸகலசேதநருடைய போக்த்ருத்வ ஶக்தியை யுடையேனாய்க்கொண்டு காலமெல்லாம் புஜித்தாலுமாரேனென்றார்-கீழ்; அந்தபோக்த்ருத்வ ஶக்தியுடனே காலத்வயமும் புஜித்தாலுமாரேனென்கிறார் இதில்.

(திறத்துக்கேயித்யாதி) ஏதேனுமோரிடையாட்டத்தில் வந்தால் ஒரு த்ருணத்தைக்கொண்டு காரியங்கொள்ளப் பார்த்தால் அத்தைக்கொண்டேகாரியத்தை அப்படி தலைக்கட்டிக்கொள்ளும்படிக் கீடான துப்புரவுண்டு - ஸாமர்த்த்யம், அத்தையுடையனை. அதுக்கடியென்னென்றால்; ஸ்ரிய:பதியாகையாலே. நினைத்தகாரியஞ்செய்து தலைக்கட்டுகைக்கீடான ஸாமர்த்த்யத்தையுடையனை ஸ்ரிய:பதியுடைய கல்யாணகுணங்களை. ஒருவன் செய்தது வாய்த்துவரப்புக்கவாறே, "அவன்குப்பைக்காலன்காண், ஸ்ரீமான்செய்ததெல்லாம் நன்றாய்வருங்காண்" என்னக்கடவதிறே.

(இறப்பெதிரித்யாதி) ஸமஸ்தசேதநருடையவும் வாகாத்யுபகரணங்களையும் போக்த்ருத்வாதி ஶக்திகளையும் நானுடையேனா யநு

பணிக்கப்புக்காலும், ஜீவிக்கைக்கடியான ஆயுஸ்ஸு அல்பமாகையாலே உபகாரஸ்ம்ருதிக்குக் காலம்போருகிறதில்லை; "எந்நாள்சிந்தித்தார்வனே" என்னவேண்டாதே, அவ்வவருடைய வுபகாரணங்களையுமுடையேனாய், போனகாலமும் மேல்வரக்கடவகாலமுமெல்லா மநுபவியாநின்றாலுந் தாரனர்வனே. வர்த்தமாநகாலம் தன்னடைபேவருமிறே. போனகாலமநுபவிப்பாராய்ச் சொல்லுகிறானன்று, எல்லாக்காலமு மநுபவித்தாலும் போராதென்கைக்காக. "எந்நாள் சிந்தித்தார்வனே" என்கிறதிற்காட்டி லேற்றமில்லையாயிறே, கீழிற்பாட்டிற் சொன்ன சேதநரைக் கூட்டிக்கொள்ளாதபோது.

எல்லாருடைய வுபகாரணங்களையுங்கொண்டு காலமெல்லா மநுபவித்தாலும் நீராராதேயொழிகிறது அவன்பண்ணின வெவ்வுபகாரத்தை ஸ்மரித்தென்ன (மறப்பிலாவித்யாதி) மறப்பில்லையானவென்னை. மறப்புக்குப் பூர்வக்ஷணவர்த்தியான நினைவுமெனக்கில்லையென்கைக்காக-மறப்பிலாவென்கிற பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். மறப்பிலாவென்னவேண்டுவானெனென்னென்னில்; நினைவுள்ளவிடத்திலேயிறே மறப்புள்ளது. ஆக, காதாசித்கமான ஸ்ம்ருதியுங்கூட வெனக்கில்லையென்கிறார். (மறப்பிலாவென்னைத்தன்னாக்கி) காதாசித்கமாக ஸ்மரித்துப் பின்னையொருகால்மறப்புண்டாய், அத்தைக்காணக்கண்ணிட்டுத் தானிப்படி விஷயீகரித்தானே. முதலிலே தன்பக்கல் ஸ்ம்ருதியின்றிக்கே யிருக்கிறவென்னைத் தன்னாக்கி.

(என்னால்) (க) "மறந்தேனுன்னைமுன்னம்" என்கிறவநுதாபமுங்கூட வின்றிக்கேயிருக்கிற வென்னையிடுவித்து. (தன்னையுறப்பலவின் கவிசொன்ன) என்றதுக்கு ஜீயருளிச்செய்யும்படி- (உ) "யதோவாசோ நிவர்த்தந்தே-யதோவாசோநிவர்த்தந்தே" என்று வேதங்கள் மீண்டவிஷயத்தை மறுபாடுருவச்சொன்ன" என்று. அன்றிக்கே, பிள்ளான் பணிக்கும்படி- "ஸர்வேஶ்வரனுக்குச் சாலவுற்றதென்கிறார்" என்று. (பலவின்கவிசொன்ன) (ந) "உதஹ்ருஹ்ருதிஸஹஸ்ராணி ஶ்லோகாநாமுக்தவாந்ருஷி:-சதுர்விம்ஶத்ஸஹஸ்ராணி ஶ்லோகாநாமுக்தவாந்ருஷி:" என்னுமாபோலே; ஸம்ஸாரத்திலே யிப்படி விலக்ஷணமாயிருப்பது ஆயிரம்பாட்டைப் பாடுவதே யென்கிறார். இனிய கவிகளைச்சொன்ன, உதவிக்கு-இவ்வுபகாரத்துக்கு-திருமாலின்சீரிறப்பெதிர் காலம்பருகிலுமார்வனே, (க)

---

(க) தி-மொ-க-உ.உ. (உ) தை-ஆந-க.
(ந) ரா-பா-ச-உ.

## பத்தாம்பாட்டு.

உதவிக்கைம்மாறு என்னுயிர்என்னஉற்றெண்ணில் *
அதுவும்மற்றாங்கவன்தன்னது, என்னால்தன்னை *
பதவியஇன்கவி பாடிய அப்பனுக்கு *
எதுவும்ஒன்றுமில்லை செய்வது இங்குமங்கே. (கo)

ப:—அநந்தரம், அவனுடைய வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமொரு ப்ரகாரத்தாலு மில்லையென்கிறார்.

(இ-ள்.) உதவி - கவிபாடுவித்துக்கொண்ட வுபகாரத்துக்கு; கைம்மாறு-ப்ரத்யுபகாரம், என்-என், உயிர்-ஆத்மா, என்ன-என்று அத்தை, உற்று - சிக்கென, எண்ணில்-நிரூபித்துப்பார்க்கில், ஆங்கு - அந்தப்ரத்யுபகாராவஸ்த்தையில், அதுவும்-அந்தவாத்மாவும், மற்று-பின்னை, அவன் றன்னது - அவனுக்கஸாதாரண சேஷமாகையாலே, என்னால்-என்னையிட்டு, தன்னை-தன்னை, பதவிய-ம்ருதுவாய், இன்-இனிதான, கவி-கவியை, பாடிய - பாடின, அப்பனுக்கு - உபகாரனுக்கு, இங்கும் - இந்தவிபூதியிலும், அங்கும் - அந்தவிபூதியிலும், செய்வது-செய்யவடுப்பது, எதுவும்-ஏதேனுமல்பமாயிருப்பது, ஒன்று - ஒன்றும், ப்ரத்யுபகாரம், இல்லை-இல்லை.

ஜ்ஞாநம்பிறந்தத்தால் நித்யபரசேஷமான வாத்மாவுக்கு முமுக்ஷுதசையோடு முக்ததசையோடு வாசியற ஸமர்ப்பணீயணத்வமில்லையென்றுகருத்து. ஸ்வகீயத்வாபிமாநமுள்ளது அஜ்ஞாநதசையிலிறே. (கo)

ஆறு ;—(உதவி) இப்படியென்னைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்தருளின விம்மஹோபகாரத்துக்குக் கைம்மாறாக வென்னாத்மாவை அவனுக்கடிமையாகக் கொடுக்கவென்னில், அதுவும்பண்டே அவனுக்கடிமை யாதலால், இங்குமங்கு மிதுக்கொரு கைம்மாறுசெய்யலாவதில்லையென்று அவனுடைய மஹோபகாரத்தை யநுபவிக்கிறார். (கo)

ஈடு ; அவ்;—பத்தாம்பாட்டு. உபகாரஸ்ம்ருதிக்குக் காலம்போருகிற தில்லையென்று நீர்புண்படாநில்லாதே, உம்மதாயிருப்பதொரு வஸ்துவை அவனுக்கு ப்ரத்யுபகாரமாகக்கொடுத்துப் பிழைத்துப்போக மாட்டீரோவென்ன ; அப்படிசெய்யலாயிற்றிறே ஈஸ்வரனைப் போலே நானுமெனக்குடைமையா யிருப்பதொரு வஸ்துவும்பெற்றேனாகிலென்கிறார்.

(உதவி) உதவியுண்டு-உபகாரம், அதுக்குக்கைம்மாறாக - ப்ரத்யுபகாரமாக. (என்னுயிரென்ன) நித்யமாய் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாய் ஶ்லாக்யமா யிருப்பதொன்றுண்டிறே-ஆத்மவஸ்து, அத்தைக்கொடுத்தாலோவென்னில்; அதுசெய்யலாயிற்றிறே, அடியிலே * மயர்வறமதிநல மருளிற்றிலனாகில்; முன்னே அத்தைக்கொடுத்துவைத்தானே. ப்ராந்திஸமயத்தில் ஆத்ம ஸமர்ப்பணம்போலே யிருப்பதொன்றாயிற்று, உபகாரஸ்ம்ருதியாலே ப்ரத்யுபகாரந்தேடிக் கலங்குகிறவிது.

ப்ராந்திஸமயத்தில் ஆத்மஸமர்ப்பணந்தான்வேணும், தெளிந்தவநந்தரம் "என்னுடையவஸ்துவை அவனுக்குக் கொடுத்தேன்" என்றிருக்கக்கடவனல்லன். அநாதிகாலம் ஆத்மாபஹாரம்பண்ணிப் போந்த வதிலுங்கடையாயிற்று, தெளிந்தவநந்தரம் "நானென்னுடைய வஸ்துவைத்தந்தேன்" என்றிருக்குமாகில். பின்னையும் பழைய வபஹாரமே யநுவர்த்தித்ததாமே; ஜ்ஞாநம் பிறந்தமை பொய்யாமிறே. ஸர்வமுக்தி ப்ரஸங்கபரிஹாரார்த்தமாக வாத்மஸமர்ப்பணந்தான் வேண்டிவரும்; நெஞ்சிலே வெளிச்சிறப்புண்டானால் அவன் வஸ்துவை அவனதாக விசைந்திருக்கக்கடவன். (க) "ஈயாவஊர்ஜிதஃ-மயாஸமர்ப்பிதஃ" (க) "கிம்வாகிநூாஸமர்ப்பயாமிதே - அதவாகிந்நுஸமர்ப்பயாமிதே" என்றுநின்றதிறே. (உ) "எனதாவி தந்தொழிந்தேன்" என்று, "எனதாவியார்யானார்" என்றாரிறே. ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால் பேற்றளவுஞ் செல்லவிவ்விரண்டாகாரமு மநுவர்த்திக்கக் கடவதாயிருக்கும். ஆக, ஆத்மஸமர்ப்பணத்துக்கும் உபகார ஸ்ம்ருதிக்கும் தனித்து இவனுக்கு ப்ராப்தியில்லாதபடியான விவனுடைய வத்யந்த பாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது.

(உற்றெண்ணில்) ஆராயாதே மேலெழுகின்றுகொடுக்கில் கொடுக்கலாம், நெஞ்சிலே சிறிதுவெளிச்சிறப்புப்பிறந்து இதினுடைய ஸ்வரூபத்தைய பாராய்ந்துபார்த்துக் கொடுக்குமன்று கொடுக்க ப்ராப்தியில்லை. (அதுவும்) ஆத்மாவும் (மற்று) அப்படிப்பட்ட வாத்மீயங்களும். (ஆங்கவன்றன்னது) ப்ரத்யுபகாரம்பண்ணி தரிக்கவேண்டும் தசையில் அவனதாயிராநின்றது.

---

(க) ஸ்தோ-ர-ருஉ, (உ) உ-ரு-ச,

(என்னுவித்யாதி) உபகாரஸ்ம்ருதிக்குங்கூட ப்ராப்தியில்லாத வென்றலே, மஹோபகாரகனுயிருக்கிற தன்னை. (பதவியவின்கவி பாடியவப்பனுக்கு) கவிபாட்டுண்கிறவனுக்கு இக்கவிபாட்டாலே பண்டில்லாத நீர்மையுண்டாம்படியாகக் கவிபாடின வுபகாரகனுக்கு. (எதுவுமோன்று மில்லைசெய்வது) ஏதேனுமொன்றுஞ் செய்யலாவதில்லை.

இங்கிருக்கும் நாள் ஸங்கோசத்தாலே செய்யலாவதொன்றில்லையேயாகிலும், ஸங்கோசமற்று முக்தனுல் ப்ரத்யுபகாரம்பண்ணத்தட்டென்னென்னில் (இங்குமங்கே) இங்கானுல், தேஹாத்மாபிமாநத்தாலே, "நான், என்னது" என்று பொய்க்கால்கட்டித் திரிகையாலே, "செய்யலாவதொன்றுண்டோ" என்று ப்ரமிக்கவுமாயிருக்கும்; அதுவுமின்றிக்கே, ஸங்கோசங் கழிந்தவளவில், தானே செய்யலாவதொன்றில்லை யென்னுமிடம் சொல்லவேண்டாவிறே. (க) "ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே - ஸ்வேநரூபேணுபிநிஷ்பத்யதே" என்று-ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்தவிடத்தில் ஸ்வரூபவிரோதியாக ப்ரவர்த்திக்கப்போகாதிறே.

---

# பதினோராம்பாட்டு

இங்கும்அங்கும் திருமாலன்றியின்மைகண்டு *
அங்ஙனே வண்குருகூர்ச் சடகோபன் *
இங்ஙனேசொன்ன ஓராயிரத்துஇப்பத்தும் *
எங்ஙனேசொல்லினும் இன்பம்பயக்குமே.

ப:— அநந்தரம், இத்திருவாய்மொழி, தன்னோடேங்வயித்தார்க்கு நிரதிசயாநந்தத்தை யுண்டாக்காநிற்குமென்று பலத்தையருளிச்செய்கிருர்,

(இ-ள்.) இங்கும் - இந்தவிபூதியிலுண்டான வாஸ்யணதசையிலும், அங்கும் - அந்தவிபூதியிலுண்டான கைங்கர்யதசையிலும், திருமால் - பூர்வோத்தரவாக்ய ப்ரமுகஸித்தமான ஸ்ரிய:பதித்வத்தையுடையவனை, அன்றி - ஒழிய, இன்மை-வேறில்லாமையை, கண்டு-அநுஸந்தித்து, அங்ஙனே - அந்தப்ரகாரத்தையுடையராய், வண்-உதாரான, குருகூர்ச்சடகோபன் ஆழ்வார், சொல் - தம்மை வாசிக கைங்கர்யங்கொண்ட, இங்ஙனே - இந்தப்ரகாரத்திலே, சொன்ன -

(க) சாந்தோ-அ-கஉ.

அருளிச்செய்த, ஓர், ஆயிரத்து-ஆயிரத்திலே, இப்பத்தும் - இப்பத்தும், எங்ஙனே - இவருடைய உபகாரஸ்ம்ருதிரூபமான-அர்த்தவ்யதிரேகேண, சொல்லிலும் - ஶப்தமாத்ரமேசொல்லிலும், ஆழ்வார்வைபவத்தாலும், இத்திருவாய்மொழியின் மாஹாத்ம்யத்தாலும், இன்பம் - பகவதநுபவஜநிதநிரதிஶயாநந்தத்தை, பயக்கும்-உண்டாக்கும்.

இது - கலிவிருத்தம். (கக)

ஆறு ;—(இங்குமங்கும்) ஶ்ரிய:பதியானவனல்லது உபகாரகரில்லையென்னுமிடத்தை யநுஸந்தித்து அந்த பாவயுக்தரான வாழ்வார், தம்மைத் திருவாய்மொழிபாடுவித்தருளின விம்மஹோபகாரத்தைச்சொன்ன வித்திருவாய்மொழி, எங்ஙனே சொல்லிலுமின்பம் பயக்குமென்கிறார்.

ஈடு ; அவ ;—பதினொன்றாம்பாட்டு. நிகமத்தில்-இத்திருவாய்மொழி, ஏதேனுமொருபடிசொல்லிலும் ஆநந்தத்தை யுண்டாக்குமென்கிறார்.

(இங்குமங்குந்திருமாலன்றி யின்மைகண்டு) ஸாதநாநுஷ்டாநஸமயத்தோடு ப்ராப்யவஸ்துவை ப்ராபித்த ஸமயத்தோடு வாசியற இஹலோக பரலோகங்க ளிரண்டிலும் ஶ்ரிய:பதியல்லதுபோக்கி இவ்வாத்மவஸ்துவுக்குத் தஞ்சமாயிருப்பார் வேறில்லையென்னுமத்தை யநுஸந்தித்து. (க) "பண்டைநாளாலே நின்திருவருளும் பங்கயத்தாள் திருவருளுங்கொண்டு நின்கோயில்சீத்து" என்கிறபடியே, கைங்கர்யம்பண்ணுமிடத்திலும் அவள்முன்னாகப் பண்ணவேணுமிறே; ஆஶ்ரயணவேளையிலும் அவள்முன்னாக வேணுமிறே. (உ) "ஹதேதஸ்மிந்கரிஷ்யந்தி ... ஹதேதஸ்மிந்குர்யு:" என்று, ராவணன் சொல்லுகையாலே அன்றிருந்து நலிந்தார்களாகில், இப்போதும் நலிவர்களோ? என்று அவர்கள்பக்கலிலும் குணத்தை யாரோபித்துச்சொல்லும் சீர்மையையுடையவளாயிற்று.

(அங்ஙனேயித்யாதி) நமக்கும், ஸதாசார்யன் அருகேயிருந்து "ஶ்ரிய:பதி யொழிய விவ்வாத்மவஸ்துவுக்குத் தஞ்சமாயிருப்பாரில்லை" என்று உபதேசித்தால், அத்தனைபோதும் "அப்படியே" என்றிருக்குமதுண்டிறே; இவரங்ஙனன்றிக்கே, அந்நினைவுக்கநுரூபமான

---

(க) கூ-உ-கூ. (உ) ரா-யு-ககசு-சக.

பரிமாற்றத்தையு முடையராயிருப்பராயிற்று. ஆக' மநோவாக்காயங்கள் மூன்று மொருபடிப்பட்டிருக்குமோவென்னில் (இங்ஙனித்யாதி) இப்பாவவ்ருத்தியிலே சொல்லிற்றாயிற்று ஆயிரம்பாட்டும்.

நீர், மநோவாங்காயங்கள் மூன்றிலும் "ஸ்ரிய:பதியேயிவ்வாத்மவஸ்துவுக்குத்தஞ்சம்" என்றத்யவஸித் தருளிச்செய்த விப்பாசுரத்தை யப்யஸிப்பார்க்கு மநோவாக்காயங்கள் மூன்றும் பாஹ்யாதி விஷயங்களில்நின்றும் மீளவேணுமோ - நீர் (க) * சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவபிரானையே தந்தைதாயென்றடைந்தவராயிராநின்றீர்; இவர்களுக்கு மெல்லாம் பின்னை யிப்படி வேணுமோவென்னில்; அத்தேவைகளெல்லாம் நம்மோடே, இது கற்பார்க்கு அதுவேண்டாவென்கிறார் (எங்ஙனேசொல்லிலு மின்பம்பயக்குமே) ஏதேனுமொருபடி சொல்லிலு மின்பமுண்டாம். என்னுடையபாசுரத்தைக் கற்றவர்களென்றிறே ஈஶ்வரனிவர்களைக்கடாக்ஷிப்பது;

இல்லையாகில் இவர் தம்மைப்போலே மநோவாக்காயங்களுடைய நியதியுண்டா யநுபவிக்கப்பெறிலழகிது, அதில்லாதபோதும் பலவ்யபிசாரியாகாதென்கைக்காகச் சொல்லிற்றத்தனையிது. (இன்பம்பயக்குமே) (உ) "ஸைஷாநந்தஸ்ய மீமாꣳஸா பவதி-ஏஷஹ்யேவாநந்தயாதி" என்கிறபடியே, நிரந்தரபகவதநுபவத்தால் பிறக்குமாநந்தமானது உண்டாம்.

ஏழாம்பத்து-ஒன்பதாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) கூ-ரு-கக.

(உ) தை-ஆந-ரு.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஏழாம்பத்து

# பத்தாந் திருவாய்மொழி

## இன்பம் - ப்ரவேசங்கள்.

ஆறு;—(இன்பம்பயக்க) இப்படி யென்னைத் திருவாய்மொழி பாடுவித்தருளுகைக்காக, திருநாட்டினின்றும் அங்கே யெழுந்தருளி யிருந்தபடியே ஸபரிகரமாகத் திருவாறன் விளையிலே வந்துபுகுந்து என்னைத் திருவாய்மொழி பாடுவித்துப் பாட்டைக்கேட்டருளி திருவடி, பெருமாள் குணங்களைச் சொல்லக்கேட்டருளி அசோக வநிகையிலே பிராட்டி நிர்வ்ருதையா யிருந்தாப்போலே நிர்வ்ருதனா யிருந்த திருவாறன் விளையை என்றோசென்று நாமநுபவிக்கப் பெறுவதென்று மநோரதிக்கிறார். *

ப.—பத்தாந்திருவாய்மொழியில், கீழ்ப்படி தம்மைக்கொண்டு கவிபாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்தாலே தம்முடையவிரோதி அஸத்ஸமமாம்படி ஹ்ருஷ்டரானவர், அவனுபகாரத்துக்கொரு ப்ரத்யுபகாரங்காணாமையாலே, சேஷியானவனுக்கதிசயஜநகமான சேஷவ்ருத்தியொழிய இல்லையென்றறுதியிட்டு, ப்ரதிஸம்பந்தியான வவனுடைய வசேஷசேஷித்வப்ரகாசகமான ஸ்ரிய:பதித்வபூர்த்தியையும், அநந்யார்ஹசேஷத்வாபாதாநத்தையும், ஆஸ்ரிதரக்ஷணசாரத்தையும், அநுபாவ்யமான விக்ரஹயோகத்தையும், அநுபவார்த்தமான வவதாரத்துக்கு மூலமாயுள்ள அநந்தசயநத்வத்தையும், அநிஷ்டநிவ்ருத்திவிசிஷ்டமான வபிமதஸாதகத்வத்தையும், ப்ரபலவிரோதி பஞ்ஜநத்வத்தையும், ஆர்த்தாது:கநிவர்த்தகத்வத்தையும், பாபம்நிவ்ருத்தமாய் ப்ராப்யதேசம் ஸித்திக்கிலும் உத்தேஸ்யமான ஆஸந்நதேசயோகத்தையும், நிரதிசயவ்யவஸாயஜநகத்வத்தையுமநுஸந்தித்து, ஏவம்விதஸ்வபாவனானவவன் நம்மை விரோதியைக்கழித்தடிமை கொள்ளுகைக்காக ஆஸந்நமான திருவாறன் விளையிலே ஸந்நிஹிதனான வவன் திருவடிகளிலே யடிமைசெய்யக்கடவோமென்று மநோரதித்து, இப்படி நிவர்த்த்யவிரோதிபலநிரூபண பூர்வகமாக வதினுடைய சரண்யநிவர்த்த்யத்வத்தை நிஷ்கர்ஷித்து நிகமிக்கிறார்.

ஈடு ;—ஸர்வேஸ்வரன் தம்மைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்துக்கொண்ட மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரந்தேடிக் காணாமை தடுமாறினார்-கீழிற்றிருவாய்மொழியிலே; இவர் தாம்தம்மு

டைய ப்ரமத்தாலே ப்ரத்யுபகாரந்தேடித் தடுமாறுகிறாரத்தனைபோக்கி இவர்தமக்குக் கொடுக்கலாவதொன்றுமில்லை; அவனொன்று கொண்டு குறைதீரவேண்டும் ஸாபேக்ஷனல்லன்; இவர்தம்முடைய வுபகாரஸ்ம்ருதி யிருந்த விடத்திலிருக்கவொட்டாமையாலே செய்ததொன்றிறே; ஆனாலு மாறியிருக்க மாட்டாரே. இனி, நாமுமவனுக்கென்று கொடுத்தோமாய், அவனும் நம்பக்கலொன்று பெற்றானாகச் செய்யலாவதொன்றுண்டு. அவன், தனக்குவகுத்தகைங்கர்யத்தைப்பண்ணவே, அதுதன்னைத்தனக்கு ப்ரத்யுபகாரம்பண்ணிற்றாக நினைத்திருக்கும் ஸ்வபாவனாயிருந்தான்; ஆனபின்பு, நம்முடைய ஸ்வரூபாநுரூபமான வாத்மாந்ததாஸ்யத்திலே யதிகரிப்போமென்று பார்த்தார்.

இனித்தான், வேதவாக்யங்களும் (க) "ஸ்வேந ரூபேணாபி நிஷ்பத்யதே" என்று ஸ்வரூப ப்ராப்தியளவுஞ்சொல்லவே, அதுக்கவ்வருகில் கைங்கர்யமானது, அவகாதஸ்வேதம்போலே தன்னடையே வருமென்று ப்ரஹ்ம ப்ராப்தி யளவுஞ்சொல்லிவிடும். ஆழ்வார்கள் (உ) "வழுவிலாவடிமைசெய்யவேண்டுநாம்" என்று அது தன்னையே சொல்லாநிற்பர்கள்; ப்ராப்திபலமான கைங்கர்யத்தில் ருசியாலே. "ஸம்ஸாரம்த்யாஜ்யம், ஸர்வேஶ்வரனுத்தேஶ்யன்" என்கிற ஜ்ஞாநம்பிறந்து, பகவத்ஸமாஶ்ரயணம் பண்ணினவர்கள், (ங) "மோக்ஷஸம்ஜ்ஞக ... பகவத்ப்ராப்திः" என்று பகவத் ப்ராப்தியளவிலே நின்றார்கள்; அவர்களிற்காட்டில் (ச) "மயர்வறமதிநலமருளினன்" என்று பகவத் ப்ரஸாத லப்தமான ஜ்ஞாநத்தையுடையரான விவர்களுக்குவாசியிதுவாயிற்று.

இனி, அடிமைசெய்யுமிடந்தன்னில் "ஶரீரஸம்பந்தமற்று பரமபதப்ராப்திபண்ணினால் பின்புசெய்கிறோம்" என்றவ்வளவு மாறியிருக்கும்படியன்றே உபகாரஸ்ம்ருதி இவரைநலிகிறபடி. ஆகையாலே, ஸ்ரீவால்மீகிபகவான் பாடின ஸ்ரீராமாயணங்கேட்கைக்குத் திருவயோத்யையிலே திருத்தம்பிமாரும் தாமுங்கூடப் பெருமாள் பேரோலக்கமிருந்தாப்போலே, ஸர்வேஶ்வரனும், நாம்பாடின திருவாய்

(க) சாந்தோ-அ-கஉ (உ) ங-ங-க
(ங) வி-பு-ஹ-டு-க (ச) க-க-க-

மொழி கேட்கைக்காகத் திருவாறன் விளையிலே, பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மேலே நாய்ச்சிமாரோடே கூட வெழுந்தருளி யிருந்தான். அங்கேபோய்த் திருவாய்மொழி கேட்பித்து அடிமைசெய்வோமென்று மநோரதிக்கிறாராய், அம்மநோரதந்தன்னிலும், ஸர்வேஶ்வரன் ப்ராப்யனானால் அர்ச்சிராதிகதியோடு தேஶவிஶேஷத்தோடு வாசியற ப்ராப்யாந்தர்க்கதமிறே.

அதாவது-முன்பு அப்ராப்தமாய் பின்பு உபாஸநத்துக்குப்பலமாய் வருவனயாவையில, அவையெல்லாம் ப்ராப்யாந்தர்க்கதமாகக் கடவதிறே; இப்படியே, திருவாறன்விளையிலே யெழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலேபோ யடிமைசெய்யக்கடவோம். அதுதானும்வேண்டா, அத்தேஶப்ராப்திதானேயமையும்; அதுதானும்வேண்டா, இங்கேயிருந்தே அங்கேறப்போவதாக மநோரதிக்கிற வம்மநோரதந்தானே யமையும். இனி, நாம் அத்தேஶத்தை "ப்ராப்யம்" என்று புத்திபண்ணிப்போருகிறவோபாதி அவனும் நாமிருந்ததேஶத்தைக்குறித்து வரக்கடவன்; அவ்வளவிலும் நாமவனை யநுவர்த்தித்து விட்டு நாம் அத்தேஶத்திலேபோய்ப் புகக்கடவோம், அத்தேஶமேநமக்கு ப்ராப்யம்; அங்கேபோய்ப்புகவே நம்முடையகைங்கர்ய விரோதிகளடையப்போம். இனி, நான் வேறொன்றிலே இச்சைப்பண்ணிலும், என்னெஞ்சானது அத்தேஶத்துக் கொழிய வேறொரு தேஶத்துக் காளாகமாட்டாது; (க) "ஹாவொநாநந்தூ மஜூ தீ-பாவோநாந்யத்ரகச்சதி" என்கிறபடியே.

ஆக, திருவாறன் விளையிலே புக்கடிமைசெய்யக்கடவ படிகளை மநோரதித்து இனியராகிறார். ஸ்ரீராமாயணத்திற் காட்டிவிதுக்கு வாசி-பாடினாரே கேட்பிக்கையும், பாட்டுண்டாரே கேட்கையுமாயிற்று (உ)"வீ தாயா ஶ்ரி தஂஜ ஹஸ- ஸீதாயாஶ்சரிதம்மஹத்" என்று நிற்கச்செய்தே, கவிபாட்டுண்டவனை யொழியத்தனியே யிருந்திறே கேட்டது. பாடினான் ஸ்ரீவால்மீகிபகவான், கேட்பித்தாரும் குஶலவர்களிறே.

---

ஶ-உத்தர-ச௦-அடு (உ) ஶ-பா-

## முதற்பாட்டு.

இன்பம்பயக்க எழில்மலர்மாதரும்தானும் இவ்வேழுலகை *
இன்பம்பயக்க இனிதுடன்வீற்றிருந்து ஆள்கின்றஎங்கள்பிரான் *
அன்புற்றமர்ந்துறைகின்ற அணிபொழில்சூழ்திருவாறன்விளை *
அன்புற்றமர்ந்துவலஞ்செய்து கைதொழுநாள்களுமாகுங்கொலோ?

ப — முதற்பாட்டில், ஶேஷியானவன் லக்ஷ்மியோடே பரிபூர்ணனாயெழுந்தருளியிருக்கிற திருவாறன்விளையை யநுபவித்தடிமை செய்யுங்காலமுமாமோவென்கிறார்.

(இ-ள்.) எழில் - ஸௌந்தர்யாதி குணோபேதையாய், மலர்மாதரும்- பத்மவாஸிநீத்வத்தாலேவந்த போக்யதையையுடைய லக்ஷ்மியும், தானும் - அவர்கள் தான்விரும்பி மேல்விழும்படியான வைலக்ஷண்யத்தையுடைய தானும், இன்பம் - பாஸ்பராநந்தவ்ருத்தி, பயக்க - உண்டாம்படியாக, இனிதுடன் - போகஸாரஸ்யத்தோடேகூட. வீற்றிருந்து - ஸர்வஶேஷித்வ வ்யாவ்ருத்தி தோன்றும்படி யிருந்து, இவ்வேழுலகை - வ்யக்தாவ்யக்த காலஶுத்த ஸத்வாத்மக சதுர்விதாசேதநவர்க்கமும், பத்தமுக்த நித்யரூபமான த்ரிவிதசேதநவர்க்கமுமாகிற ஏழுவகைப்பட்ட விந்தலோகங்களை, இன்பம்பயக்க - ஆநந்தகந்தளிதமாம்படி, ஆள்கின்ற - அடிமைகொள்ளாநிற்குமவனாய், எங்கள்பிரான்- அப்படி யெங்களையும் வாசிக கைங்கர்யங்கொண்ட மஹோபகாரகனானவன், அன்புற்று - அடிமைகொள்ளுகைக் கேகாந்தஸ்த்தல மென்றுவிரும்பி, அமர்ந்து - அல்லாத பரவ்யூஹாதிஸ்த்தலத்திற்காட்டில் பொருத்தமுடையனாய், உறைகின்ற - நிரந்தரவாஸம்பண்ணுகிற, அணி - தர்ஶநீயமான, பொழில் - பொழில், சூழ் - சூழ்ந்த, திருவாறன்விளை- திருவாறன்விளையை, அன்புற்று- அடிமைசெய்கைக்கு ஆஸந்நஸ்த்தலமென்று ஸ்நேஹித்து, அமர்ந்து - ப்ரயோஜநாந்தரங்களைக்கொண்டு அகலப்போகத் தேடாதே பொருந்தி, வலஞ்செய்து - ஸ்வரூபாநுரூபமான வநுகூலவ்ருத்தியைப்பண்ணி, ஹ்ருஷ்டராய், கைதொழும் - * பத்தாஞ்ஜலிபுடராய் நாம் அநுபவிக்கும், நாள்களும் - நாள்கள், ஆகுங்கொல் - உண்டாமோ.

(க)

ஆறு ;—பரஸ்பரஸாஹித்யத்தாலே தங்களுக்கின்பமுண்டாம்படியாகவும், * அயர்வறுமமரர்களுக் கினிதாம்படியாகவும், பிராட்டியோடேகூடத் திருமாமணிமண்டபத்திலே வீற்றிருந்தருளி, இவ்வேழுலகையின்பம்பயக்கவாள்கின்ற வெங்கள்பிரான் அன்புற்றமர்ந்

துறைகின்ற வணிபொழில் சூழ்திருவாறன்விளை அன்புற்றமர்ந்து வலஞ்செய்து கைதொழுநாள்களு மாகவற்றேயோவென்கிறார். (க)

ஈடு ; அவ ;—முதற்பாட்டு. திருவாறன்விளையிலேபுக்கு ஹ்ருஷ்டராய்க்கொண்டு அடிமைசெய்யுங் காலமாகவற்றே யென்று மநோரதிக்கிறார்.

(இன்பம்பயக்க) (க) "ஆநந்தமய:- ஆநந்தமய:" என்கிற வஸ்துவுக்கும், நித்யது:க்கியான ஸம்ஸாரிசேதநனுக்குத் தன்னோட்டைச் சேர்த்தியாலே ஆநந்தமுண்டாமாபோலேயாயிற்று, பிராட்டியோட்டைச்சேர்த்தியாலே அவன்றனக்கு மாநந்தமுண்டாம்படியும். (உ) " அல்லிமலர்மகள் போகமயக்குக்களாகியும் நிற்குமம்மான்" என்று பிராட்டியோட்டைச் சேர்த்தியாலே பிச்சேறியிருக்குமாயிற்று.

(ங) [ராம:-ராம:] ஸ்ரீபரசுராமாழ்வானைச் செருக்குவாட்டிப் படைவீட்டிலே வந்து புகுந்து சக்ரவர்த்தியையும் மஹர்ஷிகளையுமநுவர்த்தித்து தர்மோத்தரமாக நடத்திப்போந்தவர். [தந்து] பித்ருஶுஶ்ரூஷணாதிகளைப் பண்ணினபின்பு பிராட்டியோட்டை ரஸதாரையிலே யிழிந்தபின்பு, "இதுக்கு முன்பெல்லாம் வாத்ஸ்யாயநம்கற்றுக் காமதந்த்ரமே நடத்திப்போந்தாரித்தனையோ!" என்னும்படி வேறுபட்டார். முன்பு போருகிறநாளில் 'இவரிதுக்கு முன்பு காமரஸம்புதியதுண்டறியாரோ!" என்னும்படி போந்தவிவர், இப்போது " இதுக்குமுன்பு தர்மதத்த்வம் புதியதுண்டறியாரோ!" என்னும்படி வேறுபட்டார். [ஸீதயாஸார்த்தம்-ஸீதயாஸார்த்தம்] அயோநிஜையாய் பரமபதத்தில் தானுமவனுமாயிருந்து கலந்தபோதைச் செவ்வியிலொன்றுங் குறையாமலிருந்தவளிறே பிராட்டி; இப்படியிருக்கச்செய்தேயும் தம்மையழியமாறி இதரஸஜாதீயராய்வந் தவதரித்தாரேயாகிலும், போகத்தில்வந்தால் அவளுங் கூட அப்ராதாயைாம்படி அதில் தலைநின்றார். அதுக்கடி யென்னென்னில்; ராஜபுத்ரரான ரஸிகத்வத்தால்வந்த வேற்றத்தாலே. [விஜஹார-விஜஹார] பாரிப்பேயொழிய போகத்திலிழியப்பெற்றிலர். உபக்ரமத்துக்கே பணிபோந்த தித்தனை. உபோத்காதத்துக்குக் காலம்போன்ற தித்தனை. [பஹூந்ருதுக ணாந்-பஹூந்ருதுக ணாந்] (ச)

(க) தை-ஆந-டு (உ) ந-கo-அ

(ங) ரா-பா-எஎ-உ௯ (ச) ரா-ஸு-ஙங-கக-கஅ

"ஸம்ஸாரஅதி தாஹம்-ஸமாத்வாதஸுதத்ராஹம்" என்கிறபடியே பன்னிரண்டாண்டொருபடிப்பட அநுபவிக்கச்செய்தேயும். ருதுஸப்தத்தாலே சொல்லுகிறுனயிற்று - அவ்வவகாலங்களுக்கடைத்த புஷ்பாத்யுபகரணங்களைக்கொண்டு காலாவயவங்கள்தோறு மநுபவித்துப் போந்தமைதோற்ற. ஸீதகாலத்துக் கடைத்தவைகொண்டு பரிமாறியும், உஷ்ணகாலத்துக் கடைத்தவைகொண்டு பரிமாறியு மநுபவித்தமைதோற்றச் சொல்லுகிறது. [மநஸ்வீ-மநஸ்வீ] ப்ரணயதாரையில் வந்தால், அவள்பாரித்தபாரிப்புக்கெல்லாம் ஆனைக்குக் குதிரைவைக்கைக்கீடான நெஞ்சிலகலமுடையவராயிற்று. [தத்கத:-தத்கத:] த்ரவ்யம் த்ரவ்யத்தோடு சேர்ந்தாப்போலன்றிக்கே, ஜாதிகுணங்கள் த்ரவ்யத்தோடு சேருமாபோலேசேர்ந்தார் (க) "அநந்யாராகவேணாஹம் - அநந்யாராகவேணஹம்" என்றும், (உ) "அநந்யா ஹிமயாஸீதா - அநந்யாஹிமயாஸீதா" என்றுமிறே யிருவர்வார்த்தையும். [தஸ்யா நித்யம்ஹ்ருதி ஸமர்ப்பித:- தஸ்யா நித்யம்ஹ்ருதிஸமர்ப்பித:] இதி விழிவதற்குமுன்பு இவரையறிந்திருக்குமவளாகையாலே; "அப்படிப் பெரியவர் இப்போது என்பக்கலிலே தாழநிற்பதே!, இப்படி யிதொருநீர்மையே!" என்றெப்போது மிவ்வநுஸந்தாநமே யாத்ரையாகையாலே, வேறொன்றும் நெஞ்சிற்படாதே அவள் தன்னைத் தம்பக்கலிலே பொகடும்படியானுர். "தத்கத: தத்கத:" என்கையாலே-இவர் தம்மை அவள் பக்கலிலே யோக்கிவைத்தபடி சொல்லுகிறது. 'நித்யம்ஹ்ருதிஸமர்ப்பித:-நித்யம்ஹ்ருதிஸமர்ப்பித:" என்கையாலே-அவள் தன்னை இவர்பக்கலிலேயோக்கிவைத்தபடி சொல்லுகிறது. இப்படி யிருவருமான சேர்த்தியிலே யிதுக்குமுன்பு ஆநந்தம் புதியதுண்டறியாதா ளொருவனுக்கு ஆநந்தமுண்டாமாபோலேயாயிற்று க்ஷணந்தோறுமாநந்தமுண்டாம்படி. ( எழில்மலர்மாதரும் ) ( ங ) "ராகவோர்ஹதி வைதேஹீம் - ராகவோர்ஹதிவைதேஹீம்" என்னுமாபோலே யாயிற்று இத்தலை. (தானும்) (ச) "யஸ்யஸீதாபவேத்பார்யா - யஸ்யஸீதாபவேத்பார்யா" என்றும், (ரு) "யஸ்யஸாஜநகாத்மஜா - யஸ்யஸாஜநகாத்மஜா" என்றும் சொல்லலாம்படியாயிற்று அத்தலை.

(க) ரா-ஸு-உக-கக- (உ) ரா-யு-கஉஉ-கக
(ங) ரா-ஸு கக-ரு (ச) ரா-ஆர-ஙச-கஅ
(ரு) ரா-ஆர-ஙஎ-கஅ

(இவ்வேழுலகையின்பம்பயக்க) (௧) "𑌰𑌾𑌮𑌸𑍍𑌸𑍀𑌤𑌾𑌮𑌨𑍁𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌰𑌾𑌜𑍍𑌯𑌂 𑌪𑍁𑌨𑌰𑌵𑌾𑌪𑍍𑌤𑌵𑌾𑌨𑍍 । 𑌪𑍍𑌰𑌹𑍃𑌷𑍍𑌟𑌮𑍁𑌦𑌿𑌤𑍋 𑌲𑍋𑌕𑌃 - ராமஸ்ஸீதாமநுப்ராப்யராஜ்யம்புநரவாப்தவாந் । ப்ரஹ்ருஷ்டமுதிதோலோக:" என்கிறபடியே, மாதாபிதாக்களிருவரும் சேரவிருந்து பரியப்புக்கால் ப்ரஜைகளுக்கு ஒரு குறைகளும் பிறவாதிறே. ஆக இருவருமானசேர்த்தியாலே தங்களுக்காநந்தமுண்டாக, அச்சேர்த்தியைக் காண்கையாலே லோகத்துக்காநந்தமுண்டாக, அதுதன்னைக் கண்டு, ப்ரஜை பால்குடிக்கக்கண்டுகக்கும் தாயைப்போலே, இவர்களுக்குண்டான ப்ரீதியைக்கண்டு அத்தாலே தாங்களினியராயிருப்பர்களாயிற்று. (இனிதுடன்வீற்றிருந்தாள்கின்ற) தன்ஸந்நிதியாலே லோகமடையத்தளிரும் முறியுமாம்படி யிருக்கிறவன், தான்பெறும்பேறுபெற்றாப்போலே, "திருவாய்மொழிகேட்கைக் கீடாயிருப்பதொரு தேஶம்பெற்றோம்" என்றுவிரும்பி வர்த்திக்கிற தேசமாயிற்று. (எங்கள்பிரான்) * கேசவன்றமருக்குப்பின்பு இவர் தாம் ஏகாகிகளல்லரிறே; என்னை யிடுவித்துத் திருவாய்மொழிபாடுவித்துக்கொண்ட வுபகாரகன்.

(அன்புற்று) "திருவாய்மொழி கேட்கலாயிருப்பதொரு தேஶம்பெறுவோமே" என்று அங்கே ஸ்நேஹத்தைப்பண்ணி. (அமர்ந்து) அத்தேஶவாஸத்துக்கு மேற்பட ஒரு ப்ரயோஜநத்தைக் கணிசியாதேவிரும்பி. (உறைகின்ற) அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே, நித்யவாஸம்பண்ணுகிற. (அணிபொழில்சூழ் திருவாறன்விளை) "ப்ராப்யபூமி" என்று தோற்றும்படியிருப்பதாய், அவன்றனக்கும் விபூதியிலுள்ளார்க்குமிருந்து திருவாய்மொழிகேட்கைக்கீடான பரப்பையுடைத்தாய், தர்ஶநீயமாயிருக்கிற பொழிலாலே சூழப்பட்டதிருவாறன் விளையை. (௨) "𑌤𑍇𑌨 𑌤𑍇𑌨 𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 - தேநதேதமநுவ்ரதா:" என்கிறபடியே, அவனுக்குஉத்தேஶ்யமான விடமும் இவனுக்கு உத்தேஶ்யமாகக் கடவதிறே.

(அன்புற்று) "திருவாய்மொழிகேட்கைக்கீடான தேசம்பெற்றோம்" என்று அவன் அத்தேசத்தில் விருப்பத்தைப் பண்ணினாப்போலே, "திருவாய்மொழி கேட்பிக்கைக்கீடாயிருப்பதொரு

(௧) ரா-பா-௧-௮௯  (௨) ரா-அயோ-௧௭-௧௯

தேஸத்தைப்பெறுவோமே " என்று அத்தேஸத்திலே விருப்பத்தைப்பண்ணி. (அமர்ந்து) அத்தேஸவாஸத்துக்கு அவ்வருகொரு ப்ரயோஜநத்தைக் கணிசியாதே. (வலஞ்செய்து) ப்ரதக்ஷிணாதிகளைப் பண்ணி. (கைதொழுநாள்களுமாகுங்கொலோ) (க) " கஷீணா நீம ஸகாமஹா ராத்ர - அபிதாநீம்ஸகாலஸ்ஸ்யாத்" என்றாரே ஸ்ரீகௌஸலையார். போய்வருகைதவிராராகில் மீண்டுபுகுரும்நாள் இன்றாயிற்றாகிலோ என்றாப்போலே. இம்மநோரதத்துக்கு அடைத்தகாலமேயநுபவத்துக்கடைத்தகாலமாகப் பெற்றோமாகிலோவென்கிறார். (க)

---

## இரண்டாம்பாட்டு.

ஆகுங்கொல்? ஐயமொன்றின்றி அகலிடம்முற்றவும் * ஈரடியே
ஆகும்பரிசுநிமிர்ந்த திருக்குறளப்பன் அமர்ந்துறையும் *
மாகம்திகழ்கொடிமாடங்கள்நீடு மதிள்திருவாறன்விளை *
மாகந்தநீர்கொண்டுதூவி வலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலோ ?

ப.— அநந்தரம், அநந்யார்ஹத்வா பாதகமான த்ரிவிக்ரமாபதாநத்தையுடையவன் வர்த்திக்கிற திருவாறன்விளையை, ஸுகந்தமான ஜலங்களாலே திருநீரிட்டு ப்ரதக்ஷிணாத்யநுவ்ருத்திகள் பண்ணக்கூடுமோ வென்கிறார்.

(இ-ள்.) ஒன்று - ஒரு, ஐயம் - ஸந்தேஹம், இன்றி - அற ஆகுங்கொல் - உண்டாமோ, எதென்னில், அகல் - விஸ்தீர்ணமான, இடம் - லோகங்களை, முற்றவும் - எல்லாம், ஈரடியே - இரண்டடியே, ஆகும்பரிசு - ஆம்படி, நிமிர்ந்த - வளர்ந்தருளின, திருக்குறள் - ஸ்ரீவாமநனை, அப்பன் - மஹோபகாரகன், அமர்ந்து - அவதாரஸ்த்தலமான தேவலோகத்திலுங் காட்டிலமர்ந்து, உறையும் - உறையக்கடவதாய், மா - பெரிய, கம் - ஆகாசத்திலே, திகழ் - விளங்காநிற்கிற, கொடி - கொடிகளையுடைய, மாடங்கள் - மாடங்களையும். நீடு - நெடிய, மதிள் - மதிள்களையுமுடைத்தான, திருவாறன்விளை - திருவாறன்விளையை, மா - விலக்ஷணமான, கந்தம் - கந்தத்தையுடைத்தான, நீர் - நீரை, கொண்டு - கொண்டு, தூவி - தூவி, வலம் - ப்ரதக்ஷிணம், செய்து - பண்ணி, கைதொழ - அஞ்ஜலிபண்ண, கூடுங்கொலோ - கூடுமோ.

" ஆகுங்கொல் " என்கிற நினைவை - மேலேயுபபாதித்தபடியாயிருக்கிறது. ஐயமொன்றின்றியென்று - மேலேகூட்டவுமாம், இது ஸக்யமோவென்கிற வையமின்றி யளந்தானென்னவுமாம். (உ)

---

(க) ரா-அயோ-உ௯-௩௭.

ஆறு;—(ஆகுங்கோல்) ஒருஸந்தேஹமின்றிக்கே அகலிடமுற்றவுமீரடியேயாகும்படி யளந்தருளின ஸ்ரீவாமநனெழுந்தருளியிருக்கிறதிருவாய்மொழி பாடுவிக்கையாகிற மஹோத்ஸவத்துக்காகக்கொடிகட்டி யலங்க்ருதமான திருவாறன் விளையை, சந்தநகர்ப்பூராதி ஸுகந்த த்ரவ்யவாஸிதமாய் ஹிமஸீதளமான நீர்கொண்டு தூவி வலம்செய்து கைதொழக்கூடுமேயோவென்கிறார். (உ)

ஈடு; அவ;— இரண்டாம்பாட்டு. திருவாறன்விளையிலே மிக்க பரிமளத்தையுடைத்தான நீரைக்கொண்டு திருநீர்விட்டு ப்ரதக்ஷிணம்பண்ணிக் கையாலே தொழவுங்கூடவற்றேயென்கிறார்.

(ஆகுங்கோலையமொன்றின்றி) இது அநுபாஷணமாகாநிற்கச் செய்தே, ஆதராதிஸயஸூசகமாயிருக்கிறது. ஒருஸம்ஸயமின்றிக்கே நமக்கிதுகூடவற்றோ. அன்றிக்கே, ஆகுங்கொலென்கிற ஐயமுங்கூடவின்றிக்கே, ஈரடியேயாகும் பரிசுநிமிர்ந்தானென்னவுமாம். எல்லாம்செய்தாலும் "நமக்கிதுகூடுமோ? கூடாதோ?" என்றிருந்தானாயிற்று மௌக்த்யத்தாலே. (அகலிடமுற்றவும்) பரப்பையுடைத்தான பூமியையும் புவர்லோகாதிகளுமெல்லா மிரண்டடியாகும் பரிசுநிமிர்ந்த. இரண்டடியாலே பூமயந்தரிக்ஷாதிகளையளந்தானாயிற்று, ஓரடிக்கு இவனைச் சிறையிட்டு வைக்கநினைத்து. (திருக்குறளப்பன்) ஸ்ரீவாமநனான மஹோபகாரகன். (அமர்ந்துறையும்) இந்த்ரனுக்கு ராஜ்யத்தைவாங்கிக்கொடுத்துத் திருப்பாற்கடலிலேபோய்ச் சாய்கையன்றிக்கே, அவன்வந்துநித்யவாஸம் பண்ணுகிற.

(மாகந்திகழித்யாதி) அவன் திருவடிகளாலளந்த வாகாஸப் பரப்படங்கலும் வ்யாபியாநின்றுள்ள கொடிகளையுடைத்தான மாடங்களையும், ஓங்கி யிருந்துள்ள மதிட்களையுமுடைத்தான திருவாறன்விளையை. (மாகந்தநீரித்யாதி) (க) "ஸிஞ்சந்து வஸுதாம் க்ருத்ஸ்நாம் ஹிமஶீதேந வாரிணா - ஸிஞ்சந்து வஸுதாம் க்ருத்ஸ்நாம் ஹிமஶீதேந வாரிணா" என்று ஸ்ரீநந்திக்ராமந்தொடங்கி ஸ்ரீபரத்வாஜபகவானாஸ்ரமத்தளவும்வர, பனிநீராலேவிடுவித்தான் ஸ்ரீஸத்ருக்நாழ்வானென்றதிறே; அப்படியே, மாகந்தநீர்கொண்டுதூவி அநுகூலவ்ருத்திகளைப் பண்ணிக்கைதொழக் கூடவற்றேயோ. (உ)

---

(க) ரா-யு-கஙு௦-ஞ.

## மூன்றாம்பாட்டு.

கூடுங்கொல் ? வைகலும் கோவிந்தனை மதுசூதனைக்கோளரியை * ஆடும்பறவைமிசைக்கண்டு கைதொழுதன்றி, அவனுறையும் * பாடும்பெரும்புகழ்நான்மறைவேள்வியைந்துஆறங்கம்பன்னினர்வாழ் * நீடுபொழில்திருவாற்றன்விளைதொழ வாய்க்குங்கொல் ? நிச்சலுமே. (௩)

ப.—அநந்தரம், ஆச்ரிதாக்ஷணார்த்தமான வாகாரத்தையுடைய கருடவாஹநனை யநுபவித்து, அவன் வர்த்திக்கிற தேசத்தை நித்யமாகத்தொழ வாய்க்கவற்றோவென்கிறார்.

(இ-ள்.) வைகலும் - என்றும், கூடுங்கொல் - இப்படிக்கூடவற்றோ, கோவிந்தனை - கோரக்ஷணத்துக்கு முடிசூடினவனாய், மதுசூதனை - ரக்ஷ்யவிரோதியான மதுவுக்கு நிரஸகனாய்; கோளரியை - அத்யுஜ்ஜ்வலதேஜோரூபஸிம்ஹம்போலே விரோதிகளுக்கு அநபிபவநீயனானவனை, ஆடு - தர்ஸநீயகதியான, பறவை - பெரியதிருவடி, மிசை - மேலே, கண்டு - கண்டு, கைதொழுது - அஞ்ஜலிபண்ணி யநுபவித்து. அன்றி - அவ்வளவன்றியே, அவன் - அவன், உறையும் - வர்த்திக்குமிடமாய், பாடும் - உச்ரிதஸ்வரமாம்படிபாடப்படுகிற, பெரு - பெரிய, புகழ் - பகவத்குணப்ரதையையுடைத்தான, நான்மறை - ருக்யஜுஸ்ஸாமாதர்வண ஸ்வரூபமான நாலுவேதங்களையும், ஐந்துவேள்வி - தேவபித்ருபூதமநுஷ்ய ப்ரஹ்மயஜ்ஞரூபமான பஞ்சமஹாயஜ்ஞங்களையும், அங்கம் - சீக்ஷைநிருக்தம் வ்யாகரணம் சந்தோவிசிதி கல்பஸூத்ரம் ஜ்யோதிஸ்ஸாஸ்த்ரமென்கிற அங்கங்கள். ஆறு-ஆறையும், பன்னினர் - பரக்க நிரூபித்துப்போருகிறவர்கள், வாழ் - பகவதநுபவத்தோடே வாழ்வதாய். நீடு-பெரிய, பொழில் - பொழிலையுடைத்தான, திருவாறன்விளை - திருவாறன்விளையை, தொழ - தொழ, நிச்சலும் - நித்யமாக, வாய்க்குங்கொல் - வாய்க்கவற்றோ. (௩)

ஆறு;—(கூடுங்கோல்) ஸௌஸீல்யவாத்ஸல்யாதி கல்யாணகுணவிசிஷ்டனான வெம்பெருமான் பெரியதிருவடிமேலே யெழுந்தருளியிருக்கும்படியைக்கண்டு கைதொழுகையன்றியே, அவனுக்குங்கூட ப்ராப்யமாய், ஸாங்க ஸகலவேத விதக்ரேஸராய், தத்தபரமபுருஷாராதநரூப பஞ்சமஹாயஜ்ஞாநுஷ்டாந ஸீலராயி

ருந்த திவ்யஜநங்கள் வாழ்கிற திருவாறன்விளையை நிச்சலும் தொழக்கூடுமேயோ வென்கிறார். (௩)

ஈடு; அவ ;—மூன்றாம்பாட்டு. திருவாறன்விளையி லெம்பெருமான் பெரியதிருவடிமேலே யேறியெழுந்தருளக்கண்டாலும், அவனைத்தவிர்ந்து திருவாறன்விளையைத்தொழக்கூடவற்றே! யென்கிறார்.

(கூடுங்கொல்வைகலும்) இதுவுமநுபாஷணமாய், நாள்தோறும் நமக்கிது கூடவற்றேயோ. (கோவிந்தனித்யாதி) அங்கு நிற்கிறவனைக்கண்டால் மூன்றுபடி தொடைகொள்ளலாயிருக்கும். ஆஸ்ரிதவாத்ஸல்யமும், ஆஸ்ரிதவிரோதிநிரஸந ஸீலதையும், அநாஸ்ரிதர்க்கு அநபிபவநீயனென்னுமிடமு மிவை. (கோளரி) (க) " ஜ்வலந்தம் " என்கிறபடியே.

(ஆடுபறவைமிசைக்கண்டு) வெற்றிப்புள்ளின் மேலேகண்டு. ஆடு-வெற்றி. அன்றிக்கே, " ஸர்வேஸ்வரன்வாஹநம் " என்கிற ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே, மதுபாநமத்தரைப்போலே களித்தாடாநின்றுள்ள பெரியதிருவடி திருத்தோளிலே கண்டென்றுமாம். நாம் திருவாறன்விளையை "ப்ராப்யம்" என்று போகிறவோபாதி, அவனும் திருநகரியை " உத்தேஸ்யமாம் " என்று வாராநிற்குமிறே. (கண்டு) நடுவழியிலேகண்டால். (கைதொழுது) காரியங்கொண்டிலோமேயாகிலும், கிட்டினால் கைதொழுகைக்கு ப்ராப்தியுண்டிறே; ஆகையாலே, முறைதப்பாம லநுவர்த்தித்து (அன்றி) அவனைவிட்டு. (அவனூறையும்) அவனிராத்தங்குமூரிலேபோய்ப் புகக்கடவோம். ஸர்வேஸ்வரன் ப்ராப்யனாகாநிற்கச்செய்தே, ஒரு தேசவிசேஷத்திலேபோ யநுபவிப்பதாக வொருநியதி யுண்டிறே.

(பாடும்பெரும்புகழ்நான்மறை) அவனுடைய கல்யாணகுணங்களைப்பாடாநின்றுள்ள நாலுவகைப்பட்ட வேதங்கள். (வேள்வியைந்து) பஞ்சமஹாயஜ்ஞங்கள். (ஆறங்கம்) அங்கங்களாறும். இவற்றைப்பன்னினவர்கள் - எல்லாக்கரைகண்டிருக்குமவர்கள். (உ) "போதயந்த: பரஸ்பரம்" என்னும்படி. அவ்வூரிலுள்ளாரோடேபோய்க்கூடவேணும். (வாழ்) வேததாத்பர்ய

(க) ந்ருஸிம்ஹமந்த்ர. (உ) கீ-௧௦-௯

பூதனைக் கண்ணாலேகண்டநுபவித்து வாழாநின்றுள்ள. (நீடுபொழி ல்திருவாறன்விளைதொழ) ஓக்கத்தையுடைத்தான பொழிலையுடை யதிருவாறன்விளையைத்தொழ. (வாய்க்குங்கொல்நிச்சலுமே) அங் குத்தை ஸ்ரீவைஷ்ணவர்களோடேகூடிநித்யாநுபவம் பண்ணக்கூட வற்றேயோ. (ங)

---

# நான்காம்பாட்டு.

வாய்க்குங்கொல்? நிச்சலும்எப்பொழுதும் மனத்தீங்குநினைக் கப்பெற * வாய்க்கும்கரும்பும்பெருஞ்செந்நெலும் வயல்சூழ்திருவா றன்விளை* வாய்க்கும்பெரும்புகழ்மூவுலகீசன் வடமதுரைப்பிறந்த* வாய்க்கும்மணிநிறக்கண்ணபிரான்தன் மலரடிப்போதுகளே. (ச)

ப.—அநந்தரம், அநுபாவ்யவிக்ரஹ விஶிஷ்டனாய்க்கொண்டு திருவாறன் விளையில் வர்த்திக்கிறவன்திருவடிகளை நெஞ்சாலே நிரந்தரமாக வநுபவிக்கும் படி வாய்க்கவற்றோ வென்கிறார்

(இ-ள்.) வாய்க்கும் - ஸம்ருத்தமாய்வாய்த்துவருகிற, கரும்பும் - கரும் பும், பெரு - பெரும், செந்நெலும் - செந்நெலுமான, வயல் - வயல், சூழ் - சூழ்ந்த, திருவாறன்விளை - திருவாறன்விளையிலே, வாய்க்கும்- ஸந்நிஹிதனானை யாலே, பெரும் - அபிவ்ருத்தமான, புகழ் - புகழையுடையனாய், மூவுலகு- த்ரிவித சேதநாசேதநங்களுக்கும், ஈசன் - ஸ்வாமியாய்வைத்து, ஆஶ்ரிதரக்ஷணார்த் தமாக, வடமதுரை - ஸ்ரீமதுரையிலே, பிறந்த - அவதரித்து, வாய்க்கும் - ஆ ஶ்ரிதர்க்கநுபாவ்யமாம்படி வாய்த்த, மணி - நீலரத்நம்போலே யிருக்கிற, நிற ம் - திருநிறத்தையுடைய, கண்ணன் - க்ருஷ்ணனாகிற, பிரான்றன்-மஹோப காரகனுடைய, மலர் - விகஸிதமான, அடிப்போதுகள் - திருவடித்தாமரை களை, ஈங்கு - இங்கேயிருந்து, மனத்து - மநஸ்ஸிலே, நினைக்க - நினைக்க, அவ னினைவின்படியே, நிச்சலும் - என்றும், எப்பொழுதும்- ஒருக்ஷணமும்மொழி யாமல், பெற - பெறும்படி, வாய்க்குங்கொல் - வாய்க்கவற்றோ. (ச)

ஆறு ;—(வாய்க்குங்கொல்) ஸ்ரீமதுரையிலேவந்து திருவவதா ரம்பண்ணியருளுகையாலே அத்யுஜ்ஜ்வலமான வாத்மகுணங்களை யும் ரூபகுணங்களையுமுடையனாயிருந்த வவனெழுந்தருளியிருந்த திருவாறன்விளையிலே, அவன் திருவடிமலர்களை நெஞ்சாலென்றநு பவிக்கக் கூடுமென்கிறார். (ச)

ஈடு ; அவ ;—நான்காம்பாட்டு. இதில், அங்குப்போ யநுபவிக்கவேண்டா ; இங்கேயிருந்து அங்குத்தைப்பரிமாற்றங்களை மநோரதிக்கும் மநோரதம் நமக்குக்கூடுவதுகாணென்கிறார்.

(வாய்க்குங்கோல்நிச்சலும்) நமக்கிப்பேறு நாள்தோறும்கூடவேணும். (எப்போழுதும்) அது தன்னிலும் நித்யாக்நிஹோத்ரம் போலே யொருகாலவிசேஷத்திலேயாய்ப்போகவொண்ணாது, எல்லாவவஸ்த்தைகளிலுமுண்டாகவேணும். (மனத்தீங்குநினைக்கப்பேற) அங்குப்போயநுபவிக்கவேண்டா, இங்கேயிருந்து நெஞ்சாலே யங்குத்தைப் பரிமாற்றங்களை யநுஸந்திக்கப்பெறவமையும். பெறவென்கையாலே - இம்மநோரதத்துக்கவ்வருகொருபேறில்லையென்றிருக்கிறா ராயிற்றிவர். (க) [...-துர்கதாவபி] உத்க்ரமணதசையிலேவருவதொரு துர்க்கதியுண்டு, அத்தைப்பரிஹரித்துத் தரவேணுமென்று ப்ரார்த்திக்கின்றேனல்லேன் ; * ஐயார் கண்டமடைக்கிலும் நின்கழலெய்யாதேத்தும்படிபண்ணியருளவேணும். [... - த்வத்கதோமேமநோரத:] எனக்கிதுகூடுமென்று தோற்றியிருந்ததோவுனக்கு. [... - யதிநாஸம்நவிந்தேத] இப்படியிருக்கிற விம்மநோரதத்துக் கழிவுவாராதாகில். [... - தாவதாஸ்மிக்ருதீஸதா] காட்டார், மநோரதமென்றும், அநுபவமென்று மிரண்டாகவிறே சொல்லிப்போருவது ; எனக்கிதெல்லாம்வேண்டா, இம்மநோரதமாத்ரத்தாலே க்ருதக்ருத்யன் நான். [... - ஸதா] ஶரீரஸம்பந்தமற்று பரமபதத்திலேபோ யேற்றமாக வநுபவிக்குமதிற்காட்டில், நான் பேறாக நினைத்திருப்பது இத்தையே.

முற்காலத்திலே இடையாற்றுக்குடி நம்பியென்பா ரொருவருண்டு, அவர் திருநாட்கள்தோறும் பெருமாளைவந்து ஸேவித்துப்போனால், மறித்துத் திருநாள்வருந்தனையு மதுதன்னையே போதுபோக்காக ஸ்மரித்துக்கொண்டிருப்பாராயிற்று; ஒருநாளொரு திருநாளில் வ்ருத்தாந்த மநுஸந்தியாநிற்கச்செய்தே, "அமுதுசெய்கைக்குப் போதுவைகிற்று" என்றார்களாய், "ஆகில் வருகிறதிருநாளணித்தாகிறது" என்றாராம். அவர் நூறுவயஸ்ஸும் புகுகையாலே பல

(க) ஜிதஸ்தோ.

ஹாநிபிறந்து திருமூலைத்திருநாளில் பெருமாள் புறப்பட்டருளு கைக்கு உதவவந்து புகுரப்பெற்றிலர், பெருமாளும் தேடியருளிக் காணாமை, "நம்பிடையாற்றுக் குடியான்வந்திலன், நங்கண்ணாலமல்லவோ!" என்று திருவுள்ளமானாராம். அவர்தா மாறுந்திருநாளிலே ஸேவித்திருக்கச்செய்தே, "நாமுனக்குச் செய்யவேண்டுவதென்?" என்று கேட்டருள, "தேவரீர் தந்தருளின ஶரீரத்தைக்கொண்டு போரக்காரியங்கொண்டேன், இனிப்போக்குவரத்துக்கு யோக்யமாகாதபடி போரஜரித்தது" என்ன, "வாராய், மெய்யேயிளைத்தாயாகில் இங்ஙனேயிரு" என்றருளிச்செய்தார்; பெருமாள் நடுவிற்றிருவாசலுக் கவ்வருகேயெழுந்தருளுங்காட்டில் திருநாட்டுக்கெழுந்தருளினார்.

(வாய்க்குமித்யாதி) இட்டதடைய ஸம்ருத்தமான தேசமாயிற்று. வாய்த்தகரும்பும், அதுக்கு நிழல்செய்யும்படியாக வளர்ந்த செந்நெலுமான வயலாலே சூழப்பட்ட திருவாறன்விளையில். (வாய்க்கும்பெரும்புகழ்) இட்டதடைய ஸம்ருத்தமான தேசமாகையாலே, அத்தேஶாபிமாநிக்கும் கல்யாணகுணங்களும் ஸம்ருத்தமாகாநிற்குமாயிற்று. (மூவுலகீசனித்யாதி) ஸர்வலோகேஶ்வரனாயிருந்துவைத்து, * ஸாதுபரித்ராணார்த்தமாக ஸ்ரீமதுரையிலேவந்தவதரித்த. (வாய்க்குமணிநிறக்கண்ணபிரான்றன்) அப்ராக்ருததிவ்ய ஸம்ஸ்தாநத்தையிறே இதரஸஜாதீயமாக்கிற்று; ஆகையாலே, அழகிய நீலமணிபோன்ற திருநிறத்தையுடைய வுபகாரஶீலனான க்ருஷ்ணனுடைய, விகாஸத்தையுடைத்தான திருவடிகளாகிற செவ்விப்பூக்களை-நந்து-மனத்து-நினைக்கப்பெற - வாய்க்குங்கொல் நிச்சலுமெப்பொழுதும். (௪)

---

## ஐந்தாம்பாட்டு.

மலரடிப்போதுகள்என்னெஞ்சத்து எப்பொழுதும்இருத்திவணங்க*
பலரடியார்முன்பருளிய பாம்பணையப்பன்அமர்ந்துறையும் *
மலரின்மணிநெடுமாடங்கள்நீடு மதிள்திருவாறன்விளை *
உலகமலிபுகழ்பாட நம்மேல்வினையொன்றும்நில்லாகெடுமே, (ரு)

ப:—அநந்தரம், ஆஶ்ரிதாநுபவார்த்தமாக வநந்தஶாயியானவன் வர்த்திக்கிற திருவாறன்விளையினுடைய ஸம்ருத்தமான புகழைப்பாட, நம்பாபமொன்றுமொழியாமேபோமென்கிறார்.

(இ-ள்.) மலர் - நிரதிஶயபோக்யமாம்படி விகஸிதமான, அடிப்போதுகள் - திருவடித்தாமரைகளை, என்-என், நெஞ்சத்து - நெஞ்சத்திலே, எப்பொழுதும் - ஸர்வகாலமும், இருத்தி - இருத்தி, வணங்க- அந்தவுகப்பாலே வணங்கும்படியாக, பலர் - ஸூரிகளும், பராஶராதிகளும் பக்தர்களுமான பலவகைப்பட்ட, அடியார் - அடியார், முன்பு - ஸந்நிதியிலே, அருளிய - நிரவதிகக்ருபையைப்பண்ணியருளின, பாம்பணையப்பன் - ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வபாவனுயுள்ள வநந்தஶாயியானவன், அமர்ந்து - புறம்பு ஜகத்வ்யாபாராங்யபரதையற்று, உறையும் - வாஸந்தானே ப்ரயோஜநமாக வர்த்திக்குமிடமாய், மலரில் - புஷ்போபஹாரங்களையுடைத்தான, மணி - மணிமயமான, நெடு - ஓங்கின, மாடங்கள் - மாடங்களையும், நீடு - நெடிய, மதிள் - மதிளையுமுடைத்தான, திருவாறன்விளை - திருவாறன்விளையினுடையதாய், உலகம் - லோகத்திலே, மலி - மிக்க, புகழ் - புகழாய், பாட - உகப்போடேபாட, நம்-நம்மை, மேல் - மேலிட்டு வர்த்திக்கிற, வினை - பாபங்கள், தானே, ஒன்றும் - நம்பக்கலொன்றும், நில்லா - இல்லாதே, கெடும் - புக்கவிடமறியாமற்போம். (ரு)

ஆறு ;— (மலரடிப்போதுகள்) தன்திருவடிமலர்களை யென்னெஞ்சத்தெப்பொழுதுமிருத்தி வணங்கித் திருவாய்மொழிபாடியநுபவிக்கும்படி, திருவநந்தாழ்வான் முதலாகவுள்ள பலரடியார் முன்பருளிய பரமகாருணிக னமர்ந்துறையும் திருவாறன்விளையினுடைய வுலகமலிபுகழ்பாட நம்முடைய க்லேஶமெல்லாம் தீரும்; திருவாறன்விளையைப் பாடுங்கோளென்று ஸ்ரீ வைஷ்ணவர்களைக் குறித்தருளிச்செய்கிறார். (ரு)

ஈடு ; அவ ;—ஐந்தாம்பாட்டு திருவாறன்விளையிலே புக்கடிமைசெய்கைக்கு விரோதியானவையெல்லாம், அவனுடைய மிக்க புகழைப்பாடப் பறந்துபோமென்கிறார்.

(மலரடிப்போதித்யாதி) மலர்ந்திருந்துள்ள திருவடிகளாகிற செவ்விப்பூக்களை யென்னுடைய ஹ்ருதயத்திலே யெப்போதுமிருத்தி, அவ்வநுஸந்தாநம்போய்க்கனக்க அத்தாலே நிர்மமனாய்க்கொண்டு திருவடிகளிலே விழும்படியாக. (பலரடியார்முன்பருளிய) ஸ்ரீவேதவ்யாஸபகவான், ஸ்ரீவால்மீகிபகவான், ஸ்ரீபராஶரபகவான், (௧) "இன்கவிபாடும் பரமகவிகள்" என்று சொல்லப்படுகிற முதலாழ்

---

(௧) எ-௯-௬

வார்களெல்லாரு முண்டாயிருக்க, என்பக்கலிலே விஶேஷகடாக்ஷம் பண்ணுவதே!. (௧) [ஸஹஸ்ரஶொ நரஶ்ஸந்தி ஸஹஸ்ரஶஶ்சகெவ க்ஷி-பஹுமாநேநமஹாஹாநாமங்தமவைக்ஷத] முதலிகளெல்லா ருமிருக்கச்செய்தே திருவடிபக்கலிலே விஶேஷகடாக்ஷம்பண்ணிற் றப்போலே யாயிற்று, பலருமுண்டாயிருக்க விவரை விஷயீகரித்தபடி.

"கிழக்குத்தை ராஜாக்கள் பொல்லாங்காலே இங்கேநலிவுபிறக் கு மளவிற்செய்வதென்?" என்று எம்பெருமானார் அத்தை யநு ஸந்தித்தருளி, "இத்தேசத்தைவிடாதே நோக்கிக்கொண்டுகிடந் தோம், இவ்விடத்துக்கு மழிவுவரும்படி ஆஸாரவர்க்கம் மேலிடா நின்றது, மேல்செய்ய வடுப்பதென்ன?" என்று பெரியநம்பிக்கறிவிக் க; "நான் பெருமாளுடைய திருவெல்லையிலே யொருப்ரதக்ஷிணம் வரும்படியாக வும்முடைய ஶிஷ்யர்களிலே யொருவரைப் போர விடுவது" என்ன, "அதுக்காவாரார்" என்ன, "என்பின்னே போ ராநின்றால் 'ஒருவன்பின்னே போகாநின்றேனென்று தன்னெஞ்சிற் படாதே, சாயைபோலே யென்னைப்பின் செல்வானொருவனுகவே ணும்" என்ன, "அதுக்காவாரார்" என்ன, "ஆழ்வானைப் போகவிட லாகாதோ" என்றாராம். (பலரடியார்முன்பருளிய) பலமுதலிகளு ண்டாயிருக்க, ஆழ்வானை ப்ரஸாதித்தாப்போலே.

(பாம்பணையப்பனமர்ந்துறையும்) பர்யங்கவித்யையிற்சொல்லு கிறபடியே திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வர ன், அப்படுக்கையிற்காட்டிலும் விரும்பி வர்த்திக்கிற தேசமாயிற்று. (மலரில் மணிநெடுமாடங்கள்) தேவர்கள் வர்ஷித்த புஷ்பத்தோடே கூடி, மணிமயமான மாடங்களினுக்கத்தையுடைத்தாய், ஓங்கினம தியையுமுடைத்தான திருவாறன்விளை. (உலகமலிபுகழ்பாட) ஈண் டினவிடத்தில் வெள்ளம்போலே, லோகத்திலடங்காதபடியான வவ னுடைய கல்யாணகுணங்களை ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டுபாட. (நம்மேல்வினையொன்றுநில்லாக்கெடுமே) பாபம்போகைக்காகத் தனித்தோருத்யோகம்பண்ணவேண்டா, பால்குடிக்க நோய்தீருமா போலே நம்முடைய பாபங்கள் தாமே நசித்துப்போம். (௫)

---

(௧) ரா-ஸு-௩௪-௩௦.

# ஆறும்பாட்டு·

ஒன்றுநில்லாகெடும் முற்றவும்தீவினை உள்ளித்தொழுமின் தொண்டர்!* அன்றங்கமர்வென்றுஉருப்பிணிநங்கை அணிநெடுந் தோள்புணர்ந்தான்* என்றுமெப்போதுமென்னெஞ்சம்துதிப்ப உள் ளேயிருக்கின்றபிரான் * நின்றஅணிதிருவாறன்விளையென்னும் நீள் நகரமதுவே. (ஞ)

ப —அநந்தரம், அநிஷ்டமான விரோதியைத் தலையழித்து அபிமதை யானருக்மிணியை ஸம்ஶ்லேஷித்த க்ருஷ்ணன் வர்த்திக்கிற திருவாறன் விளையை யாஶ்ரயிக்க, ஸமஸ்தபாபங்களும் போமென்கிறார்.

(இ-ள்,) அன்று - ஶிஶுபாலன் கைப்பிடிப்பதாகப் படைதிரட்டின வன்று, அங்கு - பின்தொடர்ந்துவந்தவிடத்திலே, ருக்மனை: அமர்- பூசலிலே. வென்று - வென்று, நங்கை - பரிபூர்ணநுபவையான, உருப்பிணி - ருக்மிணி யினுடைய, அணி - அலங்காரலக்ருதமாய், நெடும் - அதிஶயிதபோக்யமான, தோள் - திருத்தோள்களை. புணர்ந்தான் - (க) ,, ஹாராபவெரிஷ்வஜ- பர்த்தாரம்பரிஷஸ்வஜே ’’ என்கிற கணக்கிலே ஸம்ஶ்லேஷித்தவனுய், இவ் வபதாநத்தை, என்றும் - என்றும், எப்போதும் - ஒருக்ஷணமும்மொழியாமல், என் - என், நெஞ்சம் - நெஞ்சமானது, துதிப்ப - அநுபவித்து ஸ்தோத்ரம் பண்ணும்படி, உள்ளே - என்னகவாயிலே, இருக்கின்ற - இருக்கிற, பிரான் - மஹோபகாரகனானவன், நின்ற - எல்லாருங்கண்டநுபவிக்கும்படி நின்றரு ளின, அணி - தர்ஶநீயமான, திருவாறன்விளை - திருவாறன்விளை, என்னும - என்று ப்ரஸித்தமான, நீணகரமது - அந்தமஹாநகரத்தைக், தொண்டர் - அநு பவசாபலமுடைய நீங்கள், உள்ளி - அநுஸந்தித்து, தொழுமின் - தொழும் படியாருங்கோள், தீ - க்ரூரமான, வினை - பாபங்கள், ஒன்றும் - ஒன்றும், நில்லா - ஶேஷியாதபடி நிலைதலைந்து, முற்றவும் - ஸர்வமும், கெடும் - நஶித் துப்போம் (ஞ)

ஆறு;—(ஒன்றுநில்லாக்கெடும்) அன்றங்கமர்வென் றுருப் பிணிநங்கை யணிநெடுந்தோள் புணர்ந்தருளிய திருமணம் புணர்ந் தருளின திருவழகை யென்றுமென்னெஞ்சம் துதிப்ப வென்னெஞ் சுள்ளே புகுந்திருக்கிறபிரான் நின்ற வணிதிருவாறன்விளையென் னும் நீணகரமதுவே, உள்ளித்தொழுமின்தொண்டர், உங்கள் ஸம ஸ்தது:க்கங்களும் போமென்கிறார். (ஞ)

(க) ரா-ஆர-௩௦-௪௦.

ஈடு ; அவ ;—ஆறும்பாட்டு. எம்பெருமான் பக்கல் சாபல மூடையார் உங்களுடைய ஸமஸ்த துக்கங்களும் போம்படி திருவா றன்விளையை நெஞ்சாலே நினையுங்கோளென்கிறார்.

(ஒன்றுநில்லாக்கெடும்முற்றவுந்தீவினை) இவன்றான் போக்கப் பார்க்குமன்றிறே, புதுப்புடவை யழுக்குக் கழற்றுமாபோலே சிறி துகிடக்கச் சிறிதுபோவது; அங்ஙனன்றிக்கே, ஸர்வசக்தியான வன் போக்குமன்று வாஸனையோடேபோமிறே. (க) [மேரு-மந்த ரமாத்ரோபி - மேருமந்தரமாத்ரோபி] மேருவையும், அதின் மேலே மந்தரத்தையும் வைத்தாப்போலே யிருக்கிற கனத்த பாப ங்கள் ; ஸ்தமாக, பிஷக்கைக்கிட்டின துர்வ்யாதிநசிக்குமாபோ லே, (உ) *மருத்துவனாய்நின்ற மாமணிவண்ணனைக்கிட்டின பாபங்க ளானவை நசிக்கும். (ந) "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி - ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்றானிறே. (ச) "ஸர்வே பாப்மாந: ப்ரதூயந்தே - ஸர்வேபாப்மாந:ப்ரதூயந்தே" என் றுநின்றதிறே. இதுதேசத்துக்கு முபலக்ஷணம்.

(உள்ளித்தொழுமின்தொண்டீர்) அதனையநுஸந்தித்து ஆச்ர யிக்கப்பாருங்கோள், பகவத்விஷயத்தில் சாபலமுடையார். (அன் றித்யாதி) அபேக்ஷித்தவர்களுடைய வபேக்ஷித ஸமயத்திலேவந்து தோற்றுமவனாயிற்று. (அன்று) சிசுபாலன் ஸ்வயம்வரத்திலே முடுகியிருக்கிறவன்று. (அங்கு) இவன் த்வரியாநின்றான், உடைய வன்வந்து கைக்கொள்ளானோவென்றிருக்கிறவளவிலே, தூணிலே தோற்றினாப்போலே தோற்றினானாயிற்று. (அமர்வென்று) அவ ளுக்காக மார்விலேயப்பேற்று. (உருப்பிணிநங்கை) எல்லாம்பட வேண்டும்படி ஆத்மகுணங்களாலே பூர்ணையாயிருக்கும்படி. (அணி யித்யாதி) தனக்குத்தானே யாபரணமாய், போக்யதை யளவிறந் துள்ள தோளோடே கலந்தவன்.

(என்றுமித்யாதி) ருக்மிணிபிராட்டியுடைய கல்யாணகுணமே காணும் இவர்நெஞ்சில்பட்டுக் கிடப்பது. எல்லாக்காலத்திலு மெல் லாவவஸ்தைகளிலும் என்னுடைய ஹ்ருதயமானது ஸ்துதிக்கும் படி யென்னெஞ்சிலேயிருக்கிற வுபகாரகன், (நின்றவித்யாதி) ப்ரகா

---

(க) விஷ்ணுதர்ம. (உ) பெரி-திரு-ரு-ந-எ.
(ந) கீதை-கஅ-கூ-கூ. (ச) சாந்தோ-ரு-உ-ச.

சியாநிற்கச்செய்தேயும் கண்ணுக்கிலக்காகாதபடி யிருக்கையன்றிக்கே. "இவன் நமக்குளன்" என்று அச்சந்திரும்படி கண்ணாலேகண்டநுபவிக்கும்படி நிற்கிற வழகிய திருவாறன்விளையாகிற மஹாநகரத்தை-உள்ளித்தொழுமின்தொண்டீர். தாமடிமைசெய்யமநோரதிக்கிறாராகில், "உள்ளித்தொழுமின்" என்கிற பரோபதேசத்துக்குக் கருத்தென்னென்னில்; இவர்க்கு ஸ்வாநுபவந்தான் பரோபதேசத்தை யொழிந்திராது, நெஞ்சை ஸம்போதித்தத்தோடு தொண்டரென்றத்தோடு வாசியில்லை. (சு)

---

## ஏழாம்பாட்டு.

நீணகரமதுவேமலர்ச்சோலைகள்சூழ் திருவாறன்விளை * [கோன் *
நீணகரத்துறைகின்றபிரான் நெடுமால்கண்ணன்விண்ணவர்
வாணபுரம்புக்குமுக்கட்பிரானைத் தொலையவெம்போர்கள்செய்து *
வாணனைஆயிரந்தோள்துணித்தான்சரணன்றி மற்றொன்றிலமே.

ப.— அநந்தரம், அநிருத்தனுக்கு ப்ரதிபந்தகனானபாணனை, அஸஹாயனும்படி பொருதழித்து. அவன் பாஹுவநத்தைச்சேதித்த க்ருஷ்ணனே ப்ராப்த்யுபாய பூதனென்கிறார்.

(இ-ள்.) நீணகரம் - அயோத்யை, அபராஜிதையென்று ப்ரஸித்தமான மஹாநகரம், அதுவே - அர்ச்சாவதாரஸ்தலமான வதுவேயாம்படி, மலர் - மலரையுடைத்தான, சோலைகள் - சோலைகள், சூழ் - சூழ்ந்த, திருவாறன்விளை - திருவாறன்விளையாகிற, நீணகரத்து - மஹாநகரத்திலே, உறைகின்ற - நித்யவாஸம்பண்ணுகிற, பிரான் - மஹோபகாரகனாய், நெடுமால் - ஆஸ்ரிதவ்யாமுக்தனாய்க்கொண்டு, கண்ணன் - க்ருஷ்ணனாயவதரித்த, விண்ணவர்கோன் - நித்யஸூரிஸேவ்யனாய், வாணபுரம் -அநிருத்தன் நிருத்தனான பாணபுரத்திலே, புக்கு - சென்று, முக்கட்பிரானை - ஸக்திஸூசகமான த்ரிணேத்ரத்வத்தையும் ஈஸ்வரத்வாபிமாநத்தையுமுடையருத்ரனை, தொலைய- 'ஆஸ்ரிதரக்ஷணம்பண்ணினது அமையும்" என்று உபாதனும்படியாக, வெம் - ப்ரதாபோத்தரமான, போர்கள் - பூசல்களை, செய்து - பண்ணி, வாணனை-பாணனுடைய, ஆயிரந்தோள் - ஆயிரந்தோள்களையும், துணித்தான்- துணித்தவன், சரண் - தேசப்ராப்திக்கு உபாயபூதன், அன்றி - அவனையொழிய, மற்று - வேறு, ஒன்று - ஒருபாயத்தை, இலம் - உடையோமல்லோம். (எ)

ஆறு;—(நீணகரமதுவே) திருவாறன் விளையென்னும் நீணகரமதுவே பரமப்ராப்யம், அதுபெறுகைக்கு உபாயம் அதிலேநின்றருளினவவன்; அவனுகிறான் * அயர்வறுமமரர்க ளதிபதியாயிருந்து வைத்து ஆஶ்ரித வாத்ஸல்யமஹோததியாகையாலே, ஸ்ரீ மதுரையிலே ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாகவந்து திருவவதாரம்பண்ணியருளின ஆஶ்ரிதவிரோதி நிரஸநைகபோகனான க்ருஷ்ணன், அவனல்லது உபாயமில்லை; அவனைச் சரணம் புகுந்தோமென்கிறார். (எ)

ஈடு; அவ;—ஏழாம்பாட்டு. திருவாறன்விளையே ப்ராப்யமென்னுகின்றீர், அவனன்றோ ப்ராப்யனென்ன; அன்றென்னவல்லேனோ; என் ஸித்தாந்தமிருக்கும்படி கேட்கலாகாதோ வென்கிறார். உபாஸநபலமாய் வருமவையடைய ப்ராப்யாந்தர்க்கதமாகக்கடவது; ஸாத்யவிவ்ருத்திக்குடலாய் வருமவையெல்லாம் பலத்துக்குடலாகக்கடவது' ஆகையாலே, ப்ராப்யபூமி அத்தேசமே; அங்கேகொடுபோய்ச்சேர்க்கும் கடகன் அவன்; இது என் ஸித்தாந்த மிருக்கும்படி யென்கிறார்.

(நீணகரமதுவே) * கலங்காப்பெருநகரமாய், புக்கார்க்கு (௧) "ந ச புநராவர்த்ததே" என்கிறபடியே ஒருநாளும் மீட்சியில்லாதபடி நித்யாநுபவம்பண்ணும் ப்ராப்யதேசம் அதுவே. (மலரித்யாதி) "அவனுக்குங்கூட ப்ராப்யபூமி" என்று தோற்றும்படி யிருக்குமாயிற்று. நித்யவஸந்தமானபொழிலாலே சூழப்பட்ட திருவாறன் விளையாகிற மஹாநகரத்திலேவந்து வர்த்திக்கிறவுபகாரகன்.

(நேமோலித்யாதி) * அயர்வறுமமரர்க ளதிபதியாயிருந்து வைத்து, ஸம்ஸாரத்தில் தன்பக்கல் ருசியுடையரானவர்கள் பக்கல் வ்யாமோஹத்தாலே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, ஒருகடலில் நின்று மொருகடலிலே யெடுத்துவிட்டு, ஈஶ்வராபிமாநியாய் "இவன்காரியத்துக்கெல்லாம் நானேகடவன்" என்றிருக்கிறவனுடைய வபிமாநமெல்லாந்தொலைந்து, "நாணினியொருதேவதையாய்,ஒருவன்காரியத்துக்கபிமாநித்திரேன்" என்னும்படி க்ரூரமான யுத்தங்களைப்பண்ணி (௨) "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ — க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ." "ஆனைக்குந்தனக்குத்தக்கவாதம்" என்னுமாபோலே, தே

(௧) சாந்தோ அ ௧௫. (௨) வி-பு-௫ ௩௩-௪௪.

வதைகளுக்கு நம்பிறகாட்டிலறிவுகேடு விஞ்சியிருக்கும். ஒருவில்லை முறித்தபோதாக (க) "ஈயிகஂஒெஜநிரொவிஷூ-ஷு-அதிகம்மேநிரே விஷ்ணும்" என்பர்களாயிற்று தேவஜாதியாக.

(வாணனையாயிரந்தோள்துணித்தான்) "உஷைபித்ருஹீநை யாகவெண்ணுது" என்றுபார்த்து, உயிரிருக்கத்தோளைக் கழித்து விட்டானாயிற்று. (சரண்) அவன் கடகன், திருவாறன்விளையே ப்ராப்யம். ப்ராப்யனானவன்வந்து ஸந்நிதிபண்ணினதேசமாகையாலே, அவனோட்டை ஸம்பந்தத்தாலே அத்தேசமும் ப்ராப்யமென்கைக் குத்தட்டில்லை. ஒருஸர்வாதிகன் உபாயமாய் பலப்ரதனுகவேணுமே; ஆகையாலே, அவனுபாயம், அத்தேசம்ப்ராப்யம். (அன்றிமற்றென் றிலமே) இங்ஙனல்லது ப்ராப்யப்ராபகங்கள் மாறுடக்கடவோமல் லோம். (எ)

---

## எட்டாம்பாட்டு.

அன்றிமற்றென்றிலம்நின்சரணேயென்று அகலிரும்பொய்கை யின்வாய் * நின்றுதன்நீள்கழலேத்திய ஆனையின்நெஞ்சிடர்தீர்த்த பிரான் * சென்றங்கினிதுறைகின்ற செழும்பொழில்சூழ்திருவாறன் விளை * ஒன்றிவலஞ்செய்யஒன்றுமோ ? ¹தீவினைஉள்ளத்தின்சார் வல்லவே. (அ)

ப.—அநந்தரம், ஆஶ்ரிதருடைய ஆர்த்தது:கநிவர்த்தகன் வர்த்திக்கிற திருவாறன் விளையையாஶ்ரயிக்க, நெஞ்சிலொருபாபமும் நடையாடாதென் கிறார்.

(இ-ள்.) நின் - உன், சரண் - திருவடிகளை, அன்றி - ஒழிய, மற்று - மற்று, ஒன்று - ஒன்றையும், இலம் — உடையோமல்லோம். என்று - என்று, அகல் - விஸ்தீர்ணமாய், இரும் - அகாதமான, பொய்கையின்வாய் - பொய் கையிடத்திலே, நின்று - முதலையின்கையிலே யகப்பட்டுநின்று, தன், நீள் - ஆபந்நரிருந்த விடத்தளவும்வரும், கழல்-திருவடிகளை, ஏத்திய-(உ)"நாராயணு" என்று ஸம்பந்த பூர்வகமாகவேத்தின, ஆனையின் - ஆனையினுடைய, நெஞ்சி டர் - "செவ்விமாறுமல் பூவைச்சாத்தப் பெற்றிலோம்" என்கிற நெஞ்சு து:கத்தை, தீர்த்த - தீர்த்த, பிரான் - மஹோபகாரகன், சென்று - ஆஶ்ரிதர்

(க) ரா-பா எடு-கக. (உ) சிறியதிரு-ஙஉ.

க்கு உதவுகைக்காகச்சென்று, அங்கு, இனிது - இனிமையோடே, உறை கின்ற - வர்த்திக்கிறவிடமாய், செழு - நிரதிஶயபோக்யமான, பொழில் - பொழில், சூழ் - சூழ்ந்த, திருவாறன்விளை - திருவாறன்விளையை, ஒன்றி - கிட்டி, வலஞ்செய்ய - வலஞ்செய்ய, ஒன்றுமோ - கூடுமோ. கூடுமாகில், தீ - க்ரூரமான, வினை - பாபங்கள், உள்ளத்தின் - உள்ளத்தின், சார்வு - பொருத்தத்தை, அல்லவே - உடையவல்லவாம்.

ஒன்றிவலஞ்செய்ய - தீவினை - ஒன்றும் - உள்ளத்தின் சார்வல்லவென்று உக்தி ப்ரகாரமாகவுமாம் (அ)

ஆறு ;—(அன்றிமற்றொன்றிலம்) ஶரணம்புக்கால் நம்மபேக்ஷிதம் செய்தருளுமோவென்னில் ; (க) "பாரோவபராவஸ - பரமாபதமாபந்நுய் ஶரணாகதனை ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய வாபத்தை யெல்லாம்போக்கி அவனை ரக்ஷித்தருளின ஶரணாகதவத்ஸலனல்லனோ திருவாறன்விளையிலே யிருக்கிறான்; அவன்நம்முடைய வபேக்ஷிதம் செய்தருளும் ; ஆதலால், உங்களுடைய ஸமஸ்ததுஃக்கங்களும் போம்படி திருவாறன்விளையிலேபோ யநுபவியுங்கோ ளென்கிறார். (அ)

ஈடு; அவ;—எட்டாம்பாட்டு. திருவாறன்விளையிலேபுக, நம்முடைய ஸகலதுஃகங்களும் போமென்கிறார்.

(அன்றிமற்றொன்றிலம் நின்சரணேயென்று) நின்சரணே-அன்றிமற்றொன்றிலம்-என்று. உன் திருவடிகளையல்லது வேறொரு பற்றுடையேனல்லேனென்று. புறம்பே சிலர் ரக்ஷகராக ப்ரமித்திருக்கு மதுவுந்தவிர்ந்து, (உ)"ஶஜகுகஷ-கெதீரெ ஹா ஹகுகஷ-கெதஜரெ-சஜ ஆகர்ஷதே தீரே க்ராஹ ஆகர்ஷதேஜலே" என்கையாலே தான் ரக்ஷகமாக நினைத்திருக்குமதுவுந்தவிர்ந்து, (க) "ஜநவா ஷிஜயக-மநஸாசிந்தயத்" என்கையாலே கூப்பீடும் கார்யகரமாமெல்லையுங்கழிந்தது. அவனைப்பார்த்தால் தானுமல்லாதாரோபாதி புறம்பாய்க்கடக்க நிற்கும்படியாயிறே ப்ராப்தியிருக்கும்படி. ஆகைச்சுட்டியிறே ப்ரணவத்தில் மத்யமபதங்கிடக்கச் செய்தேயிறே திருமந்த்ரத்தில் மத்யமபதம் ஜீவிக்கிறதும்.

---

(க) விஷ்ணுதர்ம. (உ) வி-தர்-௬௮.

(அகலிரும்பொய்கையின்வாய்) அகலத்தையு மாழத்தையுஞ் சொல்லவேண்டுமளவிலே, அகலத்தைச்சொல்லி யிருமையைச் சொல்லுகையாலே-அது ஆழத்தைச் சொல்லிற்றாகக்கடவது. இப்போது அகலமுமாழமுஞ்சொல்லுகிறதுக்குக் கருத்தென்னென்னில்; அவனுபாயமாய் ரக்ஷித்தல், இல்லையாகில் முடிதல்செய்யுமித்தனை போக்கி, தான் வேறொரு கரைகாணமாட்டானாகாதே. (அகலிரும் பொய்கையின் வாய்நின்று) பபஸ்த்தாநத்திலே பயநிவ்ருத்தியுள்ள விடத்திற்போலே நிற்கும்படியாயிற்றுச் செயல்மாட்சி. முதலை நீரிலேயிழுக்க, ஆனை கரையிலேயிழுக்க, இரண்டினுடைய வ்யாபாரமுமாய்ச் செல்லுகை தவிர்ந்து ஒன்றினுடைய வ்யாபாரமேயாய் நிற்கை.

(தண்ணீள்கழல்) எதிர்த்தலையில் செயல்மாட்சியே யெல்லையாக வளரும் திருவடிகள். முதலைவாயிலே யகப்பட்டு நிற்கச்செய்தேயும் அவனை யநுஸந்தித்தால் அச்சங்கெட்டிருக்கலாம்படி யாகாதேதானிருப்பது. (௧) "ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி - ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந்நபிபேதி" என்னக்கடவதிறே [௬-௩-தஸு ௩-குதம்சக] ப்ராமாதிகத்துக்கன்றிக்கே புத்திபூர்வகமாகப் பண்ணினதுக்கு மஞ்சவேண்டாதபடியாயிருக்கும். (௨) "செய்தாரேல் நன்றுசெய்தார்" என்றால், இவனெதுக்கஞ்ச புத்திபூர்வத்துக்கு அஞ்சவேண்டாவிட்டால், ப்ராமாதிகத்துக் கஞ்சவேண்டாமென்னுமிடம் கிம்புநஃ இறே. ப்ராமாதிகத்துக்கஞ்சவேண்டாமை பக்தியோகத்துக்குமுண்டிறே. (எத்திய) முட்பாய்ந்தால் "அம்மே!" என்பாரைப்போலே, வாஸநையாலே சொன்ன வித்தனை.

(ஆனையின்நெஞ்சிடர்தீர்த்தபிரான்) துதிக்கை முழுத்தினவிடமிறே, நீண்டகை குறுகுமளவுமிறே பார்த்துநின்றது, இவன் கைவிட்டால் கைக்கொள்ளாநின்றானித்தனையிறே. (ஆனையின்நெஞ்சிடர் தீர்த்தபிரான்) "இப்பூவிற் செவ்வி மாறுவதற்குமுன்னே திருவடிகளிலே சாத்தப்பெறுகிறிலோம்!" என்கிறவிடரைப் போக்கினானாயிற்று. அன்றிக்கே, "நாமடியாக ஸர்வேஶ்வரனுக் கவத்யம்வருகிறதோ?" என்னுமிடராதல். அதாவது - "'இவனிப்படி க்லேஶிக்க அவன் ரக்ஷித்தபடி யழகியதாயிருந்தது, இவனையோநாமிப்படி 'ரக்ஷ

(௧) தை-ஆந. (௨) பெரியாழ்வார்திரு-ச-௯௨.

கன்' என்று நினைத்திருந்தது ' என்று நாட்டார் இவனை யிப்படி நினைக்கிறசெய்வதென்'' என்று இடர்பட்டது.

(க) ''இரண்டெட்போ யிரண்டின்வீடு'' என்கிறபடியே - இரண்டுக்கு மிடர்வாராதபடி கரையிலேகொண்டேறி, பின்னை முதலைவாயைக் கிழித்து ஆனையினிடரை நீக்கினுயிற்று. இதுக்கு பட்டரருளிச்செய்யும்படி - '' ராஜபுத்ரனைச் சிறையிலேயிட்டுவைத்தால், சைக்கூட்டனுக்கும் பாலுஞ்சோறுமிடுவாரைப்போலேகாண் '' என்றும். இரண்டும் மோக்ஷத்தைபெற்றதே !; முதலை ஶாபமோக்ஷமும், ஸ்ரீகஜேந்த்ராழ்வான் ஸாக்ஷாந்மோக்ஷமும் பெற்றார்களிறே. (பிரான்) ஆனையிடர்போக்கினவிதுவும், அதுக்கன்றித் தமக்குபகரித்தானுக நினைத்திருக்கிறூர்காணுமிவர். இப்பாவவ்ருத்தியை யுடையவனுகையிறே யொருவன் வைஷ்ணவனுகையாவது. அநுகூலரிலே யொருவனுக்கொரு நன்மையுண்டானுல் அது தன்னதாகநினைத்திருக்கையும், அநர்த்தம்வந்தால் அது தனக்குவந்ததாக நினைத்திருக்கையுமாகிற விவ்விரண்டு முண்டானுலிறே வைஷ்ணவத்வ முண்டாயிற்றுவது.

(சென்றங்கினிதுறைகின்ற) இவனுதவாதவன்று அவ்வானைக்குள்ள விடரோபாதியும் போருமாயிற்று, அத்தேசத்தை ப்ராபியாதபோது ஸர்வேஶ்வரனுக்குண்டான விடரும். அவன்வந்து தன்னுதரமெல்லாந் தோற்றும்படி வர்த்திக்கிற, அழகிய பொழிலாலே சூழப்பட்ட திருவாறன் விளையைக்கிட்டி ப்ரதக்ஷிணநிகளைப்பண்ண. (ஒன்றுமோ) கிட்டுமோ. (தீவினையுள்ளத்தின்சார்வல்லவே) அப்போது தீவினை யுள்ளத்தின் சார்வாகாது. தேஜஸ்திமிரங்களுக்கு ஸஹாவஸ்தாநமுண்டோ, அவன்வந்து ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணத் தீவினை யொதுங்க விடமுண்டோ. (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

தீவினை உள்ளத்தின் சார்வல்லவாகித் தெளிவிசும்பேறலுற்றால் * நாவினுள்ளும்உள்ளத்துள்ளும் அமைந்ததொழிலினுள்ளும் நவின்று * யாவரும்வந்துவணங்கும்பொழில் திருவாறன்விளையதனை * மேவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொல் ? என்னும் என்சிந்தனையே. (கூ)

(க) ச-திருவ-கஉ.

ப—அநந்தரம், பாபநிவ்ருத்தி பிறந்து ப்ராப்யதேஶம் ஸித்திக்குமாகிலும், ஸர்வாநுபாவ்யமான திருவாறன்விளையை ப்ராபித்தநுபவிக்க வமையுமென்றுநின்றது என்னெஞ்சென்கிறார்.

(இ-ள்.) தீ - க்ரூரமான, வினை - பாபங்கள், உள்ளத்தின் - நெஞ்சில், சார்வல்லவாகி - சேர்த்தியற்று, தெளி- ஸ்வரூபப்ரகாசம் பிறக்கும்படி தெளிவையுடைத்தான, விசும்பு - பரமவ்யோமத்திலே, ஏறல் - ஏறுதல், உற்றால் - வந்துகிட்டிலும், என் - என், சிந்தனை - நெஞ்சானது, நாவினுள்ளுமுள்ளத்துள்ளும் - வாங்மநஸங்களிலும், அமைந்த - அதுக்கீடாகச்சமைந்த, தொழிலினுள்ளும் - ப்ரவ்ருத்தியிலும், நவின்று - சேர்த்தியையுடையராய்க்கொண்டு, யாவரும் - எல்லாவிபூதியிலுள்ளாரும், வந்து - வந்து, வணங்கும் - வணங்கும்படியாய், பொழில் - போக்யதாப்ரகாஶகமான பொழிலையுடைத்தான, திருவாறன்விளை - திருவாறன் விளையாகிற, அதனை - அத்தேஶந்தன்னையே, மேவி-கிட்டி, வலஞ்செய்து - அநுகூலவ்ருத்தி பண்ணுகையாலே, கைதொழ - தொழ, கூடுங்கொல் - கூடுமோ, என்னும் - என்றுநினையாநின்றது. (க)

ஆறு ;—(தீவினை) திருவாறன்விளையோ ப்ராப்யம், திருநாடன்றோவென்னில் ; நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகராய்த் தெளிவிசும்பேறலுற்றால் ; திருவாறன்விளையைக்கண்டால் திருநாட்டைவிட்டு இத்தையே ப்ராப்யமாகக்கொண்டு, ஸர்வகரணங்களாலு மநுபவிப்பார் - திருநாட்டிலுள்ளார்க்கு மிதுவே ப்ராப்யம், என்னெஞ்சும் திருவாறன்விளையைமேவி வலஞ்செய்து கைதொழக்கூடுமேயோவென்று மநோரதியாநிற்கும், அதுவே ப்ராப்யமென்கிறார். (க)

ஈடு; அவ;—ஒன்பதாம்பாட்டு. எனக்கு ஸ்ரீவைகுண்டமும் திருவாறன்விளையுமிரண்டும் கிடைப்பதானால், ஸ்ரீவைகுண்டத்தை விட்டு “திருவாறன்விளையே யமையும்” என்னுமென்னெஞ்சமென்கிறார்.

(தீவினையித்யாதி) “ ‘திருவாறன்விளையே ப்ராப்யம்’ என்று இங்கிருந்தநாளுண்டான ஸங்கோசத்தாலே சொல்லுகிறீர், ஸங்கோசங்கழிந்தவாறே பரமபதத்திலே தோள்மாறுகிறீர்” என்ன, அதுவேண்டா, ஸங்கோசங்கழிந்தால் நானிருக்கும்படியைக் கேட்கலாகாதோ வென்கிறார் (தீவினையுள்ளத்தின் சார்வல்லவாகி) பண்டுபண்ணின வவித்யாகர்மவாஸநா ருசிகளானவை, ப்ரத்யக்வஸ்து

வை ஸ்பர்ஶியாவாய்க்கொண்டு. (தெளிவிசும்பேறலுற்றால்) திரு நாட்டேறப்போக வுத்யோகித்தால்.

(நாவினுள்ளுமித்யாதி) எத்தனையேனு மதிஶயிதஜ்ஞாநரான திருநாட்டிலுள்ளாரும் வந்து மநோவாக்காயங்களாலே பயின்று ஆஶ்ரயிக்கும்படி. நிரதிஶயபோக்யமான திருவாறன்விளையை. (மேவியித்யாதி) அத்தேஶத்தை நான்சென்று ப்ராபித்து அநுகூல வ்ருத்திகளைப்பண்ணி. (கைதொழக்கூடுங்கொலென்னுமென் சிந்தனையே) என்னெஞ்சு எனக்கு விதேயமல்ல; (க) “ ஊாவொ நாநீஶ்ருஷணீ - பாவோநாந்யத்ரகச்சதி” என்கிறபடியே. (க)

---

## பத்தாம்பாட்டு.

சிந்தைமற்றொன்றின்திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும் *
சிந்தையினால்செய்வதானறியாதன மாயங்கள்ஒன்றுமில்லை * [கும்
சிந்தையினால்சொல்லினால்செய்கையால் நிலத்தேவர்குழுவணங்
சிந்தைமகிழ்திருவாறன்விளையுறை தீர்த்தனுக்குஅற்றபின்னே. கo

ப.—அநந்தரம், திருவாறன்விளையிலே வர்த்திக்கிற தன்பக்கலிலே வ்யவஸிதமானபின்பு நெஞ்சு ; வேறொன்றிற்போகாதென்னுமிடம் அவன்றானே யறியுமென்கிறார்.

(இ-ள்.) சிந்தையினால் சொல்லினால் செய்கையால் - மநோவாக்காயங்களாலே, நிலத்தேவர் - நிலத்தேவரானபாகவதருடைய, குழு - ஸங்கமானது, அநுபவிக்க, வணங்கும் - வணங்கும்படியாய், சிந்தை- போக்தாக்கள்நெஞ்சை, மகிழ் - மகிழ்விக்கும், திருவாறன்விளை - திருவாறன்விளையிலே, உறை - வர்த்திக்கிற, தீர்த்தனுக்கு - பரமபாவநபூதனுக்கு, அற்றபின் - அநந்யார்ஹஶேஷமாம்படி யறுதியுடைத்தானபின்பு, சிந்தை - நெஞ்சு, மற்றொன்றின் - வேறொன்றை, திறத்ததல்லா - உத்தேஶ்யமாகநினைத்திராத, தன்மை - ஸ்வபாவத்தை, தேவன் - ஸூரிஸேவ்யனை, பிரான் - ஸர்வஜ்ஞன்றானே, அறியும் - அறியும், சிந்தையினால் — சிந்தையினால், செய்வ - செய்யப்பட்டு, மாயங்கள் - மறைந்ததொழில்களானவை, தான் - அவன்றான், அறியாதன - அறியாதன, ஒன்றும் - ஒன்றும், இல்லை - இல்லை. (கo)

---

(க) ரா-உத்தா-சo-கஙு.

ஆறு ;—(சிந்தை) "திருநாடுப்ராப்யம்" என்னும் ப்ரஸித்தியாலே உம்மைத்திருநாடேறக்கொண்டெழுந்தருளிற் செய்வதென்னென்னில்;

திருவாறன்விளையே ப்ராப்யமென்றிருக்கைக்கு விரோதியான பாபத்தைப்போக்கி என்னைத்திருவாறன்விளையே ப்ராப்யமென்றிருக்கப்பண்ணினபின்பு, "திருவாறன்விளை" என்றால் என்னெஞ்சு தாழ்ந்துகிடக்கும்படி யறியானோ, ஸர்வஜ்ஞனல்லனோவென்கிறார். (கo)

ஈடு ; அவ ;—பத்தாம்பாட்டு. இதுதானோருக்திமாத்ரமாய் உம்முடைய நெஞ்சு பரமபதத்தை விரும்பிற்றிலோவென்ன ; அத்தை, என்னினைவுக்கு வாய்த்தலையிலேயிருக்கிற ஸர்வேச்வரனைக் கேட்டுக்கொள்வது" என்றிங்ஙனே யருளிச்செய்வர் ஜீயர். அன்றிக்கே, பிள்ளான், நீர் "திருவாறன்விளையேப்ராப்யம்" என்றிருக்கிறீர், ஈச்வரன் ஸ்வதந்த்ரனன்றோ? அவன் பரமபதத்தைத்தரிலோவென்ன ; "அவன் ஸர்வஜ்ஞனன்றோ, அறியானோவென்கிறார்" என்று; "புருஷார்த்தப்ரதனன்றோ, புருஷனர்த்தித்தத்தையன்றோ கொடுப்பது"

(சிந்தைமற்றொன்றின்திறத்ததல்லாத்தன்மை தேவபிரானறியும்) நெஞ்சானது பரமபதப்ரஸங்கமும் நினையாதது ஸர்வேச்வரனறியும். தன்மை—ஸ்வபாவம். மற்றொன்கிறது - பரமபதத்தின் பேர் சொல்லுகையுங்கூட வஸஹ்யமானபடி. உம்மைக்கேட்க ஸர்வேச்வரனை ஸாக்ஷியாகச்சொன்னதுக்குக் கருத்தென்னென்ன (சிந்தையினலித்யாதி) அவன் நினைத்தால் இவனநந்தரம் நினைக்க வேண்டும்படியிருக்க, அவனறியாத துண்டோ. (க) * உள்ளுவாருள்ளத்தெல்லா முடனிருந்தறியுமவனன்றோ, அவன் நினைப்பிட்டாலன்றோ விவனுக்கு நினைக்கலாவது. நெஞ்சால் செய்யப்படுவனவற்றில் அவனறியாத வஞ்சனங்களொன்றுமில்லை.

(சிந்தையினலித்யாதி) நித்யஸூரிகளோபாதி முமுக்ஷுக்களும் வந்தாச்ரயிக்கும் தேசமாயிற்று. மனோவாக்காயங்கள் மூன்றாலும் பூஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்கள் திரண்டுவந்தாச்ரயிக்கும் தேசமாயிற்று. (சிந்தைமகிழ்திருவாறன்விளை) ஆனேனு

(க) திருமா-௩௪.

மாகப்புக்காரை நிரதிஶயாநந்திகளாகப்பண்ணும் தேஶமாயிற்று. " ப்ராப்யபூமி " என்றுதோற்றும்படியிருக்குமாயிற்று. திருவாறன்விளையிலே வந்து வர்த்திக்கிற ஸர்வேஶ்வரனைக்கேட்டுக்கொள்வது. உமக்கு இத்தெளிவுதான் என்று தொடங்கி வந்ததென்ன (தீர்த்தனுக்கற்றபின்) அவன் தன்னுடைய போக்யதாதிஶயத்தாலே எனக்குப்புறம்புண்டான பற்றைத்தவிர்த்துத் தனக்கேயநந்யார்ஹனாம்படி பண்ணிக்கொண்ட வன்றுதொடங்கி. உஜ்ஜீவிக்கப்பண்ணின வன்றுதொடங்கி. நடுவே யுஜ்ஜீவியாதே கிடந்து போந்ததே அநாதிகாலம். (கo)

---

## பதினோராம்பாட்டு.

தீர்த்தனுக்கற்றபின்மற்றோர்சரணில்லையென்றெண்ணி* தீர்த்தனுக்கே தீர்த்தமனத்தனாகிச் செழுங்குருகூர்ச் சடகோபன் சொன்ன * தீர்த்தங்களாயிரத்துள் இவைபத்தும்வல்லார்களை * தேவர்வைகல் தீர்த்தங்களேயென்று பூசித்துநல்கியுரைப்பர் தம் தேவியர்க்கே. (கக)

ப — அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லவர்களை நித்ய ஸூரிகள் ஶ்லாகிப்பரென்று பலத்தையருளிச்செய்கிறார்.

(இ-ள்.) தீர்த்தனுக்கு - உபாயோபதேஷ்டாவான வவனுக்கு, அற்றபின் - அநந்யார்ஹமானபின்பு, மற்று - வேறு. ஓர் - ஒரு, சரண் - உபாயம், இல்லை - இல்லை, என்று - என்று. எண்ணி - அறுதியிட்டு, தீர்த்தனுக்கே - * ஸர்வபாபவிமோசகனாய், பரமபாவநபூதனானவவனுக்கே, தீர்த்த - அறுதியாக்கப்பட்ட, மனத்தனாகி - நெஞ்சையுடையராய்க்கொண்டு, செழும் - தர்ஶநீயமான, குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், தீர்த்தங்கள் - தனித்தனியேவித்யாஸ்த்தாநங்களான, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியிலும், இவை பத்தும் - இப்பத்தையும், வல்லார்களை - அப்யஸிக்கவல்லவர்களை, தேவர் - நித்யஸூரிகளானவர்கள், வைகல் - ஸர்வகாலமும், தம் - தங்கள், தேவியர்க்கு - மஹிஷிகளுக்கு, பூசித்து - பஹுமாநபூர்வகமாக, நல்கி - ஸ்நேஹித்து, தீர்த்தங்களே - ஸம்ஸாரதோஷநிவர்த்தகரான பவித்ரபூதர், என்று - என்று, உரைப்பர் - சொல்லாநிற்பர்கள்.

இது - அறுசீராசிரியவிருத்தம். (கக)

ஆறு ;— (தீர்த்தனுக்கற்றபின்) திருவாறன்விளையே ப்ராப்யமென்றிருக்கைக்கு விரோதியானவென்னுடைய பாபத்தைப்போக்குகையாலே பவித்ரம் - அதில் நின்றருளினவெம்பெருமான்; அதிலும் பவித்ரம் அவனை ப்ரதிபாதித்த திருவாய்மொழிகள் ; இவை வல்லார் அவற்றிலும் பவித்ரபூதரென்று, இந்த்ராதி தேவர்கள் ஸத்கரித்துக்கொண்டு தங்கள் ப்ரணயிநிகளுக்குச் சொல்லுவரென்கிறார்.

ஈடு;—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றவர்கள் * அயர்வறு மமரர்களுக்கு ஶ்லாகநீயரெனகிறார்.

(தீர்த்தனித்யாதி) இன்னார்க்குத்தீர்த்த னென்னுமையாலே ஸ்வவ்யதிரிக்தர்க்கெல்லாம் தீர்த்தனாயிற்று. தீர்த்தமாவது தான் பரிஶுத்தமுமாய், தன்னை ஸ்பர்சித்தாரும் பரிஶுத்தராம்படி பண்ணுமதாயிற்று. (க) * தீர்த்தனுலகளந்த சேவடியை ப்ராஹ்மாவிளக்க, அந்ததீர்த்தத்தை பாவநார்த்தமாக ஜடாமத்யே தரித்தான் ருத்ரன். (உ) “ ஆறுபொதிசடையோன் ” என்னக்கடவதிறே. கங்காதரனென்றே பேர் அவனுக்கு; அந்தகங்கைக்கடியையாராய்ந்து கொள்ளுகையிறே இனியுள்ளது ; ஆராய்ந்தவாறே அது அடிப்பட்டிருக்குமே ; (ங) * கங்கைபோதரக் கால்நிமிர்த்தருளிய கண்ணனிறே. (தீர்த்தனுக்கற்றபின்) தன்னுடையபோக்யதாதிஶயத்தாலே தன்னையொழிந்த விஷயங்களி லுண்டான ருசியைக் கழித்தவனுக்கற்றபின் என்றுமாம்.

(மற்றோர்சரணில்லையென்றெண்ணி) அவனையொழிய ரக்ஷகரில்லையென்று தெளிந்தாராயிற்று. (தீர்த்தனுக்கேதீர்த்தமனத்தனாகி) பாஹ்ய விஷயங்களில் ருசியைப்போக்கினவனுக்கே யறுதியாகவெழுதிக்கொடுத்த நெஞ்சையுடையராய். (ச) “உனைநினைந்தெள்கல்தந்தவெந்தாய்” என்றாரேகிழ்; (ரு) “மாற்பால்மனஞ்சுழிப்பமங்கையர்தோள்கைவிட்டு ” என்றும், (சு) “ வாஸுதேவ மநோயஸ்ய ஜபஹோமார்ச்சநாதிஷு. தஸ்யாந்தராயோ மைத்ரேய தேவேந்த்ரத்வாதிகம் பலம்” என்றுஞ்சொல்லுகிறபடியே. தன்பக்கலிலே நெஞ்சை வைத்தால் பின்பு புறம்புபோக வொட்டாதே ஸௌந்தர்யம். (எ) “ மனை

(க) உ-அ-சு
(உ) திருவெழுகூ-
(ங) தி-மொ-க-உ-சு
(ச) உ-சு-க-
(ரு) ங-திருவ-கச-
(சு) பார்ஹஸ்பத்யஸ்ம்ருதி-ச
(எ) உ-திருவ-சஉ-

ப்பால்பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம்-துறந்தார் தொழுதாரத்தோள்" என்று-மனைப்பால் பேரின்பத்தில்கைகழியவொட்டாதே.

(செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன) அதுக்கடியான ஜந்மபூமியையுடைய வாழ்வாரருளிச்செய்தது. (தீர்த்தங்களாயிரம்) ஆயிரம்பாட்டும் ஆயிரந்தீர்த்தங்களாயிற்று. இந்தப்பத்தை யப்யஸிக்கவல்லார்களை, தேவருண்டு-திருவடி, திருவநந்தாழ்வான், ஸேநைமுதலியார் தொடக்கமானார், இவர்களை "நாள்தோறும்பவித்ரபூதர்" என்றுதரித்துக்கொண்டுபோந்து, தங்கள் மஹிஷிகளை ஸ்நேஹித்துக் கொண்டாடும் தரையிலே சொல்லுவர்கள். (நல்கியுரைப்பர்தந்தேவியர்க்கு) மஹிஷிகளுந்தாங்களுமாக ஸ்ரீவைகுண்டநாதனுக்கடிமைசெய்து, ப்ரீதிப்ரகர்ஷத்தாலே ஓடமேற்றிக் கூலிகொள்ளுமளவானவாறே, அவர்களுக்கு ஸர்வஸ்வதாநம்பண்ணிக் கனக்கத்தங்கள் ப்ரபாவத்தைச் சொல்லும்படியாகப் பெறுவர். ஓடமேற்றிக் கூலிகொள்ளும் தரையாகிறது-பகவத்விஷயத்தில் கைங்கர்யம்பண்ணும்போது எடுத்துக்கைநீட்டுகையிறே.

சரமஶ்லோகம் ரக்ஷித்துக்கொண்டவளவுபோலே யிருக்குமளவுகளிலே யென்றபடி. (அதாவது-உடையவர், திருக்கோட்டியூர் நம்பி தமக்கத்யத்யந்தரஹஸ்யமாக வுபதேசித்த சரமஶ்லோகத்தைத் தெற்காழ்வார் திருமுன்பேயெடுத்துக்கைநீட்டினவர்களுக்கு அவர்கள்விஷயத்திலே யுகப்பாலே யருளிச்செய்தாரிறே; அத்தைச்சொல்லுகிறது.) (வைகலும்பூசித்து) "அபார்வணிகடல்தீண்டலாகாது" என்றாப்போலே, அதுக்கொருநியதியில்லை யென்கை. வைகல்-காலம். (க) "ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி" என்று தத்விஷயத்தில் இவர் ப்ரார்த்தித்தத்தை, இதுகற்ற ததீயவிஷயத்திலே நித்யஸூரிகளடிமை செய்வர்கள். (கக)

ஏழாம்பத்து முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞாநங்களைவிட

ஆயிரமடங்கதிஶயித்த

பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாநவித்தமராய்

ப்ரபந்நஜநகூடஸ்த்தராய் எழுந்தருளியிருக்கும்

மஹாப்ரபாவரான

நம்மாழ்வாருடைய

பகவதநுபவ பரீவாஹரூபமான, த்ராவிட

வேதஸாகரமாகிய

# திருவாய்மொழி

## எட்டாம்பத்து

இதற்கு

தெள்ளாரும் ஞானத்திருக்குருக்கைப்பிரான் பிள்ளான்

அருளிச்செய்த ஆறாயிரப்படியும்,

அன்போடழகிய மணவாளஜியரருளிச் செய்த

பன்னீராயிரப்படி உரையும்

தெள்ளியதா நம்பிள்ளை செப்புநெறிதன்னை

வள்ளல் வடக்குத்திருவீதிப் பிள்ளை அருளிச்செய்த

ஈடு முப்பத்தாறாயிரப்படியும்,

---

ஸபாபண்டிதரான

ஸ்ரீமான், புதுப்பட்டு-திருவேங்கடாசாரியரால்

பரிசோதிக்கப்பட்டு

---

ஸ்ரீவைஷ்ணவ கிரந்த முத்ராபக சபையாரால்

சென்னை,

ஸ்ரீநிகேதன முத்ராக்ஷர சாலையில்

அச்சிட்டு ப்ரசுரம் செய்யப்பட்டது.

பிரஜோத்பத்தி ளு

---

விலை ரூபா 2—0—0]      1931      [தபால்சார்ஜி வேறு.

146, தங்கசாலைத்தெருவில் ஷை சபையில் கிடைக்கும்,



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருவாய்மொழி

## எட்டாம்பத்து

## முதற்றிருவாய்மொழி

தேவிமார் - ப்ரவேசங்கள்.

ஆறு ;—(தேவிமாராவார்) கீழ்த்திருவாய்மொழியிலே மநோரதித்தபடி பெறுமையாலே அத்யந்தமவஸந்நராய், எம்பெருமானுடைய வாஶ்ரிதவாத்ஸல்யாதிகுணங்களை யதிஶங்கைபண்ணும்படி கலங்கி, "காணுமாறருளாய்" என்று கூப்பிடுகிறார். *

ப.—எட்டாம்பத்தில். இப்படி யேழாம்பத்திலே - உபாயநிவர்த்யமான விரோதி ப்ராபல்யத்தையநுஸந்தித்து, தந்நிவ்ருத்திப்ரகாரத்தை யிப்பத்திலே யநுஸந்திப்பதாக, விரோதிநிவர்த்தகனுடைய வாஶ்ரிதாகாங்க்ஷாதீந ஸாந்நித்யத்தையும் ஸ்வவிஷயத்திலே ஸங்கமுண்டேயாகிலும் இதரஸங்கமற்றார்க்கல்லது ஸுலபனல்லனென்னுமத்தையும், ஸ்வாஶ்ரிதஜநவிஶ்லேஷத்தில் தான் அஸஹாயனென்னும்படியான ப்ரேமஜநகத்வத்தையும், ஆஶ்ரிதவிஷயத்திலத்யந்ததுர்மோசமான விரோதிகளைப்போக்கி அவர்கள் ஸம்பத்தே தன் ஸம்பத்தாயிருக்குமாகாரத்தையும், ப்ராப்யபூதனை தன்பக்கலிலே ப்ராவண்யமுண்டானால் ப்ரதிபந்தகம் தன்னடையே கழலுமென்னுமிடத்தையும், ஆஶ்ரிதவிரோதியைப் போக்குகைக்கு ஆஸந்நமாயிருக்குமிருப்பையும், அந்தஸ்த்திதனாய்க்கொண்டு அஶேஷவிரோதிநிவர்த்தகனும்படியையும், அப்ருதக்ஸித்தமான வாத்மஸ்வரூபத்தியைப்ரகாசிப்பித்து ஔபாதிக தோஷத்தினுடையவதிதூரீகரணத்தையும், அபாஸ்ததோஷனை வதிகாரியை யதிஶயிததாஸ்யாம்ருதத்திலே மக்நனாக்கும்படியையும், ஸ்வதாஸ்யத்திலு மதிகமான ஸ்வகீயதாஸ்ய போகத்தை ப்ரகாசிக்கும்படி தத்விரோதிநிவர்த்தந ப்ரகாரத்தையுமருளிச்செய்து, பூர்வநிரூபிதமான விரோதியினுடைய நிவ்ருத்திக்ரமத்தை யுபபாதித்தருளுகிறார்.

இதில் முதற்றிருவாய்மொழியில், அடிமைசெய்யப்பாரித்த வர்ச்சாவதாரஸ்தலத்திலே ஆஶாநுரூபமான வபிமதம் ஸித்தியாமையாலே ஆர்த்தராய் மிகவும்பகவதநுபவாகாங்க்ஷை நடக்க, அந்தவாகாங்க்ஷைக்கு ஹேதுவான அநவதிகவிபூதிபூர்த்தியையும், அந்தவிபூதிரக்ஷணார்த்தமான வவதாரங்களினுடைய வதி

G

ஶயித்போக்யதையையும், ஆஶ்ரிதபவ்யதாவிஶிஷ்டமான வநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், ஆஶ்ரிதாநாஶ்ரிதவிபாகேந வுண்டான வநுகூலப்ரதிகூலரூபத்தையும் அஶேஷப்ரகாராரக்ஷகத்வத்தையும், அகிலாத்மபாவத்தையும், அசேஷப்ரகாரபோக்யதையையும், ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான க்ஷீரார்ணவஶாயித்வத்தையும், அதிஶயிதபுருஷார்த்தமான ப்ராப்யதேஶவர்த்தித்வத்தையும், ஆஶாநுரூபோபகாரத்தால்வந்த வத்யந்தமஹத்தையையு மநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரவிஶிஷ்டனான ஸர்வேஶ்வரன், தம்முடைய வாகாங்க்ஷாநுரூபமாக முகங்காட்டியாஶ்வஸிப்பித்த ப்ரகாரத்தையருளிச்செய்கிறார்.

ஈடு ;—பிராட்டிமாரோடே நித்யபரிகாரம்ஸேவிக்க, பர்யங்கவித்யையிற்சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மேலே ஸர்வேஶ்வரன், நாம்பாடின திருவாய்மொழிகேட்கைக்காகத் திருவாறன்விளையிலே யெழுந்தருளியிருந்தான்; நாமங்கேபோய்த்திருவாய்மொழி கேட்பித்து அநுகூலவ்ருத்திகளையும்பண்ணி யநுபவிப்போமென்று பாரித்தார் ; அதுமநோரதமாத்ரமாய், நினைத்தபடிதலைக்கட்டப் பெற்றதில்லை. பிராட்டிமாரருகே யெழுந்தருளியிருக்க, நித்யஸூரிகளுண்டாயிருக்க, நினைத்தபடி கார்யஞ்செய்து தலைக்கட்டுகைக்கீடான வைஶ்வர்யம் குறைவற்றிருக்க, ஆஶ்ரித ருகந்தவற்றைத்தனக்குத் திருமேனியாகக்கொண்டு உதவும ஸ்வபாவனுமிருக்க, எனக்குருசியிற் குறைவற்றிருக்க, நினைத்தபரிமாற்றம் பெறுதொழிவோமே என்று வெறுத்தார்.

இவர்தாம் ஸர்வேஶ்வரன்பக்கல் தமக்குத்தஞ்சமாக நினைத்திருப்பது இரண்டு ஸ்வபாவத்தை;—ஆஶ்ரிதபரதந்த்ரனு யிருக்குமிருப்பையும், ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தவஸ்துக்களும் தனக்குப்ரகாரமாகத்தான் ப்ரகாரியாய், இவற்றுக்குவந்த வ்யஸநம் தனக்குவந்ததாக நினைத்திருக்கும் ப்ராப்தியையுமாயிற்று ; அவையிரண்டும் தம்பக்கல் கார்யகரமாகக்கண்டிலர் ; நாமொருவன் தோற்றி ஸர்வேஶ்வரனுக்கு இவையும் பொய்யாகப்புகுகிறதோ என்றதிஶங்கை பண்ணினர். " குணஜ்ஞாநத்தாலே ஜீவிக்குமவர் குணங்களிலே யதிசங்கைபண்ணினல் ஜீவிக்கமாட்டாரே. இவர்தம்மை நாமிழக்கவொண்ணுது, இவரை ஸமாதாநம்பண்ணும் விரகேதோ " என்று பார்த்து, " வாரீர், நீர்கண்டதெல்லாவற்றிலு மதிஶங்கைபண்ணுகிறதென், நாமுமக்கொன்றும் செய்திலோமோ, இவ்வளவாக வுபகரித்தநாம் மேலுள்ளதும் செய்வோமகாணும், நீரிங்ஙனேயதிசங்

கைபண்ணவேண்டா" என்று, தன்னுடைய விஸ்ரம்பணீயத்வ ப்ரமுகமான கல்யாணகுணங்களையும், தானிவ்வளவாகப்பண்ணின வுபகாரங்களையுங்காட்டி, இவருடைய வதிஸங்கையைத்தீர்த்து ஸமாதாநம்பண்ண, ஸமாஹிதராய், அத்தை யநுஸந்தித்தினிய ராகிறார்.

(க) [வ்ராதஜ்ஞாதி-க்யாத இத்யாதி] [ப்ராஜ்ஞ:-ப்ராஜ்ஞ:] தம்மாலே யபிமதம்பெற விருப்பார் அறிவிற்குறையா லிழக்கவேண்டாதபடி தம்மளவையு மவர்களளவையுமறிகைக்கீடான வறிவுடையவர். [க்ருதஜ்ஞஸ்ச- க்ருதஜ்ஞஸ்ச] கிட்டுமவன் தன்பக்கல் வைமுக்யம்பண்ணுமதுதவிர்ந்து ஓரடிவரநின்ற வெல்லையுமறிவர். [ஸாநுக்ரோஸஸ்ச - ஸாநுக்ரோஸஸ்ச] அறிவுகொண்டுகாரியங்கொள்ளவு மறியாதே யிருக்குமவர்களுக்கு, அவர்களிழவை யநுஸந்தித்து "ஐயோ" என்றிரங்குமவராயிருப்பர் [ராகவ:-ராகவ:] இது இவர் தம்மைத்தோற்றிவந்ததல்ல, குடிப்பிறப்பாலே. [ஸத்வ்ருத்த: - ஸத்வ்ருத்த:] பரஸம்ருத்த்யேகப்ரயோஜநராயிருப்பர். [வ்ராத: - க்யாத:] இப்படியெதிரிகள் கோஷ்ட்டியிலும்ப்ரஸித்தர். [நிரநுக்ரோஸஸங்கே - நிரநுக்ரோஸஸங்கே] இக்குணங்களையுடைய பெருமாளை பித்தசையில் எனக்கு முகங்காட்டக்காணாமையாலே, இக்குணங்களொன்றுமில்லாதந்ருஸம்ஸரோபாதியாக ஸங்கியாநின்றேன்; அவர்க்கு இக்குணங்களுண்டாகாதொழியாதிறே. [மத்பாக்யஸங்க்ஷயாத் - மத்பாக்யஸங்க்ஷயாத்] என்னுடைய பாக்யஹாநியாலே யாமித்தனையிறே. "அறிவொன்றுஞ்சங்கிப்பன் வினையேன்" என்கிறாரிறேயிவரும். இத்திருவாய்மொழிக்கு ஆளவந்தாரருளிச்செய்யும் ஸ்லோகமிது.

---

## முதற்பாட்டு.

தேவிமாராவார்திருமகள்பூமி ஏவமற்றமரர்ஆட்செய்வார் * மேவியஉலகம்மூன்றவையாட்சி வேண்டுவேண்டுருவம்நின்னுருவம் * பாவியேன்தன்னைஅடுகின்ற கமலக்கண்ணது ஓர்பவளவாய்மணியே * ஆவியே! அமுதே! அலைகடல்கடைந்த அப்பனே காணுமாறுஅருளாய். (க)

(க) ரா-ஸு-உ.சு-கந.

ப;—முதற்பாட்டில், நிரவதிகவிபூதியுக்தனாய், விஶ்லேஷத்தில் தரியாதபடிபண்ணும் போக்யதையையுடைய வுன்னை நான் காணும்படி யிரங்கவேணுமென்கிறார்.

(இ ள்.) தேவிமார் — உன்னழகுக்கும் பெருமைக்குந் தகுதியானதேவிமார், ஆவார் - ஆவார், திருமகள் - உனக்குநிரதிஶயஸம்பத்ரூபையானலக்ஷ்மியும், பூமி - ஸமஸ்தவிபூத்யபிமாநிநியான பூமியும், மற்று - அதுக்குமேலே பின்னையும், இவர்களோடேகூடவிருக்கிறநீ, ஏவ - (க) "க்ரியதாமிதிமாம்வத" என்கிறபடியே நியோகிக்க, ஆட்செய்வார் - கைங்கர்யம்பண்ணுவார்கள், அமரர் - நித்யஸூரிகள்; மேவிய - உன்னோடேப்ருதக்ஸித்தமாம்படி பொருந்தி, மூன்றவை- ப்ரதாநபுருஷகாலாத்மகமான த்ரைவித்யத்தையுடைய, உலகம் - லோகங்கள், ஆட்சி - ஆஜ்ஞாநுவிதாயிகள்; வேண்டு - அவற்றினுடைய ரக்ஷணார்த்தமாக தத்ததவஸ்த்தோசிதமாயும், வேண்டு - ஸ்வாபிமததமமாயுமிருக்கிற, உருவம் - ரூபங்கள், நின்-உனக்கு, உருவம் - அஸாதாரணரூபங்கள்; இந்த வுபயவிபூதி நிர்வஹணத்தைக்காட்டினவளவன்றியே, பாவியேன்றன்னை - இவ்வாகாரத்தை யநுபவிக்கப்பெறாத பாபத்தையுடையவென்னை, அடுகின்ற - முடிப்பாரைப்போலேநலிகிற, கமலம் - நிரதிஶயபோக்யமான தாமரைபோன்ற, கண்ணது - கண்ணும், ஓர் - அத்விதீயமான, பவளம் - பவளம்போன்ற, வாய் - அதரஶோபையையுமுடைத்தான, மணியே - நீலரத்நம்போலே தர்ஶநீயனாய், ஆவியே - வ்யதிரேகத்தில் தரிக்கவொண்ணாதபடி ப்ராணபூதனாய், அவ்வளவன்றியே, அமுதே - அழிந்தஸத்தையையுண்டாக்கு மநவரதபோக்யமானவம்ருதமாய், அர்வாசீநாம்ருதத்தி லபேக்ஷையுடையார்களுக்கும், அலைகடல்கடைந்த - அருந்தொழில் செய்து கொடுக்கும், அப்பனே - அதிஶயிதோபகாரகனானவனே, அப்படி ஆயாஸிக்கவேண்டாதபடி, காணுமாறு- கண்டநுபவிக்கும்படியாக, அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும். (க)

ஆறு ;—லக்ஷ்மீபூமி நீளாநாயகனாய், * ஶேஷஶேஷாஶந கருடப்ரமுக நாநாவிதாநந்த பரிஜந பரிசாரிகா பரிசரித சரணயுகளனாய், நிகிலபுவந நிர்மாண த்ராண ஸம்ஹாராதிலீலனாய், ஆஶ்ரித பரித்ராணார்த்தமாக விச்சாநுகுண விக்ரஹனாய், ஸ்வஸௌந்தர்யஹ்ருதாஶேஷ மநோநயந கமலதளாயதலோசநனாய், அத்யுஜ்ஜ்வல வித்ருமஸமாநவதநனாய், நீலரத்நஸத்ருஶ திவ்யரூபனாய், எனக்கு தாரக

(க) ரா-ஆர-சுடு-எ.

ணுய், போக்யனுய், ப்ரணதஜநஸம்ரக்ஷித நிர்வர்த்தநைக ஸ்வபாவனு யிருந்த வுன்னைக்காணுமாறருளா யென்கிறார். (க)

ஈடு; அவ;—முதற்பாட்டு. பிரியில் தரிக்கவொண்ணுதபடி நிரதிசயபோக்யனனநீ, உன்னை நான்காணும்படி க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

(தேவிமாரித்யாதி) (க) "நகஸ்ச்சிந்நாபராத்யதி - நகஸ்சிந் நாபராத்யதி" என்பாருமருகேயிருக்க, எனக்கு க்லேசப்படவேண்டுகிறதேறதுவென். (உ) [மித்ரமௌபயிகம் - மித்ரமௌபயிகம்] ராவணன் பிராட்டி திருமுன்பேநின்று சிலவற்றை ஜல்பிக்கப்புக்கவாறே; ப்ரஜைநலிந்தவென்னுத்தாய் சீறுளிறே, ஜநநியானமுறையாலே; அவனர்த்தங்கண்டு ஹிதமருளிச்செய்கிறாள். "அவர்திருவடிகளிலேசரணம்புகு" என்றால், அவன் தாழ்வாகநினைத்து இசையானென்னுமத்தாலே - தோழமைக்கொள்ளென்கிறாள்; அவர் (ந) "மித்ரபாவேந - மித்ரபாவேந" என்பர், இவள் "மித்ரமௌபயிகம் - மித்ரமௌபயிகம்" என்னும். அவ்வருகுபோனுலும் பரமஸாம்யாபத்தியிறேகொடுப்பது. எனக்கு ஶத்ருவாயிருப்பாரோடு உறவுபண்ணவேண்டுகிற தென்னென்னுமே [ஸ்தாநம்பரீப்ஸதா - ஸ்த்தாநம்பரீப்ஸதா] கெடுவாய், வழிபறிப்பார்க்கும் தறையிலே கால்பாவிநின்றுகொள்ளவேணுமே. உன்குடியிருப்பை யாசைப்பட்டாயாகி லித்தனையுஞ்செய்யவேணும். எனக்கொரு குடியிருப்பும் வேணுமோ, ஆகாஶசாரிகளாயன்றோவிருப்பது நாங்களென்று அவனுக்கு நினைவாக [வதஞ்சாநிச்சதா - வதஞ்சாநிச்சதா] அவரம்புகள் ஆகாசத்திலே நடவாதோ. [கோரம் - கோரம்] உன்னைச் சிங்கவிளக்கெரித்துக்கொல்லாதே நற்கொலையாகக்கொல்லும்போதும் அவரைப்பற்றவேணுங்காண். [த்வயா - த்வயா] பல சொல்லியென், உனக்கவர்வேணும். [அஸௌ - அஸௌ] அவர் படியுனக்குத்தோற்றுகிறதில்லையோ. உருவு வெளிப்பாட்டாலே முன்னிலையிவளுக்கு; அச்சத்தாலே முன்னிலையாகத்தோற்றும் அவனுக்கு; திரக்கழிய வபராதம்பண்ணி நிற்கிறவென்னைக்கைக்

(க) ரா-யு-கக௯-சஉ. (உ) ரா-ஸு-உக-கக.

(ந) ரா-யு-கஅ-ந.

கொள்ளுவரோவென்ன [புருஷர்ஷப:-புருஷர்ஷப:] நீசெய்த வற்றை யொன்றாக நினைத்திருப்பாரொருவரல்லர், புருஷோத்தமர் காண்.

(தேவிமாராவார் திருமகள்பூமி) அவர்கள்புருவம் நெளிந்த விடத்தேயுனக்குக் காரியஞ்செய்யவேண்டும்படி வல்லவைகளாயி ருக்கிற பெரியபிராட்டியாரு மாண்டாளாரும்; (க) "நகஸ்சிந்நாபராத்யதி - நகஸ்சிந்நாபராத்யதி" என்று பொறைக்கு உவாத் தாயிருக்குமொருத்தி, "பொறுப்பதெத்தை, குற்றந்தானுண் டோ" என்று அந்தப்பொறைவிளையும் பூமியாயிருக்குமொருத்தி. அவர்களருகேயிருக்க எனக்கிழக்கவேண்டுகிறதென் (ஏவ) கைங்கர் யந்தானுத்தேஸ்யமானவோபாதி ஏவிக்கொள்ளுகையு முத்தேஸ்ய மென்கை; (உ) "க்ரியதாமிதிமாம்வத - க்ரியதாமிதிமாம்வத" மின்னிமுழங்கி வில்லிட்டுவர்ஷிக்கும் மேகத்வநிபோலே, கம்பீரமா யிறே திருமிடற்றோசைதானிருப்பது. (மற்றமரராட்செய்வார்) இச் சேர்த்தியில்கிட்டி நின்றடிமைசெய்வார் நித்யஸூரிகள். மற்றென் பது - துல்யவிகல்பத்தையாயிற்று. திருமுலைத்தடத்திலே யணைந் தால் பிராட்டிமார்க்குண்டான வினிமை இச்சேர்த்தியிலேகைங்கர் யம்பண்ணப்பெறுகையாலே யிவர்களுக்கு முண்டாம்; (ங) "ரமமாணாவநேத்ரய: - ரமமாணாவநேத்ரய:" என்கிறபடியே, ஸ்வ ரூபாநுரூபமாயிறே ஸூரிகளிருப்பது. பெருமாளுக்கும் பிராட்டி க்கு மந்யோந்ய ஸம்ஸ்லேஷத்தால் பிறக்கும்ரஸம், இருவருமான சேர்த்தியைக்காண்கையாலே பிறக்கும் இளையபெருமாளுக்கு. (அம ரராட்செய்வார்) (ச) "வேதம்வல்லார்களைக்கொண்டு" என்கிற படியே அவர்களும் புருஷகாரபூதராயிறே யிருப்பது.

பிராட்டிமாரு மருகேயுண்டாய், "மற்று" என்று அவர்களோ டொக்க விகல்பித்துச்சொல்லலாம்படியான நித்யஸூரிகளுமுண்டா னாலும், ஐஸ்வர்யத்திலே குறையுண்டாகில் கார்யஞ்செய்யவொண் ணாதிறேயென்னில் (மேவியவித்யாதி) கீழும்மேலும் நடுவுமான லோகங்களைச்சொல்லுதல், த்ரிவிதசேதநரையுஞ் சொல்லுதல்.

---

(க) ரா யு-ககக சஅ.

(உ) ரா-ஆர-கடு-எ.

(ங) ரா-பா-க-நக.

(ச) ச-கூ-அ.

(மேவிய) லோகத்துக்கு இவன் ரக்ஷகனென்றால் தகும்படியிருக்கு மென்னுதல்; ராஜ்யந்தான்பொருந்தியிருக்குமென்னுதல், (க) [த்ரைலோக்யமபி நாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம் - த்ரைலோக்யமபிநாதேநயேநஸ்யாந்நாதவத்தரம்] த்ரைலோக்யத்தையும் கையடைப்பாக்கினாலும், ரக்ஷ்யம்சுருங்கி ரக்ஷகத்வப்பாரிப்பேவிஞ்சியிருக்கும். (வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்) அவ்வோரக்ஷணத்துக்கு வேண்டினவேண்டினவென்னுதல், (உ) * இச்சாக்ருஹீத - இச்சாக்ருஹீதமென்னுதல், ஆஸ்ரிதருகந்தவற்றையே தனக்குத் திருமேனியாகக்கொள்ளுமென்னுதல்.

(பாவியேன்றன்னை) புருஷகாரமுமுண்டாய், விபூதியையுமுடையனாய், ஆஸ்ரிதாதீநமான விக்ரஹத்தையு முடையனாயிருக்க, இழக்கைக்கடியான பாபத்தைப்பண்ணினவென்னை. அந்தகார்ஹஸ்த்யத்துக்குப் புறம்பானவேனையென்கிறார். (அடுகின்ற) முடிகின்ற. (ங) * உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக்கண்ணையுடையவனே. (பவளவாய்) (ச) "ஸவிலாஸஸ்மிதாதாரம்பிப்ராணம்முகபங்கஜம் - ஸவிலாஸஸ்மிதாதாரம்பிப்ராணம்முகபங்கஜம்" என்கிற ஸ்மிதத்தையுடையவனே. (மணியே) விடாயர் முகத்தே குளிர்நீர்வெள்ளத்தை வெட்டிவிட்டாப்போலே ப்ரமஹாரமானவடிவையுடையவனே. இவைகிடீரெனக்குபாதகமாகிறது.

(ஆவியே) ஒருவாயுவிசேஷமன்று வர்க்குப்ராணன்; நாய்ச்சிமாரோடும் நித்யஸூரிகளோடுங்கூடிக் கண்ணும்வாயும் வடிவுமாயாயிற்று இவருடைய ஆவியிருப்பது. (அமுதே) தாரகமான ப்ராணனாய், போக்யவஸ்துவைப்புறம்புதேடவேண்டாதே போக்யமும் தானேயாயிருக்கை; போக்யமும் தானானால் ஸாதித்துக்கொள்வாரிவரன்றிக்கே உபாயமும் தானேயாயிருக்கை. (அலைகடல்கடைந்தவப்பனே) ப்ரயோஜநாந்தரபரர்க்கு பரியனசெய்து அபேக்ஷிதங்களைச்செய்யு முபகாரகனே. உமக்குச்செய்யவேண்டுவதென்னென்ன (காணுமாறருளாய்) எனக்குக் கடல்கடையவேண்டா, அவ்வடிவைக் காட்டவமையும்; வடிவைக்காண்கை-ப்ராப்யம், அருள்-ப்ராபகம்.

---

(க) ரா-அயோ-உ-கங.  (உ) வி-பு-ரு-டு-அச.

(ங) தி-மொ-எ-க-கூ.  (ச) வி-பு-ரு-கஎ-உக.

அ திருவாய்மொழி அ-ப, க-ஙி, உ-பா, காணுமாறு வ்யாக்யாநம்.

"ப்ராப்யப்ராபகங்கள் நீயே" என்றிருப்பார்காரியஞ் செய்யலாகாதோ, (க)

---

# இரண்டாம்பாட்டு.

காணுமாறருளாயென்றென்றேகலங்கிக் கண்ணநீரலமர * வினையேன் பேணுமாறெல்லாம்பேணி நின்பெயரே பிதற்றுமாறு அருளெனக்குஅந்தோ! * காணுமாறுஅருளாய்காகுத்தா! கண்ணா! தொண்டனேன்கற்பகக்கனியே! * பேணுவாரமுதே! பெரியதண் புனல்சூழ் பெருநிலமெடுத்தபேராளா! (உ)

ப.—அநந்தரம், "வேண்டுவேண்டுருவம் நின்னுருவம்" என்றுசொன்ன வவதார விக்ரஹபோக்யதையையநுஸந்தித்து நான் க்லேசியாதபடி கண்டநுபவிக்கும்படி க்ருபைபண்ணி யருளவேணுமென்கிறார்.

(இ-ள்.) காணுமாறு - காணும்படி, அருளாய்-க்ருபைபண்ணவேணும், என்றென்று - என்று பலகாலுஞ்சொல்லி, கலங்கி - காணப்பெறாமையாலே கலங்கி, கண்ண - கண்ணினுடைய, நீர் - நீர், அலமர - பரவாநிற்க, வினையேன் - காணப்பெறாத பாபத்தையுடையேனான நான், உன்னை ஆசைப்பட்டும் நீயாதரியாதவளவில், பேணும் - ஆத்மாத்மீயங்களையுமிழந்தும், பலகாலும் சரணம்புக்கும், மோஹித்தும், இப்படி ஆதரிக்கும், ஆறு - ப்ரகாரம், எல்லாம்- எல்லாம், பேணி - ஆதரித்து, அவ்வளவிலுங்கிடையாமையாலே, நின்-உன், பெயரே - திருநாமங்களையே, பிதற்றுமாறு - சொல்லிக்கூப்பிடும்படியாக விறே, எனக்கு - எனக்குப்பண்ணின, அருள் - அருள்; அந்தோ - ஐயோ ஆசாலேசமுடையாருமநவரதமநுபவிக்க, எனக்கிப்படிபலித்தது; ஆனபின்பு, காகுத்தா - ககுஸ்த்த வம்சத்திலே பிறந்து காட்டோடு நாட்டோடு வாசியறக் காட்சிகொடுக்குத்மவனாய், கண்ணா - க்ருஷ்ணனாயவதரித்துப் பெண்பிறந்தா ரெல்லாருங் கண்டநுபவிக்கும்படி யெளியனாய், இவ்வளவன்றியே, தொண்டனேன் - சபலனான வெனக்கு, கற்பகம் - நீதானே யுன்னை ப்ரகாசிதப்பித் தௌதார்யத்தையுடையையாய், கனியே - அப்போதே நுகரவேண்டும்படி பக்வபலபூதனாய், பேணுவார் - ஆசையுடையார்க்கு, அமுதே - ஸத்தாஹேது வான நித்யபோக்யமாய், பெரிய - அபர்யந்தமாய், தண் - சீதளமான, புனல் - ப்ரளயஜலத்திலே, சூழ் - அழுந்தின, பெருநிலம் - மஹாப்ருதிவியை, எடுத்த- எடுத்த, பேராளா-மஹாபுருஷனே, முழுகவும்மீட்கவும்வேண்டா, காணுமாறு- நான்கண்டநுபவிக்கும்படி, அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும். (உ)

ஆறு ;—(காணுமாறருளாய்) இப்படி, காணுமாறருளா யென்றென்றேகலங்கிக் கண்ணநீரலமரவினையேன், இதற்குமே யில்லை யென்னும்படி யாசைப்பட்டாலும், உன்திருநாமங்களையே சொல்லிக் கூப்பிடப்பெறுமித்துவோ வெனக்கருளுமருள். இங்ஙனன்றிக்கே, காணுமாறருளாய். காணவொண்ணுமோவென்னில்; காணவேணுமென்றபேக்ஷித்தார்க்கு, சக்ரவர்த்தி திருமகனும் ஸ்ரீவஸுதேவர் திருமகனும்வந்து திருவவதாரம்பண்ணியன்றோ வுன்னைக் காட்டிக்கொடுத்தருளிற்று; நெஞ்சாலே யநுபவிக்கலாம்படி உன்னை யெனக்கு போக்யமாகத் தந்தருளின பரமோதாரனல்லையோ, மற்றுமாசைப்பட்டாரெல்லார்க்கு முன்னை போக்யமாகக் கொடுக்குமவனல்லையோ, *மஹார்ணவாந்தர் நிமக்நமான ஜகத்தையெடுத்து ரக்ஷித்தருளின பரமகாருணிகனல்லையோ, காணுமாறருளாயென்கிறார்.(உ)

ஈடு ; அவ;—இரண்டாம்பாட்டு. காணவேணுமென்று மிகவும் நோவுபட்டிருக்குமிருப்பையோ என்திறத்துச் செய்தருளப்பார்த்தது ; நானிங்ஙன் படாதே யுன்னைக்காணும்படி க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

(காணுமாறருளாய்) ஒருகால் " காணுமாறருளாய் " என்றால், அப்போதே செய்யக் காணவிட்டால், " நாமே ப்ரவர்த்தித்துப் பெறுகிறோம் " என்றிருக்குமவரன்றே. வர்ஷதாரையாலல்லது தரியாத சாதகம்போலே அவனருளே பார்த்திருக்குமவராகையாலே, திரியட்டும் " காணுமாறருளாய் " என்கிறார். (என்றென்றே) பலகாலும் வார்த்தையிதுவே. " புறம்பேயுமொருபுகலுண்டு " என்றிருக்கிறே அத்தைப்பற்றுவது. (கலங்கி) கலக்கமேயாயிற்று ஏறிவருவது ; (க) "ஜடிலம்சீரவஸநம்-ஜடிலம்சீரவஸநம்" (கண்ணநீரலமர) நிரம்பின வேரிகளுக்குப் பரீவாஹம்போலே. கலங்கின கலக்க முள்ளடங்காமல் கண்ணநீராய் ப்ரவஹியாநிற்கும்.

(வினையேன்) இதுக்கு முன்பு இவ்வஸ்துவைக்காண வாசைப்பட்டாரில் கலங்கிக் கண்ணநீர்பாய்ந்தறிவாரில்லைகிடீர். " காணவேணும் " என்கிற ஆசாலேசமுடையார்க்குத் தன்னைக்காட்டி அவர்கள் கண்ணநீரையுந் துடைக்குமவனை யாசைப்பட்டுக் கிடையாதே, கண்ணுங் கண்ணநீருமாம்படியான பாபத்தைப்பண்ணி

(க) ரா-அயோ-கOO-உக.

னேன். (பேணுமாறெல்லாம்பேணி) பேணுகை - ஆசைப்படுகை; முதலிலே அயோக்யனென்றகன்று, "அவன் விரும்பாத நானு மென்னுடைமையு மெனக்குவேண்டா" என்று ஆற்றாமையாலே மடலெடுக்கையிலேகைவைத்து, பலபடியும் ப்ரபத்திபண்ணி, ப்ரணயரோஷம் தலையெடுத்துக் கிலாய்ப்பதுஞ் செய்தவிடத்திலும். (நின்பெயரே பிதற்றுமாறருளெனக்கு) நீ யெனக்கருளப் பார்த்தபடி நின்பெயரே பிதற்றுமாறாய்விட்டது. உன்னைப்பெறாத வ்யஸநத்தாலே உன்னுடைய திருநாமங்களைச்சொல்லி அக்ரமமாகக் கூப்பிடும்படியோ நீயெனக்குப் பண்ணும் க்ருபை. நீசவிஷயங்களையாசைப்பட்டுக் கூப்பிடுமது தவிர்ந்து நம்பேரைச்சொல்லிக் கூப்பிடும்படி பண்ணினோமாகில் இனி யென்னென்றிருக்கிறாயோ. ஸம்ஸாரிகளில் வ்யாவ்ருத்தியோ எனக்குவேண்டுவது, என்னபிமதம் பெறவேண்டாவோ?

(வினையேன் பேணுமாறெல்லாம்பேணி) பேணுதல் - ஆசைப்படுதல். ஆசைப்படும்வழியெல்லாமாசைப்பட்டு. பலவழியுண்டோ ஆசைப்பாட்டிலென்னில்; உண்டு. வருத்தவிஷயத்திலாசை, அபிமதவிஷயத்திலாசை. இவர்க்கு வருத்தவிஷயம் அபிமதமாயிருக்கும். வருத்தவிஷயத்திலாசை க்ரமமாயிருக்கும், அபிமதவிஷயத்திலாசை வரம்பழிந்திருக்கும். வருத்தவிஷயத்திலாசைக்கு, அவனைக் கால்கட்டக்கிடைக்கும்; அதுவும் செய்தாரிறே, (௧) "நோற்றநோன்பு," (௨) "ஆராவமுது," (௩) "மானேநோக்கு," (௪) "பிறந்தவாறு," (௫) "உலகமுண்ட பெருவாயன்," இவற்றிலே. அபிமதவிஷயத்திலாசைக்கு, அபிமதன்பாடேறத் தூதுவிடுகை தொடக்கமாக மடலெடுக்கை முடிவாகத்துணிகை; அவையுமெல்லாம் செய்தாரிறே, (௬) * அஞ்சிறையமடநாரை தொடக்கமாக, (௭) "மாசறுசோதி," (௮) "வைகல்பூங்கழிவாய்," (௯) "பொன்னுலகாளீர்" இத்யாதிகளிலே. இப்படி பேணுமாறெல்லாம் பேணியும், நின்பெயரே பிதற்றுமாறே நீயெனக்கருளுமரு ளென்கிறார். (அந்தோ) உன்னை நீ பிரிந்தறியாய், பிரிந்தாரைக் கண்டறியாய். நித்யஸூரிகள் பிரிந்தறியார்கள், ஸம்ஸாரிகள் பிரி

(௧) ௫-௭. (௨) ௫-௮. (௩) ௫-௯.
(௪) ௫-௧௦ (௫) ௬-௧௦ (௬) ௧-௪
(௭) ௫-௩. (௮) ௯-௧ (௯) ௯-௮.

வறியார்கள் ; இவ்வாற்றுமை யுடையேன் நானொருவனுமே யாயிற்று.

(காணுமாறருளாய்) திருவாறன்விளையை யணித்தாக்குதல், எனக்கவ்வளவும் கால்நடை தருதல் செய்யும்படி பண்ணாய். இப்படி நீரெங்கே யருளக்கண்டு நிர்ப்பந்திக்கிறீரென்ன (காகுத்தா) (க) "கக-ஹ்ஸ்த்தவம் ஸேவிருகா: ப்ரயாந்தி." (உ) [ரூபஸம்ஹநநம் - ரூபஸம்ஹநநம்] ஸம்ஸ்த்தாநந்தன்னை. [லக்ஷ்மீம்-லக்ஷ்மீம்] ஸமுதாயஸோபையை. [ஸௌகுமார்யம்-ஸௌகுமார்யம்] அநுகூலர்க்கு மடுத்துப்பார்க்கப்பொறு திருக்கை. [ஸுவேஷதாம் - ஸுவேஷதாம்] தாபஸவேஷம். [தத்ருஸுர்விஸ்மிதாகாரா: - தத்ருஸுர்விஸ்மிதாகாரா:] விஸ்மிதாந்த:கரணராய்க்கொண்டு கண்டார்கள். ஆர்தானென்னில் [வநவாஸிந: - வநவாஸிந:] படைவீட்டிலுள்ளார் காணப்பெறுதத்தைச் சருகிலே தின்று தூற்றிலே கிடந்தவர்கள் பெற்றார்கள். அது ஒருகாலமங்ஙனேசெய்து போனேனாகில் அதுகொண்டுவிலக்கிறீரோவென்ன (கண்ணா) ருஷிகளுக்கேயன்றிக்கே, (ங) "தாஸாமாவிரபூத்" என்று இடைச்சிகளுக்கு மிடையர்க்குங்காட்டிற்றிலையோ ? புறம்புதேடிப்போகிறதென். (தொண்டனேன் கற்பகக்கனியே) ஶப்தாதி விஷயங்களிலே யங்யபரனாய், அவற்றிலே சபலனாய்த்திரிகிறவென்னை, அத்தைத் தவிர்த்துஉன்னை ஸர்வஸ்வதாநம் பண்ணினவனே!

(பேணுவாரமுதே) நீயேவந்து மேல்விழாநின்றால் "அல்லோம்" என்னுதார்க்கு நிரதிஶய போக்யனானவனே. (பெரியவித்யாதி) ஆருன்னைப்பேண ப்ராளயங் கொண்ட ஜகத்தையெடுத்து ரக்ஷித்தது. ப்ரளயார்ணவம்சூழ்ந்த மஹாப்ருதிவியை அதினின்று முத்தரித்த பெரியோனே. உன்னை யாசைப்படுதல், ஆபத்தை யறிவித்தல் செய்யமாட்டாத ஜகத்தையன்றோ ரக்ஷித்தது ; நீயறிய வாபத்துண்டாமத்தனையன்றோ ரக்ஷிக்கவேண்டுவது. (பேராளா) ரக்ஷ்யத்தினளவல்லாத ரக்ஷகனுடைய பாரிப்பு. (உ)

---

(க) வி-பு-ச-உ-எஎ- (உ) ரா-ஆர-க-கங- (ங) பாக-கய-ங உ-உ

## மூன்றாம்பாட்டு.

எடுத்தபேராளன்நந்தகோபன்தன் இன்னுயிர்ச்சிறுவனே! * அசோதைக்கு அடுத்தபேரின்பக்குலவிளங்களிறே! அடியனேன் பெரியஅம்மானே! * கடுத்தபோரவுணனுடலிருபிளவாக் கையுகிராண்டஎங்கடலே! * அடுத்ததோருருவாய் இன்றுநீவாராய் எங்ஙனம்தேறுவர்உமரே? (ங)

ப—அநந்தரம், ஆஶ்ரித பவ்யனுய்க்கொண்டு அநிஷ்டத்தை நிவர்த்திப்பிக்கும் நீ என்னவஸ்த்தாநுரூபமாக வாராதவளவில் உன்னைப் பற்றினவர்களெங்ஙனே விஶ்வஸிப்பரென்கிறார்.

(இ ள்.) எடுத்த - தரித்ரன் மஹாநிதியை யெடுத்தாப்போலே யுன்னை யெடுத்துக்கொண்ட, பேராளன் - பெரியவனுன, நந்தகோபன்றன் - நந்தகோபனுக்கு, இன் - நிரதிஶயபோக்யமான, உயிர் - ப்ராணனுய்க்கொண்டு, சிறுவனே - பவ்யனுயத்யந்த ஶைஶவத்தையுடையனுய், தேவகியார்பிரிந்திருக்க, அசோதைக்கு - யசோதைக்கு, அடுத்த - வந்துகிட்டின, பேரின்பம் - (க) "தொல்லையின்பத்திறுதி" என்கிறபடியே நிரதிஶயாநந்தாவஹனுய், குலம்- அக்குலத்துக்கு. இளங்களிறே - ஆனைக்கன்றுபோலே செருக்கனுய் வர்த்திப்பானுய், தாயுந்தமப்பனுமாக நினைத்திராதே, அடியனேன் - அடியேனுன வெனக்கு, பெரிய - உன் பெருமையெல்லாங்காட்டி யெட்டாதிருக்கும், அம்மானே - ஸ்வாமியாய், ப்ரபலமாய், கடுத்தபோர் - யுத்தகண்டூதி விஞ்சியிருக்கிற, அவுணன் - ஹிரண்யாஸுரனுடைய, உடல் - சரீரம், இருபிளவா - இரண்டு பிளப்பாம்படி, கை - கையில், உகிர் - உகிரை, ஆண்ட - பரிகரமாகவுடையையாய் எங்கடலே - இப்படி யாஶ்ரிதவிஷய வாத்ஸல்யத்துக்கு ஜலதியானவனே, நீ, அன்றுபோலே, இன்று - இன்றும், அடுத்தது - அநுரூபமான, ஓர், உருவாய் - வடிவைக்கொண்டு, வாராய் - வருகிறிலை, ஒருவிஷயத்திலுதவாதிருந்தால், உமர் - உன்னைத் தஞ்சமென்றிருப்பார், எங்ஙனம் - எங்ஙனே, தேறுவர் - விஶ்வஸிப்பார்?

ஒன்றோடொன்றடுத்த ரூபமென்று - நாஸிம்ஹரூபமாகவுமாம். (ங)

ஆறு.—(எடுத்த) அயத்நேந நிதியெடுத்தாப்போலே யெடுத்தநுபவிக்கலாம்படி ஸ்ரீநந்தகோபர்க்கும், யசோதைப்பிராட்டிக்கும் பரமஸுலபனுய், ஸ்ரீப்ரஹ்லாத ப்ரதிஜ்ஞாஸமய ஸம்பூதனுய், தத்

(க) பெரு-திருஎ-அ

விரோத்யஸுரநிரஸநோசித ஸ்ரீந்ருஸிம்ஹரூபனாய், நகராங்குர கோடிவிதாரித தத்புஜாந்தரனாய், தத்விதாரணஹேதுபூத நிரவதி காஸ்ரிதவாத்ஸல்ய மஹோததியா யிருந்துவைத்து, ஆஸ்ரிதனான வெனக்கரியையாயின்று நீவருகிறிலை; வாராதொழிந்தால், உன்னுடைய வாஸ்ரித வாத்ஸல்யகுணைக தாரகரான வாஸ்ரிதஜநங்களெங்ஙனே தரிக்கும்படி யென்கிறார். (ரு)

ஈடு ; அவ ;—மூன்றாம்பாட்டு. ஆஸ்ரித ஸுலபனாயிருக்கிற நீயின்றுவந்து என்னுபத்தை நீக்காதொழியில், உன்குணமே ஜீவனமாயிருக்கிற வாஸ்ரிதருன்னை யெங்ஙனே விஸ்வஸிக்கும்படி யென்கிறார்.

(எடுத்தபேராளன்) நிதியெடுத்துக் கொண்டாப்போலே யுன்னை யெடுத்துக்கொண்ட பாக்யாதிகன். இருவருமொக்க நோன்புநோற்க அவர் பெற்று முகத்திலே விழிக்கப்பெறாதே போரவிட்டிருக்க, நிதியெடுத்தாப்போலே யெடுத்து புத்ரமுகங்கண்டவரிறே. முன்பு ரிக்தனாய்ப்போந்தவன் கனக்க ஜீவிக்கப்புக்கவாறே, "இவனெடுப்பெடுத்தான்" என்பர்களிறே. (பேராளன்) பெரியோன். அவன் பெருமையோபாதியும் போருங்கிடீர்! ரென் சிறுமையும். "நீமகனாக வேணும்" என்பார்க்கோ முகங்காட்டலாவது. ஸ்ரீநந்தகோபருடைய நற்சீவன் கண்ணுக்குத்தோற்ற வொருவடிவுகொண்டு திரிகிறவித்தனை.

(அசோதைக்கடுத்த) ஒக்கநோற்கச்செய்தேயும் க்லேசம் மிக்கிருக்குமிறே, உடம்புநொந்து பெற்றவளாகையாலே; இவள் ப்ரஸவ வேதனை யநுபவியாதிருக்கப் பெற்றுக் கொடுநின்றாளித்தனை. கிட்டிக்கொண்டுநிற்கக் கண்டதித்தனை ;(க) "உதயஸ்தஸவித்ருபிம்பாஸா யஸோதாஜாதஸோத்ஜ்வ-ததர்ஸசப்ரபுத்தாஸாயஸோதாஜாதமாத்மஜம்" (பேரின்பம்) நிரதிசயஸுகத்தை விளைத்தவன்.(உ) "தொல்லையின்பத்திறுதிகண்டாளே" என்னும்படி அவளுக்கு நிரதிஸயாநந்தத்தை விளைத்தானாயிற்று. * அந்தமில் பேரின்பத்தை * சிற்றின்பமாக்கினான். (குலவிளங்களிறே.) இடைக்குலத்துக்குஆனைக் கன்றுபோலே ஸ்லாக்யமானவனே. அபிஜாதமாய், பருவத்தாலே ஆகர்ஷகமா யிருப்பதொரு மத்தகஜம்போலே, யசோதைப்பிராட்

(க) வி-பு-ரு-ங-உரு (உ) பெரு-தி-எ-அ

டிக்குப் பிடிகொடாதே திரியும்படி யென்னவுமாம். அகப்பட்டாலு மானைக் கன்றுபோலே யாயிற்றிருப்பது (க) "தறியார்ந்தகருங்க ளிறே போலநின்று" என்கிறபடியே - ஒருகம்பத்தோடே சேர்ந்த களியானைபோலே யாயிற்றுக் கட்டுண்டுநிற்கும்போது மிருக்கும் படி. [தடங்கண்கள்பனிமல்கும்] இவள் (உ) "யதிஶக்ஷோஷி-யதி ஶக்தோஷி" என்றால், பின்னையவனுக்குக் கண்ணநீர்பாய்கைக்கு மேற்பட்டவில்லை; ஸர்வஶக்தி அஶக்தனென்று தோற்றவிருக்கையிறே இவள் நியமிக்க வல்லளாகிறது. [தன்மையானை] ஆஶ்ரிதரிட்ட வழக்காகையே ஸ்வபாவமாகவுடையவனை. (அடியனேன் பெரியவம் மானே) உன்னை "மகன்" என்றிருப்பார்க்கோ வுதவலாவது, முறை யுணர்ந்திருப்பார்க்குஉதவலாகாதோ. நான் முறையிலேநின்றவாறே நீயும் முறையிலே நில்லாநின்றாய் - "அடியேன்" என்று நான் சொல்ல, நீ ஈஶ்வரனுயிராநின்றாய்.

(கடுத்தவித்யாதி) யுத்தகண்டூதியை யுடையனான ஹிரண்யா ஸுரனுடலை யிரண்டுபாதியாம்படி. (கையுகிராண்ட) "படையாண்டான்" என்னுமாபோலே. (எங்கடலே) (ரு) "மஹாவிஷ்ணும் - மஹாவிஷ்ணும்" என்னும்படி பெரியகிளர்த்தியோடேவந்து ப்ரஹ்லாதனுக்கு உதவினவது தம்பேறாயிருந்தபடி. (அடுத்ததோருருவாய்) இவனெங்கே காட்டப்புகுகிறு னென்றறியாமையாலே யெங்குமொக்கச் சினைத்துக்கொடு நின்றான். ஒன்றையறுதியிட்டுத் தோற்றப்பற்றாதபடி அவன் மிகைக்கையாலே அப்போதைக்குயோக்யமான வடிவைக்கொண்டு. (ச) "நாஹஸ்ராந்த நஸுக்ராந்தாஸிம் ஹஸ்ராந்த நஸ்ரயா-நரஸ்யார்த்ததநும்க்ருத்வாஸிம்ஹஸ்யார்த் ததநும்ததா" என்கிறபடியே அவன் வரத்திலேயகப்படாத வடிவைக்கொண்டு. பதற்றத்தாலே ஒன்றினுடலையு மொன்றின்தலையையும் சேர்த்துக்கொண்டு வந்தானென்றுமாம். அடுத்ததோருருவாயிற்றுக்கடுத்த போரவுணனுடல்பிளந்தது.

(இன்றுநீவாராய்) அன்று மின்றுமாயிற்று உதவவேண்டுவது, அன்றுஉதவினாய், இன்றுஉதவுகிறிலை. விபரீதஜ்ஞாநமுடையார்க்கு உதவினாய், யதாஜ்ஞாநமுடையார்க்கு உதவினாய், இவ்விரண்டுகோடிக்

(க) திருமொழி உ-கo-க- (உ) வி-பு-தி-சு-ககரு-
(ரு) ந்ருஸிம்ஹமந்த்ர- (ச) பாரத-

கும் புறம்போனான். "மகன்" என்று கலங்கினவனுக்கு உதவினாய், (க) "ஸுதஸ்ஸாக்ஷாத்ஸ்ஸம்ஸாரஹ்-மததஸ்ஸர்வமஹம்ஸர்வம்" என்னும் தெளிவுடையவனுக்கு உதவினாய், "என்றென்றேகலங்கி" என்கிற கலக்கமுடைய வெனக்கேயோ வுதவலாகாதது. நீவாராதொழிந்தாலும் ஜீவிக்கவாசையுடையார்க்கேயிறே யுன்னைக்காற் கட்டவேண்டுவது. அதுகிடக்கிடீர், ஆனால் நீரேதுக்குப் படுகிறீரென்ன (எங்ஙனம் தேறுவருமரே) இவ்வளவில் நீமுகங்காட்டாவிட்டால், உன் குணஜ்ஞாநத்தாலே ஜீவிக்குமவர்கள் பிழைப்பர்களோ. "உன் குணங்களே தஞ்சம்" என்றிருக்கிறவர்கள் எங்ஙனே யுன்னைவிஶ்வஸிக்கும்படி யென்னுதல். (௩)

---

## நான்காம்பாட்டு.

உமருகந்துகந்த உருவம்நின்னுருவமாகி உன்தனக்கு அன்பரானா ரவர் * உகந்தமர்ந்தசெய்கை உன்மாயை அறிவொன்றும்சங்கிப்பன்வினையேன் * அமரதுபண்ணி அகலிடம்புடைசூழ் அடுபடையவித்த அம்மானே! * அமரர்தம் அமுதே! அசுரர்கள்நஞ்சே! என்னுடை ஆருயிரேயோ! (ச)

**ப.**—அந்தரம், ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயங்களி லநுகூலனுமாய் ப்ரதிகூலனுமாயிருக்கையாலே, உன்னுடைய ரூபகுணசேஷ்டிதங்கள் ஆஶ்ரிதாதீநமென்று நினைக்கிறவறிவு ஶங்கநீயமாகாநின்றதென்கிறார்.

(இ-ள்.) அது - தூத்யாதிமுகத்தாலே லோகப்ரஸித்தமான, அமர் - யுத்தத்தை, பண்ணி - உண்டாக்கி, அகல் - விஸ்தீர்ணயான, இடம் - பூமியினுடைய, புடை - பரிஸரமெங்கும், சூழ் - சூழ்ந்திருப்பதாய், அடு - கொலையிலே உத்யுக்தையான, படை - ஸேனையை, அவித்த - நிஶ்ஶேஷமாக நஶிப்பித்த, அம்மானே - ஸ்வாமியாய், பூமியளவன்றியே, அமரர்தம் - அநுகூலரான தேவர்களுக்கு, அமுதே - அதிஶயிதபோக்யமாய், அசுரர்கள் - ப்ரதிகூலரான வஸுரர்களுக்கு, நஞ்சே - ப்ராணவிநாஶஹேதுவான நஞ்சாய், உபயாகாரத்தாலும், என்னுடை - எனக்கு, ஆருயிரே - தாரகனானவனே, உமர் - உனக்கஸாதாரண ஶேஷபூதரானவர்கள், உகந்துகந்த - எப்போதுமுகந்த, உருவம் - ரூபமே, நின் - உனக்கு, உருவமாகி - ரூபமாய், உன்றனக்கு - அவ்வடி

---

(க) வி-பு-கக-அகு-

விலே, அன்பாரானவர் - அன்பையுடையரானவர்கள், உகந்து - ஆதரித்து, அமர்ந்த - அநந்யப்ரயோஜநமாக, செய்கை-அடிமைசெய்கைக் கீடாயிருக்கிற, உன் - உன்னுடைய, மாயை - ஆஶ்சர்யசேஷ்டிதங்களை, அறிவு - அறியும், ஒன்றும் - இதொன்றையுமகப்பட, சங்கிப்பன் - ஸங்கியாநிற்பன், வினையேன் - தஞ்சமாகநினைத்திருக்கு மர்த்தத்திலே ஸங்கைபிறக்கும் படியான பாபத்தையுடையநான்; ஓ - ஓ என்று - தம்மிழவுதோன்ற வருளிச்செய்கிறார்.

ஆறு ;—(உமருகந்து) ஆஶ்ரிதவிரோதி நிரஸநைக ஸ்வபோகனாய், ஆஶ்ரித பரமபோக்யனாய், ஆஶ்ரிதவிரோதிநாஸகத்வைக ஸ்வரூபனாய், எனக்கு தாரகனாயிருந்தவுன்னுடைய வாஶ்ரிதேச்சாதீந திவ்யாவதார திவ்யசேஷ்டிதத்வ ரூபமான வாஶ்ரிதவாத்ஸல்யகுண மொன்றுமே யெனக்குதாரகம் ; நீவாராமையாலே, அதுவு மென்னுடைய பாபத்தாலே பொய்யோவென்று ஸங்கியாநின்றே னென்கிறார். (ச)

ஈடு ; அவ ;—நான்காம்பாட்டு. " உன்னை யாஶ்ரிதரிட்டவழக் காக்கிவைப்புதி " என்னு மறிவொன்றுலுமே தரித்திருக்கிறநான், அதுவும் பொய்யோவென்று ஸங்கியாநின்றேனென்கிறார்.

(உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி) உனக்கஸாதாரணரா யிருப்பார் மாறாதே யுகந்தவடிவை யுனக்குத் திருமேனியாகக் கொள்ளுவுதியென்னுதல்;உனக்குநல்லராயிருக்குமவர்கள் உகந்தத் தாலே நீயுகந்து அது உனக்கு வடிவென்னுதல்.(க) "[illegible] - யேயதாமாம்ப்ர பத்யந்தே தாம் ஸ்ததைவபஜாம்யஹம் " என்னுமாபோலே. (உ) " தமருகந்ததெவ்வுருவம் " இத்யாதி. (உன்றனக்கன்பரானவர்) உன்பக்கல் ப்ரேமபரவசராயிருக்குமவர்கள்.

(உகந்து) அத்யாதரத்தைப்பண்ணி. (அமர்ந்தசெய்கை யுன்மாயை) ப்ரயோஜநநிரபேக்ஷமாகக் கிட்டவேண்டும்செயல்கள், உன்னுடைய வாஶ்சர்யசேஷ்டிதங்கள். (அறிவொன்றும்சங்கிப்பன்) இந்தவொருகுணத்தையும்பற்றின வறிவாயிற்று இவர்க்கு ஸத்தாஹேது ; அதிலேயாயிற்று இப்போது இவர்க்கதிசங்கை வர்த்திக்கிறது. (வினையேன்) நாமொருவன் கண்ணைஞ்சுழலையிட் டதிசங்கைப

(க) கீதை-ச-கக- (உ) க-திருவ-சச-

ன்னுங்காட்டில், ஸ்வரூபரூபகுணங்களில்லையாகாதிறே; அதி லேயதிசங்கைபண்ணுகிறது நான்பண்ணினபாபமிறே; (க) “வ்யா க்ஷ்வேராஜ்ஞைகரூபஜ்ஞஸ்ய ஸாநுக்ரோசஸ்யநாவஸ: । ஸத்வ்ருத்தநி ரநுக்ரோசஸ்ய ஸூக்ஷ்மஜ்ஞஸ்ய ஸம்க்ஷயாத் - க்யாத: ப்ராஜ்ஞ: க்ருத ஜ்ஞஸ்ச ஸாநுக்ரோசஸ்சராகவ: । ஸத்வ்ருத்தோநிரநுக்ரோசஸ் ஸங்கேமத்பாக்யஸங்க்ஷயாத்” இப்படிப்பட்ட குணங்களுடைய வர்க்கு நானதிஸங்கைபண்ணுங்காட்டில் அவையில்லையாகிற தன் றிறே; நான் ஸங்கிக்கைக்கடி யென்பாக்யஹாநியென்றுளிறே.

(அமரதுபண்ணி) ஆஸ்ரிதபக்ஷபாதியென்னுமிடத்துக்கு உதா ஹரணங்காட்டுகிறார். அந்தவமரைப்பண்ணி; மஹாபாரதமிறே; பூமிப்பரப்படைய நெளியும்படியிறே வந்துசூழ்ந்துகொண்டது. (சூழுபடை) ஸர்வதோதிக்கமாகச் சூழ்ந்துகொண்டு கொல்லவந்த ஸேனையையவித்த. துர்வர்க்கமடையக் காட்டுத்தீக்கிளர்ந்தாப் போலேகிளர்ந்து, “ஸாரதி, ஸாரதி” என்று வாய்பாறிக்கொண்டு வந்துதோற்ற, அவர்கள் கிளர்த்தியை யவித்தானாயிற்று. (உ) “மழை கொலோவருகின்றது” என்று சொல்லுகிற க்ருஷ்ணனாகிற காள மேகமிறே யேறியவித்தது. (அம்மானே) ஸர்வஸ்வாமியாயிருந்து வைத்து ஆஸ்ரித பக்ஷபாதத்தாலே அநாஸ்ரிதரையும் கிழங் கெடுத்துப் பொகட்டானித்தனை.

(அமரர்தமமுதே) தேவர்களுக்காக வாஸுர ப்ரக்ருதிகளோடே யம்பேற்றுப்பண்ணின வ்யாபாரங்களாலே அவர்களுக்கு நிரதிசய போக்யனாயிருக்கும்படி. (அசுரர்கள்நஞ்சே) ஜந்மத்தாலே யஸுரர் களாயும் ஸ்வபாவத்தாலே யஸுரர்களாயு முள்ளவர்களுக்காற்ற வொண்ணாத நஞ்சானவனே. (என்னுடையாருயிரேயோ) எனக்கு ஸத்தாஹேதுவானவனே. தேவர்களுக்கு போக்யனாய் அஸுரவர்க் கத்துக்கு நஞ்சாயிருக்கிற விருப்பு தமக்குஸத்தாஹேதுவாயிருக் கிறபடி. (ச)

---

(க) ரா-ஸு-உக-௩௩. (உ) பெரியா-தி-௩-௪-௧.

## ஐந்தாம்பாட்டு.

ஆருயிரேயோ! அகலிடமுழுதும் படைத்திடந்துண்டுமிழ்ந் தளந்த * பேருயிரேயோ! பெரியநீர்படைத்து அங்குறைந்து அது கடைந்தடைத்துடைத்த * சீரியரேயோ! மனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்கும்தேவாவோ! * ஒருயிரேயோ? உலகங்கட்கெல்லாம் உன்னைநான் எங்குவந்துறுகோ? (ரு)

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாராக்ஷகனான வுன்னை நான் யத்நம்பண்ணிக் காண்பதெங்கே யென்கிறார்.

(இ-ள்.) (க) "ப்ராணஸ்யப்ராண:—ப்ராணஸ்யப்ராண:" என்கிறபடியே தாரகமான ப்ராணிகளுக்கு தாரகனாகையாலே, ஆருயிரே - பரிபூர்ண ப்ராணபூதனாய், அகல் - விஸ்தீர்ணமான, இடம் - ஜகத்தை, முழுதும் - எல்லாம், படைத்து - ஸ்ருஷ்டித்து, இடந்து-ப்ரளயத்திலழியாமலிடந்தெடுத்து, உண்டு - வயிற்றிலே வைத்துநோக்கி, உமிழ்ந்து- உமிழ்ந்து வெளிநாடுகாட்டி, அளந்த - அந்யாபிமாநமறும்படி யளந்துகொண்ட, பேருயிரே - ஸர்வாதிக ஶேஷியாய், ஜகத்தை யுஜ்ஜீவிப்பிக்கைக்காக, பெரியநீர்-மஹாஜலமான ஏகார்ணவத்தை, படைத்து - ஸ்ருஷ்டித்து, அங்கு - அங்கே, உறைந்து - கண்வளர்ந்தருளி, அது - தத்கார்யமான க்ஷீரார்ணவத்தை, கடைந்து - கடைந்து, அடைத்து - தத்ஸஜாதீயமான கடலையடைத்து, உடைத்த-ஸம்ஸாரிகளுக்கு தீர்த்தஹேதுவாம்படி தநுஷ்கோடியாலே யுடைத்த, சீரியரே - ஆஶ்ரிதரக்ஷணத்திலாத்மாவோபாதி சீரியனாய், மனிசர்க்கு - மநுஷ்யாதிகளுக்கு, தேவர்போல - தேவர்களுத்தேஶ்யரானவோபாதி, தேவர்க்கும் - தேவர்களுக்கும், தேவா - உத்தேஶ்யதயா ஆஶ்ரயணீயனாய், உலகங்கட்கெல்லாம் - ப்ராணகம்யமான ஸகலபதார்த்தங்களுக்கும். ஒருயிரே - ஏகாத்மாவானவனே, உன்னை - ஶரீரத்துக்காத்மாவைப்போலே தாரகனுமாய், ஶேஷியுமாய், பரிவனுமாய், உத்தேஶ்யனுமாய், அவ்வாத்மாக்களைப்போலே ஸ்வரூபபேதமில்லாதபடி ஸகலசேதநாசேதங்களுக்கு மேகநியந்தாவான வாத்மாவான வுன்னை யொழிய, நான் - த்வதேகதார்யனுமாய், த்வதேகஶேஷபூதனுமாய், த்வதேகரக்ஷ்யனுமாய். த்வதேகாஶ்ரயனுமாய், த்வதேகநியாம்யனுமாயிருக்கிற நான், எங்கு - எங்கே, வந்து - வந்து, உறுகோ - கிட்டுவேன்.

---

(க) கேநோபநிஷத்-உ-க.

ஸ்வதந்த்ரனான வுன்னுடைய யத்நம் பலபர்யந்தமாமதொழிய ஸர்வப்ர கார பாரதந்த்ரனான நான் யத்நம்பண்ணிக் கிட்டுவதொன்றுண்டோவென்று.

ப்ரதிபதம், ஓ! வென்றது- அத்தலை யித்தலையாவதே! என்கிற வெறுப் பைக்காட்டுகிறது. (ரு)

ஆறு ;—(ஆருயிரேயோ) நீரே யுபாயங்களையநுஷ்டித்து என் னைப்ராபிக்குமத்தனையன்றோ வென்னில் ;

எனக்கு தாரகனாய், நிகிலஜகந்நிர்மாண மஹார்ணவ நிமக்ந ஜகதுத்தரண நிகரணோத்கிரண விக்ரமண ஹேதுபூத பரமகாருண் யவிஶிஷ்டனாய், பயோநிதி மதந மந்தந பந்தந பேதந ஹேதுபூத ப்ரணயித்வகுண யுக்தனுமாய், ஆத்மகுணங்களாலும் ரூபகுணங்க ளாலும் மநுஷ்யரிற் காட்டில் தேவர்களெத்தனை விலக்ஷணராயிருப் பார், அப்படியே தேவர்கள் மநுஷ்யரென்னும்படி அந்தகுணங்களால் விலக்ஷணனாய், ஸர்வலோகங்களுக்கு மாத்மாவாயிருந்த வுன்னை நான் என்னுடைய யத்நத்தாலே யெங்ஙனே ப்ராபிக்கும்படி யென் கிறார். (ரு)

ஈடு ; அவ ;—ஐந்தாம்பாட்டு. (க) "ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்த்ரி- ஶாஸ்த்ரபலம்ப்ரயோக்தரி" என்று பேறு உம்மதானால் ஸாதநம் உம்முடைய தலையிலே யாகவேண்டாவோ வென்ன; நான் யத்நம் பண்ணி வந்துகாண வென்றொரு பொருளில்லைகாணென்கிறார்.

(ஆருயிரேயோ) உயிர்நீயாயிருக்க நானென்ன ஸாதநாநுஷ்ட் டாநம்பண்ணி வந்து கிட்டுவேன் ; ஶரீரரக்ஷணமாத்மாவதன்றோ, ஶரீரந்தான் தன்னை ரக்ஷித்துக்கொள்ளவோ. ஸம்பந்தமேபோ, அநுஷ்டாநமுமில்லையோவென்கிறார் (அகலிடமுழுதும்படைத்து) (உ) "ஸோऽகாமயத பஹுஸ்யாம்" என்று பூமிப்பரப்படங்க ஸ்ருஷ்டித்து, ப்ரளயத்திலே நோவுபட மஹாவராஹமா யெடுத் துக்கொண்டேறி, திரிய ப்ரளயம்வர வயிற்றிலேவைத்து நோக்கி, உள்ளே கிடந்து தளராதபடி வெளிநாடுகாண வுமிழ்ந்து, மஹாபலி யாலே யபஹ்ருதமான தசையிலே யெல்லை நடந்துமீட்டுக்கொண்டு, இப்படி யந்த துர்த்தசைகளிலே அபேக்ஷாநிரபேக்ஷமாக வுணர்ந்து நோக்கும்நீயே, இதுகிட்டும் விரகு பார்க்கவேண்டாவோ. (பேருயி ரேயோ) பெரியோனே.

(க) பூர்வமீமாம்ஸை. (உ) சாந்தோ-உ-உ.

(பெரியநீரித்யாதி) ஸர்வவிஷயமாகப்பண்ணும் வ்யாபாரத்தோடு பிராட்டிக்காக ப்பண்ணும் வ்யாபாரத்தோடு வாசியற்றிருக்கும்படி. (பெரியநீர்படைத்தங்குறைந்து) ஏகார்ணவத்தை ஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்ட்யர்த்தமாக வதிலேகண்வளர்ந்து. (அதுகடைந்து) பிராட்டியை லபிக்கைக்காக அத்தைக்கடைந்து, அவளோட்டை ஸம்ச்லேஷத்துக்காக அத்தையடைத்து, அவ்வருகுண்டான ராக்ஷஸர் வந்து ஆச்ரிதரை நலியாதபடி அத்தையுடைத்த. (சீரியரேயோ) நித்யாச்ரிதையோடு அல்லாதாரோடுவாசியற விஷயீகரிக்கும் சீர்மையுடையவனே. (மனிசரித்யாதி) ஐச்வர்யத்தாலும்கௌரவ்யதையாலும மநுஷ்யர்களுக்கு தேவர்களிருக்குமாபோலே யாயிற்று, அந்த தேவர்களிற் காட்டில் ஸர்வேச்வரனிருக்கும்படி.

(ஓருயிரேயோ வுலகங்கட்கெல்லாம்) கேவலசரீரமோ, ஆத்மாவோ, ஹிதசிந்தைபண்ணுவார்; நானுன்னைப் பெறுகைக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ணுகிறேன், உன்னைப்போலே யிருப்பதொரு தத்த்வாந்தரமுண்டாகில் சொல்லிக்காண். உயிராயிருக்கிற வுன்னை சரீரபூதனான நானென்ன ஸாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி வந்து கிடடுவேன். ஆத்மா சரீரத்துக்கு ஹிதசிந்தைபண்ணுமதொழிய, சரீரம் ஸ்வரக்ஷணத்தைப்பண்ண வென்பதொன்றுண்டோ. ஆதாரமாய் நியந்தாவாய் சேஷியாயிருக்கிற நீயொழிய, ஆதேயமாய் நியாம்யமாய்சேஷமானவிது ஸ்வரக்ஷணத்தைப்பண்ணவோ. ஆதாராதேய நியந்த்ருநியாம்யபாவங்களாலே சரீரலக்ஷணமிதுக்குண்டானபின்பு, அல்பசைதந்யமும் "நீயேகடவாய்" என்கிற ப்ரதிபத்திக்குக் கண்டவித்தனையன்றி ஸாதநாநுஷ்டாநம் பண்ணக்கண்டதோ. (௫)

---

# ஆறும்பாட்டு.

எங்குவந்துறுகோ? என்னையாள்வானே! ஏழுலகங்களும் நீயே * அங்கவர்க்கமைத்ததெய்வமும்நீயே அவற்றவைகருமமும் நீயே * பொங்கியபுறம்பால்பொருளுளவேலும் அவையுமோநீயின்னேயானுல் * மங்கியஅருவாம்நேர்ப்பமும்நீயே வான்புலனிறந்ததும்நீயே. (௬)

ப.—அநந்தரம், கார்யகாரணாவஸ்த்த ஸகலபதார்த்தங்களும் நீயிட்டவழக்காம்படி ஸர்வாத்மபூதனாகையாலே யெங்கேவந்து கிட்டுவேனென்கிறார்.

(இ-ள்.) என்னை - என்னை, ஆள்வானே - இவ்வளவும்வர நிர்வஹித்தவனே, ஏழுலகங்களும் - ஸாதநாநுஷ்டாநம்பண்ணுவார்க்கநுஷ்டாநஸ்த்தலமாயும் ப்ராப்யமாயுமுள்ள ஸமஸ்தலோகங்களும், நீயே-நீயிட்டவழக்கு, அங்கு-அந்தலோகங்களில், அவர்க்கு-பலார்த்திகளான வாராதகர்க்கு, அமைத்த - பலப்ரதமாகவு மாராத்யமாகவும் சமைத்துவைத்த, தெய்வமும் - தைவங்களும். நீயே - நீயிட்டவழக்கு, அவற்றவை - அத்தைவங்கள்விஷயமாக, கருமமும் ஆராதநரூபமான வவ்வோகர்மங்களும், நீயே - நீயிட்டவழக்கு, பொங்கிய - இந்தலோகங்களிற்காட்டில்விஞ்சி, புறம்பால் - புறம்பான, பொருள் - மஹதாதி ஸமஸ்தபதார்த்தங்கள், உளவேலும் - ப்ரமாணப்ரஸித்தமாய்த்தோன்றின வுண்டாகிலும், அவையும் - அவையும், நீ - நீயிட்டவழக்கு, மங்கிய - ஸம்ஹ்ருத்யவஸ்த்தமாய் நாமரூபரஹிதமான, அருவாம் நேர்ப்பமும் - ஸூக்ஷ்ம சிதசித்தும், நீயே - நீயிட்டவழக்காயிருக்கும், வான் - பரமாகாசத்தில், புலனிறந்ததும் - அதீந்த்ரியமான முக்தாத்மவர்க்கமும், நீயே - நீயிட்டவழக்காயிருக்கும், இன்னே - இப்படி, ஆனால் - ஸர்வாத்மபூதனாதலினால், நான் - த்வதேக நிர்வாஹ்யனானநான், யத்நம்பண்ணி, உன்னை - உன்னை, எங்கு - எங்கே, வந்து - வந்து. உறுகோ - கிட்டுவேன். (கூ)

ஆறு ;—(எங்குவந்து) ஸர்வலோகங்களும், தத்ஸமாராத்யமான அக்நீந்த்ராதிதைவமும், அவற்றினுடைய க்ரியைகளும், லோகத்துக்குப் புறம்புள்ள பதார்த்தங்களும், ப்ரக்ருதி ஸம்யுக்தமாய் கர்மஸங்குசித ஜ்ஞாநமாய் ஸூக்ஷ்மமாயிருந்த புருஷஸமஷ்டியும் கர்மஸம்பந்தரஹிதமாய், ப்ரக்ருதி விநிர்முக்தமாய், பரிஶுத்தமாயிருந்த வாத்மஸ்வரூபமும் நீயே ; ஆதலால், என்னுடைய யத்நத்தாலுன்னை நானெங்ஙனே ப்ராபிக்கும்படி ; இதற்குமுன்பு நிர்ஹேதுகமாக வென்னை விஷயீகரித்தாப்போலே, இன்னமு முன்க்ருபையாலே விஷயீகரித்தருளாயென்கிறார்.

பூர்வோக்தமான வாத்மஶரீரபாவம் இந்த ஸாமாநாதிகரண்யமென்னுமிடஞ் சொல்லிற்றாயிற்று. (கூ)

ஈடு ; அவ ;—ஆறாம்பாட்டு; உக்தார்த்தத்தை விஸ்தரிக்கிறார்.

(எங்குவந்துறுகோ) மேருசிகரத்திலேநிற்கிறுளொருவனை யொருபக்கு சென்றுகிட்டவோ. (என்னையாள்வானே) இவ்வளவும் வரநின்றேன் நானுகிலன்றோ மேலும் நான்வந்து கிட்டப்பார்ப்பது. (ஏழுலகங்களும்நீயே) ஸகலலோகங்களும் நீயிட்டவழக்காம்படியிருக்கிறவனே. அபேக்ஷைவர்த்திக்கிற வென்னைபொழிய விமுகராயிருப்பார் தாளே ஸ்வாதீநராயிருக்கிறுர் (அங்கவர்க்கமைத்த தெய்வமும்நீயே)அவர்களைக் குடிமைகொள்ளுகிற தேவதைகளும் நீயிட்டவழக்கு. (அவற்றவைகருமமும்நீயே)அவ்வோதேவதைகளுடைய ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரங்களோதான் அவர்கள்பக்கல் கிடக்கிறது. ஆக, இவ்வருகுண்டான கார்யவர்க்கம் த்வததீநமென்னு மிடஞ் சொல்லிற்று.

(பொங்கியவித்யாதி) ஒன்றுக்கொன்று விஸ்த்ருதமாய், அண்டத்துக்குப் புறம்பாய், அதுக்குக்காரணமான மஹதாதிகளென்று சிலவுண்டாகில், அவையுமுன்னததீநம். (மங்கியவித்யாதி) கார்யாகாரமடங்கவழிந்து ஸூக்ஷ்மாவஸ்த்தையை பஜித்திருக்கிற அவ்யக்தமும் நீயிட்டவழக்கு. (வான்புலனிறந்ததும்நீயே) இவற்றின்படியன்றிக்கே, வாணுய் - அவ்யக்தத்தையும் வ்யாபிக்கவற்றுய், சக்ஷுராதிகரணங்களுக் கவிஷயமாயிருந்துள்ள காரணமான ஜீவஸமஷ்டியும் நீயிட்டவழக்கு. பத்தாத்மஸ்வரூபமும் நீயிட்டவழக்கென்கை. ( இன்னேயாஞல் - எங்குவந்துறுகோ ) அர்த்ததத்த்வ மிதுவானபின்பு, எங்கேவந்து கிட்டக்கடவேன்.

" மங்கியவருவாம் கோர்ப்பமென்று-பத்தஸமஷ்டி " என்றும், " வான்புலனிறந்ததென்று-முக்தஸ்வரூபத்தைச் சொல்லுகிறது " என்றும் பிள்ளான். அப்போது, அஸத்ஸமமாய் ஸூக்ஷ்மமான வாத்ம ஸமஷ்டியென்றும், பரமபதத்திலேயாய் அதீந்த்ரியமான முக்தாத்ம ஸ்வரூபமென்றும் நிர்வாஹம். இத்தால் சொல்லிற்று யிற்றென்னென்னில் ; கார்யாவஸ்த்தையோடு காரணுவஸ்த்தையோடு முக்தனுன வவஸ்த்தையோடு வாசியற உன்னை பார்த்திருக்கவேண்டினபின்பு, நானென்காரியத்துக்குக் கடவேனுகையென் ருெரு பொருளுண்டோ.

(கூ)

---

## ஏழாம்பாட்டு.

இறந்ததும்நீயே எதிர்ந்ததும்நீயே நிகழ்வதோநீ இன்னேயா னால் * சிறந்தநின்தன்மை அதுவிதுவுதுவென்று அறிவொன்றும் சங்கிப்பன்வினையேன் * கறந்தபால்நெய்யே! நெய்யினின்சுவையே! கடலினுளமுதமே! * அமுதில் பிறந்த இன்சுவையே! சுவையது பயனே! பின்னைதோள் மணந்தபேராயா! (எ)

ப.—அநந்தரம், ஸர்வப்ரகார போக்யபூதனான நீ, காலோபாதிகமாயும் தேஶோபாதிகமாயுமுள்ள ஸமஸ்தபதார்த்தங்களையும் ப்ரகாரமாக வுடையையா யிருப்புதியென்கிற வித்தத்த்வஜ்ஞாநத்தையும் ஶங்கிக்கும்படி பண்ணுகின்றது உன்னைக் கிட்டப்பெறாத விழவென்கிறார்.

(இ-ள்.) கறந்த - கறந்தபோதே, பால் - ஸ்வாபாவிகரஸத்தையுடைத் தான பாலாய், நெய்யே - அதில் ஸாராம்ஶமான நெய்யாய், நெய்யின் - நெய் யினுடைய, இன் - இனிய, சுவையே - ரஸமாய், இப்படி லௌகிகபோக்ய மன்றியே திவ்யபோக்யமாம்படி, கடலினுள் - கடலிலேபிறந்த, அமுதமே - அம்ருதமாய், அமுதில் - அந்த வம்ருதத்திலே, பிறந்த - உத்பந்நமாய், இன்சு வையே - லோகோத்தரமான வினிமையாய், சுவையது - அவ்வினிமையால் பிறந்த, பயனே - ப்ரயோஜநமான ஸுகமாய், இப்படி ப்ராக்ருத போக்யமா மளவன்றியே, அநந்யப்ரயோஜநர்க்கு நிரதிஶயபோக்ய பூதனும்படி, பின்னை - நப் பின்னைப்பிராட்டி, தோள் - திருத்தோளோடே, மணந்த - ஸம்ஶ்லேஷித்த, பேராயா - மஹாப்ரபாவனான க்ருஷ்ணனே, வினையேன் - உன்னுடைய நிர திஶயபோக்யதையை யநுபவிக்கப்பெறாத பாபத்தையுடைய நான், இறந்தது மெதிர்ந்ததும் நிகழ்வது - பூதபவிஷ்யத்வர்த்தமாந காலோபலக்ஷித ஸகலபதா ர்த்தங்களும், நீயே - தனித்தனியே நீயிட்டவழக்கு, இன்னே - இப்படி, ஆனால் - ஆனபின்பு, அது - தூரஸ்தமாயும், இது - ஸந்நிஹிதமாயும், உது - அதூர விப்ரக்ருஷ்டமாயுமுள்ள தேஶோபலக்ஷித ஸகலபதார்த்தங்களும், சிறந்த - விலக்ஷணமான, நின் - உன்னுடைய, தன்மை - ஸ்வபாவங்கள், என்று - என்று, அறிவு - அறிகிறவித்தத்வஜ்ஞாநம், ஒன்றும் - ஒன்றையுமகப் பட, சங்கிப்பன் - குலையப்புகுகிறதோவென்று ஶங்கியாநிற்பன். (எ)

ஆறு ;— (இறந்ததும்நீயே) பூதபவிஷ்யத்வர்த்தமாந ஸகலஜந் துஜாதத்துக்கு மாத்மாவாய் ரக்ஷகனுமிருந்த வுன்னுடைய வித்த நிரவதிககாருண்யத்தையும் பொய்யோவென்று ஶங்கியாநின்றேன்.

இப்படி யதிசங்கைபண்ணுவானென்னென்னில் ; நிரவதிக போக்ய பூதனாயிருந்த வுன்னைக் காணப்பெறாதொழிந்தால் ஸங்கை பிறவா தோவென்கிறார். (எ)

ஈடு ; அவ ;—ஏழாம்பாட்டு. ஸகலபதார்த்தங்களு முனக்கு ப்ரகாரதயா சேஷமாய், நீ ப்ரகாரியாய், நீயே அவற்றுக்கு நிர்வாஹகனென்னு மறிவொன்றுங் கொண்டுதரித்திருக்கிற நானென் பாபத்தாலே அதிலு மதிஸங்கைபண்ணா நின்றேனென்கிறார்.

(இறந்ததித்யாதி) "இக்காலத்துக்கு நான்கடவேன், மற்றொருகாலத்துக்கு வேறேசிலர்கடவர்" என்றுதான் உன்னாலே சொல்லலாமோ. பூதகாலத்திலுள்ளாரோடு பவிஷ்யத்காலத்திலுள்ளாரோடு வர்த்தமாநகாலத்திலுள்ளாரோடு வாசியற எல்லாரும் த்வததீநர். "இன்னேயானால்-எங்ஙனே கூறுகோ" என்று கீழிற்பாட்டோடே யந்வயம். (சிறந்தநின்தன்மை யதுவிதுவுதுவென்று) ஸ்தூலஸ்த்தமாயும், ஸந்நிஹிதமாயும்; அதூர விப்ரக்ருஷ்டமாயுமுள்ள ஸகலபதார்த்தங்களும், சேஷித்வத்தாலே சிறந்திருந்துள்ள வுன்னுடையப்ரகாரம். (இன்னேயானால்) இறந்ததும்நீயே யென்னுதல், சிறந்தநின் தன்மையென்னுதல்.

இப்படி காலத்ரய வர்த்திபதார்த்தங்களும் நீயிட்ட வழக்காகையாலே ஸகலபதார்த்தங்களு முனக்கு ப்ரகாரமென்னுதல், ஸ்தூலஸ்த்தமாயும் ஸந்நிஹிதமாயும் அதூர விப்ரக்ருஷ்டமாயுமுள்ள பதார்த்தங்களுனக்கு ப்ரகாரமாயற்றால் காலத்ரயவர்த்தி பதார்த்தங்களும் நீயிட்டவழக்கென்னுதல். (என்றறிவோன்றும்சங்கிப்பன்) தன்னையொழிந்தவடங்கலும் தனக்கு ப்ரகாரமாய்த்தான் ப்ரகாரியாயிருக்கையாலே, இவற்றுக்கு வந்தது தனக்கு வந்ததாக நினைத்திருப்பானொருவனென்கிற வறிவாயிற்று இவர்க்கு ஜீவிக்கைக்கு ஹேது ; அதொன்றிலு மதிஸங்கைபண்ணாநின்றேன், அதுதனக்குக் கார்யகரமல்லாமையாலே. (வினையேன்) கலக்கத்தாலே யதிசங்கை பண்ணுங்காட்டில் அவன் ஸ்வரூபமில்லையாகாதிறே; எனக்கு இப்புத்திபிறக்கைக்கடி யென்பாபமிறே. (க) "ஸமேஷுசாஸ்த்ரேஷு ஸம்சயாத்க்ஷயாத்-ஸந்தேஹத்பாக்யஸங்க்ஷயாத்" கீழில திஸங்கைக்குமிதுக்கும்

(க) ரா-ஸு-உக-கரு.

கெடுவாசியுண்டு. ஆஶ்ரிதபரதந்த்ரனென்கிற ஸ்வபாவத்தாலே அதிசங்கைபண்ணிறால் ஆஶ்ரயணத்திற் குறையாலேயென்று நினைத்திருக்கலாம்; இதில் அவனுடைய ஸத்பாவத்திலேயிறே யதிஶங்கை. ப்ரகாரியாய்க்கொண்டிறே அவனுடையஸத்தை. ஸ்வவ்யதிரிக்தங்கள் அவனுக்கு ப்ரகாரமாய்க்கொண்டிறே யுண்டாவது.

இப்படி ஸ்வரூபத்தி லதிஶங்கை வர்த்திக்கைக்கடியென்னென்னில்; அதிஶங்காஹேது சொல்லுகிறது (கறந்தபாலித்யாதி) வ்யதிரேகத்தில் ஜகத்து உபஸம்ஹ்ருதமென்று நினைக்கவேண்டும்படியான வுன்போக்யதாப்ரகர்ஷம் அதிஶங்காஹேது. (கறந்தபால்) கறந்தபோதை ரஸத்தை நினைக்கிறது; அல்லது கறவாதபாலில்லையிறே; உபாதி விஶேஷத்தால் வந்தரஸவிஶேஷத்தை வ்யாவர்த்திக்கிறது. (நெய்யே) அதில் ஸாராம்ஶம். (நெய்யினின்சுவையே) நெய்யிலினியசுவையானவனே (கடலினுளமுதமே) மஹத்தத்த்வத்தைக் கலக்கி அதில் ஸாராம்ஶமாக வாங்கின வம்ருதம்போலே போக்யனானவனே. (அமுதில்பிறந்தவின்சுவையே) அதில் ரஸாம்ஶத்தைச் சொல்லுகிறது. (சுவையதுபயனே) ரஸாநுபவ ஸுகரூபமானவனே; ஒன்றிலொன்று மேற்பட்ட ரஸாம்ஶங்களைச்சொல்லி, அதுபோராமையாலே தன்னையேசொல்லுகிறது (பின்னைதோள்மணந்தபேராயா) ஒரு மிதுநாநுபவமாயிற்று இவர்க்குபோக்யம். ஸம்ஸாரியை அவனநுபவிக்குமாபோலே யாயிற்று ஆநந்தமயனை அவளநுபவிக்கும்படி. இருவருடைய சேர்த்தியழகாயிற்று இவர்க்குபோக்யம்.

---

## எட்டாம்பாட்டு.

மணந்தபேராயா! மாயத்தால்முழுதும் வல்வினையேனையீர்கின்ற * குணங்களையுடையாய்! அசுரர்வன்கையர்கூற்றமே! கொடியுபுள்ளுயர்த்தாய்! * பணங்களாயிரமுடையபைந்நாகப்பள்ளியாய்! பாற்கடற்சேர்ப்பா! * வணங்குமாறுஅறியேன் மனமும் வாசகமும்செய்கையும்யானும் நீதானே. (அ)

**ப.**—அநந்தரம், ஆஶ்ரித ஸம்ஶ்லேஷார்த்தமாகவும் விரோதி நிரஸநார்த்தமாகவும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற நீயிட்டவழக்காம்படி யென் காரணங்களும் காரணியான நானும் உனக்கு ப்ரகாரமானபின்பு நான் வணங்குவனென்றொரு ப்ரகாரமறிகிறிலேனென்கிறார்.

(இ-ள்.) மாயத்தால் - ஆச்சர்யசேஷ்டிதங்களாலே, முழுதும் - அகில பதார்த்தங்களையும், மணந்த-அபிமதையோடே செறிந்துகப்பிக்கும், பேராயா - பெருமையையுடைய க்ருஷ்ணனாய், வல்வினையேனை - அப்படி ஸம்ச்லேஷிக்கப்பெறாத ப்ரபலபாபத்தை யுடையேனான வென்னை, ஈர்கின்ற - ஸர்வகாலமும் மீராநிற்கிற, குணங்களை - ஶீல ஸௌலப்ய ஸௌந்தர்யாதிகளான குணங்களை, உடையாய் - ஸ்வபாவமாகவுடையையாய், வன்கையசுரர் - ஆச்ரித விரோதிகளான ப்ரபலாஸுரர்க்கு, கூற்றமே - ம்ருத்யுவாய், கொடிய - அவர்கள் கண்டபோதே முடியும்படியான, புள் - பெரியதிருவடியை, உயர்த்தாய் - கொடியாகவுடையையாய், இப்படி ஜகத்ரக்ஷணார்த்தமாக, ஆயிரமும் - ஆயிரம், பணங்கள் - பணங்களை, உடைய - உடையனுமாய், பை - அதிவிஸ்தீர்ணமான, நாகம் - திருவநந்தாழ்வானாகிற, பள்ளி - படுக்கையை, ஆய் - உடையையாய்க்கொண்டு, பாற்கடல் - திருப்பாற்கடலிலே, சேர்ப்பா - கண் வளர்ந்தருளுகிறவனே, மனமும் வாசகமும் செய்கையும் - மனோவாக்காயருப கரணங்களும், யானும் - கரணியான நானும், உனக்கு ப்ரகாரமாய்க்கொண்டு, நீதானே - நீதானேயாம்படியா யிருந்தது, ஆகையால், வணங்கும் - வணங்குகைக்கு, ஆறறியேன் - ஒருகர்த்தாவையுமறிகிறிலேன்; கரணங்களையுமறிகிறிலேன். (அ)

ஆறு ;—(மணந்தபேராயா) உம்முடைய வபேக்ஷிதம் செய்ய வேண்டுமாகில் ஓரஞ்ஜலிமாத்ரமாகிலும் பண்ணமாட்டீரோவென்னில்; அதுக்குத் தரம் மேலிட்டு, ப்ரவணஸ்வபாவனாகையாலும், (க) "ஹ்ருஷ்யந்தி ஸர்வே நரநார்யோ ... ஹ்ருதயாங்யாமமந்தேவ ஜநஸ்யகுணவத்தயா" என்றும் ப்ரக்ரியையாலே, முழுதும் வல்வினையேனையிருந்த வென்னையுங்கூட வீராநின்ற ஸௌஶீல்யாதி கல்யாணகுணங்களை யுடையையா யிருக்கையாலும் ஆச்ரிதவிரோதி நிரஸநைக ஸ்வபாவனாயிருக்கையாலும், ஆச்ரிதருடைய வாபத்துக்கு உதவவருகைக்கீடான பெரியதிருவடியை திவ்யவாஹநமாக வுடையனாகையாலும், திருநாட்டில் நின்றும்வந்து ஆச்ரிதருடைய வாபத்தைப்போக்கப் பற்றுமை யணித்தாகத் திருப்பாற்கடலிலேவந்து திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந் தருளுகையாலும், மத்ஸ்வரூபகரண சேஷ்டிதங்கள் த்வத் ஸங்கல்பா

---

(க) ரா-அயோ-உகூ-உ.

யத்தமாய் த்வதாத்மகமாய் த்வச்சரீரமாகையாலும், என்னுலொரு செயலில்லை ; ஆதலால், வணங்குமா றறியேனென்கிறார். (அ)

ஈடு; அவ ;—எட்டாம்பாட்டு. ஏதேனுஞ் செய்தாலும் பேறு உம்மதாய் உமக்காஶ்ரயிக்கைக்குக் கரணங்களுமுண்டானல் நீரே யத்நிக்கவேண்டாவோ வென்ன ; ஆத்மாத்மீயங்களடைய வுன்ன திநமானபின்பு என்னல் செய்யலாவ தொன்றில்லை; நீயே ரக்ஷிக்க வேணுமென்கிறார்.

(மணந்தபேராயாமாயத்தால்) அபிநிவேஶத்தாலே நப்பின்னைப் பிராட்டி தோளோடே ஸம்ஶ்லேஷித்த பேராயனே. நப்பின்னைப் பிராட்டியிற்காட்டி லிடைத்தனத்தில் க்ருஷ்ணனுக்குண்டான வேற்றம். (முழுதும்வல்வினையேனை யீர்கின்றகுணங்களையுடையாய்) (முழுதும்-ஈர்கின்றகுணங்கள்) சில குணங்களீரச் சில குணங்கள் தாரகமாகையன்றிக்கே, எல்லாமொக்க வீரும்படியான குணங்களை யுடையவனே. உன் குணங்களாகையும் நானுகையுமே நோவுபடுகைக்கடி. (வல்வினையேன்) சிலர் குணஜ்ஞாநத்தாலே ஜீவித்திருக்க, அது பாதகமாம்படி பாபத்தைப்பண்ணினேன். (ஈர்கின்ற) நலிந்ததாய்விடுகிறதில்லை. அம்புபட்டபுண் மருந்திட்டாற்றலாம்; குணத்தால்வந்த நோய்க்குப் பரிஹாரமில்லையே.

(அசுரர்வன்கையர்கூற்றமே) முன்கைமிடுக்கரான வஸுரர்களுக்கு அந்தகன் தண்ணீரென்னும்படி கூற்றமானவனே. (கொடியபுள்ளுயர்த்தாய்) கண்டபோதே ப்ரதிபக்ஷத்தை மாய்க்கவல்ல பெரியதிருவடியைக் கொடியாக வுடையவனே ; ப்ரதிபக்ஷத்தை முடிக்கைக்குத் தான்வேண்டா, கொடியைக்காணவமையும். (பணங்களித்யாதி) ஸ்வஸ்பர்ஶத்தாலே விகஸிதமான பணங்களையுடையனுய், பகவதநுபவ ஹர்ஷத்துக்குப் போக்குவிடாகப் பலதலைகளையுமுடையனுய், ஸர்வேஶ்வரனுக்கும் பிராட்டிமார்க்கும் நினைத்தபடி பரிமாறுகைக்கிடான பரப்பையுடையனுமாயிற்றுத் திருவநந்தாழ்வா னிருப்பது ; அப்படிப்பட்டிருக்கிறவனைப் படுக்கையாக வுடையவனே. (பாற்கடல்சேர்ப்பா) ஆஶ்ரிதர் கூக்குரல் கேட்கைக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தவனே.

(வணங்குமாறறியேன்) பரயபதத்தைவிட்டுத் திருப்பாற்கடலிலே சாய்ந்து என்னுடைய ரக்ஷணத்துக்கு முற்பாடனுயிருக்கிற

வுனக்கு நானொரு கிஞ்சித்காரம் பண்ணினேனாகைக் கொருவிரகறி கிறிலேன். அறியாதொழிகிறதென், உமக்கு மநோவாக்காயங்களுண்டு, அவற்றுக் காப்ரயம் நீருண்டு, வணங்கத் தட்டென்னென்ன (மனமுமித்யாதி) எனக்கா யிருப்பதொரு நெஞ்சும் வாக்கும் செய்கையும் எனக்காயிருப்பதொரு நானுமுண்டாகவேணுமே, எல்லாம் நீயிட்டவழக்கா யன்றோ விருக்கிறது; வணங்கவேணுமென்னும் நினைவுண்டு, வணங்கும்ப்ரகார மறிகிறிலேன். (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

யானும்நீதானே யாவதோமெய்யே அருநரகவையும் நீயானால் * வானுயரின்பமெய்திலென் ? மற்றைநரகமேயெய்திலென் ? எனிலும் * யானும்நீதானாய்த்தெளிதோறும்நன்றும் அஞ்சுவன் நரகம்நானடைதல் * வானுயரின்பம்மன்னிவீற்றிருந்தாய் ! அருளு நின்தாள்களை எனக்கே. (கூ)

ப.—அநந்தரம், இவ்வறிவோடே யெங்குமிருந்தாலும் குறைவற்றிருக்க, து:க்காத்மகமான ஸம்ஸாரத்திலிருக்க வஞ்சாநின்றேன், நிரதிஶய புருஷார்த்தமான ப்ராப்ய தேசவர்த்தியான வுன்திருவடிகளைத் தந்தருளவேணுமென்கிறார்.

(இ-ள்.) யானும்-அஹம்புத்தி வ்யவஹார விஷயமானநானும், நீதானே-த்வத்ப்ரகார பூதனாகையாலே நீ தானேயாயிருப்பன்; இப்படி (க) "த்வம் வா அஹமஸ்மி பகவோ தேவதே - அஹம்வைத்வமஸி பகவோதேவதே" என்று, ஆவது - இவ்வர்த்தம், ப்ரமாண ப்ரஸித்தமாகையாலே, மெய்யே - பரமார்த்தம், அரு - துஸ்தரமாய், நரகவையும் - து:கோத்தரமான ஸம்ஸாரத்தில் வஸ்துக்களானவையும், (௨) "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்கிற மர்யாதையாலே, நீ - த்வத்ப்ரகார பூதங்கள், ஆனால் - ஆனபின்பு, வான் - விலக்ஷணமானவுனக்கு ஶேஷமான வாத்மாவுக் கநுரூபமான பரமபதத்தில், உயர் - உச்ச்ரிதமான, இன்பம் - ஆநந்தத்தை, எய்திலென் - பெற்றிருக்கிலென், மற்றை - அவிலக்ஷணமாய் ஸ்வாதந்த்ர்யாவஹமாய் து:கோத்தரமாகையாலே யதுக்கெதிர்த்தட்டான, நரகமே - ஸம்ஸாரநிரயத்தை, எய்தில் - பெறில், என் - என், எனிலும் - என்கிற வர்த்தஸ்த்திதியானது லோகத்திலே வ்யவஹரித்துப்போரிலும், யானும் - ஜ்ஞாநாநந்தலக்ஷ

---

(க) (௨) சாந்தோ-௩-௧௪.

ணமாய் விலக்ஷணமான அஹமர்த்தம், நீதானே - அகிலஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநனான நீயாம்படி த்வத்ப்ரகாரமாக, தெளிந்தொறும் - உணர்ந்தபோதெல்லாம், நரகம் - ஸம்ஸாரநிரயத்தை, நான் - நான், அடைதல் - கிட்டுகையை, ஸ்ரீ கௌஸ்துபத்தைச் சேற்றிலே புதைத்தவோபாதி, நன்றும்-மிகவும், அஞ்சுவன் - அஞ்சாநின்றேன், வான் - பரமவ்யோம ஶப்தவாச்யமான பரமபதத்திலே, உயர் - அவாங்மநஸகோசரமாம்படி உச்ச்ரிதமான, இன்பம் - ஆநந்தத்தை, மன்னி - உடையையாய்க்கொண்டு, நிரந்தரமாக, வீற்று - உன்னுடைய ஸர்வஶேஷித்வ வ்யாவ்ருத்தி தோன்ற, இருந்தாய் - எழுந்தருளியிருக்கிறவனே, அவ்விபூதியிலுள்ளாரநுபவிக்குமடிமைசெய்கிற, நின் - உன், தாள்களை - திருவடிகளை, எனக்கு - எனக்கு, அருளு - தந்தருளவேணும். (கூ)

ஆறு ;—(யானுநீதானே) உம்முடைய ஸ்வரூபமுட்பட ஸர்வமும் நானே யென்னுமிடமறிந்தீராகில் உமக்கென்பக்கல் அலப்தாம்ஶமுண்டோ வென்னில் ;

ஸர்வமும் நீயேயாதலால், இவ்விடத்தே யிருந்தத்தோடு திருநாட்டிலிருந்தத்தோடு வாசியில்லை நிரூபிக்கில்; அப்படியேயாகிலும், ஸர்வமும்நீயே யென்னுமிடத்தை யறியச்செய்தேயும், திருநாட்டிலே நீயேயாயிருக்குமிருப்பைக்காணாதே யிருக்குமிவ்விருப்பாகிற நரகத்தை மிகவு மஞ்சாநின்றேன் ; அருளு நின்தாள்களை யெனக்கே யென்கிறார். (கூ)

ஈடு ; அவ ;—ஒன்பதாம்பாட்டு. "ஸகல பதார்த்தங்களும் நீயிட்டவழக்கு" என்கிற விசதஜ்ஞாநத்தோடே யிருக்குமிடத்தில் ஸம்ஸாரத்தோடு பரமபதத்தோடு வாசியில்லையேயாகிலும், இந்த ஜ்ஞாநத்துக்கு விரோதியான ஸம்ஸாரத்திலிருக்க வஞ்சாநின்றேன்; இதுக்கநுகூலமான பரமபதத்திலே யென்னைக் கொடுபோகவேணுமென்கிறார்.

(யானுநீதானேயாவதோமெய்யே) நான் "நீ" என்கிற சொல்லுக்குள்ளே யடங்கும்படி யுனக்கு ப்ரகாரமாய், நான் ப்ரஹ்மஶப்தவாச்யனும்படி யிருக்கிற விவ்வர்த்தமோ, அது ஸத்யம். (க) "ஆத்மேத்யேவ து க்ருஹ்ணீயாத்" (உ) "ஸஹம்ஸாரமப்ரவாய அஹம்மநுரபவம்ஸூர்யஶ்ச" என்

---

(க) போதாயந:. (உ) ப்ருஹ-ந-ச-க0.

றிறே முக்தர்பாசுரம். (மெய்யே) அதில் ஸம்சயமில்லை. (அருநரக வையும்ஈ) எனக்குப் பொறுக்கவொண்ணாதே கால்வாங்கியல்லது நிற்கவொண்ணாதபடியான ஸம்ஸாரமும் நீயிட்டவழக்கு. இதிப்போது சொல்லுகிறது, நீ நினைத்தவன்று கழித்துத்தரவல்லை யென்கைக்காக. ஆக, நானுமெனக்கு விரோதியான ஸம்ஸாரமும் உனக்கு ப்ரகாரம். (ஆனால்) அர்த்ததத்த்வமிதுவானால்.

(வானுயரின்பமெய்திலென்) சேஷத்வ ஜ்ஞாநத்தோடே திருநாட்டிலேபோய் நிரதிசயாநந்தத்தைப் பெற்றிருக்கிலென். (மற்றை நாகமேயெய்திலென்) ஸுகத்துக்கும் சேஷத்வஜ்ஞாநத்துக்கு மெதிர்த்தட்டான ஸம்ஸாரத்திலே யிருக்கிலென். உடையவன் வைத்த விடத்திலே கிடக்குமத்தனையன்றோ வென்றோர்த்ததத்த்வ முண்டு; (எனிலும்) இவ்வர்த்த மிப்படியானாலும்.

(யானுநீதானாய்த்தெளிதோறும்) இஸ்ஸம்ஸார முனக்குப்புறம் பென்கிற வாகாரத்தாலன்றிக்கே, "நானுனக்கத்யந்தசேஷபூதன்" என்கிற தெளிவு பிறக்கப்பிறக்க. (நன்றுமஞ்சுவன்நரகம்நானடைதல்) சேஷத்வஜ்ஞாநமுண்டானபின்பு சேஷவஸ்து சேஷிசெய்தபடிகண்டு அவனெல்லைக்குள்ளே கிடக்குமித்தனையன்றோ; நம்மை நிர்ப்பந்திக்கக்கடவனோ வென்றிறே தேவர்க்குநினைவு; உனக்கிது நினைவானாலும், இஸ்ஸம்ஸாரத்திலிருப்பை நான் மிகவு மஞ்சாநின்றேன், சேஷத்வ ப்ரதிபத்திக்கு விரோதியாகையாலே. நீரஞ்சுங் காட்டில் நம்மாற் செய்யலாவதுண்டோ வென்னில் (வானுயரின்பம் மன்னிவீற்றிருந்தாயித்யாதி) இதுவேயன்றிக்கே, நித்யவிபூதியிலே நிரதிசயாநந்தயுக்தனாய், உன்னுடைய சேஷித்வ வ்யாவ்ருத்தி தோற்ற விருப்பதோ ரிருப்புண்டு; அவ்விருப்பிலே யென்னை யழைத்து அஸாதாரணர் பரிமாற்றத்தை யெனக்குத்தரவேணும். (௯)

---

## பத்தாம்பாட்டு.

தாள்களை எனக்கேதலைத்தலைச்சிறப்பத் தந்த பேருதவிக்கைம் மாறா * தோள்களையாரத்தழுவி என்னுயிரை அறவிலைசெய்தனன் சோதீ! * தோள்களாயிரத்தாய்! முடிகளாயிரத்தாய்! துணைமலர்க் கண்களாயிரத்தாய்! * தாள்களாயிரத்தாய்! பேர்களாயிரத்தாய்! தமியனேன்பெரியவப்பனே. (௧௦)

**ப.**—அநந்தரம், ஆஶ்ராநுரூபோபகாரத்துக்குத் தாம்பண்ணின ப்ரத்யுபகாரத்தாலே அத்தலையிற்பிறந்த ஒளஜ்ஜ்வல்யத்தையு மதிஶயித வைபவத்தையுமருளிச்செய்கிறார்.

(இ-ள்.) "அருளுகின்றாள்களை யெனக்கே" என்ற வாசைக்கீடாக, தாள்களை - அத்திருவடிகளை, எனக்கே - எனக்கஸாதாரணமாம்படி, மோக்ஷத்வப்ரதிஸம்பந்தியாகவும், ஆஶ்ரயண ப்ரதிஸம்பந்தியாகவும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாகவும், தலைத்தலை - மேன்மேலென, சிறப்ப - சிறக்கும்படி, தந்த - தந்தருளின, பேருதவி - மஹோபகாரத்துக்கு, கைம்மாறு - ப்ரத்யுபகாரமாக, அமூர்த்தமான, என் - என், உயிரை - ஆத்மவஸ்துவை, உபகாரஸ்ம்ருதியிலுண்டான ஹர்ஷாதிஶயத்தாலே, தோள்களை - தோள்கள், ஆர - நிரம்பும்படி, தழுவி - † மூர்த்தவஸ்துவை யாலிங்கநம்பண்ணுமாபோலே அத்யாதாரம்பண்ணி, இஷ்டவிநியோகார்ஹமாம்படி, உபகார ப்ரத்யுபகாரங்களிலுண்டான க்ரயவிக்ரய ஸமாதியாலே, அறவிலை - அறவிலை, செய்தனன் - செய்துதந்தேன்; சோதீ - (க) "அதுவுமற்றாங்கவன் றன்னது" என்று மீளாதே, உபகாரஸ்ம்ருதியிலுண்டான கலக்கத்தாலேபண்ணின ஸமர்ப்பணத்தை ஹர்ஷப்ரகர்ஷத்தாலே, உன்னது பெற்றாயாயிராதே பெறாப்பேறுபெற்றாயான ஒளஜ்ஜ்வல்யத்தையுடையவனே, இந்தவடிவிலொளியளவன்றிக்கே, பஹுமுகமாகத்தழைத்த, (உ) "ஆயிரந்தோளால்" என்கிறபடியே, தோள்கள் - உபகாரகமான திருத்தோள்கள், ஆயிரத்தாய் - ஆயிரத்தையு முடையையாய், (ங) "ஸஹஸ்ரஶீர்ஷா - ஸஹஸ்ரஶீர்ஷா" என்கிறபடியே, முடிகள் - திருமுடிகள், ஆயிரத்தாய் - ஆயிரத்தையுமுடையையாய் "ஸஹஸ்ராக்ஷ:-ஸஹஸ்ராக்ஷ:" என்கிறபடியே துணை - இணையான, மலர் - மலர்போன்ற, கண்கள் - திருக்கண்கள், ஆயிரத்தாய் - ஆயிரத்தையுமுடையையாய், "ஸஹஸ்ரபாத் - ஸஹஸ்ரபாத்" என்கிறபடியே, தாள்கள் - திருவடிகள், ஆயிரத்தாய் - ஆயிரத்தையுமுடையையாய், (ச) "நாமஸஹஸ்ரவாந் - நாமஸஹஸ்ரவாந்" என்கிறபடியே, பேர்கள் - திருநாமங்கள், ஆயிரத்தாய் - ஆயிரத்தையுமுடையையாய், தமியனேன் - அறிவையும் ஶங்கிக்கும்படி தனிமைப்பட்டவெனக்கு, பெரியவப்பனே - உன் பெருமைக்கீடாக வுபகரித்த ஸ்வாமியானவனே.

இப்படி யௌஜ்ஜ்வல்யத்தையும் வைபவத்தையு முடையவனே, எனக்கு மஹோபகாரகனானவென்றுமாம்; "என்னுயிரை யறவிலைசெய்தனன்" என்றந்வயம். (கo)

---

(க) எ-கூ-கo. (உ) தி-மொ-ரு-எ-ச.

(ங) புருஷஸூக்தம். (ச) பார. † (பா) அமூர்த்த.

ஆறு ;—( தாள்களை ) ஸம்ஸாரிகளெல்லாரும் ப்ராக்ருதவிஷ யைக தாரக போஷக போக்யராயிருக்கச்செய்தே, என்னை யுன்திரு வடிகளையே தாரக போஷக போக்யமாயிருக்கும்படி பண்ணியருளி னாய் ; இந்த மஹோபகாரமே யமையாதோ, இவ்வுபகாரத்துக்குக் கைம்மாறாக வென்னுடைய வாத்மாவை யுனக்கே யடிமையாகத் தந் தேனென்னும் ப்ரீதியாலே ஸம்பாவித்து, தம்முடைய வாத்மாவை ஆத்மாந்த சேஷமாகக்கொடுத்து, இந்த மஹோபகாரத்தைப் பண்ணின வுன்னை யொருகால் காணவேணும். காண வெளிதோ வென்னில் ; காணவேணுமென் றபேக்ஷித்த வாஸ்ரிதர்க் காக வன்றோ, நீயஸங்க்யேய திவ்யரூபங்களையும், அஸங்க்யேய கல்யா ண குணங்களையு முடையையாயிருக்கிறது, உன்னையொழிய வொரு க்ஷணமாத்ரமும் செல்லாதிருக்கிறவெனக்கும் அரியையாகலாமோ பிரானேயென்கிறார். (௧௦)

ஈடு ; அவ ;—பத்தாம்பாட்டு. தாம்மநோரதித்தபடியே திரு வடிகளைத் தந்தருளின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக வில் வாத்மவஸ்துவை யுனக்குத் தந்தேனென்கிறார். இப்போது திரு வடிகளைக் கொடுக்கையாவது - ஸம்ஸாரத்தோடு பொருந்தாதபடி யையும் தன்னையொழியச் செல்லாதபடியையும் தமக்குப்பிறப்பித்த தசையை ப்ரகாசிப்பிக்கை.

(தாள்களையெனக்கே தலைத்தலைச்சிறப்பத்தந்த) (க) " பலரடி யார் முன்பருளிய " என்கிறபடியே- ஸ்ரீவால்மீகிபகவான், முதலாழ் வார்கள் தொடக்கமானாருண்டாயிருக்க, என்பக்கலிலே விசேஷ கடா க்ஷம்பண்ணி, மிகச்சிறக்கும்படி தந்த. பூர்ணமாகத் தந்தவென்கை. (பேருதவி) கொள்ளுகிறவென் தரத்திலன்றிக்கே, தன் தரத்திலே தருகை. (கைம்மாறு) ப்ரத்யுபகாரமாக. (தோள்களையாரத்தழுவி) ஒருவனுக்கொருவன் கந்யகையை யணைத்துக் கொடுக்குமாபோலே, இங்குமணைத்துக் கொடுக்கலாம்படி அபூர்த்தமான வாத்மவஸ்து, தாளுந்தோளுமாய்ப் பணைத்ததாயிற்று உபகார ஸ்ம்ருதியாலே. (உ) "எனதாவியாவியும் நீ - எனதாவியார் யானார்," (௩) "மனமும் வாசகமும் செய்கையும் யானுநீதானே " என்பதானவற்றை மறந்

(க) எ-௧௦-௪. (உ) உ-௩-௪.
(௩) எ-க-அ.

தார் ஹர்ஷத்தாலே. (என்னுயிரையறவிலைசெய்தனன்) என்னுடைய வாத்மவஸ்துவை தேவர்க்கநந்யார்ஹமாம்படி யறவிலை செய்து தந்தேன்.

(சோதீ) இவர் தம்மதல்லாததொன்றைத் தம்மதாக ப்ரமித்துக் கொடுத்தாப்போலே, அவனும் தன்னதல்லாததொன்றைப் பெற்றாப்போலே ப்ரமித்து உஜ்ஜ்வலனாகாநின்றான். (க) "விஜ்வரஃ - விஜ்வரஃ" என்னும்படி யிராநின்றான். (தோள்களித்யாதி) முன்பிழவாலே கூப்பிட்டவர் தரித்து ப்ரத்யுபகாரத்திலே யிழிந்தபடியைக் கண்டு, அத்தாலே அவனுக்குப் பிறந்த பௌஷ்கல்யத்தைப் பேசுகிறார். உபகார ஸ்ம்ருதியாலே யிவருடைய வாத்மவஸ்து தானுந் தோளுமாய்த் தளிர்த்தாப்போலே, * ஸைதகரூபமான வடிவும் பரபராகமாயிற்று.

ஒரு ஸம்ஸாரியை லபித்து அவாப்த ஸமஸ்தகாமனான விவன் இப்படி ஹ்ருஷ்டனானானென்கிறவிது கூடுமோவென்னில்; ஸார்வபௌமனை க்ஷத்ரியனுக்கோர் ருயர்த்திபுண்டென்று, அபிமதையான மஹிஷிபக்கலிலே காபமின்றிக்கே யொழியுமோ. அவாப்த ஸமஸ்தகாமத்வமும் ப்ரமாணஸித்தமாய், ஆஸ்ரிதவாத்ஸல்யமும் ப்ரமாண ஸித்தமானால் அப்படியே கொள்ளுமத்தனையன்றோ?. எனக்கு ஹர்ஷத்தைப் பிறப்பித்து, அந்தஹர்ஷத்தைக்கண்டு அத்தாலே தானிப்படி விஸ்த்ருதனானதே! யென்று கொண்டாடுகிறார்.

(தமியனேன்) இவன் ஸ்வரூபத்திலு மாஸ்ரித பாரதந்த்ர்யத்திலு மதிசங்கைபண்ணினபோதை வெறுமையை நினைத்துச்சொல்லுகிறார். (பெரியவப்பனே) பண்ணின வுபகார மோரளவுபட்டிருந்ததில்லையே!. என்பக்கலிலே யொருநன்மையுண்டாய்ச் செய்தாயல்லையிறே, ப்ராப்தியாலே செய்தாயத்தனையிறே. (கo)

## பதிற்றுப்பாட்டு.

பெரியவப்பனைப்பிரமனப்பனை உருத்திரனப்பனை * முனிவர்க்கு
உரியவப்பனை அமரரப்பனை உலகுக்கோர்தனியப்பன்தன்னை *
பெரியவண்குருகூர்வண்சடகோபன் பேசினஆயிரத்துள்ளும் *
உரியசொல்மாலை இவையும்பத்து இவற்றால் உய்யலாம்தொண்டீர்!
நங்கட்கே. (கக)

---

(க) ரா-பா-க-அபி.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி ஆத்மோஜ்ஜீவந ஹேதுவென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) பெரியவப்பனை - ஸர்வாதிக ஸ்வாமியாய், பிரமன் - ஸகலஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவுக்கு, அப்பனை - உத்பாதகனாய், அப்படியே, உருத்திரன் - ஸம்ஹாரகர்த்தாவான ருத்ரனுக்கும், அப்பனை - உத்பாதகனாய், முனிவர்க்கு - ஜ்ஞாநாதிகரான ஸநகாதிமுநிகளுக்கு, உரியவப்பனை - அஸாதாரணசேஷியாய், அமரர் - அவசிஷ்டரான தேவர்களுக்கு, அப்பனை - உத்பாதகனாய், இப்படி, உலகுக்கு - ஸகலலோகத்துக்கும், ஓர் - அத்விதீயனான, தனியப்பன்றன்னை - ப்ரதாந நாயகனானவனை - பெரிய -பெரிய, வண் - ஸம்பத்தையுடைத்தான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகராய், வண் - ப்ரபந்த நிர்மாணமுகத்தாலே மஹோதாரரான, சடகோபன் - ஆழ்வார், பேணின - அத்யந்தாபி நிவேசம்பண்ணி யாதரித்துச்சொன்ன, ஆயிரத்துள்ளும் - ஆயிரந் திருவாய்மொழிக்குள்ளும், பகவத்போக்யதாதிகுண ப்ரதிபாதகத்தில், உரிய - உரிய, சொன்மாலை - ஶப்தஸந்தர்ப்பத்தை யுடைத்தாயிருக்கும், இவைபத்தும் - இவைபத்தும், இவற்றால் - இவற்றாலே, தொண்டீர் - இதர விஷயங்களிலே சபலராய்த் தொண்டராய்த் திரிகிறவர்களே, நங்கட்கு - அநாதிகால மங்யபரரான நமக்கு, உய்யலாம் - உஜ்ஜீவிக்கலாம். (கக)

இது - எழுசீராசிரியவிருத்தம்.

ஆறு ;—(பெரியவப்பனை) ப்ரஹ்மாதி ஸகல ஸுரகணங்களுக்கும், ஸர்வலோகத்துக்கு மீஶ்வரனாயிருந்த நீயே உன்திருவடிகளைத் தந்தருளவேணுமென் றாசைபட்டு, (க) " ஶ்ரேஜ்ஜ்ஞாமஸஹாய ஸக்ஷ்யாஸ-ஶங்கேமத்பாக்யஸங்க்ஷயாத் " என்று பிராட்டி சொன்னாப்போலே சொன்ன உரிய சொன்மாலையான வித்திருவாய்மொழியை வல்லார்க்கு எம்பெருமானைப்பெறலாம்; நான் பட்டபாடு படவேண்டா. நீரிப்பாடுபடுவா னென்னென்னில்; இக்கண்ணாலே யிப்போதே காணவேணுமென்று படுகிறேன்; எம்பெருமானைப் பெறாதொழிகிறேனென்று படுகிறேனல்லே னென்கிறார். (கக)

ஈடு ; அவ ;—பதினோராம்பாட்டு. நிகமத்தில் - இத்திருவாய்மொழியிற்சொன்ன வர்த்தத்தை ஸங்க்ரஹேணசொல்லி, இத்தை யப்யஸிப்பார்க்கு ஸர்வேஶ்வரனை லபித்து உஜ்ஜீவிக்கலா மென்கிறார்.

---

(க) ரா-ஸு-உ-கூ-௩௩.

(பெரியவப்பனை) உபயவிபூதியுக்தனை. (பிரமனப்பனை) சதுர்த்தச புவநேச்வரனான ப்ரஹ்மாவுக்கு உத்பாதகனானவனை. (உருத்திரனப்பனை) அவன் புத்ரனான ருத்ரனுக்கும் நிர்வாஹகனானவனை. (முனிவர்க்குரிய வப்பனையென்கிறது) ஸநகாதிகளுக்கு ப்ரஹ்மபாவனையே யாகையாலே, உரியவென்று-அண்மை சொல்லுகிறது. (அமரரப்பனை) தேவர்களுக்கு உத்பாதகனானவனை. (உலகுக்கோர்தனியப்பன்றன்னை) இப்படிப்பிரித்துச்சொல்லுகிறதென்? ஸகலலோகங்களுக்கு மேகநிர்வாஹகனானவனை. (க) "ஸ-ஹ தா நாம யோவ்யஃ வி தா-பூ தாநாம்போவ்யயஃபிதா" என்றிறே யிருப்பது. இப்போதிவை சொல்லுகிறதென்னென்னில்; நிதியெடுத்தவன் "இன்னதுகண்டேன், இன்னதுகண்டேன்" என்னுமாபோலே; ஸ்வரூபத்திலும் குணத்திலு மதிசங்கைபண்ணினபோது இழந்தாராயிருந்தவற்றை லபிக்கையாலே யிவற்றைப்பிரித்துச் சொல்லுகிறார். முனிவர்க்குரிய வப்பனையென்று - ஆச்ரித பவ்யதையைச் சொல்லுகிறது.

(பெரியவண்குருகூர்) ரக்ஷகன் தாழ்த்தவாறே அதிசங்கைபண்ணுகையும், உபகார ஸ்ம்ருதியாலே ஹ்ருஷ்டராகையுமாகிற விவற்றுக்கடி அவ்வூரில் பிறப்பென்கை. (வண்சடகோபன்) மாநஸாநுபவ மாத்ரமாய்விடாதே, ப்ரபந்தீகரித்த வௌதார்யம். (பேணினவாயிரத்துள்ளுமுரிய சொன்மாலை யிவையும்பத்து) அவனைத்தாமாசைப்பட்ட படியைச்சொன்னபத்து. (உரியசொன்மாலை) (உ) "யதோவாசோ நிவர்த்தந்தே-அப்ராப்ய மநஸா ஸஹ" என்று மீளுகையன்றிக்கே, பகவத்குணங்களுக்கு நேரேவாசகமாகை. (இவற்றாலுய்யலாந்தொண்டீர்நங்கட்கே) அநாதிகாலம் பகவத்விமுகராய், விஷயாந்தரப்ரவணராய், (ங) "அஸந்நேவ-அஸந்நேவ" என்கிறபடியே அஸத்ஸமராயிருக்கிற நமக்கு, "ஸந்தமேநம்" என்கிறபடியே உஜ்ஜீவிக்கலாம். (கக)

---

எட்டாம்பத்து முதற்றிருவாய்மொழி முற்றிற்று.

---

(க) ஸஹஸ்ரநாமா. (உ) தை-ஆந-௯.

(ங) தை-ஆந-௬.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:

## எட்டாம்பத்து

## இரண்டாந்திருவாய்மொழி

## நங்கள் - ப்ரவேஶங்கள்.

ஆறு ;—(நங்கள்வரிவளை) இந்த வ்யஸநம்முறுகி எம்பெருமானோடே கலந்துபிரிந்த பிராட்டியாய், காணவேணுமென்று கூப்பிடுகிறார்.

ஸ்ரீவைகுண்டநாதனான ஸர்வேஶ்வரனும், "'உன்னுடைய கடாக்ஷலக்ஷ்யமாகப் பெறுவதுகாண்' என்றுரைசெப்பட வேண்டும்படியான வடிவையுடைய நீ யாசைப்படுகைக் கீடாயிருப்பதொரு விஷயமுண்டோ, நீயாசைப்பட்ட விஷயமேது" என்றும், "உனக்குச்செல்லுகிற வ்யவஸாயமேது" என்று மிவளுடைய தோழிமார் கேட்க ;

ப.—இரண்டாந்திருவாய்மொழியில், தம்முடைய வாகாங்க்ஷாநுரூபமாக அகவாயிலே அவன் வந்து முகங்காட்டினபடியை யநுஸந்தித்தவர், அவனுடைய பூர்த்தியைக்கண்டு பாஹ்ய ஸம்ஶ்லேஷம்பண்ண வபிநிவேஶித்து அதித்வரிதசித்தராய், ப்ராப்யபூதனான வீஶ்வரனுடைய வதிகம்யத்வஸூசகமான ஸௌலப்யாதி குணவத்தையையும், அநுபாவ்யாகாரத்தையும், ஆகர்ஷகமான வாபிரூப்யத்தையும், அநிஷ்ட நிராஸகமான பரிகரவத்தையையும், அபரிச்சேத்யமான வௌஜ்ஜ்வல்யாதிஶயத்தையும், அதிஶயித ஜ்ஞாநர்க்கு மவகந்துமஶக்யதையையும், அபிநிவேஶஜநகமான வாகரவிஶேஷங்களையும், அந்யஸக்தவிஷயத்தில் அஸுலபதையையும், அநந்யார்ஹத்வா பாதகத்வத்தையும், சித்தாபஹாரியான திவ்யவிக்ரஹோச்ச்ராயத்தையு மநுஸந்தித்து, ஏவம்பூதனான ஸர்வேஶ்வரனை யநுபவிக்குமிடத்து இவ்வருகுண்டான வநுபவத்தில் ஸங்கமற்றாலல்லது ஸித்தியாதென்றறுதியிட்டு த்வரையாலே ஆர்த்தரானதம்முடைய வார்த்தியை யாற்றுகைக்காக நிஷேதோந்முகரான ஸுஹ்ருத்ப்ராப்ருதிகளைக்குறித்துத் தம்முடைய நிஸ்ஸங்கதையை வெளியிட்டப்ரகாரத்தை நாயகனான வீஶ்வரனைப்பிரிந்த நாயகியானவள் தன்னுடைய வபிஸரணோத்யோகத்தாலே தோழிமார் தாய்மாரோடு தான்வளர்த்தகிளி பூவை மயில் குயில்களோடு வாசியற ஸர்வர்பக்கலிலும் ஸங்கமற்றுத் தன்னுடைய ஸ்த்ரீத்வாதி குணங்களையு மநாதரித்து அவன் வடிவழகிலே யபஹ்ருத சித்தையான வாகாரத்தைப்பேசின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

ஈடு ;—கீழ்திருவாய்மொழி ப்ராபகப்ரதாநம், இது ப்ராப்ய ப்ரதாநமாயிருக்கிறது. கீழே அவன் குணங்களிலும ஸ்வரூபத்திலு மதிசங்கை பண்ணித்தெளிந்து, " வணங்குமாறறியேன் " என்று தந்தலையில் ஸாதநயோக்யதையைத்தவிர்த்து, " யானுநீதானேயா வதோமெய்யே " என்று அவன்பக்கல் ந்யஸ்தபரதையைச்சொல்லி, இப்படி ப்ராஸங்கிகமாக " அவனேப்ராபகன் " என்னுமிடத்தை நிஷ்கர்ஷித்தார்.

அவனே ப்ராபகனுமிடத்தில் பேற்றுக்கு விளம்பஹேதுவில்லை யாயிருக்க, அவன்வந்து முகங்காட்டாதொழிகைக்கு ஹேதுவுண்டாக வேணுமென்று பார்த்தார்; அதில் அவன்பக்கல் பார்க்கலாவ தொன்றில்லை, இதுக்கடி நம்பக்கலிலே யாகவேணும்; (க) " உமெ வஉ-ஷுஹூ தஂகிஂ விநஹஉ வி நவாஂஶய:- மமைவ துஷ்க்ருதம்கிஞ் சிந்மஹதஸ்திநஸஂஶய: " என்றாளிறே பிராட்டி. இவருமப்படியே, " நெடுநாள் ஸம்ஸரித்துக்கண்ட தெல்லாவற்றிலும் ருசிபண்ணிப் போந்தோம், நம்முடைய பூர்வவ்ருத்தத்தையும் நமக்கிப்போதுள்ள வளவையும் ஸர்வஜ்ஞனவ னறியாமையில்லை ; நாமறியாதிருக்க, அவனறிய வவன்பக்கல் ருசியிலே நமக்குக்குறையுண்டாகவேணும்" என்று பார்த்து, " அதுண்டாகவுமாம், இல்லையாகவுமாம், புறம் புண்டானவற்றில் ருசியில்லை யென்னுமிடத்தை அவன்திருவுள்ளத் திலே படுத்துவோம் " என்று பார்த்து, ப்ராப்யவிரோதிகளிலும், ப்ராபகவிரோதிகளிலும் தமக்கு ருசியில்லாமையை அந்யாபதேசத் தாலே யருளிச்செய்கிறார்.

ஸர்வேஶ்வரனோடு கலந்துபிரிந்தா ளொருபிராட்டி, அவன் தானே வரக்கண்டிருக்கையன்றிக்கே. * அபிசாரிகையாய் அவனி ருந்ததேசத் தேறப்போவதாக வொருப்பட ; இத்தையநுஸந்தித்த தோழிமார் தொடக்கமானோர், " உனக்கிதாகாதுகாண் " என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்க, அவர்களைக்குறித்து, தோழிமார் தொடக்கமானவர்களிலும் மற்றுமுள்ளவர்களிலும் நசையில்லா மையை அவர்களுக் கறிவிக்கிற பாசுரத்தாலே தமக்கு நசையில்லா மையை அவன் திருவுள்ளத்திலே படுத்துகிறார்.

---

(க) ரா-ஸு-கூ-அ-கூஅ.

# முதற்பாட்டு.

நங்கள்வரிவளையாயங்காளோ! நம்முடையேதலர்முன்புநா
ணி * நுங்கட்குயானொன்றுரைக்கும்மாற்றம் நோக்குகின்றேன்
எங்கும்காணமாட்டேன் * சங்கம்சரிந்தனசாயிழந்தேன் தடமுலை
பொன்னிறமாய்த்தளர்ந்தேன் * வெங்கண்பறவையின்பாகன் எங்
கோன் வேங்கடவாணனைவேண்டிச்சென்றே. (க)

ப —முதற்பாட்டில், ஸர்வஸுலபனை திருவேங்கடமுடையானை யபி
நிவேஶித்து என்னுபாண லோபையோடு ஆபிரூப்யத்தோடு வாசியற விழந்தே
னென்று தோழிமார்க் கறிவிக்கிறார்,

(இ-ள்) வரி - வரியையுடைத்தான, வளை - வளையையுடையாயிருக்
கிற, நங்கள் - நம்முடைய, ஆயங்காளோ - ஆயங்காள், நம்முடை - ஸமாந
ஸுகதுःகைகளான வுங்களைப்போலன்றியே, ஏதலர் - ஹிதவசனம்பண்ணி
மீட்கத் தேடுகிறவர்களாகையாலே ஶாத்ரவகோடியிலே நிற்கிறதாயார், அய
லார், முன்பு - முன்பு, நாணி - சொல்லநாணி, நுங்கட்கு - அந்தரங்கைகளான
வுங்களுக்கு, யான், உரைக்கும் - சொல்லலாவது, ஒன்று - ஒரு, மாற்றம் -
வார்த்தையானது, நோக்குகின்றேன் - பாராநின்றேன்; எங்கும் - எல்லாவழி
யாலும், காண - இந்த்விகாரஹேதுவைப் பாசுரமிட்டுச்சொல்லும்படிகாண,
மாட்டேன் - மாட்டுகிறிலேன், ஆகலால்-என்விகாரங்கொண் டறியுமித்தனை,
அதாவது, வெம் - ஆஶ்ரிதவிரோதிகளை யழியச்செய்யும் வெவ்விய, கண் -
பார்வையையுடைய, பறவையின் - பெரியதிருவடியைநடத்தும், பாகன் - நிர்
வாஹகனாய், அந்தவாஹநாதிஷ்டாநத்தைக்காட்டி, எம் - என்னையடிமை
கொண்ட, கோன் - ஸ்வாமியாய், அநுபவிக்கைக்கீடாக, வேங்கடம்- திருமலை
யிலே, வாணனை - ஸுலபனாய்வந்து நிற்கிறவினை, வேண்டி - இவ்வாகா
ரங்களடியாகவபிநிவேஶித்து, சென்று - நடந்து, சங்கம் - என்னுடைய சங்கு
வளைகளானவை, சரிந்தன - சரிந்துகழன்றன, சாய் - ஸ்வாபாவிகமான வடிவி
லொளியும், இழந்தேன் - இழந்தேன், தடம் - பெரிய, முலை - முலைகள்,
பொன்னிறமாய் - பசப்பாலே பொன்னிறமாய், தளர்ந்தேன் - ஶிதிலசரீரை
யானேன்.

நிர்தோஷப்ரமாணருடனாய், நிருபாதிக ஸம்பந்தயுக்தனாய், நிரவதிக
ஸௌலப்ய விஶிஷ்டனானவனென்று கருத்து. (க)

ஆறு ;—உகவாதார்முன்பு என்னுடைய வ்யவஸாதத்தை வ்யஞ்
ஜிப்பிக்கையிலுள்ள லஜ்ஜையாலும், அவஸாதந்தான் நிரவதிகமாயு

மிருக்கையாலே அதுக்கு வாசகமாயிருப்பதொரு ஶப்தம் காணாமை யாலும் என்னுடைய வ்யவஸாயத்தை உங்களுக்குச் சொல்லமாட்டு கிறிலேன். இப்படி வ்யவஸாயம்வருகைக் காசைப்பட்டதென்னென்னில்; தீக்ஷ்ண நிரீக்ஷண நிர்த்தக்த ப்ரதிபக்ஷரான பெரிய திருவடியை வாஹநமாகவுடைய திருவேங்கடமுடையானை யாசைப்பட்டு, சங்கம் சரிந்தன சாயிழுந்தேன் தடமுலை பொன்னிறமாய்த் தளர்ந்தே னென்கிறாள். (க)

ஈடு ; அவ ;—முதற்பாட்டு; தோழிமாரானவர்கள், "உகவாதாரெதிரன்றோ லஜ்ஜிக்கவேண்டுவது, எங்களுக்கு லஜ்ஜிக்கவேணுமோ, உனக்கோடுகிற தசையைச்சொல்லு" என்ன, பிறர்க்கு மறைத்து உங்களுக்குச் சொல்லலாம் வார்த்தை பார்த்தவிடத்து ஒன்றுங் காண்கிறிலே னென்கிறாள்.

(நங்கள்வரிவளை) முன்பு உங்களோடொன்றோடு வாசியறவெல்லார்க்கு முண்டானவளை. (க) "வனவாஸே மஹாரண்யே ஸமா வர்ஷாணி சாஷ்ட ச । துக்கம்ஸுகஞ்சவிஜாநே" என்று ஸுகதுக்கங்களொன்றாகச் சொல்லிப்போந்த நீங்கள் அநுஷ்டாநத்திலே வந்தவாறேபேதிப்பதே!. இப்போதநுஷ்டாநத்தில் பேதமென்னென்னில் ; கையிலேகண்டிலோமோ. நான் சங்கையற்றிருந்தேன்; நீங்கள் சங்கையுடையீகோளாயிருந்திகோள். (வரிவளை) வரியையுடையவளையென்னுதல், தர்ஶநீயமானவளை யென்னுதல். இவளை தரிப்பிக்கைக்காக அவர்களும் வருந்தி தரித்திருப்பார்களிறே. பிராட்டியைப் பிரிந்தவிடத்தில் பெருமாளிற்காட்டிலும் " தம்முடைய காவற்சோர்வாலேவந்தது " என்று தளர்த்திபிராட்டித் திருக்கச்செய்தேயும், பெருமாள் தளருவரென்று தம்முடைய தளர்த்தி தோற்றாதபடி இளையபெருமாள் தரித்திருந்தாப்போலே, இவர்களும் தரித்திருப்பர்கள் வளையை.

(ஆயங்காளோ) தோழிமாரிலும் தரமுண்டாயிருக்க, இப்போதெல்லாரு மொருபடிப்பட்டிருக்கிறார்கள். (ஆயங்காள்) தோழிமீர். (ஓ) விஷாதாதிஶயஸூசகம். அவர்களை ஸம்போதித்துவைத்து வார்த்தை சொல்லுவதுக்கு முன்னே விஷண்ணையாகிறாள். இவ்விஷாதஹேதுவைப் புறம்புள்ளார்க்கு மறைத்தாயாகிலும் எங்களுக்குச் சொல்லவேண்டாவோ, உனக்கோடுகிறதசையைச் சொல்லா

(க) ரா-கிஷ்-இ-கஅ.

யென்ன (நம்முடையித்யாதி) தோழிமாரிப்போது ஹிதஞ்சொல்லி மீட்கப்பாரா நின்றார்களாகிலும், பெறுமிடத்தில் விழுக்காட்டிலொத்திருக்கையாலே-நம்முடையேதலரென்கிறாள். ஏதலர்-ஶத்ருக்கள். இவளுக்குச்சில ஶத்ருக்களில்லையிறே; ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்கிற தாய்மாரிறே ஶத்ருக்கள். (ஏதலர்முன்புநாணி) ஶத்ருக்கள் முன்புலஜ்ஜித்து. (நுங்கட்கு) தோழிமாரான வுங்களுக்கு (யானித்யாதி) நானொருவார்த்தை சொல்லவேணுமென்றாராய்ந்து பாரா நின்றேன்; (எங்குங்காணமாட்டேன்) இதுக்கொருபாசுரமிட்டுச் சொல்லவேணுமென்று பார்த்தவிடத்து ஒருபடியாலும் க்ஷமையாகிறிலேன்.

மாட்டேனென்கிறதென், சிலர்க்கு மறைத்து ஆப்தர்க்குச் சொல்லத்தட்டென்னென்ன (சங்கம்சரிந்தன) நானித்தை யார்க்கு மறைத்து ஆர்க்குவெளியிடுவது. "ஜமநுஷூதழ் - ஜகதஸ்த மிதம்" என்றாப்போலே காணுமிருக்கிறது. இவளைக் கிடையாத போது நாயகனில்லை, நாயகனில்லாதபோது உபய விபூதியுமில்லை. அதாவது - இவள்கையும் வளையுமாயிராதவன்று நாயகனுளனாகமாட்டான்; இருவருமான சேர்த்தியிலே யுண்டாகக்கடவ வுபயவிபூதியு மழியும். (சாயிழந்தேன்) அவனோடேகலந்து பெற்றதாய், அவன் வருமளவும் தரிக்கைக்குக் கைம்முதலான வெழிலையுமிழந்தேன். (தடமுலையித்யாதி) அவன் வந்தாலும் ப்ரயோஜநமில்லாதபடி அவன் கைம்முதலுமழிந்தது. (தடமுலை) போக்தாவாலுண்டறுக்கவொண்ணாத பரப்பையுடையமுலை. (பொன்னிறமாய்) விவர்ணமாய். ஸ்க்ஷேத்ரம் மணலீடாய்ப் போமாபோலே. (தளர்ந்தேன்) இழந்தவை வந்தாலும் தொங்குகைக் காம்ரயமில்லை.

(வெங்கட்பறவையின் பாகனெங்கோனித்யாதி) இழந்த விழவுக்கு ஹேதுசொல்லுகிறது. (வெங்கட்பறவை) வெவ்வியகண்ணையுடைய பெரியதிருவடி. வருமிடத்தில் ப்ரதிபந்தகங்களையும் போக்கிக்கொடுவருமென்னுதல். ஸம்ஶ்லேஷத்தையிலே பிரித்துக்கொடு போமென்னுதல். (க) "[illegible]-அக்ரூர: க்ரூர ஹ்ருதய:" (பறவையின்பாகனெங்கோன்) பெரியதிருவடி முதுகிலிருப்பைக்காட்டியாயிற்று என்னையநந்யார்ஹையாக்கிற்று. (வேங்க

(க) வி-பு-ரு-கஅ-௩௰.

டவாணனே) பரமபதத்திலிருப்பை யாசைப்பட்டேனல்லேன், நமக்குக்காட்சிதருகைக்கு வரநின்றவிடத்தே. (வேண்டிச்சென்றே) நம்மை வேண்டிவந்தவனை நாம் வேண்டிச்சென்று. நாமாசைப்பட்டுச் சென்றென்றபடி. அவன்றான் வரக்கண்டிருக்கையன்றிக்கே, அவனிருந்த தேசத்தளவும் சென்றபேக்ஷிதம் பெறுமையாலே, சங்கம் சரிந்தன. (சென்று) பால்சென்றாப்போலே சென்றற்றென்றுமாம்.

---

## இரண்டாம்பாட்டு.

வேண்டிச்சென்றொன்றுபெறுகிற்பாரில் என்னுடைத்தோழியர்நுங்கட்கேலும் * ஈண்டிதுரைக்கும்படியைஅந்தோ! காண்கின்றிலேன்இடராட்டியேன்நான் * காண்தகுதாமரைக்கண்ணன்கள்வன் விண்ணவர்கோன்நங்கள்கோனைக்கண்டால் * ஈண்டியசங்கும்நிறைவும்கொள்வான் எத்தனைகாலம்இளைக்கின்றேனே. (உ)

ப.—அநந்தரம், அநுபாவ்யாகார விசேஷத்தையுடையனை வவனபஹரித்தவளை முதலானவற்றை வாங்குகைக்கு எத்தனைக்காலம் க்லேசிக்கிறேன், உங்களுக்ககப்பட விதுசொல்லும் விரகறிகிறிலேனென்கிறாள்.

(இ-ள்.) சென்று - இவன்பாடே சென்று, ஒன்று - ஒன்று, வேண்டி - வேண்டி, பெறுகிற்பாரில் - பெறவேணுமென்றிருப்பாரில், என்னுடை - எனக்கஸாதாரணைகளான, தோழியர் - தோழிமாரான, நுங்கட்கேலும் - உங்களுக்கேயாகிலும், ஈண்டு - இவ்விடத்தில், இது - இந்தவஸாதஹேதுவை, இடராட்டியேன் - து:காபிபூதையான, நான் - நான், சொல்லி யாறவேண்டியிருக்கச்செய்தே, உரைக்கும்படியை - சொல்லும்படியை, அந்தோ - ஐயோ!, காண்கின்றிலேன் - காண்கிறிலேன்; து:கமேதென்னில், காண் - எப்போதும் காண்கைக்கு, தகு - தக்கிருப்பதாய், தாமரை - விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றங்களாலே தாமரைபோன்றிருக்கிற, கண்ணன் - கண்ணையுடையனாய், கள்வன் - பார்வையாலே தன் பவ்யதையைக் காட்டி வஞ்சித்து ஸர்வஸ்வாபஹாரம்பண்ணின க்ருத்ரிமனாய், இக்கண்ணழகாலே, விண்ணவர் - ஸூரிகளையடங்க, கோன் - அலற்றப்பண்ணுமவனாய், அப்படி, நங்கள் - என்னையும், கோனை - ஈடுபடுத்தினவனை, கண்டால் - கண்டால், ஈண்டிய - என் பக்கலில் நின்று மங்கேபோய்க்குவிந்த, சங்கும் - வளைகளையும், நிறைவும்-ஸ்த்ரீத்வாதிபூர்த்தியையும், கொள்வான் - வாங்கிக்கொள்ளுகைக்காக, எத்தனை - எத்தனை, காலம் - காலமுண்டு, இளைக்கின்றேன்-தளர்ந்து க்லேசிக்கிறேன்,

ஆறு ;—(வேண்டிச்சென்று) நீ யாசைப்பட்டவிஷயம் - திரு வேங்கடமுடையானாகில் அது யுக்தம் ; உனக்குங்கூட ஸ்ப்ருஹணீயனானவனாகிலும், நீயாசைப்பட்டால் கிடையாததுண்டோவென்னில் ; ஆசைப்பட்ட பொருள் பெறுவாரெல்லாரிலும் தலையாயிருக்கச்செய்தேயும், ஆசைப்பட்டுப்பெறாதே நான்படுகிறவ்யஸநம் வாசாமகோசர மாகையாலே வ்யஸநப்படு மத்தனையல்லது உங்களுக்குச் சொல்லுகைக் கொருசொல்லு சொல்லக்காண்கிறிலேன். அவனை யாசைப்பட்டால் உத்தரக்ஷணம் பெறுதொழியில் தளர்ந்து கொண்டு நிற்குமித்தனையோ வென்னில் ; ஸதாநுபூயமாந மாநலும் அபூர்வதர்ஸநீயமாய், புண்டரீகதளாமலாயதமான திருக்கண்களையுமுடையனாய் தத்ஸௌந்தர்ய பரிமுஷித ஸகலஜந மநோநயநனாய், * அயர்வறுமமரர்களதிபதியா யிருந்துவைத்து, என்னையடிமைகொண்ட பரமஸீலனாயிருந்த வவனை யாசைப்பட்டுப் பெறாதே என்னுடைய வலயாதி பூஷணங்களையும், ஆத்ம குணங்களையுமிழந்து, அவை கொள்கைக்கு நான் வருந்துகிற தெத்தனைகாலமுண்டென்கிறாள். (உ)

ஈடு ; அவ ;—இரண்டாம்பாட்டு. " இப்படியானாலும் அந்தரங்கைகளான வெங்களுக்கு நோவிற் சொல்லலாகாததுண்டோ சொல்லாய் " என்ன, து:க்காநுபவத்தால்வந்த விளைப்பின் மிகுதியாலே உங்களுக்குச் சொல்லும் பாசுர மறிகிறிலேனென்கிறாள்.

(வேண்டிச்சென்றேன்று பெறுகிற்பாரில்) என்பக்கலிலே வந்தொன்றை யபேக்ஷித்துப் பெறுமவர்களில் தலையான வரிசையையுடைய தோழிமாரான வுங்களுக்காகிலும். (என்னுடைத்தோழியர்) உயிர்த்தோழியர். சென்றென்றது - வந்தென்றபடி. அங்ஙனன்றிக்கே, பதபங்கத்தைப்பண்ணி, ( வேண்டிச்சென்றேன்றுபெறுகிற்பார் இல்)அவனையொன் றபேக்ஷித்துச்சென்றாரில் ஓரபேக்ஷிதம் பெற்றாரில்லை ; (க) " ஸக்ரு ஹௌ ஜௌ ஹிவி ஷ ண:-ஸகலபலப்ரதோஹிவிஷ்ணு:," (உ) " வேண்டிற்றெல்லாந்தரும் " என்கிறவிடம் உக்திமாத்ரமே " என்றொரு தமிழன் நிர்வஹித்தான்.

(ஈண்டு) இப்போது. முன்பெல்லாம் சொல்லிப் போந்தேனேயாகிலு மிப்போது சொல்லலாவது காண்கிறிலேன். (இது) எல்லா

(க) வி-த-மாங்கள்யஸ்த. (உ) ந-கூ-ரு.

வற்றிலும் பாசுரமிட்டுச் சொல்லிப் போந்தேனே யாகிலும், இது சொல்லுகைக்குப் பாசுரங்காண்கிறிலேன். (உரைக்கும்படியை) நெஞ்சிலே விஷமூர்ந்தாப்போலே யூராநின்றது, பாசுரமிட்டுச் சொல்லலாவதில்லை. (அந்தோ! காண்கின்றிலேன்) எனக்கோடுகிற தசையை யுங்களுக்குச்சொல்லி யகஞ்சுரிப்படுத்தி தரிக்கைக்குக்கேட்கிற வுங்களிலுமெனக்குத் தேட்டமாயிருக்க, பாசுரங் காண்கிறிலேன். (க) "[illegible]-ப்ரலாபைரேவதார்யதே" (இடராட்டியேன்நான்) நோவாட்டியேன் நான். என்னிடருக்கன்றிக்கே, "சொல்லு, சொல்லு" என்றலைக்கிற வுங்களுக்கன்றிக்கே, து:க்கப்படுகிற நான்.

(காண்டகுதாமரைக்கண்ணன்) காணத்தக்கிருந்துள்ள கண்ணையுடையவன். ஸதா தர்ஶநயோக்யமான கண்கள், விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றம், இவற்றால் பங்கஜஸத்ருஶமாயிருக்கை, (கள்வன்) நோக்காலே தன் செல்லாமையை யாவிஷ்கரித்து, என்னாத்மாத்மீயங்களை யபஹரித்தவன். (விண்ணவர்கோன்நங்கள் கோனை) நித்யஸூரிகளைப்போலே யென்னை யநந்யார்ஹையாக்கினவன். ஒருவிபூதியாகப் படுத்தினபாட்டைக்கிடீர்! என்னை யொருத்தியையும் படுத்திற்று. (கண்டால்) காணப்பெற்றால்.

(ஈண்டியசங்கும்) திரண்டவளையையும். ஒருவலம்புரிகிடந்தவிடத்தே ஆயிரம்சங்குசேரும். (உ) * வலம்புரியாழியன் - வேங்கடவேதியனிறே. (நிறைவும்) அடக்கத்தையும். (கோள்வான்) கொள்ளுகைக்காக. தன்பக்கல் தொங்காதவை யெல்லாவற்றுக்கும் புகல் அங்கேயென்றிருக்குமே. இவளுக்குக் கைமுதல் அங்கேயிறே. இதுவாகி லுன்துணிவு காலஞ்சென்றவாறே நீயே யிளைத்து மீளுகிறாயென்ன. (எத்தனைகாலமிளைக்கின்றேனே) இதுசொல்லிப் பகட்டக் கேட்பனோ, இவ்வாசையோடே யெத்தனைகால முண்டிளைத்துப் போருகிறது. (உ)

---

(க) உத்-ரா-ச (உ) தி-மொ-க-க-க.

## மூன்றாம்பாட்டு.

காலம்இளைக்கிலல்லால்வினையேன்நான் இளைக்கின்றிலன் கண்டுகொண்மின்*ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீர்! இனி நாணித்தானென் ?*நீலமலர்நெடுஞ்சோதிசூழ்ந்த நீண்டமுகில்வண்ணன்கண்ணன்கொண்ட * கோலவளையொடுமாமைகொள்வான் எத்தனைகாலமுங்கூடச்சென்றே. (ந)

ப.—அநந்தரம், அதிஶயிதாபிரூப்யத்தை யுடையவனைச் சென்று கிட்டி என்வளை தொடக்கமானவை வாங்குமிடத்தில், நீங்கள் " அவன் துர்லபன் " என்று விலக்கிலும், காலம் முடிந்துபோகிலும், நான் கிட்டியல்லது விடேனென்கிறாள்.

(இ-ள்.) நீலம் - நீலநிறமாய், மலர் - விகஸிதமாய், நெடும் - அபரிச்சேத்யமான, சோதி - தேஜஸ்ஸாலே, சூழ்ந்த - சூழப்பட்ட, நீண்டமுகில் - மஹாமேகம்போலே யிருக்கிற, வண்ணன் - நிறத்தையுடைய, கண்ணன் - க்ருஷ்ணன், கொண்ட - அபஹரித்துக்கொண்ட, கோலம் - தர்ஶநீயமான, வளையொடு - வளையோடேகூட, மாமை - என்னிறத்தை, எத்தனைகாலமும்-அநேககாலம், கூடச்சென்றே - கூடச்சென்றேயாகிலும், கொள்வான் - கொள்ளுகைக்காக, ஞாலம் - லோகம், அறிய - அறியும்படி, பழி - துணிந்து புறப்பட்டாளென்கிற பழியை, சுமந்தேன் - சுமந்தேன், நல் - அழகிய, நுதலீர் - நுதலையுடைய தோழிமீர், இனி - இனி, நாணித்தான் - லஜ்ஜித்து, என்- என்ன ப்ரயோஜநமுண்டு, ஆதலால், காலமிளைக்கிலல்லால் - காலமிளைத்து முடிந்து போமதொழிய, வினையேன் - அவன் துர்லபனானாலும் விடமாட்டாத பாபத்தையுடைய, நான் - நான், இளைக்கின்றிலன் - இளைத்துவிடுகிறேனல்லேன், கண்டுகொண்மின் - இது ப்ரத்யக்ஷித்துக்கொள்ளுங்கோள். (ந)

ஆறு ;—(காலமிளைக்கில்) அவனை யாசைப்பட்டுப்பெறுதே உனக்குள்ளவையுமிழந்து அவை பெறுகைக்கு நெடுங்காலம்வருந்தியும் பெறுதபின்பு, இனித்தான் வருந்தினால் கிடைக்குமோ ; இனியவை பெறுகையில் வருந்தாதே விட்டாலோவென்னில் ; நிரவதிக நீலஜ்யோதிః பரிவ்ருத மஹாவலாஹக ஸத்ருஶமான திருமேனியையுடையனான க்ருஷ்ணனாலே யபஹ்ருதமான கோலவளையொடுமாமை கொள்வான் உத்யுக்தையான நான் எத்தனைகாலம் கூடச்சென்றாகிலும் கொள்வன்; இக்காலதத்த்வந்தான் முடிந்துபோமத்தனையல்லது

நான் கொண்டல்லதுவிடேன், இத்தைக்கண்டு கொண்மின். அவன் ருறுசைப்பட அவனுக்குமரியையா யிருக்கக்கடவ நீ அவனை யா சைப்பட்டால் உனக்குப் பழிவருமென்று லஜ்ஜையில்லையோ வென் னில் ; ஞாலமறியப் பழிசுமந்தேன் நன்னுதலீரினி நாணித்தாலெ ன்னென்கிறாள். (ங)

ஈடு ; அவ ;—முன்றும்பாட்டு. நாங்கள்சொல்ல மீண்டிலையா கிலும் எட்டவொண்ணுத விஷயமாகையாலே நாட்சென்றவாறே நீயேமீளுவுதி, எங்கள்வார்த்தைக்கு மீண்டாயாக வமையாதோவெ ன்ன ; காலதத்த்வம் முடியிலும் நானவனைக் கண்டல்லது விடே னென்கிறாள்.

(காலமித்யாதி) (க) " ஸநாதி ஊஃமவாநு கா௵ நாஂ௵தா ஸ௱-அநாதிர்ப்பகவாந்காலோநாந்தோஸ்ய" என்கிறகாலம் முடிந்து போ மித்தனையல்லது நானிளைத்துமீளுகிறிலேன். (நானிளைக்கின்றி லன்) (உ) " நகாஎஸ்ர ஸு ஸ௱-நகாலஸ்தத்ரவைப்ரபுః" என்று காலத்துக்கு மவ்வருகான விஷயத்தை விளாக்கொலை கொண்ட வபிநிவேசத்தையுடைய நான் மீளுவனோ. (வினையேன்) "ஓ ஸ-ஃஜ-துர்லபம்" என்றும் மீளவொண்ணுதவிஷயத்திலே கைவைக்கும்படியான பாபத்தைப்பண்ணினேனென்னுதல், நீங்கள் சொன்னவார்த்தை நெஞ்சில் படாதபடியான பாபத்தைப்பண்ணி னேனென்னுதல். இப்போ திங்ஙனே சொன்னுயாகிலும் மேலநுஷ் ட்டிக்கிறுய் நீயேயென்ன (கண்டுகொண்மின்) ப்ரத்யக்ஷிக்கலான வர்த்தம் பிறர்பக்கலிலே கேட்டறியவேணுமோ.

உன்துணி விதுவானபின்பு எல்லாருமொக்கப் பழிசொல்லுகி றார்களிறேயென்ன (ஞாலமறியப்பழிசுமந்தேன்) இன்றோ நான்பழி சுமந்தது ; (ங) " நாடுமிரைக்கவே " என்றவன்றே பழிசுமந்திலே னோ. " பழிசுமந்தேன் " என்னுமதுவார்த்தையோ, ஸ்த்ரீத்வப்ர யுக்தமான லஜ்ஜையை நோக்கவேண்டாவோவென்ன (நன்னுதலீரி னிநாணித்தானென்) நம்முகழிவதற்குமுன்பன்றோ அவைநோக்க வேண்டுவது, ஜகத்ப்ரஸித்தமாய் விட்டதாகில் இனிலஜ்ஜித்தென்ன ப்ரயோஜனமுண்டு. (நன்னுதலீர்) நுதல்-நெற்றி. உங்கள்முகத்தி

(க) வி-பு-க-உ-உஅ. (உ) பார-மோக்ஷ-

(ங) இ-ங-க0.

லெழிலழியாதிருக்க என்முகத்தி லெழில்குடிபோனபடி கண்டிகோ ளே ; இந்த நெடுவாசியைப்பார்த்தன்றோ வார்த்தைசொல்லுவது.

அதுகிடக்க, அவன் ஸௌந்தர்யம் நம்மைநினைத்தபடி செய்ய வொட்டாநின்றதோ வென்கிறதுமேல் (நீலமலர்த்யாதி) நீலமான நிறத்தையுடைத்தாய். (மலர்) விஸ்த்ருதமாய். (நெடும்) அபரிச்சே த்யமாய். (சோதிசூழ்ந்த) தேஜஸ்ஸாலே சூழப்பட்டு, அபரிச்சேத்ய மாயிருப்பதொரு காளமேகத்தின் நிறம்போலே யிருக்கிற நிறத்தை யுடையனுய், அவ்வடிவைப்பரார்த்த மாக்கிவைக்குமவ னபஹரித்த தர்மநீயமான வளேயோடேகூட அவன் வாய்புலற்றும் நிறத்தை யும் மீட்டுக்கொள்ளுகைக்காகக் காலமெல்லாம் கூடச்சென்றும் - ஞாலமறியப்பழிசுமந்தேன் நன்னுதலீரினிநாணித்தாளென். (எத்த னைகாலமும் கூடச்சென்று) நெடுங்காலம் ஸம்ச்லேஷார்த்தமாகச் சென்றென்னுதல். (௩)

## நான்காம்பாட்டு.

கூடச்சென்றேன் இனியென்கொடுக்கேன் ? கோல்வளை நெஞ் சத்தொடக்கமெல்லாம் * பாடற்றொழிய இழந்துவைகல் பல்வளை யார்முன்பரிசழிந்தேன் * மாடக்கொடிமதிள்தென்குளந்தை வண் குடபால்நின்றமாயக்கூத்தன் * ஆடற்பறவையுயர்த்தவெல்போர் ஆழிவலவனை ஆதரித்தே. (௪)

ப.—அநந்தரம், ஆஶ்ரிதாநிஷ்ட நிவர்த்தகமான வாயுதாதி பூர்த்தியையு டையவனைக் கிட்டவேணுமென்று நினைத்து, ஸர்வஸ்வாபஹாரம்பிறந்த நானி னியெத்தைக்கொடுப்பதென்கிறாள்.

(இ-ள்.) மாடம் - மாடங்களையும், கொடி - கொடியோடுகூடின, மதிள் - மதிளையுமுடைத்தாய், தென் - நன்றான, குளந்தை-திருக்குளந்தையில், வண்- அழகிய, குடபால் - மேற்பக்கத்திலே, நின்ற - நின்ற, மாயக்கூத்தன் - ஆஶ்ச ர்ய சேஷ்டிதயுக்தனுய், ஆடல் - ஹர்ஷத்தாலே தர்சநீயகதியான, பறவை- பெரியதிருவடியை, உயர்த்த - மேற்கொண்டிருப்பானுய், ஆஶ்ரிதவிரோதிநிர ஸநத்தில், வெல் - வெற்றியையுடைத்தான, போர் - போரையுடையனான, ஆழி - திருவாழியை, வலவனை - வலத்திலேயுடையனானவனை, ஆதரித்து - ஆதரித்து, கூட - ஸம்ச்லேஷிக்கவேணுமென்று, நான், கோல் - அழகிய, வளை - வளை, நெஞ்சம் - நெஞ்சு, தொடக்கமெல்லாம் - தொடக்கமானவை

யெல்லாம், பாடு - என்பக்கல், அற்று - ஸம்பந்தமறுகிற படியாக, ஒழிய - விட்டுப்போம் படியாக, இழந்து - இழந்து, பல் - பல, வளையார் - வளையையுடையபெண்டு கள், முன் - முன்னே, வைகல், நெடுங்காலமுண்டு, பரிசு - என்ஸ்வபாவம், அழிந்தேன் - அழிந்துபோய், இனி - இனி, என் - எத்தை, கொடுக்கேன் - கொடுப்பேன்.

ஆழிவலவனென்று - வல்லவனென்றுமாம், நெஞ்சத்துளக்கமென்று - நெஞ்சோடுண்டான துவக்கிழந்தேனென்றுமாம். (ச)

ஆறு ;—(கூடச்சென்றேன்) இதுக்குமுன்பு அவனை யாசைப் பட்டு உன்னுடைய வுபகரணங்களை யிழந்தாப்போலே, இனியுள்ள வற்றையுமிழவாதே யவனை யாசைப்படத் தவிர்ந்தாலோவென்னில்; ஹேமகிரிஶிகர ஸத்ருஶ ப்ராஸாதாலங்க்ருதமாய், த்வஜவிராஜித ப்ரகாரபரிவ்ருதமாய், தக்ஷிணதிக் திலகபூதமாயிருந்த திருக்குளந் தையில் பரமோதாரமான மேலைத்திக்கிலே, வைநதேயவாஹநனாய், விஜிதரிபுநிகர ஸுதர்ஶந விஶ்ராந்த தக்ஷிணபுஜனாய்க்கொண்டு, ஸுந்ருத்தவத்தர்ஶநீயனும்படி நின்றருளினவவனை யாதரித்துக் கூடச்சென்றேன். சென்று, கோல்வளை நெஞ்சத்தொடக்கமெல் லாம் பாடற்றொழிய விழந்து வைகல்பல்வளையார் முன்னே யென் ஸ்வபாவமெல்லாமிழந்தேன்; இனி யென்கொடுக்கேனென்கிறார்.

ஈடு ; அவ ;—நான்காம்பாட்டு. உன் துணிவிதுவாக இன்ன முள்ளதடைய விழக்கிறாயிறேயென்ன ; இனிநானெத்தை யிழப்ப தென்கிறாள்.

(கூடச்சென்றேன்) நான்முடிந்து ஒருதலையேயாம்படி கிட்டி னேனென்னுதல், ஸம்ஶ்லேஷார்த்தமாகச்சென்று கிட்டினேனென் னுதல். (இனியென்கோடுக்கேன்) பண்டேயெல்லா மிழந்த பின்பு இனியெத்தை யிழப்பது.

(கோல்வளையித்யாதி) தர்ஶநீயமானவளை, நெஞ்சுதொடக்க மானவையெல்லாம் என்பாடற்று வாஸனையோடே போம்படியாக விழந்து. அவன் விபூதியோபாதி போரும் இவள் பரிகரத்தின்பரப் பும். (வைகல்பல்வளையார் முன்பரிசழிந்தேன்) கழற்றிப்பூணு மாப ரணமு மிழவாதவர்கள்முன்பே, கழற்றவேண்டாத வாபரணமான பரிசுண்டு-ப்ரகாரம்-லஜ்ஜை, அத்தையிழந்தேன்.

(மாடக்கோடிமதிள் தென்குளந்தை) மாடங்களையும், கொடி போடேகூடின மதிளையுமுடைத்தான தென்குளந்தையிலே. (வண் குடபால்நின்ற) அழகிதான மேலைபார்ஶ்வத்திலேநின்ற. இதுவு மொரு பரத்வஹேதுபோலே, (மாயக்கூத்தன்) ஆஶ்சர்யசேஷ்டி தன். (ஆடல் பறவையுயர்த்த) ஸர்வேஶ்வரவாஹநமென்னும் ஹர் ஷப்ரகர்ஷத்தாலே களித்தாடாநின்றுள்ள பெரியதிருவடியாலே வஹிக்கப்பட்டிருப்பானாய், (வெல்போராழிவலவனை) புக்கபோ ரிலே வென்றல்லது மீளாத திருவாழியை வலவருகேயுடையனா யிருக்கிற ஸர்வேஶ்வரனை யாசைப்பட்டு.

[மாடக்கொடிமதிள் தென்குளந்தை வண்குடபால் நின்ற - ஆடல்பறவையுயர்த்த வெல்போராழிவலவனை - மாயக்கூத்தனை - ஆதரித்து-கூடச்சென்றேன் - கோல்வளைநெஞ்சத் தொடக்கமெல் லாம் பாடற்றொழிய விழந்துவைகல் பல்வளையார் முன்பரிசழிந் தேன்-இனி பென்கொடுக்கேன்] என்றந்வயம். (௪)

## ஐந்தாம்பாட்டு.

ஆழிவலவனை ஆதரிப்பும் ஆங்கவன்நம்மில்வரவுமெல்லாம்* தோழியர்காள்! நம்முடையமேதான்? சொல்லுவதோ இங்கு அரி யதுதான் * ஊழிதோறூழிஒருவனாக நன்குணர்வார்க்கும் உணர லாகா * சூழலுடையசுடர்கொளாதித் தொல்லையஞ்சோதிநினைக் குங்காலே. (ரு)

ப.—அநந்தரம், தத்த்வஜ்ஞராயிருப்பார்க்கும் அபரிச்சேத்யமான வடிவ யினெளஜ்ஜ்வல்யத்தை யுடையனான ஸர்வேஶ்வரனை யாசைப்படுகையும், அவன் நமக்கு முகங்காட்டுகையும், நம்முடையவளவேயா யிருக்கிறதோவென் கிறாள்.

(இ - ள்.) நினைக்குங்கால் - ஆராய்ந்து பார்க்குமளவில், தத்த்வத்தை, நன்கு - நன்றாக, உணர்வார்க்கும் - உள்ளபடி யறியவல்லார்க்கும், ஊழிதோ றூழி - காலதத்த்வமுள்ளதனையும், ஒருவனாக - ஏவம்வித ஸ்வபாவனாயிருப்பா னொருவனாக, உணரலாகா - பரிச்சேதித்தறியவொண்ணாதபடி, சூழல் - ஆஶ் ரிதரை யகப்படுத்திக்கொள்ளும் சூழ்ச்சியாகிற சேஷ்டிதங்களை, உடைய - உ டையனாய், சுடர் - ஸ்வரூபபரிணாமம் வாராதபடி யுபாதாநமாகையும், உபாதாந மான தானேநிமித்தமாகையும், சிதசித்பரிணாமம் தனக்குத் தட்டாதபடியுமாகிற

தேஜஸ்ஸை, கொள்-உடைய, ஆதி-காரணபூதனுய், தொல்லை - நித்யாஸாதார ணமாய், அம் - அப்ராக்ருதமான, சோதி-ஜ்யோதிர்மயரூபத்தை யுடையனுய், ஆழிவலவனை-கையுந்திருவாழியுமான ஸர்வேஶ்வரனை, ஆதரிப்பும்-ஆதரித்தா ஶ்ரயிக்கையும், ஆங்கு - ஆஶ்ரயணுவஸ்த்தையில், அவன்-ஸர்வஸ்மாத்பரத்வத் தோபர்தி ஸௌஶீல்யத்தையு முடையவவன், நம்மில் - ஆஶ்ரிதைகளான நம் பக்கலிலே, வரவும் - வருகையும், அபேக்ஷிதங்கள் செய்கையும், எல்லாம் - எல் லாம், நம்முடையதோதான் - நம்மளவிலே யுடையோமானேமோ, தோழியர் காள் - என்னோபாதி யிவ்விஷயத்தில் வாசியறியும் தோழிமீர்காள், ஸர்வஸா தாரணமான ஸௌலப்ய ஸௌஶீல்யாதிகள் கிடக்க, சொல்லுவதோ - ஸ்வை ரமான தௌர்லப்யம் சொல்லுகையோ, இங்கு - இங்கு, அரியதுதான் - அரிய தாயிருக்கிறது. (ரு)

ஆறு:—(ஆழிவலவனை) அவனை யாசைப்பட்டால் பெற வொண்ணுது, துஷ்ப்ராபன், அவனை யாசைப்படவேண்டாவென் னில்; * பரஞ்ஜ்யோதிஸ்ஸான ஸர்வேஶ்வரனை நினைக்கப்புக்கால் ஜ்ஞாநவதாமக்ரேஸரர்களான ஸநகாதிமுனிகளுக்கு மூழிதோறூழி கூடினாலு மொருவனுக வுணரவொண்ணுத திவ்யசேஷ்டிதங்களையும், தேஜ:ப்ரப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணத்தையுமுடையா னொரு வனுகிலும் அந்த சங்கசக்ரகதாதரனு யிருந்தவனை யாசைப்படுகை யும், ஆசைப்பட்ட நம்போல்வார்பக்கல் அவன்வருகையும், நாம் தொ டங்கியோ; இப்படி யரியனு யிருக்கச்செய்தே, ஆசைப்படுவாரும் பெறுவாருமெத்தனைவர்; "அவனரியன், அவனையாசைப்படவேண் டா" என்று சொல்லுகை யெளிதென்றுச்சொல்லு மித்தனையோ வென்கிறூர். (ரு)

ஈடு; அவ:—ஐந்தாம்பாட்டு. வாங்கமநஸ்ஸுக்களுக் கெட்ட வொண்ணுத விஷயத்திலே அதிப்ரவணையா யேதுக்கு துஃகப்படுகி றுயென்ன; ஆனுலு மவனை யாஶ்ரயிக்கையும் அவனுலே விஷயீ க்ருதராகையுமான விம்மர்யாதை நம்மைத்தோற்றி யுண்டாயிற்றோ அநாதியன்றோ வென்கிறுள்.

(ஆழிவலவனையாதரிப்பும்) திருவாழியை வலவருகேயுடைய னவனை யாஶ்ரயிக்கையும்.(ஆங்கு) ஆஶ்ரயணதசையிலே.(அவன்) மேன்மைபோபாதி நீர்மையுடையனுனவன். (நம்மில்வரவுமெல் லாம்) ஆஶ்ரயித்த நாமிருந்த ப்ரதேசங்களிலேவந்து விஷயீகரிக்

கையுமாகிற விவையெல்லாம். (தோழியர்காள்) என்றுபாதி யிவ் விஷயத்திலே யவகாஹித்தி கோளல்லிகோளோ. (நம்முடையமே தான்) நம்மளவதோ. அவனை யாஶ்ரயிக்கையும் அவனபேக்ஷிதம் செய்கையுமாய்ப் போருகிறவிது நம்மைத்தோற்றிப் புதியதாகவிட்ட தொரு மர்யாதையோ. (சொல்லுவதோ விங்கரியதுதான்) அர்த்த ஸ்த்திதி யேதேனுமாயிருக்க, தோற்றிற்றுச் சொல்லுகையோ வரி யது. நிவாரகரில்லையென்று ப்ரதிபந்நங்களைச் சொல்லக்கடவதோ.

அவன்கிட்ட வரியனுயிருக்கிறமை யில்லையோவென்ன ; அது தானும் நான்சொல்லக் கேட்கவேண்டாவோ வுங்களுக்கு (ஊழியித் யாதி) [நன்குணர்வார்க்கும்-ஒருவனென்று-ஊழிதோறூழி-உணர லாகா] எத்தனையேனு மதிஶயிதஜ்ஞாநரா யிருப்பார்க்கும், கால மெல்லாம் கூடி யறியப்புக்காலு மறியப்போகாது ஏவம் விஶிஷ்ட னென்று. (சூழலுடைய) கிட்டினரை யகப்படுத்திக்கொள்ளுகைக் கீடான விரகுகளை யுடையனுயிருக்கும். (சுடர்கோள்) தேஜஃ ப்ர ப்ருத்யஸங்க்யேய கல்யாணகுணங்களை யுடையவன். (ஆதி) ஜகத் காரணபூதன். (தொல்லையஞ்சோதி) ஸ்வாபாவிகமாய், நிரவதிகதே ஜோரூபமாய், இதரவிஸஜாதீயமான திவ்யவிக்ரஹத்தை யுடையனு யிருக்கும். (நினைக்குங்கால்) அவன் பெருமையை யாராயப்புகில்.

[நினைக்குங்கால்-நன்குணர்வார்க்கும்-ஒருவனுக - ஊழிதோறூ ழி-உணரலாகாச் சூழலுடைய சுடர்கொளாதித்தொல்லையஞ்சோதி- ஆழிவலவனை யாதரிப்பும், ஆங்கவன் நம்மில் வரவுமெல்லாம், தோ ழியர்காள், நம்முடையமேதான், சொல்லுவதோ விங்கரியதுதான்] விலக்ஷண வஸ்துவே ஸுலபமானுல், பற்றவடுக்குமோ விடவடுக்கு மோ வென்கிறாள். (௫)

---

## ஆறும்பாட்டு.

தொல்லையஞ்சோதிநினைக்குங்கால் என்சொல்லளவன்று, இ மையோர்தமக்கும் * எல்லையிலாதனகூழ்ப்புச்செய்யும் அத்திறம் நிற்களம்மாமைகொண்டான் * அல்லிமலர்த்தண்துழாயுந்தாரான் ஆர்க்கு இடுகோ இனிப்பூசல் ? சொல்லீர் * வல்லிவளவயல்சூழ் நடந்தை மாமலர்க்கண்வளர்கின்றமாலே. (௬)

ப.—அநந்தரம், அதிஶயிதஜ்ஞாநர்க்கும் அவகாஹ்ய மஶக்யமாம்படி ஸம்ஶயஜநகனான வவன் நம்மோடே ஸம்ஶ்லேஷித் தீடுபடுத்தினபின்பு, வேறார்க்குக் கூப்பிடுவோமென்கிறாள்.

(இ-ள்.) நினைக்குங்கால் - ஆராயப்பார்த்தோமாகில், தொல்லை - அஸாதாரணமாய், அம் - அநவதிகமான, சோதி - அவனுடைய தேஜஸ்ஸானது, என் - என்னுடைய, சொல்லளவு - சொல்லிலடங்குமது, அன்று - அன்று, இமையோர்தமக்கும்- அதிஶயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளுக்கும், நிஷ்கர்ஷிக்கவொண்ணாதபடி, எல்லையிலாதன - அபர்யந்தமான. கூழ்ப்பு - ஸம்ஶயத்தை, செய்யும் - விளைக்கும், அ - அந்த, திறம் - மேன்மையிடையாட்டம், நிற்க - நிற்க, வல்லி - பூங்கொடியும், வளம் - அழகிய, வயல்- வயலும், சூழ்-சூழ்ந்த, குடந்தை - திருக்குடந்தையிலே, மா - ப்லாக்யமான, மலர் - தாமரைபோலேயிருக்கிற, கண் - திருக்கண்கள், வளர்கின்ற - வளரும்படி சாய்ந்தருளின, மால் - ஆஶ்ரிதவ்யாமோஹத்தை யுடையவனுய்க்கொண்டு, எம்-என், மாமை-நிறத்தை, கொண்டான் - அபஹரித்தான்; அல்லி - பூந்தாரினுடைய, மலர்-விகாஸத்தையுடைத்தான, தண்டுழாயும்- திருத்துழாய்மாலையையும், தாரான்-தருகிறிலன், இனி - நாமவனாலேநலிவுபட்டபின்பு, நலிந்தவவனையொழிய, ஆர்க்கு - ஆரிருக்கலாரிட்டு, பூசலிடுகோ- கூப்பிடுவோம், உறவுசெய்தகப்படுத்தினவனை யொழிய வுறவில்லாதார்க்குக் கூப்பிட்டுப்ரயோஜநமென், சொல்லீர் - சொல்லிகோள். (கூ)

ஆறு ;—(தொல்லையஞ்சோதி) அவனரியனல்லனோவென்னில்; நாம் சொல்லுமளவோ வவனுடைய வருமை ; ப்ரஹ்மாதிதேவர்களுக்குங்கூட வறியவொண்ணாத ஸ்வரூபஸ்வபாவங்களையுடையானொருவனல்லனோ ; அத்திறம்நிற்க, என்னை விஷயீகரித்தருளுகைக்காகத் திருக்குடந்தையிலே புகுந்துவைத்து என்னுடைய ஸர்வஸ்வத்தையு மபஹரித்துத் தன் திருவடிகளி லல்லிமலர்த்தண்டுழாயும் தருகிறிலன். இப்படி யந்யாயஞ்செய்த வவனையொழிய மற்றுரைக்கூப்பிடுவோம், சொல்லீரென்கிறார். (கூ)

ஈடு ; அவ ;—ஆறும்பாட்டு. நீ சொல்லுகிறபடியே யெளியனல்லன், துர்லபனென்ன ; ஸுலபனுகிலும் துர்லபனுகிலும் தன்னையொழியச் செல்லாதபடி நம்மைப்புகுரா நிறுத்தினவன் வாசலிலே கூப்பிடாதே, ஸம்பந்தமில்லாதார் வாசலிலேயோ கூப்பிடுவதென்கிறாள்.

(தொல்லையஞ்சோதிநினைக்குங்கால்) ஆராயப்புக்கால், இதர விஸஜாதீயமான விக்ரஹத்தையுடையவன். (என்சொல்லளவன்று) அவனுடைய வைலக்ஷண்யம் என்னுடைய பேச்சினளவன்று. நான்முகன் பலையிருந்து சொல்லுமளவோ அவன்பெருமை, (இமையோரித்யாதி) எத்தனையேனும் மதிமயிதஜ்ஞரான ப்ரஹ்மாதிகளுக்கு மளவிறந்த ஸம்ஶயங்களைப் பண்ணுகிற்கும். (க) "யஞாயம ஸமவாப்நுவந்தி ஜ்ஞாநாத் ப்ரஹ்மாதயஸ்ஸர்வே யந்நாயம்பகவாந்ப்ரஹ்மா ஜ்ஞாநாதிபரமம்பதம்" (உ)"நஹ்ரஹஸ்ஸ்வதிஷ்டித்ரகர்மா யஃகேநசித்க்வசித்" இதன்றிக்கே, இமையோரென்கிறது-நித்யஸூரிகளையாய், அவர்கள் (௩) * சூட்டுநன்மாலைகள் தூயனவேந்திநிற்க, தான் * ஊட்டியவெண்ணெய் தொடுவுண்ணப் போரும்படியாகவுமாம்.

(அத்திறம்நிற்கவெம்மாமைகொண்டான்) அம்மேன்மையுங் கிடக்கச்செய்தே, தன் ஸௌந்தர்யாதிகளைக்காட்டி யென்னிறத்தைக் கொண்டான்; என்னோடே யிட்டுக்கொண்டல்லது தரியாதானாய், நம்முடைய நிறத்தைக்கொண்டது தன்னுடைய வைலக்ஷண்யத்தைப் பாராதேயன்றே. (அல்லிமலர்த்தண்டுழாயுந்தாரான்) நம் நிறத்தைக்கொண்டால் தன்னோடே ஸ்பர்ஶமுள்ள தொன்றைத் தந்து நம்மை யுஜ்ஜீவிப்பிக்கலாமிறே, அது செய்கிறிலன்; அது செய்தானாகில் பூவுக்கிட்டோம்போலும் என்றிருக்கலாமே. (ஆர்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர்) நம்மை நலிந்தவன் வாசலிலே கூப்பிடாதே ஆர்வாசலிலே கூப்பிடுவோம், சொல்லிகோள்.

(வல்லியித்யாதி) பூங்கொடிபடர்ந்த சோலைகளும், வளவிதான வயல்களும்சூழ்ந்த திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேஶ்வரன். (மாமலர்க்கண்வளர்கின்றமால்) ப்ராப்தனானவன் மலர்ந்த தாமரைப்பூப்போலே யிருக்கிறகண் என்னளவில லரக்காண்கிறிலேன். விஶேஷகடாக்ஷம்பண்ணக் காண்கிறிலேனென்கை. கூக்குரல்கேட்கைக்கு ஸந்நிஹிதனென்கை; [வல்லிவள வயல்சூழ்குடந்தை மாமலர்க்கண்வளர்கின்றமால் - தொல்லையஞ்சோதி யென்று தொடங்கி, ஆர்க்கிடுகோ வினிப்பூசல்சொல்லீர்] என்றந்வயம். (௬)

---

(க) வி-பு க-௯-௫௬.  (உ) பார-மோக்ஷ-௭௧௯-௪.
(௩) திருவி-உக.

## ஏழாம்பாட்டு.

மாலரிகேசவன் நாரணன் சீமாதவன் கோவிந்தன் வைகுந்த னென்றென்று * ஓலமிடஎன்னைப்பண்ணிவிட்டிட்டு ஒன்றும்உரு வும்சுவடும்காட்டான் * ஏலமலர்க்குழலன்னைமீர்காள்! என்னு டைத்தோழியர்காள்! என்செய்கேன்? * காலம்பலசென்றும்காண் பதாணை உங்களோடெங்களிடையில்லையே. (எ)

ப.—அநந்தரம், அபிநிவேசஜநகமாய் ஆஶ்ரிதோபகாரகனுடைய வாகா ரங்களை யநுபவித்திடுபட்டநான் அநேககாலஞ்சென்றேயாகிலும் கண்டல்லது விடேன், விலக்குகிற வுங்களோடெங்கள்பக்க லொருதொடக்கமில்லை யென் கிறாள்.

(இ-ள்.) மால் - ஆஶ்ரிதவ்யாமுக்தனானவன், அந்தவ்யாமோஹத்தாலே, அரி - அவர்கள் பாபங்களை யபஹரிக்கும் ஸ்வபாவத்தையுடையவன், நிவ்ருத் தபாபரானார்க்கு நித்யாநுபாவ்யமான தூணையாம்படி, கேசவன் - ப்ரஶஸ்தகேச னானவன், நாரணன் - இப்படிச்சொன்ன வ்யாமோஹாதிகளுக்கெல்லாம் தளமான நிருபாதிக ஸம்பந்தத்தையுடையவன், சீமாதவன் - இக்குணங்களை ப்ரவ்ருத்த மாக்கும் லக்ஷ்மிக்குப் பதியானவன், ஶ்ரிய:பதித்வ நாராயணத்வங்கள் நிறம்பெ றும்படிபிறந்து, கோவிந்தன் - ஆஶ்ரிதபவ்யனானவன், வைகுந்தன் - பவ்ய தையைக்கண்டாஶ்ரயித்தார்க்குக்கொடுக்கும் பரிபூர்ண விபூதியையுடையவ னே, என்றென்று - என்றென்று இந்த ஸ்வபாவங்களைப்பலகாலுஞ்சொல்லி, ஒரு கார்யார்த்தமாகவன்றியே, ஓலமிட-ஆர்த்த்யதிசயத்தாலே கூப்பிடும்படி, இதுவே ஸ்வபாவமாக, என்னை - என்னை, பண்ணி - பண்ணி, விட்டு - கை விட்டு, இட்டு - போகட்டு, ஒன்றும் - ஒருப்ரகாரத்தாலும், உருவும் - தன்வடி வையும், சுவடும் - தன்னைக் கிட்டுகைக் கீடாயிருப்ப தோரடையாளத்தையும், காட்டான்- காட்டுகிறிலன்; என்னைவிலக்குவதாக வுத்யோகித்து, ஏலம்-ஏலம் போலே ஸ்ரமஹாமான பரிமளத்தையும், மலர் - பூவையுமுடைத்தாயுள்ள, குழல் - குழலையுடைய, அன்னைமீர்காள்- அன்னைமீர்காள், ஏவம்விதைகளாய், என்னுடை - எனக்கஸாதாரணைகளான, தோழியர்காள் - தோழிமீர்காள், அவ னீடுபடுத்தி முகங்காட்டாதொழியில், என்செய்கேன் - என்னாலே செய்யலாவ தென்றான், இப்போதைக்கு விட்டப்படியெனிலும், பலகாலம் - காலதத்த்வ முள்ளதனையும், சென்றும் - சென்றாகிலும், ஆணை - ஆணையே, காண்பது - காணக்கடவேன், உங்களோடு - இந்த வ்யவஸாயத்தைக் குலைக்கநினைக்கிற வுங்களோடு, எங்கள் - எனக்கு, இடை - ஒருஸம்பந்தம், இல்லை - இல்லை.

கேவலம் ஆணையென்றது - அவன் நாமக்ரஹணம் பண்ணுமைக்கென்று கருத்து. அல்லது; உறவில்லாத விவர்களை யாணையிடக்கூடாதிறே. (எ)

ஆறு ;—(மாலரி) இப்படி கூப்பிடச்செய்தேயும் தன்னைக்காட்டாதிருக்கிற வவனை யாசைப்படுவாருண்டோவென்னில்; ஆஶ்ரித வத்ஸலன், ஆஶ்ரிதார்த்திஹரன், ஆஶ்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவன், ஸர்வஶக்தி, ஸமஸ்தகல்யாணகுணநிதி, ஶ்ரிய:பதி, பரமசீலவான், ஸ்ரீவைகுண்டநிலயனென்று கூப்பிடும்படி பண்ணிவிட்டிட்டு ஒன்று முருவும் சுவடுங்காட்டான்; ஏலமலர்க்குழலன்னைமீர்காள், என்னுடைத் தோழியர்காள், என்செய்கேன்; வ்யஸநம் பொறுக்கலாயிருக்கிறதில்லை; காலம்பலசென்றும் உங்களாணையே, கண்டல்லது விடேன், நீங்களிதற்கு விரோதத்தைப்பண்ணில் உங்களோடு முறவில்லையென்கிறார். (எ)

ஈடு ; அவ ;—ஏழாம்பாட்டு. அவனைக்கண்டு முடிகை யரிது, விடவல்லையேயென்று உறவுமுறையாரலைக்க; அவன் குணங்களிலே யகப்பட்ட நான் காலமெல்லாம் கூடவாகிலும் அவனைக்கண்டல்லது விடேன், தத்விரோதிகளான வுங்களோட்டை ஸம்பந்தம் எனக்கு வேண்டாவென்கிறாள்.

(மால்) ஆஶ்ரிதர்பக்கல் வ்யாமோஹமே வடிவாகவுடையவன். (க)* பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும்வரக்கூப்பிடப்பண்ணின வ்யாமோஹம். (அரி) விரோதிநிரஸநஶீலன். (கேசவன்) காலமெல்லா மநுபவியாநின்றாலும் மீளவொண்ணாதபடி ப்ரஶஸ்தகேசன். (நாரணன்) ஆஶ்ரிதவத்ஸலன். (சீமாதவன்) அதுக்கடியான ஶ்ரிய:பதியானவன். (கோவிந்தன்) அவளோட்டைச் சேர்த்தியாலே ஆஶ்ரிதர்க்குக் கையாளாயிருக்குமவன். (வைகுந்தன்) இதுக்கெல்லாமடியான மேன்மையையுடையவன். (என்றென்று) நிரந்தரமாக. (ஓலமிட) காரியப்பாடறக்கூப்பிடும்படி.

(என்னைப்பண்ணி) (உ) "ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய = ஸ்ருஷ்டஸ்த்வம்வநவாஸாய" என்கிறபடியே, இதுவேயாத்ரையாகப்பண்ணி. (விட்டு) என்னைத் தன்பக்கலினின்றும் பிரித்து. (இட்டு) அசேதநவத்பொகட்டு. (ஒன்றுமுருவும்சுவடும்காட்டான்) தன்வடிவைக்காட்டுகிறிலன், தானிருந்தவிடத்துக் கோரடையாளங்காட்டுகி

---

(க) திருவி-க (உ) ரா-அயோ-சங-ரு.

றிலன். (க) "தாஸா ஸோவிர ஸ-ரூக-தாஸாமாவிரபூத்" என்கிறபடியே வடிவைக்காட்டுதல், ராமாஶ்ரமத்தில் ஸ்ரீபரதாழ்வானுக்கு தூமாதிகளடையாளமானாப்போலே, இருந்தவிடத்துக்கொருஸூசகம் காட்டுதல் செய்கிறிலன்.

(ஏலமலர்க்குழலன்னைமீர்காள்) நீங்கள் பண்டிருக்குமாபோலே நானுங்களை யென்றுகாணக்கடவேன். (ஏலமலர்) ஏலம்போலே கமழுகிற பரிமளத்தையுடைய மலர். (என்னுடைத்தோழியர்காள்) உங்களுக்கு ஹிதஞ்சொல்லி மீட்குமதில்லை, என்ப்ரியமேயிறே உங்களுக்கு உத்தேஶ்யம். (என்செய்கேன்) ஓரடையாளமும் காணாத நானினி யெத்தைச்செய்வேன்.

எங்களைக்கேட்கில் விடவடுக்குமென்ன (காலம்பலசென்றும் காண்பது) காலமெல்லாம் கூடவாகிலும் கண்டல்லதுமீளேன், அது செய்து தலைக்கட்டலாவதொன்றல்லகாணென்ன (ஆணை) விடுகிறவர்களாணையிடாளிறே, பற்றுகிறவனாணையிடுகிறாள். இப்படி துணியச்செய்தேயும் ஹிதஞ்சொல்லத் தொடங்கினார்கள் (உங்களோடித்யாதி) உங்களோடெனக்கொரு ஸம்பந்தமில்லை, எனக்கு நீங்கள் ஹிதஞ்சொல்லவேண்டா. (எ)

---

## எட்டாம்பாட்டு.

இடையில்லையான்வளர்த்தகிளிகாள்! பூவைகள்காள்! குயில்காள்! மயில்காள்! * உடையநம்மாமையுஞ்சங்கும்நெஞ்சும் ஒன்றுமொழியவொட்டாதுகொண்டான் * அடையும்வைகுந்தமும்பாற்கடலும் அஞ்சனவெற்புமவைநணிய* கடையறப்பாசங்கள்விட்டபின்னையன்றி அவன் அவைகாண்கொடானே. (அ)

**ப.**—அநந்தரம், நிஸ்ஸங்கர்க்கல்லது அவன் ஸுலபனாகானபடியாலே முன்பே பந்துவர்க்கத்தில் ஸங்காஹித்யஞ் சொன்னாள். தன் லீலோபகரணங்களான ஶுகஶாரிகாதி விஷயமான ஸங்காஹித்யத்தைச் சொல்லுகிறாள்.

(இ-ள்.) யான் - யான், வளர்த்த - வளர்த்துப்போந்த, கிளிகாள் - கிளிகாள், பூவைகாள் - பூவைகாள், குயில்காள் - குயில்காள், மயில்காள் - மயில்

(க) பாக-கo-ந-உ-உ.

காள், உங்களுக்கு என்பக்கல், இடை - ஓரவகாசம், இல்லை - இல்லை, நம்முடைய - நம்முடையதான, மாமையும் - நிறத்தையும், சங்கும் - வளையையும், நெஞ்சும் - நெஞ்சையும், ஒன்றும் - ஒன்றும், ஒழிய - அபேக்ஷிக்க, ஒட்டாது - ஒட்டாதே, கொண்டான் - அபஹரித்துக்கொண்டவன், அடையும் - எட்டாதபடி போயிருக்கிற, வைகுந்தமும்-பரமபதமும், பாற்கடலும் - திருப்பாற்கடலும், அஞ்சனவெற்பும் - திருமலையுமாகிற, அவை-ப்ராப்யஸ்த்தலங்களானவை, நணிய - கிட்டியநுபவிக்கக்குறையில்லை, பாசங்கள் - இதரவிஷயத்தில் ஸங்கங்களை, கடையற - ஸவாஸநமாக, விட்ட - விட்ட, பின்னை - பின்பு, அன்றி - அல்லது, அவன் - ப்ராப்யபூதனானவன்; அவை - அந்த, போகஸ்த்தாநங்களை, காண் - காண, கொடான் - கொடான். (அ)

ஆறு ;—(இடையில்லை) தன்னை ப்ரதிபந்திக்கிற வன்னைமாரோடு முறவறச்செய்தேயும் அவனைக்காணுதொழிந்தவாறே, தான் வளர்த்த தன்னுடைய லீலோபகரணமானகிளிகள், பூவைகள், குயில்கள், மயில்களென்கிற இவற்றோடுள்ள ஸம்பந்தமாகாதே அவனைக் காண்கைக்கு ப்ரதிபந்தகமென்றுபார்த்து, அவற்றைநோக்கிச்சொல்லுகிறாள். அவன் நம்முடையநிறமும், வளையும், நெஞ்சும் தொடக்கமாகவுள்ள ஸர்வஸ்வத்தையு மபஹரித்துக்கொண்டுபோனானாகிலும், பரமப்ராப்யமான திருநாடும், திருப்பாற்கடலும், திருமலையும் தன்னையாசைப்பட்டார்க்குக்காணல் நணியவாகில் காட்டாதொழிவானென்னென்னில் ; உங்கள் பக்கலுள்ள ஸங்கம் நிச்சேஷமாகப் போனாலல்லது அவனவைகாண்கொடான், ஆதலால் இனியுங்களோடு முறவில்லையென்கிறார். (அ)

ஈடு ; அவ;—எட்டாம்பாட்டு. கிளிகள் தொடக்கமான லீலோபகரணங்களில் தனக்குண்டான வநாதரத்தைச் சொல்லுகிறாள்.

(இடையில்லை) என்பக்கலுங்களுக் கோரவகாசமில்லை. (யான் வளர்த்தகிளிகாள்) பழமைகொண்டு பின்னாட்டுகிறீகோளிறே நீங்களும். (பூவைகள்காளித்யாதி) முன்பு இவளாதரித்தவை, அவனுடைய லீலோபகரணங்களிலும் குவாலிறே ; அவையெல்லாவற்றிலும் நசையற்றபடி. (உடையவித்யாதி) எல்லாவற்றிலும் நசையற்றபடிக்கு ஹேதுசொல்லுகிறது. நம்முடைத்தானநிறமும், வளையும், நெஞ்சும், பாஹ்யங்களோடு ஆந்தரங்களோடு வாசியற நம்பக்கலொன்றும பேக்ஷியாதபடி கைக்கொண்டவன்.

(அடையும்வைகுந்தமும்) சேரும் பரமபதமும். இத்தலையி லுள்ளதெல்லாம் நேராகக்கொண்டு, எட்டவொண்ணாத நிலத்திலே போய்ப்பாரித்து வெற்றிகொண்டாடியிருந்தானென்கை. (பாற்கட லும்) அத்தோடு தோள்தீண்டியான திருப்பாற்கடலும். (அஞ்சன வெற்பும்) திருமலையும் பரமபதத்தோடொக்கச் சொல்லலாயிருக்கிற தாயிற்று. (அவைநணிய) ப்ராப்யபூமியானவை, கிட்டிய - கிட்டிற் றின. ஆனாலநுபவிக்கத் தட்டென்னென்ன; அவன் சுணையுடை யவன், புறம்பேயு மொருவிஷயத்திலே நசைகிடக்க ஸ்வாநுபவத் தைக் காட்டிக்கொடான். (கடையித்யாதி) பின்னூட்டாதபடி ஸவா ஸநமாக பாஹ்யருசிபோனாலல்லது போகஸ்த்தாநங்களைக் காட்டிக் கொடான். கீழே "வணங்குமாறறியேன்" என்று ப்ராபகாபாஸங் களை விட்டார்; இங்கே ப்ராப்யாபாஸங்களை விடுகிறார். (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

காண்கோடேப்பானல்லன் ஆர்க்கும்தன்னைக் கைசெயப்பால தோர்மாயந்தன்னால் * மாண்குறள்கோலவடிவுகாட்டி மண்ணும் விண்ணும்நிறையமலர்ந்த * சேண்சுடர்த்தோள்கள்பலதழைத்த தேவபிராற்குஎன்நிறைவினோடு * நாண்கோடுத்தேன் இனியேன் கோடுக்கேன்? என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள்! (௯)

ப.—அநந்தரம், வாமநவேஷத்தைக்காட்டி அநந்யார்ஹமாம்படி ஜகத்தை யளந்துகொண்ட ஸர்வேஶ்வரனுக்கு என்னுடைய பூர்த்தியோடே லஜ்ஜையு மிழந்தேன், இனி யெத்தைக்கொடுப்பேனென்கிறாள்.

(இ-ள்.) ஆர்க்கும்-எத்தனையேனு மளவுடையார்க்கும், ஸ்வயத்நத்தாலே தன்னை - தன்னை, காண் - காண, கொடுப்பான் - கொடுக்குமவன், அல்லன் - அல்லனாய்வைத்து, ஆஶ்ரிதார்த்தமாக, மாயந்தன்னால் - தன் வஞ்சனத்தாலே, கைசெய் - கைத்தொழிலுக்கு, அப்பாலது - அப்பாலாய், ஓர் - அத்விதீய மான, கோலம் - ஸௌந்தர்யத்தையுடைய, மாண் - அர்த்தியான, குறள்வடிவு- வாமநவேஷத்தை, காட்டி - காட்டி, அநந்தரத்திலே, மண்ணும் - பூமியும், விண்ணும் - ஊர்த்வலோகமும், நிறைய - நிறையும்படியாக, மலர்ந்த - விஸ்த் ருதனாய், சேண் - ஓங்கி, சுடர் - உஜ்ஜ்வலமான, பல - பல, தோள்கள்-தோள் களும், தழைத்த - தழைத்திருக்கிற, தேவபிராற்கு - ப்ரஹ்மருத்ராதிபதியான

வவனுக்கு, என் - என்னுடைய, நிறைவினோடு-ஸ்த்ரீத்வபூர்த்தியோடேகூட, நாண் - லஜ்ஜையையும், கொடுத்தேன் - கொடுத்தேன்; என்னுடை- என்னோடுறவுடையீர்களாய், நல் - உஜ்ஜவலமான, நுதல் - நெற்றியையுடைய, நங்கைமீர்காள்-குறைவற்றவர்களே, ஸ்வரூபஸ்வபாவங்களிரண்டுமிழந்தபின், இனி- இனி, என் - எத்தை, கொடுக்கேன் - கொடுப்பேன். (அ)

ஆறு ;—(காண்கோடுப்பானல்லன்) உனக்குத் தன்னைக்காட்டானோ வென்னில் ;

ஸ்வவ்யதிரிக்தவிஷயஸங்கம் விட்டாலல்லது ஆர்க்குந் தன்னைக்காட்டானென்று அவற்றை நோக்கிச் சொல்லி, தத்தர்மநார்த்தமான ஸ்வோத்யோகத்தை ப்ரதிபந்திக்கைக்காக, "அவனையாசைப்பட்டு, இதுக்குமுன்பு உன்னுடைய வுபகரணங்களை யிழந்தாப்போலே இன்னமுள்ளவற்றை யிழவாதே யிருக்கப்பார்க்கில் அத்தைவிடு" என்று அந்யராயிருப்பார் சொல்ல ; அவர்களைநோக்கி, "ஸர்வஜ்ஞனுப் ஸர்வஶக்தியாயிருந்த ஸர்வேஶ்வரனாலு மிப்படி நிர்மிக்கமுடியாது" என்னும்படி யாஶ்சர்யமாய், நிரதிஶயஸௌந்தர்யவிஶிஷ்டனுமாய், ஸர்வ வஶீகரணமான தன்னுடைய மாண்குறள் கோலவடிவுகாட்டி, மஹாபலியுடைய ஸர்வேந்த்ரியங்களையு மபஹரித்து, நெய்தல் பூவலர்ந்தாப்போலே ஸர்வலோகமும் நிறையும்படி மலர்ந்த திருமேனியையும், கற்பகச்சோலை தழைத்தாப்போலே தழைத்த நிரதிஶயோஜ்ஜ்வலமான திருத்தோள்களையு முடையனாயிருந்த தேவபிரானுக் கென்னிறைவினோடு நாண்கொடுத்தேன், இனி யென் கொடுக்கேன், என்னுடை நன்னுதல் நங்கைமீர்காளென்று சொல்லுகிறார். (அ)

ஈடு; அவ ;—ஒன்பதாம்பாட்டு. "இதுவே துணிவாகில் ஆத்மாத்மீயங்களை நேராக விழக்கிறாயிறே" என்ற தாய்மாரைக்குறித்து முன்பே யடையவிழந்திலேனோ, இனி யெத்தை யிழப்பதென்கிறாள்.

(காண்கோடுப்பானல்லனூர்க்குந்தன்னை) ஸ்வயத்நத்தாலே காணநினைப்பாரெத்தனையேனு மதிஶயிதஜ்ஞாநரேயாகிலும், தன்னைக்காட்டும் ஸ்வபாவனல்லன். (கைசெயவித்யாதி) (மாயந்தன்னால் கைசெயப்பாலதோர்-கோலம்-மாண்குறள் - வடிவுகாட்டி) மாயந்தன்னால்-க்ருத்ரிமத்தாலே, க்ருத்ரிமமாவது உபயவிபூதியுக்தனான தான்

ஒன்றுமில்லாதானாய் வருகையும், ஸ்ரிய:பதியான தன்னை அர்த்தியாக்குகையும், சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே யளந்துகொள்ளுகையும். (கைசேயப்பாலதான-கோலவடிவு) கைசெய்கைக்கப்பாலதான வழகையுடையவடிவு. கைசெய்கையை-"கைசெய்" என்று குறைத்துக்கிடக்கிறது. அக்ருத்ரிமமான கோலமென்னுதல். அன்றிக்கே, கருவி உயிர்பெற வெழுதினாப்போலே யிருந்துள்ள கோலவடிவென்னுமாம்.

(மாண்குறள்-வடிவு) இரப்பிலே தகணேறி அபரிச்சேத்யனான தான் வாமநவேஷனாய். (கோலவடிவு) இப்படி அழிவுக்கிட்ட வடிவுக்கு ஆலத்திவழிக்கவேண்டியிருக்கை. (காட்டி) மஹாபலியை வஞ்சிக்கைக்காக அக்ருத்ரிமமான வழகையுடைய மாண்குறளான வடிவைக்காட்டி. (மண்ணும்விண்ணும்நிறையமலர்ந்த) கையிலே நீர்விழுந்த ஸமநந்தரம் ஸமஸ்தலோகங்களும் விம்ம வளர்ந்த. (சேண்சுடர்த்தோள்கள் பலதழைத்த) நீண்டு ஒளியையுடைத்தாய் கல்பகதரு பணைத்தாப்போலே பலதோள்களையுடையவன். (தேவபிராற்கு) இந்த்ரனிழந்த ராஜ்யத்தைக்கொடுத்து தேவர்களுக்கு உபகாரகனானவனுக்கு. (என்னிறைவினேநோண்கோடுத்தேன்) நானிரண்டு ராஜ்யமிழந்தேன். இந்த்ரன் ராஜ்யம்பெற்றுப்போனான்; மஹாபலி ஒளதார்யம்பண்ணிப்போனான், நானெனக்கு ஸர்வஸ்வமுமான வடக்கத்தையும் லஜ்ஜையையு மிழந்தேன்.

(இனியேன்கோடுக்கேன்) இனிமேல் பத்தைக்கொடுப்பேன். (என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள்) து:க்கமறியாமையாலே அழகிலும் குறைவற்று, பரிபூர்ணைகளாய், எனக்கு ஹிதஞ்சொல்லலாமிறே யுங்களுக்கு. கீழே நாலாம்பாட்டிலே "இனியென்கொடுக்கேன்" என்று சொல்லிற்று, இதுக்கும் அதுக்கும் வாசியென்னென்னில்; பெரிய திருவடி முதுகிலிருப்பிலும் கையுந்திருவாழியுமான சேர்த்தியிலுந் தோற்று மாயக்கூத்தனை யாதரித்துக் கலக்கச்சென்று கிட்டாமையாலே வந்த விழவு அதில்; ஸ்ரீ வாமநனுடைய வழகிலும் ஶீலத்திலும் தோற்ற மஹாபலியைப்போலே ஸர்வத்தையு மிழந்தேனென்கிறது இதில். (கூ)

## பத்தாம்பாட்டு.

என்னுடைநன்னுதல் நங்கைமீர்காள்! யான் இனிச்செய்வ தென்? என்னெஞ்சு என்னை * நின்னிடையேனல்லேனென்றுநீங்கி நேமியும்சங்கும்இருகைக்கொண்டு * பன்னெடுஞ்சூழ்சுடர்ஞாயிற் றோடு பால்மதியேந்தி ஓர்கோலநீல * நன்னெடுங்குன்றம்வருவ தொப்பான் நாள்மலர்ப்பாதம்அடைந்ததுவே. (௧௦)

*ப.—அநந்தரம், மநோஹாரியா யுத்துங்கமான வடிவழகையுடைய அவன் திருவடிகளிலே யென்னெஞ்சானது என்னைவிட்டு ப்ரவேசித்தது, நீங்கள் நியமிக்கிறதுக்கு என்றுற்செய்யலாவ தென்னென்கிறாள்.*

(இ-ள்.) என் - எனக்கு பவ்யமாய்ப்போந்த, நெஞ்சு - நெஞ்சானது, நின் - அவன் விஶ்லேஷித்துப்போன வனக்கு, இடையேனல்லேன் - காணமாவேனல்லேன், என்று - என்று, என்னை - காணியானவென்னை, நீங்கி - விட்டகன்று, நேமியும் - திருவாழியையும், சங்கும் - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், இரு கை - இரண்டுதிருக்கையிலும், கொண்டு - ஏந்திக்கொண்டு, பல் - பலவாய், நெடும் - பரந்து, சூழ் - சூழ்ந்த, சுடர் - சுடரையுடைத்தான, ஞாயிற்றோடு - ஆதித்யனோடேகூட, பால் - பால்போலே வெளுத்தநிறத்தையுடைய, மதி - சந்த்ரனையும், ஏந்தி - தன் கொடுமுடிகளிலே யேந்தி, ஓர் - அத்விதீயமாய், கோலம் - தர்ஶநீயாகாரமாய், நீலம் - நீலநிறத்தையுடைத்தாய், நல் - தாது வைசித்ர்யாதிகளாலுண்டான வைலக்ஷண்யத்தையுடைத்தாய், நெடும் - உத்துங்கமான, குன்றம் - மலை, வருவது - நடந்துவருவது, ஒப்பான் - ஒத்து ஆஶ்ரிதர்க்குவந்து தோற்றுமவனுடைய, நாள் - அபிநவமான, மலர் - தாமரை போலே யிருக்கிற, பாதம் - திருவடிகளை, அடைந்தது - அடைந்தது, என்னுடை - என்னோடுறவுடையிகோளாய்வைத்து, என்னீடுபாடறியாதபடியாலே, நன்னுதல் - அவயவஶோபையாலும், ஆத்மகுணத்தாலும், நங்கைமீர்காள் - பூர்ணைகளாயிருக்குமவர்களே, யான் - உங்களைப்போலன்றியே ஈடுபட்ட நான், இனி - அஸஹாயையாம்படி நெஞ்சுமிழந்தபின்பு, உங்கள் நியமநத்துக்கு, என் - எத்தை, செய்வது - செய்வேன். (௧௦)

நெஞ்சுடையாரன்றோ தரித்திருப்பதென்று கருத்து.

ஆறு ;—(என்னுடை) "ஆகிலுமவனை யாசைப்படுகையிடல்ல" என்று அவர்கள்சொல்ல; நான் தோழிமாரைவிட்டாப்போலே யென்னெஞ்சு என்னை நின்னிடையே னல்லேனென்று நீங்கி, ஶங்க

சக்ர கதாதரனாய், நீலமான திருமேனியையுடையனாய், நிரவதிக தீப்தியுக்த திவாகர நிஶாகராலங்க்ருத நிரதிஶய ரமணீய வரணீய ஜங்கம நீல மஹா (வ) சலம்போலேயிருந்த வவனுடைய நாண் மலர்ப்பாதமடைந்தது; யானினிச்செய்வதென், என்னுடை நன்னுதல் நங்கைமீர்காளென்கிறார். (கo)

ஈடு ; அவ ;—பத்தாம்பாட்டு. எல்லாஞ்செய்தாலும் ஹிதைஷிகளான நாங்கள் சொல்லிற்றுக் கேட்கவேணுங்காணென்ன ; நீங்கள் சொன்ன வார்த்தைகேட்கைக்கு நெஞ்சுவேணுமே, அது அவன் பக்கல் போயிற்றென்கிறாள்.

(என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள்) எனக்குறவு முறையாரான நீங்கள், வடிவழகிலும் ஸ்த்ரீத்வத்திலும் குறைவற்றிருக்கையாலே நிர்த்துஃகைகளாயிருந்திகோள். (யான்) நானெல்லாமிழந்து அவஸந்நையானேன். (இனிச்சேய்வதேன்) இப்படியானபின்பு, எத்தைச்செய்வேன். இவற்றைமீட்கவோ, அவனை நியமிக்கவோ.

எல்லாவளவிலும் தரித்திருக்கவேண்டாவோவென்ன ; அதுக்கும் நெஞ்சுவேண்டாவோ வென்கிறாள் (என்னெஞ்சு) எல்லாவவஸ்த்தையிலு மெனக்கு பவ்யமானநெஞ்சு. (என்னை) தன்னைக்கொண்டு ஜீவிக்க விருக்கிற வென்னை. (நின்னிடையேனல்லேனென்று நீங்கி) உன்னோடெனக் கடைவில்லையென்றகன்று. (க) *ஐ_த-ா)க்ஷாவரா-ஷ்டி-இத்யுக்த்வாபருஷம்பண்ணிப்போயிற்று. ப்ராப்திசொல்லி மீட்கவொண்ணாதபடி (உ) "ஸஙூ)ஷஂஶயா-ஸங்கஸ்தம்மயா" என்று போயிற்று. உங்களுக்கு நான் நின்றநிலையிறே யென்னெஞ்சு எனக்கவ்வருகேபோனபடி.

(நேமியுமித்யாதி) பின்தொடர வொண்ணாதபடி கடலிலேயாயிற்றுப்புக்கது. வெறும்புறத்திலே யாலத்திவழிக்க வேண்டியிருக்கிற விரண்டுகையிலு மாழ்வார்களைதரித்து, பலவாய் தூரப்போயெங்குமொக்க வ்யாபிப்பனவான வொளிகளையுடைய வாதித்யனோடே பாலோடொத்த தேஜஸ்ஸையுடைய சந்த்ரனையேந்தி, அத்தேஜஸ்ஸுக்களுக்குப் பரபாகமாய், இதரவிஸஜாதீயமாய், கண்டார் கண்குளிரும்படி நீலமாய், மற்றுமநுக்தமான வழகுகளையுடைத்

(க) ரா-யு-கள-க. (உ) யதிதர்ம.

தாய், அபரிச்சேத்யமாயிருப்பதொருமலை நடந்துவருமாபோலே யாயிற்று ஆழ்வார்களை யேந்திக்கொண் டுலாவும்படி. (நாண்மலர்ப் பாதமடைந்ததுவே) செவ்விப்பூவிலே வண்டுபடிந்தாப்போலே சேர்ந்தது-யானினிச்செய்வதென். (கo)

---

## பதிற்றும்பாட்டு.

பாதமடைவதன்பாசத்தாலேமற்றவன்பாசங்கள்முற்றவிட்டு* கோதில்புகழ்க்கண்ணன்தன்னடிமேல் வண்குருகூர்ச்சடகோபன் சொன்ன * தீதிலந்தாதியோராயிரத்துள் இவையுமோர்பத்துஇசை யோடும்வல்லார் * ஆதுமோர்தீதிலராகி இங்குமங்கும் எல்லாம் அமைவார்கள்தாமே. (கக)

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை யிசையோடே யப்யஸிக்கவல்லவர்கள், உபயவிபூதியிலும் பகவதநுபவ பரிபூர்ணராயிருப்பரென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) பாதம் - திருவடியை, அடைவதன் - ப்ராபிக்கையிலுண்டான, பாசத்தாலே - அபிநிவேஶத்தாலே, மற்ற- இதரவிஷயமாய், வன்-ப்ரபலமான, பாசங்கள் - பாசங்களை, முற்ற - நேராக, விட்டு - விட்டு, இப்படி இதரஸங்க மறுகையாலே, கோது - கோது, இல் - அற்ற, புகழ் - புகழையுடைய, கண்ணன் றன் - க்ருஷ்ணன், அடிமேல் - திருவடிகள் விஷயமாக, வண் - தம்முடைய பாவவ்ருத்தியை ப்ரபந்தீகரித்த பரமௌதார்யத்தையுடைய, குருகூர்ச் சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், தீது - அர்த்தாந்தர ப்ரஸ்தாவமாகிறதீது, இல் - இன்றியே, அந்தாதி - அந்தாதியாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், ஓர் - கடலிலே முத்துப்பட்டாப்போலே அத்விதீயமான, இவை - இவை, பத்தும் - பத்தையும், இசையோடும் - இசையோடேகூட, வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், அவித்யாகர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்பந்த ரூபதோஷங்களில், ஆதும் - ஏதேனும், ஓர்-ஒரு, தீது - தோஷம், இலராகி - இன்றியே, இங்கும் - இந்தவிபூதியிலும், (க) "த்ரு ஷ்டி ஜீவாதுஜீவ-துஷ்யந்திசரமந்திச" என்கிறபடியே குணாநுபவபரிபூர்ணராய், அங்கும் - அந்தவிபூதியிலும், (உ) "ஸோஶ்நுதே ஸர்வாந்காமாந்-ஸஹ-ப்ரஹ்மணா விபஶ்சிதா" என்கிறபடியே அவாப்த ஸமஸ்தகாமராய்க்

---

(க) கீதை - கo-கூ. (உ) தை-ஆந-உ-க.

கொண் டாங்யாதீநராய், எல்லாமமைவார்கள்தாமே - ஸர்வப்ரகார பரிபூர்ணரா வர்கள். (கக)

இது - எண்சீராசிரியவிருத்தம்.

ஆறு ;—(பாதமடைவதன்) திருவடிகளைச்சேரவேணுமென்னு மாசையாலே, தத்வ்யதிரிக்தவிஷயஸங்கத்தை நிஶ்ஶேஷமாகவிட்டு, ஸ்வவ்யதிரிக்த ஸகலவிஷய ஸங்கநிவர்த்தகமான கல்யாணகுணங் களையுடையனான கண்ணன் றன்னடிமேல் வண்குருகூர்ச் சடகோ பன்சொன்ன நிரவத்யமான வித்திருவாய்மொழியைவல்லார், நிரஸ் த ஸமஸ்த து:க்கராய், அங்குமிங்கு மெல்லாப்படியாலும் பரிபூர்ண ரென்கிறார். (கக)

ஈடு ; அவ ;—பதிஞோராம்பாட்டு நிகமத்தில் - இத்திருவாய் மொழிவல்லார், அவித்யாதி ஸகலதோஷங்களும் நீங்கி, இஹலோக பரலோகங்களில் தாங்களே க்ருதக்ருத்ய ராவரென்கிறார்.

(பாதமித்யாதி) திருவடிகளைக் கிட்டுகையிலுண்டான ஸங்கத் தாலே புறம்புண்டான ஸகல ஸங்கங்களை நிஶ்ஶேஷமாகவிட்டார். இதுவாயிற்று இத்திருவாய்மொழியிற் சொல்லிற்றாயிற்று. புறம் புள்ள பற்றுக்களற்றுத் திருவடிகளை யாசைப்பட்டவரல்லர் ; (க) "மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர் தோள்கைவிட்டு" என்கிறபடியே திருவடிகளில் ஸங்கத்தாலே ஔபாதிகமான பாஹ்யஸங்கத்தைத் தவிர்ந்தவர். (கோதில்புகழ்) திருவடிகளில் ஸங்கத்துக்குமுதல் அவ னுடைய கல்யாணகுணங்கள். குணங்களுக்குக் கோதாவது-தன்னை யொழியப்புறம்பேயும் நசைபண்ணும்படி யிருக்கை. (கண்ணன் றன்னடிமேல்) இப்புகழையுடைய க்ருஷ்ணன் திருவடிகளிலே யா யிற்றுச் சொல்லிற்று. பரமோதாரரான வாழ்வாரருளிச்செய்த.

(தீதிலந்தாதி) ப்ரபந்தத்துக்குத் தீதாவது-கதாந்தர ப்ரஸ் தாவம். ராமவ்ருத்தாந்தத்தைச் சொல்லப்புக்கு, ஸுப்ரஹ்மண் யோத்பத்தி, புஷ்பகவர்ணநம், இவை தொடக்கமானவற்றிலே யிழி கை; (உ) "நாராயணகயாதிர்ஹ - நாராயணகதாமிமாம்" என்று யுத்தப்ரகாராதிகளைச்சொல்லுகை. (ஓராயிரத்துள்ளிவையுமோர் பத்திசையோடும்வல்லார்) அத்விதீயமான வாயிரந்திருவாய்மொழி

(க) ந-திருவ-கச. (உ) பாத.

யில் இப்பத்தைப் ப்ரீதிப்ரகர்ஷத்தாலே சொல்லுமவர்கள். (ஆதுமோர் தீதிலராகி) அவித்யாதி தோஷங்களும் நீங்கும். புறம்புள்ள நசையற்றிருக்கச்செய்தே ப்ரபந்தம் தலைக்கட்டுகைக்காக விருக்குமதுவுமவர்களுக்கில்லை.

(இங்குமங்குமெல்லாமமைவார்கள்தாமே) இஹலோகத்தோடு பரலோகத்தோடு வாசியறக் குறைவற்றிருப்பர்கள். இஹலோகத்தில், (க) "க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே - க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே" என்கிறபடியே சமைந்திருப்பர்கள்; பரலோகத்தில், (உ) "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி - அஹம்ஸர்வம் கரிஷ்யாமி" என்று குறைவற்றிருப்பர்கள். (தாமே) (ஈஸ்வரன் முழங்கைத்தண்ணீர் வேண்டா,) உபயவிபூதியிலும் தாங்களே ப்ரதாநராவர்கள். (௧௧)

எட்டாம்பத்து இரண்டாந்திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) இதிஹாஸஸமுச்சயம்-௩-௪௦. (உ) ரா-அயோ-௩௧-௨௫.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருவாய்மொழி

## எட்டாம்பத்து

## மூன்றாந்திருவாய்மொழி

அங்குமிங்கும்-ப்ரவேசங்கள்.

ஆறு ;— (அங்குமிங்கும்) இப்படி யெம்பெருமானைப்பிரிந்து வ்யஸநப்படுகிற தமக்கு ஒரு துணையின்றியே யிருக்கிறபடியை யருளிச்செய்கிறார்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில், அவனுடைய நிஸ்ஸங்கஸாலபதையை யநுஸந்தித்து, இதர ஸங்கநிவ்ருத்தி பூர்வகமாகத் தாம் தத்விஷயத்திலே ஸக்தரானபடியை யநுஸந்தித்தவர், அவனுஸ்ரித ரக்ஷணார்த்தமாக விந்த விபூதியிலே தன் போக்யதையையும் ஸௌகுமார்யத்தையும் பாராதே ஆஸுர ப்ரக்ருதிகளும் அந்யபாருமான திரள்களுக்கு நடுவே அஸஹாயனாய்வந்து வர்த்திக்கிற விதுக்கஞ்சி; அவனுடைய வதிஶயித போக்யதையையும், விரோதி நிரஸநோத்யுக்தமான வாயுதவத்தையையும், ஸஹாயாந்தர ராஹித்யத்தையும், க்ஷணகாலம் காணுதொழியிலும் கல்பமாம்படி அச்சத்தை விளைக்கும்படி ஆபிரூப்யாதிஶயத்தையும், ஆயாஸஸஹமல்லாத ஸௌகுமார்யத்தையும், ரமணீய விக்ரஹனாய்வைத்து விரோதிநிரஸநார்த்தமாக வ்யாபரிக்கும்படியையும், இந்த ஸித்காரநுகுணமான ஶ்ரிய:பதித்வத்தையும், அஶேஷ ஜநஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தையும், அதிஶயிதஜ்ஞாநர்க்கு மறியவரியவாகாரத்தையும், அத்யந்த விலக்ஷணபுருஷரும் ஸேவிக்கும்படியான வதிஶயிதஶக்தியோகத்தையு மநுஸந்தித்து, ஏவம்ப்ரகார விஶிஷ்டனானவன் தன்னழகையும் மார்த்தவத்தையும் பாராதே ப்ரதிகூல பூயிஷ்டமான ஸம்ஸாரத்திலே அஸஹாயனாய்வர்த்திக்கிறவளவிலே அடிமைசெய்யப் பெற்றிலோமென்று தளர்ந்தவர், அவன் தன்னுடைய வாஶ்ரித ஸாமக்ர்யத்தையும் அதிஶயிதஶக்தியையுங் காட்டக் கண்டு ஸமாஹிதரா யுகந்து தலைக்கட்டுகிறார்.

ஈடு ;— கீழிற்றிருவாய்மொழியில் பத்தாம்பாட்டிலே - " ஓர் கோலநீல நன்னெடுங்குன்றம் வருவதொப்பான்'' என்று வடிவழகை யநுஸந்தித்தவாறே, தாம்பட்ட க்லேஶத்தைமறந்து, " இவ்வடிவோடே ஸம்ஸாரத்திலே தனியேவந்தவதரித்து உலாவாநிற்கும் ;

ஶத்ருக்களும், மத்யஸ்தரும், ப்ரயோஜநாந்தரபரருமாய், இவனுக்குப் பரிவுடையா ரொருவருமின்றிக்கே யிருக்கிற ஸம்ஸாரத்திலே, அர்த்திகளுடையவபேக்ஷிதங்களைப் பூரிக்கைக்காக ஸம்ஸாரிஸஜாதீயனுய், சிலர்க்குப் பரதந்த்ரனுயும், (சிலரர்த்தித்ததுவே வ்யாஜமாக) அவதாரத்துக்குப் பிற்பட்டார்க்குக் கோயில்களிலும் க்ருஹங்களிலும் ஸந்நிஹிதனுயும் வர்த்திக்கிற விவனுடைய ஸௌகுமார்யமறிந்து பரியக்கடவாரொருத்தருமில்லை; நானுமுதவப்பெறுகிறிலேன்" என்று அவன் தனிமைக்கு வெறுத்து பீதராக; "'நமக்குப் பரிவரில்லை' என்று பயப்படவேண்டா, முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யஸித்தரும் நமக்குப் பரிகையே யாத்ரையாயிருக்குமவர்களன்றோ, நமக்குத்தான் வேறே சிலர் பரியவேண்டியிருந்ததோ" என்று ஸர்வேஶ்வரன் தன் ஸர்வஶக்தித்வத்தைக்காட்டி ஸமாதாநம்பண்ண ஸமாஹிதராய் ஹ்ருஷ்டராகிறார்.

"ஸர்வேஶ்வரனுக்குப் பரிகைக்குத் தமக்குக் கூட்டாவாரில்லையென்று தம் தனிமைக்கு வெறுக்கிறார்" என்றுஞ் சொல்லுவர்கள். "நித்யஸூரிகள் பகவதநுபவத்திலே அந்யபரர், ஸம்ஸாரிகள் ஶப்தாதிகளிலே அந்யபரர்; ப்ரஹ்மேஶாநாதிகள், தங்களுக்காக (க) 'நீணகர்நீளெரிவைத்தருளாய்' என்று அவனை அம்புக்கிலக்காக்குதல், ஏவித்தேவைகொள்ளுதல் செய்வர்களாகையாலே, பரிகைக்குத் தமக்கொரு துணையில்லை." என்று தம் தனிமைக்கு வெறுக்கிறார். ஶேஷவஸ்துவுக்கு "ஶேஷியோரக்ஷகன்" என்னும் வெளிச்சிறப்பு அறிவுக்குமுதலடி; ஶேஷவஸ்துவாகில், ஶேஷிக்கதிஶயத்தைவிளைத்துத் தன்ஸ்வரூப ஸித்தியாகையாலே, "அவன் ரக்ஷ்யன், நாம்ரக்ஷகர்" என்னுமளவும் செல்லவறிகை - ஸ்வரூபத்தை யுள்ளபடி யுணருகையாவது.

---

## முதற்பாட்டு.

அங்குமிங்கும் வானவர்தானவர்யாவரும் *
எங்குமினையையென்று உன்னையறியகில்லாதுஅலற்றி *
அங்கம்சேரும் பூமகள்மண்மகள்ஆய்மகள் *
சங்குசக்கரக்கையவனென்பர் சரணமே. (௧)

---

(௧) திருவி-௧௨.

ப.—முதற்பாட்டில், உன்னுடைய நிரதிஶயபோக்யதையை யறியாதே, உன்ஶக்தியோகத்தையேசொல்லி அநுகூல ப்ரதிகூல விபாகமற அபிமதஸாதநமென்னாநிற்பர்களென்கிறார்.

(இ-ள்.) அங்கும் - ஊர்த்த்வலோகங்களிலும், இங்கும் - பூமியிலும், எங்கும் - பாதாளாதிகளான ஸமஸ்த ப்ரதேஶங்களிலும், வானவர் - அநுகூலரான தேவர்களும், தானவர் - ப்ரதிகூலரானஅஸுரர்களும், யாவரும் - தத்வித்ரான மநுஷ்யாதிகளுமெல்லாம், உன்னை - அநுபாவ்ய மஹிஷ்யாதி விஶிஷ்டனான வுன்னை, இனையை - இவ்விதபோக்யன். என்று - என்று, அறியகிலாது - அறியமாட்டாதே, அலற்றி - ரக்ஷகத்வைகாந்தமான ஸர்வஶக்தியோகாதிகளைச் சொல்லிக்கூப்பிட்டு, பூமகள் - புஷ்பபரிமளம் வடிவுகொண்டாப்போலேயிருக்கிற லக்ஷ்மியும், மண்மகள் - கந்தவதியாகையாலே போக்யதையேவடிவான பூமியும், அவ்வளவேயன்றியே, ஆய்மகள்-ஆபிஜாத்யாதிக்யத்தையுடைய நீளையும், ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளிலே யகப்பட்டு, அங்கம்-திருமேனியை, சேரும் - பிரியாமல்பொருந்தி யநுபவிக்கும்படியாய், சங்குசக்கரம் - அநுபாவ்யரான வாழ்வார்களை, கையவன்-கையிலேயுடையனாயிருக்கிறவிவன், போக்யபூதனென்றநுபவியாதே, புருஷகாரபூர்த்தியையுமுடையனாகையாலே, சரணம் - அபீஷ்டபல ஸாதநபூதன், என்பர் - என்னாநிற்பர்கள்.

ப்ரதிகூலரானஅஸுரவர்க்கத்தைப்பற்றவும் ஶேஷித்வம் ஸாதாரணமாகையாலே, ஸ்வாபீஷ்டஸித்த்யர்த்தமான ஶரண்யத்வமுமுண்டென்றுகருத்து. ப்ரயோஜநாந்தரபரரானவர்களும், இவனுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளை யநுஸந்தித்து, பரிவராகப்பெற்றதில்லையென்று வெறுத்தாராயிற்று (க)

ஆறு;—ஸ்வர்க்காதிலோகங்களிலும், இந்த லோகத்திலும், மற்றுமெங்கும் வர்த்திக்கிற தேவதாநவ ப்ரப்ருதி ஸமஸ்தாத்மாக்களும், ஏவம்பூத னென்று உன்னை யுள்ளபடியறியாதே, லக்ஷ்மீபூமிநீளாநாயகனாய், ஶங்கசக்ரகதாதரனாய், பரமப்ராப்யனாயிருந்த வுன்னைத் தங்களுக்கு ப்ராப்யமான க்ஷுத்ரைஶ்வர்யத்துக்கு உபாயமென்பர்; ஆதலால், எனக்கு அவர்கள் துணையல்லரென்கிறார்.

ஈடு; அவ;— முதற்பாட்டு. இதில், முதற்பாட்டில், உன் ஸௌகுமார்யத்தையறிந்து பரிகையன்றிக்கே, தங்களுக்கு இஷ்டப்ராப்தி ஸாதநமென்றிருப்பர்களென்று ஐஶ்வர்யார்த்திகளை க்ஷேபிக்கிறார்.

(அங்குமிங்குமித்யாதி) உபரிதநலோகங்களிலும், பூமியிலும். (எங்கும்) அநுக்தமான பாதாளாதிகளிலும் (வானவர்) அநுகூலர், (தானவர்) ப்ரதிகூலர். (யாவரும்) இரண்டுவகையுமான மநுஷ்யாதிகளும். (இனையையென்றுன்னை) (உன்னை-இனையையென்று) ஸர்வஶேஷியான வுன்னை, இப்படிப்பட்டவனென்று - நிரதிஶய ஸௌகுமார்யயுக்தனென்று. இவர் நெஞ்சில் அவன் ஸௌகுமார்யமேயாயிற்று உறைத்திருப்பது; கருமுகை மாலைபோலேயிருக்கிறவன்படியறியாதே.

(அறியகிலாது) அறியாதே. பரியவறியாமைக்கு, அநுகூலரான தேவர்களோடு, ப்ரதிகூலரான வஸுரர்களோடு, இவ்விரண்டுங்கூடின மநுஷ்யரோடு வாசியில்லை. அவனைப் பரியக்கண்டவர்கள் எல்லாருமென்றிருக்கிறாராயிற்று இவர். (அலற்றி) (க) “யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்” (உ) “பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீஜ்ஞாநபலக்ரியாச” என்று, தங்களுடைய ரக்ஷணத்துக்குடலான வசநங்களைக் கதறுநிற்பர்கள். உன்னை ரக்ஷ்யனென்றறியார்கள்.

(அங்கஞ்சேருமித்யாதி) இதுக்குமேல் ஸௌகுமார்யத்தையுமழகையுஞ்சொல்லுகிறது. (பூமகள் மண்மகளாய்மகள் - அங்கஞ்சேரும்) அவனை யாஶ்ரயிக்கைக்குப் புருஷகாரமாகப் பிராட்டிமாருண்டென்பர்கள். (௩) “நகஶ்சிந்நாபராத்யதி” என்பாரும், “குற்றத்தை யுணருகிறதென், பொறுக்குமித்தனையன்றோ” என்பாரும், முதலிலே குற்றங்காணுதபடி ஸ்வபோக்யதையை முன்னிடுவாரும் அங்கே யுண்டென்பர்கள். (௪) “வடிவாய் நின்வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்பல்லாண்டு” என்று அச்சேர்த்திக்கு மங்களாசாஸநம் பண்ணுவாரில்லை.

(சங்சக்கரக்கையவன்) கையுந் திருவாழியுமானவழகை யநுபவிக்கைக்கிழிவாரில்லை; நம்விரோதியைத் துண்டிக்கைக்குக் கையிலே திவ்யாயுதங்களையுடையவனென்பர். (க) “வடிவார்சோதிவலத்

---

(க) முண்டக-க.
(உ) ஶ்வே-௬.
(௩) ரா-யு-கககூ-சச.
(௪) திருப்பல்லா-உ.

றுறையும் சுடராழியும்பல்லாண்டு" என்னவேண்டியிருக்குமே இவர்களுக்கு. (என்பர்சரணமே) (சரணம்-என்பர்) அபிமதஸாதநமென்பர். அபிமதமென்றறிவாரில்லை - ஸௌகுமாரவிஷயமென்றறிவாரில்லை. முந்தானையேற்றல், எதிரிகளம்புக் கிலக்காக்குதல் செய்வர்கள்.

---

## இரண்டாம்பாட்டு.

சரணமாகிய நான்மறைநூல்களும்சாராதே *
மரணம்தோற்றம் வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம் *
கரணப்பல்படை பற்றறவோடும்கனலாழி *
அரணத்திண்படையேந்திய ஈசற்குஆளாயே. (உ)

ப.—அநந்தரம், விரோதி நிரஸகபரிகரவானானவனைக்கொண்டு கேவலம் ஜராமரணாதி நிவ்ருத்தியைப் பண்ணிக்கொள்ளுகிற கேவலரை, மோக்ஷத்வஸாதர்ம்யத்தாலே யுடன்பட்டுநின்று க்ஷேபிக்கிறார்.

(இ-ள்.) த்ரைகுண்யபுருஷர்களுக்கு, சரணமாகிய - புகலிடமாய், ஐஶ்வர்ய தத்ஸாதந ப்ரதிபாதகமான, நால் - நாலுவகைப்பட்டதாயிருக்கிற, மறை-வேதங்களாகிற, நூல்களும்-ஶாஸ்த்ரங்களை, சாராதே - (க) "வேதவாதரதா: பார்த்தநாந்யதஸ்தீதி வாதிந:" என்று மேலெழத்தோன்றுகிற வர்த்தங்களை ப்ரதிபத்திபண்ணப்பற்றாதே. * நிஸ்த்ரைகுண்யராய்க்கொண்டு, முமுக்ஷுக்களாய், கரணம் - பாதகோபகரணங்களையுடைத்தாய், பல் - பஹுவிதமான, படை - ஶத்ருஸேனைகள், பற்று - பற்று, அற - அற, ஓடும் - ஓடும்படி, கனல்-தீப்தனாகிற, ஆழி-திருவாழியாழ்வானாகிற, அரணம் - க்ஷேமங்கரமாய், திண் - த்ருடமான, படை - ஆயுதத்தை, ஏந்திய - உடையனான. ஈசற்கு - ஸர்வேஶ்வரனுக்கு, ஆளாய் - மோக்ஷபூதராய்வைத்து, மோக்ஷத்வாநுரூபமான வதிஶயத்தைவிளைத்துப்பரியாதே, மரணம் - மரணம், தோற்றம் - ஜந்மம், வான்-பெரிய, பிணி - வ்யாதி, மூப்பு - ஜரை, என்று - என்று சொல்லுகிற, இவை - ஷட்பாவவிகாரங்களை, மாய்த்தோம் - கழித்துக்கொண்டுவிட்டோமித்தனையிறே.

தாதர்த்யம் ஸ்வரூபமாயிருக்க, ஸ்வார்த்தபரராகை அநுரூபமோவென்று கருத்து. (உ)

---

(க) கீதை உ-சஉ

ஆறு ;—(சரணமாகிய) இப்படி ஐஶ்வர்யார்த்திகள் துணையல்லரென் றருளிச்செய்து, கைவல்யார்த்திகளும் தமக்குத் துணையல்லரென்கிறார்.

ஐஶ்வர்யோபாய விதாயக ஶாஸ்த்ரங்களை விட்டு மோக்ஷோபாய விதாயக ஶாஸ்த்ரத்தை யவலம்பித்த நாமும், அப்ராக்ருத ஸ்வாஸாதாரண திவ்யரூப விஶிஷ்டனாய், ஶங்கசக்ரகதாதரனை பரமபுருஷனை ஶாபாஶ்ரயமாக வநுஸந்தித்து, இந்த்ரியஜயத்தைப் பண்ணி, ஸம்ஸாரநிவ்ருத்திமாத்ரத்தை ப்ராப்யமாகப்பற்றினோமித்தனையிறே ; அவன் திருவடிகளை ப்ராப்யமாகப் பற்றிற்றிலோமிறே ; ஆதலால், நீங்களு மெனக்குத் துணையல்லீரென்கிறார்.

தம்மோடவர்களுக்குண்டான வைஶ்வர்ய வைராக்யரூப ஸாம்யத்தாலே கைவல்யார்த்திகளை அஸ்மச்சப்தத்தாலே வ்யபதேஶிக்கிறார். (௨)

ஈடு; அவ;—இரண்டாம்பாட்டு. "ஐஶ்வர்யம்போலே நிலைநில்லாத தொன்றன்றேயிது, நித்யமாயிருப்பதொன்றன்றோ" என்று ஆத்மலாபத்துக்காக வுபாஸிக்கிற கேவலர் வந்துதோற்ற, அவர்களை க்ஷேபிக்கிறார்.

(சரணமித்யாதி) (௧) "த்ரை குண்யவிஷயா வேதா:" என்கிறபடியே ஐஶ்வர்யதத்ஸாதநங்களை ப்ரதிபாதிக்கிற பூர்வபாகத்தி லிழியாதே, அத்தைவிட்டு மோக்ஷத்தை யுபதேஶிக்கிற வேதாந்தபாகத்திலே புகுராநின்று, ஸர்வேஶ்வரனை யாஶ்ரயித்து, ஶரீரஸம்பந்தத்தை மாய்த்தோ மித்தனையன்றோ ! நாம் செய்ததென்று க்ஷேபிக்கிறது.

(சரணமாகிய) ஐஶ்வர்ய தத்ஸாதந விஷயஜ்ஞாநஸாதநமான. (நான்மறைநூல்கள்) சதுர்வேதமாகிற ஶாஸ்த்ரங்கள். நூல்-ஶாஸ்த்ரம். நூலென்று-பிரித்து, ஆகமாதிகளைச் சொல்லுகிறதென்றுமாம். நான்மறையாகிற ஶாஸ்த்ரமென்றே யருளிச்செய்வது. (௨) "வேதஶாஸ்த்ராவிரோதிநா — வேதஶாஸ்த்ராவிரோதிநா" என்னக்கடவதிறே. (மரணம்தோற்றம்) ஜந்மமரணங்கள், ப்ரபலவ்யாதி, ஜரை தொடக்கமான ஷட்பாவவிகாரங்களை மறுவலிடாதபடி கழித்துக்

(௧) கீ-௨-௪௫.   (௨) மநு-௧௨-௧0௬.

கொண்ட வித்தனையிறே நாழும்செய்தது. பூஜாவசநம் க்ஷேபத்திலே.

(கரணப்பல்படையித்யாதி) உபகரணங்களை யுடைத்தாய்ப் பலவகைப்பட்ட ஶத்ருஸேநை நிஶ்ஶேஷமாக வோடும்படி ஜ்வலியாநின்ற திருவாழியென்னுதல்; கரணக்ராமங்களை விஷயங்களினின்றும் நிஶ்ஶேஷமாக-பற்றற, ஓடும்படி கனலாநின்றிருந்துள்ள திருவாழியென்னுதல். (அரணத்திண்படை) ஆஶ்ரிதர்க்கரணாய், ஶத்ருக்களாலே பேதிக்கவொண்ணாதபடியா யிருக்கை. (திண்படை) ஈஶ்வரன்விடினு மாஶ்ரிதரை விடாதவென்றுமாம். (ஏந்தியவீசற்கு) திருவாழியை யேந்துகையாலே ஸர்வேஶ்வரனானவனுக்கு (ஆளாயே) அவர்களா ளாகையாவ தென்னென்னில்; பகவத்ப்ராப்திகாமனோபாதி பகவத்பஜநமும் அந்திமஸ்ம்ருதியு முண்டாகையாலே சொல்லுகிறது. ஆளாயே-மரணந்தோற்றம் வான் பிணி மூப்பென்றிவைமாய்த்தோம். (௨)

---

## மூன்றாம்பாட்டு

ஆளுமாளார் ஆழியும்சங்கும்சுமப்பார்தாம் *
வாளும்வில்லும்கொண்டு பின்செல்வார்மற்றில்லை *
தாளும்தோளும் கைகளையாரத்தொழக்காணேன் *
நாளும்நாளும்நாடுவன் அடியேன்ஞாலத்தே. (௩)

**ப.**—அநந்தரம், விரோதிபூயிஷ்டமான ஜகத்தில் ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக ப்ரவ்ருத்தனானவனுடைய ஸஹாயாந்தராஹித்யத்தை யநுஸந்தித்து, நானடிமைசெய்யும்படி காணப்பெறுகிறிலேனென்று வெறுக்கிறார்.

(இ-ள்.) ஞாலத்து-ராவண துர்யோதந ஸமரான ப்ரதிகூலர் வர்த்திக்கிற ஜகத்திலே. ஆளும் - பரிவராயிருப்பாராளும், ஆளார் - வேணுமென்றங்கீகரிக்கிறிலர், தாம் - அநித்துப் பார்க்கப்பொறாத ஸௌகுமார்யத்தையுடைய தாம், ஆழியும் - திருவாழியையும், சங்கும் - திருச்சங்கையும், சுமப்பார் - மலையெடுத்தாப்போலே, வஹிப்பர், அப்படியானாலும். வாளும்-நந்தகத்தையும், வில்லும்-ஸ்ரீசார்ங்கத்தையும், கொண்டு - கொண்டு, (௧) "[illegible] ணிச்ப்ருஷ்டதஸ்துதநுஷ்பாணி:" என்கிற இளையபெருமாளைப்போலே,

(௧) ரா-ஆ-௧௧ ௧.

பின்செல்வார் - பின்செல்லுகைக்கு, மற்று - வேறொருவர், இல்லை - இல்லையாயிராநின்றது; நான் பின்செல்லவென்று நினைக்கிலும், தாளும் - (க) "ஸீதாஸௌமித்ரிஸஹிதம் ஸமத்தமாதங்ககாமிநம்" என்னும்படி நடக்கிற திருவடிகளையும், தோளும் - (உ) "பாஹூச்சாயாமவஷ்டப்த:" என்று நிழல்செய்கிற திருத்தோள்களையும், கைகளை - என்கைகளைக்கொண்டு, ஆர - பூர்ணமாக, தொழ - தொழுதடிமைசெய்கைக்கு, காணேன் - என்கண்ணாலே காணப்பெறுகிறிலேன், அடியேன் - சேஷத்வமே ஸ்வரூபமான நான், சேஷிக்க ப்ரயோஜகமான சேஷவ்ருத்தியே ஜீவநமாகையாலே, பசியர் சோறு தேடுமாபோலே, நாளும் நாளும் - நாள்தோறும், நாடுவன் - தேடாநின்றேன். (௩)

ஆறு ;—(ஆளுமாளார்) தன் தனிமையினுடைய ப்ரஸங்கத்தாலே அவன் தனிமையை நினைத்து, "அவன் தனிமைக்கு உதவப்பெற்றிலேன்" என்று சொல்லிக்கொண்டு தம்முடைய தனிமையைச் சொல்லுகிறார்.

மாரீச நிரஸநார்த்தமாகவாதல், கரதூஷண நிரஸநார்த்தமாகவாதல் எழுந்தருளும்போது, துணையின்றியே, தன்னுடைய ஸங்கசக்ராதி திவ்யாயுதங்களைத் தானே சுமந்துகொண்டு போகாநிற்கும்; வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வார் மற்றில்லை; தானெழுந்தருளும்போது அவனுடைய திவ்யாயுதங்களைச் சுமந்துகொண்டு, அவன் திருவடிகளையும் திருத்தோள்களையும், என்னுடைய கைகளினுடைய விடாய்தீரும்படி தொழக்காணப் பெறுகிறிலேன்; (௩) "கதாநு கலு ஸுஸ்நிக்தம் பஸ்யேயம் வத நம் ஸுபம் । ப்ரவ்ருத்தம் ஸ்வஜனம் தத்ர ஸஞ்சரந்த்யா மஹாத்மன:" என்ற பிராட்டியைப்போலே, அவனைக் காணவேணுமென்றுசைப்பட்டு, நாளும்நாளும் இந்த லோகமாகிற காட்டிலே தனியே கிடந்து கூப்பிடாநின்றேனென்கிறார். (௩)

ஈடு ; அவ ;—மூன்றாம்பாட்டு. ப்ரயோஜநாந்தர பரர்க்காகத் தன் வாசியறியாதே யெதிரிடவல்ல ஸம்ஸாரத்திலே தனியே வர்த்தியா நிற்கும், அங்குத்தைக்கு ரக்ஷையாக நானுதவப் பெறுகிறிலேனென்றின்னாதாகிறார்.

(க) ரா-அயோ ௩-உஅ. (உ) ரா-ஸு-௩௪-௩க.
(௩) ரா-ஸு-உஅ-உ.

(ஆளுமாளார்) விபூதித்வயத்திலும் பரிகைக்காளில்லை, தனியே யொருவரை யாளவேணுமென்றிருக்கிறார். நித்யஸூரிகள் பகவதநுபவத்திலே அந்யபரர், ஸம்ஸாரிகள் ஶப்தாதிகளிலே அந்யபரர். (ஆழியும் சங்கும் சுமப்பார்தாம்) ஆபரணமான திவ்யாயுதங்கள், அவன் ஸௌகுமார்யத்தாலே மலையெடுத்தாப்போலே சுமையாய்த் தோற்றுகிறது இவர்க்கு. எதிரிகளுக்கு அஸ்த்ரமாய் அநுபவிப்பார்க்கு ஆபரணமாயிருக்கிறவை. (தாம்) தம்மைப் பார்த்துக் கொள்ளவேண்டாவோ?;

(க) * எப்போதும் கைகழலா நேமியானன்றோ, அவனுக்கு நிரூபகங்களானவிவை சுமைபோவென்ன ; அது தான் செய்கிறது? (வாளும்வில்லுங்கொண்டு) இளையபெருமாளைப்போலே ஒருவர் பின்னே கொடுசென்றுலாகாதோ. "ஆளுமாளார், சுமப்பார்தாம், பின் செல்வார்மற்றில்லை) என்கிறது-" பரிவரான நீர் அவற்றுக்கன்றோ" என்று தம்மை பேவுயாராக. (தாளுந்தோளும்) நடக்கும்போது நடைச் சக்ரவத்துப் பிடிக்கும்படியாயிற்று மாறிப்பிடும் திருவடிகளிருப்பது. (உ) "அக்ரதஃ ப்ரயயௌ ராமஃ-அக்ரதஃப்ரயயௌ ராமஃ" என்னக்கடவதிறே. அத்தையும், வீசுதோள்களையும். (கைகளையார) "வபிறுரவுண்ண" என்பாரைப்போலே. (தொழக்காணேன்) தொழுகையும், பரிகையும், பர்யாயம்போலேகாணும். தொழக்காணப் பெறுகிறிலேன். நமஶ்ஶப்தத்தால் - எனக்கன்று, அவனுக்கென்றிறே சொல்லுகிறது. தொழுகையும், நமஃ என்கையும், பர்யாயமிறே.

(நாளுந்நாளும்நாடுவேன்) அவன்தனிமையை யநுஸந்தித்து, "அவனுக்கென்வருகிறதோ" என்று நாள்தோறு மாராயாநிற்பன். ஸம்பந்தம் நித்யமானால் தத்கார்யமான பரிவும் நித்யமாகக் கடவதிறே. (அடியேன்) ஸ்வரூபஜ்ஞாநமுடைய நான்; ஶேஷிக்கதிஶயத்தை விளைக்கையே ஶேஷவஸ்துவுக்கு ஸ்வரூபமென்றறிந்த நான். (ஞாலத்தே) பரமபதத்திலேயிருந்து அஸ்தாநே பயஶங்கைபண்ணுகிறேனே. ப்ரஹ்மாஸ்த்ர ப்ரயோகம்பண்ணுவார், நாகபாஶத்தையிட்டுக் கட்டுவார், அழைத்துவைத்து மல்லரையிட்டு வஞ்சிக்

(க) பெரியதிருவ-அஎ. (உ) ரா-ஆர-கக-க.

கத்தேடுவார், பொய்யாஸநமிடுவாராகிற தேசத்திலே வர்த்தியா நின்றால் நானஞ்சாதே செய்வதென். (௩)

---

## நான்காம்பாட்டு.

ஞாலம்போனகம்பற்றி ஓர்முற்றுருவுருவாகி *
ஆலம்பேரிலை அன்னவசஞ்செய்யும்அம்மானே ! *
காலம்பேர்வது ஓர்காரிருள் ஊழியொத்துளதால் * உன்
கோலங்காரேழில் காணலுற்று ஆழும்கொடியேற்கே. (௪)

ப.—அநந்தரம், அஸஹாயனான வடதளஶாயியினுடைய வாபிரூப்யத்துக் கென்னப்ரமாதம் வருகிறதோவென் றஞ்சிக்கலங்கின ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) ஓர் - அத்விதீயமாய், முற்று - அதிமுக்தமான, உருவாகி - வடிவையுடையையாய், ஞாலம் - மஹாஜகத்தை, போனகம் - போஜநமாக, பற்றி அமுதுசெய்து, ஆல் - ஆலென்று, பேர் - பேர்சொல்லலாமளவானது, இலை - ஓரிலையிலே, அன்னவசஞ்செய்யும் - இடம்வலங்கொண்டு கண்வளர்ந்தருளுகிற, அம்மானே - ஸ்வாமியானவனே, அந்தப்ராயத்திலே யென்னப்ரமாதம் வருகிறதோவென்று, கார் - காளமேகத்தின், எழில் - எழிலையுடைத்தான, உன், கோலம் - வடிவழகை, காணலுற்று - காணவேணுமென்று நிர்ப்பந்தித்து, ஆழும் - அச்சத்தாலே யாழங்காற்படும்படியான, கொடியேற்கு- கொடிய பாபத்தையுடையவெனக்கு, பேர்வது - ஒருக்ஷணத்தில்நின்றும் க்ஷணாந்தரத்திலேபேருகிற, காலம் - காலாவகாஶமானது, ஓர் - அத்விதீயமான, காரிருள்- காடாந்தகாரத்தையுடைத்தான, ஊழியொத்து - கல்பம்போலே, உளது - ஆகாநின்றது.

உன்னுடைய வகடிதகடநாஸாமர்த்யமான ஶக்தியோகமும் ஸர்வாபீஷ்டத்வபூர்த்தியும் அச்சத்துக்குறுப்பாமென்று கருத்து. (௪)

ஆறு ;—(ஞாலம்) ஓர் முற்றுருவுருவாய், அந்தப்பிள்ளைத்தனத்தாலே ஸர்வலோகங்களையு மமுதுசெய்து, பெரியவெள்ளத்திலே சிறியதோராலிலையிலே, யசோதைப்பிராட்டியைப்போலே யிருப்பாளொருத்தியாருமின்றியே, தனியே கண்வளர்ந்தருளுகிறதசையில் துணையாயிருக்கப்பெறாமையாலும், உன் வடிவழகைக்காண வாசைப்பட்டுப் பெறாமையாலும், அகாதமான துக்கார்ணவத்திலே நிமக்நனாய்க்

கிடக்கிற வெனக்கு ஒருக்ஷணமானது அந்தகாரமயமான ராத்ரியுக மாய்ச் செல்லுகிறதென்கிறார். (ச)

ஈடு ; அவ ;—நான்காம்பாட்டு; இவரிப்படியஞ்சினவாறே, ப்ர ளயாபத்தினின்றும் ஜகத்தையெடுத்து வயிற்றிலேவைத்து நோக்கி னவனன்றோ நான், நீர் நமக்கு பயப்படவேண்டாகாணுமென்று தான் ஸர்வரக்ஷகனாயிருக்கிற விருப்பைக்காட்டினான் ; ஸர்வரக்ஷக மான வஸ்துவாகாதே ப்ரளயத்திலே யகப்படப்புக்கதென்று அதுக் குமஞ்சுகிறார்.

(ஞாலம்போனகம்பற்றி) "இதுநமக்கு ஸாத்மியாது" என்றறி யாதே, பூமிப்பரப்பையன்றோ வயிற்றிலே யெடுத்துவைத்தது. "வெண்ணெயும் ஸாத்மியாது" என்றிறே இவரிருப்பது. (ஓர்முற் றுருவுருவாகி) ஒரு கொழுட்டிலே தெறித்தால் மற்றைக்கொழுட்டா லே பால்பாயும் பருவமாயிற்றுப்பருவம். யசோதாஸ்தநந்தயத்துக் கும்கீழாயிறேயிருப்பது இந்த மௌக்த்யம் ப்ரளயாபத்திலே வரை யாதே ரக்ஷித்தரக்ஷகத்வமும், அகடிதகடநாஸாமர்த்யமும் இவர் நெஞ்சில் படுகிறதில்லை ; ஸௌகுமார்யமேயாயிற்று இவர்க்குத் தோற்றியிருக்கிறது.

(ஆலம்பேரிலை) அங்கொருதொட்டிலிலே கிடக்கப்பெற்றது, இங்கொருபவனை வாலிலையிலேயாயிற்றுத் திருக்கண்வளர்ந்தருளு கிறது. (பேரிலை) பேருகிறவிலை. முகிழ்விரிகிறவிலை (க) "[Grantha quotation, partly illegible] ... கதந்வயம் ... தேலோ கோ ... பாகதே । ... ல்வேத்விதிவிஸ் மிதஃ" (உ) "இளந்தளிரில் கண்வளர்ந்த" என்கிறபடியே. ஆலிலை யென்று-ஒருபேர்மாத்ர மென்னுதல்; பெரியவிலையென்று - விபரீத லக்ஷணையாய், சிற்றிலையென்றுதல்.

(அன்னவசஞ்செய்யும்) உணவுக்கீடாக இடம்வலங்கொள்ளும்; யசோதைப்பிராட்டி தொட்டிலில்பண்ணும் வ்யாபாரமெல்லாம் பண் ணுமாயிற்று அதுக்குள்ளே. (ந)* கிடக்கில்தொட்டில் கிழியவுதைத்

---

(க) பார-ஆர-கஅஅ-கக. (உ) தி-மொ-உ-கO-கO.
(ந) பெரியா-தி-க-க-க.

டும் அதில்; தனக்கு ஸாத்மியாதபூமியை அமுதுசெய்கையும், "ஸாத்மியாது" என்றறியாத முக்தனுகையும், ப்ரளயத்திலே அல்பாவகாசமான வாலிலையிலே கண்வளர்ந்தருளுகையும், அதிலே கிடந்தவிடத்தில் கிடவாதே வ்யாபரிக்கையும், இவையெல்லாம் பயஸ்தாநமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு. (அம்மானே) ஸர்வரக்ஷகனுனவனே. ஒருகாபுருஷனுக்கு வந்ததொன்றன்றிக்கே ஸர்வரக்ஷகனுனவனுக்கு வந்ததென்று இதுவும் பயஸ்தாநமாகிறது இவர்க்கு.

(காலமித்யாதி) உன் தனிமையை யநுஸந்திக்க வநுஸந்திக்க, ஒரு க்ஷணத்தினின்றும் க்ஷணாந்தரத்திலே பேருகிற நடுவில் ஸந்திமாத்ரம், மஹாந்தகாரமான கல்பமாய்க்கொண்டு நெடுகாநின்றது எனக்கு. (உன்கோலம் காரேழில்காணலுற்று) உன்னுடைய கறுத்தவெழிலான கோலமென்னுதல்; மேகத்தினுடைய வெழில்போலேயிருந்துள்ள வழகென்னுதல். (காணலுற்றுழங்கொடியேற்கு) மங்களாஸாஸநம் பண்ணுகைக்கு உன்னழகிய வடிவைக்காண வாசைப்பட்டுப் பெறுதே நோவுபடுகிற மஹாபாபியான வெனக்கு. ஸம்ஸாரபயம் அவனை யாஸ்ரயிக்கப்போம்; ஒருகாலத்திலும் முடியாதே நித்யமாயிருப்பதொருபய மநுவர்த்திக்கும்படியான பாபத்தைப்பண்ணினேன். "ரக்ஷகனுக்கென்வருகிறதோ" என்கிற பயத்துக்கு முடிவில்லையே. (௪)

---

# ஐந்தாம்பாட்டு.

கொடியார்மாடக் கோளூரகத்தும்புளிங்குடியும் *
மடியாதின்னே நீதுயில்மேவிமகிழ்ந்ததுதான் *
அடியாரல்லல்தவிர்த்தஅசைவோ ? அன்றேல் * இப்
படிதான்நீண்டுதாவிய அசைவோ ? பணியாயே. (ரு)

ப —அநந்தரம், திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் முசியாதே கண்வளர்ந்தருளுகிறது, ஆஸ்ரிதவிரோதி நிவர்த்தநத்தாலும் த்ரிவிக்ரமாபதாநத்தாலும் வந்த வாயாஸமோ வென்கிறார்.

(இ-ள்.) விரோதிகளு மறியலாம்படி, கொடி - கொடிகள், ஆர்-செறிந்த மாடம் - மாடத்தையுடைய, கோளூர் - திருக்கோளூர்க்கு, அகத்தும்-உள்ளும், பலவிடத்தில் படுக்கைபடுத்தது அலைச்சலின் மிகுதியென் றுஸங்கிக்கலாம்படி புளிங்குடியும் - திருப்புளிங்குடியிலும், மடியாது - மீளாதே, இன்னே - ஒரு

படிப்படவிப்படி, துயில்மேவி - கண்வளர்ந்தருளினவத்தாலே, நீ - நீ, மகிழ்ந்தது தான் - உகப்புப்பிறந்திருக்கிறவிது, ஆஶ்ரிதவிரோதிகளான ராவணாதிகளை நிரஸித்து, அடியார் - அவர்கள், அல்லல் - துக்கத்தை, தவிர்த்த - போக்கின, அசைவோ - அலேச்சலாலேயோ, அன்றேல் - அதல்லவாகில், இ - இந்த, படிதான் - பூமியை, நீண்டு - ஒருநாளே வளர்ந்து, தாவிய-அளந்துகொண்ட அசைவோ - ஆயாஸமோ, உன் திருமிடற்றோசையில் வாசியாலே நான் உன் ஶ்ரமத்தின் மிகுதி யறிகைக்காகவும், நொந்தவிடமறிகைக்காகவும், பணியாய் - அருளிச்செய்யவேணும்.

அளந்ததாளைப்பிடித்தல், எய்த்த தோளைப்பிடித்தல் செய்கையிலே இவர்க்குக்கருத்து. (ரு)

ஆறு ;—(கொடியார்) "அந்த விழவுதீரவேணும்" என்று ஆஶ்ரிதர்க்கு ஆதரம் பண்ணுகைக்குக் கொடிகட்டிக்கொண்டிருக்கிற திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் போய்ப்புக்கவிடத்திலே, தம்மைத் திருக்கண்ணாலே பார்த்தருளுதல், ஒருவார்த்தை யருளிச்செய்தல், ஒரு திவ்யசேஷ்டிதத்தைப் பண்ணுதல் செய்தருளாதே யொருபடியே கண்வளரக்கண்டவாறே; நீ யொருபடியே கண்வளர்ந்தருளுகிறது ஆஶ்ரிதவிரோதி நிரஸநஜநிதஶ்ரமத்தாலேயோ, அன்றிக்கே, த்ரைலோக்ய விக்ரமணஜநித ஶ்ரமத்தாலேயோ வென்றுகொண்டு, இவனுக்கொரு வ்யஸநமுண்டானதாக ஶங்கித்து வ்யஸநப்படுகிறார். (ரு)

ஈடு ; அவ ;—ஐந்தாம்பாட்டு. பரமயார்ணவத்திலே தனியே கண்வளர்ந்தருளுகிறானென்று பயப்பட்டவர் பயந்தீர, பரிவருமுண்டாய், நிர்ப்பயமான திருக்கோளூர் திருப்புளிங்குடி தொடக்கமான விடங்களிலே கண்வளர்ந்தருளுகிறபடியைக் காட்டிக்கொடுக்க, அது தானு மிவர்க்கு பயஹேதுவாயிற்று.

(கொடியார்மாடக் கோளூரகத்தும்) கொடிமிக்க மாடங்களையுடைய திருக்கோளூரிலும் ஶத்ருக்கள் கிடந்தவிடமறிந்து அபிசரிக்கும்படி கொடிகட்டிக்கொண்டு கிடக்கவேணுமோ. கொடிக்குபயப்படவல்லார் இவரைப்போலில்லை. கம்ஸபயத்தாலே யொளித்து வளர்ந்தாப்போலே யிருக்கலாதோ. இந்த பயமில்லையிறே கீழ்ப்பாட்டில்; அநுகூல ப்ரதிகூல விபாகமற ஸம்ஹ்ருதமாய்க் கிடக்கை

யாலே. (புளிங்குடியும்) இதுவுமொருபயஹேறு. பலவிடங்களிலும் படுக்கை படுகிறது ப்ரமத்தின் மிகுதியென்றிருக்கிறார்.

(மடியாது) இடம் வலங்கொள்ளாதே யென்னுதல்; மடியென்று-சோம்பாய், சோம்பாதே யென்னுதல். அதாவது-நமக்காக வியன் கிடக்கிறானென்றறிந்து "பரிகைக்கொருத்தரைப் பெற்றிலோம்" என்றிராமாதொழிகை. (இன்னே) இப்படியே (க) "கிடந்ததோர் கிடக்கை" என்னு மித்தனை யொழிய, பாசுரமிடப்போகாதிருக்கை. (நீ துயில்மேவிமகிழ்ந்ததுதான்) * அவிகாரியாயிருக்கிற நீயொருபடியே கண்வளர்ந்தருளி, அத்தாலே யினியனுமைக்கு ஹேறுவென். இவன் முகத்திலே தெளிவுண்டாயிருந்தது, அதுக்கடி முன்பே யொருப்ரமமுண்டானையிறேயென்றிருக்கிறார்; ப்ரமமுடையார்க்கு உறங்கவுறங்க முகந்தெளிந்து வரக்காண்கையாலே.

(அடியாரல்லல்தவிர்த்தவசைவோ) திருவடிகளிலே சரணம்புகுந்த விக்ராதிகளுக்காக ராவணாதிகளை யழியச்செய்து, அவர்களுடைய துக்கங்களைக்கெடுத்த விளைப்போ. (அன்றேல்) அன்றிபே. (இப்படியித்யாதி) அன்றேபிறந்து அன்றேவளர்ந்து ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு காடுமேடையுமளந்துகொள்ளுகையாலே திருவடிகள்நொந்தோ. (பணியாயே) தோள்நொந்தோ, திருவடிகள் நொந்தோ, அருளிச்செய்யாய்; தோள்நொந்ததென்னில் தோளைப் பிடிக்க, தாள்நொந்ததென்னில் தாளைப்பிடிக்கவு மருளிச்செய்யவேணும். ஸ்வரஸாதங்கொண்டறியலாமென்று கேட்கிறார். உகந்தருளின விடங்களிலும் செய்யமுடியாததில்லை, சொல்ல நினையாமலிருக்கிறானித்தனையென்றிருக்கிறார். (௯)

---

## ஆறும்பாட்டு.

பணியாஅமரர் பணிவும்பண்பும்தாமேயாம் *
அணியாராழியும்சங்கமும் ஏந்துமவர்காண்மின் *
தணியாவெங்நோய் உலகில்தவிர்ப்பான் * திருநீல
மணியார்மேனியோடு என்மனம்சூழவருவாரே. (௰)

ப.—அநந்தரம், நித்யஸூரிகளுக் கநுபாவ்யமான நிரதிசயபோக்ய விக்ரஹத்தோடே ப்ரதிகூல பூயிஷ்டமான விஜ்ஜகத்தில் "என்னுகிறதோ" என்று என்னெஞ்சு கலந்தும்படி வாராநின்றானென்கிறார்.

---

(க) திருமாலை-உ௩.

(க) "நக்ஷத்ராணி-நகிங்கர:" என்கிறபடியே ஓரவஸ்தையிலும், பணியா- ஔபாதிகமாகவாகிலும் வேறொருவர்காலில் பணியவேண்டாதபடி அமரர் - *அநந்யாதிபதிகளான நித்யஸூரிகளுடைய, பணிவும் - ஸ்வரூப ப்ரயுக்தமாய் ஸ்வாபாவிகமான பணிவுக்கும், பண்பும் - அவர்கள் ஜ்ஞாநப்ரேமாதி ஸ்வபாவங்களுக்கும், தாமேயாம் - தாமே விஷயமாய்க்கொண்டு, அணி - ஆபரணரூபமான, ஆர் - போக்யதையையுடைய, ஆழியும் - திருவாழியையும், சங்கமும் - திருச்சங்கத்தையும், ஏந்தும் - அவர்களுக்கநுபாவ்யமாம்படி யேந்தியிருக்கும், அவர்காண்மின் - அவர்கிடீர், அப்படியிருக்கச்செய்தே, உலகில்-லோகத்தில் தணியா - ஒருகாலும் தணியாமல் நடக்கக்கடவதாய், வெம் - அதிசயிதபரிதாபஹேதுவான, நோய் - அவித்யாகர்மவாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்த ரூபவ்யாதிகளை, தவிர்ப்பான் - கழிக்கைக்காக, திரு- அந்த நித்யஸூரிகளுக்கு நித்யாநுபாவ்யமாய் நிரதிசய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி ஸம்பத்தை, ஆர்-உடைத்தான, நீலமணி - நீலரத்நம்போலேயிருக்கிற, மேனியோடு - திருமேனியோடேகூட, "இவ்வடிவழகுக்கென்ன தீங்குவருகிறதோ" என்று, என் - என், மனம் - மநஸ்ஸானது; சூழ-ப்ரமிக்கும்படி, வருவார்-ஸம்ஸாரத்திலேவருவர்.

ஆறு;—(பணியாவமரர்) ஸ்வாச்ரித சதுர்முகாதி தேவர்களுக்கு ஸ்வேதர ஸகலஜநாபிவந்த்யத்வ நிரதிசயைச்வர்ய ப்ரதனுப், ஸகலலோகதுக நிரஸநார்த்தமாக ஸ்வாத்மவிபூஷண சங்க சக்ராதி திவ்யாயுததரனுப், நிரதிசய ரமணீய நீலரத்ந ஸத்ருசனுயிருந்தவனை யாசைப்பட்டுக்கிடீர்? நாணிப்பாடு படுகிறதென்கிறார். (கூ)

ஈடு; அவ;—ஆறும்பாட்டு. நீரிங்ஙனேகிடந்து படுகிறதென், ஸர்வரக்ஷகனன்றோ அவனென்ன; நித்யஸூரிகள் பரியவிருக்கக்கடவவன் ஸம்ஸாரத்திலே அவ்வடிவோடேவந்து உலாவாநின்றால் நாணிப்படி படாதேசெய்வதென்னென்கிறார்.

(பணியாவமரர்) வேறே சிலரைப் பணிய ஸம்பாவனையில்லாத நித்யஸூரிகள். முன்பு அஸேவ்யர் காலிலேகுனிந்து ஒருநாளிலேயநுபவித்து, (உ) "அமுக்குடம்பெச்சில்வாய்" என்றநுதபித்து, பின்பு வகுத்தார்காலிலே குனிந்தவர்களல்லர். பணித்தல் பணிதல் செய்யாதவர்கள். இத்தால்-முந்தரை வ்யாவர்த்திக்கிறது. (பணி

(க) பாக-கக நி சுக. (உ) திருக்குறு-கஉ.

வும்பண்பும்தாமேயாம்) அவர்கள் பணிவுக்கும் ஜ்ஞாநாதிகுணங்களுக்கும் தாமே விஷயமாயிருக்குமவர்.

(அணியாராழியும் சங்கமுமேந்தும்) ஸர்வாபரணமும் தானேயாகப் போரும்படியான திவ்யாயுதங்களை தரித்து, நித்யஸூரிகளுக்குக்காட்சிகொடுத்தால் அவர்களும் அஸ்த்ராதே பயமங்கைபண்ணி மங்களாசாஸநம் பண்ணும்படியாயிற்றிருப்பது. அவர்களுக்கும் நான்பட்டது படவேணும். (அவர்காண்மின்) அவர்கிடீர் பயஸ்த்தாநத்திலே பிறக்கிறார்.

தமக்கொரு ப்ரயோஜநத்துக்காகத் தான் வருகிறாரோ (உலகில்-தணியாவெங்நோய்-தவிர்ப்பான்) (தணியாவெங்நோய்) ஒருநாளும் முடியாததாபத்ரயாதிகள் (திருநீலமணியார்மேனியோடு) நீலமணிபோலே ஸ்ரமஹரமாய் ஸுகுமாரமானவடிவோடே. இங்கே வரவேண்டினால் அவ்வடிவோடே வரவேணுமோ. (என்மனம்) அந்த ஸுகுமாரமானவடிவோடே ஸம்ஸாரத்திலே யுலாவுகிறானென்றறிந்த வென்மநஸ்ஸானது. (சூழவருவாரே) சுழன்றுவரும்படி வருகிறவர். தணியாவெங்நோய்-தவிர்ப்பான் உலகில் வருகிறவரென்றுமாம். (௬)

---

## ஏழாம்பாட்டு.

வருவார்செல்வார் வண்பரிசாரத்துஇருந்த * என்
திருவாழ்மார்வற்கு என்திறம்சொல்லார் செய்வதுஎன் ? *
உருவார்சக்கரம் சங்குசுமந்து இங்குஉம்மோடு *
ஒருபாடுழல்வான் ஓரடியானும்உளனென்றே. (எ)

ப.—அநந்தரம், கிஞ்சித்கரிக்கைக்குப் பிராட்டியோடே திருப்பரிசாரத்திலேயிருக்கிறவர்க்கு உமக்குப் பரிவனாயிருப்பானொருகிங்கரனுண்டென்று ஒருவருஞ் சொல்லுகிறிலரென்று வெறுக்கிறார்.

(இ-ள்.) வருவார் - அங்குநின்றும் வருவார், செல்வார் - இங்குநின்றும் செல்லுவாராகிறவவர்கள், வண் - விலக்ஷண ஸம்பத்தையுடைத்தான, பரிசாரத்து - திருப்பரிசாரத்திலே, என் - என்னை யடிமைகொள்ளுகைக் கீடாக, இருந்த - எழுந்தருளியிருக்கிற, திருவாழ்மார்வற்கு - ஸ்ரீமானுக்கு, உரு - வடிவழகால், ஆர் - பொருந்தமான, சக்கரம் - திருவாழியையும், சங்கும் - திருச்

சங்கையும், சுமந்து - தரித்துக்கொண்டு, இங்கு- இந்தவிபூதியிலே, உம்மோடு- உம்மோடேகூட, ஒருபாடு - பார்ஸ்வவர்த்தியாய்க்கொண்டு, உழல்வான் - திரிவான், ஓர் - அத்விதீயனாயிருப்பானொரு, அடியானும் - அடியானும், உளன் - உளன், என்று - என்று, என் - என், திறம் - இடையாட்டம், சொல்லார் - சொல்லுகிறிலர்கள்; வருகிறவர்கள் தம்மை யழைத்துவாராமையாலும், போகிறவர்களொரு மறுமாற்றம் கேளாமையாலும் இவர்கள் வாத்தும்போக்கும் தமக்காகவென்று நினைத்து, சொல்லுகிறிலரென்கிறார்; இவர்கள் சொல்லாதவளவில் அவரறிந்தங்கீகரிக்கைக்கு, செய்வது - செய்யலாவது, என் - ஏதென்று வெறுக்கிறார். (எ)

ஆறு ;— (வருவார்) நாணிப்பாடுபடாநிற்கச்செய்தே அவனெழுந்தருளாதொழிகிறது என்னுடைய வ்யஸந மறியாமையென்று பார்த்து;

ஸ்வகார்யார்த்தமாகப் போகிறாரும் வருகிறாரும் திருப்பரிசாரத்தேறப் போகிறாராகவும் அங்குநின்று வருகிறாராகவும் நிஶ்சயித்து, அவர்கள், திருப்பரிசாரத்திலே யெனக்குத்தாயும் தந்தையுமாய் என்னைத் தேடிக்கொண்டிருக்கிற வென்திருவாழ்மார்வற்கு, நிரதிஶய தர்ஶநீய ஸுதர்ஶந ஶங்காதி திவ்யாயுதங்களைச் சுமந்துகொண்டு இந்தலோகத்திலே தனியே யெழுந்தருளும்போது பின்னே சாயையைப்போலே திரிவானொரடியானுமுளனென்று என்திறஞ்சொல்லார், செய்வதென்னென்கிறார். (எ)

ஈடு ; அவ ;—ஏழாம்பாட்டு. இங்கேவந்து திருப்பரிசாரத்திலே யெழுந்தருளியிருக்க நானுதவப்பெறாதே அவஸந்நனானால், ஓரடியானுமுளனென்று அவனுக்கறிவிப்பாரையும் பெறுகிறிலோமென்கிறார்.

(வருவார்செல்வார்) திருநகரியினின்றும் திருப்பரிசாரத்திலே மஹாபதமாக †விசங்கைநிற்கும். ஸ்வகார்யத்தாலே த்வரித்துப்போவாரைத் தம்தசையை யறிவிக்கப்போகிறார்களென்றும், அங்குநின்றும் வருவாரைத் தம்மை யழைக்கவருகிறார்களென்று மிருப்பர். இயக்கமற்றிருக்கிற தன்றுகிடீர். திருப்பரிசாரத்தி லிருப்புக்குப்பரியவேணும். அதுக்குமேல் பிராட்டியோட்டைச் சேர்த்திக்குப்பரிய

---

† இசங்குதை - நடக்கை.

வேணும். (க) "ஸவாஂஸ்த்-ஸஹௌ வை தே ஹா-பவாம்ஸ்துஸஹ வைதேஹ்யா" என்றிளையபெருமாளைப்போலே தொடர்ந்துபோ யடிமை செய்யவேண்டும்படியாயிற்று இங்கிருக்கிறவிருப்பு.

(என்திறஞ்சோல்லார்) சொன்னவார்த்தை கேட்பாரில்லா மை சொல்லாதொழிகிறாரல்லர்கிடீர். (என்திருவாழ்மார்வற்கு) என் ஸ்வாமிஸந்நிதியாகையாலே சொன்னவார்த்தை விலைச்செல்லுங் கிடீர். (செய்வதேன்) இதுக்கென்னாற் செய்யலாவதென். ஸ்வகார்ய பரராய்ப் போவார்களாகில்; அவர்களங்குப்போனால் சொல்லும்பாசு ரமேதென்ன (உருவார்சக்கரமித்யாதி) அழகுமிக்கிருந்துள்ள வாழ் வார்களை ஸாதரமாக தரித்தென்னுதல், திருமேனிக்கெல்லாம் வே றோராபரணம் வேண்டாதே தானே யாபரணமாகப் போரும்படியான வாழ்வார்களை தரித்து. (இங்கு) பரிவரின்றிக்கேயிருக்கிற ஸம்ஸா ரத்திலே.

(உம்மோடோருபாழேல்வான்) இடைவிடாதே யொருபார்ஶ்வத்தைப்பற்றித்திரிவான். ஒருபார்ஶ்வத்துக்கு இளையபெருமாளுண்டிறே. (ஓரடியானுமுளனென்றே) அநந்யப்ரயோஜநனாயிருப்பானொருவனுளனென்று. (௨) "ஸர்வஹா-த்ரா ஸம்ஹ் ஸ்ஸ்-ஸஹாத்மாஸ-தூர்லப:" என்கிறபடியே ஒருவரில்லையென்று கைவாங்கியிருப்பர்; அதுவேண்டா, ஒருவனுளனென்று என்னிடையாட்டம் சொல்லுகிறிலர்கள், செய்வதென். (எ)

---

## எட்டாம்பாட்டு.

என்றேஎன்னை உன்னேரார்கோலத்திருந்தடிக்கீழ் *
நின்றேயாட்செய்ய நீகொண்டருளநினைப்பதுதான்? *
குன்றேழ்பாரேழ் சூழ்கடல்ஞாலம்முழுவேழும் *
நின்றேதாவிய நீள்கழலாழித்திருமாலே! (அ)

ப.—அநந்தரம், அகிலவஸ்து ஸம்ஶ்லேஷ ஸ்வபாவனான நீ உன் திருவடிகளிலே நானடிமைசெய்யும்படி யங்கீகரிப்பதென்றென்கிறார்.

(இ-ள்,) ஏழ்குன்று - ஸப்தகுலபர்வதங்களையும். ஏழ்பார் - ஸப்தத்வீபங்களையும், சூழ் - சூழ்ந்த, கடல் - அவ்வோ ஸமுத்ராங்களையும், ஏழ்ஞாலமும் -

(க) ரா-அயோ-௩௧-௨௫. (௨) கீதை-எ-௧௯.

பூம்யாதியான ஸப்தலோகங்களையும், முழு - முழுக்க, நின்றே - நின்ற நிலையிலே நின்று, தாவிய - கவடடித்துக்கொண்ட, நீள் - நெடிய, கழல் - திருவடிகளையுடையனாய், ஆழி - அந்த ஶேஷித்வ ஸூசகமான திருவாழியையுடையனாய், திருமாலே - ஶ்ரிய:பதியானவனே, என்னை-உனக்கு ஶேஷபூதனாய்ப் பரிவனாயிருக்கிறவென்னை, உன் - ஸுகுமாரனாய் போக்யபூதனான வுன்னுடைய, ஏர் - அழகு, ஆர்- விஞ்சின, கோலம்-ஆபரணஶோபையையுமுடைத்தாய், திருந்து - ஸ்வாபாவிக ஸௌந்தர்ய விஶிஷ்டமான, அடிக்கீழ் - திருவடிகளின்கீழே, நின்றே - ஒருகாலும் பிரியாதேநின்று, ஆட்செய்ய - உன்னுடைய ஶ்ரிய:பதித்வ ஸௌகுமார்யாதிகளுக்கீடாக மங்களாஶாஸநம்பண்ணியடிமைசெய்வேனும்படி, நீ - நீ, கொண்டருளி- உன் திருவுள்ளத்தாலே அங்கீகரித்து, நினைப்பதுதான் - இது முழுக்க நிர்வஹிப்பதாக நினைத்தருளுவதுதான், என்று - என்றாயிருக்கிறது.

கொண்டருள நினைப்பதென்றுஞ் சொல்லுவர். என்றேலென்றதில், ஏல் - அசை. (அ)

ஆறு;—(என்றேலென்னை) அவன் ஸர்வஜ்ஞனல்லனோ, அறிந்தருளாமையுண்டோ நினையாமையல்லதென்று பார்த்து ;

என்னையுன்னேரார்கோலத் திருந்தடிக்கீழ் நின்றேயாட்செய்யும்படி நீ விஷயீகரித்தருள நினைப்பது தானென்றென்றபேக்ஷித்து, பின்னையும்பேக்ஷிதம் செய்தருளா தொழிந்தவாறே, நானொருபாயாநுஷ்டாநம் பண்ணுமையாலாகாதே அபேக்ஷிதஞ் செய்தருளாதொழிகிறதென்று பார்த்து, உன்னுடைய க்ருபையாலே நிர்ஹேதுகமாக ஸர்வலோகத்தையு மளந்தருளினாப்போலே, அடியேனுடைய வபேக்ஷிதம் செய்தருளாயென்கிறார். (அ)

ஈடு; அவ;— எட்டாம்பாட்டு. பிறரைவிடேர், உன்திருவடிக்கீழே பரிகைக்கு நிலையாளாக வென்னைக் கொள்வதென்றென்று அவன் றன்னைக்கேட்கிறார்.

(என்றே) உம்முடைய கார்யம் செய்கிறோமிறே யென்ன; அது தானென்றென்கிறார். (என்னை) உனக்குப் பரிந்தன்றி உளேனாகாதிருக்கிறவென்னை. (உன்னித்யாதி) உன் அழகு மிக்க வொப்பனை திருந்தின திருவடிகளின் கீழே; மங்களாஶாஸநம் பண்ணியல்லது நிற்கவொண்ணாத திருவடிகளென்கை. (நின்றேயாட்செய்ய) (க)

(க) யஜு-ஸ-கா-க-ப்ர அ-ப-அ.

தைஹிகெளைஷாமிகெ-தேஹிமேததாமிதே " என்று ப்ரயோஜநத்தைக் கொண்டுபோகையன்றிக்கே, விடாதே யடிமைசெய்ய (நீ கொண்டருள) நான் இடந்தானை கண்டேறுகையன்றிக்கே, அடிமைசெய்வானென்று திருவுள்ளத்தே கொண்டருள. (நினைப்பதுதான்) (நின்றேயாட்செய்ய - நினைப்பதுதான்) அவன் நினைவுக்கே பலவ்யாப்தியுள்ளது. தம்மபிநிவேசம் அப்ரயோஜகமென் றிருக்கிறார்.

(குன்றேழித்யாதி) " வண்பரிசாரத்திருந்த " என்று - எழுந்தருளியிருக்கிற விருப்புத்தனக்குப் பரியவேண்டியிருக்க, அதிமாநுஷமான செயலைச்செய்தால் மங்களாசாஸநம்பண்ணியே நிற்கவேண்டாவோ. ஸப்தகுல பர்வதமென்ன, ஸப்தத்வீபமென்ன, அவற்றைச்சூழ்ந்த ஸப்தஸமுத்ரமென்ன, இப்படி யேழுவகைப்பட்ட பூமியை யடைய நின்றநிலையிலே நின்றளந்து கொண்டருளும்படி நீண்ட திருவடிகளை யுடையையாய், கையுந் திருவாழியுமான ஸ்ரிய:பதியே. ஶங்கசக்ராதி திவ்யாயுதங்களையுடைய ஸ்ரிய:பதியாய் வைத்து, காடுமோடையுமான பூமியையடைய நின்ற நிலையிலே ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டளந்த ப்ரமந்திர ஶிஶிரோபசாரம் பண்ணப்பெறும் நாளென்றென்கை. அரியனசெய்யவல்ல நீ, நானுன்திருவடிகளைக்கிட்டி நின்றடிமை செய்யும்படி நினைத்தருள வேணுமென்றுமாம். (அ)

## ஒன்பதாம்பாட்டு.

திருமால்! நான்முகன் செஞ்சடையனேன்றிவர்கள் * எம்
பெருமான்தன்மையை யாரறிகிற்பார்? பேசியேன்? *
ஒருமாமுதல்வா! ஊழிப்பிரான்! என்னையாளுடை *
கருமாமேனியன்என்பன் என்காதல்கலக்கவே. (கூ)

ப.—அநந்தரம், அதிஶயிதஜ்ஞாநரான ப்ரஹ்மாதிகளும் உன் ஸௌகுமார்ய மறியாமையாலே, என்ப்ரேமம்கலக்க நான் பரிவனாய்க் கூப்பிடாநின்றேனென்கிறார்.

(இ-ள்.) திரு - பெரியபிராட்டியார்க்கு, மால்-வல்லபனான வைலக்ஷண்யத்தையுடையவனே, நான்முகன் - ஸ்ருஷ்டியில் பஹுமுக வ்யாபாரனான ப்ரஹ்மாவும், செஞ்சடையான் - தப:பரனான ருத்ரனும் ,என்று-என்றுப்ரஸித்

தரான, இவர்கள் - இவர்கள், எம்பெருமான் - எனக்குஸ்வாமியாய் ஸர்வாதிக ஞன வுன்னுடைய, தன்மையை - ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதியான ஸ்வாபாவிக வைலக்ஷண்யத்தை, அறிகிற்பார் - அறியவல்லார், ஆர் - ஆர்தான், என் - என்னுடைய, காதல் - ப்ரேமமானது, கலக்க - நெஞ்சைக்கலக்க, ஒரு - அத்விதீயமான, மாமுதல்வா - பரமகாரணபூதனே, ஸ்ருஷ்டமான வாத்மாக்கருக்கு, ஊழி - காலாநுரூபமாக, பிரான் - உபகாரகனானவனே, என்னை - என்னை, ஆளுடை - அடிமைகொண்ட, கரு - ஶ்யாமளமான, மாமேனியன் - விலக்ஷண விக்ரஹயுக்தனே, என்பன் - என்று சொல்லாநிற்பன்; உன் ஸௌகுமார்யத்தைப் பாராதே, † "மாதுர்யமே!" என்று பிராட்டியஞ்சும்படி ஜகத்துத்பாதநத்தைப் பண்ணுவது, உத்பந்நரான சேதநர்க்கு ஆபத்துத்தோற்றுங்காலந்தோறும் உபகாரகனாய் வ்யாபரிப்பது, என்போல்வாரை யங்கீகரிக்கைக்காக அழகியவடிவைக்கொண்டு வருவதாகப் புக்கவாறே உன்னுடைய ஸௌகுமார்யத்துக் கஞ்சாநின்றேன்; அவாங்மநஸகோசரமான விந்த ஸௌகுமார்யத்துக்கு, பேசியென் - என்னபாசுரமிட்டுச் சொல்லுவது. (௯)

ஆறு;—(திருமால்) ஆகிலுமென்னை யுள்ளபடி யறிந்தேத்தினுலல்லது உம்முடைய வபேக்ஷிதம் செய்யக்கடவதென்னென்னில்; திருமால் எம்பெருமானுயிருந்த வுன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை ஸர்வஜ்ஞரான ப்ரஹ்மாதிகள் தாமறியவல்லரோ; இவ்வர்த்தமுபபாதயமோ; ஆனபின்பு, அதிக்ஷுத்ரனான நானறிந்தேத்துகையாவதென்னென்ன; அங்ஙனேயாகில், அத்விதீய பரமகாரணபூதனே, (க) "[illegible]-காலசக்ரம்ஜகச்சக்ரம் யுகசக்ரஞ்சகேஶவ:। ஆத்மயோகேநபகவாந்பரிவர்த்தயதேநிஶம்" என்று சொன்னப்போலே, ஸங்கல்பமாத்ரத்தாலே க்ருதத்ரேதாதி ஸகல யுகப்ரவர்த்தகனே, ப்ராக்ருத க்ஷுத்ரவிஷய ப்ரவணனான வென்னையுங்கூடத் தோற்பித்தடிமையாக்கவல்ல * நிரவதிக ஸௌந்தர்ய ஸௌகுமார்யலாவண்ய யௌவநாத்யநந்த குணநிதியாய், * நீலமேக ஸத்ருஶமான திவ்யரூபத்தையுடையவனேயென்று சொல்லுவானென்னென்னில்; காதலாலே கலக்குண்டுசொன்னேன், நானறிந்துசொன்னேனல்லேனென்கிறார். (௯)

---

(க) † (பா) உர்தாயமே.

ஈடு ; அவ ;—ஒன்பதாம்பாட்டு. நமக்குப்பரிய ப்ரஹ்மாதிக ளுண்டாயிருக்க, நீரிங்ஙனஞ்சுகிற தென்னென்ன ; அவர்கள் உன் ஸௌகுமார்ய மறிவர்களோ வென்கிறார்.

(திருமால்) திருமாலென்று நிஷ்கர்ஷித்து ஸம்போதிக்கிறார். நீயும் பிராட்டியுமான சேர்த்திக்கு மங்களாசாஸநம்பண்ணுவர்களோ அவர்கள். (நான்முகன்) ஸ்ருஷ்டிக்குறுப்பான பலமுகங்களையுடையனாய், அதிலே அந்யபரனானவன். (செஞ்சடையான்) ஸாதகவேஷந்தோற்ற நிற்கிற ருத்ரன், தன்னபிமதலாபத்திலே அந்யபரன். (எம்பெருமான்றன்மையை) ஸர்வேஶ்வரனான வுன்னுடைய ஸௌகுமார்யத்தை. (ஆரறிகிற்பார்) சிலராலே யறியலாயிருந்ததோ. அந்யபரராயிருக்கிறவர்கள் உன் ஸௌகுமார்யத்தை யறியவல்லர்களோ. அநந்யபரராநாற்றான் தேவருடைய ஸௌகுமார்யந்தான் சிலராலறியலாமோ. (பேசியென்) இதுசொல்லி யென்னப்ரயோஜநமுண்டு. அவர்களைப் பரிவராக்கவோ, உன் ஸௌகுமார்யத்தைப் பரிச்சிந்நமாக்கவோ.

அவர்கள் நம்மை யறியமாட்டார்களாகில் அறிந்தநீர் பேசிக் காணீரென்ன ; என்னாற்றான் செய்பலா யிருந்ததோவென்கிறார். (ஒருமாமுதல்வா) விலக்ஷணமான பரமகாரணமானவனே. (ஊழிப்பிரான்) காலோபலக்ஷித ! ஸகலபதார்த்தங்களுக்கும் ஸ்வாமியானவனே. (என்னையித்யாதி) புறம்பே அந்யபரனான வென்னை அநந்யபரனாம்படிபண்ணின வடிவையுடையவனே. (என்பன்) இவ்வளவிறே யென்னளவும். ஸர்வநிர்வாஹகனாய் வடிவழகிலே யென்னைச் சேர்த்துக்கொண்ட விதிறே யென்னைக் கலங்கப்பண்ணிற்று.

(என்காதல்கலக்கவே) என்னுடைய ப்ரேமமானது நானஞ்சும்படி கலங்கப்பண்ண, உன்வடிவழகிலும் மேன்மையிலும் கலங்கிச்சொன்ன வத்தனைபோக்கி, உன் ஸௌகுமார்யத்தை யெல்லை கண்டு சொன்னேனல்லேன். ப்ரேமாந்தனாய்க்கொண்டு சொன்னேனத்தனைபோக்கி, நெஞ்சொழிந்து சொன்னேனல்லேன் ; ப்ரயோஜநாந்தரபரரான ப்ரஹ்மாதிகள் பரிவு முனக்கு ஸத்ருஶமன்று, ப்ரேமாந்தனான வென்பரிவு முனக்கு ஸத்ருஶமன்றென்றதாயிற்று.

# பத்தாம்பாட்டு.

கலக்கமில்லாநல்தவமுனிவர் கரைகண்டோர் *
துளக்கமில்லாவானவர் எல்லாம்தொழுவார்கள் *
மலக்கமெய்த மாகடல்தன்னைக்கடைந்தானை *
உலக்கநாம்புகழ்கிற்பது என்செய்வது ? உரையீரே. (க௦)

**ப.**—அநந்தரம், முமுக்ஷுக்களோடு முக்தர்களோடு நித்யஸூரிகளோடு வாசியற நமக்குப் பரிவராயிருக்க, நாம் ஶக்திமான்களாயிருக்க நீரஞ்சவேண்டா வென்ன ; ஆஶ்ரித ஜநஸாமக்ர்யத்தையும் அதிஶயித ஶக்தியோகத்தையு மநுஸந்தித்து ஸமாஹிதராகிறார்.

(இ-ள்.) ப்ரஹ்மபாவநாநிஷ்டராகையாலே, கலக்கம் - ஸாம்ஸாரிக ஸ்வபாவங்களாகிற கலக்கம், இல்லா - அற்ற, நற்றவம் - ஜ்ஞாநரூப தபஸ்ஸையுடைய, முனிவர் - ஸநகாதிமுனிகள், கரைகண்டோர் - (க) “ ஹஸாயு நஃ வாரஹோவ்ரா தி-ஸோத்த்வந: பாரமாப்நோதி” என்கிறபடியே ஸம்ஸாராத்வாவைக் கரைகண்டமுக்தர், அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தராகையாலே, ஒருகாலும், துளக்கம் - சலநம், இல்லா - அற்ற, வானவர் - நித்யஸூரிகள், எல்லாம் - எல்லாரும், தொழுவார்கள் - பரிவராய்க்கொண்டு தொழுது மங்களாஶாஸநம் பண்ணுமவர்கள், மா - அபரிச்சிந்நமான, கடல்தன்னை-ஸமுத்ரத்தை மலக்கமெய்த - கலங்கும்படி, கடைந்தானை - கடைந்த ஸர்வஶக்தியுக்தனை, நாம், உலக்க - முடியக்கண்டு, புகழ்கிற்பது - புகழவல்லோமாகையாகிறவிது, என்செய்வது - என்செய்ததாயிற்று, உரையீர் - சொல்லீகோளென்று, லௌகிகரைப்பார்த்துச் சொன்னாராயிற்று. (க௦)

ஆறு ;—( கலக்கமில்லா ) அவனை யறிந்தேத்தினீராணலோ வென்னில் ;

அஸ்கலிதஜ்ஞாநராய், நிரதிஶய பக்தியுக்தராய், பகவதநுபவைக போகரான * அயர்வறுமமரர்கள், அவனுடைய கல்யாணகுண மஹோததியினுடைய விக்கரைகண்டார், பகவத் பரிசர்யைக போகரான நித்ய ஸித்தபுருஷர்கள், அவன் திருவடிகளில் ஸ்துத்யாதி பரிசர்யை பண்ணுவார், அபேக்ஷாப்ய மஹோததியை க்ஷுபிதமாம்படி கடைந்தருளினவன் பரிசர்யை பண்ணப்படுகிறவன், இப்படி இருக்கிற வவனை நாமுள்ளபடி யறிந்து புகழுகையாவதென். ஆகில்

(க) கடவல்லி-ங-கூ-

நீர் புகழ்வானென்னென்னில்; என்காதலென்னைக் கலக்காநின்றால் நான் செய்வதென்; ஆனபின்பு, உன்க்ருபையாலே அடிமைகொண்டருளவேணுமென்கிறார். (௧೦)

ஈடு; அவ;—பத்தாம்பாட்டு. இவர் பயத்தைப்பரிஹரிக்கைக்காக நமக்குஸநகாதிகள் முக்தர்நித்யஸூரிகள் இவர்கள் கிட்டிநின்று பரிமாறுகிறார்கள்; நாந்தாம் அரியசெயல்களும் செய்யவல்லோம் இலரானபின்பு, நீர் நமக்கஞ்சவேண்டா காணுமென்ன; முன்பு பயஹேதுக்களானவைதானே பயநிவ்ருத்திக்குடலாய், அத்தை யநுஸந்தித் தினியராகிறார். இவர்தமக்கின்னபோது இன்னதுபயஹேதுவாம், இன்னபோதின்னது பரிஹாரமாமென்று தெரியாதிறே.

(கலக்கமில்லாநற்றவமுனிவர்) தங்கள் ஜ்ஞாநத்துக்கு விஷயங்களால்வரும் கலக்கமின்றிக்கே, மஹாதபஸ்ஸுக்களையுடையராய் மநநஶீலரான ஸநகாதிகள். (கரைகண்டோர்) முக்தர் (துளக்கமில்லாவானவர்) துளக்கம்-நடுக்கம். ஸம்ஸாரஸ்பர்ஶமில்லாத நித்யஸூரிகள். துளக்கம் - சலநம். அதாவது - ஸங்கோசம். (எல்லாந்தொழுவார்கள்) முமுக்ஷுக்களும் முக்தரும் நித்யஸித்தருமானவிவர்களடிமை செய்கிறவர்கள். அடிமையாவது-ஸ்வாமிக்கதிஶயத்தைப் பண்ணுகைதானகையாலே, மங்களாஶாஸநமிறே. (மலக்கமித்யாதி) மஹத்தத்த்வமான கடலை க்ஷுபிதமாம்படி கடைந்த பெருமிடுக்கன். பரிகிறவர்கள் தாங்களும் குழைச்சரக்காம்படி பெருமிடுக்கனென்கை.

(உலக்கவித்யாதி) அவன்படியை நேராகவறியாத நாம் பரிவிலேயிழிந்து முடியப்பேசப்புக்கது, என்செய்தோமானோம், சொல்லிகோள். முன்பு தன்மிடுக்கைக்காட்டின விடங்களில் அத்தை ப்ரதிபத்திபண்ணாதே அதுதன்னையேசொல்ல, இப்போது ஸமாஹிதமாயற்றது, இப்ப்ரபந்தம் தலைக்கட்டக் கடவதாகையாலேயாதல், ஈஶ்வரனுடைய ஜீவநாத்ருஷ்டத்தாலே யாதலிறே. (௧೦)

---

## பதினோராம்பாட்டு

உரையாவெந்நோய்தவிர அருள்நீள்முடியானை *
வரையார்மாட மன்னுகுருகூர்ச்சடகோபன் *
உரையேய்சொல்தொடை ஓராயிரத்துள் இப்பத்தும் *
நிரையேவல்லார் நீடுலகத்துப்பிறவாரே. (௧௧)

ப.— அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸித்தார்க்கு பலமாக ஸம்ஸாரநிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) உரையா - வாசாமகோசரமாம்படி, "ஸௌகுமார்யாதிகளுக்கென்னவருகிறதோ" என்று அதிஶங்கையைப்பிறப்பித்து, வெம் - பரிதாபஹேதுவான, நோய் - கலக்கமாகிறநோயானது, தவிர-தீரும்படியாக, அருள் - தன்னுடைய விபூதிபூர்த்தியையும் ஶக்திபூர்த்தியையுங்காட்டின, நீண்முடியானை - ஸர்வாதிகஶேஷியானவனை, வரை - வரை, ஆர் - செறிந்தாப்போலேயிருக்கிற, மாடம் - மாடங்கள், மன்னு - ஸ்த்திரமாம்படியாயிருக்கிற, குருகூர்-திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாருடைய, உரை - உக்திப்ரகாரமாய், ஏய் - செறிந்த, சொல்தொடை - சொற்றொடையை யுடைத்தாய், ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இப்பத்தும்-இப்பத்தையும், நிரையே-அடைவுபட, வல்லார் - சொல்லவல்லவர்கள், நீடு - விஸ்தீர்ணமாய், உலகத்து-பகவத்விஷயத்துக்குப் பரிவரில்லாத விஸ்ஸம்ஸாரத்திலே, பிறவார் - பிறவார்.

இது - கலித்துறை. (௧௧)

ஆறு ;—(உரையா) துர்வசமாய் காலாக்நி ஸத்ருஶமாயிருந்த விரஹ (வ) கர்மத்தாலுள்ள ஸந்தாபம் தவிரும்படி நிரதிஶயவிஷயீகாரஸூசகமான காருண்யமய ஶிரஃகம்பநத்தாலே தம்மைவிஷயீகரித்த வெம்பெருமானைச் சொன்ன வித்திருவாய்மொழியை வல்லார், * ஸம்ஸாரமருகாந்தாரத்தில் பிறவாரென்கிறார். (௧௧)

ஈடு; நிகமத்தில் - இத்திருவாய்மொழி யப்யஸிப்பார், அவன் தனிமைகண்டு பயப்படும் ஸம்ஸாரத்தில் பிறவாரென்கிறார்.

(உரையாவெந்நோய்) வாசாமகோசரமாய், அதிக்ரூரமானநோய். தம்மளவில் ஸாத்மிக்கையன்றிக்கே, "உபயவிபூதிநாதனுக்கென் வருகிறதோ" என்றஞ்சினநோயிறே. (தவிரவருள்நீண்முடியானை) இதுபோம்படிக்கீடாகவருளும் ஸ்வபாவனான உபயவிபூதிநாதனை. "இவர்பயம்போம்படி 'உம்முடையவபேக்ஷிதம் செய்கிறோம்' என்று ஶிரஃகம்பநம் பண்ணினான்போலேகாண்" என்றம்மங்கியம்மாள். இவ்வாழ்வாருடைய பயம்நிவ்ருத்தமானபின்பாயிற்று உபயவிபூதிக்கும் ரக்ஷகனைச் சூடினமுடியும் நிலைநின்றதாயிற்று.

(வரையாரித்யாதி) இவர்பயம் நிவ்ருத்தமானவாறே ஸம்ருத்தமுமாய் ஸ்த்திரமுமாயிற்றுத் திருநகரியும். (உரையேயித்யாதி) உக்தியால் சேர்ந்தசொற்றொடையையுடைத்தாய் விலக்ஷணமான வாயிரம். (இப்பத்தும் நிரையேவல்லார்) இப்பத்தை அடைவுதப்பாம லப்யஸிக்கவல்லார். தமக்குப்பிறந்த கலக்கத்தாலே, இதிலிழிவார்க்கும் அடைவுபட வநுஸந்திக்கவொண்ணாதென்றிருக்கிறார். (நீடுலகத்துப்பிறவாரே) இப்பூமிப்பரப்பையடைய வநுஸந்தித்தால் பரப்பேயாய், ஸர்வேஶ்வரன் தனிமைக்குப் பரியவொருவரைக் கிடையாத விதேசத்திலேபிறவார்கள்; ஒருநாடாக மங்களாஶாஸநம்பண்ணுகிறதேசத்திலேபோய் நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்.

மூன்றும் திருவாய்மொழி முற்றிற்று.

---



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

## எட்டாம்பத்து.

## நான்காம் திருவாய்மொழி.

### வார்கடா - ப்ரவேஸங்கள்.

ஆறு ;—(வார்கடாவருவி) இப்படி விரஹக (வ) ர்மாபிதப்தரான வாழ்வாருடைய விடாயைப்போக்கி யருளுகைக்காக, முன்னமே திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலே, ஒரு தாமரைத் தடாகம் நின்றாப்போலே தான் நின்றருளினபடியைக்காட்டக்கண்டு, ப்ரீதியாலே, ஸலஜ ஜலதமேசாநயநஹாரி திவ்யசேஷ்டித ஸௌலப்த்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணகண ஸர்வேஶ்வரத்வங்களைப்பேசி, அந்தத்தாமரைத்தடாக மிருந்தவிடத்தேறச் செல்லவேணுமென்கிறார். *

ப:—நாலாந்திருவாய்மொழியில், கீழ்அவனுடைய ஸௌகுமார்யத்தாலே தனிமைக்கஞ்சின விவருடையபயந்தீரும்படி பரிவரையும் ஶக்தியையுங்காட்டி யாஶ்வஸிப்பித்த ஸர்வேஶ்வரன், "இவரிப்படி யஞ்சிற்று விரோதிபூயிஷ்டதேஶ மென்றாயிருக்கும், நம்முடைய விரோதிநிவர்த்தகத்வத்தையும் ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ஶக்தியையுங்காட்டுவோம்" என்று இவர்திருவுள்ளத்திலே ப்ரகாஶிப்பிக்க; அவனுடைய அகிலவிரோதி நிவர்த்தகத்வத்தையும், அஶேஷ ஜகத்விஷயமான ஸ்ருஷ்ட்யாதிவ்யாபாரத்தையும், ஆஶ்ரிதாபத்ஸகத்வத்தையும், ஆஶ்ரிதார்த்தமான வதிஶயித வ்யாபாரத்தையும், ஆஶ்ரயணீயஸ்தலாந்தர விலக்ஷணமான தேஶவிஶேஷஸ்திதியையும், ஆஶ்ரயணீயதா வைலக்ஷண்யத்துக் கடியானஸர்வப்ரகாரோபகாரகத்வத்தையும், அநுபாவ்யமான வாபிரூப்யாதிஶயத்தையும், ஜகஜ்ஜந்மாதிஹேதுத்வத்தையும், ஸ்ரஷ்ட்ரு ஸ்ருஜ்யாதி விபாகமில்லாத ஸர்வாத்மபாவத்தையும், ஸத்தாவிபூதிஹேதுவான நிருபாதிக ஶேஷித்வத்தையுமநுஸந்தித்து, எவம்பூதனான ஸர்வேஶ்வரன், பரிவரான வைதிகாக்ரேஸருடைய ஸம்பத்தைத் தனக்குஸம்பத்தாம்படி திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளிநின்ற வதிஶயத்தை யநுஸந்தித்து ஸந்துஷ்டராகிறார்.

ஈடு;—"ஸர்வேஶ்வரன் ஸம்ஸாரிகளுடைய வபேக்ஷையே யாலம்பநமாக ஸம்ஸாரத்திலே வந்தவதரித்துத் தனியே யுலாவாநிற்கும்; ஸம்ஸாரிகளும் தந்தாமபேக்ஷிதங்களைப்பற்றக்கிட்டுமதொழியவிவன்

வாசியறிந்து பரியக்கடவாரில்லை, என்புகுகிறதோ" என்றஞ்சின விவர்க்கு, அந்தவச்சந்தீரும்படி "நமக்குப்பரிவருண்டு, ஒருத்தர் பரியவேண்டாதபடியான மிடுக்கும் நமக்குண்டு" என்று தன்படிகளைக்காட்டி ஸமாதாநம்பண்ண ஸமாஹிதராய்நின்றார் - கீழ்;

இதில்-இவராகிறார் ப்ரேமஸ்வபாவராயிருப்பர், * காதல்மையலேறிக்கலங்கி, "முக்தரும் நித்யருமிங்கில்லையே, ஸநகாதி முமுக்ஷுக்கள் நல்லதபஸ்ஸும் மநநத்யாநமும் விடமாட்டார்கள், கடல் கடைந்தது தேவயோநியிலேயன்றோ" என்று கலங்குவர். இன்னம் இவர்க்கிது|மறுவலிடக்கூடுமென்றுபார்த்து, மறுவலிடாதபடி தன் ஶௌர்யவீர்யாதி குணங்களையும், ஸ்ருஷ்ட்யாத்யத்புதகர்மங்களையும் எதிரிட்டவிரோதி வர்க்கத்தை வேரோடேவாங்கிப் பொகடவல்லஶக்தியையும் காட்டிக்கொடுத்து, அதுக்குமேலே, "அதிஶயித ஜ்ஞாநஶக்திகராய்த்தனக்குப்பரிவாராயிருப்பார் மூவாயிரம் ப்ராஹ்மணருண்டு" என்று காட்டிக்கொடுக்கக்கண்டு க்ருதார்த்தராய், அவன்வடிவழகிலேயும் நெஞ்சுசென்றநுபவித் தினியராகிறார்.

ஸ்ரீவிபீஷணாழ்வான் (க) "ராகவம் ஶரணம் கத: - ராகவம் ஶரணங்கத:" என்று வந்து விழுந்தபோது, மஹாராஜர் பெருமாள் பக்கல் ப்ரேமத்தாலேகலங்கி, துணுக்கென்று, "இவன் சொன்னவார்த்தை பெருமாள் திருச்செவியிலே படுமாகில் சாலத்தப்பாம்" என்று, "நாயன்றே, ராவணப்ராதா - ராக்ஷஸஜாதி, அவன் புகுரக்கடவனல்லன்" என்ன, "இவர்நம்பக்கல் பரிவாலேசொல்லுகிற வார்த்தை, நம்மிடுக்கைக்காட்டவே தெளிவர்" என்று பார்த்து, (உ) "பிஶாசாந் தாநவாந் - பிஶாசாந் தாநவாந்" இத்யாதியாலே தம்முடைய மிடுக்கைக் காட்டக்கண்டு அவரச்சந்தீர்ந்து, (ங) "கிம் கார்யம் ஸீதயா மம-கிமத்ரசித்ரம்" என்றினிய ராணைப்போலவும், மல்லயுத்தத்தில்(ச) "நஸமம் யுத்தமித்யாஹு:-நஸமம் யுத்தமித்யாஹு:" என்கிற பார்ஶ்வஸ்த்தருடைய பயத்தை, அவர்கள் ஸந்நிதியிலே க்ருஷ்ணன் மல்லரை யழியச்செய்து தீர்த்தருளினைப்போலவும், தம்முடைய பயத்தைப் போக்கியருள, அத்தாலே க்ருதார்த்தராய், "இனி நமக்குதாரகபோஷக போக்யங்கள் இவனல்லதில்லை" என்று

(க) ரா-யு-கஎ-கக- (உ) ரா-யு-கஅ உங.
(ங) ரா-யு-கஅ-ஙக- (ச) வி-பு-ரு-

ப்ரீதராய், முன்பு அழகைக்கண்டு பரிவாலே பீதரானவர், அழகிலே நெஞ்சுசென்றநுபவித்து க்ருதார்த்தராய்த் தலைக்கட்டுகிறார். *

---

## முதற்பாட்டு.

வார்கடாவருவியானை மாமலையின் மருப்பிணைக்கு வடிறுத்துருட்டி * ஊர்கோள்திண்பாகனுயிர்செகுத்து அரங்கின்மல்லரைக் கொன்று சூழ்பரண்மேல்* போர்கடாவரசர்புறக்கிட மாடமீமிசைக் கஞ்சனைத்தகர்த்த* சீர்கோள்சிற்றாயன்தி ருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எங்கள்செல்சார்வே. (க)

ப:—முதற்பாட்டில், குவலயாபீடம் முதலான அகில விரோதிநிராஸகனை சீர்கொள் சிற்றாயன் வர்த்திக்கிற திருச்செங்குன்றூர் நமக்கு நிர்ப்பயமான வாப்ரயணீயஸ்தலமென்கிறார்.

வார் - பாய்கிற, கடா - மதமாகிற, அருவி - அருவியையுடைய, ஆனை- ஆனையாகிற, மா - பெரிய, மலையின் - மலையினுடைய, மருப்பு - கொம்புகளாகிற, இணை - சேர்ந்த, குவடு - சிகரங்களை, இறுத்து - முறித்து, உருட்டி - அநாயாஸேந ஆனையையுருட்டி, ஊர்கொள் - ஆனை கொம்புமுறிந் திருக்கவும் நடத்திக்கொடுவர வல்ல சிக்ஷையில், திண் - திண்மையையுடையனான, பாகன் பாகனுடைய, உயிர்-ப்ராணனை, செகுத்து - அழித்து, அரங்கத்திலே, அரங்கில் - ரங்கமத்யகதரான, மல்லரை-சாணூரமுஷ்டிகராகிறமல்லரை, கொன்று- கொன்று, சூழ் - ரங்கம்சூழ்ந்த, பரண்மேல் - மச்சுக்களிலே நிற்பாராய், போர்- போரை, கடா - நடத்தக்கடவ, அரசர்- ராஜாக்கள், புறக்கிட-புறகிட்டுப்போம் படியாக, மாடமீமிசை - உத்துங்கமான மாடத்தில் மேல்நிலத்திலே யிருக்கிற, கஞ்சனை-கம்ஸனை, தகர்த்த - பசளைக்குடமுடைத்தாப்போலே தள்ளிக்குதித்துடைத்துப் பொகட்ட, சீர் - வீரஸ்ரீயை, கொள் - உடையவனாய். சிறு - பாலனான, ஆயன் -க்ருஷ்ணனெழுந்தருளி நிற்கிற, திருச்செங்குன்றூரில் - திருச்செங்குன்றூரிலே, திருச்சிற்றாறு - திருச்சிற்றாறானது, எங்கள்-எங்களுக்கு, செல்-சென்று கிட்டுகைக்கு, சார்வு - ஆப்ரயணீயஸ்தலம். (க)

ஆறு ;—நிஷ்யந்தமாக மதஜலமாகிற ஸரித்தையுடைத்தான குவலயாபீடமாகிற மஹாசலத்தினுடைய தந்தயுகளமாகிற சிகரங்களை முறித்துருட்டி, ஊர்கொள் திண்பாகனுயிர் செகுத்து, கஜதந்தவராயுததரராய், நம்பி மூத்தபிரானும்தானும், சர்வலீலாவ

லோகிதங்களையுடைய விரண்டுஸிம்ஹங்கள் க்ஷுத்ரம்ருகங்கள் நடுவே புக்காப்போலே, ரங்கமத்யத்திலே போய்ப்புக்கு மல்லரைக் கொன்று, மஞ்சோபரிஸ்த்திதராய், இதப்பூர்வம் யுத்தத்தில் பராஜிதரான ராஜாக்கள் த்ரஸ்தராய்க் கெடும்படி யெழுப்பாய்ந்து, மஞ்சோச்சதஸ்த்தலஸ்த்தனான கம்ஸனை, * வெண்ணெய்விழுங்கி வெறுங்கலத்தை வெற்பிடையிட்டதனோசைகேட்டு விளையாடினாப்போலே தகர்த்த சீர்கொள் சிற்றாயன் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு எங்களுக்கு ப்ராப்யமென்கிறார். (க)

ஈடு ; அவ ;—முதற்பாட்டு. குவலயாபீடம் முதலான ப்ரதிகூலரை நிரஸித்த சீர்கொள் சிற்றாயனுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெங்களுக்கு நிர்ப்பயமான புகலென்கிறார்.

(வார்கடாவருவியானைமாமலையின்) வாராநின்றுள்ள மதஜலமான வருவியையுடைய வானையாகிறமா மலையினுடைய. கடா-மதம். மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப் பிச்சேற்றி, புகுகிற வாசலிலே நிறுத்தினான், ப்ரமாதத்தாலே வந்ததென்று மாதுலனாய்க் கண்ணநீர்விழவிட்டுத் தானிருப்பானாக. (க) " புகுவாய்நின்றபோதகம் வீழப்பொருதான்" என்னக்கடவதிறே. (மருப்பிணைக்குவடிறுத்து) மருப்பாகிற விணைக்குவடுகளையிறுத்து, கொம்பாகிற சிகரங்களை அநாயாஸேந முறித்து. அம்மலையிலே யிரண்டுசிகரங்களை யொடித்தாப்போலே. (உருட்டி) கொம்புகளைப் பறித்தவாறே யுளுக்காந்தது, திருவடிகளாலே அநாயாஸேந தள்ளி.

(ஊர்கோள்திண்பாகன்) உயிருள்ள பதார்த்தத்தை நடத்துமாபோலே நடத்தவல்லனாயிற்று சிக்ஷாபலத்தாலே. திண்ணியனாய் ஆனையை நடத்துகிற பாகன். (உயிர்செகுத்து) அத்தைத் தள்ளினாலும் இவனுயிர்போகாதவன்று அத்தை முடித்ததாகாதாகாநுத, (அரங்கின்மல்லரைக்கொன்று) ஆனையின் கொம்புகளிரண்டையுமிருவருங்கொண்டு ரங்கமத்யத்திலே புக்கவளவிலே, அச்செருக்குப் பொறாமையாலே, யுத்தோந்முகராய் வந்த சாணூரமுஷ்டிகர்களைக்கொன்று. ஆனை திர்யக்காகையாலே விரகறியாதேபட்டது. அது போயிற்றாகிலும் மல்லருண்டென்று கம்ஸன் நினைத்திருந்தவர்களை யழியச்செய்தபடி. (உ) " நவஸம்ய—ஷிதீ—ஸம-ம- ஸம்

(க) தி-மொ-க-டு-க (உ) ரா-யு-கஐ-கூ

மம்யுத்தமித்யாஹு:" என்று பெண்கள் முதலான பார்ஶ்வஸ்த்த ரடங்கக் கூப்பிட்டு பீதரான ஸமயத்திலே, அவர்கள் பயமெல்லாம் போம்படி அநாயாஸேந மல்லரைக்கொன்று. (சூழ்பரண்மேல்) சுற்றுமுண்டான மஞ்சத்தின்மேலே நின்ற.

(போர்கடாவரசர்புறக்கிட) கொடுபடையை வெற்றியுண்டாம்படி கடாவிப்போருமரசர் (க) "ஸேநாநயவிஶாரத:-ஸேநாநய விஶாரத:" என்கிறபடியே தாசித்தலையிலே வெற்றியோடல்லது மீளாதபடி படைபொருத்தி யுத்தத்தை நடத்தவல்ல ராஜாக்கள் முதுகுகாட்டி யோடும்படியாக. (மாடமீமிசை) (௨) "[illegible]வஸ்தித: - துங்கமஞ்ச வ்யவஸ்தித:" என்கிறபடியே, உயர்ந்த மாடத்திலே யிருக்கிற. தனக்கு பயமெவ்வளவுண்டு. அவ்வளவு முயர்த்திருயிற்று மாடத்தை (கஞ்சனைத்தகர்த்த) அவனிருக்கிற விடத்தளவு மெழப்பாய்ந்து, (௩) கஞ்சன்குஞ்சிபிடித் தடித்த பிரான்" என்கிறபடியே-மயிரைப்பிடித்துக் கீழேவிழவிட்டு மேலே பாய்ந்து பசளைக்கலம்போலே யுடைத்தான்; (௪) "அவஜ்ஞயா ஹதம் த்ருஷ்ட்வா க்ருஷ்ணேந மதுரேஶ்வரம் - அவஜ்ஞயாஹதம் த்ருஷ்ட்வா க்ருஷ்ணேநமதுரேஶ்வரம்" என்கிறபடியே (௫) "கேஶேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீடமவநீதலே। ஸகம்ஸம் பாதயாமாஸ தஸ்யோபரி பபாத ச - கேஶேஷ்வாக்ருஷ்ய விகளத்கிரீடமவநீதலே। ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச" "ராஜத்ரோஹிகளைக் கொல்லும்போது ராஜசிஹ்நங்களை வாங்கிக் கொல்லுமாபோலே, தான்கொடுத்த முடியைவாங்கிக் காண்கொன்றது" என்று அம்மங்கியம்மாள் பணிப்பர்.

(சீர்கோள்சிற்றுயன்) பருவம் நிரம்பாதிருக்கச்செய்தே வீரஸ்ரீயால் குறைவற்றிருக்கிறவன். (திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுற) புலிநின்றதுறுபோலே ப்ரதிகூலர்தங்களுக்கஞ்சவேண்டுமூர். (எங்கள்) மஹாராஜர், பெரியாழ்வார், ஸ்ரீவிதுரர், நாம், பிள்ளையுறங்காவில்லிதாஸர், இங்ஙனொத்தபரிவர். (செல்சார்வே) நிர்ப்பயஸ்த்தாநமென்று புகும்புகல், கிழிவர்க்கோடினபயம் நீங்கிற்றென்றுமிடம் இயல் தழைப்பிலே தெளிந்திருக்கிறபடி கண்டதே. (க)

(க) ரா-அயோ-க-உக. (௨) வி-பு-ரு-௨௦-உக. (௩) தி-மொ-௩-௪௦-௩.
(௪) வி-பு-ரு-௨௦-௯௦, (௫) வி-பு-ரு-௨௦-அ௪.

# இரண்டாம்பாட்டு.

எங்கள்செல்சார்வுயாமுடையமுதம் இமையவரப்பன்என்னப்பன் * பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும் பொருந்துமூவுருவன்எம்மருவன் * செங்கயலுகளும் தேம்பணைபுடைசூழ் திருச்செங்குன்றூர்த்திருச்சிற்றாறு அங்குஅமர்கின்ற * ஆதியானல்லால் யாவர்மற்றுஎன் அமர்துணையே ? (உ)

ப:—அநந்தரம், அசேஷஜகத்விஷயமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபார ஸமர்த்தனாய்த் திருச்செங்குன்றூரி லெழுந்தருளி யிருக்கிறவனல்லது எனக்கு நற்றுணையில்லையென்கிறார்.

எங்கள் - எங்களுக்கு, செல் - சென்றாஶ்ரயிக்கப் படுவதான. சார்வு - புகலிடமாய், புகலிடமாமளவன்றியே, யாம் - நாம். உடை - உடையோமான, அமுதம் - போக்யமுமாய். இமையவர் - அஸ்கலிதஜ்ஞாநரான ஸூரிகளுக்கு, அப்பன்-உபகாரகனாய். அப்படியே, என் - எனக்கும். அப்பன் - உபகாரகனாய். பொங்கு-ஸம்ருத்தமான. மூவுலகும் - லோகத்ரயத்தையும்,படைத்து - ஸ்ருஷ்டித்து, அளித்து-ரக்ஷித்து, அழிக்கும் - ஸம்ஹரிப்பானாய், பொருந்து - இதுக்குப்பொருந்தின, மூவுருவன்-மூர்த்தித்ரயத்தையுமுடையவனாய்.இவ்வாகாரங்களெனக்கு ப்ரகாஶிக்கும்படி, எம் - எனக்கு, அருவன் - அந்தராத்மாவாய், அப்படியே முகந்தோன்றாமை நிற்கையன்றியே,கண்கண்டநுபவிக்கும்படி, செம் இளமையாலே சிவந்த, கயல் - கயல்கள், உகளும் - உகளிக்கும்படி, தேம், தேன்-விஞ்சின, பணைபுடை - மருதநிலத்தாலே, சூழ் - சூழப்பட்ட, திருச்செங்குன்றூர் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு - திருச்சிற்றாறாகிற அங்கு - விலக்ஷணதேசத்திலே, அமர்கின்ற - பொருந்திவர்த்திக்கிற, ஆதியான் - ஸகல ஸத்தாஹேதுபூதனானவன், அல்லால் - அல்லது, மற்று - வேறு, என் - எனக்கு, அமர் - அநுரூபமான, துணை - ஸஹாயம், யாவர் - ஆர்தான்,

பணை - நீர்நிலமுமாம். (உ)

ஆறு:—( எங்கள்செல்சார்வு ) நமக்கு ப்ராப்யமாய், நமக்கு போக்யமாய், *அயர்வறுமமரர்களதிபதியாய், எனக்கு ஸ்வாமியாய் நிகிலபுவநநிர்மாண த்ராண ஸம்ஹரண ஸ்லீலனாய், த்ரிமூர்த்திரூபனாய், ப்ரதிகூலஜநதுர்த்தர்ஶனாய். ஸர்வகாரணமாய், மதமுதிதமீநாகுல மதுமிளித ஸலில பரீதஶஸ்யாமள பஹுள பலாஶ ஸூரபி

குஸூமதருகிர பரிவ்ருதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங் கரையின்றவ னல்லது மற்றெனக்கொரு துணையில்லையென்கிறார்.

ஈடு: அவ:—ஜகத்ஸ்ருஷ்ட்யாதி ஸமர்த்தனாய்த் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனல்லது எனக்கு நற்றுணையில்லையென்கிறார்.

(எங்கள்செல்சார்வு) அநுகூலராயிருப்பார்க்கெல்லாமஞ்சவேண்டாதபுகல், (யாமுடையமுதம்) புகலேயாய், போக்யவஸ்து வேறே தேடவேண்டாதேயிருக்கை. "எங்கள், யாம்" என்னப்பலருண்டே;* கேசவன்றமர்க்குப் பின்புதனியரல்லரே; (க) "குன்றமெடுத்தபிரானடியாரொடு மொன்றிநின்றசடகோபன்" என்று, அவர்களோடொன்றிநின்று சொல்லுகிற சொல்லிறே. (இமையவரப்பனென்னப்பன்) நித்யஸூரிகளை யடிமைகொண்டாப்போலேயென்னை யடிமைகொண்டவன். குறைவற்றார்க்கும் ஸத்தாஹேதுவாய், குறைவுக்கெல்லையான வெனக்கும் ஸத்தாஹேதுவானவன்.

(பொங்கித்யாதி) விஸ்த்ருதமான த்ரைலோக்யத்தையுமுண்டாக்கி ரக்ஷித்தழிக்குமவன், (பொருந்துமூவுருவன்) இச்செயல்களுக்குப் பொருந்தின மூன்றுவடிவை யுடையவன்; ப்ரஹ்மாந்தர்யாமியாய்ஸ்ருஷ்டிக்கும்; ருத்ராந்தர்யாமியாய் ஸம்ஹரிக்கும். ஸ்வேநரூபேண நின்று பாலநத்தைப் பண்ணும். பொருந்துகையாவது ரஜஸ்தம: ப்ரசுரரான ப்ரஹ்மாதிகளோடு இவ்யவிக்ரஹத்தோடு வாசியற்றிருக்கை. (எம்மருவன்) அல்லாதார்காரியம்கம்புத்த்யதீநமாயிருக்குமதன்னையல்லது, நங்காரியம் அல்லாதார் நினைவின்படியல்லகாணுமிருப்பது" என்றெனக்கறிவித்து, என் பயநிவ்ருத்தியைப்பண்ணி எனக்கு தாரகனானவன், (க) [உத்பத்திஸ்திதிநாஸாநாமஹேதும் ஹேதுமீஸ்வரம் - உத்பத்திஸ்த்திநாஸாநாமஹேதும் ஹேது மீஸ்வரம்] ஸ்வேதர ஸகலங்களும் தன்னினைவிலேயாய், தான் ஒருவன் நினைவின்படியன்றிக்கே யிருக்கிறபடியைக்காட்டியென்னை தரிப்பித்தவன்.

(செங்கயலுகளும்) யௌவநத்தாலே சிவந்தகயல்கள் களித்துவர்த்திக்கும் தேசம். பரிவரில்லையென்று முன்பே க்லேசிதது,

(க) வி-பு-க-கூ-ஙக.

கூஅ திருவாய்மொழி, அ-ப, ௬-தி, ௩-பா, என்னமர் வ்யாக்யாநம்.

பின்பு * வார்கடாவருவியாய் ப்ரீதராகவேண்டாதே, ஸகல பதார்த்தங்களும் களித்தேவர்த்திக்கும் தேசமென்கை. (தேம்பணைபுடைசூழ்) தேனையுடைத்தான நீர்நிலங்கள்சூழ்ந்தவென்னுதல், மருதநிலத்தாலேசூழப்பட்ட ஊரென்னுதல். (அங்கமர்கின்ற) அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணுகிறவூர். (ஆதியான்) ஸர்வகாரணமானவனென்னுதல், எனக்குஸத்தாஹேதுவானவனென்னுதல். ப்ரஜைக்கு ப்ரத்யாஸந்நமாக வர்த்திக்கும் தாயைப்போலே, என் ஸத்தையை நோக்கிக்கொண்டிருக்கிறவன். (அல்லால்யாவர்மற்றேன்னமர்துணையே) இவனையொழிய வெனக்குச் சேர்ந்த துணையில்லை, அல்லாதார் கழுத்துக்கட்டியாதல்; துணையென்று பேராய், ஆபத்திலேகூட வழுதல் செய்யுமித்தனை. (௨)

---

## மூன்றும் பாட்டு.

என்னமர்பெருமான் இமையவர்பெருமான் இருநிலமிடந்தஎம்பெருமான் * முன்னைவல்வினைகள்முழுதுடன்மாள என்னையாள்கின்ற எம்பெருமான் * தென்திசைக்கு அணிகொள் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரைமீபால் நின்ற எம்பெருமான் * அடியல்லால் சரண் நினைப்பிலும் பிறிதில்லைஎனக்கே. (௩)

ப.—அநந்தரம், வாராஹரூபியாய் ப்ரளயாபத்திலே பூமியையிடந்தெடுத்து ரக்ஷித்தவன் திருவடிகளொழிய வேறுபாயமில்லையென்கிறார்.

(இ - ள்.) இமையவர்-நித்யஸூரிகளுக்கு, பெருமான் - நிர்வாஹகனைப்போலே, என்-எனக்கு, அமர்பெருமான்-அநுரூபநாயகனாய், இருநிலம்-மஹாப்ருதிவியை, இடந்த-ப்ரளயாபத்தி வீடுபடாம விடந்தெடுத்த, எம்பெருமான் என்னுடைய நாதனாய், அப்படியே, முன்னை-அநாதியாய், வல்-ப்ரபலமான வினைகள்-பாபங்கள், முழுது-எல்லாம், உடன்-ஏகோத்யோகத்திலே, மாள நசிக்கும்படி, என்னை-என்னை, ஆள்கின்ற-அடிமைகொண்டருளுகிற, எம்பெருமான்-பெருமையையுடையனாய், தென்திசைக்கு-தெற்குத்திக்குக்கு, அணி அலங்காரமாக, கொள்-கொள்ளப்படுவதான திருச்செங்குன்றூரில்-திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாற்றங்கரை-திருச்சிற்றாற்றங்கரையின் மீபால்-மேல்பக்கத்திலே, நின்ற-நின்றநிலையழகிலே, எம்பெருமான்-என்னையடிமையாக்கினவனு

டைய, அடி-திருவடிகளை, அல்லால்-ஒழிய, எனக்கு-என்னுடைய, நினைப்பிலும்-மநோரததசையிலும் பிறிது-வேறொரு, சரண்-புகல், இல்லை-இல்லை.

ஆறு;—(என்னமர்) பரமஸூரி ஸம்ஶ்லேஷைகபோகனுயிருந்துவைத்து, மத்ஸம்ஶ்லேஷைகபோகனும், மத்ஸ்வாமியாய், மஹார்ணவமக்நையான பூமியையெடுத்தருளினுப்போலே ஸ்வவிரஹஜநிதநிரவதிகவ்யஸந மஹார்ணவநிமக்நனான வென்னை யெடுத்தருளி, ஸ்வவிஷய கைங்கர்யைகபோகப்ரதனும், தக்ஷிணதிக்பாகபூஷணமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரை மீபால்நின்ற வெம்பெருமானுடைய திருவடிகளல்லது மற்று நினைப்பிலு மெனக்கொரு ப்ராப்யமில்லையென்கிறார். (ந)

ஈடு; அவ;—ஸ்ரீவராஹமாய் ப்ரளயங்கொண்ட பூமியையெடுத்தருளி, திருச்செங்குன்றூரிலே நின்றவனுடையதிருவடிகளல்லது வேறு மநோரதத்திலு மெனக்கு சரணமில்லையென்கிறார்.

(என்னமர்பெருமா னிமையவர்பெருமான்) * அயர்வறுமமரர்களதிபதியாய், எனக்கமர்ந்த ஸ்வாமியாயுள்ளான், நித்தியஸூரிகளை தனக்குப் பரிவரா யிருக்கிற விருப்பைக் காட்டி, நானஞ்சாதபடி பண்ணி யென்னுடைய ஶேஷத்வத்தை நிர்வஹித்தவன், (இருநிலமித்யாதி) ப்ரளயங்கொண்ட மஹாப்ருதிவியை யெடுத்த தன் ஸாமர்த்தயத்தைக் காட்டி யென்னையடிமைகொண்டவன், ப்ரளயங்கொண்ட பூமியோபாதி ஸர்வரும் தனக்குக் குழைசரக்காயிருக்கிறபடியைக் காட்டித் தம் பயத்தைக் கெடுத்தானென்கை.

(முன்னையித்யாதி) ப்ராக்தநமான ப்ரபலகர்மங்களை வாஸனையோடேபோக்கி யென்னையடிமைகொள்ளுகிற ஸ்வாமி, ஶௌர்யவீர்யாதிகளைக்காட்டி, கீழெனக்குப் பிறந்த பயமெல்லாம்போம்படி யென்னையடிமைகொண்டவனென்கை, வல்வினையென்கிறது—பக்திபாரவஶ்யத்தையாயிற்று, அதிறே "ஸர்வஶக்திக்கென்வருகிறதோ" என்னும் பயத்தைப்பிறப்பித்தது.

(தென்திசையித்யாதி) ஆர்யர்களிகழ்ந்த பூமியான தெற்குத்திக்குக் காபரணமானவூர், (மீபால்நின்றவெம்பெருமான்) மேலைத்திக்கில் நிலையு முத்கர்ஷஹேதுவாய், இவர்க்கு பயநிவ்ருத்திக்குடலாயிருக்கிறது, திகபேக்ஷையாயிறே பரத்வமிருப்பது, (அடியித்

யாதி) அவன் திருவடிகளொழிய மற்று ரக்ஷகமாயிருப்பதொரு வஸ்து மநோரதத்திலுமில்லை. (௩)

---

## நான்காம் பாட்டு.

பிறிதில்லையெனக்குப் பெரியமூவுலகும் நிறையப் பேருருவமாய் நிமிர்ந்த * குறியமாணெம்மான்குரைகடல்கடைந்த கோலமாணிக் கம் என்னம்மான்* செறிகுலைவாழைகமுகு தெங்கணிசூழ் திருச்செங் குன்றூர்த் திருச்சிற்றாறு அறிய * மெய்ம்மையேநின்ற எம்பெருமான் அடியிணையல்லதோரரணே.

ப:— அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமான த்ரைவிக்ரமஸமுத்ரமதநரூபமான வதி ஸயிதவ்யாபாரத்தை யுடையவன் திருவடிகளையொழிய வேறெனக்கொரு ரக்ஷ கருமில்லை யென்கிறார்,

(இ-ள்.) பெரிய-மஹாவகாஸமான மூவுலகும்-த்ரைலோக்யமும். நிறைய-நிறையும்படியாக பேர் பெரிய, உருவமாய்-வடிவையுடையனாய்க்கொண்டு, நிமிர்ந்த-வளர்ந்த, குறியமாண்-வாமநப்ரஹ்மசாரியான, எம்மான்-என் ஸ்வாமியாய், குரை-அதிகோஷத்தையுடைத்தான, கடல்-கடலை, கடைந்த-கடைந்த, கோலம் தர்ஸநீயமான, மாணிக்கம்-ரத்நம்போலேயிருக்கிறவடிவை, என்-எனக்கு ப்ரகா ஸிப்பித்த, அம்மான் நாதனாய் செறி-செறிந்த, குலை-குலையையுடைய, வாழை வாழை, கமுகு-கமுகு, தெங்கு-தெங்குகளின், அணி-நிரைகள், சூழ்-சூழ்ந்த திருச்செங்குன்றூர் திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு-திருச்சிற்றாறுகிற திருப்பதியில் வர்த்திக்கிறவர்கள், அறிய-தன்னையுள்ளபடியறியும்படியாக, மெய்ம் மையே - யதாவத்ப்ரகாஸம்பண்ணி, நின்ற-எழுந்தருளியிருக்கிற, எம்பெருமா ன்-ஸர்வேஸ்வரனுடைய, அடியிணை-திருவடிகளை, அல்லது-ஒழிய, பிறிது-வேறு, எனக்கு-எனக்கு, ஓர்-ஏகதேசமும், ஒரு அரண்-ரக்ஷகர், இல்லை-இல்லை. (௪)

ஆறு:—(பிறிதில்லை) நிரதிஸய ரமணீயமான ரூபஸிங்கரீக்ருத மதாத்மகனாய், ஸம்வர்த்தித ஸ்வகீய மஹத்ரூப பரிபூர்ணவிஸ்தீர்ண புவநத்ரயனாய், மதிதமஹாரவ பயோநிதியாய், ஸௌந்தர்யஸார நீ லரத்ந ஸத்ருஸ திவ்யரூபனாய், மத்ஸ்வாமியாய், பஹுள பலபுஞ்ச கதளீ பூக நாளிகேர ராஜிபரிவ்ருதமான திருச்செங்குன்றூரில் திரு ச்சிற்றாற்றங்கரையிலே, ஆஸ்ரிதர்க்குத் தன்னை யுள்ளபடியே யறிய

லாம்படி நின்றருளின வெம்பெருமானடியிணையல்லதோரரண் பிறி
தில்லையென்கிறார் (௪)

ஈடு; அவ;—மஹாபலியைவென்றும் கடலைக்கடைந்தும் ஆஶ்ரி
தராபத்தைப்போக்கித் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவன்
திருவடிகளல்லது வேறெனக்கரணில்லையென்கிறார்.

(பிறிதில்லையெனக்கு) அவனையொழிய வேறெனக்குரக்ஷகரி
ல்லை, (பெரியமூவுலகும் நிறையப் பேருருவமாய்நிமிர்ந்த) ப்ரஹ்ம
லோகபர்யந்தமான வாகாஶாவகாஶ மடைய விம்மவளர்ந்த, தொ
டங்கின கார்யம் வென்ற ப்ரீதிப்ரகர்ஷத்தாலே வளர்ந்தபடி, (குறிய
மாணெம்மான்) வளருகைக் குடலாகக்கொண்ட வாமநவேஷத்தை
யும், அர்த்தித்வத்தையுங் காட்டி யென்னை யடிமைகொண்டவன்.
மஹாபலியை வெல்லுகைக்குக் கொண்ட வடிவைக்காட்டி பயத்
தைக் கெடுத்தபடி, (குரைகடல்கடைந்த) மஹாகோஷமெழும்படி
கடலைக்கடைந்தவன். (கோலமாணிக்கம்) பெருவிலையனான ரத்நம்
போலே யிருக்கிற வழகிய வடிவைக்கொண்டாயிற்றுக் கடலைக்க
டைந்தது, (என்னம்மான்) கடல்கடைந்த ஸாமர்த்த்யத்தையு மழ
கையுங்காட்டி யென்னை யடிமைகொண்டவன்.

(செறிகுலைவாழையித்யாதி) செறிந்த குலையை யுடைத்தான
வாழை, அப்படிபட்ட கமுகு, தெங்கு, இவற்றின் திரளாலேசூழப்
பட்டவூர், ஊர்ச்சிறப்பென்று பரணொன்று மிரண்டில்லை, செறிந்த
குலைகளாலும் திரண்டு சூழ்ந்திருக்கையாலு முகவாதார்க்குப் புகு
ரவொண்ணாதிருக்கை, (திருச்சிற்றாறுறிய) திருச்சிற்றாற்றிலுள்ளார்
"ஸர்வேஶ்வரன்" என்றறியும்படியாக, * மஞ்சா: க்ரோஶந்திவத்
(மெய்ம்மையேநின்ற வெம்பெருமான்) (க) "ருதூநம் ரா நோடிஷ
உநோ)-ஆத்மாநம் மாநுஷம்மந்யே" என்றும், (உ) "ஜஹம்வொ
வாமுவொஜாதஃ-அஹம்வோபாந்தவோஜாத:" என்றும, மறைக்
கவேண்டாதபடி பத்துப்பத்தாக நின்ற வென்ஸ்வாமி. (அடியிணை
யல்லதோரரணே) அவன் திருவடிகளல்லதொரு ரக்ஷகமில்லை. அடி
யிணையல்லதோரரண—பிறிதில்லையெனக்கு. (௪)

---

(க) ரா-யு-௧௨௦-௧௧. (உ) வி-பு-ரு-௧௩-௧௩.

# ஐந்தாம்பாட்டு.

அல்லதோராரணும் அவனில்வேறில்லை அதுபொருளாகிலும் * அவனையல்லது என்னுவியமர்ந்தணைகில்லாது ஆதலால் அவனுறைகின்ற * நல்லநான்மறையோர்வேள்வியுள்மடுத்த நறும்புகை விசும்பொளிமறைக்கும் * நல்லநீள் மாடத்திருச் செங்குன்றூரில் திருச்சிற்றாறெனக்குநல்லரணே. (ரு)

ப:—அநந்தரம், அர்ச்சாஸ்த்தலாந்தரங்களு மவனை யொழிந்திராதிருக்கத் திருச்செங்குன்றூரில் நிலையொழிய வென்னெஞ்சு பொருந்துகிறதில்லையென்கிறார்.

அல்லது - திருச்செங்குன்றூரொழிந்த, அல்லாத, ஓர் ஆணும்-அர்ச்சாஸ்த்தலங்களான புகலிடமும், அவனில்-அவனையொழிந்து, வேறு-வேறாயிருப்பது. இல்லை-இல்லை, அது-அதுவே, பொருள்-அர்த்தஸ்திதி. ஆகிலும்-ஆனாலும், (க) "ஸாவொ நா நாஸ்ரு மஹதி-பாவோநாஸ்ய த்ரக்ஷ்யதி" என்கிறகணக்கிலே அவனை-திருச்செங்றூரில் நிற்கிறவனை, அல்லது-ஒழிய, என் என், ஆவி-ஆத்மவஸ்து, அமர்ந்து-பொருந்தி-அணைகில்லாது-கிடக்கிறதில்லை. ஆதலால்-ஆகையால், அவன்-அவன், உறைகின்ற, நித்யவாஸம்பண்ணும் தேசமாய், நல்ல-ப்ரேமபூயிஷ்டரான, நான்மறையோர்-சதுர்வேதிகள் வேள்வியுள்-யாகாதிகளிலே, மடுத்த-அக்நிமுகத்தில் ஸமர்ப்பித்த, நறும்-ஹவிர்க்கந்தியான, புகை-தூமமானது, விசும்பு-ஆகாசத்தில், ஒளி-ஆதித்யாதிதேஜஸ்ஸை, மறைக்கும்-மறைக்கும்படியாய், நல்ல-விலக்ஷணமாய், நீள்-ஓங்கின, மாடம்-மாடங்களையுடைத்தான, திருச்செங்குன்றூரில்-திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறு-திருச்சிற்றாறனது, எனக்கு-எனக்கு, நல்-நிர்ப்பயமான. அரண் புகலிடம்.

அன்றியே, கீழ்-அவன் திருவடிகளை யொழிய வுபாயமில்லையென்றாராய் அல்லாத கர்மாத்யுபாயங்களும் தத்ஸம்பந்திகளன்றோ வென்கிறஶங்கையிலே. அல்லாத ரக்ஷோபாயங்களும் ததாஶ்ரயணரூபங்களாகையாலே அவனையொழிந்திருப்பதொன்றில்லை, அது வேதாந்த ஸித்தமானவர்த்தம், ஆனாலும் தச்சேஷத்வைகாகாரமான வென்னாத்மாவானது அவ்யவஹிதோபாயமான வவனையொழிந்த ஸாத்யோபாயங்களில் அநுரூப ப்ரவ்ருத்திபண்ணிக் கிட்டமாட்டுகிறதில்லை; ஆதலால் அவன்வர்த்திக்கிற அர்ச்சாஸ்த்தலமே யெனக்குப் புகலிடமென்றாராகவுமாம். (ஙி)

(க) ரா-உத்தா-௫0-கரு.

ஆறு:—(அல்லதோரரணும்) மற்றுள்ள திருநகரிகளில் ஸாந்நியனுயிருக்கிறானும் திருச்செங்குன்றூரில் நின்றருளினவவனேயல்லனோ, ஆனபின்பு, அவனே யாமென்னும் நிர்ப்பந்தமென்னென்னில்.

அல்லாத திருநகரிகளி லாணுயிருக்கிறவனும் அவனில் வேறில்லை, பொருளாது, ஆகிலுமென்னெஞ்சு அவனையல்லது அமர்ந்தணையில்லாது, ஆதலால், அவனுக்காயதநமாய், பக்தி யுக்த சதுர்வேதவிதக்ரேஸரானவர்களுடைய யாகங்களிலே ஹுதமான ஹவிர்க்கந்தி ஹோம தூமத்தாலே திரஸ்க்ருத ககநதல நிகிலதேஜஸ்கமாய், தர்ஸநீயாத்யுந்நத ப்ராஸாதாலங்க்ருதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெனக்கு நல்லரணென்கிறார்.

ஈடு; அவ; —அல்லாத வுகந்தருளின தேசங்களுமுண்டாயிருக்கத் திருசெங்குன்றூரிலே நீர் அதிநிர்ப்பந்தம் பண்ணுகிறதென்னென்ன; அதங்ஙனேயிருக்கச்செய்தேயும் திருச்செங்குன்றூரி லல்லது எனக்கு ஹ்ருதயம் சேர்ந்தணையாதென்கிறார்

(அல்லதோரரணுமவனில்வேறில்லை) அல்லாதவிடங்களும் அவனுக்குப் புறம்பாயிருப்பதில்லை (அதுபொருள்) அர்த்த தத்வமது, (ஆகிலும்) இங்ஙனேயிருந்ததேயாகிலும், (அவனையல்லதென்னுவியமர்ந்தணைகில்லாது) திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனையல்லது என்மநஸ்ஸு சேர்ந்தணையாது, ஸ்ரீவைகுண்டநாதன் ஈஸ்வரனல்லாமையும் ப்ராப்தியில்லாமையுமோ, திருவடி (க)*ஸாவொநாநு) த்ரு மஹூ தீ-பாவோ நாங்யத்ரகச்சதி என்றது; அப்படியே யிவரும் அமர்ந்தணைகை-உள்வெதுப்பற்றுப்பொருந்துகை.

(ஆதலால்) இப்படியாகையால், (அவனுறைகின்ற) அவன்நித்யவாஸம்பண்ணுகிற-திருச்செங்குன்றூரென்றதவ்யம், (நல்லநான்மறையோர்) அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர், (வேள்வியுள்மடுத்தநறும்புகை) யாகங்ளிலே ப்ரவ்ருத்தமான ஹவிர்க்கந்தியான தூமம், அநந்யப்ரயோஜநராகில் இவர்களநுஷ்டாநத்துக்கு ப்ரயோஜநமென்னென்னில்; ஸ்வயம் ப்ரயோஜநமாதல், பகவத்ப்ரதிபக்ஷங்களை யழியச்செய்யுமபிசாரம் பலமாதல், எம்பெருமானைப் போலேயாயிற்று. அவ்வூரில் ப்ராஹ்மணரும், (விசும்பொளிமறைக்

---

(க) ரா-உத்தர-௪௦-கரு.

கும்) ஆகாசத்தி லொளியுள்ள வாதித்யாதிகளை மறைக்குமென்னு தல், விசும்புதன்னி லொளியை மறைக்கு மென்னுதல், (நல்லநீண் மாடம்) ஒருகார்யமும் வேண்டா, ஊரரண்தானே ப்ரதிகூலர்க்கு துஷ்ப்ராபமாயிருக்கும் (திருச்சேங்குன்றூரில்-திருச்சிற்ராறு) (க) "மாடமாமயிலைத் திருவல்லிக்கேணி" என்னுமாபோலே (எனக்குநல் லரணே) அஸ்த்தானே பயசங்கைபண்ணு மெனக்கு பயநிவ்ருத்தி யுண்டாம் தேசம் அதுவல்லதில்லை, திருச்சிற்றாறென்று-திருப்பதிக் கும்பேர், ஆற்றுக்கும்பேர். (ரு)

---

# ஆறும்பாட்டு.

எனக்கு நல்லரணை எனதாருயிரை இமையவர் தந்தைதாய் தன்னை * தனக்கும்தன்தன்மையறிவரியானைத் தடங்கடற்பள்ளி யம்மானை * மனக்கோள்சீர்மூவாயிரவர் வண்சிவனும் அயனும் தானும் ஒப்பார்வாழ் * கனக்கோள்திண்மாடத் திருச்சேங்குன்றூ ரில் திருச்சிற்றாறதனுள்கண்டேனே (சு)

ப:—அநந்தரம், ஸர்வப்ரகாரோபகாரகனாய், க்ஷீரார்ணவசாயியான ஸர் வேஶ்வரனை, பரிவரான வைதிகாக்ரேஸரர் வர்த்திக்கிற திருச்செங்குன்றூ ரிலே காணப்பெற்றேனென்கிறார்.

(இ-ள்.) எனக்கு-எனக்கு, நல்-நிர்ப்பயமான, அரணை-புகலிடமாய், அவ் வளவன்றியே, எனது-எனக்கு, ஆருயிரை-ஸத்தாதாரகனாய், நித்யஸூரிகள் ஸத்தைக்கும் வ்ருத்திக்கும் ஹேதுபூதனாகையாலே இமையவர்-அவர்களுக்கும், தந்தைதாய்தன்னை-தந்தைதாயாயிருப்பானாய், தனக்கும்-ஸர்வஜ்ஞனான தனக், கும், தன்-தன், தன்மை-பெருமை, அறிவரியானை-அறியவரியனாயிருக்குமவனாய், ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாக, தடம்-விஸ்தீர்ணமான, கடல்-கடலிலே பள்ளி-கண்வ ளர்ந்தருளுமவனான, அம்மானை-ஸர்வேஶ்வரனை, மனம்-நெஞ்சிலே கொள்-கொள்ளப்பட்ட, சீர்-பகவத்குணங்களையுடையரான, மூவாயிரவர்-மூவாயிரவர் வண்-ஜ்ஞாநாதிஸம்பத்தை யுடையரான, சிவனும்-ருத்ரனும், அயனும்-ப்ரஹ் மாவும், தானும்-ஸர்வேஶ்வரனான தானும், ஒப்பார்-ஒக்கும்படி யோரொருவரே ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளுக்குக்ஷமரானவர்கள், வாழ்-(உ) ஜக ஜ்ஞ ஜா வாழ

(க) தி-மா-உ-ரு-உ-

(உ) ப்ரஹ்மஸூ-ஒ-ச-ச-கஎ.

ஜகத்வ்யாபாரவர்ஜம்'' என்கிறபடியே அதில் தாத்பர்யமற்று பகவதநுபவ மாகிறவாழ்ச்சியை யுடையராய்க்கொண்டு வர்த்திக்கிறஸ்தலமாய், கனம்-செறிவை, கொள்-உடைத்தாய்க்கொண்டு, திண்-ஸ்த்திரமான, மாடம்-மாடங்களை யுடைத்தான, திருச்செங்குன்றூரில்-திருச்செங்குன்றூரில்; திருச்சிற்றாறதனுள்-திருச்சிற்றாறுகிற விலக்ஷணதேசத்துக்குள்ளே; கண்டேன்-காணப்பெற்றேன். (௬)

ஆறு:—(எனக்குநல்லரணை) எனக்கு நித்யரக்ஷகனாய், எனக்குப்ராணனாய், * அயர்வறுமமரர்களுக்குப் பிதாவாய் மாதாவாய் ஸ்வேநாபி துரவபோதஸ்வமஹிமஸ்வபாவனாய், க்ஷீரார்ணவ ஶாயியாயிருந்த எம்பெருமானை; ஸகலமநோஹர கல்யாணகுணவிஶிஷ்டராய், தனித்தனியே ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரவஜ் ஜகஜ்ஜந்மஸ்த்திதி ஸம்ஹார ஸமர்த்தராய் த்ரிஸஹஸ்ரஸங்க்யா ஸங்க்யாதரான ஜநங்களாலே அத்யாஸ்யமாநமாய், த்ருடதர ப்ராஸாத பரிகர்மிதமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள் கண்டேனென்கிறார்.

ஈடு ; அவ ;—நித்யஸூரிகளுக்கு ஸர்வவிதபந்துவுமாய், ப்ரஹ்மாதிகளுக் காஶ்ரயணீயனாய்க்கொண்டு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவிவனை ''தனக்கென்வருகிறதோ'' என்றஞ்சவேண்டாதபடி நிர்ப்பயமான திருச்செங்குன்றூரிலே காணப்பெற்றேனென்கிறார்.

(எனக்குநல்லரணை) (க) ''அதஸோஹபயம் கதோ பவதி-அத ஸோபயங்கதோபவதி'' என்கிறவிஷயத்துக்கு பயப்படுகிறவெனக்கு நிர்ப்பயனான வரணானவனை, (எனதாருயிரை) தன்னுடைய ரக்ஷகத்வத்தைக்காட்டி யெனக்கு தாரகனானவனை, (இமையவர்தந்தை தாய்தன்னை) அஸ்த்தாநேபயஶங்கைபண்ணும் நித்யஸூரிகளுக்கு ஸர்வவிதபந்துவுமானவனை, (உ) ''சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டு'' என்னக்கடவதிறே. (தனக்குந்தன்தன்மையறிவரியானை) ஸ்வதஸ் ஸர்வஜ்ஞனான தன்னாலும் தன்னைப்பரிச்சேதிக்கப்போகாது ; முதலிலே யத்துக்கவகாசமில்லை. ஒரு வஸ்துவைப் பரிச்சேதித்து நலிய வேணுமே (தடங்கடல்பள்ளியம்மானை) ஶ்வேதத்வீபவாஸிகளாஶ்ரயிக்கைக்கும், மதுகைடபாதிகளையழியச்செய்கைக்கும், ப்ரஹ்மாதிகள் பரிகைக்கும் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனை.

---

(க) தை-ஆந-எ-　　　　(உ) திருப்பல்-௧௨.

14

(மனக்கோள்சீர்மூவாயிரவர்) பகவத்குணங்களை மநஸ்ஸிலே கொண்டு, இக்குணங்களுக் கென்வருகிறதோ'' என்று அஸ்தாநேபயஶங்கைபண்ணி வர்த்திப்பார் மூவாயிரம் ப்ராஹ்மணருண்டு. அவ்வூரில் ப்ராஹ்மணரும் இவர்கோடியிலேயாயிற்று; (க) '' வவநெநியவ தாஜ-ஈநிழ-வவக்தேதியதே·முநிம்'' என்கிற ஸ்ரீ பரத்வாஜமஹாமுநியோடொக்குமவர்கள். தன்னைப்பிரிந்த வன்று முதல் ராவணவதம்பண்ணி மீளுமளவும் செல்ல, ''இவர்களுக்கென்வருகிறதோ'' என்றித்தையேநினைத்திருந்தவனிறே ஸ்ரீ பரத்வாஜபகவான். (வண்சிவனுமயனும்தானுமொப்பார்வாழ்) மூவர்செய்யுங்கார்யமு மோரொருத்தரே செய்யவல்லராயிருப்பர்கள், அதிகாரிபுருஷர்களில் இவர்களுக்குண்டானவேற்றம். (கனக்கோள்திண்மாடம்) செறிந்து திண்ணிதான மாடம், இவர்களும்மிகை, ஊராண்தானே சிலர்க்கு ப்ரவேசிக்கப்போகாது, (திருச்சிற்றுறதனுட்கண்டேனே) பயப்பட்டதேசத்திலே பயம் நிவ்ருத்தமானப்போலே, ஸம்ஸாரத்துக்குள்ளே நிர்ப்பயமாயிருப்பதொருதேசமுண்டாய், அதிலேகாணப்பெற்றேன். (௬)

## ஏழாம்பாட்டு.

திருச்செங்குன்றூரில்திருச்சிற்றுறதனுள் கண்ட அத்திருவடி என்றும் * திருச்செய்யகமலக்கண்ணும் செவ்வாயும் செவ்வடியும் செய்யகையும் * திருச்செய்யகமலவுந்தியும் செய்ய கமலமார்பும் செய்யவுடையும் * திருச்செய்யமுடியும்ஆரமும்படையும் திகழஎன் சிந்தையுள்ளானே. (எ)

ப:—அநந்தரம், அதிஶயிதமான வவயவாபரணயுத வேஷைகளோடே திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளியிருக்கிறவென் ஸ்வாமியானவன் என் னெஞ்சுக்குள்ளே நித்யஸந்நிஹிதனாகின்றா னென்கிறார்.

திருச்செங்குன்றூரில்-திருச்செங்குன்றூரில், திருச்சிற்றுறதனுள்-திருச்சிற்றாற்றில் வர்த்திக்கிற, கண்ட-நான் கண்ட, அத்திருவடி-ஸ்வாமியானவன், செய்ய-சிவந்த, கமலம்-கமலம்போலே யிருக்கிற, திருக்கண்ணும்-திருக்கண்களும், செம்-சிவந்த, வாயும்-திருப்பவளமும், செம்-

(க) ரா யு-௧௨எ-௧.

சிவந்த, அடியும்-திருவடிகளும். செய்ய-சிவந்த, கையும்-திருக்கைகளும் செய்ய-சிவந்த, கமலம்-கமலத்தையுடைத்தான, திருவுந்தியும்-திருநாபியும், செய்ய-சிவந்ததிருமேனியையுடைய, கமலை-லக்ஷ்மியையுடைத்தான, மார்பும்-திருமார்பும், செய்ய-சிவந்த, உடையும்-திருவுடையாடையும், செய்ய-சிவந்த, திருமுடியும்-திருமுடியும், ஆரமும்-திருவாரமும், படையும் திவ்யாயுதங்களும், திகழ விளங்கும்படியாக, என்றும்-என்றும், என்-என், சிந்தை-நெஞ்சுக்குள்ளே, உளான்-ஆனுன்;

ஆறு: (திருச்சேங்குன்றூரில்) திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறதனுள் கண்ட அந்த ரமணீய தாம்ரகமல ஸத்ருசமான திருக்கண்களும், வித்ருமஸத்ருசமான திருப்பவளமும், கமலஸத்ருசமான திருவடிகளும், கமலஸத்ருசமான திருக்கைகளும், கமலஸத்ருசமான திருநாபியும், நிஜபுஜாந்தர மந்திரேந்திரா திவ்யரூப மயூநாபிபூதமாகையாலே சிவந்த தாமரைபோலேயிருந்த திருமார்வும், திவ்யபீதாம்பரமும், நிரதிசய தேஜோமயமான திருவபிஷேகமும், திவ்யமௌக்திகஹாரமும், சங்கசக்ராதி திவ்யாயுதங்களும் திகழ வென்சிந்தையு ளிருந்தானென்கிறார் (எ)

ஈடு:--அவ; திருச்செங்குன்றூரிலே நின்றருளின சீர்கொள்சிற்றாயன், தன்னழகோடே மறக்கவொண்ணாதபடி யென்னெஞ்சிலே வந்துபுகுந்தானென்கிறார்.

(திருச்சேங்குன்றூரிலித்யாதி) நிர்ப்பயஸ்த்தாநமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றிலே காணலாம்படி நின்ற ஸ்வாமி. திருவடி-ஸ்வாமி. (திருச்செய்யகமலக்கண்ணும்) அழகியதாய் சிவந்திருப்பதாய், விகாஸம் செவ்வி முதலானவற்றாலே தாமரைபோலேயிருந்த திருக்கண்களும், (சேவ்வாயும்) நோக்கால் பிறந்த முதலுறவை க்ரயம் செலுத்திக்கொடுக்கும் ஸ்மிதமும், (சேவ்வடியும்) ஸ்மிதத்துக்குத் தோற்றுவிழும் திருவடிகளும், (செய்யகையும்) திருவடிகளில் விழுந்தாரை யெடுத்தணைக்கும் திருக்கையும்,

(திருச்சேய்யகமலவுந்தியும்) அணைத்தார்க்கு திக்யாநுபாவ்யமாய், அழகுக் கெல்லையாய், "ஸரோருத்திலஸந்நாபி-ஸர்வோத்பத்திஸ்த்தாநம்" என்று தோற்றும்படி யிருக்கிற திருநாபியும், (சேய்யகமலமார்வும்) பகைத்ஸம்பந்தமில்லாதார்க்கும் பற்றாசானபிராட்டிக் கிருப்பிடமாகையாலே சிவந்த திருமார்வும். கமலையென்றுமாம்.

(செய்யவுடையும்) திருமேனிக்குப்பரபாகமாய், பும்ஸ்த்வாவஹமான திருப்பீதாம்பரமும்.

(திருச்செய்யமுடியும்) அப்படி திருமேனிக்குப் பரபாகமாய் பயந்திரும்படி ரக்ஷகத்வஸூசகமாயிருந்துள்ள திருவபிஷேகமும், (ஆரமும்) (க) "பெரியவரைமார்பில் பேராரம்பூண்டு" என்கிறபடியே திருமார்வுக்குத்தகுதியான திருவாரமும், (படையும்) வினைத்தலையிலாயுதமாய், போகதசையிலாபரணமாயிருந்துள்ள திவ்யாயுதங்களும், (திகழ) (உ) "ஶோபயந்தண்டகாரண்யம்" என்கிறபடியே விளங்க, (என்றும்-என்சிந்தையுளானே) அவனென்றுமொக்க வென்சிந்தையிலே வர்த்திக்கையாலே பயத்துக்கொதுங்கவிடமில்லை. (எ)

---

## எட்டாம்பாட்டு.

திகழஎன்சிந்தையுளிருந்தானைச் செழுநிலத்தேவர்நான்மறையோர் * திசைகைகூப்பியேத்தும் திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை * புகர்கொள்வானவர்கள்புகலிடந்தன்னை அசுரர்வன்கையர்வெங்கூற்றை * புகழுமாறுஅறியேன்பொருந்துமூவுலகும் படைப்பொடுகெடுப்புக்காப்பவனே. (௮)

ப:—அநந்தரம், இப்படி யென்னெஞ்சிலே திகழவிருக்கிற ஜகஜ்ஜந்மாதி காரணபூதனுயிருக்கிறவனைப் புகழும்படி யறிகிறிலேனென்கிறார்.

(இ-ள) திகழ-உஜ்ஜ்வலமாம்படி, என்-என், சிந்தையுள்-நெஞ்சுக்குள்ளே, இருந்தானை-இருக்குமவனுய், செழு-விலக்ஷணராய், நிலத்தேவர்-பூமிதேவர்களாய், நான்மறையோர்-நாலுவேதங்களுக்கும் நிர்வாஹகரானவர்கள். திசை-திக்குக்கள்தோறும், கை-கை, கூப்பி-கூப்பி ஏத்தும்-ஏத்தும்படியான, திருச்செங்குன்றூரில்-திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை - திருச்சிற்றாற்றங்கரையிலே வர்த்திக்குமவனுய், பிறர்க்கு மாஶ்ரயணீயதயாவந்த, புகர்- ஔஜ்ஜ்வல்யத்தை கொள்-உடைய, வானவர்கள்-தேவர்களுக்கு, புகலிடந்தன்னை -ஆஶ்ரணீயனும் ஸ்வபாவத்தையுடையனுய், அவர்களுக்கு விரோதிகளாய்,

(க) ௩-திருவ ருடு (உ) ரா-ஆர-௩௮-கடு.

வன்கையர்-ப்ரபலரான, அசுரர் அஸுரர்க்கு; வெம்-க்ரூரமான, கூற்றை ம்ருத்யுவாய், பொருந்து-தன்னோடேப்ருதக்ஸித்தமான,மூவுலகும்-ஜகத்த்ரயத்தினுடைய, படைப்பொடு- ஸ்ருஷ்டியோடே, கெடுப்புக் காப்பவனே-ப்ரளயரக்ஷணங்களை யுடையனானவனை, புகழுமாறு-ஓராகாரத்தாலே வகையறிந்து புகழும்படி, அறியேன்-அறிகிறிலேன்.

காப்பவன் : காப்பினையுடையவன். (அ)

ஆறு:—(திகழவேன்சிந்தையுள்) ஸ்வகுணாநுரக்த ஸகலபுவந ஸஞ்ஜநநபரிபாலந ஸம்ஹ்ருதிலீலனைப், பக்தியுக்த சதுர்முக பசுபதி பதமகஹுதவஹ ப்ரப்ருதி ஸகலஸுரஜந ஶரண்யனைப், தத்விரோத்யஸுரஜந ம்ருத்யுபூதனைப், சதுர்வேதவித்ப்ரவரராய் பரமபுருஷ சரணயுகளாநுராகயுக்தராய் க்ருதாஞ்ஜலிகளான பௌமஸுரராலே ஸம்ஸ்துயமாந திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலே நின்றருளி, என்னெஞ்சிலே தீப்யமாநனாயிருந்தருளினவனை,எத்தைச் சொல்லிப்புகழ்வது, புகழுமாறறியேனென்கிறார் (அ)

ஈடு:—அவ ; இப்படி பூர்ணமாக வநுபவித்த சீர்கொள் சிற்றாயனுடைய விலக்ஷணமான குணங்களிலு மழகிலு மழுந்தி அவனைப் புகழும்படி யறிகிறிலேனென்கிறார்.

(திகழவேன்சிந்தையுளிருந்தானை) இதுவு மிவர்க்கொருபய நிவ்ருத்திக்குஹேது ; தம்நெஞ்சிலேயிருக்கையாலே ஓரரணுக்குள்ளே யிருக்கிறுப்போலே யிருக்கிறதாயிற்று. உகவாதார் நெஞ்சிலே யிருந்த பயமும் போயிற்று. (க) "இனிப்போய்ப் பிறரொருவர் வன்னெஞ்சம்புக்கிருக்கவொட்டேன் வளைத்துவைத்தேன்" என்னுமவர்களிறே (செழுநிலத்தேவரித்யாதி) நாலுவகைப்பட்ட வேதங்களும் கைவந்து விலக்ஷணராய் பூஸுரரான வைஷ்ணவர்கள், திக்குக்கள்தோறும் நின்று கைகூப்பி யேத்தாநின்றுள்ள திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையிலே வர்த்திக்கிறவனை. உகவாதார்க்குக் கிட்டவொண்ணாதபடி துர்க்கமான வூரிலே நிற்கிறபடி.

(புகர்கொளித்யாதி) தங்களையொழிந்தார்க்கெல்லாம் ஆஶ்ரயணீயராகையால் வந்த புகரையுடையரான ப்ரஹ்மாதிகளுக்கும் ஆபத்துவந்தால் புகலிடமாயுள்ளவனை (அசுரர்வன்கையர்வெங்

(க) தி-மொ-எ-உ-எ.

கூற்றை) முன்னைமிடிக்கரான வஸ்ரவர்க்கத்துக்கு, அந்தகன் தண்ணீரென்னும்படி வெவ்விய கூற்றமாயுள்ளவனை ( புகழுமாறறியேன்) அவனுக்கொரு குறைபில்லை, என் குறைதீரப் புகழுவதொரு ப்ரகாரமறிகிறிலேன். புகழாதொழியவும் மாட்டுகிறிலேன். ஆனால், செய்யவடுப்பதென்னென்னில் (பொருந்தித்யாதி) தனக்கு விதேயமான ஸர்வஜகத்தினுடையவும் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுமவனென்று திரளச்சொல்லுமத்தனை, பிரித்துவகையிட்டுச்சொல்லப்புக்கால் சொல்லி முடிக்கப்போகாது ; ப்ரயோஜநத்திலே சொல்லுமித்தனை. (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

படைப்போடுகெடுப்புக்காப்பவன் பிரமபரம்பரன்சிவப்பிரானவனே * இடைப்புக்கோருருவும்ஒழிவில்லை அவனே புகழ்வில்லை யாவையுந்தானே * கோடைப்பெரும்புகழா † ரினையர்தன்னனார் கூறியவிச்சையோடொழுக்கும் * நடைப்பலியியற்கைத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறமர்ந்தநாதனே (கூ)

ப:—அநந்தரம், ஸ்ருஷ்ட்யாதி கர்த்த்ருகர்மவிபாகமில்லாதபடி ஸர்வாத்மபூதனானவன் திருச்செங்குன்றூரிலே நிற்கிற ஸர்வஸ்வாமியென்கிறார்.

(இ-ள்) கொடை—வித்யாதாநாதிகளான வௌதார்யத்தாலே, பெரும் பெரிய, புகழார்-புகழையுடையராய், எனையர்-அநேகராய், தன்னனார், தான் என்னலாம்படி ஜ்ஞாநஶக்த்யாதி பூர்ணரானவர்களுடைய, கூறிய—ஸூக்ஷ்மாவகாஹியான, விச்சையோடு—வித்யையோடு கூடின. ஒழுக்கம்—அநுஷ்டாநத்தையும், நடை—நித்யயாத்ரையான, பலி-பகவதாராதநத்தையும், இயற்கை-ஸ்வபாவமாகவுடைத்தான, திருச்செங்குன்றூரில். திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாறு—திருச்சிற்றாற்றிலே, அமர்ந்த—நின்ற, நாதன்—ஸ்வாமியானவன், படைப்பொடு கெடுப்புக்காப்பவன்—ஜகஜ்ஜந்மஸ்த்தேமலயங்களுக்கு நிர்வாஹகனாயிக்கும்(க) "ஸ ஏவ ஸ்ருஜ்ய: ஸ ச ஸர்ககர்த்தா" -ப்ரஹ்மாத்யவஸ்த்தாபிரஶேஷமூர்த்தி:" என்கிறபடியே மநுஷ்யாத்யபேக்ஷயாபரரான விந்த்ராதி

(க) வி-பு க-உ-எஉ. † "எனையர்" என்றும் பாடம்.

களுக்குமவ்வருகாகையாலேபரம்பரனைக்கொண்டு, பிரமன்—ஸ்ரஷ்டா வானப்ரஹ்மாவும், சிவப்பிரான்—ததாத்மகனைக்கொண்டு ஸம்ஹாரிக்கையாலே ப்ராப்த்திகுணயுக்தனைக் கொண்டு ஈஶ்வரனான ருத்ரனும், அவனே—தானேயாம்படிப்ரகாரியாய்நிற்பானாய், இடை—இவர்களிருவர்கக்கு மிடையிலே, புக்கு-ரக்ஷகனைப்புகுந்து,ஓர்—ஒரு, உருவம்-பதார்த்தத்தையும், ஒழிவில்லையவனே—ஒழியவிடா திருக்குமவனாய், இப்படி ஸ்ருஷ்டிஸம்ஹாரபாலந கர்த்தாவானவனவன்றியே,யாவையும்—ஸ்ருஜ்யஸம்ஹார்யபால்யமான ஸமஸ்தபதார்த்தங்களும், தானே-தானேயாம்படி தத்ப்ரகாரவிஶிஷ்டனாயிருக்கும் இதில்—புகழ்வு-அர்த்தவாதரூபமானஸ்துதி. இல்லை-இல்லை. (க)

ஆறு:—(படைப்பொடு) பரமோதாரராய், வ்யபதேஶ்யராய், ஸ்வஸத்ருஶராய், நிரதிஶய ஸகலவேத தத்த்வார்த்தஜ்ஞராய் ஜ்ஞாநாநுகுணசரித்ரராய், நித்யமநுஷ்டேயமான பஞ்சமஹாயஜ்ஞாதி ஸகலகர்மகலாபராயிருந்த திவ்பஜநங்களாலே அத்யாஸ்யமாநமான திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறமர்ந்த நாதன் ; ப்ரஹ்மருத்ரரூபேணை, ஸ்வேநரூபேண, நிகிலஜகத்ஸ்ருஷ்டி ஸ்த்திதி ஸம்ஹாரஹேதுபூதனாய், ஸமஸ்தவஸ்துஜாதாந்தராத்மபூதனாய், ஸர்வஶப்த வாச்யனாயிருக்கும் ; இவ்வர்த்தத்தில் ஸ்துதியில்லை, புகழுமாறறியேனென்கிறார். (கூ)

ஈடு:—அவ ; ப்ரஹ்மாதி ஸகல ஜந்துக்களுடைய ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுவான் திருச்செங்குன்றூரிலே நின்றருளினவனென்னுமிடம் அர்த்தவாதமன்று, மெய்யென்கிறார்.

(படைப்பொடித்யாதி) ஸ்ருஷ்டி, ஸம்ஹாரம், பாலநம் இவையெல்லாம் தன்னதீநமாகவுடையவன் (பிரமபரம்பரன்) மநுஷ்யாதிகளில் இந்த்ராதிகளுக்குண்டான வேற்றம்போலே, அந்த விந்த்ராதிகளி லேற்றமுடையனான ப்ரஹ்மாவாகிற பராத்பரன் (சிவப்பிரான்) அப்படியே தேவர்களில் தலைவலித்தானாயிருக்கிற ருத்ரன்; அவர்களுமிவனிட்ட வழக்கு, (இடைப்புக்கித்யாதி) நடுவே புக்கொரு பதார்த்தமும் ஸ்வதந்த்ரமாயிருப்பதில்லை ; அடைய ப்ரகாரமாய்த் தான் ப்ரகாரியாயிருக்கும் (யாவையுந்தானே) இங்ஙன் பிரித்துச் சொல்லுகிறதென், சேதநாசேதந விபாகமற அவனதீநம் (புகழ்வில்லை) இதிலர்த்தவாதமில்லை ; ப்ரஹ்மாதிகளுக்கு மிவ்வேற்றங்கள் சொல்

லக்கடவது; அது உபசாரம், இவ்விஷயத்தி லர்த்தவாதஸங்கையு மில்லை

இப்படி எல்லாம் ஸ்வாதீநமாம்படி யிருக்கிறவனுரென்ன (திருச்சிற்றுறமர்ந்தநாதன்) என்கிறார். (கொடைப்பெரும்புகழார்) அவ்வூரிலுள்ளார், கொடையால்வந்த பெரும்புகழையுடையார். எதிரிகளையும் தாநத்தாலே வஸீகரிக்க வல்லராயிருக்கை. தாநமும் ஸாமாதிகளிலேயொன்றிறே, பெரும்புகழாவது-ஜ்ஞாநதாநம்(க) விது̇ஷா நம்விஶிஷ்யதே-வித்யாதாநம்விஶிஷ்யதே'' (இனையர்) ''இன்னார், இன்னார்''என்றுப்ரஸித்தராயிருக்குமவர்கள்(உ)''விதி̇தெள ஸவிவ்யா தா: -விதே̇ஶேஷ்வபிவிக்யாதா:'' என்று ஶத்ருதேசத்திலும்ப்ரஸித்தரா யிருக்கையாலே, ஶத்ருக்களங்கேசென்றால் மீளப்போகாதென்று இங்குவர நினையாதிருக்கை. (எனையர்) என்றுபாடமானபோது, இப்படி யிருப்பா ரநேகரென்கிறது. (தன்னொர்) தன்னோடொத்தவர்கள்; அவன்றன்னைப்போலே யதிகரித்த காரியத்தில் வெற்றிக்கொண்டல்லது மீளாதவர்கள்.

(கூறிய விச்சையோ டொழுக்கம்) ஸம்யக்ஜ்ஞாநமும், ஜ்ஞாநாநுரூபான ஸமாசாரங்களும்; எதிரிகளையறிந்து பரிஹரிக்கவல்ல ஜ்ஞாநங்களும், எதிரிகளுக்கு நலிய வவகாசமான ஆசாரவைகல்யமின்றிக்கே யிருக்கையும். இந்த்ரன் திதிகர்ப்பத்தை யழிக்கைக்கு ஆசாரவைகல்யமிறே அவகாஶமாயிற்று(ந)''ஶத்ருக்ஞ... தா-ஶத்ருதண்டஸ்ஸ்வ்ருத்தா''(நடைப்பலி) நித்யமானபகவத்ஸமாராதநம். நடையாகை-நிரந்தரமாகை (பலி) பூஜை (இயற்கை) இதுவேயாத்ரையா யிருக்குமவர்கள் (திருச்செங்குன்றூரிலித்யாதி) (திருச்செங்குன்றூரில் திருச்சிற்றுற்றில் நித்யவாஸம்பண்ணுகிற ஸர்வேஶ்வரன் - படைப்பொடு கெடுப்புக்காப்பவன்.) (கூ)

---

# பத்தாம் பாட்டு.

அமர்ந்தநாதனை அவரவராகி அவர்க்கருளருளும்அம்மானை *அமர்ந்ததண்பழனத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை அமர்ந்தசீர்மூவாயிரவர்வேதியர்கள் தம்பதிஅவனிதேவர்வாழ்வு * அமர்ந்தமாயோனைமுக்கணம்மானை நான்முகனையமர்ந்தேனே (கo)

---

(க) பாரத- (உ) ரா-பா-எ-ககூ (ந)

ப:—அநந்தரம், நிருபாதிகசேஷியாகையாலே அவாந்தரசேஷிக ளான ப்ரஹ்மருத்ராதிகளுடைய ஸத்தையும் தானிட்டவழக்காய், தத் ப்ரயோஜநம் ஸ்வயம்ப்ரயோஜநமாம்படி அவர்களுக்கு விபூதிப்ரதனாய்க் கொண்டு திருச்செங்குன்றூரிலே நிற்கிறவாஸ்சர்யபூதனைப் பொருந்தப் பெற்றேனென்கிறார்.

(இ ள்) அமர்ந்த—ஸகலசேதந நிர்வாஹகனென்றால் தகுதியாம்படி யான, நாதனை—நிருபாதிகசேஷித்வத்தை யுடையனாய், ஔபாதிக சேஷிகளான - முக்கணம்மானை - மூன்றுகண்ணை யுடையருத்ரனும், நான்முகனை—சதுர்முகனும் தானும்படி தத்ததந்தராத்மாவாய்க்கொண்டு ஸத்தாஹேதுபூதனாய், அவரவர் - ஸ்வவிபூதிகளையர்த்தித்துப்பெறுகிற வர்கள், அவற்றைப்பெற்றுகக்குமாபோலே, ஆகி—(க) "ஸஹைதத்ருஷு திநந்த்ருஷு-ஸமேத்யப்ரதிநந்த்யச" என்று அவர்களோடே ஏகீபவித் துக்கொண்டு, அவர்க்கு-அவர்களுக்கு, அருள்—அபீஷ்டபதப்ரதாநாத் யுபகரணங்களை, அருளுமம்மானை- பண்ணுமவனாய், அமர்ந்த செறிந்து தண்-ஸ்ரமஹாரமான, பழனம் - நீர்நிலத்தையுடைய, திருச்செங்குன் றூரில் - திருச்செங்குன்றூரில், திருச்சிற்றாற்றங்கரையானை - திருச் சிற்றாற்றங்கரையை வாஸபூமியாகவுடையனாய், அமர்ந்த-பொருந்தின சீர் - ஆத்மகுணங்களை யுடையரான, மூவாயிரவர் - மூவாயிரவரா யுள்ள, வேதியர்கள் - வைதிகர்க்கு, தம்பதி - அஸாதாரணதேசமாய் அவனிதேவர்-பூஸுரரான பாகவதருடைய, வாழ்வு—பகவதநுபவைஸ் வர்ய பூமியாயுள்ளத்தை, அமர்ந்த-அவர்கள் ஸம்ருத்தியே தனக்கு ஸம் ருத்தியாம்படி யுகந்து பொருந்திவர்த்திக்கிற, மாயோனை - ஆஸ்சர்ய பூதனானவனை, அமர்ந்தேன். அநந்ய ப்ரயோஜநனாய்க்கொண்டு பொரு ந்தப்பெற்றேன்.

வேதியர்கள் தம்பதியாய், அல்லாத பூஸுரர்க்கு வாழ்வான திருச் செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானாய் அவர்களை யநுபவிப்பிக் கத் தகுதியான வாஸ்சர்யசேஷ்டிதங்களை யுடையவனை யென்றுமாம்.

ஆறு:—( அமர்ந்தநாதனை ) ஆஸ்ரித ஸ்பர்ஸலேஸைக ஸ்வபா வனாய், மமநாதனாய், ஆஸ்ரிதஸமீஹித நிர்வர்த்தகனாய், த்ரிணேத்ர சதுர்முக விபூதிகனாய், கமலதடாக பரிவ்ருதமான திருச்செங்குன்

(க) ரா—அயோ—கக—உ௭.

றாரில் திருச்சிற்றூற்றங்கரையை போக்யபூமியாக வுடையனாய், வேதவித்க்ரேஸர பரமபுருஷசரணாரவிந்த யுகளாநுராக மஹிமாவதாதஹ்ருதயாரவிந்த த்ரிஸஹஸ்ர திவ்யபூஸுரஜநங்கள்வாழ்வமர்ந்த மாயோனை யமர்ந்தேனென்கிறார். (௧௦)

ஈடு:—அவ; ஸர்வேஶ்வரனாய்வைத்து ஸகல ஜந்துக்களுக்கும் ஆஶ்ரயணீயனாகைக்காகத் திருச்செங்குன்றூரிலே நின்றருளின வனை யனுபவிக்கப்பெற்றேனென்கிறார்.

(அமர்ந்தநாதனை)†நிருபாதிகசேஷியென்றால் போரும்படியிருக்கிறவனை. (௧) "ஐச்வர்யேண அபிஷேக்தஸ்ய யஸ்ய ராஜ்யாய வத்ஸ்யதி-த்ரைலோக்யமபிநாதேநயேநஸ்யாந்நாதவத்தரம்" என்கிற படியே த்ரைலோக்யத்தையும் பெருமாளுக்குக்கையடைப்பாக்கினாலும் பின்னையும்ரக்ஷ்யம்சுருங்கிரக்ஷகத்வத்துடிப்பேவிஞ்சியிருக்கும் [யேந நாயேந நாயவத்ஸ்ராக்ஷ-யேந நாதேந நாதவத்தரம் ஸ்யாத்] (அவரவராகி) அர்த்திகள் கிட்டினால் அவர்கள் தந்தாமுக்கு நல்லராமாபோலே, அவர்களுக்கும் நல்லனாயிருக்குமவன். அவர்கள் "இதுநமக்குவேணும்" என்றிருக்குமாபோலே, "இவர்களுக்கிது வேணும்" என்றிருக்கை; அங்ஙனன்றிக்கே, அவர்களுக்குப்பெறுகையிலே யர்த்தித்வம்; கொடுக்கக்கொள்ளுகையிலே அர்த்தித்வம் இவனுக்கு; பெற்றோமென்னும் ஹர்ஷம் அவர்களுக்கு, கொடுக்கப் பெற்றோமென்னும் ஹர்ஷம் இவனுக்கு.

(அவர்க்கருளருளும்) அவர்களபேக்ஷிதங்களைத் தன்பேறாகக் கொடுக்கை; கொள்ளுகிறவனுடைய விரப்பைத் தானுடையனாய்க் கொடுக்கை (௨) "ஸஸுக்ரீவோ ஹனூமாநங்கதஶ்ச ஸஸைந்ய-ஸஸர்வாநர்த்திநோத்ருஷ்ட்வா ஸமேத்யப்ரதிநந்த்யச" என்கிறபடியே (அம்மானை) ஸர்வேஶ்வரனை; பூர்ணனையென்னுதல்; ப்ராப்தனையென்னுதல். (அமர்ந்ததண்பழனமித்யாதி) சேர்ந்துகுளிர்ந்த நீர் நிலங்களையுடைய திருச்செங்குன்றூரில் திருச்சிற்றூற்றங்கரையிலே நின்றருளினவனை (அமர்ந்தசீர்) சேர்ந்தகுணங்களையுடைய மூவாயிரம் ப்ராஹ்மணர்; ஶேஷித்வத்துக்கு அவன் தக்கிருக்குமாபோலே சொன்ன சொன்ன வேற்றமெல்லாம் தகும்படியிருப்பர்கள்.

---

(௧) ரா-அயோ-௩-௧௩. (௨) ரா-அயோ-௧௬-௨௭.

† "உபய விபூதிக்கும்" அதிகபாடம்.

(வேதியர்கள்தப்பதி) மூவாயிரவாளவன்றிக்கே, ப்ராஹ்மணஜாதிக்காக வாஸஸ்த்தாநம் (அவனிதேவர்வாழ்வு) பூஸுரரான வைஷ்ணவர்களுக்கு ப்ராப்யபூமி.

(அமர்ந்தமாயோனே) அத்தேசத்திலே நித்யவாஸம் பண்ணுகிற வாஸ்சர்யபூதனை ஸர்வேஸ்வரனை (முக்கண்ணம்மானைநான் முகனையமர்ந்தேனே) ப்ரஹ்மாதிகளுடைய ஸத்தாதிகளுக்கு நிர்வாஹகனானவனை; ப்ரஹ்மருத்ரர்களைப் பலகால் சொல்லுகிறது-இவனுடைய நிர்வாஹகத்வம் தோற்றுகைக்காகவும் நிர்வாஹ்யங்களிலே யொன்றால் நலிவுண்டாகை கூடாதென்கைக்கும்; அன்றிக்கே "அமர்ந்தமாயோன்" என்றுவைத்து இவர்களைச் சொல்லித்தலைக் கட்டுகையாலே ஸமாநாதிக்ருதஸப்தங்கள் விஸேஷ்யத்தில் பர்யவஸிக்கக் கடவதாகையாலே, ப்ரகாரியானவனை, (அமர்ந்தேனே) கிட்டப்பெற்றேனென்கிறார்.(க) "ஸ-ஷ்டா நிஷ்ணஹர்-பூதா நிஷ்ணு:" இத்யாதிவத். கO

---

## பதினோராம் பாட்டு.

தேனே நன்பாலைக் கன்னலையமுதைத் திருந்துலகுண்ட அம்மானை * வான நான்முகனை மலர்ந்ததண் கொப்பூழ் மலர்மிசைப் படைத்த| மாயோனை * கோனைவண்குருகூர் வண்சடகோபன் சொன்ன ஆயிரத்துள் இப்பத்தும் * வானின்மீதேற்றி அருள்செய்து முடிக்கும் பிறவிமாமாயக்கூத்தினையே (கக)

ப:—அநந்தரம் இத்திருவாய்மொழி கற்றார்க்கும் பலமாக ஜந்மநிவ்ருத்தி விஸிஷ்டமான பரமபத ப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

தேனே - ஸர்வரஸஸமவாயரூபமான தேனாய். நன் - ஸ்வாபாவிகரஸமான. பாலை-பாலாய். கன்னலை-பர்வந்தோறும் ரஸிக்கும் கரும்புமாய். அமுதை-முடிந்தவுயிரைப் பிழைப்பிக்கு மம்ருதமாய். இப்படி ஸர்வவித போக்யபூதனாய், திருந்துலகு-விலக்ஷணமஹாலோகம் உண்ட-ப்ரளயத்திலேயழியாதபடி யமுதுசெய்துநோக்கின, அம்மானை ஸ்வாமியாய். வானம்-ஊர்த்வலோக வாஸியான, நான்முகனை-சதுர்முகனை, மலர்ந்த-விகஸிதமாய். தண்-செவ்வியையுடைத்தான.

---

(க) வி-பு-உ-கஉ-ருசு.

கொப்பூழ்மலர்மிசை-திருநாபீகமலத்திலே. படைத்த – ஸ்ருஷ்டித்த. மாயோனை–ஆஶ்சர்யபூதனாய். கோனை–அத்தாலே நிருபாதிகஸ்வாமியானவனை. வண்–நிரதிஶயஸம்பத்தையுடைய. குருகூர்–திருநகரிக்கு நிர்வாஹகராய். வண் – பரமோதாரரான. சடகோபன்–ஆழ்வார். சொன்ன–அருளிச்செய்த. ஆயிரத்துள்–ஆயிரத்துள், இப்பத்தும் இப்பத்தும். வானின்மீது–பரமபதத்திலே. ஏற்றி–ஏறவிட்டு. அருள்–கைங்கர்யஸாம்ராஜ்யமாகிற பகவதங்கீகாரத்தை. செய்து–பண்ணி. பிறவி – ஸம்ஸாரஸம்பந்தரூப பர்யந்தமாயுள்ள, மாமாயக்கூத்தினை–ஆஶ்சர்யநாடகத்தை. முடிக்கும்–முடித்துவிடும்.

இது - எழுசீராசிரியவிருத்தம்

ஆறு:—(தேனை) மதுமதுரபயஃகண்டாம்ருதவத் போக்யபூதனாய், நிகீர்ண ஸகலலோகனாய், ஸ்வநாபீகமலோத்பூத சதுர்முகனாய், ஆஶ்சர்யபூதனாய் ஸர்வஸ்வாமியாயிருந்த திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை, வண்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள் இப்பத்தும், அருள்செய்து வானின்மீதேற்றி, பின்னை ஸம்ஸாரஸம்பந்தத்தைப்போக்குமென்கிறார். (கக)

ஈடு:—நிகமத்தில்-இத்திருவாய்மொழியை யப்யஸிப்பார்க்கு, இதுதானே முதலிலே பரமபதத்தேறக்கொடுபோய், பின்னை ஸம்ஸாரமாகிற மஹாநாடகத்தை யறுக்குமென்கிறார்.

(தேனையித்யாதி) இவருடைய பயஶங்காஹேதுக்கள் சொல்லுகிறது. அவனுடைய ரஸ்யதையிறே இவரை யஞ்சப்பண்ணுகிறது. எனக்கு ஸர்வவிதபோக்யனானவனை(க) "ஸர்வ-கந்த ஸர்வ-ரஸஃ" என்னக்கடவதிறே.(திருந்துலகுண்டவித்யாதி) மேல் பயநிவ்ருத்தி ஹேதுக்களைச் சொல்லுகிறது. கட்டளைப்பட்ட ஜகத்தை ப்ரளயத்திலே யழியாதபடி திருவயிற்றிலேவைத்துப் பரிஹரித்த பெரியோனை. (வானமித்யாதி) [கொப்பூழ் - மலர்ந்ததண் - மலர்மிசை-வானநான்முகனை - படைத்தமாயோனை] வானிலே யிருக்கிற சதுர்முகனை, ஸ்ருஷ்ட்யநுகுணமான செவ்வியையுடைய திருநாபீ

(க) சாந்தோ-ங-கச.

கமலத்திலே ஸ்ருஷ்டித்த வாஸ்சர்யபூதனை. (கோனை) நிருபாதிக பேஷியை, கீழ் ப்ரஹ்மாதிகளுக்குச் சொன்ன வைக்யம் ஸ்வரூபேணவன்று; கார்யகாரணபாவத்தாலே சொல்லிற்றென்னுமிடம் இங்கே ஸ்பஷ்டம். ஆபத்ஸகனுப், அழிந்தவற்றை யுண்டாக்கவல்லனுய், ப்ராப்தனுபிருக்குமவனென்கை. (வண்குருகூரித்யாதி) அராஜகமானல் ராஜபுத்ரன்தலையிலே முடியைவைத்து விலங்கு வெட்டிவிடுமாபோலே இப்பத்துத்தானே முந்துறபரமபதத்தைக் கொடுத்துப் பின்னை ஸம்ஸாரமாகிற மஹாநாடகத்தையு மறுக்கும் (கக)

எட்டாம்பத்து-நான்காம் திருவாய்மொழி முற்றிற்று.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# எட்டாம்பத்து.

## ஐந்தாந்திருவாய்மொழி.

### மாயக்கூத்தா - ப்ரவேஶங்கள்.

ஆறு;—(மாயக்கூத்தா) இப்படி அந்த தாமரைத்தடாகமிருந்த திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெறச் செல்லவேணுமென்று மநோரதித்துப்போக வுத்யோகித்தவர், எம்பெருமானைக் காணப்பெறாத விடாயின் மிகுதியாலே போக க்ஷமரன்றியே, "நான்வர க்ஷமனாகிறிலேன், நீ வாராய்" என்று அத்தாமரைத் தடாகத்தைக் கூப்பிட்டழைக்கிறார். *

ப:—அஞ்சாந் திருவாய்மொழியில், கீழ் - திருச்செங்குன்றூரிலே யெழுந்தருளி நிற்கிறநிலையிலே "திருச்செய்ய கமலக்கண்ணும்" என்று தொடங்கி, திவ்யாவயவஶோபை தொடக்கமானவற்றை ப்ரத்யக்ஷஸமாநாகாரமாம்படி அந்தரங்கமாக வநுபவித்து ஹ்ருஷ்டரானவர், அவ்வடிவழகோடே பாஹ்ய ஸம்ஶ்லேஷம் பண்ணவேணுமென்று அபிஸந்திபண்ணிக் கிட்டாமையாலே ஆர்த்தராய்; அவனுடைய வநுபாவ்யமான வாபிரூப்யாதிஶயத்தையும், ஆர்த்திஹரமான மயிர்முடியையும் ஔதார்ய வைலக்ஷண்யத்தையும், ஆஶ்ரிதோபகாரார்த்தமான அர்ணவஶாயித்வத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், ஆகர்ஷகஸ்வபாவயோகத்தையும், அசேஷஜந ஸம்ஶ்லேஷத்தையும், ஆஶ்ரிதபக்ஷபாதத்தையும், ஏகாஶ்ரிதனையே அநேகவித கிஞ்சித்காரங் கொள்ளும்படியையும், ஆஶ்ரிதஸுலபனாய்வைத்து அறியவரியனான நிலையையுமநுஸந்தித்து, ஏவம்விதஸ்வபாவனானவனை யதா மநோரதமநுபவிக்கப் பெறாமையாலே அத்யந்தமார்த்தராய் க்லேஶித்த ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார். இப்படி ப்ராவண்யத்தை ஈஶ்வரன் தன்பக்கலிலே களிப்பித்தது அநுபவப்ரதிபந்தகத்தைக் கழிக்கையிலுண்டான கணிசமென்று கருத்து
*

ஈடு:—கீழிரண்டு திருவாய்மொழியாலுமாக பகவத்தத்த்வம் பிறராலே யழியப்புகுகிறதென்று வெறுத்தார்; இதில்-தம்முடைய வார்த்தநாதத்தாலே அவனை யழிக்கப்பார்க்கிறார்.

கீழிற்றிருவாய்மொழியிலே அவனுக்குப் பரிவருண்டென்று பயமுந்தீர்ந்து வடிவழகையநுபவித்தாராய் நின்றார்; அவ்வழகு, நெஞ்சிலே, ''திகழுமென்சிந்தையுளிருந்தான்'' என்கிறபடியே யூற்றிருந்து, பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து, அது பெருமையாலே, ''கீழ்ப்பட்ட க்லேஶங்களுமெல்லா மொன்றுமல்ல, இதிலே யொருகலாமாத்ரம்'' என்னும்படி நொந்து, காட்டுத் தீ கதுவினாரைப்போலே தப்தராய், தம்மிற்காட்டிலு மாகுலமான கரணங்களையுடையராய், ''என்விடாயெல்லாந்தீரும்படி திவ்யாவயவங்களோடே வரவேணும், அழகிய திருவபிஷேகத்தோடே வரவேணும், மேகம்போலே வரவேணும், அழகிய வடிவோடே வரவேணும், உதய ஸமயத்திலாதித்யனைப்போலே பெரிய புகரோடே வரவேணும்'' என்றுப்போலே கூப்பிட்டு, பின்னையும் அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலே, நாமிந்த க்லேஶத்தோடே முடிந்துபோமித்தனையாகாதே யென்று இழவோடே தலைக்கட்டுகிறது. *

---

# முதற்பாட்டு.

மாயக்கூத்தா ! வாமனா ! வினையேன்கண்ணா!கண்கைகால்* தூயசெய்யமலர்களாச் சோதிச்செவ்வாய்முகிழதா * சாயல் சாமத் திருமேனி தண்பாசடையா * தாமரைநீள் வாசத்தடம்போல் வருவானே ! ஒருநாள் காணவாராயே. (க)

ப:—முதற்பாட்டில், நிரதிஶயாநுபாவ்யமான வடிவழகையுடைய வாமநாதி ப்ராதுர்ப்பாவத்தையநுஸந்தித்து, ஶ்ரமஹரமான பத்மதடாகம்போலே நான்காணும்படி வரவேணுமென்றபேக்ஷிக்கிறார்.

மாயம்-ஆஶ்சர்யரூபமான ஶீலவ்யாபாரங்களையும், கூத்தா-மனோஹாரிசேஷ்டிதத்தையுமுடையையாய். வாமனா-மஹாமேருவை மஞ்சாடியாகச் சுருக்கினாப்போலே போக்யமான வாமநவேஷத்தையுடையையாய். வினையேன்-யதாமநோரதமநுபவிக்கப்பெறாத பாபத்தையுடையவெனக்கு. கண்ணா-ஆஸந்நனாய்ப்பிறந்துவைத்து அவ்வருகுபட்ட க்ருஷ்ணனானவனாய், கண்-அநுபவிக்க வாசைப்பட்டாரையங்கீகரிக்கும் திருக்கண்ணும். கை-அபயப்ரதமான திருக்கையும். கால். ஆஶ்ரயணீயமான திருவடிகளும். தூய-அழுக்கற்று. செய்ய-சிவந்து, மலர்களா-அலர்ந்த பூக்களாகவும். சோதி-மந்தஸ்மிதோஜ்ஜ்வலமான-

செம்-சிவந்த. வாய்-திருவதரம், முகிழதா-முகுளமாகவும். சாயல்-ஒளியையுடைத்தாய். சாமம்-ஶ்யாமளமான. திருமேனி-திருமேனி தண்-குளிர்ந்த. பாசடையா-பச்சிலைச்செறிவாகவும். (க)"உத்புல்லபங்கஜதடாகமிவ-உத்புல்லபங்கஜதடாகமிவ" என்கிறபடியே, தாமரை-அலர்ந்த தாமரைப்பூக்களையுடைத்தாய். நீள்- பெரியதாய், வாசம்-பரிமளோத்தரமான. தடம்போல் தடாகம் நடக்குமாபோலே. வருவானே-வருமவனே, ஒருநாள்-ஒருநாள். காண-காணும்படியாக. வாராய்-வந்தருளவேணும். (க)

ஆறு:—வாமநனும், ஸ்ரீவஸுதேவர் திருமகனும்வந்து திருவவதாரம் பண்ணி, ஆஶ்சர்யமாய் தர்ஶநீயமான திவ்ய சேஷ்டிதங்களைப் பண்ணுகிறது அடியேனுக்காகவன்றோ; பின்னையும் நான் பாக்யஹீநனுகையாலே காணப்பெறுகிறிலேன்; அடியேனுடைய கண்களின் விடாய்தீரும்படி யொருநாள்காண, உன்னுடைய திருக்கண் கை கால்கள் தூயசெய்யமலர்களாகவும், சோதிச்செவ்வாய்முகிழதாகவும், உஜ்ஜ்வலமா யாஶ்சர்யமாயிருந்த திருமேனியைக்குளிர்ந்த இலையாகவுமுடையையாய், புண்யகந்தவாஸி தாநந்திகந்தராளனுமாயிருந்தநீ, ஒருதாமரைத்தடாகம் நடந்துவருமாபோலே வாராயென்று கூப்பிடுகிறார். (க)

ஈடு:—என்விடாயெல்லாந் தீரும்படி, ஒரு தாமரைத்தடாகம் போலே வந்து தோற்றி யருளவேணுமென்கிறார்.

(மாயக்கூத்தா) ஆஶ்சர்யங்களையும் மநோஹாரிசேஷ்டிதங்களையுமுடையவனே. இந்த்ரனுடைய விரப்புத் தலைக்கட்டுகைக்காக அன்றே பிறந்து அன்றேவளர்ந்து அன்றேயிரப்பிலே யதிகரிக்கையும், மஹாபலி யஜ்ஞவாடத்தளவும் தர்ஶநீயமாம்படி நடந்துசென்று "மாவலி" என்றாப்போலே முக்தஜல்பிதங்கள் முதலான மநோஹாரி சேஷ்டிதங்களையுமுடையவனே, நடந்துசென்றநடை, வல்லாராடினாப்போலே யிருக்கிறதாயிற்று இவர்க்கு. (வாமநா) இரந்து மிரந்தவர்க் கீகையே ப்ரயோஜநமா யிருக்கிறவன்கிடீர், தன்னைக்காண்கையே ப்ரயோஜநமா யிருக்கிற வென்னை இரப்பாளனுக்கி யிரங்காதிருக்கிறான். (வினையேன்கண்ணா) ஸ்ரீவாமநனுய்

(க) ரஸ்த-சுந.

வந்தவதரித்தது இந்த்ரனுக்கானாப்போலே; க்ருஷ்ணனாய் வந்தவதரித்தது தயக்காகவென்றிருக்கிறார். அவதாராந்தரங்களிற்காட்டில் க்ருஷ்ணாவதாரத்திலண்ணிமையாலே சொல்லுகிறார். ஸர்வஸாதாரணனுடைய அவதாரமாகையாலே, உகந்தவர்களுக் கெல்லாம் "எனக்கு" என்னலாயிருக்கையாலே சொல்லுகிறா ரென்றுமாம்; வினையேனென்கிறது - பல்லிலே பட்டுத்தெறித்தாப்போலே, அவதாரத்துக்குப் பிற்பட்டபடியாலே சொல்லுகிறார்.

(கண்கைகால்தூய செய்யமலர்களா) கிட்டினாரோடு முதலுறவுபண்ணும் கண்; நோக்குக்குத்தோற்றவர்களை யணைக்கும் கை, ஸ்பர்ஶத்துக்குத் தோற்றுவிழுந் திருவடிகள்; அங்கேகிடந்து தலையெடுத்தநுபவிக்குமதாய்க் கண்டபோதே விடாய்தீரும்படி ஶ்யாமமான திருமேனிக்குப் பரபாகமான நிறத்தையுடைத்தான தாமரைப் பூவாக (சோதிச்செவ்வாய்முகிழதா) புகரையுடைத்தாய்ச் சிவந்திருக்கிற திருவதரமானது, அதில்முகுளமாக. (க) "அவாகீ அநாதர:- அவாக்யநாதர:" என்கிற தத்வமாகையாலே, காம்பீர்யாதிஶயத்தாலே, ஸ்மிதம் விகாஸோந்முகமான வளவாயிறேயிருப்பது; ஆகையாலே - முகுளமென்கிறது. (சாயற்சாமத்திருமேனிதண்பாசடையா) ஒளியையுடைத்தாய் ஶ்யாமமான திருமேனி, குளிர்ந்த பச்சிலையாக; (உ) "[illegible]- புருஷ: புண்டரீகாப:" (ந) "அக்கமலத்திலைபோலும்" என்கிறபடியே.

(தாமரை நீள்வாசத் தடம்போல் வருவானே) பரப்புமாறத் தாமரை மலர்ந்திருப்பதாய், ஏகார்ணவத்தை யொருதடாகமாக்கினாப்போலே பரந்திருப்பதாய், அப்பரப்படங்க பரிமளத்தாலே நிரம்பி யிருப்பதொரு தடாகம் நடந்து வருமாபோலேயாயிற்று பரிமளம் முன்பே அலையெறியவரும்போதிருப்பது, (ச) "ஸர்வகந்த:- ஸர்வகந்த:" என்னக்கடவதிறே. (வருவானே) வரும்ஸ்வபாவனே. முன்பு தன்பக்கல் வரும்படியை யுபகாரஸ்ம்ருதியாலே சொல்லுகிறார். (ஒருநாள்) "ஒருகால் நாக்குநனைக்க" என்பாரைப்போலே; (காண) வந்தால் கொள்ளும் ப்ரயோஜநம், காணுமிதுவே. ஒருதேச விசேஷத்திலும் * ஸதா தர்ஶநத்திலேயிறே அந்வயம். அப்பேறு

(க) சாந்தோ-௩-௧௪. (உ) வராஹ புராணம்.
(ந) ௯-௭-௩. (ச) சாந்தோ ௩-௧௪.

பெறும்படி. (வாராயே) அத்தலையாலே வரக் காணவிருக்கு மவ ரிறே; (௧) "தமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்" என்கிறபடியே தாம் கிட்டிக் காணுமது ஸ்வரூப விரோதமென்றிருக்கிறார். (௧)

---

## இரண்டாம் பாட்டு.

காணவாராயென்றென்று கண்ணும்வாயுந்துவர்ந்து * அடியேன் நாணிநன்னாட்டு அலமந்தால் இரங்கி ஒருநாள் நீ அந்தோ! * காணவாராய் கருநாயிறுதிக்கும் கருமாமாணிக்க * நாள்நல்மலை போல் சுடர்ச்சோதி முடிசேர்சென்னியம்மானே! (௨)

ப:—அநந்தரம், தர்சநீயமான மயிர்முடியையுடைய நீ, என் க்லேசந் தீரக்கண்டநுபவிக்கும்படி வந்தருளவேணுமென்கிறார்.

(இ-ள்.) கரு-கறுத்த. நாயிறு-ஆதித்யன். உதிக்கும்-உதித்துக்கிளம்பியிருப்பதாய். மா-மஹத்தான. கருமாணிக்கம்-நீலரத்நமாய், நாள்-செவ்வியழியாதபடி. நல்-தர்சநீயமான. மலைபோல் - பர்வதம்போலே. சுடர் - பரம்புகிறசுடரையுடைத்தான. சோதி - தேஜஸ்ஸையுடைய. முடி - மயிர்முடியோடே. சேர்-சேர்ந்த. சென்னி-உத்தமாங்கத்தையுடைய. அம்மானே-ஸ்வாமியானவனே. காண உன்வடிவழகைக்காணும்படிவாராய்-வரவேணும். என்றென்று-என்று பலகாலும் பார்த்துக்கூப்பிட்டு. கண்ணும்-பார்க்கிறகண்ணும், வாயும்-கூப்பிடுகிறவாயும். துவர்ந்து-பசையறவுலர்ந்து. நாணி-நம்மபேக்ஷையெங்ஙனே பலப்ராப்தையாயிற்றென்று லஜ்ஜித்து. நல் - ஸ்வாமிமதம்பெற்றுகந்திருக்கிற. நாடு-நாட்டிலே. அடியேன்-சேஷத்வம் நிரூபகமான நான். அலமந்தால்-இப்படி யலமந்தால், ஒருநாள்-ஒருநாள். இரங்கி-க்ருபைபண்ணி நீ-க்ஷணமும் பிரியவொண்ணாதவழகையுடைய நீ. காண-காட்சியாகிற ப்ரயோஜநத்தைப் பெறும்படி. வாராய்-வருகிறிலை. அந்தோ! - ஐயோ!.

ஆசைப்பட்டுக் கூப்பிட்டாலும் முகங்காட்ட வரலாகாதோ. (௨)

ஆறு:—(காணவாராய்) காணவாராயென்றென்று கூப்பிட்டுக் கண்ணும் வாயும் துவர்ந்து, நாணிப்பாடு படச்செய்தேயும் நீ வாரா

---

(௧) கடவல்லி-௨-௨௩.

தொழிந்தவாறே உன்னை நிர்க்ருணனென்று லோகத்தார் சொல்லு கிறரென்று அடியேன் லஜ்ஜித்து,உன்னைக்காணப்பெற்று ஸம்ருத்தமான விந்நாட்டிலே நாநொருவனு முன்னைக் காணப்பெறுதேகிடந் தலமந்தால். என்பக்கலிலே க்ருபைபண்ணி, ஜாஜ்வல்யமான நீலாளக பந்த பந்துரோத்தமாங்கனுய், நீலஜ்யோதிர்மய திவ்ய ரூபனுய் உத்யந் நீலகபஸ்தி மாலிவிலஸிதமாய், புஷ்பஹாஸ ஸுகுமாரமாயிருப்பதொரு கருமாணிக்கமலை நடந்துவருமாபோலே காணவாராயென்கிறர். *

ஈடு; அவ:—என்விடாய் கெடும்படி அழகிய மயிர்முடியுடன் வந்துதோற்றி யருளவேணுமென்கிறர்.

(காணவாராயென்றென்று) ஒருகால் "காணவாராய்" என்றல் வரக்காணுவிட்டால், ஆறியிருக்கவல்லரன்றே ; பின்னையும் "காணவாராய், காணவாராய்" என்பராயிற்று. (கண்ணும் வாயுந் துவர்ந்து) எங்ஙனே வருமென்றறியாமையாலே, திக்குகள்தோறும் பார்த்துக் கண் பசையறவுலர்ந்தது. (க) "கண்ணநீர்கைகளாலிறைக்கும்" என்னும் தசையும் கழிந்தது. கூப்பிட்டு வாயும்பசையறவுலர்ந்தது. (அடியேன்நாணி) அத்தலையிலவத்யம் நம்மதாம்படியான ஸம்பந்தமுடைய நான்லஜ்ஜித்து. இவனை நாட்டாரென்சொல்லுகிறர்களென்று லஜ்ஜித்தென்னுதல் ; ப்ரயோஜநார்த்தியாய்க் கூப்பிடுகையன்றியே, முறையறிந்து காண்கைக்குக் கூப்பிட்ட நமக்குத் தன்படி யழகிதாயிருந்ததென்று லஜ்ஜித்தென்னுதல்.

(நன்னுடு) (உ)* அநந்தக்லேஶபாஜநமாகையாலே விபரீதலக்ஷணையாதல்; விஷயாநுபவத்தாலே களித்துவர்த்திக்கும் தேசமென்னுதல். பிள்ளான், "எம்பெருமானைப்பெற் றநுபவிக்கும் நாடு காண்" என்னுமாம் ; "இல்லையாகில் கூப்பிடார்களோ" என்று. (அலமந்தால்) தடுமாறினல் (இரங்கி) உனக்கபேக்ஷயில்லாவிட்டால் பரார்த்தத்துக்கிரங்கவேண்டாவோ?; ருஷிகளுக்குள்ள வாந்ருஶம்ஸ்யமுமில்லையோ. (ஒருநாள்) பலநாள் வேணுமென்கிறேனே (நீ) கண்டுகொண்டு நிற்கவேண்டும்படி வைலக்ஷண்யத்தையுடைய நீ. (அந்தோ !) உன் வைலக்ஷண்யமறியாதொழிந்தால், என்னார்த்தியுமறியாதொழிவதே ! (காணவாராய்) ப்ரயோஜநார்த்தி யாயழைக்கிறேனே.

---

(க) எ-உ-க. (உ) ஜிதந்தை.

(கருநாயிறுதிக்கும்) கறுத்திருக்கிற வாதித்யனுதிக்கிற. (கருமாமாணிக்கநாணன்மலைபோல்) அவ்வாதித்யனுதிக்கிற வுதயகிரியிருக்கிறபடி. நீலமாய்ப் பெருவிலையனை ரத்நபர்வதம்போலே. (நாணன்மலை) "நாட்பூ" என்னுமாபோலே, அபிநவமாய் தர்ஸநீயமானமலை. "கருமாமாணிக்கம் - நன்மலைமேல் - கருநாயிறுதிக்கும் பொழுது - போல் - முடிசேர்சென்னியம்மான்" என்றுகூட்டுவது. நாள் - பொழுது. (சுடர்ச்சோதிமுடி) மிக்க புகரையுடையமயிர்முடி; "கருநாயிறுதிக்கும்" என்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே,முடியென்று மயிர்முடியாகிறது. (சேர்சென்னி) அதுக்காஸ்ரயமான திருமேனி ரத்நபர்வதம்போலே யாயிற்றிருப்பது. (அம்மானே) ஸர்வேஸ்வரனே. ஸம்ஸாரிமுக்தனுச் சென்றால், தாபஹரமாக அவனுக்குச் செய்வது திருக்குழலைப்பேணுமத்தனை. (உ) "கேஸவஃ க்லேஸநாஸநஃ-கேஸவஃக்லேஸநாஸநஃ" என்றிறேயிருப்பது. (உ)

---

# மூன்றாம்பாட்டு.

முடிசேர்சென்னியம்மா! நின்மொய் பூந்தாமத்தண்துழாய் * கடிசேர்கண்ணிப்பெருமானே ! என்றென்றேங்கி அழுதக்கால் * படிசேர்மகரக்குழைகளும் பவளவாயும்நால்தோளும் * துடிசேரிடையுமமைந்தது ஓர் தூநீர்முகில்போல்தோன்றாயே. (ந)

ப:—அநந்தரம், ஆபரணவயவஸோபையையுடைய காளமேகம் போலே உன்னுடைய ஔதார்யம் ப்ரகாசிக்கும்படி வந்துதோற்ற வேணுமென்கிறார்.

(இ-ள்; முடி-உபயவிபூதிநாதத்வத்தால்வந்த வாதிராஜ்யத்துக்கு ஸூசகமான திருவபிஷேகத்தோடு. சேர்-பொருந்தின. சென்னி-திருமுடியையுடைய. அம்மா-ஸ்வாமியானவனே. நின்-உனக்கஸாதாரணமாய். மொய்-செறிந்த. பூ-தர்ஸநீயமாய். தண்-குளிர்ந்த. துழாய்-திருத்துழாயாகிற. கடிசேர்-பரிமளோத்தரமான. கண்ணி மாலையையுடைய. பெருமானே-ஸர்வாதிகனானவனே. என்றென்று-என்றென்று. ஏங்கி பொருமி. அழுதக்கால்-அழுதால். படி-வடிவுக்கு. சேர்-சேர்ந்த. மகரக்குழைகளும் - திருமகரக்குழைகளும். பவளம்-பவளம்போன்ற. வாயும் திருவதரமும். நால்-நாலு. தோளும் - திருத்தோளும். துடிசேர்-துடி போலேயிருக்கிற, இடையும் - இடையுமுடைத்தாம்படி. அமைந்

தது-சமைந்த. தூ - நிர்மலமான. நீர் - நீர்மையாலே பூர்ணமாய். ஓர் அபூதபூர்வமாயிருப்பதொரு. முகில்போல் - மேகம்போலே, உன்னுடைய உபகாரகத்வம் ப்ரகாசிக்கும்படி. தோன்றாய்-தோன்றவேணும்.

ஆறு:—( முடிசேர் ) நிரதிசயபரிமள துளஸீலளிததரமான வளகபாரத்தை யுடையவனே யென்றென்றேங்கி யழுதக்கால், கர்ணபாச ஸம்ஸ்லிஷ்ட மகரகுண்டல வித்ரும ஸத்ருசாதர சதுர்ப்பாஹு தநுதரமத்ய சோபிதமாய் விமலஸலில பரிபூர்ணமாயிருப்பதொரு பயோதம்போலே வந்து தோன்றுகிறிலை யென்கிறார்.

ஈடு அவ:—தெளிந்தநீரைப்பருகின காளமேகம்போலே ஸ்ரமஹரமான வடிவோடே யென்னார்த்திதீரவந்து தோற்றவேணுமென்கிறார்.

(முடிசேர்சென்னியம்மா) ஆதிராஜ்ய ஸூசகமான திருவபிஷேகம் சேர்ந்த சென்னியையுடைய ஸர்வேஸ்வரனே. (நின்மோய் பூந்தாமத்தண்டுழாய்) தகுதியாய்ச்செறியத் தொடுக்கப்பட்டு மநோஹரமாய் ஒளியை யுடைத்தாய் ஸ்ரமஹரமாய், நாட்செல்ல நாட்செல்லப் பரிமளம் மிக்குச்செல்லுகிற திருத்துழாய்மாலையையுடைய ஸர்வேஸ்வரனே. ( என்றென்று ) ஒருகால்சொல்லி யாறியிருக்கிறேனைத் தானறியிருக்கிறாயோ. (ஏங்கியழுதக்கால்) பொருமியழுதக்கால். என்னழுகைக்குரலில் தளர்த்தியைக்கேட்டால் சடக்கெனவந்து கொடுநிற்கவேண்டாவோ.

( படிசேர்மகரக்குழைகளும் ) படியாய்ச்சேர்ந்தவென்னுதல் படியிலேசேர்ந்தவென்னுதல்; ஸ்வபாவமாய்க்கொண்டு சேர்ந்தவென்னுதல், திருமேனியிலே சேர்ந்தவென்னுதல். (க) "படிகண்டறிதியே" என்னக்கடவதிறே. (பவளவாயும்) பந்தமெல்லாந்தோற்றும் திருப்பவளமும். ( நாற்றோளும் ) அணைக்கைக்குக் கல்பகதரு பணைத்தாப்போலே நாலுதோளும். ( துடியித்யாதி ) துடிபோலேயிருந்த விடையுமாய்க்கொண்டு சமைந்ததொரு முகில்போலேயாயிற்று வடிவிருப்பது. இவ்விசேஷணங்கள் கேவலம் முகிலுக்கில்லாமையாலே அபூதோபமை. (தூநீர்முகில்) தெளிந்தநீரை முகந்த முகில். அகவாயில் தண்ணளியெல்லாம் வடிவிலேகாணலாம்படி வந்து தோற்றவேணும். (ரு)

---

(க) க-திருவ-அ௫.

## நான்காம்பாட்டு.

தூநீர்முகில்போல்தோன்றும் நின்சுடர்கொள்வடிவும் கனி
வாயும் *தேநீர்க்கமலக்கண்களும் வந்துஎன்சிந்தைநிறைந்தவா!*
மாநீர்வெள்ளிமலைதன்மேல் வண்கார்நீலமுகில்போல * தூநீர்க்
கடலுள்துயில்வானே! எந்தாய்! சொல்லமாட்டேனே. (ச)

ப:—அநந்தரம், ஆஸ்ரிதார்த்தமாக க்ஷீரார்ணவத்திலே கண்வளர்ந்தருளுகிற வுன் வடிவழகு என்னெஞ்சிலேநிறைந்தபடி சொல்லமாட்டுகிறிலே னென்கிறார்.

(இ-ள்.) மா பெரிய. நீர்-நீருக்குள்ளேகிடக்கிறதொரு, வெள்ளிமலை தன்மேல்-வெள்ளிமலையின்மேல். வண்-உதாரமான. கார்-கார்காலத்தில் நீலமுகில்போல -காளமேகம்போலே. தூ-வெளுத்த. நீர்-நீரையுடைய கடலுள்-க்ஷீரார்ணவத்திலே. ஓங்கின திருவரவணையின்மேலே, துயில்வான் கண்வளர்ந்தருளுகிற, எந்தாய் - என்ஸ்வாமியானவனே. தூ தெளிந்த, நீர்-நீராலேபூர்ணமான. முகில்போல்-மேகம்போலே, தோன்றும்-ப்ரகாசியாநிற்கிற. நின் உன்னுடைய. சுடர்-ஒளியை, கொள் உடைத்தான. வடிவும் - வடிவும், கனி - பக்வபலம்போலேயிருக்கிற-வாயும்-திருவதரமும். தேன்நீர் மதுஜலத்தையுடைய. கமலம் கமலம் போலே ஸ்ரமஹரமான. கண்களும்- திருக்கண்களும், வந்து - இங்கே வந்து, என்-என். சிந்தை-நெஞ்சு. நிறைந்தவா-நிறைந்தபடி. சொல்ல மாட்டேன்-பாசுரமிட்டுச்சொல்லமாட்டுகிறிலேன்.

தேனீர்கமலம் - தேனை ஸ்வபாவமாகவுடைய கமலமென்றுமாம். வெள்ளிமலையென்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே திருவரவணை அத்யாஹார்யம்; அன்றியே, ஸ்லாக்யமான நீர்மையையுடைய வெள்ளிமலையென்று ஓங்கின க்ஷீரார்ணவத்துக்கு த்ருஷ்டாந்தமாகவுமாம். (ச)

ஆறு:— (தூநீர்) விமலஸலில பரிபூர்ணமாயிருப்பதொருபயோதம் போலேயிருந்த வுன்னுடைய வுஜ்ஜ்வலமான திருவடிவும். கனிவாயும், மகரந்தநிர்ப்பரமாய் * கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாய் * ஸம்ருஷ்டநாளமாய் * ரவிகரவிகஸிதமான புண்டரீகதளம்போலேயிருந்த திருக்கண்களும், நயநகோசரமன்றியே வந்து என் சிந்தை நிறைந்து வ்யஸநகரமாகிறபடி சொல்லநிலமல்லவென்கிறார் (ச)

ஈடு:—அவ; உன்னுடைய வடிவழகுவந்து என்மநஸ்ஸிலே நிறைந்து நலிகிறபடி யென்றால் பேசிமுடிகிறதில்லை யென்கிறார்.

(தூநீர்முகில்போல்தோன்றும்) கண்டபோதே விடாய்கெடும்படியான வர்ஷுகவலாஹகப்போலே யாயிற்றுத்தோன்றுவது. (நின்சுடர் கொள்வடிவும்) ஶுத்தஸத்வமயமாகையாலே நிரவதிகதேஜோரூபமான விக்ரஹத்துக்கு, அன்னலும் துன்னலுமாய்த்திரண்ட மேகத்தையொப்பாகச் சொல்லவொண்ணாதிறே. (க) * ஒண்சுடர்க்கற்றையிறே. (கனிவாயும்) கண்டபோதே நுகரலாம் கனிபோலேயிருக்கிறவாயும். (தேனீர்கமலக்கண்களும்) தேனுகிற நீரையுடைத்தான தாமரைப்பூப்போலே யிருந்தகண்களும். இத்தால்-செவ்வியைநினைக்கிறது. தேனினுடைய நீர்மையையுடைய கண்களென்றுமாம். அதாவது-கண்ணாலேபருகலாயிருக்கை. (வந்தேன்சிந்தைநிறைந்தவா)[வந்தென்சிந்தைநிறைந்தவா-சொல்லமாட்டேன்]என்றந்வயம். இதரவிஷயங்களநுபவித்துவிட்டால்விஸ்மரிக்கலாயிருக்கும், இவ்விஷயமநுபவித்துப் பேரநின்றாலும் நெஞ்சிலே யூற்றிருக்கும்.

(மாநீர் வெள்ளிமலைதன்மேல்) மிக்கநீர்வெள்ளத்தே யொரு வெள்ளிமலையின்மேலே. (வண்கார்நீல்முகில்போல) உதாரமாய்க் கறுத்து நெய்த்திருப்பதொருமுகில் படிந்தாப்போலே யென்னுதல், உதாரமாய்க் கார்காலத்தில் முகில்படிந்தாப்போலே யென்னுதல். (தூநீர்க்கடலுள் துயில்வானே) ஶுத்தஜலத்திலே திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுகிறவனே. வெள்ளிமலையென்கிற த்ருஷ்டாந்தபலத்தாலே தார்ஷ்டாந்திகத்திலும் அழைத்துக்கொள்ளுமித்தனை. (எந்தாய்) கீழ்ச்சொன்ன வைலக்ஷண்யமில்லையாகிலும் விடவொண்ணாத ப்ராப்தியிருக்கிறபடி. (எந்தாய்-வந்தேன்சிந்தைநிறைந்தவா-சொல்லமாட்டேன்) மநஸ்ஸில் ப்ரகாஶம் க்லேஶஹேதுவாகாநின்றது, இதுக்கொரு பாசுரமறிகிறிலேன். விரஹதசையில்குணாநுஸந்தாநம் க்லேஶத்துக்குடலாமத்தனையிறே; தூநீர்க்கடலுள் துயில்வானென்று- "காணவேணும்" என்னுமபேக்ஷையில்லாதார்க்கு முற்பாடனாய்வந்து சாய்ந்தபடிசொல்லுகிறது (௪)

## ஐந்தாம்பாட்டு.

சொல்லமாட்டேன்அடியேன் உன்துளங்குசோதித் திருப்பாதம்* எல்லையில்சீரிளஞாயிறு இரண்டுபோலேன்னுள்ளவா! * அல்லலென்னும் இருள்சேர்தற்கு உபாயமென்னே ? * ஆழிசூழ் மல்லைஞாலமுழுதுண்ட மாநீர்க்கொண்டல்வண்ணனே !

---

(க) க-எ-௪

ப:—அநந்தரம், ஆபத்ஸகனை வுன்திருவடிகள், பாலாதித்யர்கள் போலேயென் னெஞ்சிலே ப்ரகாசியாநின்றதுகள்; கிட்டி யநுபவிக்கப் பெறுமல் க்லேஶியாதபடி மறக்க விரகேதோவென்கிறார்.

(இ-ள்.) ஆழி-ஸமுத்ரத்தாலே. சூழ்-சூழப்பட்ட-மல்லல், பெரிய. ஞாலம்-ஜகத்தை, முழுது-எல்லாம். உண்ட-ப்ரளயங்கொள்ளாமல் வயிற்றிலேவைத்து. மா நிரம்பின நீர்-நீரையுடைத்தான. கொண்டல்-காளமேகம்போலே யிருக்கிற. வண்ணனே-வடிவையுடையனானவனே. அடியேன்-உன்னுபத்ஸகத்வத்துக்குத் தோற்றடிமைப்பட்ட நான். என்னகவாயில் ப்ரகாஶத்துக்கு சொல்லமாட்டேன்- பாசுரமிட்டுச் சொல்லமாட்டுகிறிலேன்; உன்- உன்னுடைய. துளங்கு- விளங்குகிற. சோதி தேஜஸ்ஸையுடைத்தான. திருப்பாதம்-திருவடிகளானவை. எல்லையில் அளவிறந்த. சீர்-அழகையுடைய. இளநாயிறு-பாலாதித்யர்கள். இரண்டுபோல்- இருவரைப்போலே, என் என். உள்ளவா- உள்ளேயாகாநின்றன. இப்படி ப்ரகாசியாநிற்கக் கண்டு கிட்டி யநுபவிக்கப் பெறுமல் க்லேசியாதபடி, அல்லல்- துக்கரூபம். என்னும்- என்னலாம்படியான. இருள்- மறப்பாகிறவிருளை. சேர்தற்கு- கிட்டுகைக்கு. உபாயம்- வழி, என்னே எது. சொல்லவேணும். ஆந்தரமாக ப்ரகாசிக்கச்செய்தே, பாஹ்ய ஸ்மஶ்லேஷம் கிடையாதொழிவதில் மறக்கை யுத்தேஶ்யமென்று கருத்து. பூர்வோத்தரங்களான பாட்டுக்களார்த்தி ஸூசகமாகையாலே யிதுக்குமிதுவேபொருள். (ரு)

ஆறு:— (சோல்லமாட்டேன்) ப்ரளயகால ஸகல ஸலில பரிபூர்ணமான மேகத்தின் நிறம்போலேயிருந்த திரு நிறத்தையுடையவனே; உன்னுடைய நிரதிஶயதிப்தியுக்தமான திருவடிகள் நிரதிஶயதேஜோமயமாய் நிரவதிகஸௌந்தர்ய நிதியாயிருப்பது இளநாயிறிரண்டுபோலே யென்னுள்ளே விளங்குகிறபடி மறக்கவும் முடிகிறதில்லையென்கிறார். (ரு)

ஈடு; அவ:—உன்னுடையவழகுஎன் ஹ்ருதயத்திலே ஸ்ம்ருதிவிஷயமாய் நலியாநின்றது, இது மறக்க வொருவிரகுசொல்லவேணுமென்கிறார்.

(சொல்லமாட்டேன்) என் ஹ்ருதயத்திலேநின்று நலிகிறபடிக்குப் பாசுரமிடப்போகிறதில்லை. (அடியேன்) ஸம்பந்தத்தாலே தவிரமாட்டுகிறிலேன். (உன்துளங்கித்யாதி) அதேதென்ன ; விளங்

காநின்றுள்ள வொளியையுடைய உன்திருவடிகள். (எல்லையித்யாதி) அளவிறந்த வழகையுடைய பாலாதித்யர்களிருவரைப்போலேஎன் ஹ்ருதயத்தேநின்று நலிகிறபடி. பாலாதித்யர்களென்கிறது - கண்ணுலே பருகலாயிருக்கையாலும், பாதிக்கத்தொடங்கின வித்தனை யென்று தோற்றுகையாலும். (இளநாயிறு) என்னை பாதிக்க பாதிக்க விளமைமிகுகிறபடி. [என்னுள்ளவா-சொல்லமாட்டேன்.]

(அல்லலித்யாதி) "உன்னைக்காட்டாதே அருமைப்படுத்தப் பார்த்தாயாகில், நாட்டார் 'தண்ணிது' என்கிற வஜ்ஞானம் வருவதோருபாயமேதோ" என்றருளிச்செய்வர் பட்டர்; இப்போது மறந்து பிழைக்கலாமென்னுமத்தாலே. "திருவடிகள் என்ஹ்ருதயத்திலே ப்ரகாசியாநிற்க, துஃகாத்மகமா மஜ்ஞானம் வருகைக்கு உபாயமுண்டோ" என்னுமம்மாள். உண்டாகி லிண்டுடுத்துத் திரியலாமே நாட்டாரோபாதி. (ஆழியித்யாதி) கடல்சூழ்ந்த மஹாப்ருதிவியை யெல்லாம் ப்ரளயத்திலே நசியாமே வயிற்றிலே வைத்து ரக்ஷித்த பரமோதாரனே. ஆழிசூழ்மல்லைஞாலம் முழுதுண்டமாநீரென்று-ஏகார்ணவமாய், அத்தைதப்பருகின மேகம்போலே யிருக்கிற வடிவையுடையவ னென்னுதல்; மல்லை ஞாலம்-மஹாப்ருதிவீ (ரு)

---

## ஆறும்பாட்டு.

கொண்டல்வண்ணு! குடக்கூத்தா! வினையேன்கண்ணு! கண்ணு! * என் அண்டவாணு! என்றுஎன்னை ஆளக்கூப்பிட் டழைத்தக்கால் * விண்தன்மேல்தான்மண்மேல்தான் விரிநீர்க் கடல்தான்மற்றுத்தான்* தொண்டனேன்உன்கழல்காண ஒருநாள் வந்துதோன்றுயே! (சா)

ப:—அந்தரம், ஆகர்ஷகமான ஸௌந்தர்யசேஷ்டிதாதிகளிலே யகப்பட்டுக்கூப்பிட்டால் ஏதேனுமொருமுகத்தாலே வந்து தோன்ற வேணுமென்கிறுர்.

(இ-ள்) கொண்டல்-ப்ரமஹரமான காளமேகம்போன்ற, வண்ணு-வடிவையுடையவனே. அவ்வழகேயன்றியே, குடக்கூத்தா-மநோஹாரி சேஷ்டிதமான குடக்கூத்தையுடையவனே, வினையேன் - அத்தைக் கண்டநுபவிக்கப்பெருத பாபத்தையுடைய வெனக்கு, கண்ணு-த்ருஷ்

டிபூதனானவனே, கண்ணா - ஆஶ்ரிதபவ்யனாகைக்காக க்ருஷ்ணனானவனே, என் - எனக்கு ப்ராப்யபூதனாகைக்காக, அண்டவாணா-பரமபத நிர்வாஹகனாயிருக்கிறவனே, என்று-என்று, பலகாலு முன்ஸ்வபாவங்களைச் சொல்லி, என்னை - ஆள-அடிமைகொள்ளுகைக்காக, கூப்பிட்டு. என்னார்த்த்ய திசயத்தாலே கூப்பிட்டு, அழைத்தக்கால்-அழைத்தக்கால், காளமேகம்போலே, விண்டன்மேல்தான் - பரமபதத்தில் நின்றுதல், மண்மேல்தான்-அவதாரங்களுக்கு மர்ச்சைகளுக்கும் ஸ்த்தலமான பூமியில்நின்றுதல், விரிநீர்க்கடல்தான் - அவதாரகந்தமான க்ஷீரார்ணவத்தில் நின்றுதல், மற்றுத்தான்-அந்தராத்மாவாய் நிற்கிறவகவாயில் நின்றுதல், தொண்டனேன் - அதிசபலனான நான், உன்னை-உன், கழல் திருவடிகளை, காண-காணும்படியாக, ஒருநாள்-ஒருநாள் வந்து-வந்து, தோன்றாய்-தோன்றவேணும். (சு)

ஆறு:—(கொண்டல்வண்ணா) மேகஶ்யாமளனே, அசேஷ மநோநயநஹாரி திவ்யசேஷ்டிதங்களை யுடையவனே, பாக்யஹீநனானவென்னுடைய கண்ணா, கண்ணா என்று என்னை யடிமைகொண்டருளுகைக்காகக் கூப்பிட்டழைத்தக்கால், திருநாட்டில் நின்றுதல், பூமியிலுள்ள திருநகரிகளில் நின்றுதல், திருப்பாற்கடலில்நின்றுதல் ஒருதூணில்நின்றுதல், தொண்டனேனுன்கழல்காண வொருநாள் வந்து தோன்றாயென்கிறார். (சு)

ஈடு; அவ:—உன்னுடைய ஸௌந்தர்யாதிகளை நினைத்து "காணவேணும்" என்று கூப்பிடுகிற நான்காணும்படி யேதேனுமோரிடத்திலேவந்து தோற்றியருளவேணுமென்கிறார்.

(கொண்டல்வண்ணா) காணவே விடாயாறும்படியான வடிவையுடையவனே. (குடக்கூத்தா) மநோஹாரியான சேஷ்டிதத்தை யுடையவனே. (வினையேன்கண்ணாகண்ணா) எனக்கு த்ருஷ்டிபூதனான க்ருஷ்ணனே. (வினையேன்) கண்ணை யிழந்திருக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன். (என்னண்டவாணாவென்று) என்னை விஷயீகரிக்கைக்காக அண்டாதிபதியானவனே! கல்யாணகுணயோகம் ஆஶ்ரிதார்த்தமா யிருக்குமாபோலே, விபூதியோகமும் தமக்காகவென்றிருக்கிறார். (என்னையாள) ஒரு ப்ரயோஜநாந்தரத்துக்காக வழைக்கிறேனோ, என்னை நித்யகைங்கர்யங் கொள்ளவேணுமென்றன்றோ வழைக்கிறது. (கூப்பிட்டழைத்தக்கால்) க்ரமப்ராப்தி

ஸஹிக்கவல்லேனாய்த்தான் தாழ்க்கிறுயோ. என்னார்த்தநாதங்கேட்டால் "க்ரமத்திலேவருகிறோம்" என்றிருக்கலாயிருந்ததோ.

(விண்டன்மேல்தான்) மாநீர்க்கொண்டல் ஸஞ்சரிக்குமாகாஶத்திலே தோற்றவுமமையும். (விண்டன்மேல்தான்) பரமபதத்திலிருக்கிற விருப்போடேவந்து தோற்றவுமாம். (மண்மேல்தான்) அவதரித்துத்தோற்றவுமாம். (விரிநீர்க்கடல்தான்) க்ஷீராப்தியில் கண்வளர்ந்தருளுகிறபடியே வந்து தோற்றவுமாம். (மற்றுத்தான்) தூணிலேவந்து தோற்றினாப்போலே யாதல், ஆனைக்குவந்து தோற்றினாப்போலே யாதல், தோற்றவுமாம். (தொண்டனேன்) உன் திருவடிகளில் கைங்கர்யத்தில் சபலனான நான். (உன்கழல்காண) எனக்கு ஜீவநமான திருவடிகளைக்காண. (ஒருநாள்வந்துதோன்றாயே) "பலநாள்வேணும்" என்று நிர்ப்பந்திக்கிறேனோ; என் ஸத்தை கிடக்கைக்கு ஒருநாள்வந்து தோற்றியருளவேணும். (சு)

---

## ஏழாம்பாட்டு.

வந்துதோன்றாயன்றேல் உன் வையம்தாயமலரடிக்கீழ் * முந்திவந்துயான்நிற்ப முகப்பேகூவிப்பணிகொள்ளாய் * செந்தண் கமலக்கண்கைகால் சிவந்தவாயோர்கருநாயிறு * அந்தமில்லாக் கதிர்பரப்பி அலர்ந்ததொக்கும் அம்மானே. (எ)

ப:—அநந்தரம், அபேக்ஷாஸம்ஶ்லேஷஸ்வபாவனாய், அதி ரமணீயமான ஸௌந்தர்யத்தையுடையையாயிருக்கிற நீ, என்முன்னே வந்து தோன்றுதல், உன் முன்னே யழைத் தடிமைகொள்ளுதல் செய்யவேணுமென்கிறார்.

(இ-ள்.) செம் சிவந்து, தண்-குளிர்ந்த, கமலம்-தாமரைபோலேயிருக்கிற, கண்-கண்ணையும், கை-கையையும், கால்-காலையும், சிவந்த-சிவந்த,வாய்-வாயையுமுடைத்தாயிருப்பது.ஓர்-ஒரு,கருநாயிறு-நீலநிறமான நாயிறானது, ஆயிரமென்கிறவளவன்றியே, அந்தம் - முடிவு, இல்லா-இல்லாத, கதிர் - கதிரை, பரம்பி-பரப்பி, அலர்ந்ததொக்கும்-விஸ்தீர்ணமானாப்போலே ருக்கிற, அம்மானே – வடிவழகையுடைய ஸ்வாமியே, வந்து-அவ்வழகோடே வந்து, தோன்றாய் - தோன்றவேணும், அன்றேல்-அந்தநினைவன்றாகில், வையம் - ஸகலஜகத்தையும்,

தாய-வரையாமல் ஸம்ஶ்லேஷித்த, மலர்-விகஸிதமான தாமரைபோலே யிருக்கிற, அடிக்கீழ் - திருவடிகளின் கீழே, முந்தி - முற்பாடனாய்க்கொண்டு, யான்-நான், வந்து-வந்து, நிற்ப-தரித்து நிற்கும்படியாக, உன்-உன், முகப்பே-திருமுன்பே, கூவி-அழைத்து, பணி - அடிமை. கொள்ளாய் கொண்டருளவேணும். (எ)

ஆறு:—(வந்துதோன்றாய்) ஆதாம்ர ஶீதள ஸரோருஹ ஸத்ருஶமான நயந பாணி பாத வதநங்களையுடைத்தாய், நிரவதிக தீப்தியுக்தமாயிருப்பதொரு கருநாயிறுபோலே யிருந்த நீவந்து தோன்றாய்; அன்றேல், அநாலோசிதவிஶேஷாஶேஷ லோகஶரண்யமாய், லோகவிக்ராந்தமா யிருந்த உன் திருவடிமலர்களின்கீழே, உன் திருவுள்ளத்தி லபேக்ஷிதமான கைங்கர்யத்தை நீயருளிச்செய்வதற்கு முன்பே யறிந்து செய்யக்கடவனாய்ச் சமைந்துநிற்க முகப்பே கூவிப்பணிகொள்ளாயென்கிறார். (எ)

ஈடு; அவ:—இங்கேவந்து தோற்றியருளுதல், அது திருவுள்ளமல்லவாகில் அங்கேயழைத் தடிமைகொள்ளுதல் செய்தருளவேணுமென்கிறார்.

(வந்துதோன்றாய்) என் கண்வட்டத்திலே வந்து தோன்றவேணும் (க) * தந்தைகாலில் விலங்கறவந்து தோன்றியதோன்றலையிறே-வந்து தோன்றாயென்கிறது. (அன்றேல்) என்னார்த்தியைப் பார்த்து உன்னுடைய க்ருபையாலே வந்து முகங்காட்டப் பார்த்திலையாகில். உன் பூர்த்தியையும் என்சிறுமையையும் பார்த்து முகங்காட்டப் பார்த்திலையாகிலென்றுமாம். (உன்வையந்தாயமலரடி) வஸிஷ்ட்டசண்டாலவிபாகம் பாராததிருவடிகள். (மலரடி) ஒரு செவ்விப்பூவைக்கொண்டாயிற்றுக் காடுமேடையுமளந்தது. (மலரடிக்கீழ்முந்திவந்துயான்நிற்ப) நிரதிஶயபோக்யமான திருவடிகளின்கீழே முற்பாடனாய் வந்து நிற்கும்படியாக.

(முகப்பே) கண்வட்டத்திலே. (கூவிப்பணிகொள்ளாய்) சோற்றையிட்டுப் பணிகொள்ளாய். (உ) "க்ரியதாமிதி மாம்வத" என்று கண்முகப்பே யடிமைகொண்டருள வேணும். குணஜ்ஞாநத்தாலேதரித்திருக்கும் ஸ்ரீ பரதாழ்வான் ப்ரக்

(க) தி-மொ-அ ரு.க (உ) ரா ஆர-கரு எ.

திருவாய்மொழி, அ-ப, ரு-தி, அ-பா; ஒக்கும் வ்யாக்யானம். கங-ங

ருதி யல்லேன்; (க) "ஜஸா நத்ரவிஶொஷு தஸ-ஜஸாந்மத்ஸ்யா விவோத்தருதெள" என்னு மிளையபெருமாள் ப்ரக்ருதியான வென்னை யடிமைகொண்டருளவேணும். (உ) "வழுவிலாவடிமை செய்யவேண்டும்" என்றும் (ங) "நின்னலாலிலேன்" என்றும், இட்டு வைத்தவிடத்தில் கிடக்கமாட்டேன். (ச) "நன்றுமஞ்சுவன் நரகம்நானடைதல்" என்னுமவரிறே.

(செந்தணித்யாதி) சிவந்து குளிர்ந்த தாமரைபோலே, கண்ணையும் கையையும் காலையுமுடையனாய், சிவந்த வாயையுமுடையனாய், நீலமான நிறத்தையுடையனாயிருப்பானோராதித்யன், "ஸஹஸ்ரம்" என்றொரு ஸங்க்யையின்றிக்கே அளவிறந்த கிரணங்களைப் பரப்பிக்கொண்டு விகஸிதமானாப்போலே வந்து தோன்றவேணும் (அம்மானே) உன்மேன்மையைப் பார்த்து அங்கேயழைத் தடிமைகொள்ளுதல், உன்னுடைமை நசியாமைக்கு த்வரையுண்டாகில் இங்கேவந்தடிமைகொள்ளுதல் செய்தருளவேணும்.(எ)

---

## எட்டாம்பாட்டு.

ஒக்குமம்மானுருவமென்று உள்ளங்குழைந்துநாளும் *
தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறும் தொலைவன்நான் *
தக்கஐவர்தமக்காய் அன்று ஈரைம்பதின்மர்தாள்சாய * புக்கநல்
தேர்த்தனிப்பாகா! வாராய் இதுவோபொருத்தமே? (அ)

ப:—அநந்தரம், போலிகண்டு நான் க்லேஶியாநிற்க, ஆஶ்ரிதபக்ஷபாதியான நீவந்து தோன்றுகிறிலையென்கிறார்.

(இ ள்.) அம்மான்-ஸ்வாமியானவன். உருவம்-வடிவழகு. ஒக்கும்-ஒக்கும். என்று-என்று. உள்ளம்-நெஞ்சு. குழைந்து-ஶிதிலமாய். நாள் நாளும்-நாடோறும். தொக்க-திரண்ட. மேகம்-மேகங்களினுடைய. பல்-பலகுழாங்கள் - ஸமூஹங்களை. காணுந்தோறும் — காணும்பொழுதெல்லாம். நான்-நான். துலைவன்-க்லேஶியாநிற்பன். தக்க-நீயெல்லாவுறவுமாம்படியான தக்கோர்மையையுடைய. ஐவர்தமக்கு- பாண்டவர்களைவர்க்கும். ஆய் — ஏவலாளாய்க்கொண்டு. அன்று - பாரதயுத்தம் ப்ரவ்ருத்தமானவன்று. ஈரைம்பதின்மர்-அவர்களுக்கெதிரிகளான நூற்

---

(க) ரா-அயோ-ருங-ஙக (உ) ங-ங-க.
(ங) உ-ங-எ. (ச) அ-க-க.

றுவரும் தாள்சாய-காலற்றுப்போம்படி. புக்க—ஸேநாமத்யத்திலேப்ர வேசித்த. நல்-உன்னதிஷ்டானத்தாலே ச்லாக்யமான. தேர்-தேருக்கு. தனிப் பாகா-ரதியான அவன் உன்முதுகின்கீழே யொதுங்கும்படி ஸாரதியானவனே. வாராய் - அவ்வழகோடேவருகிறிலை. இதுவோ—இதுவோ. பொருத்தம்-ஆச்ரிதவிஷயத்தில் பொருத்தமிருந்தபடி. (அ)

ஆறு:—(ஒக்குமம்மான்) உன்திருமேனியோடொக்குமென்று தொக்கமேகப்பல்குழாங்கள் காணுந்தோறும் நாணுளுமுள்ளங்குழைந்து துலைவன்நான், உன்னைமறந்திருக்கவொட்டுகிறதில்லை இந்த மேகங்கள்; உன்திருவடிகளையே ப்ராப்யமும் ப்ராபகமுமென்றிருக்கு மைவர்க்கு சேஷபூதனாய், அன்றீரைம்பதின்மர்தாள் சாயப் புக்கநற்றேர்த் தனிப்பாகா, அத்தேரை யிங்ஙனேநிறுத்திக்கொண்டுவாராய், இதுவோ வுன்னுடைய ப்ரணயித்வமென்கிறார். (அ)

ஈடு; அவ:—உனக்குப்போலியான மேகதர்சனத்தாலே நோவுபடா நிற்க, வந்து முகங்காட்டுகிறிலை; இதுவோ வுன்ஸங்கஸ்வபாவமென்கிறார்.

(ஒக்குமம்மானுருவமென்று) "ஸர்வேச்வரன்வடிவு இதரவிஸஜாதீயம்" என்று புத்திபண்ணுநிற்கச்செய்தே,(க)* தூமஜ்யோதிஸ்ஸலிலமருதாம் ஸமூஹமானமேகத்தை ஸத்ருசமென்று ப்ரமிப்பர். (உள்ளங்குழைந்து) இது தோற்புரையன்றியே, அகவாய் சிதிலமாய். (நாணுளும்) இந்த சைதில்யம் காதாசித்கமன்றிக்கே, இடைவிடாமல்செல்லுகை. (தொக்கமேகப்பல்குழாங்கள்) மேகசகலங்களுக்கிடையார்; திரண்டமேக ஸமூஹங்களைக் காணுந்தோறும். (நாணுளும்-துலைவன்) தர்மிலோபம் பிறக்கிறதுமில்லை, ஜீவித்திருக்கவும் பெறுகிறிலேன், (நான்) மேகதர்சனம் நாட்டார்க்கு ஆச்வாஸஹேதுவிறே.

(தக்கவைவர்) என்ன மேகதர்சனத்துக்கிடைந்து பாண்டவர்களை நோக்கிற்று; "பந்துக்கள் ஜீவிக்கவேணும், எங்களுக்கும் ஐந்து குடிக்காடையும்" என்னுந்தக்கோர்மையுடையவைவர். (தமக்காய்) (உ) "ரயம் ஸ்தாபய-ரதம் ஸ்தாபய" என்னும்படி கையாளாய் (அன்று) அவர்கள் தனியானவன்று. (ஈரைம்பதின்மர்தாள்சாய) "பந்துக்கள் ஜீவிக்கில் ஜீவியோம்" என்ற நூற்றுவரும் காலறும்

(க) மேகஸந்தேசம். (உ) கீதை-க-உக.

திருவாய்மொழி, அ-ப,ஙி-தி, கூ-பா, இதுவோ வ்யாக்யாநம். கங்கூ

படியாக. (புக்க) தூசித்தலைப்பிலேபுக்க. (நற்றேர்) இவனை ஸாரதியாகவுடைத்தாகையாலே அதிஶ்லாக்யமானதேர். (தனிப்பாகா) தனியே நிர்வாஹகனானவனே. ரதியைக்காண் கிறிலர். (க) "நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண-நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண" என்றவனைச்சேமம் சாத்திவைத்து வ்யாபரிக்கையாலே, ஸாரதியையாயிற்று இவர் காண்கிறது. (வாராய்) (உ) "ஸேநயொரு-பயொர்மத்யே ரதம் ஸ்தாபய" என்ன, உபயஸேனையின் நடுவே தேரைநிறுத்தினநீ, அத்தேரை யிம்மேகங்களின் நடுவே நடத்தினலாகாதோ. ஐவருமாய், எதிரிகள் ஸங்க்யாதருமானாலோ வுதவலாவது; தனியனுமாய், மேகஸமூஹங்கள் அஸங்க்யாதமானு லுதவலாகாதோ.

(இதுவோபொருத்தம்) ஆஶ்ரிதரோடு முன்பு நீ பொருந்திப் போந்தபடி யிதுவோ. ஆஶ்ரிதர்க்காக ஸத்யஸாரத்யங்கள்பண்ணியும், "ஆயுதமெடேன்" என்றுமாயுதமெடுத்தும், பகலையிரவாக்கியும் பக்ஷபதித்தது பொய்யோ. (ந) "நாராயணகயாசிரோ ஷ-நாராயணகதாமிமாம்" என்றவனும் கைக்கூலிகொண்டு புலமைபாடினுனுகாதேயென்கிறார். இப்போது தமக்குதவில் அவைமெய்யாமென்றிருக்கிறார். (வாராய்) எனக்கிதெல்லாம் வேணுமோ, முகங்காட்டவமையாதோ. (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

இதுவோபொருத்தம்? மின்னாழிப்படையாய்! ஏறுமிருஞ்சிறைப்புள் அதுவே * கொடியாவுயர்த்தானே! என்றென்றேங்கிய முதக்கால் * எதுவேயாகக்கருதுங்கோல்? இம்மாஞாலம்பொறை தீர்ப்பான் * மதுவார்சோலை உத்தரமதுரைப்பிறந்தமாயனே. (கூ)

ப:—அநந்தரம், ஆஶ்ரிதரை அநேகவித கைங்கர்யங்கொள்ளும் ப்ரகாரத்தை நினைத்துக்கூப்பிட்டால், ஆஶ்ரிதவிரோதி நிரஸநார்த்தமாக வவதரித்தவன் என் நினைத்திருக்கிறுனேனென்கிறார்.

---

(க) கீதை-க-நஉ. (உ) கீதை-க-உக.
(ந) பாரதம்.

(இ-ள்.) மின்-ஒளியாலே யாடரண மாம்படியான. ஆழி-திருவாழியை. படையாய்-ஆயுதமாகவுடையவனே. ஏறும் வாஹநமான. இரு-பெரிய சிறை-சிறகையுடையனுண. புள்ளதுவே - பெரியதிருவடிதன்னையே. கொடியா-கொடியாக. உயர்த்தானே-எடுத்தவனே. இதுவோ இதுவோ. பொருத்தம்-அவர்களளவிலும் பொருத்தமிருக்கும்படி. என்றென்று-என்றுபலகாலுஞ்சொல்லி. ஏங்கி-பொருமி. அழுதக்கால்-அழுதக்கால். இ-இந்த. மாஞாலம்-மஹாப்ருதிவியின் பொறை-பாரத்தை. தீர்ப்பான்-போக்குகைக்காக. மது-மது, வார்-ப்ரவாஹியான. சோலை-சோலையையுடைய. உத்தரமதுரை-வடமதுரையிலே. பிறந்த. ஸர்வேஶ்வரத்வ ஸூசகமான சிஹ்நங்களோடேயவதரித்த. மாயன்-ஆஶ்சர்யபூதனானவன். என் கண்ணநீர் மாறவருவதாக நினைத்திருக்கிறானோ, இப்படி அழுதேபோவனென்று நினைத்திருக்கிறானோ; எதுவேயாக-எதாகவோ. கருதும்-திருவுள்ளம்பற்றுவது. (க)

ஆறு:—(இதுவோபொருத்தம்) திருவாழியை மின்னாகவுடைய திவ்யரூபமாகிற நீலமேகத்தை யுடையவனே, ஆஶ்ரிதருடைய வாபத்துக்குதவ வருகைக்கீடான பெரியதிருவடியை திவ்யவாஹநமாகவுடையவனே, இதுவோமுடிந்ததென்றென் றேங்கியழுதக்கால் ஆஶ்ரிததுஃகாஸஹிஷ்ணுவாகையாலே தத்துஃகஹேதுபூத பூபார நிர்ஹரணார்த்தமாக, மதுவார்சோலையுத்தர மதுரைப்பிறந்த வாஶ்சர்யபூதனே, நீயெதுவாகநினைத்திருக்குமென்கிறார். (க)

ஈடு; அவ:—அந்திமதசையில் ஸ்வர்க்கத்தேறப்போன விவர்கள் நிற்கிடீர், திருவாழியாழ்வான்முதலான நித்யரோடும் பொருத்தமிதுவோவென்று ஸ்வகதமாக விசாரிக்கிறார். இருந்ததேகுடியாக ரக்ஷிக்கவந்தக்ருஷ்ணன், தன்னைக்காண்கையே தேட்டமான வெனக்கு என்செய்தருளுமென்று நினைக்கிறாராகவுமாம்.

( இதுவோபொருத்தம் ) இப்படி கூப்பிடச்செய்தேயும் வரக்காணமையாலே கண்ணுஞ்சுழலையிட்டு, மீண்டும் "இதுவோபொருத்தம்" என்கிறார். (மின்னாழிப்படையாய்) மேகத்திலே மின்னினைப்போலே, ஆஶ்ரித விரோதிநிரஸநஶீலமான திருவாழியைப் படையாகவுடையவனே. அத்திருவாழியைக்கொண்டு என்னுடைய ப்ரதிபந்தகத்தின்மேலே வ்யாபரித்தாலாதோ. (ஏறுமித்யாதி) ஏறக்கடவ பெரியசிறகையுடைய புள்ளானது தன்னையே த்வஜமாக வெடுத்தவனே. ஆஶ்ரிதரை யெல்லா வடிமையுங் கொள்ளுமவ

திருவாய்மொழி, அ-ப, ரு-தி, க0-பா, பிறந்த வ்யாக்யானம். கரூஎ

னன்றோ. (என்றேன்றேங்கியழுத்தக்கால்) இப்பாசுரம்மாறுதே பொருமிப்பொருமியழாநின்றால்.

(எதுவேயாகக்கருதுங்கோல்) இக்கூப்பீட்டுக்கு முகங்காட்ட நினைக்கிறுனே, கூப்பிட்டேபோவானென்றிருக்கிறுனே. இக்கூப்பீட்டுக்கு அவன்திருவுள்ளமெங்ஙனே புண்படுகிறதோவென்றுமாம். (இம்மாஞாலம்போறைதீர்ப்பான்) இம்மஹாப்ருதிவியினுடைய பாரத்தைப்போக்குகைக்காக. (மதுவார்சோலை) மதுஸ்யந்தியான சோலையையுடைய. (உத்தரமதுரை) வடமதுரையிலே, ஶத்ருக்களான கம்ஸாதிகள் நடுவே (பிறந்தமாயனே) ஆவிர்ப்பவிக்கையன்றியே, (க) "தஸ்ஸூ ஆதகெஸாவெஸ-ததம்ஸசத்வா தபோமாஸே" என்கிறபடியே கர்ப்பவாஸம்பண்ணிப்பிறந்த வாஶ்சர்யபூதனே. ஊ-ஹாரநிரஸநழ - பூபாரநிரஸநம்" என்கிறவ்யாஜத்தாலே. இதரஸஜாதீயனுய்வந்தவதரித்து ஆஶ்ரிதவிரோதிகளைப்போக்கும் ஸ்வபாவனுனவன், நங்கூப்பீட்டுக்கென்னினைத்திருக்கிறுனென்கை.

---

## பத்தாம் பாட்டு.

பிறந்தமாயா! பாரதம்போருதமாயா! நீ இன்னே * சிறந்த கால்தீநீர்வான் மண்பிறவுமாயபெருமானே! * கறந்தபாலுள்நெய்யேபோல் இவற்றுளெங்கும்கண்டுகோள் * இறந்துநின்றபெருமாயா! உன்னைஎங்கேகாண்கேனே? (க0)

ப:—அநந்தரம், அவதார ப்ரயுக்த ஸௌலப்யத்துக்குப்பிற்பட்டு, அகவாயில் நிலையு மதீந்த்ரியமானுல் எங்கேகாண்பதென்றூர்த்த ராகிறூர்.

(இ-ள்.) பிறந்த - (உ) "அஜோऽபிஸந் அஜோபிஸந்" என்கிறபடியே அஜஹத்ஸ்வபாவனுய்க்கொண்டவதரித்த. மாயா - ஆஶ்சர்யபூதனுய், ஆஶ்ரிதார்த்தமாக, பாரதம்-மஹாபாரதயுத்தத்தைப்பண்ணுமிடத்தில், பொருதமாயா - "ஆயுதமெடேன்" என்றூயுதமெடுத்தல், பகலை இரவாக்குதல் முதலானவாஶ்சர்ய சேஷ்டிதங்களைச் செய்து நடத்தினவனே! நீ-நீ. இன்னே-இப்படி ஸுலபனுயிருக்கச்செய்தே. சிறந்த-ஜகத்தேதுத்வத்தால் வந்த சிறப்பையுடைய. கால்தீநீர்வான் மண் - பஞ்சபூதங்களையும். பிறவும்-மற்றுமுள்ள பௌதிகபதார்த்தங்களையும். ஆய-ப்ரகாரமாகவுடைய. பெருமானே-ஸர்வாதிகனுய். (ங) "வ்யாதிஷ்டயவிநிமஷ்டு - க்ருதமிவபயஸிநிகூடம்" என்கிற

---

(க) ரா பா-கஅ-கூ. (உ) கீதை ச-கூ. (ங) ப்ரஹ்மவிதுபநிஷத்.

க்ஷணக்கிலே, கறந்த-கறந்த, பால்-பாலுக்கு. உள்-உள்ளில் நெய்யே போல்-நெய்போலே. மதித்துக்காண்பார்க்கொழிய, கண்டுகொள் - காண. இறந்து-அரிதாம்படி. இவற்றுள் - இப்பதார்த்தத்துக்குள்ளில். எங்கும்-எல்லாவிடத்திலும். நின்ற நின்ற, பெருமாயா-அத்யாஶ்சர்ய பூதனானவனே. உன்னை-இப்படி அதீந்த்ரியனான வுன்னை. எங்கே எவ் விடத்திலே, காண்கேன்-காணக்கடவேன். (க)

ஆறு:—(பிறந்தமாயா) ஸாதுபரித்ராணார்த்தமாகவும், துஷ்க்ருத்விநாஶார்த்தமாகவும் ஸ்ரீமதுரையிலே பிறந்தருளின வாஶ்சர்யபூதனே, நீ யிப்படி ஸர்வத்ரஸந்நிஹிதனாயிருந்துவைத்து உன்னைக்காட்டியருளுகிறிலை, இனியுன்னை யெங்கேகாண்கேனென்கிறார்.

ஈடு; அவ:—அவதாரத்துக்குப் பிற்பாடனாய், அந்தர்யாமித்வம் கண்ணுக்கவிஷயமானபின்பு, உன்னை நானெவ்விடத்தே காண்ப தென்கிறார்.

(பிறந்தமாயா) அகர்மவஶ்யனாய்வைத்து, அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்கி வந்தவதரித்த வாஶ்சர்ய பூதனே? (பாரதம் பொருதமாயா) பிறந்தாப்போலே யிருப்பதொன் றுயிற்று இவ்வாஶ்சர்யம்; ஸத்யப்ரதிஜ்ஞனானவன் அஸத்யப்ரதிஜ்ஞனான வாஶ்சர்யம்; "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுக்கையும், பகலை யிரவாக்குகையும். (நீயின்னே) நீயிப்படி ஸுலபனாயிருக்கச் செய்தே. (சிறந்தவித்யாதி) காரணமான ப்ருதிவ்யாதிபூதங்களுக் கும். (பிறவும்) தத்கார்யமான தேவாதிபதார்த்தங்களுக்கு மாத்மா வான ஸர்வேஶ்வரனே. காற்றுக்குச்சிறப்பாவது-காரணத்வமொத் திருக்க தாரகத்வத்தால்வந்தவேற்றம்.

(கறந்தவித்யாதி) கண்ணாலே காண்கிற பாலினுள்ளே நெய்யுண் டாயிருக்கக் காணவரிதானாப்போலே, ஸகல பதார்த்தங்களிலும் நின்று வைத்துக் காணவொண்ணாதபடிநிற்கிற வத்யாஶ்சர்யபூதனே! ப்ரஹ்மவிதுபநிஷத்து, (க) "கவாமநேகவர்ணாநாம் க்ஷீரஸ்யாப்யேகவர்ணதா। க்ஷீரவத் பஶ்யதே ஜ்ஞாநம் லிங்கிநஸ்து கவாம் யதா॥ க்ருதமிவ பயஸி நிகூடம் பூதே பூதே ச வஸதி விஜ்ஞாநம்। ஸததம் மந்தேதவ்யம் மநஸா மந்தாநபூதேந॥ ஸர்வபூதாதிவாஸம் யத்பூதேஷு வஸத்யபி। ஸர்வா

(க) ப்ரஹ்ம விதுபநிஷத்.

நாராஹகஸ்வதேநதஸ்யஹம் வாஸுதேவஇதி - ஸர்வகே
ஸவர்ணாப்ஸ்ஹீரஸ்யத்யேவகவர்ணதா॥ க்ருதமிவபயஸிநிகூடம் பூதே
பூதேசவஸதிவிஜ்ஞாநம் । ஸததம்மந்தேதவ்யம் மநஸாமந்தாநபூ
தேந ॥ ஸர்வபூதாதிவாஸம்யத் பூதேஷுசவஸத்யபி । ஸர்வாநுக்
ராஹகத்வேந-ததஸ்ம்யஹம்வாஸுதேவஇதி" என்கிறபடியே.

(கறந்தபால்) காலத்தாலும் மதநாதியாலுந் தோற்றுகிறநெய்,
கறந்தகாலத்தில்தோற்றுகிறது. உன்பக்கலிலே ந்யஸ்தபரனுகை
யாகிற ஸம்ஸ்காரத்தாலல்லது காணவரியையென்கை. (உன்னை
யெங்கேகாண்கேனே) பரமபதத்தில் காட்சிக்கு ஶரீரஸம்பந்தமற
வேணும். அவதாரத்துக்குப்பிற்பாடனேன், அர்ச்சாவதாரம்
நான் நினைத்தபடிகிடையாது, அந்தர்யாமித்வம் கண்ணுக்குவிஷய
மன்று, இனி இவ்விழவோடேமுடிந்துபோமித்தனையாகாதே. (க0)

---

## பதினொன்றும்பாட்டு.

எங்கேகாண்கேன்! ஈன்துழாயம்மான்தன்னை யான்? என்
றென்று * அங்கேதாழ்ந்தசொற்களால் அந்தண்குருகூர்ச்சடகோ
பன் * செங்கேழ்சொன்ன ஆயிரத்துள் இவையும்பத்தும்வல்லார்
கள் * இங்கேகாண இப்பிறப்பேமகிழ்வர் எல்லியுங்காலையே.

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக, ஸம்ஸாரத்
திலே ஸதா பகவதநுபவலாபத்தை யருளிச்செய்கிறார்.

(இன்)ஈன் நிரதிஶயபோக்யமான. துழாய்-திருத்துழாய்மாலையையு
டைய அம்மான்றன்னை-ஸர்வேஶ்வரனை, யான்-இப்படி யார்த்த்யதி
ஶயத்தையுடைய நான். எங்கே-எங்கே. காண்கேன்-காணக்கடவேன்.
என்றென்று-என்று பலகாலுஞ்சொல்லி, அங்கே-அவனுடைய போக்
யதையிலும் ஶௌஷீத்வத்திலும், தாழ்ந்த-ப்ரவணமான, சொற்களால்-
சொற்களாலே, அம் - தர்ஶநீயமாய், தண் - ஶ்ரமஹரமான, குருகூர்-
திருநகரிக்கு நிர்வாஹகரான- சடகோபன் ஆழ்வார், பகவத்ஸ்வபாவங்
களை ப்ரதிபாதிக்குமிடத்தில், செங்கேழ்-ஆர்ஜவத்தை யுடைத்தாய்க்
கொண்டு போரும்படி, சொன்ன அருளிச்செய்த, ஆயிரத்துள்-ஆயிரத்
துக்குள்ளே, இவையும்பத்தும்-இவைபத்தையும், வல்லார்கள் - பாவவ்
ருத்தியோடே அப்யஸிக்கவல்லவர்கள். இங்கே-இந்தபூமியிலே, காண-

எல்லாரும் காணும்படி, இப்பிறப்பே-இஜ்ஜந்மத்திலே, எல்லியுங்காலையும் ராத்ரிந்திவமிடைவிடாதபடி, மகிழ்வர் - பகவதநுபவஜநிதாநந்தத்தை தயுடையராவர்கள். எல்லி-ராத்ரி. இது-அறுசீராசிரியவிருத்தம்.

ஆறு:—(எங்கேகாண்கேன்) எங்கேகாண்கே னீன்துழாயம்மான்றன்னை யானென்றென்று அங்கே ப்ரவண மநஸ்கராய்,ப்ரேமார்த்ர விஹ்வலமான சொற்களாலே அந்தண்குருகூர்ச்சடகோபன் ஆர்ஜவோபேதமாகச்சொன்ன வாயிரத்து ளிவைபத்தும் வல்லார்கள், இந்த லோகத்திலே இஜ்ஜந்மத்திலே யெல்லாருங்காண வெம்பெருமானை யெப்போதும் காணப்பெற்று மகிழ்வரெனகிறார். (கக)

ஈடு; அவ:—நிகமத்தில் இத்திருவாய்மொழிவல்லார், தாம் பட்ட துஃக்கம்படாதே,இஹலோகத்திலே இஜ்ஜந்மத்திலே அவனைப் பெற்று நிரந்தரமாக ஸுகிப்பரென்கிறார்.

(ஈன்றுழாயம்மான்றன்னையான் - எங்கேகாண்கேன்) ஐஶ்வர்ய ஸூசகமான திருத்துழாய் மாலையையுடைய ஸர்வேஶ்வரனைக் கண்டல்லது தரிக்கமாட்டாதபடி சபலனான நானெங்கே காணக்கடவேன். (என்றென்று) பரத்வாதிகளைப் பெறாத நானுன்னை நிரந்தரமாகச்சொல்லி. ஒருக்கால்சொல்லி "ஆசையை விஷ்கரித்தோமிறே" என்றறியிருக்கிறாரல்லரே, லாபத்தளவும் சொல்லுமித்தனையிறே. (அங்கேதாழ்ந்தசொற்களால்) தோளும், தோள்மாலையிலும், அந்த போஷித்வத்திலும் ப்ரவணமான சொற்களாலே, (அந்தண்குருகூர்ச்சடகோபன்) (க) "உபதிஷ்டே-ரோஹரேவ்யாயஃ-உபதிஷ்டந்துமாம்ஸர்வேவ்யாதயஃ" என்கிறபடியே இவ்வாற்றாமைக் கெல்லா மடல்கொடுத்தவாழ்வார்" என்றுளவந்தார் நிர்வாஹம்.

(செங்கேழ்சொன்ன) மநோவாக்காயங்களேகரூபமாய்ச் சொன்ன வாயிரத்திலு மிப்பத்தையும். (வல்லார்கள்) அப்யஸிக்க வல்லார். (இங்கேயித்யாதி) இஹலோகத்திலே இஜ்ஜந்மத்திலே திவாராத்ர விபாகமின்றிக்கே பகவதநுபவம் பண்ணி மகிழப்பெறுவர். "ஆளக்கூப்பிட்டழைத்தக்கால்" என்று-கூப்பிடவந்து முகங்காட்டாதவவத்யத்தை, இப்பத்தை அப்யஸித்தவர்களோடே கடுக வந்து முகங்காட்டித் தீருமாயிற்றீஶ்வரன்; பார்யையோடே வெறுப்புண்டானால் அவள்பக்கல் முகம்பெறுகைக்காக ப்ரஜைகளை ஶ்லாகிப்பாரைப்போலே. (கக)

எட்டாம்பத்து ஐந்தாம்திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) பாரதம்-பீஷ்ம.



ஸ்ரீ

# எட்டாம்பத்து.

## ஆறாந் திருவாய்மொழி.

### எல்லியும் - ப்ரவேஶங்கள்

ஆறு;—(எல்லியுங்காலையும்) எம்பெருமானுடைய விடாயெல்லாந் தீரும்படி அருள் செய்தருளினான்.

ப:—ஆறாந்திருவாய்மொழியில், இப்படி அநுபவாபிநிவேஶத்தாலே அத்யந்தமார்த்தராய்க் கூப்பிட்ட இவ்வாழ்வாருடைய வார்த்தி தீருகைக்காக "இவருடைய ஸகலவிரோதிகளையும் போக்கி ஸம்ஶ்லேஷிப்போம்" என்றீஶ்வரன் திருக்கடித்தானத்திலே ஆஸந்நமாக வந்து ஸந்நிஹிதனானபடியை ப்ரகாசிப்பிக்க; அவனுடைய வாஸக்திநிதாநமான ஶேஷித்வத்தையும், அஶேஷவிரோதிநிவர்த்தகமானஸாமர்த்த்யத்தையும், பராக்ரமைஶ்வர்யத்தால் வந்த வீர ஸ்ரீயோகத்தையும், ஆந்தரவிரோதி நிவர்த்தகமான அந்தஃப்ரவேஶத்தையும், ப்ரத்யாஸக்திக்கடியான ப்ராப்யதேஶவர்த்தித்வத்தையும், அவனிலுமவன தேசம் விரோதிநிவர்த்தகமெனனுமிடத்தையும், தேஶஸ்ம்ருதிமாத்ரமே துஃகநிவர்த்தகமெனனுமிடத்தையும், ஆஸந்நதேசத்தினுடையவஸாதாரண்யத்தையும், அர்ச்சாந்தரஸ்த்தலத்திலும் ஸந்நிஹிதனென்னுமிடத்தையும், ஆஸந்நதேசஸ்த்திதி அந்தஃப்ரவேசார்த்தமெனு மிடத்தையுமநுஸந்தித்து நெஞ்சிலேவந்து புகுந்து தம்முடைய விரோதியைப்போக்கி யநுபவிப்பதாக வத்யாஸந்நனான வவனுடைய வபிநிவேசத்தைக்கண்டு தமக்குப் பிறந்த ஹர்ஷத்தை யருளிச்செய்கிறார்.

ஈடு; அவ:—மாயக்கூத்தனில், ஆழ்வார், தமக்கோடின விடாய் பேச்சுக்கு நிலமாகையாலே பேசினார்; ஈஶ்வரனுக்கோடினவிடாய் பேச்சுக்குநிலமல்லாமையாலேபேசிற்றில்லை; (க)"ஊர்த்வம் மாஸாந்நஜீவிஷ்யே" என்றித்தலையில் விடாய்; (உ) "ந ஜீவேயம் க்ஷணமபி" என்றிறே அத்தலை யிருப்பது.* "மாயக்கூத்த னிவர்க்கோடினவிடாய்க்கு உதவப்பெற்றிலோம்" என்னுமத்தாலேதப்தனாய், ஆகுலனாய், பிற்பாட்

(க) ரா-ஸு-ருஅ கூஅ. (உ) ரா-ஸு. கூகூ-க0

டுக்கு (க) "ஹ்ரீசோஷா ஹிசோ தஸ்யா-ஹ்ரீரேஷாஹி மமாதுலா" என்கிறபடியே லஜ்ஜித்து, "இனிநாம் கடுகமுகங்காட்டில் ப்ரீதியாலே உடைகுலைப்படுவர், ப்ரீதியை ஸாத்மிப்பித்துளராக்கிப் பரிமாற வேணும்" என்று, பதினாலாண்டு பிரிவாலே நொந்த ஸ்ரீ பரதாழ்வானை தரிப்பித்து முகங்காட்டுகைக்காகத் திருவடியைப் போக விட்டு, ஸ்ரீ பரத்வாஜபகவானாஸ்ரமத்திலே யிருந்தாப்போலவும்; பாண்டவர்களுக்காகத் தூதுபோகிறபோது, ப்ரேமபரவசரான விதுராதிகள் ப்ரீதியை யநுஸரிப்படுத்தி முகங்காட்டுகைக்காக, (உ) "கூஸ்ஸ்வே நிவஸதிவ்யூதா தஸ்ய ஹஸ்தி-குஸஸ்த்தலேநிவஸதிஸப்ராதரிஹேஷ்யதி" என்கிறபடியே - குசஸ்த்தலத்திலே விட்டுக்கொண்டிருந்து, பிற்றைநாள் ஹஸ்திநபுரத்திலே யெழுந்தருளினாப்போலவும்; தம்மோடே ஸம்ஶ்லேஷாந்முகனான ஸர்வேஶ்வரன், தம்முடைய ப்ரீதியை ஸாத்மிப்பித்துத் தம்மோடே கலக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே யெழுந்தருளியிருந்து, தம்பக்கல்பண்ணுகிற வ்யாமோஹத்தை யநுஸந்தித்தினிடராய், அத்தைப்பேசி யநுபவிக்கிறார். கீழ்த்திருவாய்மொழியில் வ்யஸந ஹேதுவான நினைவுதானே இப்போது உஜ்ஜீவநமாம்படி பண்ணினான். (ந) * செறுவாரும் நட்பாகுவரிறே செங்கோனருள்பெற்றவாறே

## முதற்பாட்டு.

எல்லியுங்காலையும் தன்னைநினைந்தெழ * நல்லவருள்கள் நமக்கேதந்து அருள்செய்வான் * அல்லியந்தண்ணந்துழாய்முடி அப்பனூர் * செல்வர்கள்வாழும் திருக்கடித்தானமே. (க)

ப:—முதற்பாட்டில், நமக்கு நிரதிஶயோபகாரம்பண்ணவந்த ஸர்வேஶ்வரனானவன் தேசம் திருக்கடித்தானமென்கிறார்

(இ-ள்) எல்லியுங்காலையும் ராத்ரிதிவாவிபாகமில்லாதபடி. தன்னை உபகாரகனான தன்னை, நினைந்து-ஸ்மரித்து, எழ-உஜ்ஜீவிக்கும்படியாக. நிர்ஹேதுகமாகையாலே, நல்ல - விலக்ஷணமான, அருள்கள் - ஆகமநாஸத்யந்தப்ரவேஶவிரோதி நிவர்த்தநாநுபவங்களுக்கடியான நிரவதி

(க) ரா-ரா ஆர கூ-கூ. (உ) பாரத உத்யோ. (ந) திரு-வி உஎ.

கக்ருபைகளை (க) ''தாரேன்பிறர்க்குன்னருளென்னிடை வைத்தாய்'' என்கிறகணக்கிலே, நமக்கே - நமக்கே யஸாதாரணமாக, தந்து-தந்து, மேலுமிடைவிடாமல், அருள்-அருள், செய்வான்-செய்வானாய், 'தாமத் தண்டுழாய்க்கடிசேர் கண்ணிப்பெருமான்'' என்றிவராசைப்பட்டாப் போலே, அல்லி - பூந்தாரையுடைத்தாய், அம்-தர்சநீயமாய், தண்ணம் குளிர்ந்த, துழாய்-திருத்துழாய் மாலையாலே யலங்க்ருதமான, முடி-திருமுடியையுடைய, அப்பன் - ஸேஷியாயுள்ள வுபகாரகனானவனுடைய, ஊர்-அஸாதாரணதேசம், செல்வர்கள் - பகவத்கைங்கர்யஸம்பத்தையுடையரான பாகவதரானவர்கள், வாழும் - அநுபவாவிச்சேதத்தாலே யாநந்திகளாய் வர்த்திக்கிற, திருக்கடித்தானம் - திருக்கடித்தானமாம். (க)

ஆறு:—''ஒருவன் செய்தருளினபடியே'' என்றென்று நினைத்துக் கிடக்கும்படி யருள்செய்தருளினான்; அவ்வருள் தானேதென்றால்; முன்னம் திருக்கடித்தானத்திலேவந்து புகுந்தருளினானென்கிறார். (க)

ஈடு; அவ:—என்னுடையவார்த்தி தீர்த்தருளுவான் ஸர்வேஶ்வரனே, அவனூர் திருக்கடித்தானமென்கிறார்.

( எல்லியுங்காலையுமித்யாதி ) இவ்ராத்ர விபாகமின்றிக்கே யெல்லாக்காலத்திலு முபகாரகனான தன்னை நினைத்துஜ்ஜீவிக்கும்படி. ( நல்லவருள்கள் ) என்குற்றமாதல், தன்ஸார்வஜ்ஞ்யமாதல் பாராதே, தன்பேறாகப் பண்ணினவருள். * மாயக்கூத்தனில் விடாய்க்கருளினானென்றிருக்கிறிலர். (நமக்கேதந்தருள்செய்வான்) ''பலரடியார்முன்பருளிய'' என்கிறபடியே, நித்யஸூரிகளும் தாம்பெற்றபேறு பெற்றிலரென்றாயிற்று நினைத்திருப்பது.

(அல்லியந்தண்ணந்துழாய்முடி) கீழிற்றிருவாய்மொழியிலே-''மொய்பூந்தாமத்தண்டுழாய்க் கடிசேர்கண்ணிப்பெருமானே'' என்றிவராசைப்பட்டபடியே காட்டிக்கொடுத்தான். (ஊர்) இப்படி யுபகாரகனானவன் வர்த்திக்கையாலே நமக்கு ப்ராப்யபூமி திருக்கடித்தானமென்கிறார். (செல்வர்கள்வாழும்) * மாயக்கூத்தனும் * எல்லியுங்காலையுமாகவேண்டாதே, அநுபவத்தோடே காலங்கழிக்கிறவர்கள். (உ) ''[illegible]'' என்கிறபடியே யிருப்பார்சிலர்.

(க) தி-மொ எ க ங.          (உ) ரா பால கஅ உக.

எல்லியுமித்யாதி - அப்பனுனவனூரென்னுதல்; செல்வர்கள் வாழும் - ஊர் - திருக்கடித்தானமென்னுதல்.

அல்லியந்தண்ணந்துழாய் முடியப்பன் - நல்லவருள்கள் நமக்கேதந்தருள்செய்வானென்னுதல். (க)

---

# இரண்டாம்பாட்டு.

திருக்கடித்தானமும் என்னுடைச்சிந்தையும் * ஒருக்கடுத்து உள்ளேஉறையும்பிரான்கண்டீர் * செருக்கடுத்து அன்றுதிகைத்த அரக்கரை * உருக்கெட வாளிபொழிந்தஒருவனே. (உ)

ப:—அநந்தரம், அசேஷவிரோதிநிவர்த்தந ஸமர்த்தனுன சக்ரவர்த்திதிருமகன், திருக்கடித்தானத்தையு மென்னெஞ்சையு மொருபடிப்பட நினைத்து வர்த்திக்கு முபகாரசீலனென்கிறார்.

(இ-ள்) வரபலபுஜபலங்களாலே, செரு-யுத்தத்திலே, கடுத்து-செருக்குமிஞ்சி, அன்று-நீரிலேநெருப்பெழுந்தாப்போலே சீற்றம்விளையும்படி பெருமாளுக்கபராதம்பண்ணினவன்று, திகைத்த - ஆரைவெல்லலாமென்று ப்ரமித்த, அரக்கர்-ராவணுதிராக்ஷஸர், உரு - உருவம், கெட அழிந்துசிந்நமாம்படிக்கீடாக, வாளி ஶரவர்ஷத்தை, பொழிந்த - வர்ஷித்த, ஒருவன்கண்டீர் - ஏகவீரனுனவன்கிடீர், திருக்கடித்தானமும், திருக்கடித்தானமாகிற திருப்பதியையும், அப்படி அபிமதமான, என்னுடை - என் - சிந்தையும் - நெஞ்சையும், ஒருக்கடுத்து ஒருமைப்படப்பிடித்து, உள்ளே இரண்டுக்குள்ளே, உறையும்-வர்த்திக்கிற பிரான்: மஹோபகாரகன்; இரண்டையு மொக்கப்பிடித்து என்னுள்ளே வர்த்திக்கிறவனென்றுமாம். (க)

ஆறு:—(திருக்கடித்தானமும்) பின்னையும் செய்தருளுகிறுன். திருக்கடித்தானத்தையு மென்னெஞ்சையுமொக்கத் தனக்கிருப்பிடமாகக் கொண்டருளினுன். அவனுரென்னில்; செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை யுருக்கெடவாளிபொழிந்த வத்விதீயன் கண்டீரென்கிறார். (உ)

ஈடு; அவ:—என்பக்கல் வருகைக்கு ப்ரதிபந்தகங்களையும் தானேபோக்கி, திருக்கடித்தானத்திலு மென் ஹ்ருதயத்திலு மொக்க வஸிநிவேசித்து என்னுள்ளே வர்த்தியாநின்றுனென்கிறார்.

(ஒருக்கடுத்து) ஒருங்கவடுத்து, அதாகிறது -ஒக்க நினைக்கை. திருக்கடித் தானத்தையும் என் ஹ்ருதயத்தையு மொக்க விரும்பி. (உள்ளே யுறையும்) மநஸ்ஸிலே நித்யவாஸம் பண்ணுகின்றான் விரோதிசெய்ததென்னென்ன; அது ராக்ஷஸர் பட்டது பட்டது (செருக்கடுத்து) யுத்தகண்டூதிவர்த்தித்து, (அன்று) (க) "௩௩ஸெயடு-௩௩மேயம்" என்றவன்று. (திகைத்தவரக்கரை) சக்ரவர்த்திதிருமகனை வெல்லலாமென்று நினைத்த மதிகேடரான ராக்ஷஸரை, (உருக்கெட) (உ) "ஸிஷஂஸிஷஂஸஂரொ ஹுடி-ஸிக்நம்பிக் நம்ஸரைர்த்தக்தம்" (வாளிபொழிந்த) (௩) "ஸரவஷஂவவஷஹ-ஸரவர்ஷம் வவர்ஷஹ" என்கிறபடியே, (ஒருவன்) ஏக வீரனானவன்

---

# மூன்றாம்பாட்டு.

ஒருவர் இருவர் ஓர்மூவரேனநின்று * உருவுகரந்து உள்ளுந்தோறும் தித்திப்பான் * திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை * மருவியுறைகின்ற மாயப்பிரானே. (௩)

ப:—அநந்தரம், பராக்ரமைஶ்வர்யத்தாலே வீரஸ்ரீ விஶிஷ்டனானவன், திருக்கடித்தானத்திலே ஸந்நிஹிதனாய், எனக்கு போக்யபூதனாயிராநின்றானென்கிறார்.

(இ-ள்.) மூலபலநிரஸநத்தில் பராக்ரமைஶ்வர்யத்தாலே ஒருவர்-ப்ரதமமொருவராய், இருவர்-பின்னையிருவராய், மூவரென பின் மூவரென்னும்படி, நின்று-நின்று, ஓர்-அத்விதீயமான, உருவு-ரூபம், கரந்து இலக்குக் குறிக்கவொண்ணாதபடி இந்த்ரிய விஷயமாய்க்கொண்டு உருக்கெட வாளிபொழிந்த வொருவனானவன் அந்த வீரஸ்ரீயோடே வந்தானென்னும்படி. திரு-லக்ஷ்மியை, அமர்மார்வன் - திருமார்பிலேயுடையனாய்க்கொண்டு, திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை, மருவி பொருந்தி, உறைகின்ற-நித்யவாஸம் பண்ணுகிற, மாயப்பிரான்-ஆஶ்சர்யோபகாரகனாய், உள்ளுந்தோறும்-நினைக்குந்தோறும் தித்திப்பான்-இனியனாகாநின்றான். (௩)

---

(க) ரா-யு-௩௬ ௧௧. (உ) ரா-யு ௯௪ ௨௨.
(௩) ரா-யு-௯௪-௧அ.

ஆறு:—(ஒருவர்) பின்னையுமொருவரா யிருவராய் மூவராய்த் தோன்றி, உருவுதெரியாதபடி வந்து வாளிபொழிந்தவனென்று அவன் செயலையே யநுபவித்து, அதுக்குமேல், இன்று திருக்கடித் தானத்திலு மென்னெஞ்சிலும் பிராட்டியோடே கூடவந்து புகுந் தருளினனென்கிறார். (ங)

ஈடு; அவ:—பிராட்டியோடு கூடத் திருக்கடித்தானத்திலே நித்யவாஸம் பண்ணுகிற வாஸ்சர்யபூதனை வுபகாரகன் அநுஸந்திக் குந்தோறு மினியனாகாநின்றானென்கிறார்.

(ஒருவரித்யாதி) வாளிபொழிந்தபடி யெங்ஙனேயென்ன; இங் ஙனேயென்கிறார்.

(ஒருவரிருவரோர் மூவரேன நின்றுருவுகரந்து) ஒருவராய்த் தோன்ற, இருவராய்த்தோன்ற,மூவராய்த்தோன்ற, பின்னை இந்த் ரியார்த்த ஸம்யோகமில்லாதபடி சாரிகைவந்து, ஒருவரிருவரோர் மூவரென-நின்று உருவுகரந்து-செருக்கடுத்தன்று திகைத்த வரக் கரை யுருக்கெட வாளிபொழிந்த வொருவன் - திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையு மொருக்கடுத்துள்ளே யுறையும்பிரான் கண் டீரென்று கீழிற்பாட்டோடே அந்வயமாகக்கடவது.

(திருவமர்மார்வன்) (க) "நகஸ்ரீஜாவராய ...தி-நகஸ்சிந்தா பாரத்யதி" என்னும் பிராட்டியோடே கூடவாயிற்று வந்தது. (திரு வமர்மார்வன் திருக்கடித்தானத்தை மருவியுறைகின்ற மாயப் பிரான் - உள்ளுந்தோறுந்தித்திப்பான்) பெரியபிராட்டியார் நித்ய வாஸம்பண்ணுகிற திருமார்வையுடையனாய், திருக்கடித்தானத்தை மருவியுறையாநின்றுகொண்டு என்பக்கலிலே யாஸ்சர்யமாம்படி ப்ர வணனானவன், அநுஸந்திக்குந்தோறும் புதியனாயினியனாகாநின்றான்

---

## நான்காம்பாட்டு.

மாயப்பிரான் எனவல்வினைமாய்ந்தற * நேசத்தினல் நெஞ்சம் நாடுகுடிகொண்டான் * தேசத்தமரர் திருக்கடித்தானத்தை * வா சப்பொழில் மன்னுகோயில் கொண்டானே. (ச)

(க) ரா யு-கககூ-சச.

ப:—அநந்தரம், திருக்கடித்தானத்தை வாஸஸ்த்தாநமாக ஸ்வீகரித்தவன், என்னுடைய ப்ரபலபாபங்களைப் போக்குகைக்காக நெஞ்சுக்குள்ளே நித்யவாஸம்பண்ணுகின்றுனென்கிறார்.

(இ ள்.) தேசம்-நிரதிஶயதேஜஸ்விகளான, அமரர்-ஸூரிகளுக்கு ப்ராப்யமாய், வாசம்-பரிமளோத்தரமான, பொழில்-பொழில், மன்னு சேர்ந்த, திருக்கடித்தானத்தை-திருக்கடித்தானத்தை, கோயில்-கோயிலாக, கொண்டான்-கொண்ட, மாயப்பிரான்-ஆஶ்சர்யோபகாரகனானவன், என்-என்னுடைய, வல்-ப்ரபலமான-வினை-பாபங்கள்-மாய்ந்தற நசித்துப்போம்படியாக-நேசத்தினால்-என்பக்கல் ஸங்காதிஶயத்தாலே நெஞ்சம் - என்னெஞ்சாகிற, நாடு-விஸ்தீர்ணபூமியை, குடி - தனக்குக் குடியிருப்பாக, கொண்டான்-கொண்டான். (ச)

ஆறு:—(மாயப்பிரான்) இவன் திருக்கடித்தானத்தைக் காட்டிலு மென்னெஞ்சிலே, வல்வினைகள் தீரும்படி ஸ்நேஹத்தைப் பண்ணிக்கொண்டு குடியாக விருந்தருளினுனென்கிறார். (ச)

ஈடு ; அவ:—திருக்கடித்தானத்தைப் பகலிருக்கை மாத்ரமாகக் கொண்டு, ஸங்காதிசயத்தாலே என்னெஞ்சையே நிரந்தரவாஸஸ்த்தாநமாகக் கொண்டானென்கிறார்.

• (மாயப்பிரான்) ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடைய வுபகாரகன் ( எனவல்வினைமாய்ந்தற ) தன்னைப் பிரிந்து நான்பட்ட க்லேசமெல்லாம் நசித்துப்போம்படி, * மாயக்கூத்தனில் * காணவாராயென்றென்று கண்ணும்வாயும் துவர்ந்து பட்டவிடாயெல்லாம் வாஸனையோடே போம்படி, ( நேசத்தினல் ) தானென்பக்கல்பண்ணின ஸங்கத்தாலே, (நெஞ்சநாடு) ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே பொரு த்ரிபாத்விபூதிபோலே யாக்கினாயிற்று இவர் திருவுள்ளத்தை ( குடிகொண்டான்) ஸபரிகரமாக நித்யவாஸம்பண்ணுகின்றான்; (க) * அரவத்தமளிப்படியே.

(தேசத்தமரர் திருக்கடித்தானத்தை) நித்யாநுபவம் பண்ணுகையாலுண்டான தேஜஸ்ஸையுடைய நித்யஸூரிகளுக்கு ப்ராப்யமானதிருக்கடித்தானத்தை, ( வாசப்பொழில்மன்னு ) வாசத்தையுடைய பொழிலோடேகூடின, தேசத்தமரர் திருக்கடித்தானத்தை- கோயில்கொண்டான் - நேசத்தினல் நெஞ்சம்நாடுகுடிகொண்டான்.

---

(க) பெரியா தி-உ கO.

## ஐந்தாம்பாட்டு.

கோயில்கொண்டான்தன் திருக்கடித்தானத்தை * கோயில் கொண்டான் அதனோடுமென்னெஞ்சகம் * கோயில்கொள் தெய்வ மெல்லாந்தொழ * வைகுந்தம் கோயில்கொண்ட குடக்கூத்த அம்மானே. (ரு)

ப:—அநந்தரம், ப்ராப்யமான பரமபதத்திலே வர்த்திக்கிறவன்-திருக்கடித்தானத்தோடே யென்னெஞ்சை வாஸஸ்த்தாநமாகக் கொண்டானென்கிறார்.

(இ-ள்) கோயில்கொள் - விலக்ஷணவிமாநோபேதரான, தெய்வமெல்லாம்-நித்யஸூரிகள், தொழ-தொழும்படியாக, வைகுந்தம்-ப்ராப்யதேசபரமபதத்தை, கோயில்-வாஸஸ்த்தாநமாக கொண்ட - உடையனாய், ஆஶ்ரிதார்த்தமாக வவதரித்து, குடக்கூத்த - குடக்கூத்தாகிற மநோஹாரிசேஷ்டிதத்தை யுடைய, அம்மான் - க்ருஷ்ணனான ஸ்வாமியானவன், திருக்கடித்தானத்தை-திருக்கடித்தானத்தை, தன்கோயில் தனக்கஸாதாரணதேசமாக, கொண்டான்-ஸ்வீகரித்துக்கொண்டு, அதனோடும் - அதுதன்னோடே, என் - என், நெஞ்சையும், கோயில்-தனக்குக் கோயிலாக, கொண்டான் - கொண்டான். -(ரு)

ஆறு:—(கோயில்கொண்டான்) அங்குமிங்குமா யிருந்தருளுகை யன்றியே, ஸ்நேஹாதிஶயத்தாலே திருக்கடித்தானத்தையுங் கொண்டு, என்னெஞ்சினுள்ளே புகுந்தருளினானென்கிறார். (ரு)

ஈடு; அவ:—என்பக்கல் ப்ரேமாதிசயத்தாலே திருக்கடித்தானத்தோடே கூட என்ஹ்ருதயத்திலே புகுந்தருளினானென்கிறார்.

(கோயில்கொண்டானித்யாதி) திருக்கடித்தானத்தைத் தனக்கஸாதாரணமான கோயிலாகக்கொண்டான். (கோயிலித்யர்தி) "செருப்புவைத்துத் திருவடிதொழுவாரைப்போலே யாகவொண்ணாது" என்று, திருக்கடித்தானத்தோடே கூடவந்து என்னெஞ்சிலே புகுந்தருளினான்.

(கோயில்கொளித்யாதி) ஓரோ கோயில்களுண்டாயிருக்குமிறே, திருவடி, திருவநந்தாழ்வான் ஸேநைமுதலியா ரிவர்களுக்கு; அவர்கள் தொழும்படி ஸ்ரீ வைகுண்டத்தைத் தனக்குக் கோயிலா

கக்கொண்ட ஸர்வேஶ்வரன், க்ருஷ்ணனுய்வந் தவதரித்துக் குடக்கூத்தாடி அந்தஸ்ரமமாறும்படி திருக்கடித்தானத்தை - கோயில் கொண்டான்; அத்தோடேகூட வென்ஹ்ருதயத்தை - தனக்குக் கோயிலாகக்கொண்டான்; (க) "அழகியபாற்கடலோடும்" என்கிற படியே, திருக்கடித்தானத்தில் நிலை யென்னைப் பெறுகைக் காகையாலே, ஸாத்யம் கைப்பட்டால் ஸாதநத்தி லிழிவாரில்லையாயிருக்க, "என்னைப்பெற்றது அத்தேசத்திலே நிற்கையாலே" என்று அத்தேசத்தோடே வந்து புகுந்தான். (ஒ)

---

## ஆறும்பாட்டு.

கூத்தஅம்மான் கொடியேனிடர்முற்றவும் * மாய்த்த அம்மான் மதுசூதவம்மானுறை * பூத்தபொழில் தண்திருக்கடித்தானத்தை * ஏத்தநில்லா குறிக்கொண்மின்இடரே. (சு)

ப:—அநந்தரம், விரோதி நிரஸநஸ்வபாவனனவன் வர்த்திக்கிற தேசந்தானே விரோதியைப் போக்குமென்கிறார்.

(இ-ள்.) கூத்த-மநோஹாரிசேஷ்டிதங்களாலே, அம்மான்-லோகத்துக்கு ஸ்வாமியாய், கொடியேன் - "காணவேணும்" என்று பலகாலும் நிர்ப்பந்தித்துக் கூப்பிட்ட கொடுமையை யுடைய வென், இடர்-நெஞ்சுதுக்கத்தை' மாய்த்த-போக்கி, அம்மான் - அடிமைகொண்டவனாய், ஆஶ்ரிதவிரோதியை மதுசூதன் - மதுவை யழித்தாப்போலே யழிக்கும், அம்மான்-ஸ்வாமியானவன், உறை-வர்த்திக்கும் தேசமாய், பூத்த-புஷ்பஸம்ருத்தமான, பொழில் - பொழிலையுடைய, தண்-குளிர்ந்த, திருக்கடித்தானத்தை - திருக்கடித்தானத்தை, ஏத்த-ஸ்தோத்ரம்பண்ணின வளவிலே இடர்-துக்கங்கள், முற்றவும் எல்லாம் நில்லா-நிலைகுலைந்துபோம் குறிக்கொண்மின் - இத்தைக் குறிக்கொள்ளுங்கோள். (சு)

ஆறு:—(கூத்தவம்மான்) இஸ்ஸம்ருத்தியெல்லாம் திருக்கடித்தானத்தை யாஶ்ரயித்ததினாலே வந்ததென்னும் ப்ரீதியாலே, மது கைடபாதி ப்ரதிகூலநிரஸநம் பண்ணினாப்போலே, ஸ்வகீயகுண

(க) பெரியாழ்-தி-ஒ-உ-கக.

சேஷ்டிதா விஷ்காரத்தாலே ஸ்வவிஸ்லேஷஜநிதமான வென்னுடைய துக்கத்தைப் போக்கியருளினவனுறைகின்ற திருக்கடித்தானத்தையேத்த வாருங்கோளென்று ஸ்ரீ வைஷ்ணவர்களை யழைத்துக்கொண்டு, அவர்களோடேகூட வேத்திபுஜிக்கிறார். (சு)

ஈடு ; அவ:—தம்முடைய ப்ரீதிப்ரகர்ஷத்தாலே. திருக்கடித்தானத்தை யெல்லாருமாஸ்ரயியுங்கோ ளென்கிறார்.

( கூத்தவம்மான் ) மநோஹாரியான சேஷ்டிதங்களையுடைய ஸர்வேஸ்வரன், ( கொடியேன் ) மஹாபாபியான வென்னுடைய. ( இடர்முற்றவும்மாய்த்தவம்மான் ) தன்னைப்பிரிந்து நான்பட்ட க்லேசத்தையெல்லாம் வாஸநையோடேபோக்கின வென்ஸ்வாமி, (மதுசூதனித்யாதி) ப்ரதிகூலநிரஸந ஸ்வபாவனான ஸர்வேஸ்வரன் நித்யவாஸம்பண்ணுகிற தேசம்.

(பூத்தபொழில்) அவன் நித்யவாஸம்பண்ணுகையாலே நித்யவஸந்தமானபொழில், கடாக்ஷவர்ஷம் மாறிலிறே பூமாறுவது; ஸ்ரமஹரமான திருக்கடித்தானத்தை, (ஏத்தநில்லா-இடர்) இனியத்தைச்செய்ய, இடரானது "நமக்கிதுதேசமன்று" என்று * சும்மெனுதேகைவிட்டோடும். (குறிக்கொண்மின்) இத்தை "ஓலக்கவார்த்தை" என்றிராதே, புத்திபண்ணுங்கோள். (சு)

---

## ஏழாம்பாட்டு.

கொண்மின் இடர்கெட உள்ளத்துக்கோவிந்தன் * மண்விண் முழுதும் அளந்த ஒண்தாமரை * மண்ணவர்தாம்தொழ வானவர் தாம்வந்து * நண்ணு திருக்கடித்தானநகரே. (எ)

ப:—அநந்தரம், அவனுடைய தேசஸ்ம்ருதிமாத்ரமே விரோதிநிவர்த்தகமென்கிறார்.

( இ-ள். ) கோவிந்தன் - ஸர்வஸுலபனான வௌஜ்ஜ்வல்யத்தையுடையவனுடைய, மண்-பூமியையும், விண் - ஊர்த்வலோகத்தையும், முழுதும்-ஒன்றொழியாமல், அளந்த-அளந்துகொண்ட, ஒண்-நிரதிஸய போக்யமான, தாமரை-திருவடித்தாமரைகளை, மண்ணவர் பூமியிலுள்ளார்; தாம்-தங்களுக் கஸாதாரணபோக்யமென்று, தொழ-தொழாநிற்க

வானவர்-நித்யாநுபவம்பண்ணுகிற பரமபதவாஸிகள், தாம்-தாங்களும் வந்து-ஶீலாதிக்யமநுபவிக்கைக்குவந்து. நண்ணு-ப்ராபிக்கும்படியான திருக்கடித்தானம் திருக்கடித்தானமாகிற, நகரை - நகரத்தை, இடர்-து:கமெல்லாம். கெட-போகும்படியாக, உள்ளத்து-நெஞ்சிலே, கொண்மின்-கொள்ளும்படிபாருங்கோள். (எ)

ஆறு:—(கோண்மின்) கோவிந்தனுடைய மண் விண் முழுது மளந்த வொண்டாமரையை மண்ணவர் தாம் தொழுகிறபடியைக் காண்கைக்காக வானவர் தாம்வந்து நண்ணு திருக்கடித்தான நகரை நினையுங்கோள், இடர்கெடுமென்கிறார். (எ)

ஈடு; அவ:—உங்கள் து:க்கநிவ்ருத்திக்கு ஏத்தவேண்டா, திருக்கடித்தானத்தை நெஞ்சாலே நினைக்க வமையுமென்கிறார்.

(கோண்மினித்யாதி) உங்கள் ஸமஸ்தது:கங்களும் போம்படியான திருக்கடித்தானத்தை மநஸ்ஸாலே நினையுங்கோள். (கோவிந்தன்) ஸர்வஸுலபனானவனுடைய, (மண்விண்முழுதுமளந்தவொண்டாமரை) ஒரு தாமரைப்பூவைக்கொண்டாயிற்று பூம்யந்தரிக்ஷங்களை யளந்துகொண்டது.

(மண்ணவர்தாந்தொழ) இடக்கைவலக்கையறியாத பூமியிலுள்ளார் தொழ; பரமபதம் நித்யர்க்கேயா யிருக்குமாபோலே, உகந்தருளின தேஶம் ஸம்ஸாரிகளுக்கேயாயிருக்கை. (வானவரித்யாதி) ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுத்துக்கொடுநிற்கிற நீர்மையை யநுஸந்தித்து, நித்யஸூரிகளும் வந்துகிட்டுகிறதேசத்தை-கொண்மினிடர் கெடவுள்ளத்து. இங்குள்ளாரங்குப்போவது மேன்மையை யநுபவிக்க; அங்குள்ளாரிங்குவருவது ஶீல குணாநுபவம் பண்ணுகைக்கு. (எ)

---

## எட்டாம்பாட்டு.

தானநகர்கள் தலைச்சிறந்துஎங்கேங்கும் * வானிந்நிலம்கடல் முற்றும் எம்மாயற்கே * ஆனவிடத்தும் என்னெஞ்சும்திக்கடிருத் தானநகரும் * தனதாயப்பதியே. (அ)

ப:—அநந்தரம், பரமபதாதி ஸர்வப்ரதேஶத்திலும் ஶ்லாக்யமான ஸ்தாநங்களுண்டாயிருக்க என்னெஞ்சும் திருக்கடித்தானமும் அவனுக்கஸாதாரண தேஶமாகாநின்றதென்கிறார்.

கடுஉ திருவாய்மொழி, அ-ப, கூ-தி, கூ-பா, தாயப்பதிகள் வ்யாக்யாநம்.

(இ-ள்.) வான்-பரமபதம், இ-இந்த, நிலம்-பூமி, கடல் - க்ஷீரார்ணவங்களாகிற, எங்கெங்கும், எல்லாவிடத்திலும், தானம்,-ஆவாஸஸ்தாநமான, நகர்கள்-நகரங்கள், முற்றும் - முற்றவும், தலை - தலைப்பட்ட, சிறந்து சிறப்பையுடைத்தாய்க்கொண்டு, எம் மாயற்கே-எனக்காஸ்சர்யபூதனானவனுக்கே, ஆன விடத்து-ஆயிருக்கச்செய்தேயும், என் என்னுடைய, நெஞ்சம்-நெஞ்சம், திருக்கடித்தானம் - இங்கிருக்கைக்காக வந்து ஸந்நிஹிதனான திருக்கடித்தானமாகிற, நகரும் நகரமும், தனதனக்கு, தாயம் தாயப்ராப்தமான, பதியே அஸாதாரணதேஶமாயிரா நின்றது. (அ)

ஆறு:—(தானநகர்கள்) இப்படி திருக்கடித்தானத்தை யநுபவித்து, பின்னையும் தன் திறத்துச்செய்தருளின நன்மையைச் சொல்லுகிறார்.

உம்முடையநெஞ்சும், திருக்கடித்தானமும் எம்பெருமானுக்கிருப்பிடமாகச் சொன்னீர், வானிந்நிலங்கடல்முற்றும் அவனுக்கிருப்பிடமல்லவோ வென்னில்; அங்ஙனேயாகிலும் என்னெஞ்சும் திருக்கடித்தானமும் அவனுக்குப்பிறந்துடைய திருநகரியாயிருக்குமென்கிறார். (அ)

ஈடு ; அவ:—அவனுக்கு விலக்ஷணமானநகரங்கள் பலவுமுண்டாயிருக்கச் செய்தேயும், என்னுடையநெஞ்சையும் திருக்கடித்தானத்தையும் தாயப்ராப்தமான ஸ்த்தாநமாக விருப்பியிருக்குமென்கிறார்.

(தானநகரித்யாதி) (வானிந்நிலங்கடல்-எங்கெங்தும் - தலைச்சிறந்த-தானநகர்கள்-முற்றுமெம்மாயற்கேயானவிடத்தும்) மேலில் லோகங்களிலும், பூமியிலும், கடலிலும், கண்டவிடமெல்லாம் மிகவும் ஶ்லாக்யமான விருப்பிடமான நகரங்கள்முற்றும், என்பக்கலிலே அபிநிவிஷ்டனான வாஶ்சர்யபூதனுக்கு (ஆனவிடத்தும்) ஆயிருக்கச் செய்தேயும், என்னெஞ்சும் திருக்கடித்தானநகரும் தனக்கு தாயப்ராப்தமான ஸ்த்தாநமாக விரும்பியிராநின்றான். (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

தாயப்பதிகள் தலைச்சிறந்துஎங்கெங்கும் *மாயத்தினால் மன்னி வீற்றிருந்தானுறை * தேசத்தமரர் திருக்கடித்தானத்துள் * ஆயர்க்கதிபதி அற்புதன்தானே. (கூ)

ப:—அநந்தரம், திருக்கடித்தானத்திலே நித்யவாஸம்பண்ணுகிற வாஶ்சர்ய பூதக்ருஷ்ணன்றனே அல்லாத ஸ்த்தலங்களிலுமிருந்தானென்கிறார்.

(இ-ள்.) தேசம்-தேஜஸ்விகளான, அமரர்-நித்யஸூரிகளுக்கு ப்ராப்யமான, திருக்கடித்தானத்துள்-திருக்கடித்தானத்துள்ளே, உறை, வர்த்திக்குமவனாய், ஆயர்க்கு கோயர்களுக்கு, அதிபதி-நிரவதிக ஸ்வாமியான, அற்புதன்றன் - ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களை யுடையவன்றன், தாயம்-அஸாதாரணமான, பதிகள் - அர்ச்சாஸ்த்தலங்கள், எங்கெங்கும்-எல்லாவிடத்திலும், தலை-தலைப்பட்ட, சிறந்து-சீலாதிகுண ஸம்பத்தை யுடையவனாய்க்கொண்டு, மாயத்தினால்-ஆஶ்சர்யஸௌந்தர்யாதி விக்ரஹகுண விஶிஷ்டனாய், மன்னி-பொருந்தி, வீற்று பரவ்யூஹாதிகளிற்காட்டில் தன்னுடைய வ்யாவ்ருத்தி தோன்றும்படியாய், இருந்தான்-இருந்தவன். (௧)

ஆறு:—(தாயப்பதிகள்) எல்லாமவனுக்குத் தாயப்பதிகளன்றோவென்னில்; அதப்படியேயாகிலும் திருக்கடித் தானமென்றால் அவன் திருவுள்ளம் விழுந்துகிடக்கும்படி யாஶ்சர்யமென்கிறார்.(௧)

ஈடு; அவ:—அல்லாத திருப்பதிகளு மெல்லாம் அவனுக் கப்படியேயன்றோவென்னில்; அதப்படியேயாகிலும் "என்றேட்டைக் குறிப்பானநிலம்" என்று திருக்கடித்தானத்திலே அத்யபிநிவிஷ்டனானென்கிறார்.

(தாயப்பதிகளித்யாதி) (தலைச்சிறந்த - தாயப்பதிகள் - எங்கெங்கும்) மிகவும் விலக்ஷணமாய்ப் பழையதாய்வருகிற ஸ்த்தாநங்களெங்கும். (மாயத்தினால்) அபிநிவேஶத்தாலேயென்னுதல், இச்சையாலே யென்னுதல். (க) "ஶாயாவயுநம் ஜ்ஞாநம்-மாயாவயுநம் ஜ்ஞாநம்" (மன்னிவீற்றிருந்தான்) விரும்பி, தன்னைஶ்வர்யமெல்லாந் தோற்றும்படி யிருந்தருளினவன். ஐஶ்வர்யத்தால்வந்த வேறுபாடு தோற்ற விருந்தவனென்றுமாம். (உறை) நித்யவாஸம்பண்ணுகிற.

(தேசத்தமரர்) தேஜஸ்ஸையுடைய நித்யஸூரிகளுக்கு ப்ராப்யபூமியான திருக்கடித்தானத்துள். (ஆயர்க்கதிபதி) கோபஸஜாதீயனாய்வந்தவதரித்து, அவர்களில் தலைவனானவன் (அற்புதன்) ஆஶ்

(க) வேதநிகண்டு.

சர்யமானபடிகளையுடையவன். உகந்தருளின தேசங்களெல்லாவற்றிலும் விருப்பமுண்டாகிலும், என்னை லபிக்கைக்காகத் திருக்கடித்தானத்திலே, தன்மேன்மையும் நீர்மையுமெல்லாம் ப்ரகாசிக்க நின்றானென்கை. (௯)

## பத்தாம்பாட்டு.

அற்புதன்நாராயணன் அரிவாமனன் * நிற்பதுமேவி இருப்பது என்னெஞ்சகம் * நற்புகழ்வேதியர் நான்மறைநின்றதிர் * கற்பகச்சோலைத் திருக்கடித்தானமே. (௧௦)

ப:—அநந்தரம், ஆஸந்நமான திருக்கடித்தானத்தில் நிற்கிறது என்னெஞ்சிலே பொருந்தி வர்த்திக்கைக்காக வென்கிறார்.

(இ-ள்) அற்புதன்-அநுபாவ்யமான வாஸ்சர்ய சேஷ்டிதங்களையுடையனாய், நாராயணன்-அதுக்கநுரூபமான ஸம்பந்தத்தை யுடையனாய், அரி-அநுபவ விரோதிநிரஸநஸீலனாய், வாமனன்-அர்த்தியாய்வந்தநுபவிப்பிக்குமவன், மேவி-பொருந்தி, இருப்பது-இருப்பது, என்-என், நெஞ்சகம்-நெஞ்சுக்குள். நிற்பது-அதுக்குறுப்பாகவந்து நிற்பது, நற்புகழ்-அநந்ய ப்ரயோஜநத்வ ப்ரதையையுடையரான, வேதியர்-வைதிகருடைய, நால்-நாலு, மறை-வேதங்களும், நின்று, அதிர்-முழங்கும்படியாய், கற்பகம் - கல்பகமயமான, சோலை - சோலையையுடைத்தான, திருக்கடித்தானம்-திருக்கடித்தானம். (௧௦)

ஆறு:— (அற்புதன்) இப்படி திருநாடு, திருப்பாற்கடல் தொடக்கமாகவுள்ள திருநகரிகளெல்லாவற்றிலும் அத்யந்த அபிமதமாயிருந்த திருக்கடித்தானத்திலே நிற்பது மேவியிருப்ப தென்னெஞ்சகமென்கிறார். (௧௦)

ஈடு ; அவ:—என்னைப்பெறுமளவும் திருக்கடித் தானத்திலே நின்றான்; என்னைப்பெற்றபின்பு நிற்பது மிருப்பது மென்னெஞ்சிலேயென்கிறார்.

(நாராயணன்) தன்னுடைமையை விட்டுக்கொடாதவத்ஸலன். (அரி) ஆஸ்ரிதவிரோதிநிரஸநஸமர்த்தன். (வாமனன்) தன்னைச் சிறுகவிட்டு ஆஸ்ரிதருடைய ஸர்வாபேக்ஷிதங்களையும் முடிக்குமவன் (அற்புதன்) இப்படிகளாலே யாஸ்சர்யபூதன்.

(நற்புகழித்யாதி) அநங்யப்ரயோஜநரென்னும் புகழையுடைய வைதிகராலே யுச்சரிக்கப்பட்ட நாலு வேதங்களாலும் முழங்கா நின்றுள்ள கல்பகவநத்தையுடைய திருக்கடித்தானத்திலே - அவன் நிற்பது; மேவியிருப்பதென்னெஞ்சகமென்னுதல்;

திருக்கடித்தானத்து - நாராயணன் அரிவாமனன் - அற்புதன்- நிற்பதும் - என்னெஞ்சகம், மேவியிருப்பதும் - என்னெஞ்சகமென்னுதல். திருக்கடித்தானமென்று - ஸப்தம்யர்த்தே ப்ரதமை. (க0)

---

## பதினொன்றாம்பாட்டு.

சோலைத்திருக்கடித்தானத்து உறைதிருமாலை*மதிள்குருகூர்ச் சடகோபன்சொல் * பாலோடமுதன்ன ஆயிரத்து இப்பத்தும் * மேலைவைகுந்தத்து இருத்தும்வியந்தே. (கக)

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பரமபத ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) சோலை-சோலைகளையுடைய, திருக்கடித்தானத்து-திருக்கடித்தானத்திலே, உறை - நித்யவாஸம்பண்ணுகிற, திருமாலை - ஸ்ரியஃபதியைப்பற்ற, மதிள்-அரணான மதிளையுடைய, குருகூர்-திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன்-ஆழ்வாருடைய, சொல்-சொல்லாய்,வாச்யவாசக ஸம்ஸ்லேஷத்தி னினிமையாலே, பாலோடமுதன்ன- பாலுமமுதுங் கலந்தாப்போலே யிருக்கிற, ஆயிரத்து-ஆயிரந்திருவாய்மொழியில், இப்பத்தும்-இப்பத்தும், மேலை-உத்துங்கதேசமான,வைகுந்தத்து ப்ரமபதத்திலே,இத்திருவாய்மொழியில் ஸம்பந்தமுடையாரை,வியந்து உகந்து, இருத்தும்-ப்ரதிஷ்டிதராக்கும். (கக)

ஆறு:—(சோலை) சோலைத்திருக்கடித்தானத்துறை திருமால் கவிக்குப்ரதிபாத்யன். மதிள்குருகூர்ச்சடகோபன் கவிபாடுகிறானாகில் இவை யெங்ஙனேயிருக்கிறன. இவைவல்லாரை,எம்பெருமானொருக்ஷணம் பிரியில் தரிக்கமாட்டானென்கிறார். (கக)

ஈடு ; அவ:—நிகமத்தில் - இத்திருவாய்மொழி கற்றவர்களை, இது தானே திருநாட்டிலே கொடுபோய் விடுமென்கிறார்.

(சோலையித்யாதி) ப்ரமஹாரமாய் தர்ஶநீயமான சோலையையுடைய திருக்கடித்தானத்திலே நித்யவாஸம்பண்ணுகிற ப்ரியபதியை. (மதிட்குருகூர்) ஸாம்ஸாரிகதுரிதங்களுக்குப் புகவொண்ணாத வரணையுடைய திருநகரி. (சடகோபன்சொல்) (க) "ஏவ-வ ரவரிதஸே-நிரூணீதர-ரகுவரசரிதம்முநிப்ரணீதம்" என்னுமாபோலே.

பாலோடமுதன்னவா யிரமென்னுதல், பாலோடமுதன்ன - இப்பத்தென்னுதல். வாச்யவாசகங்களுடைய சேர்த்தியிருக்கிறபடி. பாலென்கிறது-சோலைத்திருக்கடித்தானத்துறை திருமாலை; அமுதென்கிறது-சடகோபன் சொல்லென்கிற வாசகத்தை. இது-ஆளவந்தார் நிர்வாஹம். (இப்பத்தும்-வியந்து - மேலைவைகுந்தத்திருத்தும்) "ஸம்ஸாரத்திலே யித்தை அப்யஸிப்பாரொருவனுண்டாவதே!" என்று விஸ்மயப்பட்டு, ஸர்வாதிகமான பரமபதத்திலே கொடுபோய்வைக்கும். * மாயக்கூத்தனில் விடாய் நடையாடாத தேசத்திலேவைத்து, ஒருநாளும் பிரியாத வநுபவத்தைக் கொடுக்கும்.

எட்டாம்பத்து ஆறுந்திருவாய்மொழி முற்றிற்று.

---

(க) ரா. பா. உ. சஙு.

ஸ்ரீ

# எட்டாம்பத்து.

## ஏழாந்திருவாய்மொழி.

### இருந்தும்-ப்ரவேசங்கள்.

ப:—ஏழாந்திருவாய்மொழியில், திருக்கடித்தானத்திலே யெழுந்தருளியிருந்த ஸர்வேஶ்வரன், தம்முடைய திருவுள்ளத்திலே ஸமஸ்த விரோதிகளும் கழியும்படி புகுந்து பரிபூர்ணமாக வெழுந்தருளி யிருக்கக்கண்டு; அவன்தானே அர்த்தியாய்ப் புகுந்தபடியையும், அவனுடைய விரோதிநிவர்த்தகத்வத்தையும், அஜ்ஞாந தமோநிரஸநத்தையும் அதுக்கடியான அத்யுஜ்ஜ்வல விக்ரஹயோகத்தையும், ஸுஸ்த்திரஸ்த்திதியையும், அத்தால் பிறந்த அவயவஶோபையையும், அவ்வழகினுடைய அநுபாவ்யத்வாதிஶயத்தையும், நிர்ஹேது கோபகாரத்தையும், அதிஶயிதோபகாரத்தினுடைய அநுஸந்தேயத்வத்தையும், நித்யாநுபாவ்யபரத்வத்தையுமநுஸந்தித்து, ஏவம்பூதனான ஸர்வேஶ்வரன் தன் திருவுள்ளத்தில் புகுந்திருக்கிற அதிஶயிதவ்யாமோஹத்திலே விஸ்மிதராய், "இதுப்ரமமோ, மாயாதிவிகாரமோ" என்று ஶங்கித்து, நம்மளவில் விப்ரலம்பியானென்று தெளிந்து, "இதோருபகாராதிஶயமே!" என்று அத்யந்தம் ஹ்ருஷ்டராகிறார்.

ஈடு; அவ:—இத்திருவாய்மொழியிற் பேற்றுக்கு க்ருஷிபண்ணினபடி கீழுடைய; மேல் - இப்பேற்றுக்கு வேலியாயிருக்கிறது. இத்திருவாய்மொழி தன்னில் செய்கிற தென்னென்னில்!; தாம் அநாதிகாலம் புத்திபூர்வகமாகப் பண்ணிப்போந்த ப்ராதிகூல்யங்களை யடையவிஸ்மரித்து, ஆநுகூல்யம் பிறந்தபின்பு ப்ராமாதிகமாக வுண்டானவற்றைக் காணக் கண்ணிட்டு, தம்முடையபேற்றுக்குத் தாமேயத்நித்து, தமக்குப்பிறந்த விடாய்தீரும்படி ஸம்ஶ்லேஷித்து, இதுதான் இவர்க்கு உபகரித்தானா யிருக்கையன்றிக்கே தன்பேறாயிருக்கிறபடியை யநுஸந்தித்து, "தானே அர்த்தியாய்த் தன்பேறாக வந்து கலந்தவனை நாமிரப்பாளராய்க் கூப்பிட்டவிடமென்செய்தோமானோம்" என்று லஜ்ஜித்து, "ஒருஸம்ஸாரிசேதநன்

பக்கலிலே ஸர்வேஶ்வரன் பண்ணும் விஷயீகார மிருக்கும்படியே யிது!" என்றுவித்தராய்.

(க) "ராவணாவரஜ ஶ்ரீமாந் ராகவாநுஜ:" என்று ராவணன் பின் பிறந்த நாம் ரகுகுலத்திலுள்ளார்க் காளாகப் புகாநின்றோமோ வென்றிருந்தவன், பெருமாள் பாடுநின்றும் அருளப்பாடிட்டு வந்தவாறே, "என்னையே யிப்படிகைக்கொண்டருளுவது, அவன் பின் பிறந்த தண்மை யெங்கேபோயிற்று" என்று, வேரற்றமரம்போலே கூடவந்த நால்வரோடும் திருவடிகளிலேவிழுந்து தறைப்பட்டாப் போலவும் ;

ராமகுணங்கள் நடையாடாத வஶோகவநிகையிலே திருவடி போய்ப்புக்கு (உ)"ஸம்ஶ்ருத்ய ராமநாமாங்கித-ஸம்ப்ரவேஶமதுரம் வாக்யம்" என்று, பிராட்டியுள்ளாம்படி ராமநாம ஸங்கீர்த்தநத்தைப் பண்ண, இந்நிலத்திலிது பரிமாறுவதொன்றல்ல, (ந) "கிம் நு ஸ்யாச்சித்தமோஹோயம் பவேத்வாதகதிஸ்த்வியம் ! உந்மாதஜோ விகாரோ வா ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா-இந்நுஸ்யாச்சித்த மோஹோ யம்பவேத்வாதகதிஸ்த்வியம் | உந்மாதஜோவிகாரோவா ஸ்யாதியம் ம்ருகத்ருஷ்ணிகா" என்று இது சித்தமோஹத்தால் வந்ததோ, வாதகதியோ, உந்மாதஜவிகாரமோ, ம்ருகத்ருஷ்ணிகையோ" என்று பலபடிகளைச்சங்கித்து, முன்னேநின்று வார்த்தைசொல்லாநின்றான், இதுகேட்டு நாம் விக்ருதராகிறமையு முண்டு, ஆனபின்பு இதுமெய்யாமித்தனை" என்று ஸ்ரீஜநகராஜன் திருமகள் தெளிந்து ஹ்ருஷ்டையானாப்போலவும் ;

இவரும், "இதுவும்ப்ரமஸ்வப்நாதிகளிலேயொன்று" என்று ஶங்கித்து, "அங்ஙனல்ல, மெய்" என்று தெளிந்து ப்ரீதராய், "நமக்கு அத்வேஷத்தைப் பிறப்பித்து, ஆபிமுக்யத்தையுண்டாக்கி தன்னாலல்லது செல்லாமையைப் பிறப்பித்து, தன் மேன்மைபாராதே யிப்படி தாழநின்று வந்து கலந்து பரிமாறுவதே! இதென்ன வாஶ்ரிதபாரதந்த்ர்யம், இதென்னநீர்மை!" என்று அவன்படிகளை யநுஸந்தித்து ஹ்ருஷ்டராகிறார்.

---

(க) ரா-யு-கக-க. (உ) ரா-ஸு-௩-௩க-க. (ந) ரா-ஸு-௩௩-உ௩.

# முதற்பாட்டு.

இருத்தும்வியந்து என்னைத் தன்பொன்னடிக் கீழென்று *
அருத்தித்து எனைத்தோர்பலநாளழைத்தேற்கு * பொருத்தமுடை
வாமனன் தான்புகுந்து*என்தன் கருத்தையுற வீற்றிருந்தான்கண்டு
கொண்டே. (க)

ப:—முதற்பாட்டில், நானர்த்தியாய்க் கூப்பிட்டழைத்த விடா யெல்லாந் தீரும்படி தானர்த்தியாய், என்னெஞ்சிலே பெறாப்பேறு பெற்றானாகப் புகுந்திருந்தானென்கிறார்.

(இ-ள்.) என்னை-தன்னையொழியச் செல்லாமையையுடையேனான வென்னை, என்ப்ராவண்யாதிசயத்தைக்கண்டு, வியந்து-விஸ்மிதனாய், தன்-தன்னுடைய, பொன்-நிரதிசயபோக்யமான, அடிக்கீழ்-திருவடிகளின்கீழே, இருத்தும்-இருத்தும், என்று-என்று, அருத்தித்து-அர்த்தித்து, எனைத்தோர்-அநேககாலம், பலநாள்-ஒருபடிப்பட நாள்தோறும், அழைத்தேற்கு-அழைத்துக்கூப்பிட்டவெனக்கு, தான்-தான், பொருத்தம்-ப்ராவண்யம். உடை-உடையனான, வாமனன்-வாமநனாய்க்கொண்டு புகுந்து மஹாபலியஜ்ஞவாடத்துக்குப்-போனாப்போலே தானேவந்து புகுந்து, என்றன்-என்னுடைய. கருத்தை - அர்த்தித்வவிசிஷ்டமான நெஞ்சிலே, உற-ஸுஸ்த்திரமாம்படிக்கீடாக, வீற்று-என்னிலும் தனக்குப்பிறந்த வைஸிஷ்ட்யம் வ்யாவ்ருத்திதோற்றும்படி, பெறாப்பேறுபெற்றாப்போலே, கண்டுகொண்டு - பூர்ணாவலோகநம் பண்ணிக்கொண்டு இருந்தான்- இருந்தான். (க

ஆறு:—(இருத்தும்வியந்து) இப்படியென்னெஞ்சிலே புகுந்தருளுகிறான், நான் தன்னைப்பிரிந்து பட்டபாடெல்லா மொன்றன்றென்னும்படி தானென்னைப்பிரிந்து வ்யஸநப்பட்டு * ஒருவண்ணமென்னைக்கண்டு கொண்டு புகுந்து பரிபூர்ணனாயிருந்தருளினான், ஒருவனுடைய ப்ரணயித்வ மிருக்கும்படியென், இவனையாகாதே நான், “இதுவோபொருத்தம்” என்று சொல்லிற்றென்கிறார். (க)

ஈடு ; அவ:—இத்திருவாய்மொழியில் தமக்குண்டான லாபத்தை ஸங்க்ரஹேண வருளிச்செய்கிறார்.

(என்னைத்தன்பொன்னடிக்கீழ் - வியந்து- இருத்தும்-என்று) தன்வாசியறியாதே ஶப்தாதிவிஷயங்களிலே அந்யபரனானவென்னை

ச்லாக்யமான தன்திருவடிகளின்கீழே (க) "வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸமஹாத்மா ஸுதுர்லப:" என்று கைவாங்கியிருக்கும் ஸம்ஸாரத்திலே நம்மை யபேக்ஷிப்பா னொருவனுண்டாவதே!" என்று விஸ்மயப்பட்டு, இனியொருநாளும் பிரியாதபடி யிருத்தியடிமை கொள்ளும், இத்தால் - ப்ராப்ய ப்ராபகங்களைச் சொல்லுகிறது. தன்பொன்னடிக்கீழென்று-ப்ராப்யஸ்வரூபம் சொல்லிற்று; இருத்துமென்று-ப்ராபகனுமவனேயென்றது. (வியந்து-இருத்தும்) தன் பேறாகவிருத்தும்.

(அருத்தித்து) சேதநனுவாசிக் கித்தனையும் வேணுமிறே. (எனைத்தோர்பலநாள்) "நாளும்" என்றத்தைச் சொல்லுகிறார். (அழைத்தேற்கு) "என்னையாளக் கூப்பிட்டழைத்தக்கால்" என்றத்தைச்சொல்லுகிறார். "இவன்ப்ரணயித்வத்தை யறியாதே, தாழ்த்தானாகவும், நாமபிநிவிஷ்டராகவும் நினைத்துக்கூப்பிட்டென்னகாரியஞ் செய்தோமென்கிறார்காண்" என்னும் பிள்ளான். அழைக்கவுங்கூடமாட்டாத விவனையோநாமழைத்தது; அத்தலையில் ப்ரணயித்வத்தை யநுஸந்தித்தால், ஆர்த்தித்வமே தொடங்கி மிகையாயிறேயிருப்பது; * எழுதுமென்னுமிது மிகையாயிறேயிருப்பது.

(பொருத்தமுடை) இப்படி பொருத்தமுடையவனையே "இதுவோபொருத்தம்" என்றது. (வாமனன்) நானர்த்தித்தவிடமென் செய்தேனானேன். தன்னுடைமைபெறுகைக்குத் தானிரப்பாளனானவனை. (தான்புகுந்து) என்னைத்தான் பெறுகைக் கர்த்தியாய்வந்து புகுந்து. (என்றன்கருத்தையுற) "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்ற வென்னினைவைத்தான்கைக்கொண்டான். (வீற்றிருந்தான்) இவரைப்பெற்ற வத்தாலுண்டான வேறுபாடு வடிவிலே தோற்ற க்ருதக்ருத்யனாயிராநின்றான். (கண்டுகொண்டே) மஹாவ்யாதியைத்தப்பின புத்ரனை மாதாபிதாக்கள் பார்த்துக்கொண்டிருக்குமாபோலே, * மாயக்கூத்தனில் விடாய்க்குத் தப்பினவனென்று பார்த்துக்கொண்டிராநின்றான். (க)

---

(க) கீதை-எ-க௯.

# இரண்டாம்பாட்டு.

இருந்தான்கண்டுகொண்டு எனதேழைநெஞ்சாளும் * திருந் தாதவோரைவரைத் தேய்ந்தறமன்னி * பெருந்தாட்களிற்றுக்கு அருள் செய்தபெருமான் * தருந்தான் அருள்தான் இனியான் அறியேனே.

ப:—அநந்தரம், விரோதியான விந்த்ரியங்கள் பலக்ஷயம்பிறக்கும்படி என்னெஞ்சிலெழுந்தருளியிருந்த வுபகாரத்துக்கு அளவறிகிறிலேனென்கிறார்.

(இ-ள்.) எனது-என்னுடைய, ஏழை-சபலமான, நெஞ்சு-நெஞ்சை தாங்களிட்டவழக்காம்படி, ஆளும்-ஆண்டுகொண்டுபோருவதாய், திருந்தாத - அநியாம்யதயா, ஓர் - அத்விதீயமான, ஐவரை - ஐந்திந்த்ரியங்களும், தேய்ந்து-க்ஷயித்து, அற-முடியும்படியாக, மன்னி - ஸுஸ்த்திரமாம்படி நெஞ்சிலேபுகுந்து, கண்டுகொண்டு - நிதியெடுத்துக் கண்டுகொண்டிருப்பாரைப்போலே, இருந்தான்-போராமலிருந்தவன், பெரு பெரிய, தாள்-தாளையுடைத்தான, களிற்றுக்கு - களிற்றுக்கு, அருள் செய்த-ஒருமுதலையால்வந்த க்லேசத்தைத் தீர்த்தருள்செய்த, பெருமான்-ஸர்வாதிகன், தான்-தான், தரும்-அவனுக்குபகரிக்கும், அருள் தான்—உபகாரம், இனி-என்னளவிலருளைக்கண்டபின்பு, யான், அறியேன்-ஓரருளாகவறிகிறிலேன்.

ஐந்திந்த்ரியங்களாகிற முதலையிலே அநாதிகாலமகப்பட்ட வெனக்கு நீ பண்ணின விந்தவுபகாரத்துக்கு அது ஸத்ருஶமன்றென்று கருத்து. (உ)

ஆறு—(இருந்தான்) என்னுள்ளே புகுந்தருளுகிறான்; என்னுடைய ஸர்வகரணங்களும் இக்குணமல்லது மற்றொருகுணமறியாத தொருபடி யிருந்தருளினான்; ஆதலால், "இதின்மேலில்லை" என்னும்படி பண்டெனக்குச் செய்தருளினவருளை யோரருளாக மறியேனென்கிறார். (உ)

ஈடு; அவ:—என்னுடைய விந்த்ரியவஶ்யதையைத் தன்னழகாலேதவிர்த்து, என்னை விஷயீகரித்த வுபகாரத்தோடொவ்வாது ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய வாபந்நிவாரணமுமென்கிறார்.

(இருந்தான் கண்டுகொண்டு) தரித்ரன் தநலாபமுண்டானால் பார்த்துக்கொண்டிருக்குமாபோலே, பார்த்தபடியே யிராநின்றான்.

(க) "அநேநாநந்யபோக்யத்வேந ப்ரஹ்ம்மண்யஸ்ய – அந் யோக்ய மபிவீக்ஷ்ந்தே நத்ருப்திருபஜக்மது:" என்கிறபடியே சொல்ல எதிர்த்தலையானதம்மைக் காண்கிறிலர். (எனதேழைநெஞ் சாளும்) கண்டதெல்லாவற்றிலும் சபலமாயிருக்கிற வென்னெ ஞ்சை, அதுவே பற்றாசாக விந்த்ரியங்கள் பொதியெடுக்கத்தொடங் கிற்று. ஒரு ப்ரபலனைப்பற்றாதே நடுவேநின்றவாறே பணிகொள்ளத் தொடங்கிற்று.

(திருந்தாத) ஸர்வஶக்தியான ஸர்வேஶ்வரனாலும் அநாதிகாலம் திருத்தப்போகாதபடியிறே யிவற்றின் வன்மையிருப்பது. (ஓரை வரை) இனியிப்படி யோரைவரைத்தேடப்போகாது. இவற்றால் பட்ட நலிவின்மிகுதியாலே சொல்லுகிறார். (தேய்ந்தறமன்னி-இருந்தான்) கண்ணுக்கிலக்கான ப்ராக்ருதவிஷயங்களில் பற்று நேராக க்ஷயிக்கும்படி, தன் வடிவழகைக் காட்டிக்கொண்டு புகுந் திருந்தான். விஷயாந்தரங்களிலும் வடிவழகிலேயிறே இவன் துவக் குண்டிருப்பது. ராஜாக்கள் ஶத்ருங்களை ஆஸநபலத்தாலே வெல் லுமாபோலே, "இருப்பாலே யிந்த்ரியங்களை வெல்லவேணும்" என்று வந்து புகுந்திருந்தான் (உ) * போதரேயென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பாலாதரம் பெருகவைத்தவழகனிறே.

(பெருந்தாளித்யாதி) பெரியதாள்களையுடைய களிற்றுக்கரு ளின ஸர்வேஶ்வரன். வடிவில் கனமும் நோவில் பாடாற்றவொண் ணாமைக் குடலென்கை. (பெருமான் - தான் - தரும் - அருள்தான்) தருமருள் - தந்தவருள். "தரும்" என்கிறவிது - காலத்ரயத்திலும் சொல்லலாயிருக்கையாலே சொல்லுகிறார். ஆஶ்ரிதர்க்குச் செய்த தும் தமக்குச்செய்ததாகவிறே இவர் நினைத்திருப்பது. (இனியா னறியேன்) எனக்குதவினபின்பு, நானத்தை யொன்றாக நினைத் திரேன்.

ஆனை நோவுபட்டது ஆயிரம்வத்ஸரம், அகப்பட்ட பொய்கை பரிச்சின்னம், முதலையொன்று; எனக்குக் காலமநாதி, அகப்பட்டது ஸம்ஸாரார்ணவத்திலே, முதலையஞ்சு; இத்தை மீட்டுக்கொண்ட மஹாகுணத்துக்கு அதொரு குணமாயற்றதோ. ஸ்ரீ கஜேந்த்ராழ் வான்பக்கல் பண்ணினவருளையிட்டு, புறம்புள்ளாரை வ்யாவர்த்திக்

(க) ரா-கி-ரு-கஅ- (உ) திருமா-கசு-

திருவாய்மொழி, அ-ப, எ-தி, ங-பா, அருள் வ்யாக்யாநம். கஃங

தார்; தமக்குப்பண்ணின வருளையிட்டு அது தன்னை வ்யாவர்த்திக்கிறார். (உ)

---

## மூன்றாம்பாட்டு.

அருள்தான் இனியான் அறியேன் அவன்என்னுள் * இருள்தானற வீற்றிருந்தான் இதுவல்லால் * பொருள்தானெனில் மூவுலகும் பொருளல்ல * மருள்தானீதோ? மாயமயக்குமயக்கே. (ங)

ப:—அநந்தரம், என்னுடைய அவித்யாதிரூபமான விருள்போம்படி யென்னெஞ்சிலே புகுந்திருந்தான், இதவனுக்கதிஶயித புருஷார்த்தமாயிராநின்றது, இத்தை யிப்போது உபகாரமென்று நினைத்திருக்கிறிலேன்; இது ப்ரமமோ, மாமாயமோவென்கிறார்.

(இ-ள்.) அவன்-என்பக்கலிலே அத்யந்தாபி நிவிஷ்டனானவன், என்னுள்-என்னெஞ்சுக்குள்ளான. இருள்தான்-அஜ்ஞாநாதிதமஸ்ஸெல்லாம், அற-போம்படி, வீற்று-பெரிய மேன்மையோடே, இருந்தான் - இருந்தான், அவனுக்கு, இது-இவ்விருப்பு, அல்லால்-ஒழிய, பொருள்தான்-வேறுபுருஷார்த்தம், எனில்-உண்டோவென்னில், மூவுலகும்-த்ரிவித சிதசித்சேஷத்வமும், பொருளல்ல - ஒரு பொருளாயிருக்கிறதில்லை; இதுஅஸம்பாவித மாகையாலே, இனி-இனி, இத்தை, அருள்தான்-ஓர் உபகாரமாக, யான், அறியேன்-நினைத்திருக்கிறிலேன், ஈது தான்-இதுதான், மருளோ-என்ன ப்ரமமோ, அவன்றன், மாயம்-ஆஶ்சர்யமான, மயக்கு-ப்ராமகசேஷ்டிதங்களாலே, மயக்கே-ப்ரமிப்பிக்கிறபடியோ. (ங)

ஆறு:— ( அருள்தான் ) என்னுள்ளேயிருந்தருளின விவ்வருளல்லது மற்றோரருளை நாஞ்ஞ ரருளாகமதியேன், அவனுமென்னுள்ளேயிருந்தருளின விவ்விருப்பல்லது மற்றுலீலோபகரணமான வண்டங்களையும் திருநாட்டையு மொருபொருளாகமதியானென்று, இப்படி யெம்பெமானுக்குத் தம்பக்கலுள்ள வபிநிவேஶத்தைப் பேசி, தம்முடைய நிகர்ஷத்தை யநுஸந்தித்து, ஏவம்வித பகவதபிநிவேஶ விஷயத்வ ரூபஸம்பத்தானது எனக்கு ஸம்பவியாது, என்னுடைய ப்ரமமாதல், அவனென்னை ப்ரமிப்பித்தானுதலல்லது இதுகூடாதென்கிறார். (ங)

ஈடு ; அவ:—அவாப்த ஸமஸ்தகாமனுன ஸர்வேச்வரன், தன் பக்கலிப்படி வ்யாமோஹம் பண்ணுகை கூடாததொன்றென்று ஶங்கித்து, இவ்வநுபவம் ப்ரமாதிகளிலே பிறந்ததோவென்கிறார்.

(அருள்தானினியானறியேன்) என்னுடைய விந்த்ரிய வச்யதையைத்தவிர்த்த விதுதன்னையு மிப்போதொன்றாக நினைத்திரேன். எத்தைப் பற்றவென்னில் (அவனித்யாதி) அவன், என்னுடைய ஹ்ருதயத்தி லஜ்ஞாநாந்தகாரமெல்லாம் போம்படி பெறும்பேறு பெற்றானாய், அவ்வேறுபாடுதோற்ற விராநின்றான் ; இனியெனக்கு வேறொன்றுதோற்றுமோ.

(இதுவல்லாலித்யாதி) இதுக்குத் திருமாலையாண்டான் பணிக்கும்படி - "நாட்டார், ஐஸ்வர்யங்களில் தலையாகச்சொல்லுவது - த்ரைலோக்யைஸ்வர்யத்தையிறே ; அதுவுமெனக்குச் சரக்கல்லவென்கிறார்" என்று. எம்பெருமானாரருளிச்செய்யும்படி - "என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்தெழுந்தருளியிருக்கிற விருப்பொழிய, * வீற்றிருந்தேழுலகுந் தனிக்கோல்செல்ல விருக்கு மிருப்பையும் தனக்கைஸ்வர்யமாக நினைத்திருக்குமோவென்று பார்த்தால், அதுவுமொரு சரக்காக நினைத்திருக்கிறிலன்" என்று ; இதுவே ப்ரகரணத்துக்குச்சேருவது.

(மருள்தானீதோ) ஒரு ஸம்ஸாரி சேதநனைப்பெற்று ஸர்வேச்வரனிப்படி யிருந்தானென்னுமது கூடுவதொன்றன்று, இது வென்னறிவுகேட்டாலே சொல்லுகிறேனோ. (மாயமயக்குமயக்கே) அன்றிக்கே, அவன் தன்னுடைய வாத்ஸல்யமான ப்ரமஸாதநங்களை யிட்டு ப்ரமிப்பித்தானோ, நெடுநாள் ப்ராக்ருதியையிட் டறிவுகெடுத்தான், இப்போது தன் வ்யாமோஹத்தாலே யென்னை ப்ரமிப்பித்தான். (ங)

---

## நான்காம்பாட்டு.

மாயமயக்கு மயக்கான் என்னைவஞ்சித்து * ஆயன் அமரர்க்கரியேறு எனதம்மான் * தூயசுடர்ச்சோதி தனதென்னுள் வைத்தான் * தேசம்திகழும் தன்திருவருள்செய்தே. (ச)

ப:—அநந்தரம், விலக்ஷண தேஜோரூபமான விக்ரஹத்தை யெனக்குள்ளேவைத்தான், ஆதலால், என்னை ப்ரமிப்பியானென்கிறார்.

(இ - ள்.) ஆயன் - அறிவில்லாத விடையர்க்கு ஸஜாதீயனாய்க் கொண்டு பவ்யனாய், அமரர்க்கு-அறிவுடைய ஸூரிகளுக்கு, அரியேறு-அபரிச்சேத்யமான மேன்மையையுடையனாய், எனதம்மான் - இந்த பரத்வஸௌலப்யங்களை யெனக்கு ப்ரகாசிப்பித்த வென் ஸ்வாமியானவன், தேசந்திகழும் - தேசப்ரவித்தமாம்படியான, தன் - தன், திரு-அஸாதாரணமான, அருள் - க்ருபையை, செய்து - நிர்ஹேதுகமாகப் பண்ணி, தனது-தனக்கஸாதாரணமாய், தூய - நிர்மலமாய், சுடர் - அத்யுஜ்ஜ்வலமாய், சோதி-தேஜோமயமான திவ்யவிக்ரஹத்தை, என்-என்னுடைய, உள் - நெஞ்சுக்குள்ளே, வைத்தான் - ப்ரதிஷ்டிதமாம்படி வைத்தான். ஆதலால், என்னை - தன்னையொழிய வறியாதவென்னை, வஞ்சித்து-அநாஸ்ரிதரைச் செய்யுமாபோலே வஞ்சித்து, மாயமயக்கு தன்னுடைய வாஸ்சர்ய ப்ரமஸாதநங்களாலே, மயக்கான் - ப்ரமிப்பியான். (ச)

ஆறு:—(மாயமயக்கு) நிரவதிக வாத்ஸல்ய ஸௌஸீல்யத்தையுடையனா யிருந்தவனே, என்னுடைய நிகர்ஷத்தைப்பார்த்து, என் திறத்துப் பொய்ச்செய்தருளான்; ஆதலால், ஹேயப்ரத்யநீகமானவன் திருவடிவை என்னுள்ளே ஸர்வலோகமுமறியும்படி மெய்யே வைத்தருளினானென்கிறார். (ச)

ஈடு; அவ:—அவனென்னை ப்ரமிப்பித்தானல்லன், என்னுள்ளேகலந்தருளினானே; இதிலொரு ஸம்ஸயமில்லை யென்கிறார்.

(என்னைவஞ்சித்து - மாயமயக்குமயக்கான்) அநாஸ்ரிதரான துர்யோதநாதிகளைக்குறித்து, "ஆயுதமெடேன்" என்றாயுதமெடுத்தும், பகலை யிரவாக்கியும் வஞ்சித்தானித்தனையல்லது, பாண்டவர்கள் விஷயத்திலத்தைச் செய்தானோ; ஆகையால், தனக்கே பரமான வென்னைவஞ்சித்து, ஆஸ்சர்யமான ப்ரமஸாதநங்களாலே ப்ரமிப்பியான்- ஹேதுவென்னென்ன (ஆயனமரர்க்கரியே றெனதம்மான்) நித்யஸூரிகளுக்கு மவ்வருகான வேற்றத்தை யுடையனாய் வைத்து, க்ருஷ்ணனாய் வந்தவதரித்து, என்னுடைய மோக்ஷத்வத்தை நிர்வஹித்த பரமாப்தன்-என்னை வஞ்சித்து - மாயமயக்கு மயக்கான்;

ஆனுலிப்பேறு வந்தபடி தானென்னென்ன (தேசந்திகழும் தன்றிருவருள்செய்து - தூயசுடர்ச்சோதி தனதென்னுள் வைத்தான்) லோகமெல்லாமறியும்படி என் பக்கலிலே நிர்ஹேதுக க்ருபையைப்பண்ணி. (தன்றிருவருள்) புறம்பொரு வர்க்கின்றிக்கே தனக்கே அஸாதாரணமானவருள். ஹேய ப்ரத்ய நீகமாய், விலக்ஷண தேஜோரூபமாய், ஶுத்தஸத்த்வமயமாய், தனக்கே அஸாதாரணமான வடிவை யென்னுள்ளேவைத்தான். தான் அநந்யஸாத்யனென்னும்படியைக் கொண்டு என்னுள்ளே ப்ரகாஶிப்பித்தான்; (க) "தெவெஸ்யைஷ ஸூக்ஷ்மாவிஷ்ணோ-ப்ரேதநஂ ஹ்யாஸ்த-தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம்ஸ்வாம்" என்கிறபடியே. (ச)

---

## ஐந்தாம்பாட்டு.

திகழும்தன் திருவருள்செய்து உலகத்தார் புகழும் புகழ் * தானதுகாட்டித்தந்து * என்னுள் திகழும்மணிக்குன்ற மொன்றே ஒத்துநின்றான் * புகழும்புகழ் மற்றெனக்கும் ஓர்பொருளே. (ரு)

ப:—அநந்தரம், என்னெஞ்சுக்குள்ளே அசலப்ரதிஷ்டிதனாய்க் கொண்டு நின்றான், இதொழிய வேறொன்றை அவனுக்குப் புகழாக நினைத்திருக்கிறிலேனென்கிறார்.

(இ-ள்.) திகழும்-நிர்ஹேதுகமாயும் நிரவதிகமாயு மிருக்கையாலே யிரண்டு தலைக்கு மௌஜ்ஜ்வல்யாவஹமான, தன், திருவருள் - திருவருளை, செய்து-பண்ணி, உலகத்தார்-லோகத்தார், புகழும்-இதுகண்டு புகழுகிற, அது-அந்த, புகழ்-ப்ரஸித்தமான புகழையும், தான் - தான், காட்டித்தந்து-எனக்கு ப்ரகாஶிப்பித்து, என்னுள் - என்னுக்குள்ளே, திகழும் விளங்காநிற்கிறது,ஒன்று-ஒரு. மணிக்குன்றமொத்து—மாணிக்கமலைபோலே,நின்றான்—நின்றான், எனக்கு எனக்கு, இந்நிலையொழிய, மற்று—மற்று,புகழும்-அவனைப்புகழுகிற புகழும் - புகழானதுவும், ஓர்—ஒரு, பொருளே—பொருளாயிருக்கிறதோ. (ரு)

ஆறு:—(திகழும்) லோகமெல்லா மறியும்படி யென்னுள்ளே யிருந்தருளின வத்தனையேயோ, இப்புகழையே லோகமெல்லாம் புகழும்படியாகவு மிருந்தருளினான்; இருந்தருளுகிறான்; தன்னுடைய வுத்கர்ஷத்தையு மென்னுடைய நிகர்ஷத்தையும் பார்த்து,

"நானத்தைவிட்டகலுகிறேன்" என்னும் பயத்தாலே, நான் தன்னை விடமாட்டாதபடியாகத் தன்னழகைக்காட்டி யென்னை வசீகரித்துக் கொண்டருளின புகழல்லது மற்று அவனுடையபுகழை யொரு புகழாக மதியேனென்கிறார். (௫)

ஈடு ; அவ:—"ஒருவர்பெறும்பேறே!" என்று லோகமடையக்கொண்டாடும்படி யென்னுள்ளே வந்து நின்றருளினான், அத்தால்வந்த புகழையல்லது இவனுடைய மற்றுள்ள புகழையு மொன்றாக மதியேனென்கிறார்.

(திகழுந்தன்றிருவருள்செய்து) பிறருடைய பரிச்சின்னமானவருள் போலன்றிக்கே, இரண்டுதலைக்கும் நிறமாம்படியான தன்க்ருபையை யென்பக்கலிலே பண்ணி. (உலகத்தாரித்யாதி) என்னுடைய பேற்றைக் குறித்து லோகத்தார்பண்ணும் ஸ்தோத்ரத்தைத் தான் காட்டித்தந்தான். (௧) "பாலேய்தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்" என்று லோகமாகக்கொண்டாடும்படி பண்ணுகை. (௨) "ஐதௌ ஸுநீவாயித்வநக்ஷணாநிதௌ க்ஷுஶீலௌ ஶாந்தௌ ஶாஸ்த்ரஹாதவஸுவிதௌ-இமௌமுநீபார்த்திவலக்ஷணான் விதௌகுஶீலவௌசாபிமஹாதபஸ்விநௌ" என்றாப்போலேநாடாகப்புகழாநின்றது. (என்னுளித்யாதி) என்னுள்ளே வந்து புகுந்து, பெறாப்பேறுபெற்றானாய், நிலைபெற்றுப் புகருடையனாய்க் கால்வாங்கிப்போகமாட்டாதே விளங்காநின்ற வொரு ரத்நபர்வதம்போலே நின்றான்.

(புகழும்புகழ்)என்னுள்ளேநின்ற விம்மஹாகுணத்தை யல்லது மற்றுள்ள புகழை யொருபுகழாகமதியேன். என்னுடைய விந்த்ரிய வஶ்யதையைப் போக்கினானென்று நான்சொன்ன விதொருசரக்காக நினைத்திரேன். (௫)

---

## ஆறாம்பாட்டு.

பொருள்மற்றெனக்கும்ஓர்பொருள்தன்னில் சீர்க்கத்தருமேல்* பின்னையார்க்கு அவன் தன்னைக்கொடுக்கும்? * கருமாணிக்கக் குன்றத்துத் தாமரைபோல் * திருமார்புகால்கண்கை செவ்வாயுந் தியானே. (௬)

---

(௧) க-டு கக. (௨) ரா-பா-ச-ஙஉ-

ப:—அநந்தரம், என்னளவாயிலேநின்ற வுபகாரத்தாலே,நிரதிஶய ஸௌந்தர்ய விஶிஷ்டனானவன் தன்னை ஒருவர்க்குக்கொடுக்கவொண்ணாமல் எனக்குத்தந்தானே வென்கிறார்.

(இ-ள்) எனக்குத்தன்னை த்தந்தவித்தாலே, கருமாணிக்கக்குன்றத்து - கருமாணிக்க மலையின்மேலே, தாமரைபோல் - தாமரைக்காடலர்ந்தாற்போலே செவ்விபெற்ற, திருமார்வு-திருமார்பும், கால்-திருவடிகள், கண்-திருக்கண்கள், கை திருக்கைகள், செ-சிவந்த, வாய்-திருவதரம், உந்தியான்-திருவுந்திகளையுடையனானவன், மற்று மற்றுமுள்ள பொருள்தன்னில்-புருஷார்த்தங்கள்தன்னிலே, எனக்கும்-எனக்கும், ஓர்-ஒரு பொருள்-புருஷார்த்தத்தை, சீக்க-சீர்க்க, தருமேல் - தந்துவிட்டானாகில், பின்னை-பின்னை, அவன் தன்னை நிரதிஶயபுருஷார்த்தபூதனான தன்னை, ஆருக்கு ஆக்கு கொடுக்கும்-கொடுப்பான், புறம்பு கொள்வாரில்லாமல் மறந்தானல்லனே; க்ருபாகார்யமென்று கருத்து.

ஆறு:—(பொருள்மற்றெனக்கும்) தானாகிற ஸம்பத்தையொழிய வேறேசிறியதொருஸம்பத்தை யெனக்குத்தந்தால், நிரவதிக ஸௌந்தர்யஸம்பத்தையுடையனான தன்னைவேறுகொள்வாரில்லையென்று, இப்படி தன்னையெனக்கு போக்யமாகத்தந்தருளினானல்லனிறே, என்பக்கலுள்ள வபிநிவேஶமிறே யென்கிறார். (சு)

ஈடு:—எனக்குத் தன்னையொழிய வேறொன்றைத் தந்துவிட்டால், புறம்புதன்னைவேறொருவர் கொள்வாரில்லாமை யெனக்குத் தந்தானே, என்பக்கலபிநிவேஶத்தாலே தந்தருளினானென்கிறார்.

(பொருளித்யாதி) (பொருள்தன்னில் - மற்றெனக்குமோர் பொருள்-சீர்க்கத்தருமேல்)புருஷார்த்தவர்க்கத்திலே வேறேகனத்ததொருபுருஷார்த்தத்தை, தருமேல்-தந்துவிட்டால். (பின்னையார்க்கவன் தன்னைக்கொடுக்கும்) பின்னைப்பொருள் கடிதாகக் கைக்கொள்வாருண்டோ.

என், கைக்கொள்வாரில்லையோ வென்னில் (கருமாணிக்கமித்யாதி) இவ்வேப்பங்குடி நீரைப்புறம்பு ஸ்வீகரிப்பாருண்டோ, (கருமாணிக்கக்குன்றத்து) ஆஶ்ரயத்துக்கு த்ருஷ்டாந்தம், (தாமரைபோல்) அவயவசோபைக்கு த்ருஷ்டாந்தம், (திருமார்வு) புருஷகாரமான பிராட்டி யெழுந்தருளி யிருக்கிறமார்வு. (கால்) அச்

யன்றி சேர்த்திக்குத்தோற்றுவிழும் திருவடிகள், (கண்) திருவடிகளிலே விழுந்தாரைக் குளிரநோக்கும்கண், அவர்களை யெடுத்தணைக்கும் கை, இன்சொல்லுச்சொல்லும் திருவதரம், அவர்களுக்கநுபாவ்யமான திருவுந்தி. (௧) "உந்திமேலதன்றே" என்னக்கடவதிறே.

## ஏழாம்பாட்டு.

செவ்வாயுந்தி வெண்பல் சுடர்க்குழை † தம்மோடு * எவ்வாய்ச்சுடரும் தம்மில் முன்வளாய்க்கொள்ள * செவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த * அவ்வாயன்றி யான் அறியேன் மற்றருளே. (எ)

ப:—அநந்தரம், இவ்வழகோடே யென்னுள்ளே முறுவல் செய்திருக்கிற விருப்பொழிய வேறோராகாரத்தையு மறிகிறிலேனென்கிறார்.

செ - சிவந்த, வாய் - வாய், செ - சிவந்த, உந்தி - திருநாபி, வெண்-வெளுத்த, பல்-திருமுத்து, சுடர்-ஒளியையுடைத்தான, குழை-திருமகரக்குழை, தன்னோடும்-இவற்றோடேகூட, எவ்வாய்-எல்லாவவயங்களினுடைய, சுடரும் - ஒளியும், தம்மில் - தம்மில்தாம், முன்-முற்பட்டு, வளாய்க்கொள்ள-சூழ்ந்துகொள்ள, திருவுள்ளத்தி லுகப்புக்கு ப்ரகாசகமாம்படி, செ-சிவந்த, வாய்-திருப்பவளத்தின், முறுவலோடு-முறுவலோடே, எனது - என், உள்ளத்து - நெஞ்சுக்குள்ளே, இருந்த-இருந்த, அ-அந்த, வாய்-ப்ரகாரத்தை, அன்றி-ஒழிய, மற்று-வேறொரு-அருள்-ஆகாரத்தையும், யான், அறியேன்-நினைக்கிறிலேன். (எ)

ஆறு;—(செவ்வாயுந்தி) இன்னமும் இவ்வபிநிவேசத்தையே விஸ்தரிக்கிறது.

என்னோடு கலந்தருளின கலவியாலுள்ள நிரவதிக ப்ரீதியாலே, திருப்பவளத்தினழகையும், மற்றுமுள்ள திவ்யாவயவ திவ்யபூஷண கதமான நிரவதிகதேஜஸ்ஸையு மெல்லாம் வளர்ந்துகொடுவைத்து, என்முன்னே திருமுகத்திலொளி வெள்ளம்பெருகிப் புறப்படும்படியாகச் செவ்வாய் முறுவலோடெனதுள்ளத்திருந்த வவ்வபிநிவேச குணமல்லது மற்றொரு குணத்தை குணமாக மதியேனென்கிறார்.

(௧) அமலனாதி-௩. † பா தன்னோடும்.

ஈடு; அவ:—அவன் தம்மோட்டைக் கலவியாலே ஹ்ருஷ்டனாய், அது தன்பேறாக முறுவல்செய்த திருப்பவளத்தை யநுபவித்து ப்ரீதராகிறார்.

(செவ்வாயித்யாதி) சிவந்ததிருவதரம், திருவுந்தி, வெளுத்த திருமுத்து, புகரையுடைத்தான திருமகரக்குழை, இவற்றோடே கூட (எவ்வாய்ச்சுடரும்) மற்றுமெவ்விடத்து முண்டான தேஜஸ்ஸும். வாய்-இடம். (தம்மில் முன்வளாய்க்கொள்ள) ஒன்றுக்கொன்று "நான்" "நான்" என்று தம்மில்தாம் முற்பட்டு வளைத்துக் கொள்ள. அஹமஹமிகையாய் முற்பட்டு வளைத்துக்கொள்ளவென்னுதல், முற்பட்டென்னை வளைத்துக்கொள்ள வென்னுதல்.

(செவ்வாய்முறுவலோடேனதுள்ளத்திருந்த) (க)"ஸவாக்ய நாதர:-அவாக்யநாதர:" என்றிருக்கக்கடவ தத்த்வம், இவரைப் பெற்று "இது தன்பேறு" என்றுதோற்ற முறுவல்செய்திருந்தபடி. பூவலரும்போது எங்குமொக்க வொரு செவ்விபிறக்குமாபோலே, திவ்யாவயவங்கள்தோறு மொருவிக்ருதி பிறக்கும்படியாயிற்று ஸ்மிதம்பண்ணிற்று. (அவ்வாயன்றி) அவ்விடமன்றி, ஸ்மிதம் பண்ணிக்கொண்டிருந்த விருப்பல்லது(க) "காந்தஸ்மிதா-காந்தஸ்மிதா" என்று ஸ்வரூபத்தைச் சொல்லி, "ஜாதஹாஸா-ஜாதஹாஸா" என்றதிறே, அப்போதை ஹர்ஷத்தாலுண்டான விக்ருதியென்னுமிடந்தோற்ற- மற்றுண்டானவருளை நானறியேன். இதுவேயமையும், மற்றொன்று வேண்டாவென்கை. (எ)

## எட்டாம்பாட்டு.

அறியேன்மற்றருள் என்னையாளும்பிரானார் * வெறிதே அருள் செய்வர் செய்வார்கட்கு உகந்து * சிறியேனுடைச் சிந்தையுள் மூவுலகும் * தன் நெறியாவயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரே.(அ)

ப:—அநந்தரம், க்ஷுத்ரனை வென்னெஞ்சிலே பூர்ணராய்க் கொண்டுவந்து புகுந்துநின்றவர்தாம், உபகரிக்க நினைத்தார்க்கு நிர்ஹேதுகமாக வுபகரிப்பராகாதே யென்கிறார்.

(இ-ள்.) மற்று-வேறொன்றை, அருள் - உபகாரமாக, அறியேன்-நினைத்திருக்கிறிலேன், என்னை - என்னை, ஆளும் - அடிமைகொண்ட,

(க) சாந்தோ-ங-கஅ (க) ஆர-சுங கஉ.

பிரானார்-மஹோபகாரகரானவர், செய்வார்கட்கு-தாமுபகரிக்க நினைத்தார்க்கு, வெறிதே-நிர்ஹேதுகமாக, உகந்து-உகந்து, அருள்-உபகாரத்தை. செய்வர்-பண்ணுவர், எங்ஙனேயென்னில், சிறியேனுடை - அதிக்ஷுத்ரனானவென், சிந்தையுள்-நெஞ்சிலே,மூவுலகும்-ஜகத்த்ரயத்தையும், நெறியா-ரக்ஷ்யரக்ஷகபாவமாகிற முறைதப்பாதபடி, தன்வயற்றில் தமக்குள்ளே, கொண்டு-கூடக்கொண்டு, நின்றொழிந்தார் - நின்றுவிட்டார். ஆதலாலென்றுகருத்து. (அ)

ஆறு:—(அறியேன்மற்றருள்) இப்படி அபிநிவிஷ்டனாய்க் கொண்டு தன்னுடைய ஸர்வைஶ்வர்யத்தோடுங்கூட வென்னுள்ளே புகுந்திருந்தருளுகைக்கு ஹேதுவென்னென்றால் ; ஒருஹேதுவின்றியே வெறிதேசெய்தருளினானென்கிறார். (அ)

ஈடு ; அவ:—அவன் தம்மோடேவந்து கலக்கைக்கடி அவன் க்ருபை யென்கிறார்.

(அறியேன்மற்றருள்) வேறருளுமறியேன். (என்னையாளும் பிரானார்) என்னையடிமைகொள்ளுகிற வுபகாரகரானவர். (வெறிதேயருள்செய்வர்) நிர்ஹேதுகமாக க்ருபைபண்ணுவர்; ஆருக்கென்னில் (செய்வார்கட்கு) (க) "யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:" என்று தாம் விஷயீகரிக்க நினைத்தார்க்கு. தாந்தாமொன்று செய்வார்க்கென்னில், "வெறிதே" என்னக்கூடாதிறே; ஆனாலு மொருஹேதுவேண்டாவோ வருளுக்கென்னில் ; உகப்பாயிற்றுஹேது. (உ) "ப்ரியதம ஏவ ஹி வரணீயோ பவதி-ப்ரியதம ஏவஹிவரணீயோபவதி" என்னக்கடவதிறே. ருசியுண்டானாலும் இவன்சேதநனானவாசிக்கு - சைதந்யப்ரயுக்தமான ஸ்வபாவமாகக் கொள்ளு மித்தனையல்லது, பேற்றுக்கு ஸாதநமாகச் சொல்லவொண்ணாதிறே.

நிர்ஹேதுகமாகவருள விப்படியெங்கேக்கண்டோரென்ன ; புறம்புதேடிப்போகவேணுமோ (சிறியேனுடைச் சிந்தையுள்) அத்யல்பனாயிருக்கிற வென்னுடைய ஹ்ருதயத்தினுள்ளே. (மூவுலகுமித்யாதி) உடையவனுடைமையைநோக்குவது முறையாலே யாயிருக்குமிறே. தம்முடையரக்ஷ்யவர்க்கத்தை முறையிலேநோக்குகிறவர், என்னுடைய ஹ்ருதயத்திலே பொருந்தி முறைகெடப் பரிமாறுநின்றார். தம்மைச்சிறுமைக்கெல்லையாக நினைத்தபடியாலே முறை

---

(க) கடவல்லி-உ. (உ) ஸ்ரீ பாஷ்யம்-ஜிஜ்ஞாஸா.

கேடாய்த் தோற்றுநின்றதாயிற்றிது. அவன் இவரை மூவுலகுக்கு மவ்வருகாக நினைத்திராநின்றான்; இவர், தம்மை மூவுலகுக்குமிவ் வருகாக நினைத்திராநின்றார். (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

வயிற்றில்கொண்டு நின்றொழிந்தாரும் யவரும் * வயிற்றில் கொண்டுநின்று ஒருமூவுலகும் * தம் வயிற்றில்கொண்டு நின்ற வண்ணம் நின்றமாலை * வயிற்றில்கொண்டு மன்னவைத்தேன் மதியாலே. (கூ)

ப:—அநந்தரம், அவனுடைய ஸர்வப்ரகார ரக்ஷகத்வத்தை யென் னெஞ்சிலே ஸுஸ்த்திரமாக வைத்தேனென்கிறார்.

(இ-ள்.) வயிற்றிற்கொண்டு - தாயானவள் வயிற்றிலேவைத்து நோக்குமோபாதிரக்ஷகராய் நின்றுபோந்த, நின்றொழிந்தாரும் - க்ஷத்ரி யர்களையும், யவரும்-அவர்களுக்கு மேலான ப்ரஹ்மாதிகளையும், வயிற் றில்-தம்முடைய ஸ்வரூபைகதேசத்திலே, கொண்டு-கொண்டு, நின்று- நின்று, ஒரு-அத்விதீயமான, மூவுலகும் - ஜகத்த்ரயத்தையும், தம்-தம் முடைய, வயிற்றில்-ஸங்கல்பைகதேசத்திலே, கொண்டு-தரித்து, நின் றவண்ணம்-யதாபூர்வாவஸ்த்திதியான ஸ்வரூபத்தோடே, நின்ற-நின்ற மாலை-ஸர்வாதிகரானவரை, மதியாலே- "இசைவித்தென்னை" என்று அவர் தந்தவநுமதியாலே, வயிற்றில் - என்னகவாயிலே, கொண்டு- கொண்டு, மன்ன-பேராதபடி, வைத்தேன்-வைத்தேன். (கூ)

ஆறு:—(வயிற்றிற்கொண்டு) அண்டங்களையும், அண்டாந்தர் வர்த்திகளான சதுர்முகர்களையும், சதுர்முகாஜ்ஞாநுவர்த்திகளான தேவாதி ஸ்த்தாவராந்தமான ஸமஸ்தஜந்துக்களையும், ஸ்வஸங்கல்ப ஸஹஸ்ரைக தேசத்திலே நியமித்தருளுகிற வெம்பெருமான் படியை யறிந்துகொண்டே னிறேயென்கிறார்.

ஈடு; அவ:—இப்படி விஷயீகரிக்கைக்கு நீர் செய்ததென்ன வென்னில், அநுமதிமாத்ரம்பண்ணினே னித்தனையென்கிறார்.

(வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரும்) ஜநநியானவள், ப்ரஜை யை வயிற்றிலேவைத்து நோக்குமாப்போலே, ஜகத்தை நோக்கும் க்ஷத்ரியாதிகளையும். (யவரும்) இந்தக்ஷத்ரியர் தங்களையும் நோக்கிக்

கொண்டுபோருகிற ப்ரஹ்மாதிகளையும். (வயிற்றிலித்யாதி) க்ஷத்ரி யாதிகளையும் ப்ரஹ்மாதிகளையும் தன்னுள்ளே கொண்டிருந்துள்ள மூவுலகையும். (தம்வயிற்றிற்கொண்டு) தம்முடைய ஸங்கல்ப ஸஹஸ்ரைகதேசத்தாலே நடத்திக்கொண்டென்னுதல்; "வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரையும் யவரையும் வயிற்றிற்கொண்டு நின்றொரு மூவுலகையும் தம்வயிற்றிற்கொண்டு" என்றுபிரித்துச்சொல்லுதல். (நின்றவண்ணம்நின்றமாலை) இவற்றையடையத்தன் வயிற்றில்கொண்டவிடத்திலும் ஒருவிகாரமின்றிக்கே நின்றஸர்வேஶ்வரனை; ஸவிபூதிகனான ஸர்வேஶ்வரனை;என்னுடைய ஹ்ருதயத்திலேபோராதபடி வைத்தேன் (மதியாலே) "இவன்படியையறிந்து கொண்டேனென்கிறார்" என்னுமம்மாள். அன்றிக்கே,"மதிः-அநுமதிः" என்றுக்கி, "அநுமதி மாத்ரத்தாலே" என்பர் பட்டர். அதாவது- அவன் புகுருகிற விடத்தில் விலக்கிற்றிலனென்கை. (௯)

## பத்தாம்பாட்டு.

வைத்தேன்மதியால் *எனதுள்ளத்தகத்தே * எய்த்தேயொழிவேனல்லேன் என்றுமெப்போதும் * மொய்த்தேய்திரை மோது தண்பாற்கடலுளால் * பைத்தேய்சுடர்ப் பாம்பணைநம்பரனையே.

ப:—அநந்தரம், ஸர்வஸ்மாத்பரனான க்ஷீராப்திநாதனை யென்னெஞ்சுக்குள்ளே வைத்து, இடைவிடாமலநுபவிப்பேனென்கிறார்.

(இ-ள்.) மொய்த்து-செறிந்து, ஏய் - திருவநந்தாழ்வான் திருமேனிக்குத் தகுதியான, திரை-திரைகள்,மோது-அலையாநிற்பதாய், தண்-ஶ்ரமஹரமான. பாற்கடலுள்-க்ஷீராப்தியினுள்ளே. பைத்து-விரிகிறபணங்களையுடையனாய். ஏய்-ஸ்வாபாவிகமான, சுடர்-தேஜஸ்ஸையுடையனை, பாம்பு-திருவநந்தாழ்வானை, அணை-படுக்கையாக வுடையனாய், நம்-நமக்கு, பரனை - ஶேஷியானவனை, மதியால் - என்னநுமதியாலே, எனது-என்,உள்ளத்தகத்தே-நெஞ்சுக்குள்ளே, வைத்தேன்-வைத்தேன் என்றும்-எல்லாதிவஸத்திலும், எப்போதும்-எல்லாப்போதிலும், எய்த்தேயொழிவேனல்லேன் - இனிவிஶ்லேஷித்துத் தளரக்கடவேனல்லேன். இந்நினைவிலே தவிரக்கடவேனல்லேனென்றுமாம். (௧௦)

ஆறு:—(வைத்தேன்மதியால்) அவன்படி யெங்ஙனேயாக வறிந்ததென்றால்; ஆஸ்ரிதர்பக்க லபிநிவிஷ்டனாயிருக்கை அவன் படி யென்றறிந்துகொண்டேன்; இது அவன்படியானபின்பு, அவனை நாலொருநாளும் விடுவேனல்லேனென்கிறார். (க0)

ஈடு; அவ:—எம்பெருமான் ஸபரிகரமாக வென்னுள்ளேபுகுந் தான், அவனை நானினி யொருநாளும் விஸ்லேஷித்து துஃகப்படே னென்கிறார்.

(வைத்தேன்மதியாலெனதுள்ளத்தகத்தே) அநுமதியாலே யென்னெஞ்சினுள்ளேவைத்தேன். ஓரநுமதிமாத்ரத்துக் கித்தனை பலமுண்டாவதே! (எய்த்தேயொழிவேனல்லேன்) இனியொருநாளு மிளைத்து க்லேசப்படக்கடவேனல்லேன். இவ்வார்த்தை யெத்தனை குளிக்கு நிற்குமென்ன (என்றுமேப்போதும்) எல்லாதிவஸத்திலும் எல்லாவவஸ்தைதயிலும்.

(மோய்த்தேய்திரை) திரண்டுதகுதியான திரைகள் மோதாநின்றுள்ள ப்ரமஹரமான திருப்பாற்கடலிலே. சிறுதிவலைபடி லும் "மோதிற்று" என்னும்படியிறேஸௌகுமார்யமிருப்பது. (பைத்தேய்சுடர்ப்பாம்பணை) திரைகள்வந்து திருமேனியில் படாத படி விகஸிதமான பணங்களையுடையனாய், பகவதநுபவத்தால்வந்த தகுதியான புகரையுடையனான திருவநந்தாழ்வான்மேலே கண் வளர்ந்தருளுகையாலுண்டானவேற்றத்தையுடையவன். (நம்பரனை) அவ்வேற்றத்தை நமக்கு வெளியிட்டுத்தந்தவனை-வைத்தேன் மதி யாலெனதுள்ளத்தகத்தே, எய்த்தேயொழிவேனல்லேனென்றுமெப் போதும். (க) * அரவத்தமளியினோடு மழகியபாற்கடலோடுங்கா னுமிவர்திருவுள்ளத்திலே புகுந்திருந்தது. (க0)

---

# பதினொன்றாம்பாட்டு.

சுடர்ப்பாம்பணை நம்பரனைத் திருமாலை * அடிச்சேர்வகை வண்குருகூர்ச்சடகோபன் * முடிப்பான்சொன்ன ஆயிரத்து இப் பத்தும் சன்மம்விட * தேய்ந்தறநோக்கும் தன்கண்கள் சிவந்தே.

ப:—அநந்தரம் இத்திருவாய்மொழிக்கு பலமாக, ஜந்மஸம்பந்த நிவ்ருத்தியை யருளிச்செய்கிறார்.

(க) பெரியா-தி-ரு-உ-க0.

சுடர்-நிரவதிகதேஜஸ் ஸையுடைய, பாம்பு - திருவநந்தாழ்வானை அணை-படுக்கையாகவுடையனாய், நம்-நமக்கு,பரனை-ஶேஷியான, திரு மாலை-ஶ்ரியঃபதியை, அடி-திருவடிகளிலே, சேர்வகை-சேரும்படியை, முடிப்பான் - தலைக்கட்டிக்கொள்ளுகைக்காக, வண்-நிரதிஶய ஸம்பத்தையுடைய, குருகூர்-திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன-அருளிச்செய்த, ஆயிரத்து-ஆயிரத்தில், இப்பத்தும்-இப்பத்தும், சந்மம்-பகவதநுபவப்ரதிபந்தகமான ஜந்மம், அற-மிகவும், தேய்ந்து-க்ஷயித்து, விட-நசிக்கும்படியாக, தன்-தன், கண்கள்-கண்கள், சிவந்து-சிவந்து, நோக்கும்-பார்க்கும்.

ஜந்மவிநாசஹேதுத்வத்தால் திருவாய்மொழியை புருஷ ஸமாதியாலே சொல்லுகிறது. இது-கலிவிருத்தம். (கக)

ஆறு:—(சுடர்ப்பாம்பணை) இத்திருவாய்மொழி, பகவதநுபவ விரோதி ஸம்ஸாரத்ருஷ்டி விஷமென்கிறார். (கக)

ஈடு ; அவ:—நிகமத்தில்-இப்பத்தானது, தன்னைக்கற்றவர்கள் ஸம்ஸாரத்துக்கு த்ருஷ்டிவிஷமென்கிறார்.

( சுடர்ப்பாம்பணைநம்பரனைத்திருமாலை ) இப்பத்தும் கற்றார்க்கு ஜந்மமறுகையிறே பலமாகச்சொல்லுகிறது; அத்தால்போயநுபவிக்கும் ப்ராப்யத்தைச்சொல்லுகிறது; பர்யங்கவித்யையிற் சொல்லுகிறபடியே திருவநந்தாழ்வான்மடியிலே பெரியபிராட்டியாரோடே யெழுந்தருளியிருக்கக் கண்டநுபவிக்கையிறே முக்தப்ராப்யபோகந்தான். ( அடிச்சேர்வகையித்யாதி ) திருவடிகளிலே சேருகையே தமக்கு ஸ்வபாவமாகவுடைய வாழ்வார். ஜ்ஞாநாநந்தங்களன்று இவர்க்கு நிரூபகம் ; ஶேஷத்வமாயிற்று.

(முடிப்பான்சொன்னவித்யாதி) ஸம்ஸார ஸம்பந்தத்தை யறுக்கைக்காகச்சொன்ன வாயிரத்திப்பத்து. அடிச்சேர்வகை - முடிப்பானென்றுமாம். சந்மமானது விட்டுப்போம்படியாக நோக்கும். அது செய்யுமிடத்தில், (இப்பத்தும் - தன்கண்கள்சிவந்து - நோக்கும்) அதாவது ஜந்மத்துக்கு இப்பத்து த்ருஷ்டிவிஷமென்கை. இப்பத்துக்கும் ஜந்மத்துக்கும் ஸஹாநவஸ்தாந லக்ஷண விரோதமுண்டென்கை. (கக)

எட்டாம்பத்து ஏழாந் திருவாய்மொழி முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# எட்டாம்பத்து

## எட்டாந் திருவாய்மொழி

### கண்கள்சிவந்து-ப்ரவேஶங்கள்.

ப:—எட்டாந்திருவாய்மொழியில், கீழ் - தம்முடைய நெஞ்சிலே வந்து புகுந்திருந்து இந்த்ரியாதிவிரோதிகளையும் நஶிப்பித்துத் தன் பேறாகக்கலந்து ப்ரீதனான ஈஶ்வரன், 'இவருக்கு நிகர்ஷாபாதகமான விரோதிவந்தேறி' என்னுமிட மிவரறியும்படி, இவருடைய ஸ்வரூப மானது நமக்கு ப்ரகாரமாயிருக்கிறபடியையும், விலக்ஷணமாயிருக்கிற படியையுங்காட்டி நைர்த்தோஷ்யத்தை ப்ரகாஶிப்பிப்போம்'' என்று திருவுள்ளம்பற்றி ; இவருடைய வாத்மஸ்வரூபம் தன்னை யாஶ்ரயித் திருக்கு மென்கைக் குறுப்பாகத் தானிவருடைய ஹ்ருதயத்திலே யிருக்கிறவிருப்பையும், ஸர்வாந்தராத்மபூதனான தன்னுடைய நிரதி ஶயஜ்ஞாநாநந்த யோகத்தையும், அஹமர்த்தபூதனான வாத்மாவும் தமக்கு ப்ரகாரபூதனென்னு மிடத்தையும், ஸர்வகாரணபூதனான தான் விலக்ஷணஸாரஸ்யத்தையுடையனான சேதநனுக்கு அப்ருதக்பூதனான நிலையையும், ஸ்வப்ரகாரபூதனான வாத்மாவினுடைய அநுரவகமத்வத் தையும், நிஷ்க்ருஷ்டாத்மஸ்வரூபத்தினுடைய ப்ராப்யபாவத்தையும் ஏவம்விதாத்மஜ்ஞாந மில்லாதாருடைய ஸம்ஸார ஸம்பந்தத்தையும், ஆத்மப்ராப்தி காமனுடைய வந்திமஸ்ம்ருத்யபேக்ஷையையும், ஸ்வரூ பைக்யரூபமான மோக்ஷம் அஸம்பாவிதமென்னுமிடத்தையும், ஏவம் விதனான வாத்மாவுக்குத் தன்பக்கல் ப்ரத்யாஸத்தியே யுஜ்ஜீவநஹேது வென்னு மிடத்தையும், ப்ரகாஶிப்பித்தபடியை யநுஸந்தித்து, இப்படி விலக்ஷணமான வாத்மாவினுடைய நைர்த்தோஷ்யத்தை ப்ரகாஶிப்பித் துத் தன்திருவடிகளிலே சேர்த்துக்கொண்டானென்று ப்ரீதராகிறார்.

ஈடு ; அவ:— * மாயக்கூத்தனி லிவர்க்கோடின விடாயெல்லா மாறும்படிவந்து ஸம்ஶ்லேஷித்து, தன் விடாயுந்தீர்ந்து, இவரைப் பெற்ற பேற்றாலே ப்ரீதனாய், நினைவின்றிக்கே யிருக்கச்செய்தே யிங்ஙனே சேரவிழுந்தது. ''இனி ப்ரவ்ருத்தமான ஸம்ஶ்லேஷம் ஶிதிலமாக வொண்ணாது ; இவராகிறார்- * வளவேழுலகிலாழ்வா

திருவாய்மொழி, அ-ப, அ-தி, க-பா, கண்கள் வ்யாக்யானம். கள்ள

வாராயிற்று; நம்மைக்கிட்டக்கொள்ள 'சிறியேனுடைச் சிந்தை'
என்று தம்மபோக்யதையை யநுஸந்தித்தவர், இன்னுமதுபின்
னாட்டி அகலப்பார்ப்பர்; 'ஏற்கவே பரிஹரிக்கவேணும்'' என்று
பார்த்து, ''இனியிவர்தாமகலப்பார்ப்பதும் 'அநாதிகாலம் ஸம்ஸரித்
துப்போந்த வாத்மவஸ்து அங்கத்தைக்கு யோக்யமன்று' என்று
யிற்று; இதங்ஙனல்ல, வந்தேறியான வித்தைப்பாராதே 'அடியைப்
பாரீர்'' என்று, ''இவ்வாத்மவஸ்துவினுடைய வைலக்ஷண்யத்தை
இவர் நெஞ்சிலே படுத்தவேணும்'' என்றுபார்த்து;

''நித்யமாய், ஜ்ஞாநாநந்த லக்ஷணமாய், நமக்கத்யந்தசேஷ
மாய்க்காணு மிருப்பது, நீர் கிட்டுமது நமக்கவத்யமல்ல, கௌஸ்து
பத்தோபாதி பிராட்டிமாரோபாதி நமக்குநிறமாமித்தனை'' என்று
இவருடைய ஸ்வரூபவைலக்ஷண்யத்தை இவர்நெஞ்சிலே படுத்து
கிறான்; ''அதுசெய்யுமிடத்தில், 'உம்முடைய வாத்மஸ்வரூப
மிருக்கும்படி காட்டவாரீர்' என்றால், மின்மினிபோலே யிருக்கிற
விதில்சரக்கென்' என்று இவரிசைவாரொருவரல்லர், ''அவ்வா
யன்றி யானறியேன் மற்றருள்' என்று நம்வடிவழகிலே துவக்குண்
டிருப்பதொன்றுண்டு, நம்மை முன்னிட்டு நமக்கு ப்ரகாரமாயிருக்
கிற ஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுப்போம்'' என்று பார்த்து,
''வாரீர், நம்முடைய வடிவழகிருக்கிறபடி கண்டீரே, நம்மைக்காணும்
காட்சியிலே உம்மையுங் காணலாய்க்காணுமிருப்பது'' என்று தன்
னுடைய வடிவழகை முற்பட வநுபவிப்பித்து, தனக்கு நூபுராதிக
ளோபாதி அத்யந்தபோக்யமுமாய் அத்யந்த சேஷமுமாயிருக்கிற
வாத்மஸ்வரூபத்தைக் காட்டிக்கொடுக்க, அத்தையநுபவித் தினி
யராகிறார்.

இத்திருவாய்மொழியில் முதலிரண்டரைப்பாட்டாலே - தன்
னையநுபவிப்பித்து, அநந்தரம் ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிக்கொ
டுத்தானாயிருக்கும். அதுக்கடியென்னென்னில்; ''வஸ்துதான்
ஸ்வாஶ்ரயமாயல்லதிராமையாலே ஆஶ்ரயமான தன்னைக்காட்டி,
பின்னை ஸ்வரூபத்தைக்காட்டிக்கொடுக்கிறான்'' என்பாருமுண்டு.
அன்றிக்கே, ''ஸ்வரூபமிருக்கும்படியைக் காட்டித்தரவாருமென்று
விசையார்' என்று தன்னை முற்படக் காட்டிக்கொடுக்கிறான்'' என்

பாருமுண்டு. "இரண்டரைப்பாட்டாலும் - * இருத்தும்வியந்திற் கலவியின்ஞட்டுகிறது" என்பாருமுண்டு.

---

# முதற்பாட்டு.

கண்கள்சிவந்துபெரியவாய் வாயும்சிவந்துகனிந்து * உள்ளே வெண்பலிலகுசுடர் இலகுவிலகுமகர குண்டலத்தன் * கொண் டல்வண்ணன்சுடர்முடியன் நான்குதோளன் குனிசார்ங்கன் * ஒண்சங்கதைவாளாழியான் ஒருவன் அடியேனுள்ளானே (க)

ப:—முதற்பாட்டில், ஸர்வப்ரகாரவிலக்ஷணமான வடிவழகோடே யென்னெஞ்சுக்குள்ளே புகுந்திருந்தானென்கிறார்.

(இ-ள்.) ஸம்ஶ்லேஷப்ரீத்யதிஶயத்தாலே, கண்கள்-திருக்கண்கள் சிவந்து-சிவந்து, பெரியவாய்-பெருத்திருப்பனவாய், அப்படியே வாயும்-திருவதரமும், சிவந்து-சிவந்து, கனிந்து-பழுத்து, உள்ளே-அகவாயிலே, வெண்-வெளுத்த. பல்-திருமுத்து நிரையினுடைய, இலகு-விளங்குகிற, சுடர்-சுடரையும், இலகு-அத்யுஜ்ஜ்வலமாய், விலகு-அசைகிற மகரகுண்டலத்தன்-மகரகுண்டலத்தையுடையனுய், இவ்வவயவஶோபைக்கும் பரபாகரூபமாய், கொண்டல்-காளமேகத்தின், வண்ணம் நிறம்போலேயிருக்கிற ரூபஶோபையையுடையனுய், அவ்வடிவழகுக்கு தகுதியாய், சுடர்-பேரொளியையுடைத்தான. முடியன்-திருவபிஷேகத்தையுடையவனுய், நான்கு தோளன்-அந்த ஸர்வேஶ்வரத்வாநுரூபமான நாலுதிருத்தோள்களையுடையனுய். (க) "[illegible] - திவ்யாஸ்த்ர புஷ்பிதசதுர்ப்புஜம்" என்கிறபடியே அந்தபுஜகல்பகம் பூத்தாப்போலேயிருக்கிற, குனி-வளைந்த, சார்ங்கம்-ஸ்ரீசார்ங்கம், ஒண்-தர்ஶநீயமான, சங்கு-ஸ்ரீபாஞ்சஜந்யம். கதை-கௌமோதகீ, வாள்-நந்தகம், ஆழியான்-திருவாழியாகிற திவ்யாயுதத்தை யுடையனுய், ஒருவன் - இவ்வவயவஶோபையாலு மாபரணஶோபையாலு மாயுதஶோபையாலு மத்விதீயாகாரனுனவன். அடியேன் இவ்வழகிலே துவக்குண்டடியேனுன வென்னுடைய, உள்ளான் - அகவாயிலே ப்ரகாஶியாநின்றுன்.

சங்குகதையென்கிற வித்தை-சங்கதையென்று கடைக்குறைத்தலாய்ச் சொல்லிற்று. (க)

---

(க) ர-ஸ்து-க-சுக.

ஆறு:—(கண்கள்சிவந்து) என்னோடே ஸம்ஸ்லேஷித்த ஸம்ஸ்லேஷத்தினுடைய ஸ்த்தைர்யார்த்தமாகத் தன்னுடைய நிரவதிகமான வழகைக்காட்டி யென்னை வசீகரித்துக்கொண்டு என்னுள்ளே யிருந்தருளினானென்கிறார். (க)

ஈடு; அவ:—அவன், தம்மோட்டைக்கலவியாலே புதுக்கணித்த திவ்ய ஸௌந்தர்யாதிகளோடே என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்தானென்கிறார். நம்மாழ்வார்கள், வடிவழகுக் கவ்வருகு ஸ்வரூபகுணங்களி லிழியமாட்டார்கள். திவ்ய விக்ரஹத்தை ஶுபாஶ்ரயமாகப் பற்றினபின்னை அவ்வருகுபோவாரென்று ஶாஸ்த்ரங்கள் சொல்லுகிறது-இத்தைவிட்டுப் போகச் சொல்லுகிறதல்ல, ஸ்வரூபகுணங்களு முபாஸ்யமென்கைக்காகச் சொல்லுகிறது. அவன்றன்னோடு பிராட்டிமாரோடு மோக்ஷபூதரோடுவாசியில்லை, எல்லார்க்கு மபிமதமாயிருக்குமாயிற்றுத்திருமேனி.

(கண்கள்சிவந்து) (க) "தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவமக்ஷிணீ-தஸ்யயதாகப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" என்று கண்களாகில் சிவந்திருக்குமிறே; இப்படியிருக்கச்செய்தே, *மாயக்கூத்தனில் விஶ்லேஷத்தாலே விவர்ணமானது* இருந்தும் வியந்தில் ஸம்ஶ்லேஷத்தாலே தன்னிறம்பெற்றபடி; கண்ணிலே துவக்குண்டு கால்வாங்கமாட்டாதேயிருக்கிறவிருப்பு, இசையிலே காணுமித்தனை; (பெரியவாய்) வ்ருத்திஹ்ராஸாதிகளுண்டாகிறதாயிற்று. (உ) "ஸதைகரூபரூபாய-ஸதைகரூபரூபாய" என்கிறது-கர்மநிபந்தநமான விகாரங்களில்லையென் றவித்தனையொழிய, ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தாலே பிறக்கும் விகாரத்தை யில்லையென்கிறதன்றே; அப்படியேயானவன்று ஆஶ்ரயணீயனன்றிக்கே யொழியுமே. அவனும் தன்னைவிலே விக்ருதனாகக்கடவனிறே. (வாயும் சிவந்து) கண்ணேயன்றிக்கே, திருவதரமும் தன்னிறம்பெற்றபடி சொல்லுகிறது. "செவ்வாய்-வெண்பல் சுடர்க்குழை" என்றது பின்னாட்டுகிறபடி, (கனிந்து) இச்சிவப்பு, தன்னிலேயூறி செய்த்துத் தோற்றுகின்றதாயிற்று.

(உள்ளே) திருவதரத்தில் சிவப்பைவிட்டு, உள்ளுப்புகுகையிலுண்டான வருமையடையத்தோற்றுகிறது. (வெண்பலிலகு

(க) சாந்தோ-க-௬-எ. (உ) வி-பு-க-உ-க.

சுடர்) திருவதாத்திற் சிவப்புக்குப் பரபாகமான வெண்மையை யுடைத்தாய், தேஜஸ்ஸு நின்று சுழியாநின்றதாயிற்று. (இலகு விலகுமகரகுண்டலத்தன்) திருக்குழலி விருட்சிக்கு ப்ரகாசக மாய், அலைந்துவருகிற திருமகரகுண்டலத்தை யுடையவன். "இக் கலவிநமக்கு ஸம்பவிப்பதே!" என்று தலைசெய்த்துப்படாநின்றான் போலே; கடலுடைந்தாப்போலே தன்னளவிலே ஹ்ருஷ்டனாகாநின் றான். (கொண்டல்வண்ணன்) வர்ஷுகவலாஹகம்போலே வடிவும் குளிர்ந்துகறுத்தது. முன்பு விவர்ணமாய்ப்போலே திருமேனியி ருந்தது. (சுடர்முடியன்) தன்னழகாலேயல்லாதவழகை முட்டாக் கிடும் திருவபிஷேகத்தையுடையவன். * மாயக்கூத்தனிவர் விடா ய்தீர்ந்தபின்பாயிற்று முடியும் நற்றரித்தது. "முடிசேர்சென்னி யம்மா" என்றிறே கூப்பிட்டது. (நான்குதோளன்) இவரை யணைத் தபின்பு தோள்கள் பணைத்தபடி (குனிசார்ங்கன்) "மகரகுண் டலத்தன்" என்கிறவோபாதி, இவையும் சிலவாபரணங்களிருக்கிற படி. வீரர்கள்கையில் வில்லு, வினையில்லாதபோதும் வளைந்தே யிருக்குமிறே.

(ஒண்சங்கு) (க) "உண்பது சொல்லில்," "உன்செல்வம் சால வழகியது" என்னும்படியான வொண்சங்கு (கதைவாளாழியான்) இவற்றையுடையவன். (ஒருவன்) புண்டரீகாக்ஷனாய், காளமேக நிபச்யாமனாய், சதுர்ப்புஜனாய், ஸங்கசக்ராதி திவ்யாயுதோபேத னைகயாலே அத்விதீயன் (அடியேன்) அவனுடைய சேஷித்வ மத்விதீயமாயிருக்கிறாப்போலே, இவருடைய சேஷத்வமும் அத்வி தீயம். அதாவது - ஸ்வரூபஜ்ஞாநத்தாலன்றிக்கே அழகுக்குத்தோற் று-அடியேனென்கிறார். (உள்ளானே) பாரமார்த்தமான மநஸ்ஸைப் ப்ரத்யக்ஷவிஷயமாக்கினவாறே (உ) "ய வாக வாரா-யுவா குமார:" என்று கேட்டேபோய்வடிவழகு, வயிரப்பேழை திறந்தாப்போலே அவயவசோபையு மாயுதசோபையு மாபரணசோபையுமாய் மிளிரா நின்றதாயிற்று. (ஏ)

---

## இரண்டாம்பாட்டு.

அடியேனுள்ளான் உடலுள்ளான் அண்டத்தகத்தான் புறத் துள்ளான் * படியேயிது வென்றுரைக்கலாம்படி யனல்லன் பரம்.

---

(க) நா-தி-எ-அ. (உ)

பரன் * கடிசேர்நாற்றத்துள்ளாலை இன்பத்துன் பக்கழிநேர்மை * ஒடியாவின்பப்பெருமையோன் உணர்விலும்பரொருவனே. (உ)

ப:—அநந்தரம் ஸர்வாந்தராத்மபூதனாய் நிரதிசய ஜ்ஞாநாநந்தயுக்தனானவன், என்னாத்மாவோடு சரீரத்தோடு வாசியறவுள்ளே புகுந்து நின்றானென்கிறார்.

(இ-ள்.) அண்டத்து-அண்டத்தகவாயிலுண்டான ஸமஸ்தபதார்த்தங்களுக்கும், அகத்தான்-அந்தராத்மாவாய், புறத்து - புறவாயில் அவ்யக்த மஹதஹங்காரங்களுக்கும், உள்ளான் - ஆத்மபூதனாய், இதுவே-இதுவே, படி-ப்ரகாரம், என்று-என்று, உரைக்கலாம்படியன் - சொல்லலாம்படி யிருப்பதொரு ப்ரகாரத்தையுடையன், அல்லன்-அல்லனாய் பரம்பரன்-பரரான நித்யமுக்தர்களுக்கும் பரனாயிருப்பானொருவனாய், கடி-விலக்ஷணமான, நாற்றம்-கந்தங்களெல்லாம், சேர்-சேர்ந்த, ஆலையுள்-பரிமளஸமுதாயத்தை அவகாஹித்தநுபவித்து,இன்பம்-இன்பத்தினுடைய, துன்பம்-அல்பாஸ்த்திரத்வாதி நிபந்தநமான துன்பத்தினுடைய, கழி-கழிவையுடைத்தான, நேர்மை-ஸூக்ஷ்மாம் சத்தினுடைய ஒடியா-விச்சேத ரஹிதமாகையாலே நித்யமான, இன்பம் - ஆநந்தத்தினுடைய, பெருமையோன்-அபரிச் சேத்யதையையுடையனாய், உணர்வில் ஜ்ஞாநத்தில்வந்தால், உம்பர்-அந்தவாநந் தம்போலே நித்யத்வாபரிச்சிந்நத்வங்களாலே மேலேயிருப்பான், ஒருவன் - ஒருவன், அடியேன் - சேஷத்வைக நிரூபணீயமான அஹமர்த்தத்தினுடைய, உள்ளான்-அகவாயிலே அந்தராத்மதயா நில்லாநின்றான். உடல்-அத்யந்த ஹேயமான சரீரத்தினுடைய, உள்ளான் - ஹ்ருதயாம்சத்திலேயும் வர்த்தியாநின்றான்.

படியேயிதுவென்று - உபமாநராஹித்யத்தைச் சொல்லிற்றாகவுமாம், கந்தாநுபவஸுகத்ருஷ்டாந்தம் ப்ரதிபத்த்யர்த்தமாகச் சொல்லுகிறது ; உபயலிங்கவிசிஷ்டமாய், ஸ்வேதர ஸமஸ்த விலக்ஷணமான ஜ்ஞாநாநந்த மாஹாத்ம்யத்துக்கு த்ருஷ்டாந்தமில்லாமையாலே. (உ)

ஆறு:—(அடியேனுள்ளான்) அஸங்க்யேயமான வண்டங்களுக்கெல்லாம் நிர்வாஹகனாய்,நிரஸ்தஸமாப்யதிசனாய்,அநாக்ராத துஃக்கந்த நித்யஸித்தநிரவதிகாநந்தத்தையுடையனாய், ஸர்வஜ்ஞனாய், நிரபேக்ஷனாயிருந்துவைத்து, என்னுடைய நிகர்ஷத்தையும் தன்

னுடைய வுத்கர்ஷத்தையுமநுஸந்தித்து, தன்னோடு கலந்து பரிமாறுகைக்கு நானீடல்லேனென்றகலுகிறேனென்னும் பயத்தாலே என்னால் தன்னை விடமுடியாததொருபடி தன்னழகைக் காட்டிக்கொண்டு என்னுள்ளே புகுந்தருளுகை யன்றியே என்னுடம்பினுள்ளேயும் புகுந்தருளினனென்கிறார். (உ)

ஈடு ; அவ: —என்னுடைய ஹ்ருதயத்திலே புகுந்திருந்த வளவன்றிக்கே, என் ஶரீரத்திலேயும் புகுந்து கலந்தானென்கிறார்.

(அடியேனுள்ளான்) திருக்கோட்டியூர்நம்பி ஸ்ரீபாதத்திலே ஆறுபாஸமாழ்வான் ஸேவித்துநின்று போரப்புக்கவாறே, "ஆழ்வான், ஆழ்வார் 'அடியேனுள்ளான்' என்றபடி கண்டாயே!" என்ன, "க்ருதார்த்தனானேன்" என்று போந்தானும். "என்னுள்ளான்" என்னவேண்டுமிடத்திலே, "அடியேனுள்ளான்" என்கையாலே-ஜ்ஞாநாநந்தங்களன்று வஸ்துவுக்கு நிரூபகம்; ஶேஷத்வமென்கை; ஜ்ஞாநாநந்தங்களிலும் அந்தரங்கம் பகவச்சேஷத்வமென்கை. (உடலுள்ளான்) சேதநனுக்கு பகவத் ஸ்வரூபத்திலும் திவ்யமங்களவிக்ரஹமே யுத்தேஶ்யமானாப்போலே, ஈஶ்வரனுக்கும், இவர் ஸ்வரூபத்திலும் இவர்கழிக்கிற ஶரீர முத்தேஶ்யமாய்த் தோற்றுகின்றது ; செருக்கர் அபிமதவிஷயத்தி லழுக்குகக்குமாபோலே; இத்தால் - "ஜீவபரபேதமும், ஜீவர்களுக்கு பரஸ்பரபேதமும், ஶேஷ ஶேஷிஸம்பந்தமும் அபரமார்த்தம்." என்கிற பக்ஷங்கள் அர்த்தாத்ப்ரதிக்ஷிப்தங்கள்.

உம்முடைய திருமேனியை விரும்புகிறவனாரென்ன ; இன்னானென்கிறதுமேல் (அண்டத்தகத்தான்புறத்துள்ளான்) அண்டாந்தர்ப்பூதமான பதார்த்தங்களோடு, புறம்புள்ள பதார்த்தங்களோடு வாசியற ஸர்வகதனானவன்; ஸர்வகதமான வஸ்துவோர் ஒருவ்யக்தியிலேகதேசமான ஶரீரம்ஶத்திலே யகப்பட்டதென்னை. (படியேயிது) (இதுவே படி.) ஸர்வதா ஸத்ருஶமாயிருப்பதோருபமானத்தையுடையவனல்லன். ஸர்வகதமுமாய், ஸர்வதிவாஹ்முமாயிருப்பதொரு வஸ்துவுண்டாகிலிறே யொப்புச்சொல்லலாவது, சொல்லும்படிதானென்னென்னில் (பரம்பரன்) மேலானவற்றுக்கெல்லாம் மேலானவன் (க) "நேதி நேதி-நேதிநேதி" என்கிறபடியே-இவ்வளவன்றென்னுமித்தனை.

(க) ப்ருஹ-ச-ரு.

ஆனாலு மிவ்விஷயத்தை ப்ரதிபத்தி பண்ணும்படி தானென்னென்னில் (கடிசேர்நாற்றத்துள்ளாலை) ஆலை-மது. "கடி" என்றும், "நாற்றம்" என்றும் - பரிமளமாய், மீமிசைச்சொல்லாய் - மிக்கபரிமளமென்கை, "கடி" என்று-புதுமையாய், செவ்விப்பரிமளமென்றுமாம். பரிமளத்துக்கு உள்ளும்புறம்புமில்லாமையாலே-நாற்றத்திலென்றபடி. ( இன்பத்துன்பக்கழிநேர்மை ) அதினுடையவநுபவத்தால் வந்த ஸுகத்தில் துக்காம்ஶத்தைக்கழித்தநேர்மையுண்டு, நுண்மை; ஸுகாம்ஶம்-புஷ்பத்தில் பரிமளத்தை த்ருஷ்டாந்தமாகச்சொல்லுகையாலே, அதில் அல்பாஸ்த்திரத்வங்கள் துக்காம்ஶம்; அதுகழிந்தநுண்மை - ஸுகாம்ஶம். துன்பங்கழிந்த வின்பமென்கிறபடி.

( ஒழியாவின்பப்பெருமையோன் ) ஒழியாததுமாய், பெரியதுமான ஸுகம் நித்யமுமாய் நிரதிஶயமுமான வாநந்தத்தையுடையவன் (க) "ஆநந்தோ யஃ-ஆநந்தமயஃ" என்கிறார். ( உணர்விலும்பரொருவனே) ஜ்ஞாநத்தில் வந்தால் மேலானவொருவன்; அத்விதீய ஜ்ஞாநாநந்தஸ்வரூபனென்கை. ( ஒழியாவின்பப்பெருமையோனுணர்விலும்பரொருவன்-அடியேனுள்ளானுடலுள்ளான்) எல்லார்க்கும் ஸ்ப்ருஹணீயவிஷயமாயிருக்கிறவன்கிடீர் என்பரீரத்தை யாதரிக்கிறான். (உ)

---

# மூன்றாம்பாட்டு.

உணர்விலும்பரொருவனை அவனதருளால் உறற்பொருட்டு * என் உணர்வினுள்ளே இருத்தினேன் அதுவும் அவனது இன்னருளே * உணர்வும் உயிரும்உடம்பும் மற்று உலப்பிலனவும்பழுதேயாம்* உணர்வைப்பெறவூர்ந்திறவேறி யானும்தானாயொழிந்தானே.

ப:—அநந்தரம், தன்க்ருபாதிஶயத்தாலே தானென்னுள்ளே புகுந்திருக்கும்படி யென்னை யிசைவிப்பதுஞ்செய்து நான் தனக்கு ப்ரகாரபூதனாயிருக்கிறபடியையும் ப்ரகாசிப்பித்தானென்கிறார்.

---

(க) தை-ஆந-உ-நு.

(இ-ள்) உணர்வில்-உணர்வுமிக்கிருக்கக்கடவரான, உம்பர்-நித்ய ஸூரிகளுக்கு ஸர்வப்ரகாரநிர்வாஹகனான, ஒருவனை - அத்விதீயனானவனை, அவனது-அவனுடைய, அருளால் - க்ருபையாலே, உறற்பொருட்டு-ப்ராபிக்கைக்காக, என்-என்னுடைய, உணர்வினுள்ளே-அபேக்ஷாரூபஜ்ஞாநத்துக்குள்ளே, இருத்தினேன்-இருத்தினேன், அதுவும்-அந்தவிச்சைதானும், அவனது-அவனுடைய, இன்னருளே - நிர்ஹேதுகக்ருபையடியாகவுண்டானதே, இப்படி யென்னையிசைவித் தென்னுள்ளேபுகுந்தவன்-உணர்வும்-விஷயாவலம்பியான ஜ்ஞாநவ்ருத்திவிசேஷமும், உயிரும்-ப்ரவ்ருத்திஹேதுவான பஞ்சவ்ருத்திப்ராணபேதமும், உடம்பும்-ப்ராணப்ரவ்ருத்திபேதமான ஶரீரபேதமும், மற்று-மற்றும், உலப்பிலனவும் - அஸங்க்யாதமான மஹதஹங்காரேந்த்ரியாதிகளும், பழுது ஹேயம், ஆம்-என்கிற, உணர்வை-உணர்வை, பெற-பெறும்படியாக, ஊர்ந்து-நடத்தி, இறவேறி-விலக்ஷணஸ்வரூபனான வாத்மாவளவும் முடியக்கொண்டேறி, யானும்-ஆத்மவிஷயமான ஸம்பந்திவ்ய வஹாரங்களும், தானாயொழிந்தான் ஸ்வவிஷயமாம்படி ஆத்மப்ரகார விசிஷ்டனாய்விட்டான். (௩)

ஆறு:—(உணர்விலும்பர்) இப்படி யெம்பெருமான் செய்தருளுகைக்கு ஹேதுவென்னென்னில்; என்னிச்சாமாத்ரமே காரணமாகச் செய்தருளினான்; அதுதானென்னாலே வந்ததொன்றன்று, அதுவுமவனுடைய ப்ரஸாதத்தாலேவந்ததென்றுகொண்டு, இப்படி* இருத்தும் வியந்திற்சொன்னபொருளை யநுபாஷித்து, பின்னையும், இவ்வளவோ அவனெனக்குச் செய்தருளிற்று, வ்ருத்த ஸம்ஶ்லேஷஸ்த்தைர்யார்த்தமாக, தன்னுடைய ஸௌந்தர்யாவிஷ்காரத்தாலே யென்னை வசீகரித்து வைத்ததுவும் போராமே, என்னோடுபண்ணின ஸம்ஶ்லேஷத்துக்குபங்கம் வருகிறதென்னும் பயத்தாலே, ஒன்றை யெனக்குச் செய்யவொண்ணாததொருபடி, அஹமர்த்தவிசிஷ்டனானதாமே, அஹம் ஶப்தவாச்யனென்று தோற்றும்படி தன்னைக்குறித்து இவ்வாத்மாவுக்குண்டான, நிரவதிகபுருஷார்த்தமாய், ஸாக்ஷாத்காரரூபமாயிருந்த மோக்ஷைகரஸத்வ ஜ்ஞாநத்தையும் தந்தருளினானென்கிறார். (௩)

ஈடு ; அவ:—கேவலக்ருபையாலே ஸ்வவிஷயமாக விச்சையை யும் பிறப்பித்து, என்னோடே ஸம்ஶ்லேஷித்து, ஸம்ஶ்லேஷ ஸ்த் தையார்த்தமாக, விலக்ஷணமுமாய்த் தனக்கநங்யார்ஹமுமான வாத் மஸ்வரூபத்தை யுங்காட்டி யருளினனென்கிறார்.

(உணர்விலும்பரோருவனை) உணர்விலேயுளரான நித்யஸித் தர்-ஜ்ஞாநாதிகரான நித்யஸூரிகளுடைய ஸத்தாதிகள் ஸ்வாதீந மாம்படி யிருக்கிற வத்விதீயனை ; இத்தால்-ப்ராப்யஸ்வரூபஞ் சொல் லிற்று. *அயர்வறுமமரர்களதிபதியாயிருக்கு மிருப்பிறே ப்ராப்யம். "அடியார்கள் குழாங்களை-உடன்கூடுவதென்று கொலோ" என்றிறே இவர் ப்ரார்த்தித்தது. (அவனதருளால்) அவனுடைய ப்ரஸாதத் தாலே. "ப்ராப்யமவனே" என்கிற நிர்ப்பந்தத்தோபாதி, ப்ராபகமு மவன்ப்ரஸாதமேயாயிருக்கிறபடி (உறற்பொருட்டு) ப்ராபிக்கையின் பொருட்டு.

ப்ராப்யப்ராபக மவனேயாகில், நீரதிலங்வயித்த வம்ஶமே தென்ன (என்னுணர்வினுள்ளே யிருத்தினேன்) அவனை யென்னு டைய ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்கினேன். "வைத்தேன்மதியால்" என்றதுதானிறே. இச்சித்தேனென்கை. இச்சைதான் ஸ்வாதீந மோவென்னில் (அதுவுமவனதின்னருளே) அந்தவிச்சைதான் பிறந் ததும் அவன்ப்ரஸாதத்தாலே. நின்றநின்றவளவுகள்தோறும், "இவ் வளவு மவனாலேபிறந்தது" என்னும்படியாயிற்றிருப்பது அவனு டைய ஸௌஹார்த்தம். "தன்பொன்னடிக்கீழ்-இருத்தும்வியந்து" என்று - ப்ராப்யமும் ப்ராபகமு மவனேயென்று, "அருத்தித்து" என்றதிறே ; அத்தையிறே யிங்குச்சொல்லுகிறது. இரண்டரைப் பாட்டென்கிறதற்றது.

மேல்- ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தைக்காட்டித் தந்தானெ ன்கிறது(உணர்வும்)வைஷயிகஜ்ஞாநமும். (உயிரும்)பஞ்சவ்ருத்திப் ராணனும், (உடம்பும்) ஶரீரமும் (மற்றுலப்பிலனவும்) மற்று மப ரிச்சேத்யமான மஹதாதிப்ரக்ருதி விகாரங்களும், ப்ரக்ருதியும், (பழுதேயாமுணர்வைப்பெறவூர்ந்து) இவையெல்லாம் ஹேயமென் னும்படியான வறிவை நான் பெறும்படி நடத்தி; அங்வர்த்தப்ரயோ ஜநத்தேரருமாபோலே இவை அபுருஷார்த்தமென்னு முணர்வு ண்டு - மயர்வற்றமதி, அத்தை நானுடையேனும்படி பண்ணி (இற

வேறி) ப்ரக்ருதி ப்ராக்ருதங்கள் அபுருஷார்த்தங்களென்னு மளவே யன்றிக்கே, முடியப்போய் ஜ்ஞாநாநந்தஸ்வரூபமாய், பகவச்சேஷதைக ரஸமாயிருக்கு மாத்மவஸ்துவென்னுமளவும் காட்டித்தந்து. (இறவேறி) முடியவேற்றி. (யானும்தானாயொழிந்தானே) அவ்வளவிலும் பர்யவஸியாதே, என்னைச்சொல்லும் சொல்லாலே தன்னைச் சொல்லலாம்படி தனக்கு ப்ரகாரதயா சேஷமென்னு மிடத்தையுங் காட்டித்தந்தான். "ஆழ்வீர்" என்றால், "ஏன்" என்பானீச்வரன் போலே காணும். அஹம்பதமுமஹம்புத்தியும் தன்னளவும் செல்லும்படி ப்ரகாரதைக வேஷமாயிருக்கிறபடியைக் காட்டித்தந்தான். * தச்சப்தம் குணவிசிஷ்டவாசியான வோபாதி, * த்வம்பதமும் அசித் விசிஷ்ட ஜீவாந்தர்யாமியளவும் செல்லக்கடவதிறே.

## நான்காம்பாட்டு.

யானும்தானாயொழிந்தானை யாதும்யவர்க்கும்முன்னோனை * தானும்சிவனும்பிரமனுமாகிப் பணைத்ததனிமுதலை * தேனும்பாலும்கன்னலும் அமுதுமாகித்தித்தித்து * என் ஊனில்உயிரில்உணர்வினில் நின்றஒன்றைஉணர்ந்தேனே. (௪)

ப:—அநந்தரம், ஸமஸ்த காரணபூதனானவன், (க) "ஸ ஹைகஏவ அஹமந்நம்" என்கிறபடியே தனக்கு ஸர்வவிதபோக்யபூதனானவாத்மாவைத் தனக்கு அப்ருதக்ஸித்த ப்ரகாரமாகவுடையனாய் நிற்கிறநிலையை யறியப்பெற்றேனென்கிறார்.

(இ-ள்) யாதும்யவர்க்கும்-ஸமஷ்டிரூபமான ஸகலசேதநாசேதநங்களுக்கும், முன்னோனை - நியதபூர்வக்ஷணவர்த்தியான காரணபூதனாய், தானும் - வ்யஷ்டிரூபஸ்ருஷ்ட்யாதிகளுக் குறுப்பாக ரக்ஷணத்துக்குக் கடவதானும். சிவனும்-ஸம்ஹாரத்துக்குக்கடவ ருத்ரனும், பிரமனுமாகிய-ஸ்ருஷ்டிக்குக்கடவ ப்ரஹ்மாவுமாய்க்கொண்டு, பணைத்த-விஸ்த்ருதனான, தனிமுதலை-ப்ரதாநகாரணபூதனாய், தான் இச்சேதநனுக்கு ஸர்வவிதபோக்யமாமாபோலே, தேனும்பாலும் கன்னலுமமுதுமாகி-தனக்கிச் சாநுரூபபோக்யமாய்க்கொண்டு, தித்தித்து - ரஸித்து, என்-என்னுடைய ஊனில்-சரீரத்திலும், உயிரில்-ப்ராணனிலும், உணர்வினில் ஜ்ஞாநத்திலும், நின்ற-அப்ருதக்ஸித்தனாய்க்கொண்டு ஏகாகார

(க) தை ப்ருகு-௧௦.

மாயிருக்கிற, ஒன்றை - ஆத்மஸ்வரூபத்தை ஶரீரமாக வுடையனாகையாலே, யானும்-அஹமர்த்தமும், தானா யொழிந்தானை-தானாய்விட்டவனை, உணர்ந்தேன்-அறியப்பெற்றேன். (ச)

ஆறா:—(யானும்) நானநர்ஹனென்றுகொண்டு என்னுடைய விசாராநுகுணமாகத் தன்னை யெனக்ககலவொண்ணாதபடி, தன்னைக் குறித்து இவ்வாத்மா ஶேஷதைகஸ்வபாவ னென்னுமிடத்தைக் காட்டித் தந்தருளுகையன்றியே; தன் திருவடிகளை நானே யகல்வேனல்லே னென்றிருக்கும்படியாக ஸ்வஶேஷதைகரஸமான விவ்வாத்மா, நூபுராதிதிவ்யபூஷணம்போலே கல்யாணஶாலியா யிருக்குமென்னுமிடத்தையுங் காட்டித் தந்தருளினானென்கிறார். (ச)

ஈடு; அவ:—ப்ராப்தியைக் காட்டினவளவேயன்றியே, இவ்வாத்மா தனக்கத்யந்தபோக்யமென்னுமிடத்தையுங் காட்டித் தந்தானென்கிறார்.

(யானும்தானாயொழிந்தானை) கீழ்ச்சொன்ன வநந்யார்ஹஶேஷத்வத்தில் ப்ரீதியாலே யநுபாஷிக்கிறார். (யாதுமித்யாதி.) யாதும் யவர்க்குமென்று-காரணாவஸ்தமான சேதநாசேதநங்களைச் சொல்லுகிறது- (முன்னோனை) கார்யத்துக்கு நியமேந பூர்வக்ஷணவர்த்தியானதிறே காரணமாவது. (தானுமித்யாதி) ப்ரஹ்மருத்ரர்கள் நடுவேயவதரித்த தானும், ப்ரஹ்மருத்ரர்கள் முதலான கார்யவர்க்கமுமாய்க்கொண்டு விஸ்த்ருதமான வத்விதீயகாரணமானவனை. சேதநாசேதநங்க ளடங்க வழிந்தபோது தன் திருமேனியிலே ஶக்த்யவஸ்தப்ரபைபோலே ஸூக்ஷ்மரூபேண விலைகிடக்கும்படி யெறட்டுக்கொண்டுநோக்கி, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறே தன்பக்கலினின்றும் விபக்தமாக்கி, அண்டஸ்ருஷ்டியளவும் தானேநடத்தி; அண்டாந்தர்வர்த்திகளில் ப்ரதாநரான ப்ரஹ்மாதிகளையுண்டாக்கி, ஸ்வேநரூபேண நின்று பாலநகர்மத்தைப்பண்ணியும், ப்ரஹ்மருத்ரர்களுடைய ஶரீரத்தையு மாத்மாவையு மதிஷ்டித்துக்கொண்டு நின்று ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைப்பண்ணியும், அவர்கள் செய்கிற கார்யங்களோடு தான் செய்கிற கார்யங்களோடு வாசியற வெல்லாம் தானே நடத்துகிறவனை.

(தேனும்) இப்படி யினிதாயிருக்கிறதார்க்கென்னில்; (க)

---

(க) சாந்தோ-ரு-கச.

"ஸர்வரஸ: - ஸர்வரஸ:" என்று சேதநனுக்கு அவனினியனாயிருக்குமாபோலே, ஈஸ்வரனுக்கு மிதுஇனிதாயிருக்குமிறே. அவனுக்கு "என்னது" என்றினிதாயிருக்கும்; இவனுக்கு "அவனது" என்றினிதாயிருக்கும். "ஈஸ்வரபரதந்த்ரன்" என்றறிவதற்குமுன்னும், "ஸ்வரூபவமமையும்" என்னும்படி யினிதாயிருக்கிறதிறே. (என்னுணிலித்யாதி) என்சரீரத்திலும், ப்ராணனிலும், ஜ்ஞாநத்திலும் வ்யாப்தமாய், விலக்ஷணமான வாத்மாவைத் தனக்கு ஶரீரமாகவுடையவனை யறியப்பெற்றேன்.

"நின்றவொன்று" என்கிறது ஜீவாத்மஸ்வரூபவாசியான ஶப்தம் - ஆஶ்ரயமான ப்ரகாரி பர்யந்தாபிதாநம்பண்ணுகிறது. ஸ்வநிஷ்டமல்லாமையாலே பகவத்பர்யந்தமாயிறேயிருப்பது. ஆத்மாவினுடைய போக்யதையாகில் சொல்லுகிறது, காரணத்வம் சொல்லுகிற தென்னென்னில்; விமுகரானசேதநரை கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித்துவிட்டான்; ஐஶ்வர்யகாமரான ப்ரஹ்மாதிகளுக்கு அவர்களுகந்த வைஶ்வர்யத்தைக் கொடுத்துவிட்டான்; எனக்கு, அசிதம்ஶம் த்யாஜ்யமென்னு மிடத்தையும், ஐஶ்வர்ய மபுருஷார்த்தமென்னுமிடத்தையும், ஆத்மவஸ்து தனக்கநந்யார்ஹ சேஷமாய் நிரதிசயபோக்யமா யிருக்குமென்னுமிடத்தையுங் காட்டித் தந்தானென்கைக்காகச் சொல்லுகிறார். * நின்றனரிருந்தனரிற்போலே இஸ்லாமாநாதிகரண்யத்துக்கு விசேஷணாம்ஶமான போக்யதையிலே தாத்பர்யம். வையதிகரண்யத்துக்கும், நாட்டார் சொல்லுகிற ஶப்தபேதமன்று பொருள்; ஸாமாநாதி கரண்யத்துக்கும், ஸ்வரூபைக்ய மன்று பொருள்.

யாதும்யவர்க்கும் முன்னோனை யென்றுதொடங்கி, என்னுணிலுயிரிலுணர்வினில் நின்றவொன்றான-யானும் தானாயொழிந்தானை உணர்ந்தேனென்றந்வயம். (௪)

---

# ஐந்தாம்பாட்டு.

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கு அதனுள்நேர்மை அதுவிதுவென்று * ஒன்றும்ஒருவர்க்குணரலாகாது உணர்ந்தும் மேலும் காண்பரிது * சென்றுசென்று பரம்பரமாய் யாதுமின்றித்தேய்ந்தற்று * நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானம் கடந்ததே. (௫)

ப:—அநந்தரம், இப்படி பகவத்ப்ரகாரபூதனான வாத்மாவினுடைய துரவகமத் வாதிரூபத்தை யருளிச்செய்கிறார்.

(இ ள்.) நஶ்வரமாய் நாநாகாரமான வசித்துப்போலன்றியே, நின்ற - நித்யமாய், ஒன்றை-ஜ்ஞாநைகாகாரமான வாத்மவஸ்துவை, உணர்ந்தீதனுக்கு-அவன்ஸ்வப்ரகாரதயா காட்டக்கண்டவெனக்கு, அதனுள்-அதினுடைய, நேர்மை-ஸூக்ஷ்மமான வைலக்ஷண்யம், ஒன்றும்-ஒன்றும்-ஒருப்ரகாரத்தாலும், ஒருவர்க்கு-நிஷ்பந்ந ஜ்ஞாநராயிருப்பார்க்கும், அதுவிதுவென்று - ஏவம்விதமென்று-அநுபூதஸஜாதீயமாகவும் உணரலாகாது-ஶ்ரவணமநநாதிகளா லறியப்போகாது. உணர்ந்தும், வருந்தியறிந்தாலும், மேலும்-ஸமாதிபர்யந்தமாக வாரோஹித்தவளவிலும், காண்பரிது-அபரோக்ஷித்துக்காணவரிதாயிருக்கும், அவன் காட்டக்கண்டவெனக்கு,* தேஹேந்த்ரியமநஃப்ராணதீகளில் வைத்துக்கொண்டு, பரம்பரபாய்-ஒன்றுக்கொன்றுமேலாய். சென்றுசென்று-சென்று சென்று, யாதும் - அவற்றினுடைய விகாராதிஸ்வபாவ மொன்றும், இன்றி-இன்றியே, தேய்ந்து-அத்யந்தஸூக்ஷ்மமாய், அற்று-தத்ஸம்பர்க்கமற்று, நன்றுதீது அவற்றுக்குண்டான வுத்தரோத்தராபேக்ஷையாய் வருகிறநன்மையும் தீமையுமுடைத்து, என்று-என்று, அறிவு-அறிய, அரிதாய்-அரியதாய், நன்றாய்-ஸர்வப்ரகார வ்யாவ்ருத்தமான ஜ்ஞாநாநந்த வைலக்ஷண்யத்தையுடைத்தாய், ஞானம்-அவற்றையவலம்பிக்கிற ஜ்ஞாநத்துக்கு, கடந்தது-விஷயமன்றியே யிருந்தது. இதில் ஸாங்க்யோக்த மர்யாதையாலே ஆத்மவ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று, *

ஆறு:—"உணர்வுமுயிருமுடம்பும்" என்றுதொடங்கி நாலாம் பாட்டளவும் ஆத்மநிதாத்பர்யமாய், நிர்த்தேஶத்தை பகவத்பர்யந்தமாகப் பண்ணிக்கொடுபோந்தது ; இனி, இந்நிர்த்தேசமும் ஆத்மபர்யந்தமேயாகிறது.

(நின்றவொன்றை) இப்படி யெம்பெருமானுடைய காருண்யத்தாலே யென்னால் ஸாக்ஷாத்க்ருதமாய், ப்ரக்ருதி மஹதஹங்காரைகாதஶேந்த்ரிய ப்ருதிவ்யாதிபூத ஶப்தாதிவிஷயரூப சதுர்விம்ஶதி தத்த்வவிலக்ஷணமாய், தத்ஸ்வபாவகந்த ரஹிதமாயிருந்த விவ்வாத்மஸ்வரூபத்தை யொருவர்க்கறிகையுமரிது, யோகத்தினாலே ப்ரத்யக்ஷிக்கையு மரிதென்கிறார். (௫)

ஈடு ; அவ:—"கீழ்-பகவத்ப்ரகாரமாக வாத்மாவநுஸந்திக்கப் பட்டது ; இதுக்குமேல் நாலுபாட்டு-புடகதமான மௌசல்யத்தை ப்பிரித்து நிஷ்கர்ஷக ஸம்பந்தத்தையிட்டு வ்யவஹரிக்குமாபோலே, 'எம்பெம்மானோடு' என்கிற பாட்டளவும் கேவலாத்மஸ்வரூபத்தை ச்சொல்லுகிறது" என்றெம்பாரருளிச்செய்யும்படி. ஆண்டான், "ப்ரகாரமானவேஷத்திலே சொல்லுகிறது" என்னும். "நின்ற வொன்றை" என்கிறவிதில்-பகவத்ப்ரஸாதத்தாலே நானறிந்த விவ்வாத்மவஸ்து வொருவர்க்கு மறியப்போகாது, வருந்தியறிந்தா லும் ஸாக்ஷாத்கரிக்கப்போகிறதன்றென்கிறார்.

(நின்றவொன்றை) * தேஹேந்த்ரியமநஃப்ராணதிகளிற்காட்டி லங்யமாய், இவையழியு ன்று மழியாதே யேகரூபமாய், இவற்றுக்கு நியந்தாவுமாய், விலக்ஷணமுமான வாத்மாவை. (உணர்ந்தேனுக்கு) ஆராய்ந்தேனுக்கு. "உயர்வறவுயர்நலம்" என்று அவனுடைய கல் யாணகுணங்களிலே யிழிந்தவராகையாலே,இதுக்குமுன்பு மின்மினி போலேயிருக்கிற வாத்மஸ்வரூபத்தில் கண்வைத்திலர் ; பரிகரமும் பக்திரூபாபந்ந ஜ்ஞாநமாகையாலே யித்தை யநுஸந்திக்கைக்குப் போதுபெற்றிலர். (முக்தன் (க) * நோபஜநம்ஸ்மரந் பண்ணுமா போலேயிறே, பகவத்குணப்ரவணனுக்கு மாத்மஜ்ஞாநம் அவிஷய மாயிருக்கும்படி.)இத்தையாராய்ந்தேனுக்கு இதிருந்தபடியென்னெ ன்கிறார். (அதனுணர்மை) அதினுடைய வைலக்ஷண்யம். (அது விதுவென்று) அநுபூதங்களின்படி யென்றுதல், அநுபவிக்கிறவற் றின்படி யென்றுதலறியப்போகாது.

(ஒன்றுமொருவர்க்குணரலாகாது) (ஒருவர்க்கு-ஒன்றும்-உண ரலாகாது) எத்தனையேனு மதிஸயிதஜ்ஞாநர்க்கு மேகதேஸமுமறி யப்போகாது. (உணர்ந்துமேலும்காண்பரிது) (உ) "ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ் ச தத்த்வேந-ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்த்வேந" என்கிறபடியே யறியப்போகாது, அறிந்தால் பின்னை ஸாக்ஷாத்கரிக்கவும்போகாது.

( சென்றுசென்றுபரம்பரமாய் ) போய்ப்போயொன்றுக்கொன் றுமேலாயிருக்கிற. * அந்நமயப்ராணமய மநோமயங்களுக் கவ்வரு காய். (யாதுமின்றித்தேய்ந்தற்று) அவற்றின் ஸ்வபாவங்க ளொன்று மின்றிக்கே அவற்றோடுறத்தேய்ந்தற்று. (நன்றுதீதென்றறிவரிதாய்)

(க) சாந்தோ-அ-௱௨-

(உ) கீதை-௧௧௫௪

தேஹம், தேஹத்திற்காட்டி விந்த்ரியம், அதிற்காட்டில் மநஸ்ஸு, அதிற்காட்டில் ப்ராணன்'' என்று ஒன்றுக்கொன்று வைலக்ஷண்ய முண்டாகிறுப்போலே, ப்ராக்ருதங்களின்படியால் நன்றென்றும் தீதென்று மறியவரிதாயிருக்கும்; (நன்ருய்) ஸ்வதோவ்யாவ்ருத்த மாய். (ஞானங்கடந்ததே) இந்த்ரியிகஜ்ஞாநத்துக்கெட்டாதிருக்கும்; கீழிலவையொன்றுக்கொன்று நெடுவாசியாயிருக்கச்செய்தேயும் ஏக ப்ராமாணகம்யத்வ ஸாம்யமுண்டு; அதுவுமில்லையென்கிறது.

ஆக, இப்பாட்டில் - ஸாங்க்யத்தில் தத்த்வஸங்க்யாநக்ரமத் தாலே ஆத்மஸ்வரூபத்தைச் சொல்லும்படியையும் அதுதன்னை யறிகையிலுண்டான வருமையுஞ்சொல்லிற்று. (ரு)

## ஆரும்பாட்டு.

நன்ருய் ஞானம்கடந்துபோய் நல்லிந்திரிய மெல்லாமீர்த்து *
ஒன்ருய்க்கிடந்தவரும்பெரும்பாழ்உலப்பிலதனைஉணர்ந்துணர்ந்து*
சென்ருங்கின்பதுன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்ருல் * அன்றே
அப்போதேவீடு அதுவேவீடுவீடாமே. (சு)

ப:—அநந்தரம், யோகஶாஸ்த்ரத்வாரா நிஷ்கர்ஷித்து வருந்தி அபரோக்ஷிக்கப்பட்ட வாத்மாவினுடைய ப்ராப்யரூபத்தை யருளிச்செய்கிருர்.

(இ-ள்.) நன்ருய்-ப்ராக்ருத ஸகல பதார்த்தங்களிலும் ஸங்கராஹித்யமாகிற ஶுத்தியையுடையராய், ஞானம்-அந்தவிஷயங்களிலே ஸங்கிப்பதான வைஷயிக ஜ்ஞாநங்களையும், கடந்து-தப்பி, போய்-அவ்வருகேபோய், நல்-இந்த ஜ்ஞாநஜநநத்வாரா இவனைத்தப்பாமல் ப்ரவர்த்திப்பிக்கும் நன்மையுடைத்தான, இந்திரியம் - இந்த்ரியங்கள் எல்லாம்-எல்லாவற்றையும், ஈர்த்து - தலையழித்து, ஒன்ருய்க்கிடந்த (க) "[illegible]-திலதைலவத்தாருவஹ்நிவத்'' என்கிறபடியே துர்விவேசமாம்படி சேதநனோடு சேர்ந்துகிடப்பதாய், அரும்-துரத்யயமாய், பெரும்(உ)" [illegible] - அநந்தஸ்யநதஸ்யாந்தஸ் ஸங்க்யாநம்வாபி வித்யதே''என்று தானபரிச்சிந்நமாய், உலப்பில்-கார்யமுகத்தாலே அஸங்

(க) ஶ்ரீரங்ககத்யம்.

யாதமுமாயிருக்கிற, பாழதனை-ப்ரக்ருதிதத்த்வத்தை, ஆத்மா விற்காட்டி லத்யந்தபஹிர்ப்பூதமாம்படி, உணர்ந்துணர்ந்து - ப்ராணமநநாதிகளால் பலகாலுமுணர்ந்துணர்ந்து, சென்று-போய், ஆங்கு-அந்த ஆத்மவிஷயத்தில், இன்பத்துன்பங்கள்-ப்ராக்ருதமாய் புண்யபாபகார்யமான ஸுக துக்கங்களை, செற்றுக்களைந்து-ஸஹேதுகமாகக் கழித்து, பசை-தத்விஷய வாஸநாருசிகளுமாகிற பசையும், அற்றால் - அற்றால், அன்றே- அந்நாளிலே, அப்போதே-அம்முஹூர்த்தத்திலே, வீடு-ஸகல ஸாம்ஸாரிக தோஷ மோக்ஷம்பிறக்கும், அதுவே-அதுவே, வீடு - ஆத்மாநுபவ மோக்ஷமாகிறது. வீடாமே-பகவத்ப்ரகாரபூதமாய் விலக்ஷணமான வாத்மாநுபவமும் ப்ராப்யாந்தர்க்கதமாகக் குறையில்லை. (கூ)

ஆறு:—(நன்றாய்) யோகத்தாலே ஆத்மஸ்வரூபத்தை ஸாக்ஷாத்கரிக்கையி லருமையென்னென்னில்;

ப்ராக்ருதவிஷயங்களினுடைய வஸ்த்ரத்வாதி தோஷாநுஸந்தாநத்தாலே ரஸயுக்தமாக ஸர்வேந்த்ரியங்களையு மாத்மவ்யதிரிக்த ஸர்வவிஷயங்களினின்றும் நிவர்த்திப்பித்தால், இவ்வாத்மஸ்வரூபம் கைவருவது; ஆகையாலே காண்கை யரிதென்கிறார். (கூ)

ஈடு; அவ:—யோகஶாஸ்த்ரத்திற் சொல்லுகிறபடியே இந்த்ரியஜயாதிரூபமான யோகத்தாலே ப்ரக்ருதிவிநிர்முக்தாத்மஸ்வரூபத்தை துஃகேந ஸாக்ஷாத்கரிக்கலாமென்கிறார்.

(நன்றாய் ஞானங்கடந்துபோய்) வ்யாவ்ருத்தமான நன்மையையுடைத்தாய், இந்த்ரியஜ்ஞாநத்துக்குவிஷயமாயிருக்குமென்று அவற்றை யநுபாஷிக்கிறதென்னவுமாம்; நன்றாயென்கிற விது கிடக்க, ஶப்தாதி விஷயங்களைத் தப்பிப்போயென்னுதல்; "ஜ்ஞாய தஉதி ஜ்ஞாயத இதிஜ்ஞாநம்" என்கிற ப்ரக்ரியையாலே-ஜ்ஞாநமென்கிறது- ஜ்ஞாநத்தால் காணப்படும் விஷயங்களை ஜ்ஞாநஶப்தத்தாலே சொல்லுகிறது. (நல்லிந்திரியமெல்லாமீர்த்து) விஷயங்களைத் தப்பிப்போனாலும், அவையிருந்தவிடங்களிலே மூட்டக்கடவதான ஸாமர்த்யத்தையுடைய விந்த்ரியங்களையுங்கழித்து (ஒன்றாய்க்கிடந்தவித்யாதி) அநாதிகாலம் சேதநனோடு ஸம்ஸ்ருஷ்டமாய்க் கிடப்பதாய், (க) "தைவீஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" என்கிறபடியே ஒருவரால் கடக்க வரிதாய், மஹதஹங்காராத்யவஸ்தைகளாலே பரப்பையுடைத்தாய், போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்ளலாம்படியாய், ப்ரவாஹரூபத்தாலும் ஸ்வரூபத்தாலும்நித்யமாயிருக்கிற வசித்தத்த்வத்தை; ப்ரக்ருதியை கார்யங்களாயும்காரணங்களாயு மிருக்குமென்னுமிடத்தை மிகவுமுணர்ந்து.

(க) கீதை-எ-கச.

( ஆங்கு-நன்றாய்-சென்று ) தன்பக்கல் போக்யதா புத்தியைப் பிறப்பிக்கக் கடவதான விஷயத்தில் கால்தாழாதே, ஆத்ம ஸ்வரூபத்தளவும் சென்று (இன்பத்துன்பமித்யாதி) அத்தை "த்யாஜ்யம்" என்று விட்டாலும், ஸுகது:கங்களுக்கு ஹேதுவான புண்ய பாபகர்மங்கள் கிடக்குமாகில் பின்னையும் கொண்டு மூட்டுமிறே ; அவற்றையும் விட்டு; அவற்றைவிட்டாலும் ருசிவாஸனைகள் கிடக்குமாகில் பின்னையும் கர்ப்பிக்கும் (பசையற்றால்) ருசிவாஸனைகளற்றால் (அன்றே யப்போதே) அக்காலத்திலே அம்முஹூர்த்தத்திலே (வீடு) ப்ராக்ருதி ப்ராக்ருதங்களில் தொற்றறுய்; ப்ரக்ருதிபின்தனை சுணையும், ஸௌகுமார்யமுமுடையாரில்லை; தன்பக்கல் த்யாஜ்யபுத்தி பண்ணினரைத் தானும் முகம்பாராது.

( அதுவேவீடு ) (க) "அற்றதுபற்றெனிலுற்றது வீடுயிர்" என்று ப்ராக்ருதங்களில் தொற்றற்றவாறே ஆத்மப்ராப்தி லக்ஷண மோக்ஷமாயிருக்கும்; அதுக்கென்னச்செய்யவேண்டுவதில்லை. (வீடாமே) அவனுக்கு ப்ரகாரமாக வாத்மவஸ்துவையநுஸந்தித்து, அவ்வழியாலே இதுதன்னை ப்ராப்யமாகவிறே இவர்தாம் நினைத்திருப்பது; அவ்வளவுபோகமாட்டாதே, இதின் நன்மையைக்கண்டு இவ்வளவிலே கால்தாழ்வார்க்கும் போந்திருந்ததீ ! என்கிறார். தம்முடைய வுத்தேஶ்யத்தி லேகதேசத்தைப் புருஷார்த்தத்தில் சரமாவதியாகக் கொள்ளுகைபாலேயிறே முன்பிவரித்தைச் சிரித்திருந்தது. (சு)

---

## ஏழாம்பாட்டு.

அதுவேவீடு வீடுபேற்றின்பந்தானு மதுதேறி * எதுவேதானும் பற்றின்றியாதுமிலிகளாகிற்கில் * அதுவேவீடுவீடு பேற்றின்பந்தானு மதுதேறாது * எதுவேவீடேதின்பமென்றெய்த்தாரெய்த்தா ரெய்த்தாரே.

ப:—அநந்தரம், உக்தப்ரகாரத்திலே ஆத்மாவலோகநம்பண்ணுதார், ததநுபவவிஷித்தியன்றியே ஸம்ஸரிப்பர்களென்கிறார்.

(இ-ள்) அதுவே-கீழ்ப்சுவத்ப்ரகாரதயா ப்ரஸ்துதனை வாத்மாவினுடைய வநுபவமே, வீடு-மோக்ஷமாவது.வீடுபேறு-அந்த மோக்ஷலாபத்

(க) க-உ-டு.

தால் வரும், இன்பந்தானுமது-ஆநந்தரூமேயாக, தேறி-நிஷ்கர்ஷித்து எதுவேதானும்-ப்ரக்ருதி ப்ராக்ருதங்களெல்லாவற்றிலும், பற்று-போக்யபோகோபகரண போகஸ்த்தாநரூபேண வருகிறஸங்கம், இன்றி-அற்று, யாதும்-அத்தாலேவந்த ருசிவாஸனைகளும், இலிகளாகிற்கில்-இன்றியிலேயொழியப்பெறில், அதுவே-முன்புதானறுதியிட்ட வாத்மாநுபவமே, வீடு-மோக்ஷமும், வீடுபேறு-மோக்ஷலாபஜநிதமான, இன்பந்தானும்-ஆநந்தமும்,அது-அதுவே,தேறாது-இப்படி பகவதாத்மகமாக வாத்மாவை நிஷ்கர்ஷிக்கமாட்டாதே,எது-எது, வீடு-மோக்ஷம் இன்பம் அத்தால்வரும் ஸுகம், எது-எது, என்று-என்று,எய்த்தார்-சித்தசௌர்ப்பல்யம்பிறந்தவர்கள், எய்த்தாரெய்த்தாரே-கர்ப்பநரகங்களிரண்டாலுமெய்த்தேவிடுவர்கள். (எ)

ஆறு:—(அதுவேவீடு) இந்தவாத்ம ஸ்வரூபாவிர்ப்பாவமே மோக்ஷமாகிறது, மோக்ஷம்பெற்றால் பெறும் ஸுகமாவது மதுவேயென் றத்யவஸித்துக்கொண்டு வ்யதிரிக்தவிஷய ஸங்கத்தை யெல்லாம் விடில், ஆத்மஸ்வரூபாவிர்ப்பாவலக்ஷணமாயிருந்த மோக்ஷம் கைவரும், இப்படிச் செய்யாதார்க்குக் கைவாராது, அவர்கள் ஸம்ஸரித்தேபோ மித்தனையென்கிறார். (எ)

ஈடு; அவ:—கீழ்ச்சொன்ன வுபாயத்தின்படியே அவ்வஸ்துவை ப்ராபிக்கமாட்டாதே அதிலே ஸம்சயமநுவர்த்திக்குமவர்கள் உருவக்லேசப்பட்டே போமித்தனையென்கிறார்.

(அதுவேவீடு) கீழ்ச்சொன்னவதுவே ஆத்ம ப்ராப்திலக்ஷண மோக்ஷமாகிறது. (வீடுபேற்றின்பந்தானுமது) அம்மோக்ஷத்தை ப்ராபித்தால்வரும் ஸுகமுமதுவே (தேறி) இப்படிதெளிந்து (எதுவேதானும்பற்றின்றி) ப்ரக்ருதிப்ராக்ருதங்களிலுண்டான தொற்றற்று (யாதுமிலிகளாகிற்கில்) அதில் ருசிவாஸனைகளுமறப்பெறில் கர்மத்தை யநுஷ்டித்து ஜ்ஞாநத்தையுடையனாய், *ஸ்தித ப்ரஜ்ஞாக்யாவஸ்த்தையைபிறந்து, யோகமும் தலைநின்று, ஆத்மஸாக்ஷாத்காரம்பண்ணப்பெறில்.

(அதுவேவீடு) கீழ்ச்சொன்ன வாத்மப்ராப்தியேமோக்ஷம் (வீடுபேற்றின்பந்தானுமது)மோக்ஷஸித்தியில்வரும்ஸுகமு மந்தவாத்மாநுபவம், (தேறாது) இப்படி தெளியமாட்டாதே. (எதுவேவீடேதின்பமென்றெய்த்தார்) மோக்ஷமாகிறதெது, மோக்ஷ ஸுகமாகிறதேத

தென்றிளைத்தவர்கள். (எய்த்தாரேய்த்தாரே) இளைத்தாரிளைத்தா ரென்று உருவக்லேசப்பட்டேபோமித்தனை; நிராஶ்ரயமாக வாத்ம ஸ்வரூபத்தை யநுஸந்திக்கை நிஷ்ப்ரயோஜநமென்கை. (எ)

---

# எட்டாம்பாட்டு.

எய்த்தா ரெய்த்தா ரெய்த்தாரேன்றில்லத்தாரும் புறத்தாரும் மொய்த்து * ஆங் கலறிமுயங்கத்தாம் போகும்போது * உன்மத்தர் போல் பித்தேயேறியனுராகம் பொழியும்போதெம்பெம்மானோ டொத்தே சென்று * அங்குள்ளங்கூடக்கூடிற்றாகில்நல்லுறைப்பே.

ப:—அநந்தரம், கீழுக்தமான ப்ரக்ரியையாலே ஆத்மப்ராப்தி காம னுக்கு தத்வலோகந ரூபமான ஸாதநம்கைப்பட்டாலும், பகவத்விஷய மான வந்திமஸ்ம்ருதியுண்டாகிலு மாயிற்று ப்ராப்தி ஸித்திப்ப தென் கிறார்.

(இ-ள்.) எய்த்தார்-அவயவங்கள் வ்யாபாரக்ஷமமல்லாதபடி யிளைத் தார் - எய்த்தார்-இந்த்ரியங்கள் விஷயக்ரஹண ஸமர்த்தங்களாம்படி யிளைத்தார். எய்த்தார் - ஶ்வாஸமும் மந்தீபவிக்கும்படி யிளைத்தார். என்று-என்று, இல்லத்தாரும்-க்ருஹத்தில் பார்யா புத்ரப்ருத்யாதிகளும் புறத்தாரும்-புறம்புள்ள ஸம்பந்திபாந்தவ ப்ரப்ருதிகளும், மொய்த்து-திர ண்டு, ஆங்கு-அவ்வவஸ்தையிலே, அலறி-இரியக்கூப்பிட்டு, முயங்க-மேல் விழ (க) “தாவத் ஸர்வம் ஸுகாயதே—யாவத்ப்ராணா நஸ்யந்தி - தம் புத்ரபஶுமித்ரார்த்தவ்யாஸக்த மநஸந்தரம்” என்றிவர்கள் பக்கலிலே நெஞ்சைவைத்து, யமபடரேவழித்துணையாக, தாம் - தாம் போகும் போது-போமவஸ்தையிலே, உன்மத்தர்போல்-உந்மாதங் கொண்டா ரைப்போலே, பித்தேயேறி-நெஞ்சுகலங்கி (உ) “ஸா தேஷாம் ஸம்ஹ்ருதி-ஏதேகதம்பவிஷயந்தி” என்று, இவற்றின் பக்கல்மமதையாலே, அனுராகம்-அநுராகம், பொழியும்போது-அபிவர்த்திக்கும் காலத்தில் இக்கலக்கமற்றுத் தெளிவுபிறந்து, எம்பெம்மானோடொத்தேசென்று- என்னுடைய ஈஶ்வரனிவனைத்தனக்கு சேஷமென்று நினைத்திருக்கு மாபோலே, இவனும் தன்னை அவனுக்கு ஶேஷமாகவநுஸந்தித்து அங்கு-அவன்பக்கலிலே, உள்ளம்-தன் னெஞ்சு, கூடக்கூடிற்றாகில் செ ன்று கூடப்பெற்றதாகில், நல்-நல்ல, உறைப்பு உறுதி.

தத்ப்ரகாரபூதனான வாத்மாவை லபித்ததாகலாம்; இப்படி துஸ்ஸஹமான வாத்மாவலோகநத்தையிறே யெனக்கெளிதாக ப்ரகாஶிப்பித்ததென்று கருத்து.

ஆறு:—(எய்த்தாரெய்த்தார்) இவ்வாத்ம ஸ்வரூபா விர்ப்பாவ லக்ஷணமோக்ஷமானது இந்த்ரியஜயமாத்ரத்தாலே கைவாராது, அந்திமதஶையிலே பகவத்ஸமாராதநாத்மாநுஸந்தாநமும் வேண்டுமென்கிறார். (அ)

ஈடு ; அவ:—இப்படி துஸ்ஸம்பாதமான ஜ்ஞாநம் கைவந்தாலும், அந்திமஸ்ம்ருதியில்லையாகில் செய்ததெல்லாம் வ்யர்த்தமென்கிறார்.

( எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென்று ) இவனுக்கு உத்க்ரமணதஶை பிறப்பதற்குமுன்னே இவன் முடிகை யிஷ்டமாயிருக்கையாலே, "முடிந்தான், முடிந்தான்" என்று பலகாலுஞ் சொல்லாநிற்பர்களாயிற்று; இவன் கலங்கினதஶையிலே நெஞ்சைத் தெளிவித்து உத்தேஶ்ய வஸ்துவை யநுஸந்திக்கவல்லனும்படி பண்ணுகையன்றிக்கே, "முடிந்தான், முடிந்தான், முடிந்தான்" என்கிற வித்தையே சொல்லாநிற்பர்களாயிற்று (இல்லத்தாரும் புறத்தாரும்) இவன்றானுள்ளநாளில் இவர்களுக்கொன்றும் கொடாமையாலே, "இவனும் இதொருநடுவிற் பெருங்குடியுமென், இவன் முடிந்து உள்ளத்ரவ்யத்தை நாமே விநியோகங்கொண்டாலாகாதோ" என்றிருப்பர்கள் பார்யாதிகள் (புறத்தாரும்) அவனுமிவர்களுமான ஸமுதாயம் பொறாமையாலே "போகவமையும்" என்றிருப்பர்கள் புறம் புள்ளார் (மொய்த்து) கல்யாணத்துக்கழைத்தாலும் வாராதவர்கள், துஃகமுண்டானவாறே தாங்களேவந்து மேல்விழுவர்கள்.

(ஆங்கலறி) இவனுக்குள்ளதெளிவும் போம்படி கூப்பிடாநிற்பர்கள்; மீளுகைக்கு ஶங்கையுண்டான தஶையிலே, பயத்தாலே ப்ராணன்போம்படி கூப்பிடுவர்கள். (முயங்க) கட்டிக்கொள்ள; கூப்பீட்டுக்குப்போகாத குறைப்ராணன்களும் போம்படி, ஸ்நேஹிகளைப்போலே மேலேவிழுந்து கட்டிக்கொள்வர்கள். (தாம்போதும்போது) "இவர்களையுமிவ்வைஶ்வர்யத்தையும் விட்டுப்போகாநின்றோம்" என்று நெஞ்சிங்கேயிழுக்க, தன்னால் மீளவொண்ணாமையாலே, ஶரீரத்தைவிட்டுத் தாங்களேபோகாநிற்பர்கள். (தாம்போதும்போது)

என்கிறார்காணு மப்போதைக்லேசத்தைப்பற்ற. (உன்மத்தரித்யாதி) வீதராகருங்கூட, உந்மாததசையிற்போலே யறிவுகெட்டு, தெளிவு பிறந்து தன்னையும் ஸர்வேஶ்வரனையு மநுஸந்திக்கவேண்டும் தசையிலேகலங்கி (அனுராகம்பொழியும்போது) இளையாளையும் பொன்னையும் பூட்டிக்கொடுவந்து முன்னேநிறுத்துவர்கள்; புத்ராதிகள்பக்கல் ஸ்நேஹியாத நாளைக்கும் போரஸ்நேஹிக்கத்தொடங்கும். ஜீவிக்கும்நாள், லோபத்தாலே யிவற்றுக்கொன்றும்செய்யான்; இப்போதாக, "புதைத்துவைத்ததநத்தை யாபரணமாகப்பூட்டிக் காணப் பெற்றிலோம்" என்று மதகுதிறந்து ஸ்நேஹிக்கும்.

(எம்பெம்மானோடொத்தேசென்றித்யாதி) இப்படி கலங்குகிற ஸமயத்திலே தெளிவுண்டாய், தன்னையுமவனையு மநுஸந்தித்து, "அவனோடொத்த பராத்தியையுமிதுடைத்து" என்றநுஸந்திக்கை யாகிற விவ்வர்த்தம் கூடிற்றாகில். "அவ்வஸ்துவும் ஜ்ஞாநாநந்தலக்ஷணமாயிருக்கும், இவ்வஸ்துவும் ஜ்ஞாநாநந்த லக்ஷணமாயிருக்கும்" என்றநுஸந்திக்கும்படி அவ்வாத்மவஸ்துவிலே ஹ்ருதயம் சேருகையாகிறவர்த்தம் கூடுமாகில் (நல்லுறைப்பு) நல்லவாய்ப்பு (ஆத்மப்ராப்திஸித்திக்கும்)அல்லாதபோது, செய்ததெல்லாம் வ்யர்த்தம்; உன்மத்தர்போல் பித்தேயேறில் அபிமதம் ஸித்தியாது; அனுராகம் பொழியில் ஆதிபரதனைப்போலே மானாய்ப்போமித்தனை.

ஆண்டான்பணிக்கும்படி-"நின்றவொன்றை யுணர்ந்தேனுக்கு என்னும்பாட்டுத்தொடங்கி, நிஷ்க்ருஷ்டாத்மாநு ஸந்தாநமாத்ரமேயன்றிக்கே, பகவச்சேஷத்வ பர்யந்தமாக வநுஸந்திக்கிறது; இப்பாட்டில் 'எம்பெம்மானோடொத்தே சென்றங்குள்ளங் கூடக்கூடிற்றாகில்' என்கிற வந்திமஸ்ம்ருதியும், எம்பெருமான் தனக்கு போக்யமாக விவ்வாத்மவஸ்துவை நினைத்திருக்குமாபோலே, இவனுமவனோடொத்து அவன்நினைவோடொத்து அத்தசையிலே போக்யதவாநு ஸந்தாநம் கூடுமாகில் நல்லவாய்ப்பு" என்று, பகவத்குணங்களிலே வித்தராயிருக்கிறவிவரிதெல்லா மநுஸந்திக்கிற தென்னென்னில்; "இப்படியரிதாயிருக்கிற வித்தைக்கிடீர்! எனக்குக் காட்டித்தந்தது" என்று அவன் பக்க லுபகாரஸம்ருதியாலே. (அ)

# ஒன்பதாம்பாட்டு.

கூடிற்றாகில் நல்லுறைப்புக்கூடாமையைக்கூடினால்* ஆடற்
பறவை யுயர்கொடியெம்மாயனாவததுவதுவே * வீடைப்பண்ணி
யொருபரிசேயெதிர்வுநிகழ்வுங்கழிவுமாய் * ஓடித்திரியு மியோகி
களுமுளருமில்லையல்லரே.

ப:—அநந்தரம். இப்படி ப்ரகாரதயா ப்ராப்தியின்றியே ஸ்வரூபைக்யம் மோக்ஷமென்கிற குத்ருஷ்டிபக்ஷம் அஸம்பவக்ரஸ்தமென்று அதிக்ஷேபிக்கிறார்.

கூடிற்றாகில் - நித்யஸம்ஸாரியான ஜீவஸ்வரூபம் நிரதிசய விலக்ஷண ப்ரஹ்மஸ்வரூபமாகக் கூடுமாகில், நல்-நல்ல, உறைப்பு-பெருப்பேறன்றோ; கூடாமையை-லோகத்தில் கூடாமையே வடிவாயிருக்கிற ஸஸ விஷாணாதிகளை, கூடினால்-லபிக்கப்பெற்றதாகிலிறே, அது-அந்த ஜீவ வஸ்து, நிர்த்தோஷப்ரமாண வேதமயனாய், ஆடல்-பகவத்ப்ரத்யாஸத்தியாலே தர்ஸநீயகதியான, பறவை-பெரியதிருவடியை, உயர்கொடி-ஸ்வவைலக்ஷண்ய ப்ரகாஸகமான உச்ச்ரிதத்வஜமாகவுடைய, எம்-ஆஸ்ரிதாநுபாவ்யமான, மாயனாவது-ஆஸ்சர்யஸ்வரூப ரூபகுணங்களை யுடையனான ஸர்வேஸ்வரனாய்விடுவது, அதுவே-அந்தஜீவவஸ்துதானே யாமத்தனை; த்ரவ்யம் த்ரவ்யாந்தரமாகை அஸம்பாவிதமிறே, ஆனாலிதுக்கு மூலமென்னென்னில்; ஒருபரிசே-ஸ்வபுத்திமர்யாதையா யிருப்பதொருபடியாலே அப்ரமாணமாக, வீடை-மோக்ஷத்தை, பண்ணி-கல்பித்து எதிர்வும்-மேல்வரும்காலத்தோடு, நிகழ்வும் - இப்போது வர்த்திக்கிற காலத்தோடு, கழிவும்-முன்பு கழிந்தகாலத்தோடு வாசியற, ஆய்-ஒருபடிப்பட்ட வுள்ளராய், ஓடி-(க) "ஸம்ஸார ஜநீ ஜந் -ஸம்ஸாரபதவீம்வ்ரஜந்" என்று ஐங்காலராயோடி, திரியும்-திரியக்கடவ, யோகிகளும்-யோகிகளும், உளரும்-உண்டாயிருக்கும், அநாதியான கர்ம ஜநிதயான ஸம்ஸாரப்ரவாஹத்தில், இல்லையல்லரே-இல்லாதாரில்லையிறே.

ஏவம்வித மஹாயோகிகளும் ஸம்பாவித மென்றதிக்ஷேபித்தாராயிற்று. (க)

ஆறு:—(கூடிற்றாகில்) பரமபுருஷ ஸமாநாகாரதயா ஆத்மஸ்வரூப மநுஸந்தேயமென்று சொல்லுவானென், தத்ப்ராப்திக்குமன்றோ வென்னில்;

---

(க) வி-பு-க.

பரமபுருஷனுக்கு மிவ்வாத்மாவுக்கு மைக்யங்கூடுவது பாவா பாவங்களுக் கைக்யங்கூடில்ன்றோ ; ஆதலால் அவனுமவனே, இவனுமிவனே, அவனிவனாகக்கூடாது. இங்ஙனே யிவற்றைச் சொல்லுவார் சிலருளரோவென்னில் ; ஸ்வமதி பரிகல்பித நிர்மூலாத்வைதவாதிகளான குத்ருஷ்டிகளென்று முளரென்கிறார். (கூ)

ஈடு ; அவ:—அந்திமஸம்ருதியிலே ஜீவபரபேதம் ப்ரஸ்துதமானவாறே, இந்த பேத மபரமார்த்தம், தத்த்வஜ்ஞானம் பிறந்தவாத்மாவும் ப்ரஹ்மாவு மொன்றென்று கொண்டு நித்ய ஸம்ஸாரியான சேதநனையே ப்ரஹ்மமாகச் சொல்லுகிற மாயாவாதிகளை க்ஷேபிக்கிறார்.

(கூடிற்றாகில் நல்லுறைப்பு) அநுபாஷணம் (கூடாமையித்யாதி) ஶாஶ்விஷாணமாதல், ககநகுஸுமமாதல், வந்த்யாஸுதனுதல் அநுபபந்நமானவை கூடுமாகில், "ஸர்வேஶ்வரவாஹநம்" என்னும் ஹர்ஷப்ரகர்ஷத்தாலே யாடாநின்றுள்ள பெரியதிருவடியை த்வஜமாகவுடையவனுய், ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையனுய் பெரியதிருவடி திருத்தோளிலே பின்பும் பிரகுவாளியுமாய் ஸம்ஸாரிசேதநனிருப்பது (அதுவதுவே) அவ்வஸ்துவவ்வஸ்துவே; வஸ்து வஸ்த்வந்தரமாகாதிறே.

நித்யஸித்தர்க்கு மவ்வருகாக ஸம்ஸாரிசேதநரைச் சொல்லுவாரும் சிலருண்டோவென்ன (வீடைப்பண்ணியொருபரிசே) (ஒருபரிசே-வீடைப்பண்ணி) ஶாஸ்த்ரமூலமாகவன்றிக்கே, அவித்யா நிவ்ருத்தியே மோக்ஷமென்று ஸ்வபுத்தியாலே யொன்றைக்கட்டி. (எதிர்வும் நிகழ்வும் கழிவுமாய்) பூதபவிஷ்யத்வர்த்தமாந காலத்ரயத்திலுமுளராய் (ஓடித்திரியும் யோகிகளுமுளரும்) நிஷ்ப்ரயோஜநமாகத் தட்டித் திரியும் மஹாயோகிகளுமுளர், (இல்லையல்லரே) இல்லாமையில்லை; காலத்ரிதி, பண்ணிவைக்கும் பாபங்களுக் கெல்லையில்லை. இப்படி இருப்பார் சில மஹா புருஷர்களுண்டாகக்கூடாதே ; ஸம்ஸாரத்தில் கூடாததுண்டோ. (கூ)

---

## பத்தாம்பாட்டு.

உளருமில்லையல்லராய் உளராய் இல்லையாகியே * உளரேம் மொருவரவர்வந்து என்னுள்ளத்துள்ளே உறைகின்றார் * வளரும் பிறையும் தேய்பிறையும்போல அசைவும் ஆக்கமும் * வளருஞ் சுடரும் இருளும்போல் தெருளும்மருளும்மாய்த்தோமே. (க0)

ப:—அநந்தரம், ஏவம்விதமான வாத்மஸ்வரூபத்தை ப்ரகாசிப்பித்து,பாஹ்யகுத்ருஷ்டி மதங்களில் கைகழலாதபடி யென்னெஞ்சிலே அவன் புகுந்திருக்கையாலே, என்னுடைய ஸாம்ஸாரிக க்லேசமெல்லாந் தீர்ந்தேனென்கிறார்.

(இ-ள்.) இல்லை-ஆச்ரிதவிஷயத்தி லில்லையென்கிற சொல்லுக்கு அல்லராய் - விஷயமல்லராய்க்கொண்டு, உளரும் - என்றுமுளருமாய், இல்லையாகியே-அநாச்ரித விஷயத்திலில்லையாயே, உளராய்-உளராமவர், எம்-எங்களுக்குஸ்வரூபரூபகுணவி சிஷ்டராய்க்கொண்டு, ஒருவர்-அத்விதீயராய், உளர்-ப்ரகாசிப்பித்தார். அவர்-அவர்தாமே, வந்து-அபிநிவிஷ்டராய்வந்து, என்-என், உள்ளத்துள்ளே-நெஞ்சுக்குள்ளே, உறைகின்றார்-நித்யவாஸம்பண்ணு நின்றார். அத்தாலே, வளரும்-வளரும், பிறைபோல-பிறைபோலேயிருக்கிற, ஆக்கமும்-ஆக்கத்தையும், தேய்பிறையும்போல-தேய்பிறைபோலேயிருக்கிற, அசைவும்-அழிவையும், வளரும் சுடரும்போல்-அபிவ்ருத்த தேஜஸ்ஸையுடைய வாதித்யனைப்போலும், தெருளும்-ஜ்ஞாநத்தையும், இருளும்போல்-அந்தகாரம்போலேயிருக்கிற,மருளும்-அஜ்ஞாநத்தையும் மாய்த்தோம் நசிப்பித்தோம்.

ஔபாதிக வ்ருத்திக்ஷயங்களும் ஜ்ஞாநாஜ்ஞாநங்களும்போய் ஏகரூப ஸ்வபாவனான வாத்மாவை தர்சிக்கப்பெற்றோம் நாமென்று கருத்து

ஆறு:—(உளரும்) இப்படி தூர்த்தர்சமாய், பகவச்சேஷதைகரஸமாய், விலக்ஷணமுமான வாத்மஸ்வரூபத்தை, வ்ருத்தஸம்ச்லேஷஸ்த்தைர்யார்த்தமாக, கேவலம் க்ருபையாலே யெனக்குக்காட்டித் தந்தருளினானிப்போது; முன்பு, இஸ்ஸம்ச்லேஷ ஸ்த்தைர்யார்த்தமாக, * நிரவதிகஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநந்தகுண விசிஷ்டனாய், அஸங்க்யேய கல்யாண திவ்யபூஷண திவ்யாயுதோபேதனான தன்னைக்காட்டிக்கொண்டென்னுள்ளே புகுந்தருளினான்; நிரீச்வரஸாங்க்ய குத்ருஷ்டிகளில் நான்புகாதபடி தன்னைக்காட்டிக்கொண்டிருந்தருளினான்; ஆதலால், அநர்ஹதாநுஸந்தாந ஜ்ஞாநாஜ்ஞாந வ்ருத்திக்ஷயாதி பகவதநுபவ விரோதிகளெல்லாம் போக்கினோமென்கிறார். (கஎ)

ஈடு; அவ:—ஸாங்க்யாதி குத்ருஷ்டிகளில் நான் புகாதபடி தானே ஸ்வயம்வரித்து, நினைவுக்கு வாய்த்தலையான மநஸ்ஸிலே நித்யவாஸம்பண்ணுகையாலே, என்னுடைய ஸகல துரிதங்களும் போயிற்றென்கிறார்.

(உளருமில்லையல்லராய்) "ஈச்வரனென்பானொருவனுளன்; இல்லையென்னவொண்ணாதே அஸ்திமாத்ரமாயிருக்கும்" என்று ஸேச்வரஸாங்க்யமதம். விதிநிஷேதகக்ஷணன்றிக்கேயிருக்கும் பர்த்தாவைப்போலே, ஈச்வரனுகிறான் ஜகந்நியமநக்ஷமனன்றிக்கே ஸத்பாவமாத்ரமேயாயிருக்குமென்கை. (உளராயில்லையாகியே) "இல்லையாகியேகாண் அவனுடைய வுண்மை" என்னும் கிரீச்வரஸாங்கயன்; அந்தப்பக்ஷங்களை நிரஸிக்கிறார். அன்றிக்கே, ஆச்ரிதாநாச்ரிதவிஷயமாக்கி, இல்லைபல்லராயுளராயிருப்பர் ஆச்ரிதர்க்கு; இல்லையாகியே யுளராயிருப்பர் அநாச்ரிதர்க்கு.

(உளரேம்மொருவர்) குணவிபூக்யாதிகளால் பரிபூர்ணராய்க்கொண்டு உளராய், அவற்றைக்காட்டி யென்னை விஷயீகரித்த வத்விதீயர்; (அவர்வந்தென்னுள்ளத்துள்ளே யுறைகின்றார்) குணாதிகரானவவரென்னளவும்வந்து, * மயர்வறமதிநலமருளித் தாம்திருத்தினநெஞ்சிலே நித்யவாஸம்பண்ணுகின்றார். (வளருமித்யாதி) தீபஸந்நிதியிலந்தகாரம் நில்லாதாப்போலே, அவரென் ஹ்ருதயத்திலே நித்யவாஸம்பண்ணுகையாலே, சந்த்ரனுக்குப்போலே மாறிமாறி வரக்கடவதான வ்ருத்திக்ஷயங்களும், ஆதித்யனு மந்தகாரமும் போலே மாறிமாறிவரக்கடவதான ஜ்ஞாநாஜ்ஞாநங்களும் மாய்க்கப்பெற்றோம். (கூ0)

---

## பதினென்றாம் பாட்டு.

தெருளும் மருளும் மாய்த்துத்தன்திருந்து செம்போற்கழலடிக்கீழ் * அருளியிருத்துமம்மானை மயனுஞ்சிவனும் * திருமாலால் அருளப்பட்டசடகோபனோராயிரத்துளிப்பத்தால்* அருளியடிக்கீழிருத்தும் நம்மண்ணல் கருமாணிக்கமே.

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாக பகவத் ப்ராப்தியை யருளிச்செய்கிறார்.

(இ-ள்.) தெருளும் மருளும்-ஸாம்ஸாரிகமான ஜ்ஞாநாஜ்ஞாநங்களை, மாய்த்து-போக்கி, தன் - ஆச்ரிதரைத் தானேயங்கீகரிக்கும், திருந்து-திருத்தத்தையுடைத்தாய், செ-சிவந்த, பொன் பொன்னை, கழல்-வீரக்கழலையுடைய, அடிக்கீழ்-திருவடிகளின்கீழே, அருளி-"அடி

க்கீழமர்ந்து புகுந் தடியீர்வாழ்மின்'' என்றருளி, இருத்தும் - புறம்பு போகாதபடி யிருத்தும், அம்மானும்-ஸ்வாமியாம், அயனும் சிவனும்-ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களுக்குக்கடவ ப்ரஹ்மருத்ராதிகளுக்கு மந்தராத்மபூதனை, திருமாலால்-ஸ்ரிய:பதியாலே,அருளப்பட்ட-*மயர்வற மதிநல மருளப்பட்ட,சடகோபன்-ஆழ்வாருடைய, ஓர்-அத்விதீயமான, ஆயிரத்துள்-ஆயிரந்திருவாய்மொழியில், இப்பத்தால்-இப்பத்துநிமித்தமாக, நம்-நம்முடைய, அண்ணல்-ஸ்வாமியாய், கருமாணிக்கம்-நீலரத்நம்போலே யிருக்கிற திருநிறத்தையுடையவன்; அருளி-நிரவதிகக்ருபையைபண்ணி, அடிக்கீழ்-தன் திருவடிகளின்கீழே; இருத்தும்-இருத்தும்.

இதுவும்-அறுசீராசிரியவிருத்தம். (கக)

ஆறு:—(தெருளும்) சதுர்முக பசுபதி ப்ரப்ருதி ஸர்வாத்மாக்களுக்கும் நியந்தாவாய், ஸ்ரிய:பதியாயிருந்து வைத்து, ப்ராக்ருத விஷய ஜ்ஞாநாஜ்ஞாநாதி ஸ்வாநுபவ விரோதிகளைப் போக்கி, ஸ்வாஸ்ரிதரைத் தன்திருவடிகளிலே சேர்விக்கும் ஸ்வபாவனுயிருந்த வெம்பெருமானுடைய வருளுக்கே பாத்ரமான சடகோப னாயிரத்து ளிப்பத்தும் வல்லாரை யருளியவனடிக்கீழிருத்து மென்கிறார். (கக)

ஈடு ; அவ:—நிகமத்தில்-இப்பத்தும் கற்றாரை, தம்மை விஷயீகரித்தாப்போலே விஷயீகரித்துத் தன் திருவடிகளின்கீழே வைத்துக்கொள்ளுமென்கிறார்.

(தெருளும்மருளும்மாய்த்து) ப்ரஹ்மாவின் ராஜஸமடியாகவந்த குத்ருஷ்டிஜ்ஞாநமானதும், ருத்ரன் தாமஸஜ்ஞாந மடியாகவந்த வாகமாதி பாஹ்யஜ்ஞாநமான வஜ்ஞாநமும் மாய்த்து. ஸ்வாநுபவ விரோதியான ப்ராக்ருதவிஷய ஜ்ஞாநாஜ்ஞாநங்களை வாஸனையோடே போக்கி, (தன்திருந்து செம்பொற்கழலடிக்கீழ்) ஆஸ்ரிதரை வேறொருவர் காலில் குனியவிடாததாய், ஸ்ப்ருஹணீயமாய், வீரக்கழலையுடைத்தான திருவடிகளின்கீழே, இப்போதை வீரக்கழல், பிராட்டி முன்னாக வாஸ்ரயித்தாரைத் தன் கையிலும் பிறர்கையிலுங் காட்டிக்கொடாதவீரக்கழல், (அருளியிருத்தும்) கேவல க்ருபையாலே யிருத்தும்.

(அம்மானுமயனும் சிவனும் திருமாலால்) ப்ரஹ்மருத்ரப்ரமுகரான ஸர்வாத்மாக்களுக்கும் நிர்வாஹகனாய், ஸர்வேச்வரனை ப்ரரியஃபதியாலே, "மயர்வற மதிநலமருளினன்" என்கிறபடியே (அருளப்பட்டசடகோபன்) அருளுக்கு விஷய பூதரான வாழ்வார், இவ்வருளுக்கு வாய்த்தலை பிராட்டியென்கை (ஓராயிரத்துளிப்பத்தால் நம்மண்ணல் கருமாணிக்கமே-அருளியடிக்கீழிருத்தும்) ஸர்வ நிர்வாஹகனாய், ஸ்ப்ருஹணீயமான வடிவழகையும் குணங்களையு முடையனை ஸர்வேச்வரன் தானேயருளித் தன் திருவடிகளின்கீழே சேர்த்துக்கொள்ளும், இத்திருவாய்மொழியப்யஸித்தார்க்குத் தாம் பெற்ற பேறென்கிறார். (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

திருவாய்மொழி எட்டாம்பத்து

எட்டாம் திருவாய்மொழி

முற்றிற்று.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# எட்டாம்பத்து.

# ஒன்பதாந்திருவாய்மொழி.

## கருமாணிக்கமலை-ப்ரவேசங்கள்.

**ஆறு:**—(கருமாணிக்கமலை) எம்பெருமான் நிர்ஹேதுகமாகத் தன்னழகைக்காட்டித் தம்மை வசீகரித்துக்கொண்டு, தம்மோடு கலந்தருளின கலவியால் தமக்குவந்த நிர்வ்ருதியை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். *

ப:—ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழே-"ஸௌந்தர்யஶீலாதி விசிஷ்டனான ஸர்வேஶ்வரனுக்கு பரிஶுத்தாத்ம ஸ்வரூபமானது ப்ரகாரதயாஶேஷம்" என்றுதெளிந்தவர், அந்தஶேஷபூதனான வாத்மாவினுடைய ததேகரக்ஷ்யத்வ ததேகபோக்யத்வங்களை ப்ரதிபாதிப்பதாக, ஶேஷியினுடைய வவயவஶோபையையும், ஆபரண ஶோபையையும், அநிஷ்ட நிவர்த்தகத்வத்தையும், குணவத்தாதிஶயத்தையும், அபரிச்சிந்ந விபூதியோகத்தையும், ஔதார்யோத்கர்ஷத்தையும், ப்ரணயித்வாதிஶயத்தையும், ஸர்வகர்ம ஸமாராத்யதையையும், ஸர்வவேதப்ரதிபாத்யதையையும், ஆஶ்சர்யாவஹத்வத்தையு மநுஸந்தித்து; ஏவம்ப்ரகார விசிஷ்டனாய்த் திருப்புலியூரிலெழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரனுடைய வநுபவத்திலே யவகாஹித்து ஹ்ருஷ்டரான விவருடைய ரூபாதி வைலக்ஷண்யத்தைக்கண்ட பரிவர்தொடக்கமான பார்ஶ்வஸ்தர், இந்தவைலக்ஷண்யத்திலே ஜிஜ்ஞாஸுக்களாக;

ஸுஹ்ருத்பூதரானவர் அவர்களுக்கறிவித்த பாசுரத்தைத் திருப்புலியூரில் நாயனாருடனே யியற்கையிலே புணர்ந்த நாயகியினுடைய வேறுபாடுகண்டு "ஸம்ஶ்லேஷம்ப்ரவ்ருத்தம்" என்றறிந்த தோழியானவள்; இதறியாதே, இவளுடைய * பதிஸம்யோக ஸுலபமான பருவத்தைக்கண்டுபந்துக்கள்வேறே மணமுரசறைவிக்க,"நாயகிக்கிது அஸஹ்யம்" என்றறிந்து விலக்குவதாக வுத்யோகித்து, இவளுடைய வுக்திப்ரகாரத்தாலும் வடிவில்வேறுபாட்டாலும் நிரூபித்தறிந்தாளாக: பந்துக்களைக்குறித்து,"இவள் திருப்புலியூர் நாயனாருடைய குணநாமங்களையே பலகாலும் பேசாநின்றாள், இவளுக்கங்கே பாவபந்தமுண்டாகக்கூடும்,

அவனாகிறான்-இவளுக்குத் தகுதியாம்படி அபிரூபனாய், அலங்காரவிசிஷ்டனாய், ஆண்பிள்ளையாய், அதிசயிதகுணனாய், ஐஶ்வர்யயுக்தனாய், அத்யுதாரனாய், ப்ரணயியாய், ஆசாரஸ்த்தனாய், வேதவித்க்ரேஸரனாய், ஆஶ்சர்யபூதனாயிருப்பானொருவன்; ஆதலால், இவள்வடிவில் அநந்யதாஸித்தமான ஸம்ஶ்லேஷஸூசக சிஹ்நங்களுண்டாகையாலும், அவனுக்கே யிவளாம்" என்றறத்தோடு நின்றுரைத்த பாசுரத்தாலே யருளிச்செய்கிறார். *

ஈடு; அவ:—கீழ்த் திருவாய்மொழியில், முதலிரண்டரைப் பாட்டாலே, அவனுடைய ஸௌந்தர்ய சீலாதிகளை யநுஸந்தித்து, அவற்றுபாதி விலக்ஷணமுமாய் அநந்யார்ஹமுமாயிருக்கிற வாத்மஸ்வரூபத்தைக் குறைப்பாட்டாலே யநுஸந்தித்தினியரானார்; அந்த போஷத்வாஸத்தாலே ப்ரீதராய், ப்ரீதிபாரவஶ்யத்தாலே தாமான தன்மையழிந்து ஒருபிராட்டிதசையை ப்ராப்தராய், ஸ்வதசையை அந்யாபதேசத்தாலே பேசியினியராகிறார்.

"ப்ரீதியி லந்யாபதேசமுள்ளது இத்திருவாய்மொழி யொன்றுமே" என்றாழ்வான் நிர்வஹிக்கும்படி; திருப்புலியூரி லெம்பெருமானோடே யியற்கையிலே புணர்ந்து பிரிந்தாளொருபிராட்டி அவனாலே அபஹ்ருதசித்தையாயிருக்கிறபடியை உயிர்த்தோழியானவள்கண்டு, இவள்வடிவில் வேறுபாட்டாலும் பேச்சில் வேறுபாட்டாலும் "ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தம்" என்றறிந்தாள்; இவையொன்றையுமறியாதே (க) "வ திஸஂயொமஸ-ஊஂ வயொ ஜஊஸீ ஹாவ ஜெவி தா - பதிஸம்யோக ஸுலபம் வயோத்ருஷ்ட்வாசமேபிதா" என்கிறபடியே, ப்ராப்தயௌவனையென்று மிவ்வளவேகொண்டு, பித்ராதிகள் "ஸ்வயம்வரத்துக்கு ராஜபுத்ரர்கள்வருவது" என்று நகரத்திலே மணமுரசறைவிக்க, அத்தைக்கேட்ட தோழியானவள், ஸ்ரீபாரதாழ்வானை, "நீராஜா" என்றுபண்ணின தூர்யகோஷம்செவிப்பட்டபோது அவன் பட்டதெல்லாம்பட்டு;

"இத்தவதி பெண்பிள்ளை செவிப்படுமாகில் (உ) *மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழாத தன்மையளாயிருக்கிற விவளைக் கிடையாது, ஏற்கவே பரிஹரிக்கவேணும், அது செய்யுமிடத்தில் 'திருப்புலியூர் நாயனாரோடே ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற்று

(க) ரா அயோ கக அ ௬௪ (உ) நா-தி-க-௫

என்போமாகில் நம்சாவற்சோர்வாலே வந்ததாம், அறிவியாதொழி யில் இவளையிழக்கவரும், இனி யிவ்வளவில் செய்யலாவதென்'' என்று பார்த்து, ''இவர்கள் தாங்களும் 'இவளுக்குவடிவிலே யொரு வேறுபாடுண்டு, இதுக்கு ஹேது வேதோ'' என்று விசாரியாநின்றார் கள், நாமுமிவர்களோடே நிரூபணத்தேயிழிந்து அவ்வழியாலே யறிந்தோமாய் இத்தைவிலக்கவேணும்'' என்று நிரூபித்து இவள் வடிவிருந்தபடியால் இவளுக்குத் திருப்புலியூரில் நாயனாரோடே ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற்றுப்போலே யிருந்தது, அவனு டைய குணசேஷ்டிதங்களையே வாய்புலற்றாநின்றாள்; நீங்கள் செய் கிறவற்றைத் தவிருங்கோள்'' என்று அறத்தோடு நிற்கிறாளாய்- ''இது தர்மமல்ல'' என்ன, ''ஆனால் நீசொல்லுகிற திருப்புலியூரில் நாயனார்க்கு இவளுக்கேடான வைலக்ஷண்யமுண்டாகவேணும், ஒப்ப னையும் ஆண்பிள்ளைத்தனமும் குணமும் ஐச்வர்யமும் ஔதார்ய மும் ப்ரணயித்வமு முண்டாகவேணும், ஸமாசாரனாகவேணும், வேதார்த்த தத்த்வஜ்ஞாந முடையனாகவேணும், இவையெல்லா முண்டோ'' என்ன, ''நீங்கள்கேட்கிறவளவல்ல, இவையெல்லாம் குறைவற்றவிஷயம், இவையொன்றுமில்லையேயாகிலும் இவள்தான் அங்கே யநந்யார்ஹையானாள், நீங்கள் செய்கிற விவற்றைத்தவிருங் கோள்'' என்று அத்தை விலக்குகிறதா யிருக்கிறது. ''மணவிலக்கு'' என்பதொரு கிளவித்துறையிது.

திருமந்த்ரத்திலே, தனக்கும் பிறர்க்குமாயிருக்கு மிருப்பைக் கழித்து அநந்யார்ஹசேஷத்வத்தைச் சொல்லக்கடவதிறே; அதிங் குச் சொல்லுகிறது. கீழ்த்திருவாய்மொழியில்-அநந்யார்ஹசேஷத் வஞ்சொல்லிற்று; இதில்-அநந்யசேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமும் அபுருஷார்த்த மென்கிறது. ஒருகந்யகையாகில், ஒருவனுக்கேயாயிரு ஒருவனுக்கேயானால் பிறர்க்குரிய ளல்லளாயிருக்கையு மிறே ஸ்வரூபம். *

---

# முதற்பாட்டு.

கருமாணிக்கமலைமேல் மணித்தடந்தாமரைக் காடுகள்போல்* திருமார்வு வாய்கண் கையுந்திகாலுடையாடைகள் செய்யபிரான்* திருமாலெம்மான் செழுநீர்வயற்குட்ட நாட்டுத்திருப்புலியூர்* அருமா யன் பேரன்றிப்பேச்சிலளன்னை மீரிதற்கென்செய்கேனோ. (க)

ப:—முதற்பாட்டில், திருப்புலியூரிலே யெழுந்தருளி யிருக்கிறவனுடைய வவயவ சோபையிலே யகப்பட்டு அவன் திருநாமமன்றிச் சொல்லுகிறிலளென்கிறாள்.

(இ-ள்.) கரு-கறுத்தநிறத்தையுடைய, மாணிக்கமலைமேல்-மாணிக்கமலைமேலில், மணி-தர்ஶநீயமான வொளியையுடைத்தாய், தடம்-பெருத்த, தாமரைக்காடுகள்போல் - தாமரைக்காடுகள்போலே, திருமார்வு-லக்ஷ்மீ கௌஸ்துப லக்ஷிதமான திருமார்பு, வாய்-திருப்பவளம், கண்-திருக்கண்கள், கை-திருக்கைகள், உந்தி-திருவுந்தி, கால்-திருவடிகள், உடையாடைகள்-திருப்பீதாம்பரங்களினுடைய, செய்ய-சிவப்பையுடையனாய்க்கொண்டு, பிரான்-ஆஶ்ரிதரை யநுபவிப்பிக்குமுபகாரகனாய், திரு-இவ்வழகை நித்யாநுபவம் பண்ணுகிற பிராட்டிக்கு, மால்-வல்லபனாய், எம்மான்-அவ்வழகாலே நமக்கு நாயகனான, செழு-அழகிய நீர்-நீரையுடைத்தான, வயல்-வயலையுடைய, குட்டநாட்டுத்திருப்புலியூர்-குட்டநாட்டுத் திருப்புலியூரில், அரு-பெறுதற்கரியனான, மாயன்-ஆஶ்சர்யபூதனுடைய, பேர்-திருநாமம், அன்றி-ஒழிய, பேச்சு-வேறொருபாசுரம், இலள்-அற்றிராநின்றாள். அன்னைமீர்-அன்னைமீர், இதற்கு-இவள்படிக்கு, என்-ஏது, செய்கேனோ-செய்வேனென்று தானுள்பாடையல்லாமையை யறிவித்தாளாயிற்று.

மணித்தடமென்று-ஶ்லாக்யமான தடாகமாகவுமாம்.

ஆறு:—இப்பிராட்டி திருப்புலியூரிலே யிருந்தருளுகிற வெம்பெருமானோடே யியற்கையிலே புணர்ந்தருளின புணர்ச்சியை யறியாமையாலும், (க) "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றிருக்கும் ஸ்வபாவத்தை யறியாமையாலும், இவளுடைய தாயாரு முறவுமுறையாரும், மநுஷ்யரிலே யிவளுக்கொருவனை யந்வேஷித்து அவனுக்குக் கொடுக்கையிலே ப்ரவ்ருத்தராகிற படியைக் கண்டு, இவள் ஸ்வபாவத்தையும், இவளெம்பெருமானோடு கலந்த கலவியையு மறிந்திருந்த விவளுடைய தோழியானவள், தான் சொல்லிற்றை அவர்களங்கீகரிக்கைக்காக அவர்களோடே கூடத் தானும் ஸமாநசித்தையாய்க்கொண்டு, "இவள் திருப்புலியூரிலிருந்தருளின வெம்பெருமானுடைய குணங்களாலே வஶீக்ருதையாய், அவன்றிறமல்லது மற்றொன்றறியாள், இனி நாம் கோலி

(க) நா-தி-க-மு

னவை முடியா, அவனையே வரக்கப் பார்க்கவேணும்" என்று கொண்டு அவர்களை நிவர்த்திப்பிக்க, அவர்களும் "இவளுக்கு அவனழகொக்குமோ" என்றுகேட்க, அவனுடைய வழகிலேயிறே யிவளகப்பட்டதென்கிறாள். (க)

ஈடு ; அவ:—அவனுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்தைக் கண்டு மற்றொன்றறியாதபடி யீடுபட்டாளென்கிறாள். "கருமாணிக்கக்குன்றத்துத்தாமரைபோல் திருமார்வு கால்கண் கை செவ்வாயுந்தியான்" என்று * இருந்தும் வியந்திலநுபவித்த வித்தைத் தோழி பேச்சாலே பேசி யினியராகிறார்.

(கருமாணிக்கமலைமேல்) அநுபவிப்பார் நெஞ்சு குளிரும்படி கருமையையுடைத்தாய், ப்ரகாசத்தால் மிக்கிருப்பதாய், நிரதிசய போக்யமாயிருப்பதொரு மலைமேலே, கறுத்தே இருள்நீக்குவதொருமலையென்றுமாம், அபூதோபமை யிருக்கிறபடி (மணித்தடந் தாமரைக்காடுகள்போல்) இப்படி யிருப்பதொரு மலைமேலே, தெளிந்ததொருதடாகமாய், அதுகாடுபடத் தாமரை பூத்தாப்போலேயாயிற்றுத் திருமேனியும் திவ்யாவயவங்களுமிருப்பது.

(திருமார்வு) பற்றுசான பெரியபிராட்டியா ரெழுந்தருளியிருக்கும் திருமார்வு, திருமார்வுக்குச் சிவப்பு பிராட்டி ஸந்நிதாநத்தாலே. (வாய்) அவள்வழியாலே யுறவுபண்ணினார்க்கு அநுகூல பாஷணம் பண்ணுகிற திருப்பவளம் (கண்) இன்சொல்லுச் சொல்லப்புக்கு அநுகூலதர்சநத்தாலே தமொறினால், குறையும் தலைக்கட்டிக்கொடுக்கும் கண், (கை) நோக்குக்குத் தோற்றாரை யணைக்கும் கை, (உந்தி) உத்தேஶ்யபூமியிலே விழாநின்றால் நடுவே காற்கட்டவல்ல திருவுந்தி;, நடுவே யமுக்கும் சுழியிறே, (கால்) இவையெல்லாவற்றுக்கும் தோற்று விழுந்திருவடிகள், (உடையாடைகள்) அங்கே கிடந்தநுபவிக்கும் திருப்பீதம்பரம். "கமலபாதம்" என்று, (க) "சிவந்தவாடை" என்னக்கடவதிறே, (பிரான்) இவ்வவயவசோபையடைய (உ) "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்றிருக்குமவன்.

(திருமால்) அழகேயன்றிக்கே, இவளுக்கிடான மேன்மையுமுண்டு; (௩) "யஸ்யைஷா ஜநகாத்மஜா--ஸ்யைஷா ஹித தேஜஸ் -

(க) அமல-க. (உ) ஜிதந்தே-
(௩) ரா-ஆர-௩௭-௧அ.

யஸ்யஸாஜநகாத்மஜா-அப்ரமேயம்ஹி தத்தேஜ:" என்கிறபடியே, (எம்மான்) "இவளையவனுக்குக்கொடுங்கோள்" என்றால், "இவ னுக்கவன் தாம்போருமோ" என்னவேண்டாதபடியிருப்பதே யென் னுபனென்கிறாள். (சேழுநீரித்யாதி) அழகிய ஜலஸம்ருத்தியை யுடைத்தான வயல்சூழ்ந்த (குட்டநாட்டுத் திருப்புலியூர்) குட்ட நாடென்று-அந்நாட்டுக்குப்பேர்.

(அருமாயன்) பெறுதற்கரிய வாஸ்சர்யபூதன். (பேரன்றிப் பேச்சிலள்) பரவ்யூஹவிபவங்களுக் கேகாந்தமான திருநாமங்களைச் சொல்லுகிறிலள். அல்லாத வுகந்தருளின நிலங்களில் நிற்கிறவர்கள் பேரும் சொல்லுகிறிலள். (அன்னைமீரிதற்கென்செய்கேனோ) "அவர் களோடொக்கத்தானுமிப்போதறிந்துசொல்லுகிறாள்" என்னுமிடந் தோற்ற, இதுக்கு நானெத்தைச் செய்வேனென்கிறாள். (க)

---

# இரண்டாம்பாட்டு.

அன்னைமீரிதற்கென்செய்கே னணிமேருவின்மீதுலவும்,* துன் னுசூழ் சுடர்நாயிறுமன்றியும் பல்சுடர்களும்போல்,* மின்னுநீண் முடியாரம்பல்கலன்றனுடையெம்பெருமான்,* புன்னையம்பொழில் சூழ் திருப்புலியூர் புகழுமிவளே. (உ)

ப:—அநந்தரம், அவனுடைய வாபரணசோலையிலே யகப்பட்டு அவனூரைப் புகழாநின்றளென்கிறாள்.

(இ - ள்) அன்னைமீர் - அன்னைமீர், இதற்கு - நீங்களும் நானுமறி யாதபடி யிவளுக்குப்பிறந்த ப்ரகாரத்துக்கு, என்-எத்தை. செய்கேன்- செய்கேன், அணி - அழகிய, மேருவின் - மேருவின், மீது - மேலே, உலவும் - வர்த்திப்பதாய், துன்னு - செறிந்து, சூழ் - சூழ்ந்த, சுடர் - சுடரையுடைத்தான, நாயிறும்-நாயிறும், அன்றியும் - அவ்வளவேயன் றியே, பல் - பலவகைப்பட்ட, சுடர்களும்போல் - க்ருஹ நக்ஷத்ரங்களு டைய தேஜஸ்ஸும்போலேயிருக்கிற, மின்னு - ஒளியை யுடைத்தாய், நீள் - ஓங்கின, முடி - திருவபிஷேகம், ஆரம் - ஆரம் முதலான, பல் - பலவகைப்பட்ட, கலன்றன் - ஆபரணங்களை, உடை - உடையனாய், எம்பெருமான் - அவ்வழகைக்காட்டி நம்மையடிமைகொண்ட ஸர்வாதி கனானவனுடைய, புன்னை - புன்னையையுடைத்தான, அம் - அழகிய,

பொழில் - சோலைகளாலே, சூழ் - சூழப்பட்ட, திருப்புலியூர்-திருப்புலியூரை, இவள், புகழும் - புகழாநின்றாள்.

அணிமேருவென்று-* ருக்மாபமான திருமேனிக்குத்ருஷ்டாந்தம்.

ஆறு:—(அன்னைமீர்) அவனெப்பித் தருளினு விருக்கு மழகைச்சொல்லி, அவ்வழகிலேயிறே யிவள் விழுந்ததென்கிறாள். (உ)

ஈடு: அவ—அவனுடைய வாபரணசோபையி லகப்பட்டாளென்கிறாள்.

(அன்னைமீரிதற்கென்செய்கேன்) நீங்கள் கற்பித்திலீகோள், நான் கற்பித்திலேன், இதுக்கு நானெத்தைச் செய்வேன். (அணியித்யாதி) அழகிதான மேருவின்மேலே ஸஞ்சரியாநிற்பானுமாய், காண்கிறவளவன்றிக்கே நெருங்கிச் சூழ்ந்த தேஜஸ்ஸையுடைய விலக்ஷணனான வாதித்யனும். (அன்றியம் பல்சுடர்களும் போல்) மற்று மப்படியே யிருக்கிற நக்ஷத்ராதிதேஜஃபதார்த்தங்களும்போலே.

(மின்னுநீண்முடி) "துன்னுசூழ்சுடர் ஞாயிறு" என்று சொன்ன திருவபிஷேகம். (ஆரம்) (க) "அஞ்சுடர்மதியம்பூண்டு" என்கிறபடியே திருவாரம். (பல்கலன்) அல்லாத திவ்யாபரணங்கள் (எம்பெருமான்) ப்ரீத்யுக்தி - இவ்வைபவம் பொய்யாகாதபடி யிருந்தவென்னுயன். (புன்னையம் பொழில்சூழ்) அழகிய புன்னைப் பொழில்சூழ்ந்த, அவ்வூரில் சோலைவாய்ப்பையன்றோ விவள்சொல்லுகிறது. சோலையிலே கலந்தார் வார்த்தையாயன்றோ விருக்கிறது. (திருப்புலியூர் புகழுமிவளோ) பிள்ளாய், இவ்வூர் வாசியெங்கேயறிந்தாள்; அவனுடைய வாபரணசோபையோபாதி அவ்வூரில் சோலையிலு மவ்வூரிலும் குமிழிநீருண்டாளாய்த் தோற்றுகிறதில்லையோ விவள்வார்த்தையாலே. (உ)

---

## மூன்றாம்பாட்டு.

புகழுமிவள்நின்றிராப்பகல் பொருநீர்க்கடல் தீப்பட்டு* எடங்திகழுமெரியோடு செல்வதொப்பச் செழுங்கதிராழிமுதல்* புகழும் பொருபடையேந்திப் போர்புக்கசுரரைப் பொன்றுவித்தான்* திகழுமணி நெடுமாடநீடுதிருப் புலியூர்வளமே. (௩)

---

(க) திருவா-க

ப:— அநந்தரம், அவனுடைய வீரசரிதத்துக்குத்தோற்று அவள் அவ னூரிலழகைப்புகழாநின்றுளென்கிறாள்.

(இ - ள்.) பொரு - திரைக்கிளப்பத்தாலே யொன்றுக் கொன்று பொருது அலேகிற, நீர் - நீரையுடைத்தான, கடல் - கடலானது, தீப் பட்டு - நெருப்பைக்கொளுத்தி, எங்கும்-எங்கும், திகழும்-விளங்குகிற, எரியொடு - ஜ்வாலேகளோடே, செல்வதொப்ப-செல்வதுபோலே, புக ழும்-ஶத்ருக்களும் புகழும்படியாய், செழும் - மிக்க, கதிர் - ஒளியை யுடைய, ஆழி - திருவாழி, முதல் - முதலாக, பொரு - பொருந்தின படை - ஆயுதங்களே, ஏந்தி - ஏந்தி, போர் - யுத்தத்திலே புக்கு-ப்ரவே சித்து, அசுரரை-அசுரர்களே, பொன்றுவித்தான்-நசிப்பித்தவனுடைய, திகழும் - விளங்குகிற, மணி - மாணிக்கங்களேயுடைத்தாய், நெடு ஓங் கின, மாடம் - மாடங்களேயுடைத்தான, நீடு - ஆயாமவிஸ்தாரவத்தா யுள்ள, திருப்புலியூர் - திருப்புலியூரினுடைய, வளம் - அழகை, இவள் - இவள், இராப்பகல் - இராப்பகல், நின்று - ஓவாதுநின்று, புகழும்-புகழா நின்றாள்.

பொருபடை - பொருகிறபடையென்றுமாம். (ந)

ஆறு:—(புகழுமிவள்) அழகியனுமலன், ஆண்பிள்ளேத்தன முடையனுக வேண்டாவோவென்னில்; அந்த ஶௌர்ய வீர்யாதி குணங்களேயேகாண் இவளிராப்பகல் புகழாநின்றதென்கிறாள். (ந)

ஈடு; அவ:—ஓப்பனேயழகு ருஷிகளும் சொல்லார்களோ, இது கலவிக்கு ஸூசகமாகவேணுமோவென்ன; (க) "ஹந்தாரம்ஶத்ரூணம்த்ருஷ்ட்வா ஜெ - பர்த்தாரம் பரிஷஸ்வஜே" என்றுவீரவாசிகண்டணேக்கும் பிராட்டிபாசுரமாயன்றோ இவள் வார்த்தையிருக்கிறதென்கிறாள்.

(புகழுமிவள்நின்றிராப்பகல்) [இவள்-இராப்பகல்-நின்று - புக ழும்] வீரவாசியறிந்திடும் பருவமன்றிக்கேயிருக்கிறவிவள், கேட் டார்வாய்க்கேட்டொருகால் சொல்லிவிட்டாளோ, அஹோராத்ரம் நின்று வாய்புலற்றுநின்றாள். (புகழும்) நெஞ்சாலேநினேத்துவிட்டவ ளேயோ, வ்ரீளேகுடிபோய் வாய்விட்டுப்புகழுகிறாளல்லளோ. (பொ ருநீர்கடல் தீப்பட்டு) பொராநின்றுள்ள திரையையுடைத்தான கட ல்நெருப்புக்கொளுந்தி. (எங்கும் திகழுமெரியொடு செல்வதொப்ப) பரப்புமாறிக்கொண்டு ஜ்வலியாநின்றுள்ள நெருப்போடேகூடகட

(க) ரா ஆர-ந0-௪0-

ந்து செல்லுமாபோலேயாயிற்று, ஆயுதங்களால்வந்த புகரும் திருமேனியுமிருக்கும்படி.

(புகழும்பொருபடையான - செழுங்கதிராழிமுதல்-ஏந்தி) (க) "ஹேதிபிஶ்சேதநாவத்பிருதீரிதஜயஸ்வநம்" என்று திவ்யாயுதங்கள்தான் அவனைப் புகழும்படியாதல்; (உ) "ஸத்ரூணாம் ... ரஞ்ஜநீயஸ்ய விக்ரமைः" என்கிறபடியே 'கையுமாயுதமுமாய்ப் பொருத்தமிருந்தபடியென்' என்று ஶத்ருக்கள் புகழும்படியைச் சொல்லுகிறது" என்று எம்பெருமானாரருளிச் செய்யும்படி. (பொருபடை) யுத்தோத்யுக்தமானவாயுதம். (செழுங்கதிர்) மிக்கதேஜஸ்ஸையுடைத்தான திருவாழிமுதலான திவ்யாயுதங்களையேந்தி. (போர்புக்கசுரரைப் பொன்றுவித்தான்)னாயுதனாய் யுத்தத்திலேபுக்கு துஷ்ப்ரக்ருதிகளைமுடித்தான். பொன்றுவிக்கை - முடிக்கை.

(திகழுமித்யாதி) உஜ்ஜ்வலமான மாணிக்கங்களையுடைய ஓங்கினமாடங்களையுடைத்தாய், கல்பாவதியான திருப்புலியூரிலழகை - புகழும். வளம் – அழகு; எதிரிகளுக்குக் கிட்ட வொண்ணாமைக்கு அவன்றான்வேண்டா, அவ்வூரேயமையும். பிராட்டி, ஸ்ரீமிதிலையை விட்டு (௩) "ராகவஸ்யநிவேஶநே" என்று திருவயோத்யையைப் புகழுமாப்போலே, இவள் திருநகரியைவிட்டுத் திருப்புலியூர்ப்புகழே புகழாநின்றாள். (௪) "அயோத்யாபராஜிதா" என்கிறபரமபதத்தை நினைத்திருக்குமாபோலேகாணும் இவள் அவ்வூரை நினைத்திருப்பது. (௫) "மாகவைகுந்தங்காண்பதற் கென்மனமேகமெண்ணுமிராப் பகலின்றியே" என்றிறே அங்கு மிவர்பாசுரம். (௩)

---

(க) ரகுவ-கo. (உ) ரா-யு-க௧௬-க௬.
(௩) ரா-ஸு-௩உ-கஅ (௪) ஸ்ரீகுணரத்ந-
(௫) கூ-௩-௭

## நான்காம்பாட்டு.

ஊர்வளங்கிளர்சோலையும் கரும்பும்பெருஞ்செந்நெலுஞ்சூழ்ந்து* ஏர்வளங்கிளர்தண்பணைக்குட்டநாட்டுத்திருப்புலியூர் * சீர்வளங் கிளர்மூவுலகுண்டுமிழ்தேவபிரான்* பேர்வளங்கிளர்ந்தன்றிப் பேச்சிலளின்றிப்புனையிழையே. (ச)

ப:—அநந்தரம், ஆபத்ஸகத்வாதி குணோத்கர்ஷங்களையுடைய வவன்திருநாமங்களைப் பெரியகிளர்த்தியோடே சொல்லாநின்றாளென்கிறாள்.

(இ - ள்.) ஊர் - ஊருக்கு, வளம் - வளப்பமாய், கிளர் உயர்ந்த, சோலையும் - சோலையும், கரும்பும் - அத்தோடணைத்துச் சொல்லலாம் கரும்பும், பெரும்-அதிலும் பெரிய, செந்நெலும்-செந்நெலும், சூழ்ந்து-சூழ்ந்து. ஏர்-ஏரின், வளம் - அழகு. கிளர்-மிகாநிற்கிற தண்-குளிர்ந்த, பணை நீர்நிலங்களையுடைய, குட்டநாட்டுத்திருப்புலியூர்-குட்டநாட்டுத் திருப்புலியூரில், சீர் - ரக்ஷகத்வோபயுக்த குணங்களினுடைய, வளம் - ஸம்ருத்தி, கிளர்-தோற்றும்படி, மூவுலகு-ஜகத் த்ரயத்தையும், உண்டு - அமுதுசெய்து, உமிழ் - உமிழ்ந்த, தேவபிரான் - ஸர்வபோக்யனானவனுடைய, பேர் - திருநாமங்களினுடைய, வளம்-ஸம்ருத்தியை, புனை - அணியப்பட்ட, இவ்விழை - ஆபரணங்களையுடையவிவள், இன்று-இப்போது கிளர்ந்தன்றி - கிளர்ந்தன்றி, பேச்சிலள் - சொல்லுகிறிலள்.

ஏர்வளங்கிளரென்று-அழகிதான ஸம்ருத்தி தோன்றுகிறதென்றுமாம். ஊரின்வளப்பந் தோன்றும்படியான சோலையென்றுமாம். (ச)

ஆறு:—(ஊர்வளம்) ஆண்பிள்ளைத்தனமமையாதிறே, குணவானாயிருக்கவேணுமிறே யென்னில்; அவனுடைய வாபத்ஸகத்வாதி குணங்களிலேயிறே யகப்பட்டதென்கிறாள். (ச)

ஈடு:-அவ:—வெறுமாண்பிள்ளைத்தனமே போராதே, ஆபத்ஸகனாகவேணுமேயென்ன ; அக்குறைதானுண்டோ விவனுக்கென்கிறாள். புனல்தருபுணர்ச்சியையன்றோ விவள்வாய் புலற்றுகிறது.

(ஊர்வளங்கிளர்சோலையும்) ஊரில் ஸம்பத்தைக் கோட்சொல்லிக் கொடுக்கும் சோலையென்னுதல், ஊர்களுக் கிட்டுச்சொல்லும் சிறப்புக்களைத் தெரிவிக்கும் சோலையென்னுதல். (கரும்பும் பெருஞ்செந்நெலும்சூழ்ந்து) வயலடங்கக் கரும்பும், அதுக்கு நிழல்செய்யும்

செந்நெலும் சூழ்ந்துகிடக்கும். (ஏர்வளங்கிளர்) ஏராலுண்டானவழகையுடைத்தாயென்னுதல், ஏரினுடைய ஸமுதாயத்தைச் சொல்லிற்றுதல். அதாவது-உழுவது நடுவதாய்ச் செல்லாநிற்கை. (தண்பணை) மருதநிலமென்னுதல், அழகிய நீர்நிலமென்னுதல். மருதநிலமென்றதால்-வயலைச் சொன்னபடி.

(சீர்வளங்கிளர் மூவுலகுண்டுமிழ்) குணங்களின் நன்மையடையச் செயலிலே தெரியும்படி, ஸகலலோகங்களையும் வயிற்றிலேவைத்து, வெளிநாடுகாணவுமிழ்ந்த *. அயர்வறுமமரர்களதிபதி (பேர்வளம்) திருநாமங்களினுடைய வழகைச் சொல்லுதல், திருநாமங்களையடங்கவென்னுதல். (கிளர்ந்தன்றிப்பேச்சிலள்) குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களை, கடல்கிளர்ந்தாப்போலேபெரிய கிளர்த்தியோடேயன்றோ இவள்சொல்லுகிறது. (இன்று) இவ்வேறுபாடும் நன்மையும் கேற்றில்லைக்கிடீர். (இப்புனையிழையே) திருநாமஞ் சொல்லச்சொல்ல ஒருபடி ஆபரணம் பூண்டாப்போலே யிராநின்றாள். (ச)

---

## ஐந்தாம்பாட்டு.

புனையிழைகளணிவுமாடையுடையும் புதுக்கணிப்பும்* நினையும்நீர்மையதன்றிவட்கிதுநின்று நினைக்கப்புக்கால்*சுனையினுள்தடந்தாமரைமலருந்தண் திருப்புலியூர் * முனைவன்மூவுலகாளியப்பன் திருவருள் மூழ்கினளே. (டு)

ப:—அநந்தரம், இவள்வடிவில் புதுமையிருந்தபடியால் அதிமாநுஷைச்வர்ய விசிஷ்டனானவனுடைய ஸம்ச்லேஷத்திலே யவகாஹித்தாளென்கிறாள்.

(இ - ள்.) புனை-முன்பு புனைந்த, இழைகள்-ஆபரணங்களை. அணிவும் இப்போது ஓரழகுபெறப் பூண்டிருக்கிறபடியும், ஆடையுடையும்-பரியட்டத்தினுடையவழகும், புதுக்கணிப்பும்-வடிவில் பிறந்த புதுமையும், நின்று - தாமுள்ளதனையும்நின்று, நினைக்கப்புக்கால்-நினைக்கப்புக்காலும். இவட்கு - இவளுக்கு, இது - இந்தவைலக்ஷண்யம், நினையும் - லோகமர்யாதையால் நினைக்கலரம். நீர்மையதன்று - ஸ்வபாவமன்று; ஆதலால், சுனையினுள் - சுனைகளுக்குள்ளே, தடம் - பெருத்த, தாமரை-

தாமரைகள் மலரும்-மலராநிற்கிற, தண்-ப்ரமஹரமான, திருப்புலியூர்-திருப்புலியூருக்கு முனைவன் - ப்ரதாநநிர்வாஹகனாய், மூவுலகு - ஜகத்துக்கு, ஆளி - ஸ்வாமியான, அப்பன் - உபகாரகனுடைய, திருவருள் - நிரதிஶயோபகாரத்திலே, மூழ்கினள் . அவகாஹித்தாள். (ரு)

ஆறு:—(புனையிழைகள்) " அவன் ஸௌந்தர்யசீலாதிகுணங்களையுடையனானாலென், அவனை யேற்கவே யறியப்பெற்றிலோம், வேறே யொருவனை அந்வேஷித்து அவனுக்குக்கொடுக்கக்கடவதாய்ச் சொல்லாநின்றபின்பு இனிசசெய்ய லாவதில்லை " என்று தாயார் சொல்ல;

தோழியானவள், இயற்கையிற் புணர்ச்சியைச் சொல்லுகையீடன்றியே யிருக்கச்செய்தே, " இவளையிழக்கிறோம் " என்னும் பயத்தாலே முன்னமே திருப்புலியூர் முனைவனான ஸர்வேஶ்வரனோடே புணர்ந்தருளினாளென்கிறாள். (ரு)

ஈடு: அவ;—வெறுமாபத்ஸகத்வமே போருமோ, இவளுக்குத் தக்க வைஶ்வர்யமு முண்டாகவேணுமேயென்ன ; அதுவுமுண்டென்கிறாள்.

(புனையிழைகளணிவும்) ஆபரணங்கள் நாம பூட்டினாப்போலேயிருந்ததோ. (ஆடையுடையும்) முகத்தலையறிந்துடுத்ததா யிருந்ததோ (புதுக்கணிப்பும்) நீர்பாய்ந்த வயல்போலே இவள்வடிவிலேபிறந்த செவ்விபாரீர்கோள். (நினையும்நீர்மையதன்றிவட்கிதுநின்றுநினைக்கப்புக்கால்) [ நின்றுநினைக்கப்புக்கால் - நினையும்நீர்மையதன்றிவட்கிது) உபக்ரமித்துவிடுகையன்றிக்கே, காலதத்த்வ முள்ளதனையும் நின்றாராயப்புக்காலும், இவளுக்குப் பிறந்த விவ்வழகுகள் நினைக்கப் போகாது. (க) "யதோ வாசோ நிவர்த்தந்தே - யதோவாசோநிவர்த்தந்தே" என்கிறவிஷயத்தைப் பரிச்சேதிக்கிலும், இவள்படி பரிச்சேதிக்கப் போகாது.

இவையெல்லாவற்றாலும் நீ பரிச்சேதித்த வர்ஷமேதென்ன (அப்பன்திருவருள் மூழ்கினள்) (சுனையினுள்தடந் தாமரைமலரும்) ஒருபூவே தடாகத்தைக் கண்செறியிட்டாப்போலே மலரும். அவ்வூரில் பதார்த்தங்கள் பிறர்க்கிடங்கொடாதென்கிறாள். இவளுக்குப்

(க) தை-ஆ-௯

புறம்புபோக்கில்லை. (திருப்புலியூர் முனைவன்) அவ்வூருக்கு ப்ரதானன். (மூவுலகாளி) ஸமஸ்தலோகங்களுக்கும் நிர்வாஹகன்; ஐச்வர்யத்துக்குப் புறம் பொருவரைத் தேடிப்போகவேண்டா. (அப்பன்) "ஐச்வர்யத்தாலும் குறைவறப்பெற்றேன்" என்று தன் ப்ரீதியாலே சொல்லுகிறாள். (திருவருள் மூழ்கினளே) கடல்கொண்ட வஸ்துவை யெங்ஙனே மீட்கப்பார்க்கிறபடி. அருட்கடலிலே மூழ்கின இவளை மீட்கலாமோ வுங்களாலே. (நி)

---

# ஆறாம்பாட்டு.

திருவருள்மூழ்கி வைகலுஞ்செழுநீர் நிறக்கண்ணபிரான் * திருவருள்களும் சேர்ந்தமைக்கடையாளந் திருந்தவுள * திருவருளருளாலவன் சென்றுசேர் தண்திருப்புலியூர் * திருவருள்கமுகொண்பழத்ததுமேல்லியல்செவ்விதழே. (சு)

ப:—அநந்தரம், அபிரூபனாய் பவ்யனானவனுடைய ஸௌந்தர்ய குணத்திலே யவகாஹித்தநுபவித்தமைக் கடையாளமுண்டென்கிறாள்.

(இ - ள்) செழுநீர் - ஸம்ருத்தஜலமான மஹார்ணவத்தின், நிறம்-நிறத்தையுடையனாய், கண்ணன்-ஆச்ரிதஸுலபனான க்ருஷ்ணனாகிற பிரான் - மஹோபகாரகனுடைய, திருவருள் - நிரவதிகமான ஸௌந்தர்யகுணத்திலே, வைகலும் - அநேககாலம், மூழ்கி - அவகாஹித்து, திருவருள்களும் - ஸம்ச்லேஷதசையிலவன்பண்ணின வதிசயிதோபகார பரம்பரைகளையும், சேர்ந்தமைக்கு-இவள்பெற்றபடிக்கு, திருந்த - மறைக்கவொண்ணாத, அடையாளம்-அடையாளங்கள், உள உள, அவற்றில்வைத்துக்கொண்டு, திருவருள் - தன்னுடைய நிருபாதிகமான திருவருளை, அருளால் - உபகரிக்கைநிமித்தமாக, அவன் - அவன்தானே, சென்று - சென்று, சேர் - சேர்ந்த, தண் - ப்ரமஹரமான, திருப்புலியூர் - திருப்புலியூரில் திருவருள் - அவனுடையகடாக்ஷோபகார பாத்ரமான, கமுகு - கமுகினுடைய, ஒண் - திரண்டுசிவந்துநன்றான, பழுத்தது - பழம்போன்றது. மெல்-மெல்லிய, இயல்-ஸ்வபாவத்தையுடைய இவளுடைய, செ-சிவந்த, இதழ்-இதழ்போலேயிருக்கிற வதரமானது.

ஆறு:—(திருவருள்) இப்புதுக்கணிப்பும், புனையிழைகளணிவும், இவளுடைய பருவத்தாலும் லீலாபேருஷ்சடா விசேஷத்தா

ளும் ஸம்பவியாதோ, திருப்புலியூரெம்பெருமானோடு கலந்தகலவி
யால் வந்ததென்னுமிடத்துக்கடையாளமென்னென்ன: திருப்புலி
யூர் சராசரங்களுக்கெல்லா மாத்மதாகம் பண்ணுகைக்காக வவ்வூரி
லேபுகுந்து நின்றருளின வெம்பெருமானுடைய திருவருளாலேவளி
ர்ந்த கழுகினுண்பழம்போலேயன்றோ விவள் திருப்பவளமிருப்ப
தென்கிறாள். (சு)

ஈடு-அவ:—ஐஶ்வர்யமேபோருமோ, உதாரனாகவேண்டாவோ
வென்ன, அவனுடைய வௌதார்யகுணத்திலே யகப்பட்டு ஸம்ஶ்
லேஷித்தமைக் கடையாளம் வ்யக்தமாகவுண்டென்கிறாள்.

(வைகலும்-திருவருள்மூழ்கி) அநேககாலம் அவன்ப்ரஸாதத்
திலே யவகாஹித்து. நாம், கண்டத்தையறியுமித்தனையிறே. எதிர்
சூழல்புக்கு இப்படிப் பரிமாறித்திரிகிற தித்தனை காலமுமுண்டு:
அறிந்தோமோ. (செழுநீர்நிறக்கண்ணபிரான்) ஸௌந்தர்ய ஸௌலப்
யங்களைக்காட்டிக்காணுமிவளை யிப்படியகப்படுத்திற்று. (திருவருள்
களும் சேர்ந்தமைக்கு) அவனுடைய ப்ரஸாதமெல்லா மிவ்வாஶ்
ரயமொன்றிலும் வந்துசேர்ந்தமைக்கு. (அடையாளந் திருந்தவுள)
அவன்விஷயீகாரம் பெற்றமைக்கடையாளம் வ்யக்தமாகவுள.

நீயிதென்கொண்டறிந்தாயென்ன; (திருவருளருளால்) குண
நிரூபணம் பண்ணாதே விஷயீகரிக்கையாகிற ஸ்வபாவத்தை
யுபகரிக்கைக்காக; திருவருளருளுகைக்காக. ஆல் - அசை. (அவன்
சென்றித்யாதி) * கலங்காப்பெருநகரம் கலவிருக்கையா யிருக்கவன்
றோ அவனிங்குவந்து ஸந்நிஹிதனாயிற்று, (திருவருட்கமுகு) என்றி
சில்வுண்டு. அதாவது-நீராலேவளருகையன்றிக்கே, பெரியபிராட்டி
யாரும் ஸர்வேஶ்வரனுமாகக் கடாக்ஷிக்க அத்தால் வளருவனசில;
அதினுடைய வழுவிப்பழம்போலேயிராநின்றது; ம்ருதுஸ்வபாவை
யான விவளுடையவதரம். அவ்வாயிலே யறியலாயன்றோவிருக்கி
றது. (சு)

---

## ஏழாம்பாட்டு.

மெல்லிலைச்செல்வவண்கொடிப்புல்க வீங்கிளந்தாள்கமுகின்*
மல்லிலைமடல்வாழையீன்கனிசூழ்ந்து மணங்கமழ்ந்து * புல்லிலைத்
தெங்கினூடுகாலுலவுந்தண் திருப்புலியூர்* மல்லலஞ்செல்வக் கண்
ணன்தாளடைந்தாளிம்மடவரலே. (எ)

ப:—அநந்தரம், தேசத்தில் வ்ருக்ஷலதாதிகளும் பரஸ்பர ஸம்ஶ்லேஷத்தாலே ப்ரணயித்வத்தை ப்ரகாசிப்பிக்கும்படி, பெரியப்ரணயித்வை ஶ்வர்யத்தையுடைய க்ருஷ்ணன் திருவடிகளை இவள்கிட்டினுளென்கிறாள்.

(இள்.) மெல்-ம்ருதுவான, இலை-இலைத்தழைப்பையும், செல்வம்-ஸௌந்தர்யைஶ்வர்யத்தையும், வண் - தன்னுடைய வுபக்நத்துக்குக் கொடுக்கு மௌதார்யத்தையு முடைத்தான, கொடி - வெற்றிலைக் கொடி, புல்க - சூழ்ந்தணைக்க, வீங்கு - அத்தோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே புஷ்டமாய், இளம் - இளகிப்பதித்த, தாள் - அடியுரத்தையுடைத்தான, கமுகின் - கமுகுக்குப்பரிஸரவர்த்தியாய், இம்மிதுநபோகத்துக்கு சிசிரோபசாரம்பண்ணும் பரிசாரிகைகள்போலே, மல்-செறிந்த, இலை - இலையையும், மடல்-பரிசாரஸாதநம்போலேயிருக்கிற பூமடலையுமுடைத்தான, வாழை - வாழைகளினுடைய, ஈன் - நிரதிஶய போக்யமாய் ஹ்ருத்யமான, கனி - பக்வபலங்களை, சூழ்ந்து-பரிஷ்வங்கம் பண்ணுகையாலே, மணங்கமழ்ந்து - பரிமளோத்தரமாய், அப்படி பரிஸரவர்த்திகளாய், புல் - செறிந்த, இலை - இலையையுடைத்தான, தெங்கின் - உயர்ந்ததெங்கின், ஊடு - நடுவே, கால் - காமசாரமான தென்றலானது, உலவும் - உலாவும்படியான, தண் - ஶ்ரமஹரமான. திருப்புலியூர்-திருப்புலியூரில், மல்லலம்செல்வம்-அதிஶயிதமான ப்ரணயித்வஸம்பத்தையுடைய, கண்ணன் - க்ருஷ்ணன், தாள்-திருவடிகளை, இம்மடவரல் - முக்தஸ்வபாவையானவிவள். அடைந்தாள்- கிட்டியநுபவித்தாள். (எ)

ஆறு:—( மெல்லிலை ) "இவளுக்குத் திருப்பவளத்தி லழகுதான் ஸ்வாபாவிகமன்றோ, இதவனோடு கலந்தமைக்கடையாளமல்ல, அவன்றானிவளோடுகலந்து பரிமாறுகைக்கீடான ப்ரணயித்வமுடையவனே" என்ன ; தன்பக்கலடங்காமை அவ்வூரில் ஸ்த்தாவரங்களிலுங்கூட வெள்ளங்கோத்து, அவையும் பரஸ்பர ஸம்ஶ்லேஷதாரகமாயிருக்கும்படியேபெருகி இவனுடைய ப்ரணயித்வவெள்ளத்திலேயிறே இவளழுந்திற் றென்கிறாள். (எ

ஈடு; அவ:—கேவலமுதாரனாகப் போராதே, ப்ரணயித்வகுணமுண்டாகவேணுமேயென்ன ; அவ்வூரில் ஸ்த்தாவரங்களுங்கூட பர

ஸ்பர மாஶ்ரயமாம்படியன்றோ வவனுடைய ப்ரணயித்வகுண மிருந்தபடி யென்கிறாள்.

(மெல்லிலையித்யாதி) ம்ருதுஸ்வபாவமான இலையையுடைத்தாய். ஸ்ரக்தையையுடைத்தாயிருக்கிற வண்கொடியுண்டு - உதாரமானகொடி. தன்பர்த்தாவான கமுகுக்குத் தன்னுடம்பை முற்றாட்டாகக்கொடுக்கும்போலே. (வீங்கிளந்தாள்கமுகின்) கொடிதழுவத்தழுவவளராநின்று, ஒருகாலைக்கொருகால் விளாநின்றுள்ள தாளையுடையகமுகு. (க) "யஸ்யஸாஜநகாத்மஜா-அப்ரமேயம்ஹி தத்தேஜ:" என்னும் ந்யாயத்தாலே. (உ) "ஊஊ...தாரா...ஸ்ய...வீ...நிவா...தி நஃ-தத்ளபாஹு...தாம்ஸ்கந்தே கோபீமதுநிகாதிக:"

(கமுகின்மல்லிலை மடல்வாழை) கமுகோடேகூடின பெரிய இலையையும் மடலையுமுடையவாழை. வெற்றிலைக்கொடிக்கும் கமுகுக்கும் வெய்யில் தட்டாதபடி நிழல்செய்து நிற்குமாயிற்றுவாழை (ஈன்கனிசூழ்ந்து)பழுத்தாறுகள் தெற்றிக்கிடக்குமாயிற்று. (மணம்கமழ்ந்து) காற்றானது விளைவதறியாதேபுக்கு, பரிமளத்தில் லோபத்தாலே அங்கேயிங்கேசுழித்து, பரிமளத்தை யெறட்டுக்கொண்டு வாழைநெருக்கத்தாலே நெருக்கப்பட்டு அல்பாவகாசமுள்ள தெங்கின்சோலையிலே புறப்பட்டு ஸஞ்சரியாநிற்குமாயிற்று,

(புல்லிலை) புல்லப்பட்டவிலை. அந்யோந்யம் தழுவப்பட்ட இலையையுடைய தெங்கென்னுதல்; வாழையிலையோடே தழுவினவிலையையுடைய தெங்கென்னுதல்; சோலைநெருக்கத்தாலே நேரிதான இலையென்னுதல். (மல்லலஞ்செல்வக்கண்ணன்) நிரவதிகமாயமுகிதான ஸம்பத்தையுடையக்ருஷ்ணன். (தாளடைந்தாள்)ப்ரணயித்வகுணத்துக்குத் தோற்றுத்திருவடிகளைப்பற்றினாள். (இம்மடவரல்) முன்பெனக்கு பவ்யையாய்ப்போந்த இவள்கிடீர்! மீட்கவொண்ணாதபடியானாள். (எ)

---

## எட்டாம்பாட்டு.

மடவரலன்னைமீர்கட்கென்சொல்லிச் சொல்லுகேன் மல்லைச்செல்வ * வடமொழிமறைவாணர் வேள்வியுள் நெய்யழல்வான் புகைபோய்* திடவிசும்பிலமரர்நாட்டை மறைக்குந்தண் திருப்புலியூர் * படவரவணையான்றன்நாமமல்லால் பரவாளிவளே. (அ)

(க) ரா-ஆர-ஙஎ-கஅ (உ) வி-பு-ஞ-கரு-ஞச

ப:—அநந்தரம், விலக்ஷண ஸமாசாரப்ரியனாய் பர்யங்க விசிஷ்டனானவனுடைய திருநாமத்தைச் சொல்லாநின்றாளென்கிறாள்.

(இ-ள்.) அன்னைமீர்கட்கு - அன்னையாரான வுங்களுக்கு, என் - என்னபாசுரத்தை, சொல்லி - சொல்லி, சொல்லுகேன் - சொல்லுவேன், ஆராதநோபகரணமான, மல்லை - பெரிய, செல்வம் - ஸம்பத்தையுடையராய், வடமொழி - ஆராதநகால வக்தவ்யமான ஸம்ஸ்க்ருதபாஷையையும், மறைவாணர் - ஆராதநப்ரதிபாதகமான வேதநிர்வஹணத்தையுமுடையவர்களுடைய, வேள்வியுள்-ஆராதநரூபமான யாகாதிகர்மங்களில், நெய் ஆஜ்யாஹுதிவிசிஷ்டமான, அழல்-அக்நியினுடைய, வான் - பெரிய. புகை - புகையானது, போய்-கிளர்ந்துபோய், திடம் - த்ருடமான, விசும்பில்-ஆகாசத்திலே, அமரர்-தேவர்களுடைய, நாட்டை - லோகத்தை, மறைக்கும் - திரைவளைத்தாப்போலே மறைக்கக்கடவதான, தண் - ப்ரமஹரமான, திருப்புலியூர் - திருப்புலியூரிலே, (க) "உத்ஸீதேயுரிமே லோகா நகுர்யாம் கர்ம சேதஹம்" என்று லோகஹிதார்த்தமாக வாசாரபரனுகையாலே இவர்களுடையவாசாரஸக்தனாய்க்கொண்டு படம் - ஸ்வஸ்பர்சத்தாலே விரிகிறபணங்களையுடைய, அரவணையான்றன் - திருவநந்தாழ்வானாகிற படுக்கையிலே கர்மத்துக்கு ஆராத்யதயா கண்வளர்ந்தருளுகிறவனுடைய, நாமம் - திருநாமம், அல்லால்- ஒழிய, இவள் - இந்த, மடவரல் - மடந்தையானவள், பரவாள் - பரவுகிறிலள்.

ஆறு:—(மடவரல்) ப்ரணயஸ்வபாவம்போலே வ்ருத்தவத்தையுமுண்டாகவேணுமிறேயென்ன;

அவன் வ்ருத்தவத்தை யிருக்கும்படி பார்க்கலாகாதோ, மிக்கிருந்துள்ள ஸம்பத்தையுடையரான வடமொழிமறைவாணர் வேள்வியுள் நெய்யழல்வான் புகைபோய்த் திடவிசும்பிலமரர்நாட்டை மறைக்கும் நிரதிசயபோக்யமான திருப்புலியூரில் திருவநந்தாழ்வானைப் படுக்கையாக வுடையவனுடைய திருநாமமல்லது சொல்லுகிறிலளென்கிறாள். (அ)

ஈடு; அவ:—வெறும் ப்ரணயித்வமேபோராதே (உ) "கர்மணைவ ஹி ஸம்ஸித்தி மாஸ்திதா ஜநகாதய: - கர்மணைவஹி ஸம்

(க) கீதை-ந-உச. (உ) கீதை-ந-உ௦

வித்தி மாஸ்க்திதாஜநகாதய: " என்றன்றே குடியிருப்பது, ஆறு விதுக்குத்தக்க வாசாரமுண்டாகவேணுமேயவனுக்கென்ன; ஆறுல வ்வூரிலுள்ளாருடைய வாசாரமிருக்கிறபடியைக் கேட்கலாகாதோ வென்கிறாள்.

( மடவரல் ) மடவந்தபடியை. இவளெனக்கு பவ்யையானபடியை. பற்றிற்று விடாதபடியை யென்றுமாம். ( அன்னைமீர்கட்கு ) என்கையிலே யிவளைக்காட்டித் தந்திருக்கிறவுங்களுக்கு. (என்சொல்லிச்சொல்லுகேன்) இவளென்வழி வாராநின்றுளென்னவோ, இவளெனக்கு பவ்யையென்னவோ.

(மல்லையித்யாதி) நிரவதிகமான ஸம்பத்தையுடையராய், ஸம்ஸ்க்ருதத்துக்கும் வேதத்துக்கும் வ்யாஸபதம் செலுத்தவல்லராயிருந்துள்ள ப்ராஹ்மணருடைய யாகங்களில் நெய்யாலே ஹோமம் பண்ணின வக்நியிலுண்டான செறிந்தபுகையானதுபோய். (திடவிசும்பிலமரர் நாட்டைமறைக்கும் ) வ்யவஸ்த்தித ஸ்வபாவமான வாகாசத்தில் தேவலோகத்தைதமறைக்கும். ஸ்வர்க்கத்திலுள்ள வைமாநிகரை அப்ஸரஸ்ஸுக்கள் முகங்கண்டநுபவிக்க வொட்டாதே மறைக்கும். போகத்துக்கேகாந்தமாகத்திரைவளையாநின்றதென்றுமாம்.

(தண்திருப்புலியூர்) (க) " ஸஹஸ்ரவக்த்ர:ஸ்ரீமாந் ஸஹஸ்ராக்ஷ:ஸஹஸ்ரபாத் ... ஸங்கர்ஷணோ ... " என்றிறே அவன்படியும். (படவரவித்யாதி) ஸ்வஸ்பர்சத்தாலே விகஸிதபணனான திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடையவனுடைய திருநாமமல்லது வாய்புலற்றுகிறிலள். நானருகேயிருக்க, ஸம்ஶ்லேஷதசையில் படுக்கையழகையேசொல்லி வாய்புலற்றா நின்றாள். (இவள்) என்னையொழிய வேறொன்றை ப்ரவர்த்திக்க வறியாதவிவள். (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

பரவாளிவள்நின்றிராப்பகற்பனிநீர் நிறக்கண்ணபிரான்* விரவாரிசைமறைவேதியரொலிவேலையில் நின்றேலிப்ப* கரவார்தடந்தோறுந்தாமரைக்கயந்தீவிகைநின்றலரும் * புரவார்கழனிகள்சூழ் திருப்புலியூர்ப்புகழன்றிமற்றே. (கூ)

---

(க) கீ-ரு-உச

ப:—அநந்தரம், வேதவித்ப்ரதாநனை க்ருஷ்ணனுடைய திருப்புலியூர்ப்புகழொழிய வேறொன்றிவள் சொல்லுகிறிலளென்கிறாள்.

(இ-ள்) பனி - குளிர்ந்த, நீர்நிறம்-நீர்நிறத்தையுடைய, கண்ணன்-க்ருஷ்ணனை, பிரான்-மஹோபகாரகனுடைய, விரவு - விரவி, ஆர் - நிரம்பின, இசை - இசையையுடைய, மறை - ஸாமவேதம் தொடக்கமான, வேதங்களாலுண்டான, வேதியர்-வைதிகருடைய, ஒலி-கோஷமானது, வேலையில் - ஸமுத்ரம்போலே, நின்று - நின்று, ஒலிப்ப - முழங்காநிற்க, கரவு - கரவுகள், ஆர் - ஆர்ந்த, தடந்தொறும் - தடாகந்தோறும், தாமரை - தாமரையினுடைய, கயம் - பரப்பானது, தீவிகை-நீராஜனதீபம்போலே, நின்று - நின்று, அலரும் - அலராநிற்பதுமாய், புரவார் - கட்டளைப்பட்ட, கழனிகள் - வயல், சூழ் - சூழ்ந்த, திருப்புலியூர்ப்புகழ் - திருப்புலியூர்ப்புகழ், அன்றி - ஒழிய, மற்று-வேறொன்றை, இவள்-இவள், நின்று-ஒருபடிப்பட, இராப்பகல்-இராப்பகல், பரவாள் - பரவுகிறிலள்.

"தடமும் கயமும் நனியும் பெருமை." தடமென்று-கரையாய், "தடந்தொறும் - கரவார் - தாமரைக்கயம்" என்று-பொய்கையாகவுமாம். கரவு - முதலை, புரவு - கட்டளைச்சேர்த்தி. (கூ)

ஆறு:—(பரவாளிவள்) வ்ருத்தமுண்டாரனுலும் ததநுகுண தத்வஜ்ஞாநமுண்டாகவேணுமேயென்ன;

அதுவுமுண்டு, நிரதிசயபோக்யமான த்வநியையுடைய ஸாமவேதிகளுடைய வத்யயநகோஷமும், ததர்த்தசிந்தை பண்ணுவார் கோஷமும் கடல்போலே கோஷியாநிற்க, முதலைமிக்க பொய்கைகள் தோறும் தாமரைகள் நிலைவிளக்கெரியுமாபோலே மலராநிற்பதுஞ் செய்து, தலைத்தரமான கழனிகளையுடைத்தாயிருக்கிற திருப்புலியூரில் பனிநீர்நிறக்கண்ணபிரானுடைய புகழன்றி மற்றொன்று பரவாளிவள் நின்றிராப்பகலென்கிறாள். (கூ)

ஈடு; அவ:—ஆசாரமேபோருமோ, ப்ரயோகவ்ருத்தியை ப்பார்த்து அநுஷ்டாநத்துக்கு வேண்டுவதறிந்திருக்கவொண்ணாதோ (க நிஷ்டிதம் ஸர்வஸாஸ்த்ரேஷு ஸர்வேஷு நிஷ்டிதஶ்ச-நிஷ்டிதஷ்

(க) ரா-பா-கரு-உ௦

ட்டிதம் ஸர்வஶாஸ்த்ரேஷு ஸர்வவேதேஷுநிஷ்டிதம் " என்றன்றே இக்குடியிலுள்ளாருடையபடி, இதுக்குத் தக்க வேதார்த்த தத்த்வஜ்ஞாநமுண்டாகவேணுமேயென்ன ; அதுக்குமொரு குறையில்லையென்கிறாள்,

(பரவாளிவள் நின்றிராப்பகல்) இவளடைவு கெடப்பேசாநின்றாள் ; இராப்பகல் பேசாநின்றாள், இதுக்கு வேறு ப்ரமாணம் தேடவேணுமோ, இவளுக்கிதியேயன்றோ ப்ரமாணம். (பனிநீர்நிறக்கண்ணபிரான்) குளிர்ந்தவடிவையும், அப்படியே யிருக்கிற சீலத்தையுமுடையவன். (விரவாரிசைமறை) விரவி - எங்குமொக்கப் பரம்பி, ஆர்ந்து - மிக்கிருந்துள்ள, ஸ்வரத்தையுடைத்தான வேதமென்னுதல். அன்றிக்கே, (விரைவார்) என்று பாடமாகில், விரையென்று - போக்யதையாய், வாரென்று - அதில் மிகுதியாய், இசைமறையென்று - ஸாமவேதமென்னுதல். ( வேதியரொலி ) வேதகோஷமும், வேதார்த்தவிசாரம் பண்ணுகிறவர்களுடைய கோஷமும். ( வேலையில்நின்றேலிப்ப) ஸமுத்ரகோஷத்திற்காட்டில் நின்று கோஷிக்க.

(கரவார்தடங்தோறும்) முதலை மிக்கிருந்துள்ள பொய்கைதோறும். (தாமரையித்யாதி) (தாமரைக்கயம்) கயமென்று-திரளுக்கும், பெருமைக்கும் பேர், (தீவிகை) விளக்கு. தாமரையினுடைய திரளானது நிலைவிளக்குப்போலே யலர்ந்துநிற்கும். (புரவார்கழனிகள்சூழ்) (புரவு-ஸாரம். பூஸாரமென்றபடி.) புரவார்ந் திருக்கையாவது- தலைத்தரப்பெருக்காயிருக்கை. பட்டர், "அவ்வூரில் ப்ராஹ்மணர் இறக்துமாய்கிறார்கள், இவருக்குச் சிறப்புச் சொல்லிப் போருகிறாரிறே" என்றருளிச்செய்வர். (திருப்புலியூர்ப்புகழன்றிமற்று - பரவாளிவள்நின்றிராப்பகல் ) அவ்வூரிலுள்ளாருடைய வேதகோஷமும், வேதார்த்த விசாரம்பண்ணுகிற வாரவாரமும், அவ்வூரில் போக்யதையுமேயிறே இவளடைவுகெடச் சொல்லாநிற்பது. (கூ)

---

## பத்தாம்பாட்டு.

அன்றிமற்றேருபாயமென்னிவளந்தண்டுழாய்கமழ்தல் * குன்றமாமணிமாடமாளிகைக் கோலக்குழாங்கள்மல்கி * தென்திசைத்திலதம்புரை குட்டநாட்டுத் திருப்புலியூர் * நின்றமாயப்பிரான் திருவருளாமிவள்நேர்பட்டதே. (கO)

ப:— அநந்தரம், ஆஶ்சர்யசேஷ்டிதயுக்தனானவனை யிவள்கிட்டினமைக்கு அநந்யதா ஸித்தமான வடையாளமுண்டென்கிறாள்.

(இ-ள்.) குன்றம் - குன்றம்போலே, மா-ஶ்லாக்யமாயுள்ள, மணி-மணிமயமான, மாடம்-மாடங்களினுடையவும், மாளிகை-மாளிகைகளினுடையவும், கோலம் - தர்ஶநீயமான, குழாங்கள் - திரளானவை, மல்கி - நெருங்கியிருப்பதாய், தென்திசை-தெற்குத்திக்குக்கு, திலதம் புரை - திலதம்போலும், குட்டநாட்டுத் திருப்புலியூர் - குட்டநாட்டுத்திருப்புலியூரிலே, நின்ற - நின்ற, மாயப்பிரான் - ஆஶ்சர்யபூதனுடைய, திருவருளாம் - க்ருபையேயாம், இவள் - இவள், நேர்பட்டது - கிட்டிற்று, அன்றி - அதன்றி, இவள் - இவள், அம் - அழகிய, தண்-குளிர்ந்த துழாய் - திருத்துழாய், கமழ்தல் - பரிமளத்தை யுடையளாகைக்கு, மற்று - வேறு, ஓர் - ஒரு, உபாயம் - உபாயம், என் - ஏதோ. (௧0)

ஆறு:—(அன்றி) ஸௌந்தர்ய ஸௌசீல்ய ப்ரணயித்வைஶ்வர்ய வ்ருத்தவத்வ ஸர்வஜ்ஞத்வாதி ஸர்வகுணவிஶிஷ்டனாயிருந்தானேயாகிலும், இங்கு ப்ரவ்ருத்தமான மணத்தைத் தவிர்க்கை யீடல்லவென்ன;

"அன்றி மற்றோருபாயமென்னி வளந்தண்டுழாய்க் கமழ்தல்" என்று அவர்களுங்கூட விசைவதோ ரடையாளத்தைச் சொல்லிக்கொண்டு, திருப்புலியூர்நின்ற மாயப்பிரானோடே யிவள் புணர்ந்தநினைவென்றுஞ் சொல்லுகிறாள். (௧0)

ஈடு; அவ:—நீ சொல்லுகிறவை யெல்லாங் கிடக்க, இவளையவனுக்குக் கொடுக்கவேண்டும்படி யஸாதாரண லக்ஷண மேதேனுமுண்டாகில் சொல்லென்னச் சொல்லுகிறாள்.

(அன்றிமற்றோருபாயமென்னிவ ளந்தண்டுழாய்கமழ்தல்) வேறு மற்றுபாயமுண்டோ, இவள்முகிதாய்க் குளிர்ந்த திருத்துழாய் நாறுகைக்கு. ராஜபுத்ரனை யணையாதார்க்குக் கோயிற்சாந்து நாறுகைக்கு விரகுண்டோ. என்னுடம்பாதல் உங்களுடம்பாதல் திருத்துழாய் நாறுகின்றதோ. ஸ்வாபதேசத்தில், "அந்தண்டுழாய் கமழ்தல்" என்கிறவிது, அங்கீகாரஸூசகமாயிருக்கிறது.

(குன்றமித்யாதி) மலைபோலே அதிசால்யமாயிருப்பதாய், பெருநிலையனான ரத்னங்களாலே செய்யப்பட்டிருந்துள்ள, மாடங்களினு

டையவும் மாளிகைகளுடையவும் தர்மநீயமான குழாங்களால்மிக்கு தெற்கில் திக்குக்குத் திலகம்போலே யிருக்கிற குட்டநாட்டுத் திருப்புலியூரிலே நின்றருளின வாம்சர்யபூதன். "அவனுக்கிவள்போராள்" என்னும் டிருஷிகன்; "இவளுக்கவன்போரான்" என்றன்றோ நீங்களிருக்கிறது, "அவனுக்கிவள்போராள்" என்றன்றோ அவ்வூரிலுள்ளாரார்வார்த்தை, (திருவருளாமிவள்நேர்பட்டதே) இவள்நேர்பட்டது அவன்திருவருளாம், அவன்திருவருளே யாமென்றாள். இதுவேயோ, இன்னமடையாளமுண்டோவென்ன; அன்றிமற்றோருபாயமென்னிவளந்தண்டுழாய்கமழ்தல்; (கo)

---

## பதினொன்றாம்பாட்டு.

நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்தன்னடிமை* நேர்பட்டதொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்சொல் * நேர்பட்டதமிழ்மாலை யாயிரத்துள்ளிவைபத்தும் நேர்பட்டாரவர் * நேர்பட்டார் நெடுமாற்கடிமைசெய்யவே. (கக)

ப:—அநந்தரம், இத்திருவாய்மொழிக்கு பலமாக பகவத்கைங்கர்யத்தை யருளிச் செய்கிறார்.

(இ - ள்.) நிறை - பரிபூர்ணமான, மூவுலகுக்கும் - த்ரிவிதசேதநாசேதநங்களுக்கும், நேர்பட்ட - வாய்த்த, நாயகன்றன் - ஸ்வாமியான ஸர்வேஸ்வரனுடைய, அடிமை-கைங்கர்யத்துக்கு, நேர்பட்ட-வாய்த்த, தொண்டர் - பக்திபரவசருடைய, தொண்டர் தொண்டர் - ஸம்பந்திஸம்பந்திகளுக்கும், தொண்டன - ஸேஷபூதரான, சடகோபன்-ஆழ்வாருடைய சொல்நேர்பட்ட, சொல்வாய்ப்பையுடைத்தாய் தமிழ் - த்ராமிடபாஷையாலே, மாலை - மாலையாகச் சேர்க்கப்பட்டிருக்கிற, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவைபத்தும்-இவைபத்தையும், நேர்பட்டாரவர் - அப்யஸித்துக் கிட்டினவர்கள், நெடுமாற்கு - ஆஸ்ரித வ்யாமுக்தனை ஸர்வேஸ்வரனுக்கு, அடிமைசெய்ய - அடிமை செய்கைக்கு, நேர்பட்டார் - வாய்த்தவர்கள்,

இதுவும் - அறுசீராசிரியவிருத்தம். (கக)

ஆறு:—(நேர்பட்ட) ஏவம்விதபகவத்ஸௌந்தர்யாதி குணாநுபவஜநித ப்ரீதியாலேபகவச்சேஷத்வகாஷ்டாரூபகதரான சடகோ

பன்சொல்நேர்பட்ட தமிழ்மாலை யாயிரத்துளிப்பத்தும் நேர்பட்ட வர்கள், நெடுமாற்கடிமைசெய்யப்பெற்று வாழ்வரென்கிறார். (௧௧)

ஈடு:- அவ:—நிகமத்தில் - இப்பத்தைக்கற்றவர், ஸ்வரூபாநுரூப மான கைங்கர்யத்தைப் பண்ணப்பெறுவரென்கிறார்.

(நேர்பட்டநிறை மூவுலகுக்கும் நாயகன்றன்னடிமை) குறை வற்றமூவுலகுக்கும் நேர்பட்டநாயகன். (௧) "[illegible] நாயெ நயெநஸ[illegible] த்ரைலோக்யமபிநாதேந யேந ஸ்யாந்நாதவத்தரம்" என்று ரக்ஷ்யவர்க்கத்தளவன்றிக்கே யிருக் கிற ரக்ஷகத்வத்துடிப்பு. இத்தால் - நாயகன்படி சொல்லிற்று. (௧) "[illegible]-அநுரூபஸ்ஸவைநாத:" என்னுமா போலே. (அடிமைநேர்பட்டதொண்டர்தொண்டர் தொண்டர் தொ ண்டன்சடகோபன்) இவர்தம்படிசொல்லுகிறது அவன் சேஷித் வத்துக் கெல்லையானாப்போலே, இவர் சேஷத்வத்துக் கெல்லையான படி.

(சொல்நேர்பட்டதமிழ்மாலை) அர்த்தவாச்யத்துக் கு த்தகுதி யான வுக்திவாய்த்த தமிழ்த்தொடையாயிரத்திலு மித்திருவாய் மொழிநேர்பட்டவர்கள். (நெடுமாற்கடிமைசெய்ய - நேர்பட்டார்) இப்பாசுரத்தைச் சொன்னவர்கள், இவருடைய வ்ருத்தியிலே அந் வயிக்கப்பெறுவரென்கை. நேர்படுகை-சொல்லப்படுகை. சொல்லப் பட்டாரென்றபடி. ஆக, இப்பாட்டில்-ஸர்வேஶ்வர ஸ்வரூபத்தை யும், ஸ்வஸ்வரூபத்தையும். ப்ரதிபாதகமான ப்ரபந்தவைலக்ஷண் யத்தையும், இத்தை யப்யஸித்தாருடைய ப்ராப்யவைலக்ஷண்யத் தையும் சொல்லிற்றாயிற்று. (௧௧)

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

திருவாய்மொழி

எட்டாம்பத்து ஒன்பதாம் திருவாய்மொழி

முற்றிற்று.

---

(௧) ரா-அயோ-௨-௧௫.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# எட்டாம்பத்து.

## பத்தாந் திருவாய்மொழி.

### நெடுமாற்கடிமை-ப்ரவேஶங்கள்.

ஆரு:—(நெடுமாற்கடிமை) இப்படி யெம்பெருமான் தம்மை அநந்யார்ஹமாம்படி யடிமைகொண்டபடியை யநுஸந்தித்து மிகவும் ப்ரீதராய், அந்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அவ்வளவில் பர்யவஸியாதே, "அவனுடைய ஸௌந்தர்யஶீலாதிகளிலே யீடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஶேஷமாகையே நிரதிஶயபுருஷார்த்தம்" என்றத்யவஸித்து, ஐஶ்வர்யாதியாய், ஸர்வேஶ்வரத்வ பர்யந்தமான ஸகலபுருஷார்த்தங்களும், தனித்தனியும் திரளவும், இப்பாகவத ஶேஷத்வ புருஷார்த்தத்தோடொவ்வாதென்கிறார். (௪)

ப:—பத்தாந்திருவாய்மொழியில், கீழ்த்திருவாய்மொழியிலே பகவச்சேஷத்வத்தினுடைய நிரதிசயபோக்யதையை ப்ரதிபாதித்து, அந்த போக்யதாதிசயத்தாலே "நேர்பட்ட தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன்" என்று ப்ரஸ்துதமான ததீயசேஷத்வ பாரம்யத்திலினிமையானது ப்ரகாஶித்து, அந்த ததீயருடைய போக்யதைக்கு ஹேதுவான; தத்ஸம்பந்தத்துக்கு மூலமாயிருக்கிற ஈஶ்வரனுடைய வாஶ்ரிதவ்யாமோஹத்தையும், உதாரரூபத்வத்தையும், அஶேஷஜநஸம்ஶ்லேஷத்தையும். ஆபத்ஸகத்வத்தையும், ஆஶ்சர்யஸ்வபாவத்தையும், ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்தையும், அகிலகாரணத்வத்தையும், அர்ணவஶாயித்வத்தையும், ஆஶ்ரிதவிரோதிநிரஸகமானவாயுதபூர்த்தியையும், அநுபாவ்யாகாரயோகத்தையு மநுஸந்தித்து, ஏவம்வித பகவத்விஷயத்துக்கபிமதரான பாகவதருடைய வத்யந்த ஶேஷத்வ காஷ்டாவிஶேஷமே அதிசயிதபோக்யமாய், ஐஶ்வர்ய கைவல்ய பகவத்ப்ராப்த்யாதிகள் அதுக்கு ஸத்ருஶமல்லாதபடியான பரமபுருஷார்த்தத்வம் ப்ரகாஶிக்கும்படி ப்ரதிபந்தகத்தை நிஶ்ஶேஷமாக நிவர்த்திப்பித்த ப்ரகாரத்தை யருளிச்செய்து தலைக்கட்டுகிறார்.

ததீயசேஷத்வபரமான * பயிலுஞ்சுடரொளியில் - தத்ஸம்பந்தநிபந்தநமான ததீயர்க்கும் ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்களுண்

டாகையாலே, முதலிட்டு நாலுபாட்டாலே-ஶேஷித்வத்தையும், அநந்தரம் மூன்றுபாட்டாலே - ஶரண்யத்வத்தையும் ப்ரதிபாதித்து, "எந்தொழுகுலந்தாங்கள்" என்று ஸங்க்ரஹேண ப்ரதிபாதித்த ப்ராப்யத்வத்தை யிங்கே விஸ்தரேண ப்ரதிபாதித் தருளுகிறார். *

ஈடு;—கீழிரண்டு திருவாய்மொழியாலுமாக வாத்மாவினுடைய வநந்யார்ஹஶேஷத்வம் சொல்லிற்றாய், "அது பிறர்க்குமுரித்தல்ல. தனக்குமுரித்தல்ல" என்றாயிற்றுச் சொல்லிற்று. ப்ரணவத்தில் மத்யமபதத்தாலும், * நமஸ்ஸாலும் சொன்ன வர்த்தமாயிற்றுச் சொல்லிநின்றது. அநந்யார்ஹஶேஷத்வத்துக் கெல்லை ததீயஶேஷத்வ பர்யந்தமாகையிறே. ததீயர்கு க்ரயவிக்ரயார்ஹமானவன்றிறே தச்சேஷத்வம் நிலைநின்றதாவது. (க) "எந்தம்மைவிற்கவும் பெறுவார்கள்" என்றிறே யிருப்பது.

அம்முணியாழ்வான் போசளராஜ்யத்திணின்றும் வந்தநாளிலே பட்டர்கண்டருளி, "'நீ ஸ்ரீவைஷ்ணவர்களுக்குப் போர வடிமை செய்து போந்தாய்' என்று கேட்டோம், உன் ப்ரக்ருதிக்குச்சேர * நெடுமாற்கடிமையைக்கேள்" என்றருளிச் செய்தாராம். "ஈஶ்வர ஶேஷம்" என்றறிந்தவன்று ப்ரமித்து மீளவுமாம்; ததீயஶேஷத்வ பர்யந்தமாக வுணர்ந்தால் மீளவேண்டாவிறே. (உ) "[illegible] ஸாம் க்ரயவிக்ரயார்ஹ:- தத்பக்திநிக்நமநஸாம்க்ரயவிக்ரயார்ஹ:" என்னக்கடவதிறே.

"ஐஶ்வர்யம் புருஷார்த்தம்" என்றிருப்பார், "ஆத்மலாபம் புருஷார்த்தம்" என்றிருப்பார், "பகவச்சேஷத்வம் புருஷார்த்தம்" என்றிருப்பார், "ஈஶ்வரனைப்," (௩) "[illegible] - ஆநந்தமய:" என்றிருக்கு மிருப்பு புருஷார்த்தம்" என்றிருப்பாராயிறேயிருக்கிறது. "இப்படிப்பட்ட புருஷார்த்தங்கள், தனித்தனியும் திரளவும், நான்பற்றின பாகவதஶேஷத்வமாகிற புருஷார்த்தத் தோடொவ்வாது" என்று எடுத்துக்கழிக்கவும் போராது "இப்படியிருக்கிற விதுவே, காலதத்வமுள்ளதனையு மெனக்கு மென்னோடு ஸம்பந்தமுடையார்க்கும் வாய்க்கவேணும்" என்று ப்ரார்த்தித்துத் தலைக்கட்டுகிறார்.

---

(க) பெரியா-தி-௮-௮-கO. (உ)

(௩) தை-ஆ-௯-

* பயிலும் சுடரொளியிற்காட்டி லித்திருவாய்மொழிக்கு வாசி யென்னென்னில்; "பாகவதர்கள் ஶேஷிகள்" என்றதங்கு; "பாகவதர்கள் போக்யர்" என்கிறதிங்கு. (க) [ஶ்ரூதா ஏத - ஸுகநயா - கச்சதாமா துலகுலம்] ஸ்ரீ ஶத்ருக்நாழ்வானுக்காதல், இவ்வாழ்வார்க்காதலிறே யிவ்வர்த்தங்களில் ருசியுள்ளது. [நித்யஶத்ருக்நஃ - நித்யஶத்ருக்நஃ] "பெருமாள் போக்யர்" என்று அவர்பக்கல் கண்வையானென்றதிறே.

---

# முதற்பாட்டு.

நெடுமாற்கடிமைசெய்வேன் போலவனைக் கருதவஞ்சித்து * தடுமாற்றற்றதீக்கதிகள்முற்றும் தவிர்ந்தசதிர்நினைந்தால் * கொடுமாவினையேனவனடியாரடியே கூடுமிதுவல்லால் * விடுமாறென்ப தென்னந்தோவியன் மூவுலகுபெறினுமே. (க)

ப:— முதற்பாட்டில், ஆஶ்ரிதவ்யாமுக்தனை ஸர்வேஶ்வரனுக்கு ஶேஷபூதமான பாகவதவிஷயமான ஶேஷத்வத்துக்கு த்ரைலோக்யைஶ்வர்யமும் தகுதியல்லவென்கிறார்.

(இ - ள்) நெடு - நிரவதிகமான, மாற்கு-ஆஶ்ரிதவ்யாமோஹத்தையுடைய ஸர்வேஶ்வரனுக்கு, அடிமை - அடிமை, செய்வேன்போல் - செய்வேன்போல், அவனை - அவனை, கருத - மநோரதமாக்கினவளவிலே. தடுமாற்றம் - ஊசலைச்சல், அற்ற-அறும்படி, என்பக்கலிலேநிற்கிற, தீக்கதிகள் - துஃகஹேதுவான வலித்யாகர்ம ரூபமாயுள்ள பொல்லாவழிகள், முற்றும் - எல்லாம், வஞ்சித்து - நானறியாதபடி வஞ்சித்து, தவிர்ந்த (க) "காணேனொருங்கிற்றுங்கண்டிலமால்" என்கிறபடியே விட்டுப்போயிற்றின. இனி, சதிர் - உறுவது, நினைந்தால் - பார்த்தால், அவன் - ஆஶ்ரிதவத்ஸலனை வனனுக்கு, அடியார் - அடியாரான பாகவதருடைய, அடியே - திருவடிகளையே, கூடுமிதுவல்லால் - ப்ராபிக்குமதொழிய, வியன் - விஸ்தீர்ணமான, மூவுலகு - த்ரைலோக்யைஶ்வர்யத்தை, பெறினும் - பெற்றாலும், கொடு - ஐஶ்வர்யத்திற்காட்டில் ததீயசேஷத்வத்துக்கு வாசிசொல்லவேண்டும்படி மாவினையேன் - மஹாபாபத்தையுடையநான், அந்த ததீயசேஷத்வத்தை, விடும்-விடும், ஆறு-

---

(க) ரா-அ-க-க. (உ) பெரியதிருவ-டுச

ப்ரகாரமாக, என்பது - சொல்லப்படுவது, என்-ஏது, அந்தோ-ஐயோ!, விடவென்றுசொல்ல ப்ரஸங்கமுண்டாவதே.

நெடுமால் - ஸர்வாதிகபேஷியென்றுமாம். சதிர் - உறுவது. (க)

ஆறு:—ஆஶ்ரிதர்பக்கல் மிகவும் வ்யாமோஹத்தையுடைய வெம்பெருமான்றனக்கு அடிமைசெய்கையில் எனக்குள்ள விச்சாமாத்ரமே காரணமாக, பகற்றமற்று நின்றுநலிகிற புண்யபாபரூப கர்மங்களெல்லாம் போனபடி தெரியாமேபோக்கி என்னை யடிமை செய்வித்துக்கொண்டருளின விவனடியாரடியே கூடுமிதுவல்லது, விஸ்மயநீயமான த்ரைலோக்யம் பெறினுமல்லனென்கிறார். (க)

ஈடு: அவ;—நாட்டார் விரும்புகிற வைஶ்வர்ய புருஷார்த்தமும் நான்பற்றினபுருஷார்த்தத்தோடொவ்வாதென்று எடுத்துக்கழிக்கவும் போராதென்கிறார்.

(நெடுமாற்கு) நெடுமாலுக்கென்றபடி; மாலென்று - பெரியோனென்றபடி; நெடுமையால் நினைக்கிறது-அதில் பெருமையை. அறப்பெரியோனென்றபடி. அவன் ஶேஷித்வத்தி லெல்லையைப்பிடிக்கிறார், தாம் ஶேஷத்வத்தி லெல்லையைக் கணிசிக்கிறவ ராகையாலே. அன்றிக்கே, மாலென்று - வ்யாமோஹமாய், நெடுமையால் - மிக்க வ்யாமோஹத்தையுடையவனென்னுதல், தன்னளவன்றியே தன்னுடையாரளவிலே நிறுத்தும்படிகாணும் வ்யாமோஹம். (க) "அடியார்க்கென்னை யாட்படுத்தவிமலன்," (அடிமைசெய்வேன் போலவனைக்கருத) அவனுக்கடிமை செய்வாரைப்போலே அவனைநினைக்க. * மித்ரபாவமேயாய், ஆராய்ந்தால் அதுதானும் போட்கன்.

(தமோற்றற்றதீக்கதிகள்முற்றுந்தவிர்ந்த) ஒரு ஸத்கர்மத்தை யநுஷ்டித்து, அது நின்று தடுக்குமதில்லாமையாலே தடுமாற்றமற்றுவர்த்திக்கிற வஷித்யாதிகளடங்கத்தவிர்ந்தன. தவிர்ந்தபடி தானென்னென்னில்; வஞ்சித்துத்தவிர்ந்தன. "பகலெல்லாமொக்க வர்த்திக்கக்கடவோம்" என்றுசொல்லிவைத்து, ராத்ரியிலே யொருகலத்திலேயுண்டுவைத்து, ஒக்கக்கிடந்துவிளக்கையெரியவைத்து, போனதறியாமே வஞ்சித்துப்போவாரைப்போலே. "அடிமைசெய்வேன் போலவனை - வஞ்சித்து-கருத" என்னவுமாம். (முற்றுந்தவிர்ந்த) நான்போக்கிக்கொள்ளுமன்றிறே க்ரமத்தாலே போகவேண்டுவது,

---

(க) அமல-க-

(க) "ஸவெ௸வாஜா நஃ௸ உ-௵யஜெ-ஸர்வேபாப்மாந: ப்ரதூயந்தே" (உ) "ஸவ-௸வெஜெ௸ரெ௸௸-ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" என்றிறே அவன்போக்கும்போதிருப்பது.

(சதிர்நினைந்தால்) அவன் திருவடிகளிலே குனிந்தமாத்ரத்திலே துஷ்கர்மங்களடங்கலும் போனபடியை யநுஸந்தித்தால். புருஷார்த்தத்துக் கெல்லையானவரையன்றே பற்றவடுப்பது. உறவது பார்க்கில் ததீயரையன்றே பற்றவடுப்பது. (கோமேவினையேன்) ப்ரீதிதலைமண்டையிட்டுச் சொல்லுகிறார். பாட்டுக்கேட்பார், பாட்டு வருத்தினவாறே "பாவியேன்" என்னுமாபோலே. அன்றிக்கே, ப்ரதமாவதியிலே சரமாவதியைப் பற்றப்பெற்றிலேனென்கிறாராகவுமாம். (அவனடியாரடியேகூடுமிதுவல்லால்) தன்திருவடிகளைப்பற்றினார்திறத்திலே அவன் மிக்கவ்யாமோஹத்தைப் பண்ணுவானாறல், அவன்விரும்பினாரையன்றே நமக்கும் விரும்பவடுப்பது. அவனாஸ்ரிதவ்யாமுக்தனாறல் அவனுக்கு ப்ரியவிஷயத்தையன்றே பற்றவடுப்பது. அவதாரணத்தால்-அங்கு ஸாம்யாபந்நராயிருக்கு மவரல்லர்; அவன் சேஷித்வத்தி லெல்லையிலே நிற்குமாபோலே, சேஷத்வத்திலெல்லையிலே நிற்கிறார்.

(அடியேகூடும்) அவர்களோடொப்பூணுண்ண விருக்குமவரல்லர், அவர்கள் காலைப்பற்றுவராயிற்று. (விடுமோறென்பதேன்) புறம்புண்டான விஷயத்திலே விடுவது பற்றுவதானத்தை இவ்விஷயத்திலும்செய்யவோ (அந்தோ) நான்பற்றினபுருஷார்த்தத்துக்கு நாலுமூன்றுபடிகீழேநிற்கிற வைஸ்வர்ய மித்தோடொவ்வாதென்ன வேண்டுவதே! என்று – அந்தோவென்கிறார். (வியன்மூவுலகுபெறினும்) காடும்மலையுமான வம்ஸத்தைத்திருத்தி, அநுபவயோக்யமாம்படிபண்ணி, த்ரைலோக்யத்தையு மெனக்குக் கையடைப்பாக்கினாலும் - விடுமாறென்பதென்னந்தோ, ஐஸ்வர்யத்துக்கு லோகபரிக்ரஹமுண்டாகையிறே, அத்யந்தவிஸத்ருஸமாயிருக்கச் செய்தேயும், "இது நான்பற்றின பாகவதசேஷத்வத்தோடொவ்வாது" என்ன வேண்டுகிறது. (க)

---

(க) சாந்தோ-ருஉச. (உ) கீதை-கஅ-சுசு

# இரண்டாம்பாட்டு.

வியன்மூவுலகுபெறினும் போய்த்தானே தானேயானாலும் * புயல்மேகம் போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ்* சய மேயடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி * இம்மையே பயனே யின்பம்யான்பெற்றதுறுமோபாவியேனுக்கே. (உ)

ப:—அநந்தரம், வர்ஷுகவலாஹகம்போலே ஆஶ்ரிதவிஷயத்தி லுதாரஸ்வபாவமான வடிவையுடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே யடிமைசெய்கிற பாகவதருக்கு, ஐஶ்வர்யத்தோடுகூடின வாத்மாநுபவ மும் ஸத்ருஶமன்றென்கிறார்.

(இ - ள்.) வியன் - பெரிய, மூவுலகு - த்ரைலோக்யைஶ்வர்யத் தை, பெறினும் - பெறிலும், போய் - இதில் ஸங்கமற்றுப்போய், ஸகல கர்மக்ஷயம்பிறந்து, தானே - தானேயாய், தானே - ஈஶ்வராநுபவத்தி லந்வயியாதபடி கேவலம்தானே, ஆனாலும்-அநுபாவ்யனானாலும், புயல்- வர்ஷோந்முகமான, மேகம்போல்-மேகம்போலே, ஆஶ்ரிதோபகாரசீல மான, திருமேனி - திருமேனியையுடையனான, அம்மான் - ஸர்வேஶ் வரனுடைய, புனை - புனையப்பட்ட, பூ - பூவையும், கழல்-வீரக்கழலையு முடைய, அடிக்கீழ் - திருவடிகளின்கீழே, சயமே - ஸ்வயம்ப்ரயோஜந மாயேயிருக்கிற, அடிமை - அடிமையின், தலை - மேலெல்லையிலே, நின் றார் - நின்றவர்களுடைய, திரு - விலக்ஷணமான, தாள் - திருவடிகளை, வணங்கி - ஶேஷத்வாநுரூபமாக ப்ரணாமம்பண்ணி, இம்மையே - இஹ லோகத்திலே, பயனே - ப்ரயோஜநரூபமாகவே, யான் - நான், பெற் றது - பெற்றதான, இன்பம் - ஆநந்தத்துக்கு, பாவியேனுக்கு-புருஷா ர்த்தாந்தரங்களிலே, வாசி சொல்லவேண்டும்படி பாபத்தைப்பண்ணின வெனக்கு, உறுமோ - அந்தவைஶ்வர்ய கைவல்யங்களெனக்குச்சே ருமோ.

அநுரூபமான ததீயசேஷத்வத்துக்கு, அநநுரூபங்கள் தகுதியன் றென்கை. (உ)

ஆறு:—(வியன்மூவுலகு) சிறப்புடைய வைஶ்வர்யபுருஷார்த் தம் பெறினும், கேவலாத்மாநுபவம்பண்ணப்பெற்றாலும். வர்ஷுக வலாஹகம்போலேயிருக்கிற வடிவையுடைய ஸர்வேஶ்வரனுடைய நிரதிஶயபோக்யமான திருவடிக்கீழே சயமேயடிமை தலைநின்றார்

திருத்தாள்வணங்கி, இந்தலோகத்திலே நான்பெற்ற புருஷார்த்த ரூப ஸுகத்துக் கொக்குமோ; இவைசொல்லவேண்டிற்றென்னும் கே(வெ)தத்தாலே பாவியேனென்கிறார். (உ)

ஈடு: அவ:—கீழ்ச்சொன்ன வைஶ்வர்யத்தோடே ஆத்மாநுபவத்தைச் சேர்த்துத்தந்தாலும், பாகவதஶேஷத்வமாகிற புருஷார்த்தத்தோ டொவ்வாதென்கிறார்.

(வியன்மூவுலகுபெறினும்) விஸ்மயநீயமான த்ரைலோக்யைஶ்வர்யத்தையு மெனக்கொருவனுக்கே யாக்கினாலும். (போய்த்தானே தானேயானாலும்) ஸம்ஸாரபந்தமற்றுப்போய் கேவலாத்மாநுபவம் பண்ணப்பெற்றாலும். தானே தானேயென்கிற வீப்ஸையாலே- ஸம்ஸாரத்திலே புத்ரபௌத்ராதிகளும் தானுமாய் ஜீவிக்குமத்தையுந் தவிர்ந்து, பரமபதத்தேபோய் (க) "ஹாவு ஹாவு ஹாவு - அஹமந்நமஹமந்நமஹமந்நம்" என்று களிக்குமத்தையும்விட்டு, கேவலம் தானேயாகை,

(புயலித்யாதி) வர்ஷுக வலாஹகம்போலே யிருக்கிற திருமேனியைக்காட்டி ஸர்வலோகத்தையு மெழுதிக்கொண் டிருக்கிறவனுடைய' புனையப்பட்டபூவையும் வீரக்கழலையுமுடைய திருவடிகளின் கீழே; விருப்பனாலும் விடவொண்ணாத ஸம்பந்தத்தை யுடையவனென்கை.(சயமேயடிமைதலைநின்றார்) ஸ்வயம்ப்ரயோஜநமாகவெல்லாவடிமைகளும் செய்யுமவர்களென்னுதல். அவனுடையஔதார்யத்திலேதோற்று எல்லாவடிமைகளும் செய்யுமவர்களென்னுதல். (சயம்) ஸ்வயமென்னுதல், ஜயமென்னுதல். (திருத்தாள்வணங்கி) தேஹாதிரிக்தமாய் நித்யமானவாத்மவஸ்துவை ப்ராபிக்குமதிலும், அவன்வடிவழகிலே தோற்றிருக்குமவர்கள்வடிவி லேகதேஶமமையு மென்கிறார்.

( இம்மையேபயனேயின்பம் ) ஶரீரத்தைவிட்டுப்போ யநுபவிக்கு மதன்றிக்கே, இஹலோகத்திலே ப்ரயோஜநரூபமான ஸுகமாயிற்று. யான்பெற்றது, ஒரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணி "கைபுகுரும்" என்று நினைத்திருக்கையன்றிக்கே. (உறுமோ) இத்தோடொக்குமோ. (பாவியேனுக்கே) நிலைநின்றபுருஷார்த்தத்தி னெல்லைக்கும் புருஷார்த்தத்துக்கும் வாசி சொல்லும்படியான பாபத்தை

(க) தை-ப்ருகு-கக-

ப்பண்ணினேன். பகவத்விஷயமல்லாமையாலே ஆத்மப்ராப்தி அபுருஷார்த்தம்; ஐஶ்வர்யம்போலே அஸ்த்திரமல்லாமையாலே நிலை நின்றபுருஷார்த்த மென்கை. (உ)

# மூன்றாம்பாட்டு.

உறுமோபாவியேனுக்கிவ்வுலகமூன்று முடன்நிறைய * சிறுமாமேனிநிமிர்த்த வெஞ்சேந்தாமரைக்கண்திருக்குறளன் * நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார் * சிறுமாமனிசராயென்னை யாண்டாரிங்கேதிரியவே. (ங)

ப:—அநந்தரம், அபேக்ஷிதஜ ஸம்ஶ்லேஷ ஸ்வபாவனான வாமநன் திருவடிகளைப் பெறுகையும், அவனடியாரான பாகவத ரிங்கே ஸந்நிஹிதராயிருக்கிற வித்திலும் சீரிதல்ல வென்கிறார்.

(இ - ள்.) இ-தன் வாசியறியாத விந்த, உலகமூன்றும்-ஜகத்த்ரயமும், உடன் - ஏகோத்யோகத்திலே, நிறைய-நிறையும்படியாக, சிறு - சிறுங்கி யநுபவிக்கும்படி சிறியதாய், மா - தர்ஶநீயமான வைலக்ஷண்ய மாஹாத்ம்யத்தையுடைத்தான, மேனி - திருமேனியை, நிமிர்த்த-வளரும்படிபண்ணினவனும், எம் - எனக்கு நிரதிஶயபோக்யமாய், செம் - சிவந்த, தாமரை - தாமரைபோலேயிருக்கிற, கண் - கண்ணையுடையனை, திருக்குறளன் - ஸ்ரீவாமனனுடைய, நறு - பரிமளத்தையுடைத்தாய், மா - ஶ்லாக்யமான, விரை - மதுவையுடைத்தான, நாண்மலர் - செவ்விப்பூப்போலேயிருக்கிற, அடிக்கீழ் - திருவடிகளின்கீழே யடிமை செய்து, புகுதல் - ப்ராபிக்கையாவது, அவன் - அந்தவாமனனுக்கு, அடியார் - சேஷபூதராய், சிறு-மநுஷ்யஸஜாதீயதையாகிற சிறுமை தோற்றச்செய்தே, மாமனிசராய் - ஸூரிகளுக்கு மவ்வருகான ப்ரத்யாஸத்தியையுடைய மஹாபுருஷராய், அந்த நீர்மையாலும் மேன்மையாலும் என்னை - என்னை, ஆண்டார் - அடிமைகொண்டவர்கள், இங்கே-இந்த லோகத்திலே, திரிய - கண்காண வர்த்தியாநிற்க, அன்றி-அதன்றியே, பாவியேனுக்கு - ததீயஶேஷத்வமாகிற சரமாவதிக்கும் தச்சேஷத்வமாகிற ப்ரதமாவதிக்கும் வாசி சொல்லவேண்டும்படியான பாபத்தையுடைய வெனக்கு, உறுமோ - சீரிதோ.

ததீயசேஷத்வபர்யந்தமான தச்சேஷத்வமொழிய, தச்சேஷத்வ மாத்ரம் சீரிதன்றென்று கருத்து. (ங)

ஆறு:—(உறுமோபாவியேனுக்கு) வடிவு சிறுத்து மஹாமாஹாத்ம்யங்களை யுடையார் என்னையடிமைகொண்ட ஸ்ரீவைஷ்ணவர்களிங்கேதிரிய, அவர்களைத் தவிர்ந்து, இவ்வுலகமூன்று முடன் நிறையச் சிறுமாமேனி நிமிர்த்தருளின செந்தாமரைக் கண்களையுடையனான ஸ்ரீவாமநனுடைய, நல்ல பரிமளத்தையுடைய நாட்பூப்போலேயிருக்கிற திருவடிக்கீழே புகுகையுறுமோ பாவியேனுக்கென்கிறார். (ங)

ஈடு ; அவ:—ஐஶ்வர்யகைவல்யங்களில் விலக்ஷணமான பகவல்லாப முண்டானாலும், இங்கேயிருந்து ஸ்ரீவைஷ்ணவர்களுக் கடிமை செய்கையோடொவ்வாதென்கிறார். * உலகமளந்த பொன்னடிக்கு நல்ல ஸ்ரீவைஷ்ணவர்களிங்கேயிருந்து என்னையடிமைகொள்ளில், உலகமளந்தவன் திருவடிகளிலடிமை தானுறுமோ தென்கிறார்.

(உறுமோ பாவியேனுக்கு) ஆத்மாநுபவத்தையு மைஶ்வர்யத்தையுங் குறித்துச் சொன்னவார்த்தையை, பகவத்விஷயத்திலும் சொல்லுகிறார். (உறுமோ பாவியேனுக்கு) கீழ்ச்சொன்னவைபோலே கழிக்கவொண்ணாது, புருஷார்த்தத்தி னெல்லை யல்லாமையாலே கழிக்கவேணும். (பாவியேன்) ப்ரதமாவதிக்கும், சரமாவதிக்கும் வாசி சொல்லவேண்டும்படி பாபத்தைப்பண்ணினேன். [உலகு மூன்றுமுடன்நிறைய என்று தொடங்கி, நாண்மலரடிக்கீழ்ப் புகுதல் - உறுமோ] (இவ்வுலகமூன்று முடனிறைய) சிலவேரிகள் வற்றி, பாழாய்க்கிடக்க, நினைவின்றிக்கேவர்ஷியா, நிறைந்துநிற்குமாபோலே, தன்வாசியறியாத மூன்றுலோகங்களு மொருக்காலே நிறையும்படி.

(சிறுமாமேனிநிமிர்த்த) கண்ணாலே முகந் தநுபவிக்கலாம்படி சிறுத்து, வைலக்ஷண்யத்துக் கெல்லையின்றிக்கே யிருக்கிற திருமேனியை நிமிர்த்த. (எம்) (க) "உன்னைப்பிரமாணித்தார் பெற்ற பேறு" என்கிறபடியே. ஆஶ்ரிதர்க்காகச்செய்த செயலிறே, (செந்தாமரை யித்யாதி) விகாஸம், செவ்வி, குளிர்த்திகளுக்குத் தாமரையை யொப்பாகச் சொல்லலாம்படி யிருக்கிற கண்ணழகையுடைய ஸ்ரீவாமநனுடைய, அழகிய மிக்கபரிமளத்தையுடைத்தான நாட்பூப்போலேயிருக்கிற திருவடிகளின் கீழே.

(க) உ-திருவ கூக

(நறுமர்விரை) நன்றாய் மிக்க பரிமளம்; இதுகாணு மிவர்க்கு வேப்பங்குடிநீராய், "உறுமோ" என்றுகழிக்கிறது. பகவத்விஷயத்தில் வெளிறுகழிந்த வய்ஸமானது வாய்த்து, இவர்க்கு பாகவத புருஷார்த்தத்தைப்பற்றக் கழிப்பனுகிறது. (அன்றி) அத்தைத் தவிர்ந்து. (அவனடியார்) ஸ்ரீவாமநனுடைய வழுகிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள்; அவர்களாகிறார் (க) "முன்னம் குறளுருவாய் மூவடிமண்கொண்டளந்த-மன்னன்சரிதைக்கேமாலாகிப்பொன் பயந்தேன்" என்றிருக்குமவர்கள். (சிறுமாமனிசராய்) வடிவு சிறுத்து ப்ரபாவம் கனத்திருக்குமவர்கள்.

"சிறுமைபெருமையாகிற விருத்த தர்மத்வயத்துக்கு ஏகதர்மியில் ஸமாவேசம் கூடினபடி யெங்ஙனே" என்று பட்டர் பால்யத்திலே ஆழ்வானைக் கேட்க, "நம்மோடொக்க 'அந்நபாநாதிகள் தாரகம்' என்னலாய். பகவத்விஷயத்தி லவகாஹநம் பார்த்தால் 'நித்யஸூரிகளோடொப்பர்கள்' என்னலாயிருக்கிற ஆண்டான், அருளாளப்பெருமாள், ஸ்ரீகோவிந்தப்பெருமாள், இவர்கள்காண் சிறுமாமனிசராகிறார்கள்" என்று பணித்தான்.

(என்னையாண்டார்) என்னையடிமைகொண்டவர்கள். (இங்கே திரிய) என்கண்வட்டத்திலே ஸஞ்சரியாநிற்க. (அன்றி-அவர்களைத் தவிர்ந்து, நறுமாவிரைநாண்மலரடிக் கீழ்ப்புகுதல் - உறுமோபாவியேனுக்கு) இவருடைய கண்ணிநுண்சிறுத்தாம்பிருக்கிறபடி. ஸ்ரீமதுரகவிகளுக்கு மடியிதிறே. * பொய்ந்நின்ற ஞானந்தொடங்கி * முனியேநான்முகனளவு மிவரையநுவர்த்தித்தவிடத்து, ஆழ்வார், தமக்கு ப்ரயோஜநரூபமாகச் சொன்ன * பயிலுஞ்சுடரொளி, * நெடுமாற்கடிமையே தமக்குத்தஞ்சமாகப்பற்றினார். (உ) "யாந்யஸ்மாகம் ஸுசரிதாநி" என்னக்கடவதிறே. (௩)

## நான்காம்பாட்டு.

இங்கேதிரிந்தேற்கிழுக்குற் றென்னிருமாநில முன்னுண்டுமிழ்ந்த* செங்கோலத்தபவளவாய்ச் செந்தாமரைக்கணேன்னம்மான்* பொங்கேழ் புகழ்கள்வாயவாய்ப் புலன்கொள்வடி வென்மனத்ததாய் * அங்கேமலர்கள் கையவாய் வழிபட்டோடவருளிலே. (௪)

(க) தி-மொ-௬-அ-உ (உ) தை-ஶிக்ஷா-௧௧

ப:—அநந்தரம், ததீயர் நடையாடுகிற இந்தவிபூதியிலே, அவர்களுக்குகப்பாம்படி ஆபத்ஸகனை வனுடைய கைங்கர்யமும் ஸித்தித்தால் குறையில்லையென்கிறார்.

(இ-ள்.) இரு - விஸ்தீர்ணமாய், மா - ஶ்லாக்யமான, நிலம்-ஜகத்தை, முன் - ப்ரளயாபத்துவந்தவளவிலே, உண்டு-அமுதுசெய்து, உமிழ்ந்த - அநந்தரத்திலே யுமிழுகிறபோதை, செ-சிவந்த, கோலத்த-அழகையுடைத்தான பவளம் - பவளம்போலேயிருக்கிற, வாய்-திருவதரத்தையும், செ - சிவந்த, தாமரை - தாமரைபோலேயிருக்கிற, கண் கண்ணையுமுடையனை, என் - என், அம்மான்-ஸ்வாமியானவன், பொங்கு வர்த்தித்து, எழ் - கிளம்புகிற, புகழ்கள் - தன் குணங்களானவை, வாய வாய் - வாக்விஷயமாகவும். புலன்கொள்-ஸர்வேந்த்ரியாபஹாரியான, வடிவு - வடிவு, என், மனத்ததாய் - நெஞ்சிலேயாகவும், அங்கு - அங்குத்தைக்கு, எய் - அநுரூபமான, மலர்கள் - புஷ்பங்கள், கையவாய் - கையிலேயாகவும், வழி - பாகவதர், முன்பு கரணத்ரயத்தாலும் பண்ணிப்போந்த கைங்கர்யமார்க்கத்திலே, பட்டு - நானுமுடன்பட்டு ஒட-நடக்கும்படியாக, அருளில்-அருளுமாகில், ஒருதேஶவிஶேஷாபேக்ஷையுண்டோ, இங்கே - இந்தவிபூதிதன்னிலே, திரிந்தேற்கு-இப்படித்திரிவேனைவெனக்கு, என் - ஏது, இழுக்குற்று - தாழ்வாயிற்று. (௬)

ஆறு:—(இங்கே) பாகவதகைங்கர்யரூப புருஷார்த்தத்துக்கு வர்த்தகமான பகவதநுபவம் ஸம்பூர்ணமாகக்கிடைக்கைக்கு ஸ்ரீ வைகுண்டத்தேறப் போகவேண்டாவோவென்னில்; அவ்வநுபவமிங்கேகிடைக்குமாகில் இங்கேவர்த்தித்தால் சேதமென்னென்கிறார். (௬)

ஈடு; அவ:—ஸ்ரீவைஷ்ணவர்களுக்குகப்பான பகவத்கைங்கர்யம் ஸித்திக்குமாகில், அவர்கள் ஸஞ்சாரத்தாலே ஶ்லாக்யமான இஜ்ஜகத்திலிருப்பே புருஷார்த்தமென்கிறார். (இங்கேதிரிந்தேற்கு) "சிறுமாமனிசர்" என்றீர், "இங்கே" என்றீர், இது * இருள்தருமாஞாலமன்றோ, பாகவதகைங்கர்யத்துக்கு வர்த்தகமான பகவதநுபவம் பூர்ணமாகக்கிடைப்பது பரமபதத்திலே யன்றோவென்னில்; அவ்வநுபவம் அவன்ப்ரஸாதத்தாலே யிங்கேகிடைக்குமாகில் இங்கேவர்த்தித்தால் சேதமென்னென்கிறொன்றுமாம். அங்குத்தையநுபவத்துக்கும் அவன்ப்ரஸாதமேயிறே ஹேது; அதிங்கே கிட்டுமாகில் சேதமென்னென்கை.

( இழுக்குற்றேன் ) தண்மையென்? ( இருமாநிலமுன்னுண்டு மிழ்ந்த ) மிக்கபரப்பையுடைத்தான பூமியை ப்ரளயகாலத்திலே வயிற்றிலேவைத்துநோக்கி, ஸ்ருஷ்டிகாலம் வந்தவாறேயுமிழ்ந்த. (செங்கோலத்தபவளவாய்) ப்ரளயத்திலேதள்ளிலும் விடவொண்ணாத திருவதரத்தையுடையவன். சிவந்தழகிதான பவளம்போலேயிருந்துள்ள திருவதரம். (செந்தாமரைக்கணென்னம்மான்) என்னை, நோக்காலே (க) "ஜிதம்-ஜிதம" என்னப்பண்ணினவன். உக்தமான குணத்தாலு மழகாலு மென்னையெழுதிக் கொண்டவன்.

(பொங்கித்யாதி) பொங்கி - பரந்து; கேழ் - அழகு. பொங்கியெழாநின்றுள்ள கல்யாணகுணங்கள் வாயிலேயுளவாய், ஆற்றுப்பெருக்குப்போலே கிளர்த்தியையுடைத்தாய், புக்காரைக்கொண்டு கிளரவற்றுன குணங்கள், (புலன்கொள்வடிவென்மனத்ததாய்) ஸர்வேந்த்ரியாபஹார க்ஷமமான வடிவு என்மநஸ்ஸிலே ஸந்நிஹிதமாய். (அங்கேமலர்கள்கையவாய்) அவ்வடிவுக்கநுரூபமான மலர்கள் கையிலேயுளவாய் (வழிபட்டோடவருளில்) நெறிபட்டுச் செல்லும்படியருளப்பெறில். மநோவாக்காயங்கள் அவன் திருவடிகளிலே நிரந்தரமாக வடிமைசெய்யும்படி அவன் ப்ரஸாதத்தைப்பெறில்-(இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றென.) பாகவதப்ரீதிரூபமான பகவத்கைங்கர்யத்தை அவன்ப்ரஸாதத்தாலே இங்கேபெறில் எனக்கதுவே புருஷார்த்தமென்கிறார். (௪)

---

## ஐந்தாம்பாட்டு.

வழிபட்டோடவருள்பெற்று மாயன் கோலமலரடிக்கீழ்* சுழிபட்டோடுஞ் சுடர்ச்சோதிவெள்ளத்தின் புற்றிருந்தாலும் * இழிபட்டோடுமுடலினிற்பிறந்து தன்சீர்யான்கற்று * மொழிபட்டோடுங்கவியமுதநுகர்ச்சியுறுமோமுழுதுமே. (௫)

ப:— அநந்தரம், ஆஶ்சர்ய ஸ்வரூபஸ்வபாவனான ஸர்வேஶ்வரனுடைய பரமபதத்திலே நிரதிஶயாநந்தியாயிருந்தாலும், அத்தோடே ஐஶ்வர்யாதிகளெல்லாம் கூடினாலும், இங்கே ஹேயஶரீரபரிக்ரஹம் பண்ணியிருந்து பாகவதருக்குகப்பாகத் திருவாய்மொழிபாடி ரஸிக்குமதுக்கு ஸத்ருஶமோவென்கிறார்.

---

(க) ஜித-க க

(இ-ள்.) நித்யகைங்கர்யத்திலே, வழிப்பட்டு - நெறிபட்டு, ஓட-செல்லும்படி, அருள் - அவன்ப்ரஸாதத்தை, பெற்று-லபித்து, மாயன்-ஆஶ்சர்யஸ்வரூபரூபகுண விபூதிகளை ஸர்வேஶ்வரனுடைய, கோலமலர்-நிரதிஶயபோக்யமான, அடிக்கீழ் - திருவடிகளின்கீழே, சுழிபட்டு-சுழித்து, ஓடும்-ஓடுகிற, சுடர்-ப்ரபையையுடைத்தான, சோதிவெள்ளத்து - தேஜோராஶிரூபமானபரமபதத்திலே, இன்புற்று-நிரதிஶயாநந்தியாய், இருந்தாலும் - இருந்தாலும், முழுதும் - கீழ்ச்சொன்ன ஐஶ்வர்யகைவல்யாதிகள் ஸமஸ்தமும் கூடினாலும், இழிபட்டு-தாழ்ச்சியிலே, ஓடும் - மிகவும் கைகழியப்போவதான, உடலினில் - ஶரீரத்திலே, பிறந்து - பிறந்து, தன் - நிரதிசயபோக்யபூதனை தன்னுடைய, சீர் குணங்களை, யான் - அதுக்கத்யந்ததூரஸ்தனானநான், கற்று - அப்யஸித்து, மொழிபட்டு - அந்தவநுபவஜநிதப்ரீதிசொல்லாய், ஓடும்-ப்ரவஹிக்கிற, கவி-கவியாகிற, அமுதம்-அம்ருதத்தை (க)"தொண்டர்க்கமுதுண்ண," (உ) "அடியார்க்கின்பமாரி," (ங) "கேட்டாராரவானவர்கள்" என்கிறபடியே, நுகர்ச்சி - ததீயரோடேகூட வநுபவித்து ரஸிக்கையை, உறுமோ - சேரவற்றோ. (ச)

ஆறு:—(வழிபட்டோட) விரோதிரூப ஸம்ஸாரமார்க்க பரிவர்த்திகளான வாத்மாக்களுக்கு, பாகவதசேஷத்வவர்த்தக பகவதநுபவப்ரீதி ஸித்திக்குமோவென்னில்;

அநந்த ஸம்ஸார நிவ்ருத்திபூர்வக பகவதநுபவபர்யந்தமான, இங்கேதிருவாய்மொழியைக் கொண்டு எம்பெருமானை யநுபவித்தால் வரும் ப்ரீதிக்குப் போருமோவென்கிறார். (ரு)

ஈடு; அவ:—இப்படிப்பட்ட பகவத்ப்ராப்தியும், கீழ்ச்சொன்ன புருஷார்த்தங்களு மெல்லாங்கூடினாலும், (ச)"தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்கிறபடியே, பாகவதர்களுக்கு ப்ரியமாகத் திருவாய்மொழிபாடி யடிமைசெய்யு மித்தோடொக்குமோவென்கிறார்.

(வழிபட்டோடவருள்பெற்று) கைங்கர்யத்திலே நெறிபட்டுச் செல்லும்படி அவன் ப்ரஸாதத்தைப்பெற்று. நித்யகைங்கர்யம்பண்ணும்படியாக. (மாயன்) ஸௌந்தர்ய ஶீலாதிகளா லாஶ்சர்யபூதனு

(க) கூ-ச-கூ (உ) ச-ரு-க0
(ங) க0-௬-கக (ச) கூ-ச-கூ

னவன். (கோலமலரடிக்கீழ்) தர்ஶநீயமான புஷ்பம்போலேயிருந்துள்ள திருவடிகளின்கீழே. (சுழிபட்டோடும் சுடர்ச்சோதிவெள்ளத்து) ஆற்றுப்பெருக்குப்போலே சுழித்துச்செல்லுகிற தேஜஸ்தரங்கங்களையுடைத்தானபரமபதத்திலே, (க) "ஸ்ருஷ்டாநமூர்த்தம் ஸ்ருஷ்டாநம் — அத்யர்க்காநலதீப்தம் தத்ஸ்தாநம்" என்னக்கடவதிறே. (இன்புற்றிருந்தாலும்) (உ) "ஸைஷாஹ்யாநந்தயாதி-ஏஷஹ்யேவாநந்தயாதி" என்று அவனாநந்திப்பிக்க, ஆநந்தநிர்ப்பரனாயிருந்தாலும்.

(முழுதும்) கீழ்ச்சொன்ன வைஶ்வர்யாதிகளுமித்தோடேகூடப்பெற்றாலும். (இழிபட்டோடுமுடலினிற்பிறந்து) தாழ்வுக்கெல்லையாம்படி கைகழியப்போன ஶரீரத்தோடே பிறந்து. (தன்சீர்) நித்யஸூரிகளும் குமிழிநீருண்ணும் கல்யாணகுணங்களை. (யான்கற்று) நித்யஸம்ஸாரியாய், அந்தக்குணங்களுக்கடைவில்லாத நானறிந்து. (மொழிபட்டோடும்) அவையுள்ளடங்காமையாலே சொல்லாய் ப்ரவஹியாநின்றுள்ள. (கவியமுதநுகர்ச்சியுறுமோ) திருவாய்மொழியாகிற அம்ருதத்தை யநுபவிக்கையோடொக்குமோ- சுடர்ச்சோதிவெள்ளத்தின் புற்றிருந்தாலும் - முழுதும். "அவனடியார் சிறுமாமனிசராயென்னை யாண்டாரிங்கேதிரிய - நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப்புகுதல் - உறுமோ" என்றாரேகீழே; அத்தைவிட்டு (கவியமுதம்நுகர்ச்சி யுறுமோமுழுதும்) என்கிறார். அத்தைவிட்டாராயிருக்கிறதோவென்னில்; விட்டிலர். (ங) "தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்" என்கையாலே, அவர்களுக்கடிமை செய்கிறபடி. (ரு)

---

# ஆறும்பாட்டு.

நுகர்ச்சியுறுமோமூவுலகின்வீடு பேறுதன்கேழில்* புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னாழிக்கை யென்னம்மான்* நிகர்ச்செம்பங்கியெரிவிழிகள் நீண்டவசுரருயிரெல்லாம் * தகர்த்துண்டுழலும் புட்பாகன் பெரியதனிமாப்புகழே (சு)

---

(க) பார-ஆர- (உ) தை-ஆ-

(ங. சா-சு-

ப:—அநந்தரம், விரோதிநிரஸந ஸீலனான ஸர்வேஸ்வரனுடைய குணங்களை பாகவதப்ரீணநமான திருவாய்மொழிமுகத்தாலே யநுபவிக்குமத்தை, ஜகத்காரணபூதனான வீஸ்வரனுயிருக்கு மிருப்புத்தானெக்கவற்றோவென்கிறார்.

(இ - ள்.) தன் - தனக்கு, கேழ் - ஒப்பு, இல் - இன்றியேயிருப்பதாய், புகர் - புகரையுடைத்தாய், செ - சீற்றத்தாலேசிவந்த, முகத்த - முகத்தையுடைத்தான, களிறு - ஆனையை, அட்ட - அடர்த்தடித்த, பொன்-ஸ்ப்ருஹணீயமான, ஆழி-திருவாழிமோதிரத்தையுடைய, கை-திருக்கையையுடையனான, என் - என், அம்மான் - ஸ்வாமியாய், நிகர்-ஜாதிக்குஸத்ருஸமாய், செ-சிவந்த. பங்கி-நாலுகிறமயிர்களையும், எரி - அக்நிசக்ரம்போலேயிருக்கிற, விழிகள்-விழிகளையுமுடைத்தாய், நீண்ட-உத்துங்கசரீரரான, அசுரர் - அசுரர்களுடைய உயிரெல்லாம்-ப்ராணன்களையெல்லாம், தகர்த்து - பீடித்து, உண்டு - க்ரஸித்து, உழலும்-ஸஞ்சரிக்கிற, புள் - பெரியதிருவடிக்கு, பாகன் - நியந்தாவானவனுடைய, பெரிய - அபரிச்சிந்நமாய், தனி - அத்விதீயமாய், மா-அதிசயிதபோக்யமான, புகழ் - குணகணங்களை, நுகர்ச்சி - பாகவதப்ரீணநமான திருவாய்மொழிமுகத்தாலே யநுபவித்தூஸிக்கையை, மூவுலகின் - ஜகத்த்ரயவிஷயமான, வீடு - ஸ்ரஷ்ட்ருத்வத்தை, பேறு-பெற்றிருக்கு மீஸ்வரத்வமானது. உறுமோ - கிட்டவற்றோ.

உலகின்வீடு - லோகத்தை ஸ்ருஷ்டிக்கை, பங்கி - நான்றகுழல், நிகர்ச்செம்பங்கி யெரிவிழியென்று - கண்ணுக்குவிசேஷணமாய் ஒப்பமிட்ட வொளியையுடைய செம்புகாய்ந்த நெருப்புப்போலே அழலுமிழ்கிற விழியென்றுமாம். (சு)

ஆறு:—(நுகர்ச்சி) ஸம்ஸாரநிவ்ருத்தி பூர்வக பகவதநுபவப்ரீதியும் ஸ்வாதீநாகிலலோக பகவதாநந்தமும் கூடினால்தான், திருவாய்மொழியாலே யெம்பெருமானை யநுபவித்தாலுள்ள ப்ரீதிக்குப்போருமோவென்கிறார். (சு)

ஈடு-அவ;—உத்தமான வைஸ்வர்யாதிகளும், யோஷிபாய் ஜகஜ்ஜந்மாதிகாரணமான ஸர்வேஸ்வரனும் நிரதிஸயாநந்தியாயிருக்கு மிருப்பும், பாகவத ப்ரீதிரூபமாகத் திருவாய்மொழிபாடி யநுபவிக்கும் ரஸத்தோடொவ்வாதென்கிறார். புட்பாகனுடையபெரியவொப்பில்லாத விலக்ஷணமானபுகழைத் திருவாய்மொழியாலே நுகருமதுக்கு, விபுவான வவனுடைய வாநந்தமும் போராதென்கிறார்.

(நுகர்ச்சியுறுமோ) திருவாய்மொழிமுகத்தாலே பகவத்குணங்களை யநுபவிக்குமத்தோடொக்குமோ. (மூவுலகின்வீடுபேறு) தன் ஸங்கல்பைகதேசத்தாலே ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களாம்படியிருக்கிற வைஶ்வர்யந்தான் அத்தோடொக்குமோ. அவனுக்கிறே இதைஶ்வர்யமாய்த்தோற்றுவது; இவர்க்கு இது அபுருஷார்த்தமே ; (க) "ஜமஅ்ராவாரவஜ்டி - ஜகத்வ்யாபாரவர்ஜம்" என்கிறபடியே. ஸ்வரூபாநுரூபமானவையிறே புருஷார்த்தமாவது. (தன்கேழிலீத்யாதி) மிடுக்குக்குத்தனக்கொப்பின்றிக்கே யிருப்பதாய், புகரையும், சீற்றத்தாலே சிவந்தமுகத்தையுமுடைத்தான களிறுண்டு - குவலயாபீடம், அத்தைமுடித்து. (பொன்னாழிக்கை) அழகிய திருவாழி மோதிரத்தாலே யலங்க்ருதமான திருக்கையையுடையவன். குவலயாபீடத்தின் கதுப்பிலே யடித்தபோது, கையுந்திருவாழிமோதிரமுமிருந்தபடி. (என்னம்மான்) கையுமறுகாழியுமான வடிவைக்காட்டியென்னை யெழுதிக்கொண்டவன். உகவாதாரை மிடுக்காலேயழித்தான், உகந்தாரை அழகாலேயழித்தான்.

(நிகரித்யாதி) ஜாதிப்ரயுக்தமான சிவந்தமயிரை யுடையராய், எரிபோலே விழியாநின்றுள்ள கண்களையுடையராய், பெரியவடிவையுடையரான வஸுரர்களுடைய வுயிரையெல்லாம் தகர்த்துபுஜித்து, இதுதானே யாத்ரையாயிருக்கிற பெரியதிருவடியைக் கருத்தறிந்து நடத்துகிறவனுடைய, அபரிச்சிந்நமாய் உபமாநரஹிதமாயிருந்துள்ள கல்யாணகுணங்களை - திருவாய்மொழிமுகத்தாலே யநுபவிக்கு மநுபவத்தோடொக்குமோ. (மூவுலகின்வீடுபேறு) திருவாய்மொழிநுகருமாநந்தத்துக்கு, * ஏழுலகுந்தனிக் கோல்செல்லவீற்றிருக்குமாநந்தமும்போராதென்கிறார். (சு)

---

# ஏழாம்பாட்டு.

தனிமாப்புகழேயெஞ்ஞான்றும் நிற்கும்படியாத்தான்தோன்றி* முனிமாப்பிரமமுதல் வித்தாயுலகமூன்றும்முளைப்பித்த * தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார் * நனிமாக்கலவியின்பமேநாளும் வாய்க்கநங்கட்கே. (எ)

---

(க) ப்ரஹ்மஸூ ௪-௪-௧எ.

ப:—அநந்தரம், அகில ஜகத்காரணபூதனான ஸர்வேஸ்வரன் திருவடிகளை ப்ராபிக்குமதிலும், அவனுக்கு சேஷபூதரான பாகவதர்களுடைய ஸம்ஸ்லேஷமே நமக்கென்றும் மொக்கவுண்டாகவேணு மென்கிறார்.

(இ - ள்.) தனி-அத்விதீயமாய், மா-அதிசயிதாகாரமான, புகழே-காரணத்வப்ரயுக்த குணப்ரதையை, எஞ்ஞான்றும் - ஸர்வ காலமும், நிற்கும்படியா - வேதாந்தப்ரஸித்தமாய் நிற்கும்படியாக, ஸ்ருஷ்டிகாலம்வந்தவாறே, அபேக்ஷாநிரபேக்ஷமாக, தான் - தானே, தோன்றி-(க) "ஆஸீதிதம் தமோபூதம்-ப்ராதுராஸீத்தமோநுதஃ" என்கிற படியே ஸ்ருஷ்ட்யுந்முகனாயாவிர்ப்பவித்து. முனி - (உ) "பஹுஸ்யாம் ப்ரஜாயேய - பஹுஸ்யாம்" என்கிற ஸங்கல்பத்தாலே ஸ்ருஷ்டிமநநத்தைப்பண்ணுவதாய், மாப்பிரமம் - பரப்ரஹ்மஶப்தவாச்யமாயுள்ள, முதல்-ப்ரதாநமாயுள்ள, வித்தாய் - உபாதாநகாரணமான, உலகமூன்றும் - ஜகத்த்ரயத்தையும், முளைப்பித்த - உத்பாதித்த, தனிமாத்தெய்வம்-அத்விதீயபரதேவதையினுடைய, தளிர்-அத்யந்தஸுகுமாரமான, அடிக்கீழ் - திருவடிகளின்கீழே, புகுதலன்றி - ப்ராபிக்கையன்றிக்கே, அவனடியார்-அந்தகாரணகுணங்களுக்குத்தோற்றடிமைப்பட்ட பாகவதர்களுடைய, நனி - மிகவும், மா - ஸ்லாக்யமான, கலவியின்பமே-ஸம்ஸ்லேஷஸுகமே, நங்கட்கு - நமக்கு, நாளும்-ஸர்வகாலமும், வாய்க்க-வாய்க்கவேணும். நனி - மிகுதி. (எ)

ஆறு;—(தனிமாப்புகழே) இங்கே யிப்போதே நான்பெற்றநுபவிக்கிற பாகவதசேஷத்வத்துக்கு வர்த்தகமான பகவதநுபவமும் இங்கே ஸித்திக்கபின்பு, இதுக்கு விரோதியான பகவதநுபவமும் வேண்டா, இதுக்குவர்த்தகமான பகவதநுபவ ஸம்வர்த்திதமான பாகவத ஸம்ஸ்லேஷஸுகமே நாளும் வாய்க்க நங்கட்கென்கிறார்.

ஈடு-அவ;—ஸ்வயம்புருஷார்த்தமாய்வரும் பகவதநுபவமெனக்குவேண்டா, பாகவதர்களோடேகூடி யநுபவிக்கும் பகவதநுபவமே காலதத்த்வமுள்ளதனையு மெனக்குண்டாகவேணுமென்கிறார்.

(தனிமாவித்யாதி) உபமாநரஹிதமாய், ஸ்லாக்யமானபுகழே காலதத்த்வமுள்ளதனையும் நிற்கும்படியாக (தான்தோன்றி) அவ்யக்தஶரீரனானான் (முனிமாப்பிரம முதல்வித்தாய்தோன்றி) அர்த்

(க) மநு ஸம்-க-ரு (உ) சாந்-உ-ரு-உ

இப்பாரின்றிக்கேயிருக்க பூர்ணனாயிருக்கிறதான், தன்பேறாக (க) ,' பஹு ஸ்யாம் - பஹுஸ்யாம் '' என்றுதோன்றி. (முனிமாப்பிரமமுதல்வித்தாய் ) ஸங்கல்பிக்கிற பரப்ரஹ்மமாகிற பரமகாரணமாய், முனி - துறந்தவன். தேசாந்தரம்போன ப்ரஜையைத் தாய் நினைக்குமாபோலே, '' இவையென்பட்டன '' என்று திருவுள்ளத்தாலே நினைத்து, பரப்ரஹ்மமானதானே த்ரிவிதகாரணமுமாய். ( உலகமூன்றும் முளைப்பித்த ) கார்யவர்க்கமடையத் தன்பக்கலிலே யரும்பும்படி பண்ணினானாயிற்று; பஹுபவநஸங்கல்பமிருந்தபடி;

( தனியித்யாதி ) ஒப்பில்லாத பரதேவதையினுடைய, தளிர்போலேயிருக்கிற திருவடிகளின்கீழே புகுதல். இதுகாணும் ஸ்ருஷ்டிப்ரயோஜநம். சேதநனுக்கு உபகரித்தவன் திருவடிகளைப் பற்றவிறே ப்ராப்தம். (அன்றி) அத்தைவிட்டு. (அவனடியாரித்யாதி) அவ்வுபகாரத்திலே தோற்றெழுதிக் கொடுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களோடுண்டான, மிக்கவிலக்ஷணமாயிருந்துள்ள ஸம்ப்லேஷ ஸுகமே நாள்தோறும்வாய்க்க. ( நங்கட்கே ) இத்தைவிரும்பி '' இதுவே பேறு '' என்றிருக்கிறநமக்கு, இது காலதத்த்வமுள்ளதனையும் கிட்டவேணும். (எ)

---

## எட்டாம்பாட்டு.

நாளும்வாய்க்கநங்கட்கு நளிர்நீர்க்கடலைப் படைத்துத்தன் * தாளுந்தோளுமுடிகளுஞ்சமனிலாதபலபரப்பி* நீளும்படர்பூங்கற்பகக்காவும் நிறைபன்னாயிற்றின்* கோளுமுடைய மணிமலைபோல் கிடந்தான் தமர்கள்கூட்டமே. (அ)

ப:— அநந்தரம், ஏகார்ணவசாயியான ஸர்வேப்வரனுடைய வடியாரோடுண்டான சேர்த்தியே நமக்கென்று முண்டாக வேணுமென்கிறார்.

(இ - ள்.) பூதாந்தர விகாரஸம்ஸர்க்க மில்லாமையாலே, நளிர் - ஶீதளஸ்வபாவமான, நீர் - ஜலத்தையுடைத்தான, கடலை - ஏகார்ணவத்தை, படைத்து-(உ) '' அப ஏவ ஸஸர்ஜாதௌ '' என்கிறபடியே ஸ்ருஷ்டித்து, தன்-அதுவேதனக்கஸாதாரண

(க) சாந்தோ-உ-௬ உ (உ) மநுஸ் க-அ

மாக வேதப்ரதிபாத்யமாய். சமன் - ஒப்பு, இலாத - இன்றியிலேயிருப்பதான, தாளும் - திருவடிகளேயும், தோளும் - திருத்தோள்களேயும், முடிகளும் - திருமுடிகளேயும், பல - ஸஹஸ்ரஸங்க்யாதமாம்படி பலவாக, பரப்பி - பரப்பி, நீளும் - நீளாநிற்பதாய், படர் - பணேத்து, பூ - தர்ஶநீயமான, கற்பகக்காவும் - கற்பகச்சோலேயையும், நிறை - நிறைந்த, பல் - கிரணத்தையுமுடையவாய், பலவான், நாயிற்றின்கோளும் - ஆதித்யதேஜஸ்ஸையும், உடைய - உடைத்தான, மணிமலேபோல் - மாணிக்கமலேபோலே, கிடந்தான் - கண்வளர்ந்தருளினவனுடைய, தமர்கள் - தமர்களோடுண்டான, கூட்டம் - சேர்த்தியானது, நங்கட்கு - நமக்கு, நாளும் - காலதத்த்வமுள்ளதனேயும், வாய்க்க - உண்டாகவேணும்.

கூட்டம் - சேர்த்தி, அன்றியே, ஸங்கமாய், பாகவதஸங்கம் ஸந்நிஹிதமாகவேணுமென்றுமாம். (அ)

ஆறு;—(நாளும்வாய்க்க) அவர்களோடு ஸம்ஶ்லேஷம்வேணுமோ, ஸஹவாஸமாத்ரமே யென்றும் ஸித்திக்கவமையுமென்கிறார்.

ஈடு-அவ;—பாகவதர்களோட்டை ஸம்ஶ்லேஷஸங்கம் வேணுமென்றார்கீழ்; அதெல்லாம்வேணுமோ, அவர்கள்திரளேக் கண்ணுலேகாணவமையுமென்கிறாரிதில்.

(நாளும்வாய்க்கவித்யாதி) இதுவே புருஷார்த்தமென்றிருக்கிறநமக்கு, இதுநாள்தோறும் வாய்க்கவேணும். (நளிர்நீர்க்கடலேப்படைத்து) ஶைத்யமே ஸ்வபாவமான ஜலத்தையுடைய கடலேயுண்டாக்கி. கண்வளருகைக்கு ஸத்ருஶமான ஜலமென்கை. (சமனிலாத்தாளுந்தோளும்முடிகளும்) உபமாநரஹிதமான திவ்யாவயவங்கள் (பலபரப்பி) அக்கடலிலே பாழ்திரும்படி வடிவாலேயலங்கரித்து. (நீளும்படர்பூங்கற்பகக்காவும்) நிரவதிகபோக்யமான பூப்போலேயிருக்கிறதாளும், கற்பகக்காவைப்போலேயிருக்கிற தோளும். தாளுந்தோளுமிருக்கிறபடி. (நிறைபன்ஞயிற்றின்கோளும்) (க) "முடிகளாயிரத்தாய்" என்கிறத்தைச் சொல்லுகிறது. கோளென்று - தேஜஸ்ஸு. ஆயிரக்கோடி ஆதித்யர்களேத் திரட்டி முடியாக வகுத்தாப்போலேயிருக்கிறமுடி. கோளென்று - க்ரஹங்களாய், அவை

(க) கூ-க-கO

தான் தேஜ:பதார்த்தங்களாகையாலே, தேஜஸ்ஸை லக்ஷிக்கிறது என்றுமாம்.

(மணிமலைபோல்கிடந்தான்) ஒருரத்நபர்வதம்சாய்ந்தாப்போலேயாயிற்றுக் கண்வளர்ந்தருளுகிறபடி. (தமர்கள்கூட்டமேநாளும் வாய்க்க) இப்படி வைத்தகண்வாங்கவொண்ணாதபடி கண்வளர்ந்தருளாநிற்கு மவனையன்று நாளும்வாய்க்கவென்கிறது; (க) "கிடந்ததோர்கிடக்கை" என்று கிடையழகிலேதோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள்திரளிலே நானுமொருவனா யந்வயிக்கவேணுமென்னுதல், அத்திரளைக்கண்ணாலேகாணவமையுமென்னுதல். பசியர் "கலைநிறைச்சோறுண்ணவேணும்" என்னுமாபோலே, தம்மபிநிவேசந்தோற்றவருளிச் செய்கிறார். (உ) "ஸஹ்ரவஸஹாஸீத-ஸத்பிரேவஸஹாஸீத" என்றும், (௩) "ஈட்டங்கண்டிடக்கூடுமேல்" என்றும் சொல்லக்கடவதிறே. அவன்பண்ணினவுபகாரத்துக்குத் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களோடே ஸம்ஸ்லேஷிக்க வேணுமென்றாரீழ்; கிடையழகிலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளைக் கண்ணாலே காணவமையுமென்கிறாரிதில். (அ)

---

## ஒன்பதாம்பாட்டு.

தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யுஞ் சதுமூர்த்தி * அமர்கொளாழி சங்குவாள்வில்தண்டாதிபல்படையன் * குமரன் கோலவைங்கணைவேள்தாதை கோதிலடியார்தம் * தமர்கள்தமர்கள் தமர்களாஞ்சதிரே வாய்க்கதமியேற்கே. (௯)

ப:—அநந்தரம், விரோதிநிரஸநோபகரணமான திவ்யாயுதங்களையுடையனான ஸர்வேஶ்வரனுக்கு சேஷபூதரான பாகவதர்களுடைய ஸம்பந்திஸம்பந்திகளுக்கு நாம் சேஷபூதராகையாகிற வுறுதிக்கோளானது நமக்குண்டாகவேணு மென்கிறார்.

(இ-ள்.) தமர்கள் - ஆஶ்ரிதருடைய, கூட்டம்-ஸங்கத்துக்குவரும், வல் - வலிய, வினையை - பாபங்களுடைய, நாசம் - ஸர்வப்ரகாரவிநாஶத்தை, செய்யும்-பண்ணும், சதிர்-ஸாமர்த்யத்தையுடைய, மூர்த்தி-

(க) திருமாலை-௨௩-
(உ) மார்க்கண்டேயபு-
(௩) பெரு-தி-௨-௧-

 உள்ள

ஸ்வாமியாய், அமர் - விரோதிநிரஸநார்த்தமான யுத்தோத்யோகத்தை கொள் - உடைய, ஆழி சங்கு வாள் வில் தண்டாதி - ஸ்ரீபஞ்சாயுதப்ரமுகமான, பல்படையன் - நாநாவிதா ஸங்க்யேயாயுதங்களை யுடையனாய், குமரன் - விரோதிநிரஸந ஶக்திஸூசகமான பருவத்தி லிளமையை யுடையனாய், கோலம் - வடிவழகுக்கு மதிப்பனாய், ஐங்கணை-பஞ்சபாணனான, வேள் - காமனுக்கு, தாதை - உத்பாதகனான வைலக்ஷண்யத்தை யுடையனானவனுடைய, கோது - ப்ரயோஜநாந்தர ஸம்ஸர்க்கமாகிற கோது, இல் - இல்லாத, அடியார்தம் - அடியார்க்கு, தமர்கள் - ஶேஷபூதரானார்க்கு, தமர்கள் - ஶேஷபூதரானவர்களைப்பற்ற, தமர்களாம் - தாஸ்யஸம்பந்தத்தை யுடையோமாகிற, சதிர் - அருள்கோளானது, தமியேற்கு-ஸம்ஸாரத்தி லஸஹாயரான நமக்கு, வாய்க்க-உண்டாகவேணும்.

கூட்ட வல்வினை யென்று - ஸங்கரூப பாபமாகவுமாம்; சதுமூர்த்தியென்றுபாடமாய், விக்ரஹபேதத்தைச் சொல்லிற்றாகவுமாம். (கூ)

ஆர்;—(தமர்கள்) அவர்களோடு ஸஹவாஸந்தான் வேணுமோ, அவர்களடியாரடியா ரடியாராம் சதிரேவாய்க்கவமையுமென்கிறார்.

ஈடு; அவ;— ஸ்ரீவைஷ்ணவர்களுடன் ஸஹவாஸந்தான் வேணுமோ, அவர்களுடைய ஶேஷத்வத்திலே முடிந்த நிலமாகவமையுமென்கிறார்.

(தமர்கள்கூட்ட வல்வினையை நாசஞ்செய்யும்) ஸ்ரீவைஷ்ணவர்களுடைய திரளுக்குவரும் வல்வினையை நாசஞ்செய்யுமென்னவுமாம். அன்றிக்கே, தமர்களுடைய, கூட்டமானவல்வினையை - திரண்டவல்வினையை, நசிப்பிக்குமென்னவுமாம். அன்றிக்கே, தமர்கள் வல்வினையைக்கூட்ட, அத்தை நசிப்பிக்குமென்னுதல். இவனுக்குக் கூட்டுகையே ஸ்வபாவமானாப்போலே, அவனுக்குக் கழிக்கையே யாத்ரையாயிருக்கிறபடி. ( சதுமூர்த்தி ) விரோதியைப்போக்குகைக் கேகாந்தமான பலவடிவுகளையும் கொள்ளாநிற்கும்; இவர்கள், கைங்கர்யத்துக்குப் பலவடிவுகொள்ளுமாபோலேயாயிற்று, அவன் ரக்ஷணார்த்தமாகப் பலவடிவுகொள்ளும்படி.

( அமர்கோளித்யாதி ) விரோதிநிரஸநத்துக் குறுப்பாக யுத்தோத்முகமான திருவாழிதொடக்கமான திவ்யாயுதங்களை யுடைய

வன். (குமரன்) நித்யயுவாவாயிருக்கும். (கோலமித்யாதி) பஞ்சபாணனான காமனுக்கு முத்பாதகனானவன். “அழகுக்கெனக்குமேலில்லை” என்றிருக்கும் காமனுக்கு மழகுக்கு உத்பத்திஸ்த்தாநமாயிருக்குமென்கை. அப்பருவத்துக்கு மழகுக்குந்தோற்றிருக்கு மநந்யப்ரயோஜநரான ஸ்ரீவைஷ்ணவர்களுடைய வடிமையில் முடிந்த நிலமாகவேணுமென்கிறார்.

(சதிரேவாய்க்க) இந்தநிரதிசயபுருஷார்த்தமென்றுமொக்க வேணும். (தமியேற்கே) பூதகாலத்திலும் ஸ்ரீமக்ருக்நாழ்வானைத் தேடிப்பிடிக்கவேண்டுகையாலே, வர்த்தமாநகாலத்தில் தமக்கு உபமாநமின்றிக்கேயிருக்கை. கீழ் “நங்கட்கு” என்றார், * கேசவன் தமர்க்குப்பின்பு தனியரல்லாமையாலே; இங்கு (தமியேற்கு) என்கிறது, ஸம்ஸாரிகளில் தமக்கு உபமாநமில்லாமையாலே. (௯)

---

## பத்தாம்பாட்டு.

வாய்க்கதமியேற்கூழிதோறூழி யூழிமாகாயாம் * பூக்கோள் மேனிநான்குதோள்பொன்னாழிக்கை யென்னம்மான்* நீக்கமில்லா வடியார்தம்மடியாரடியாரடியாரெங் கோக்கள் * அவர்க்கே குடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடே. (௧௦)

ப:—அநந்தரம், அதிசயிதாநுபாவ்யமான வாகாராவயவசோபைகளையுடைய ஸர்வேஶ்வரனுக்கு அப்ருதக்ஸித்தசேஷபூதராஞருடைய ஸம்பந்தி பரம்பரையினுடைய வெல்லையிலே யடிமைசெய்து நடக்கையாகிற வுத்யோகமானது கல்பந்தோறு முண்டாகவேணுமென்கிறார்.

(இ-ள்.) மா - தர்ஶநீயவைலக்ஷண்யத்தை யுடைத்தான, காயாம்பூ - காயாம்பூநிறத்தை, கொள் - கொள்வதான, மேனி-திருமேனியையும், நான்குதோள் - ஆஶ்ரிதர்க் கொதுங்கநிழலான நாலுதிருத்தோள்களையும், பொன் - ஸ்ப்ருஹணீயமான, ஆழி - திருவாழியையுடைய, கை-திருக்கையையுமுடைய, என்-இவ்வடிவழகைக் காட்டி யென்னை யெழுதிக்கொண்ட, அம்மான் - ஸ்வாமியானவனை, நீக்கம்-பிரிவு, இல்லா - இல்லாதபடி யநுபவிக்கிற, அடியார்தம்-அடியார்க்கு, அடியாரடியாரடியார் - அஸாதாரண ஶேஷபரம்பரையிலுள்ளார், எம் - எனக்குமென்னோடு ஸம்பந்தமுடையார்க்கும், கோக்கள் - ஶேஷிகள் அவர்க்

கே - அவர்களுக்கே, குடிகளாய் - ஶேஷவ்ருத்திபண்ணும் குலமாய், செல்லும் - செல்லும்படியராய், நல்ல - ஶ்லாக்யமான, கோட்பாடு - ஸ்வீகாரப்ரகாரமானது, ஊழிதோறூழி-மஹாகல்பந்தோறுமுண்டான, ஊழி - அவாந்தர கல்பங்களிலும், தமியேற்கு - ததீயபாரதந்த்ர்யத்திலொப்பின்றியே யிருக்கிறவெனக்கு, வாய்க்க-உண்டாகவேணும்.

ஆறு:—(வாய்க்க) இப்ப்ராப்யமே யெனக்கும் எனபரிக்ரஹத்துக்கும் என்றும் வாய்க்கவேணுமென்கிறார். (கo)

ஈடு; அவ;—இப்ப்ராப்யம், எனக்குமென்பரிக்ரஹத்துக்கு மென்றும் வாய்க்கவேணுமென்கிறார்.

(வாய்க்கதமியேற்கு) புருஷார்த்தத்திலெல்லையிலே அவகாஹிக்கையாலே உபமானரஹிதனானவெனக்கு இப்பேறே வாய்க்கவேணும். (ஊழிதோறூழியூழி) காலதத்த்வமுள்ளதனையு மிடைவிடாதே யாவதாத்மபாவியாக விதுவேபுருஷார்த்தமென்கை. (மாகாயாம்பூவித்யாதி) அழகியகாயாம்பூப்போலேயிருக்கிற திருமேனியையும், கல்பகதருபணைத் தாப்போலேயிருக்கிற திருத்தோள்களையும், கல்பகம்பூத்தாப்போலேயிருக்கிற திருவாழியையுங்காட்டி என்னையநந்யார்ஹமாக்கினவன்.

(நீக்கமில்லாவடியார்) பிரியநினைக்கில் (க) " [illegible] - குருஷ்வமாம் " என்னவேண்டும்படி விஶ்லேஷிக்கமாட்டாதவர்களில் சரமாவதியானவர்கள் என்ஸ்வாமிகள், " தமர்கள் தமர்கள் தமர்களாம்" என்றுமுடித்தவெல்லையை முதலாகத்தொடங்குகிறார்; சயமேயடிமை தலைநின்றாராகிறார் - ஸ்ரீபரதாழ்வான்போல்வார்; கோதிலடியாராகிறார் - ஸ்ரீசத்ருக்நாழ்வான்போல்வார்; நீக்கமில்லாவடியாராகிறார் - இளையபெருமாள்போல்வார்.

(அவர்க்கேகுடிகளாய்) இருகரையராயிராதே, (௨) " [illegible] । [illegible] - நசேத்ராமாநுஜே த்வயேஷா சதுராசதுராக்ஷரீ । காமவஸ்தாம்ப்ரபத்யந்தே ஜந்தவோ ஹந்த மாத்ருஶ: " என்றிருக்கப்போலேகாணுமடுப்பது. (அவர்க்கேயித்யாதி) அவர்களுக்கே ஸபரிகரமாக வநந்யார்ஹராய்ச் செல்லும் நல்ல கட்டளை - வாய்க்கதமியேற்கு. கோட்பாடு - கோலுபாடு (கo)

(க) ரா-ஆர-ருக-௨௨- (௨) முக்தகம்.

# பதினொன்றாம்பாட்டு.

நல்லகோட்பாட்டுலகங்கள்மூன்றினுள்ளுந்தான் நிறைந்த * அல்லிக்கமலக்கண்ணனையந்தண் குருகூர்ச் சடகோபன் * சொல்லப்பட்டவாயிரத்துளிவையும் பத்தும்வல்லார்கள்* நல்லபதத்தால், மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே. (கக)

ப:— அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப்பலமாக ததீயசேஷத்வ பர்யந்தமான பார்யாபுத்ராதி ஸம்பத்ப்ராப்திகளை யருளிச்செய்கிறார்.

(இ - ள்) நல்ல - விலக்ஷணமான, கோட்பாடு-இடமுடைமையை யுடைத்தான, உலகங்கள் மூன்றினுள்ளும் - ஜகத்த்ரயத்திலும், தான் நிறைந்த - வ்யாப்தனாய், அல்லி - விகஸிதமான, கமலம்-தாமரைப்பூப் போலேயிருக்கிற, கண்ணனை - கண்களையுடையனானவனைப்பற்ற, அந்தர்ஸநீயமாய், தண் - ப்ரமஹரமான, குருகூர் - திருநகரிக்குநிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல்ல-அருளிச்செய்ய, பட்ட-உண்டான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவையும்பத்தும் - இவைபத்தையும் வல்லார்கள் - அப்யஸிக்கவல்லார்கள், கொண்ட - ஸ்வீகரிக்க ப்பட்ட பெண்டிர்மக்களை - பார்யாபுத்ராதிகளை யுடையராய்க்கொண்டு, நல்ல-விலக்ஷணமான, பதத்தால் - ததீயஶேஷத்வபர்யந்தமான பதஸ்த்தையோடே, மனை - கார்ஹஸ்த்யத்திலே, வாழ்வர் - ஜீவிக்கப்பெறுவர்கள்.

இதுவும் அறுசீராசிரியவிருத்தம். (கக)

ஆறு:—(நல்ல) இப்படி பாகவதஶேஷதைகரதிகளான, ஆழ்வாரிருந்தருளின லோகத்திலே † புகுந்தருளிப்பெற்ற ப்ரீதியாலே புதுக்கணித்த திருக்கண்களையுடையனான வெம்பெருமானை ப்ரதிபாதிக்கிற வித்திருவாய்மொழியைவல்லார், பாகவதஶேஷத்வத்தை இங்கேபெற்று ஸபரிகரமாக வாழப்பெறுவரென்கிறார். (கக)

ஈடு; அவ:—நிகமத்தில் - இத்திருவாய்மொழிவல்லார், இதிற்சொன்ன பாகவதஶேஷத்வத்தைப்பெற்று ஸபரிகரமாக வாழப்பெறுவரென்கிறார்.

( நல்லகோட்பாட்டுலகங்கள் ) இவர் "பாகவதஶேஷத்வமே பரமபுருஷார்த்தம்" என்று * நெடுமாற்கடிமை யருளிச்செய்தபின்பு காணும் லோகம்கட்டளைப்பட்டது. (மூன்றினுள்ளும் தான்நிறைந்த) வ்யாப்தியும், தேவையாகையன்றிக்கே புதுக்கணித்தது (அல்

† (பா) புகுந்தருள-

லிக்கமலக்கண்ணனை) இவர், தன்னைப்பற்றினரைப்பற்றி விரும்ப விரும்ப, திருக்கண்களும் சிவந்து புதுக்கணித்தன. (அந்தணர்குருகூர்) ஊரும் தர்மநீயமாய் ப்ராமஹாமாயிற்று. (சடகோபன்சொல்லப்பட்டவாயிரம்) வேதம்போலே தான்றோன்றியன்றிக்கே யிருக்கை. பரத்வம்போலேவேதம்; அவதாரம்போலே திருவாய்மொழி. (இவையும்பத்தும்வல்லார்கள்) இப்பத்தை யப்யஸிக்கவல்லவர்கள்.

(நல்லவித்யாதி) நல்லபதமாகிறது - பாகவத ஸேஷத்வமிறே, அத்தை இத்திருவாய்மொழியிலே இவர்நிஷ்கர்ஷித்தபடியாலே; அத்தோடேகூட, (மனைவாழ்வர்) கார்ஹஸ்த்யதர்ம மநுஷ்டிக்கப்பெறுவர். (கொண்டவித்யாதி) தாங்களொன்றைநினைக்க பரிகரமொன்றைநினைக்கையன்றிக்கே, ஸபரிகரமாக பாகவதர்களுக்குறுப்பாக வர்த்திக்கப்பெறுவர்.

திருவனந்தபுரத்துக்குச் சாத்தாகப் போகாநிற்கச்செய்தே, திருக்கோட்டியூரிலே செல்வநம்பி திருமாளிகையிலேபோய்ப் புக்காரளாய், நம்பி தாம் அஸந்நிஹிதராயிருக்க, நங்கையார், நூறுவித்துக் கோட்டைகிடக்க, அவற்றைக்குத்தி ஸ்ரீவைஷ்ணவர்களை யமுது செய்யப்பண்ணிவிட, பிற்றைநாள் நம்பிவந்து "அவைசெய்ததென்" என்ன, "பரமபதத்திலேவிளைவதாகவித்தினேன்" என்றாளாய்; "தொண்டனூர்நம்பி, எச்சான்" என்று சிலமஹாபுருஷர்களுண்டிறே-பாகவதசேஷத்வமே யாத்ரையாய்ப்போந்தவர்கள், அவர்கள் படியேயாகப் பெறுவர்கள். (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

திருவாய்மொழி

எட்டாம்பத்து பத்தாந் திருவாய்மொழி

முற்றிற்று.

